உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# நான்காம் திருமுறை



சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

*உ*

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

தேவாரத் திருப்பதிகங்கள்

# நான்காம் திருமுறை

(பண்முறை)


பதிப்பாசிரியர்

**டாக்டர் இராச.வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

## கற்பகம் பல்கலைக்கழகம்

ஈச்சநாரி, கோவை - 21

## நூற்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **நான்காம் திருமுறை** |
| ஆசிரியர் | : | **திருநாவுக்கரசர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் (பண் முறை) |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வுமையம்**<br>**கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீடு எண் | : | **41** |
| முதற்பதிப்பு | : | **2015** ஜுன் |
| பக்கங்கள் | : | 434 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | கிரவுன் 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>செல் : 98431 74238 |




உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

**திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய**
**தேவாரத் திருப்பதிகங்கள்**

# நான்காம் திருமுறை

## வழிபாட்டுக் கருத்தரங்கம்



## பதிப்புரை

பதிகம் ஏழெழுநூறு பகரு மாகவியோகி
பரசு நாவரசான பரம காரண ஈசன்
அதிகை மாநகர்மேவி அருளினால் அமண்மூடர்
அவர் செய் வாதைகள் தீரும் அனகன் வார்கழல் சூடின்
நிதியர் ஆகுவர் சீர்மை உடையராகுவர் வாய்மை
நெறியராகுவர் பாவம் வெறியராகுவர் சால
மதியராகுவர் ஈசன் அடியராகுவர் வானம்
உடையராகுவர் பாரில் மனிதர் ஆனவர்தாமே.

– நம்பியாண்டார் நம்பி
பதினொன்றாம் திருமுறை
திருநாவுக்கரசர் திருஏகாதச மாலை பா.எண் : 7

### சுரக்கும் புன்னைகள்

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் திருவீழிமிழலையை விட்டு நீங்கிப் பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருமறைக் காட்டை அடைந்தார்கள். அங்குள்ள சிவமூர்த்தியை வேதங்கள் பூசித்த காலந் தொடங்கி மூடப்பட்டிருந்த கோயிலின் திருக்கதவைத் திறக்கப் பாடும்படி சம்பந்தப்பெருமான் அப்பருக்குச் சொன்னார். அவராணையின்படி அப்பர் பெருமானும் “பண்ணினேர் மொழியாள்” எனத் தொடங்கும் பதிகத்தைப் பாட ஆரம்பித்தார். என்ன காரணத்தினாலோ, பதிகத்தில் பத்தாவது பாட்டு பாடப்படும் வரை கதவு திறக்கப்படவில்லை. உடனே திறந்து விட்டால், நாவுக்கரசர் அதோடு நிறுத்திக்கொண்டு, எஞ்சிய பாடல்களைப் பாடாவிட்டால் கேட்டுவக்க முடியாதே

என்று நினைத்து, சிவபெருமான் கதவந்திறப்பிக்கவில்லை என்று சேக்கிழார் கருதுகிறார். "பலன் துய்ப்பான் தெண்ணீர் அணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்க" என்பது கவிக்கூற்று.

குணமென்னும் குன்றேறி நின்றவராகிய அப்பர் பெருமானுக்கும் ஒரு கணம் வெகுளி தலைக்கேறி விட்டது. சினத்தை அடக்க முடியாதவராகி விட்டார். தம்மைச் சூலை நோயினின்றும் ஆட்கொண்ட இறைவரையே "இரக்க மில்லா தவரே" என விளாசித் தள்ளுகிறார். சீறிக்கொண்டு எழுகின்றது 11-வது பாட்டு. உள்ளங் கவர்ந்து எழுந்து ஓங்கு சினத்தைப் பாட்டின் வேகத்திலேயே காண்கிறோம். இதோ அந்தப் பாடல்,

அரக்கனை விரலால் அடர்த்திட்டநீர்
இரக்கம் ஒன்றிலீர் எம்பெருமானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக்காடரோ
சரக்க இக்கதவம் திறப்பிம்மினே.

இதன் பொருள் "கயிலை மலையினைப் பெயர்த்தெடுக்கத் தொடங்கி அது முடியாமல் அதன்கீழ் அகப்பட்டுத் துன்புற்ற இராவணன் உமக்குகந்த சாமகீதம் பாடியும், நீர் கொஞ்சங்கூட இரக்கமின்றி அவனை விரலால் அழுத்தி வருத்தினீர்கள். தாங்கள் என்பால் மட்டும் எப்படி இரக்கங்கொள்வீர்கள்? நாங்கள் தெரியாத்தனமாகத் தங்களை ஆண்டவன் என்று கொண்டு வழிபடுகிறோம். நீர் எங்கள் பெருமான்தானா?" என்று முறையிடுகின்றார். தேன் சொரியும் மலர்களுடைய புன்னைமரங்கள் சூழ்ந்த மறைக்காட்டுக்கும் சாதாரண அடைமொழிபோலும் என்று நினைக்கத் தோன்றும். அப்படி நினைக்கக்கூடாது, இதில் உட்பொருள் ஒன்று பொதிந்து கிடக்கிறது. அதனைக் காண்போமாக.

"பாடிக்கொண்டுவரும் பாணர்களுக்குப் பரிசில்கள் வழங்குவது வள்ளல்களின் இயல்பு மட்டுமல்ல; கடப்பாடுங்கூட. அவ்வள்ளல்கள் மனிதர்கள். ஐந்தறிவு நிரம்பி ஆறாவது அறிவு தோன்றப் பெற்றவர்கள். ஆனால், எம்பெருமானே! இந்தத் திருமறைக்காட்டைச் சூழ்ந்துள்ள புன்னை மரங்களிலுள்ள மலர்கள் ஓரறிவு மட்டும் உள்ள உயிர்கள். அவைகளும் உம்மால் படைக்கப்பட்டவையே. அவைகளின் செய்கையைக் கவனித்தீர்களா?. அம்மலர்களைச் சுற்றி வண்டுகள் என்னும் பாணர்கள் பாடுகின்றார்கள். அப்பாடல்களுக்குவந்து அம்மலர்கள் அவ்வண்டுகளுக்குப் பரிசுப் பொருள்களாக தேன் சுரந்து தருகின்றன. உமது படைப்புப் பொருள்களான ஓரறிவுடையஉயிர்களான அந்தப் புன்னை மலர்கள் காட்டும் இரக்கங்கூடத் தாங்கள், பத்துப்பாடல் பாடிய என்பால் காட்டவில்லையே இந்த லட்சணத்தில் தங்களை நாயகன் என்றும், எம்பெருமான் என்றும் தலைமேல் வைத்துக் கூத்தாடுகிறோம். தாங்கள் அப்புன்னை மலர்களினுங் கீழாக வைத்து மதிக்கப்பெறாமலிருக்க விரும்பினால், உடனே அம்மாக்கதவம் பிணி நீக்குவீர்களாக".

இத்தனைக் கூடார்த்தமும் "சுரக்கும் புன்னைகள்" என்னும் அந்தச் சிறுதொடரில் அடங்கியிருக்கிறது.

இறைவரின் நோக்கம் நிறைவேறிவிட்டது. பயன் துய்ப்பதற்காகப் பதினொரு பாடல்கள் அவருக்குக் கிடைத்துவிட்டன. இனியுங் காலந்தாழ்த்துவதற்கு அவருக்கு நெஞ்சத் துணிவு ஏது? கதவு படாரென்று திறந்தது. நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் அணிமறைக்காடரை நேர்முகமாகக் கண்டு வழிபட்டார்கள்.

இறைவன் காலந்தாழ்த்தியதனால் அழகான பதினொரு குறுந்தொகைப் பாடல்கள் தமிழ்மொழிக்குச் செல்வமாகக் கிடைத்துள்ளன. தமிழகத்தில் மட்டும் தன்னாட்சி நிலவுமானால், இப்பாடல்களுக்காகவென்றே ஒரு விழாக் கொண்டாடலாம்.

அந்த நாளும் வந்திடாதோ!
நாவுக்கரசர் நற்றமிழ் செழிப்பதாக!!

என்பதாக ஒரு கட்டுரை திருமதி வ.பா. தாமரைக்கண்ணி அம்மையாரால் எழுதப்பட்டு 1965–ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட சைவசித்தாந்த மகாசமாஜ வைரவிழா மலரில் உள்ளது. அந்த அம்மையாரைப் போன்ற பல அடியார்களின் ஆவல் நிறைவேறும் வண்ணம் நாமெல்லாம் நாவரசரின் திருமுறைகளை ஓதிக் கொண்டும், பரப்பிக் கொண்டும் பெருவாழ்வு வாழ்ந்து கொண்டிருப்பது பெருமையாக உள்ளது.

### திருவருள் அன்பின் பரிணாம வளர்ச்சி

நாம் அப்பரைப் பற்றி நினைத்தவுடனே நமக்கு எவை ஞாபகத்துக்கு வருகின்றன?

இடையறாப் பேரன்பு
மழைவாரும் இணைவிழிகள்
உழவாரத்திண் படையறாத் திருக்கரம்
சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சம்
நடையறாப் பெருந்துறவு
ஞானப்பாடல் தொடையறாச் செவ்வாய்
திருமேனி தனில் அசைவு
கந்தை மிகையாம் கருத்து
தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனி

ஆகிய தொடர்கள் ஞாபகத்துக்கு வரவேண்டும். வந்தால் அவர் அடியார். வராதவர்? அவரவரே முடிவு செய்து கொள்ளலாம்.

திருநாவுக்கரசு நாயனாரை நமது மனத்துள் நேரேகண்டு தியானித்து வணங்கி உய்வதற்குப் பேருதவிபுரியும் திருத்தொண்டர் புராணத்திலுள்ள மூன்று பாடல்கள்

தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொன்
மேய செவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே. திருவதிகை – 1405

சிந்தை இடை அறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தம் மிகையாம் கருத்தும் கை உழவாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவில் பொலி திரு நீறும்
அந்தம் இலாத் திரு வேடத்து அரசும் எதிர் வந்து அனைய. காழி – 2168

மார்பாரப் பொழி கண்ணீர் மழைவாருந் திருவடிவும் மதுர வாக்கிற்
சேர்வாகுந் திருவாயிற் றீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற்றாளே
சார்வான திருமனமு முழவாரத் தனிப்படையுந் தாமுமாகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார் ஆரூர்–1490

இந்த மூன்று பாடல்களும் நாயனாரது திருவடிவத்தினையும், திருவாக்கு, திருவுள்ளம் இவற்றின் நிலைகளையும், ஓவியம் வல்ல ஒருவன் தீட்டினும் தீட்டமாட்டாத பண்பில் நமது முன் கொணர்ந்து நிறுத்துகின்றன.

**முதல் பாடல்** "தூய வெண்ணீறுதுதைந்த பொன்மேனி" என்ற திருப்பாட்டு, இறைவன் தம்மைச் சமண் சிறையினின்று மீட்டவுடன் அப்பேரருளை நினைந்து, நாயனார் **திருவதிகைக்கு மீண்டு திருவீதியுட்** புகுந்தபோது அடியார் காட்சிக்குப் புலப்பட்ட கோலங் காட்டிற்று.

**இரண்டாவது பாடல்** "சிந்தை இடையறாத அன்பு" அந்த அன்பு மேலும் பெருகிய நிலையில் நாயனார் ஆளுடைய பிள்ளையாரைக் காணும் விருப்போடு **சீர்காழியில் திருவீதியுள்** புகுந்தபோது ஆளுடைய பிள்ளையாரது அருட்காட்சிக்குப் புலப்பட்டபடி தொண்டர் திருவேடப்பொலிவாகிய கோலங்காட்டிற்று.

**மூன்றாவது பாடல்** "மார்பாரப் பொழிகண்ணீர்" அடியார்க்கு அடிமையாந்திறம் கிடைக்கும்படி கருணை புரிந்த ஆரூர்ப் பெருமானது பேரருளை நினைந்து **ஆரூர்த் திருவீதியுள்ளே** புகுந்தபொழுது அவ்வன்பு மேலும் பெருகிய நிலையில் நாயனார் கொண்ட அருட்கோலங்காட்டிற்று.

அன்பின் பரிணாம வளர்ச்சியை பாட்டின் வண்ணத்தை வைத்தே அளந்து கொள்ளலாம்.

| முதற்பாட்டு | ஐந்து சீருடைய கலித்துறை |
|---|---|
| இரண்டாவது பாட்டு | அதனினும் பெரிய அறுசீர்கழிநெடில் விருத்தம் |
| மூன்றாம் பாட்டு | அதனினும் பெரிய அறுசீர்கழிநெடில் விருத்தம் |

நாயனாரது அன்பு வளர்ந்து முதிர்ந்து பெருகும் நிலையினைப் பாடல்கள் மூலம் கண்ட மாதவச் சிவஞானமுனிவர், நாயனாரது துதியாகக் காஞ்சிப்புராணத்தில் கீழ்க்காண் பாடலை நமக்கு அளித்துள்ளார்.

> இடையறாப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும் உழவாரத்திண்
> படையறாத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும்
> நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகை தன் ஞானப்பாடல்
> தொடையறாச் செவ்வாயும் சிவ வேடப் பொலிவழகும் துதித்து வாழ்வாம்.

இவ்வாறு அன்பு நிலை திருவாரூரில் மிகப்பெருக நிகழ்ந்து,

> ஆண்டான் அடிமையோடு
> அடியார்க்கடியராந் தன்மையும்

பெறுவித்த திருவருளை வியந்து "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என்று பாடுகின்றார்.

ஒவ்வொரு திருமுறை வழிபாட்டுக் கருத்தரங்குக்கு நாம் வரும்போதும் ஒவ்வொருவரும் நமது திருவருள் அன்பின் பரிணாம வளர்ச்சியைக் கண்டு உவக்கும் வண்ணம் திருமுறைகளைப் படித்து உய்வோமாக.

செந்தமிழ் நாட்டு வேளாண் குடியில் தோன்றிய மருள்நீக்கியார், தம் இளமைப் பருவத்திலேயே பெற்றோரை இழந்து, வழிநடத்துநரின்றி சமண சமயம் சார்ந்து வாழ்க்கையின் பெரும்பகுதியைப் பயனற்ற விரதங்களிலும், நோன்புகளிலும் வீணே கழித்துப் பின் திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்ததெனச் சைவம் சார்ந்து சூலைநோய் நீங்கப்பெற்று திருநாவுக்கரசராகி இறைவனது திருவருளனுபவத்தில் திளைத்த நிலையில் பாடிய பதிகங்களே நான்காம் திருமுறையாக அமைந்துள்ளன.

இத்திருப்பதிகங்களில் பல, வாழ்க்கையில் நெடுங்காலம் துயருற்ற நாவரசர், அத்துயர் மிகுதியாக, இறைவனை நோக்கி முறையிடும் வண்ணம் அமைந்துள்ளன. மக்கள் தமது அறியாமையால் பிழை புரிந்தாலும், பின்னர்த் தம்முடைய குற்றம் உணர்ந்து அருளாளனாகிய இறைவன்பால் முறையிடுவோராயின், இறைவன் அவற்றைப் பொறுத்து அருள்வார் என்ற கருத்தைப் பெரும்பாலான பதிகங்களில் இராவணன் வரலாறு மூலம் சொல்லிச் செல்கின்றார்.

இறைவனது அருட்குணங்களை மனதில் இடைவிடாது எண்ணி, மகிழ்ச்சிமிக்குப் போற்றும் திருப்பதிகங்களைப் பாடியுள்ளார். அம்மையப்பரின் திருக்கோயில் பொலிவு, அடியார்க்கு அருள்செய்யும் பொருட்டு அவன் மேற்கொண்ட திருக்கோலங்கள், யாக்கை, இளமை நிலையாமை, செய்யத்தக்கன, செய்யத்தகாதன ஆகிய அரிய செய்திகளைப் பதிகங்களாக வார்த்து நமக்கு நான்காம் திருமுறையில் அருளியுள்ளார். இத்திருமுறையில் ஏனைய இருவர் திருப்பதிகங்களில் காணப்பெறாத திருநேரிசை, திருவிருத்தம் என்னும் யாப்பு விகற்பகங்கள் சிறப்பாக அமைந்துள்ளதைக் காணலாம். முதல் 21 திருப்பதிகங்கள் கொல்லி, சாதாரி போன்ற பல பண்களில் அமைய 22 முதல் 113 வரையிலான பதிகங்கள் திருநேரிசை, திருவிருத்தங்களில் அமைந்துள்ளன.

தன்னொப்பாரில்லாத தலைவனாகிய பெருமானின் அருட்குணங்கள் எல்லாவற்றையும், அப்பெருமான் திருமுன் முன்னிலைப் பரவுதலாக எடுத்துரைத்துப் போற்றுதற்கும், உலக மக்களுக்கும், தமது நெஞ்சத்திற்கும் தெளிவாக விரித்து உரைத்தற்கும் ஏற்றவாறு விரிந்த சொல்நடையும், எல்லார்க்கும் எளிதில் பொருள் விளங்கும் தெளிவும் பெற்றுத் திகழ்வதால் “சொற்குறுதி அப்பர்” என்று போற்றி மகிழ்கிறோம்.

அப்பரடிகள் ஆண்டவனாகிய இறைவனைத் தலைவனாகவும், அவனது பேரருள் இன்பத்தை விரும்பி நிற்கும் ஆருயிராகிய தம்மைத் தலைவியாகவும் கருதிய நிலையில் அகப்பொருள் துறையில் பல பாடல்களைப் பாடியுள்ளார்.

தம்மைச் சமண சமயத்திற்புகுத்தி அறவுரைகள் பலவற்றையும் ஓதியுணரச் செய்து, பின் சூலை நோயினைத் தந்து சமணத்தினின்று மீட்டு, திருவருளைப் புலப்படுத்தி சிவநெறியில் சேர்வித்து உய்வித்த செயலை,

ஓதுவித் தாய்முன் னறவுரை காட்டி யமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்ப்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி வாய்க்கச்சி யேகம்பனே 4-99-1

எனவரும் பாடலில் விரித்துக் கூறியுள்ளார்.

இரப்போர்க்கு இல்லையென்னாது ஈந்து மகிழ வேண்டும் இல்லையெனில் நரகம் செல்ல வேண்டும் என்ற கருத்தினை,

இரப்பவர்க் கீயவைத்தா **ரீபவர்க் கருளும்வைத்தார்**
கரப்பவர் தங்கட்கெல்லாங் கடுநர கங்கள்வைத்தார்
பரப்புநீர்க் கங்கைதன்னைப் படர்சடைப் பாகம்வைத்தார்
அரக்கனுக் கருளும்வைத்தா ரையனை யாறனாரே. 4-38-10

என்ற பாடல் மூலம் பதிவு செய்கிறார்.

புறச்சமயம் செல்வோர் சைவம் திரும்புங்கால் செய்யவேண்டிய தீக்கைச் செயல்களைப் பற்றி

குண்டனாய் தலைபறித்துக் குவிமுலையார் நகைநாணா துழிதர் வேனைப்
பண்டமாப் படுத்தென்னைப் **பாறலையிற் றெளித்துத்தன் பாதங் காட்டித்**
தொண்டெலா மிசைபாடத் தூமுறுவ லருள்செய்யு மாரூ ரரைப்
பண்டெலா மறியாதே பனிநீராற் பாவைசெயப் பாவித் தேனே. 4-5-4

என்ற பாடல் மூலம் நமக்கு அறிவுரை செய்கிறார்.

தொண்ட உழவராகிய திருநாவுக்கரசர் சிவகதியாகிய நற்பயிர் விளைதற்கு உலகமக்கள் மேற்கொள்ள வேண்டிய உழவு முறைகளை,

மெய்ம்மையாம் உழவைச்செய்து விருப்பெனும் வித்தைவித்திப்
பொய்ம்மையாங் களையைவாங்கிப் பொறையெனு நீரைப்பாய்ச்சித்
தம்மையு நோக்கிக்கொண்டு தகவெனும் வேலியிட்டுச்
செம்மையு ணிற்பராகிற் சிவகதி விளையுமன்றே 4-76-2

எனவரும் திருநேரிசையில் உருவக அணியமைய விரித்துக்கூறிய முறை உணர்ந்து போற்றத்தக்கதாகும்.

சிவபெருமான் நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டு எழுந்தருளியுள்ள எளிமைத் திறத்தையும் அடியார்கள் உள்ளத்திலிருந்து உறுதிப் பொருள்களை அறிவுறுத்தும் அருள் ஞானச் சிறப்பினையும் பல திருப்பாடல்களில் போற்றிப் பரவியுள்ளார்.

உடம்பெனு மனையகத்து வுள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கில்
கடம்பர் காளைதாதை கழலடி காணலாமே. 4-75-4

இந்தப் பாடலில் ஊனில் உயிர்ப்பை ஒடுக்கித் தம் உள்ளத்துள்ளே ஞான விளக்கேற்றி இறைவனைக் காணுந்திறத்தை அறிவுறுத்தியுள்ளார்.

காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையவாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே. 4-76-4

என்ற பாடல் மூலமாக அகப்பூசை செய்யும் முறையை அப்பரடிகள் புலப்படுத்தியுள்ளார். வாளால் மகவரிந்து ஊட்டியோ, மாது சொன்ன சூளால் இளமை துறந்தோ நம்மால் சிவபெருமானுக்கு அடிமையாக முடியாது. 21ஆம் நூற்றாண்டிற்கு எளிய வழி பூசனைதான்.

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
இரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. 4-7-1

எனவரும் திருப்பதிகத்தில், இறைவனைப் போதொடு நீர் சுமந்தேத்திப் புறத்தே வழிபாடு செய்வோர், வழிபாட்டின் முடிவில் முதல்வனைத் தம் உள்ளத்தே ஒடுக்கிச் சிந்தித்துப் போற்றும் முறையினை அடிகள் அறிவுறுத்தியுள்ளார். அவர்தம் அன்பின் நிலையைச் சேக்கிழார் சுவாமிகள்,

வார்ந்து சொரியும் கண் அருவி மயிர்க் கால் தோறும் வரும் புளகம்
ஆர்ந்த மேனிப் புறம்பு அலைப்ப அன்பு கரைந்து புள் அலைப்பச்
சேர்ந்த நயனப் பயன் பெற்றுத் திளைப்பத் திருவேகம்பர் தமை
நேர்ந்த மனத்தில் உற வைத்து நீடும் பதிகம் பாடுவோர். பெரியபுராணம் - 323

என்ற செய்யுளில் சொல்லோவியஞ் செய்து காட்டியுள்ளார்கள். இப்பாடல் மூலம் அப்பரடிகள் இறைவனை அகத்தும், புறத்தும் இடைவிடாது வழிபடுபவரென்றும், இவை அவ்வாறு வழிபடும் நிலையில் அருளிச் செய்யப் பெற்ற பத்திமைப் பாடல்கள் என்பதும் நன்கு விளங்கும். இக்கருத்தையே மணிவாசகப் பெருந்தகையும் “இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க” என்று பாடியதையும் நாமறிவோம்.

எல்லாச் சமயத்தாராலும் வழிபடப்பெறும் முதல்வன் ஒருவனே என்னும் உண்மையினைப் பல பதிகங்களில் வலியுறுத்தியுள்ளார். சமய வாதங்களில் ஈடுபடாது சமயாதீதப் பழம்பொருளாகிய முழுமுதற் கடவுளான சிவபெருமானையே வழிபட்டுய்தலே மக்களால் மேற்கொள்ளத்தக்க நன்னெறியாம் என்பதை,

விரிவிலா வறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்து
எரிவினாற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும்
பரிவினாற் பெரியோரேத்தும் பெருவேளூர் பற்றினானை
மருவிநான் வாழ்த்தியுய்யும் வகையது நினைக்கின்றேனே. 4-60-9

என்ற பாடல் மூலம் அறிவுறுத்துகிறார்.

சொல்வேந்தராகிய அப்பர் அருளியத் திருப்பதிகப் பாடல்களில் பொருள் விளக்கத்திற்கு வேண்டிய உவமை, உருவகம் முதலிய அணி நலங்கள் சிறப்பாக அமைந்துள்ளன. கால்நட்டு, ஓலைவேய்ந்து, வாசல் வைத்து, சுவரெழுப்பிக் குடிசை அமைப்பது போல, இறைவன் மக்களுக்கு யாக்கையாகிய வீட்டை கை, கால், இறைச்சி மேய்ந்து அளித்துள்ள செய்தியை,

கால்கொடுத் திருகையேற்றிக் கழிநிரைத் திறைச்சிமேய்ந்து
தோல்படுத் துதிரநீராற் சுவரெடுத் திரண்டுவாசல்
ஏல்வுடைத் தாவமைத்தங் கேமுசா லேகம்பண்ணி
மல்கொடுத் தாவிவைத்தார் மாமறைக் காடனாரே. 4-33-4

என்ற பாடல் மூலம் எடுத்துச் சொல்லியுள்ளார். நமதுடலோ, உயிர் மட்டுமே நிலையாய்த் தங்குதற்கேற்ற சொந்த வீடாக அமையாமல், ஐம்பொறிகள் தங்குதற்குரிய உரிமையிடமாகவும் அமைந்துவிட்டது. ஐம்பொறிகளாம் உறவினர்களால் ஈர்க்கப்பட்ட உயிர், பின்விளைவறியாது, சிற்பொழுது மகிழும் அவலநிலைக்கு, உலையேற்றிய இளவெந்நீரிற்குதித்தாடும் ஆமையின் தெளிவற்ற மகிழ்ச்சியினை உவமையாகக் குறித்த நலம் கீழ்க்கண்ட பாடலில் காணலாம்.

வளைத்துநின் றைவர் கள்வர் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை யேற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடுகின்ற வாமைபோற் றெளிவி லேதேன்
இளைத்துநின் றாடுகின்றே னென்செய்வான் றோன்றினேனே. 4-79-6

சுற்றிவண் டியாழ்செயுஞ் சோலையுங் காவுந் துதைந்திலங்கு
பெற்றிகண் டான்மற்றி யாவருங் கொள்வர் பிறரிடைநீ
ஒற்றிகொண் டாயொற்றி யூரையுங் கைவிட் டுறுமென்றெண்ணி
விற்றிகண் டாய்மற் றிதுவொப்ப தில்லிடம் வேதியனே 4-86-8

உவகைச் சுவையும், நகைச்சுவையும் அமைய அருளியத் திருப்பாடல்களில் மேற்காண் பாடலும் ஒன்று. ஒற்றியாகப் பெற்றுள்ள ஊரை விற்க வேண்டாமென்று நகைச்சுவையாகக் கூறுகிறார்.

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைகெடு மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டூனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே. 4-112-8

எனவரும் திருவிருத்தம் இறைவனுக்காட்பட்ட பெருமக்களாகிய அடியார்களின் உள்ளத்து உறுதியைப் புலப்படுத்துதல் காணலாம்.

கருவாய்க் கிடந்துன் கழலேநி னையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே னுனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே. 4-94-6

என்ற பாடல் மூலம் சுவாமிகள் ஐந்தெழுத்துபதேசத்தை வெளியிட்டருளுகிறார்.

உலகின்கண் மக்கட்பிறப்பெடுத்த நாமெல்லாம் நாடுவது இன்பமேயாகும். அது பெறுதற்கு அவர்கள் நாடுகின்ற வழிகள் பலவாம். அவ்வழிகள் அவரவர் அறிவு நிலைக்கேற்றவாறு அமைகின்றன. அவ்வழிகளே சமயங்கள் எனப் பேசப்படுகின்றன. ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு பொருளுண்மையைத் தன்னகத்தே கொண்டிருக்கும். அத்தகைய பொருள்களாவன : கடவுள், உயிர், உலகம் என்பனவாம். இம்மூன்றின் உண்மையையும் இலக்கணத்தையும் முடிந்தமுடிபாக தருக்கமுறையில் எடுத்தியம்பி, உயிர் பெறுவதற்குரிய இன்பத்தின் உயர்ந்த நிலையையும், அது பெறுவதற்குத் தடையாயுள்ள உலகத்தியற்கையையும் உள்ளவாறு கூறி, அவ்வின்பத்தைப் பெற வேண்டிய சாதனங்களையும் தெரிவிப்பது சைவ சமயமே. இவற்றைப் பல்லாற்றானும் விளக்குவன சைவத்திருமுறைகள் பன்னிரெண்டும், மெய்கண்ட சாத்திரம் பதினான்குமாகும். இவற்றையெல்லாம் நாம் கற்று உய்ய வேண்டுமென்று, இரண்டு மாதத்திற்கு ஒருமுறை, ஒரு திருமுறை என்று பன்னிரு திருமுறைகளுக்கான கருத்தரங்கங்களை நடத்தத் திருவருள் ஆணைகிட்ட நான்காம் திருமுறைக் கருத்தரங்கம், 2015 ஜுன் மாதம் 27, 28 (சனி, ஞாயிறு) தேதிகளில் நடைபெறுகிறது.

| முதல் திருமுறை | 136 | 1469 | திருஞானசம்பந்தர் | டிசம்பர் 27, 28, 2014 |
|---|---|---|---|---|
| இரண்டாம் திருமுறை | 122 | 1331 | திருஞானசம்பந்தர் | பிப்ரவரி 21, 22, 2015 |
| மூன்றாம் திருமுறை | 127 | 1369 | திருஞானசம்பந்தர் | ஏப்ரல் 18, 19, 2015 |
| நான்காம் திருமுறை | 113 | 1069 | திருநாவுக்கரசர் | ஜூன் 27, 28, 2015 |

இரண்டு மாத இடைவெளியில் ஆயிரக்கணக்கான பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்து, கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும் திருமதி ப. தமிழரசியைத் தலைவியாகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின் திரு. இரா. மதன்குமார், திருமதி ச. கவிதா, திரு.வே. பூபதிகிருஷ்ணன், திரு. பு. பிரபுராம் ஆகியோருக்கும், கணினி நிபுணர்களான மு. மகேஷ், திரு. சசி ஆகியோருக்கும், ஒருங்கிணைப்புப் பணியில் ஈடுபட்டிருக்கும் திரு. ப. மணிசேகர், திரு. அ. இராமசாமி போன்றோருக்கும் நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும் மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் http://www.panniruthirumurai.org/ என்ற இணையதள விலாசத்தில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படிவமெடுத்தும் தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் வேண்டுகிறோம்.

அன்பன்,

**இராச. வசந்தகுமார்**

நிறுவனர் – வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்

கோவை – 21

II : II II

## நான்காம் திருமுறைக் கருத்தரங்கம்

## 27, 28 ஜுன் 2015 (சனி, ஞாயிறு) : நிகழ்ச்சி நிரல்

| வ.எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வுப் பொருள் |
|---|---|---|---|
| 1. | 27.06.2015 சனி<br>காலை 9.00 - 11.00 | மகாவித்துவான் மயிலம்<br>**வே.சிவசுப்பிரமணியம்**<br>அவர்கள் | கொல்லி, காந்தாரம்,<br>பியந்தைக் காந்தாரம்,<br>சாதாரி, காந்தாரப் பஞ்சமம்,<br>பழந்தக்கராகம், பழம்<br>பஞ்சுரம் வரை - முதல் 15<br>பதிகங்கள் |
| 2. | 27.06.2015 சனி<br>நண்பகல் 11.00-01.00 | பேராசிரியர்<br>**ம.வே. பசுபதி** அவர்கள் | இந்தளம், சீகாமரம், குறிஞ்சி,<br>கொல்லிப் பண்களில் 16-23<br>பதிகம் வரை,<br>திருநேரிசையில்<br>24 முதல் 31 வரை.<br>மொத்தம் 16 பதிகங்கள் |
| 3. | 27.06.2015 சனி<br>பிற்பகல் 02.00-4.00 | திரு. **சொ.சொ.மீ.<br>சுந்தரம்** அவர்கள் | திருநேரிசை 32 முதல்<br>49 வரை 18 பதிகங்கள். |
| 4. | 27.06.2015 சனி<br>மாலை 4.00-07.00 | தேவார இன்னிசை, பக்க<br>வாத்தியங்களுடன்<br>முனைவர்<br>**கோ.ப. நல்லசிவம்**<br>அவர்கள் | கொல்லி, காந்தாரம், சாதாரி,<br>காந்தாரப் பஞ்சமம்,<br>பழந்தக்கராகம்,<br>பழம்பஞ்சுரம்,<br>குறிஞ்சி, இந்தளம், சீகாமரம்,<br>நேரிசை, விருத்தம். |
| 5. | 28.06.2015 ஞாயிறு<br>காலை 9.00-11.00 | சைவத்திரு<br>**சு. குஞ்சிதபாதம்**<br>அவர்கள் | திருநேரிசை 50-65<br>பதிகங்கள் வரை -<br>16 பதிகங்கள் |
| 6. | 28.06.2015 ஞாயிறு<br>நண்பகல் 11.00-01.00 | சைவத்திரு **சிவ. காந்தி**<br>அவர்கள் | நேரிசை 66 முதல் 79 வரை<br>14 பதிகங்கள்.80,81-கொல்லி.16-பதிகங்கள் |
| 7. | 28.06.2015 ஞாயிறு<br>பிற்பகல் 02.00-04.00 | பேராசிரியர் **புரிசை<br>நடராசன்** அவர்கள் | திருவிருத்தம் பதிகம் 82<br>முதல் 96 வரை -<br>15 திருப்பதிகங்கள் |
| 8. | 28.06.2015 ஞாயிறு<br>மாலை 04.00- 06.00<br>அவர்கள் | முதுமுனைவர் **ந.இரா.<br>சென்னியப்பனார்**<br>17 திருப்பதிகங்கள் | திருவிருத்தம் பதிகம்<br>97-113 வரை - |

# நான்காம் திருமுறைக்கு இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்

1712-ஆம் ஆண்டு இந்தியாவில், தமிழகத்தில், தரங்கம்பாடியில் அச்சுக்கூடம் முதலில் நிறுவப்பட்டது

1814-ஆம் ஆண்டு திருக்குறள் முதன்முதலாக காகித நூல் வடிவில் அச்சேறியது

| வ. எண் | ஆண்டு | நூலின் பெயர் | வெளியீட்டாளர் / பதிப்பகத்தார் / அச்சகம் | ஆசிரியர் | கொடையாளர் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1864 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | அப்பாவுப்பிள்ளை நமச்சிவாய முதலியார் | திருவாவடுதுறை ஆதீனப் பிரதிகள், தேசிகர்கள் எழுதிய ஓலைச்சுவடிகள் ஆதாரம் |
| 2. | 1866 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | ஏழு திருமுறைகளாகப் பண்முறையில் வெளியிடப்பட்டது |
| 3. | 1876 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | ஏழு திருமுறைகளாகப் பண்முறையில் வெளியிடப்பட்டது |
| 4. | 1881 | தலமுறைத் தேவாரம் | மதுரை இராமசாமிப் பிள்ளை, சென்னை புஷ்பரத செட்டியார் அச்சுக்கூடம் | துறைசை ஆதீன அப்பு ஓதுவார் | பனசை காசிவாசி சீர்வளர்சீர் இராமலிங்க சாமிகள் | மதுரை, துறைசை ஆதீனப் பிரதிகள் ஒப்பு |
| 5. | 1894 | தலமுறைத் தேவாரம் | திருமயிலை செந்தில்வேல் முதலியார் சென்னை விக்டோரியா ஜுபிலி அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி சீர்வளர்சீர் சாமிநாத சாமிகள் | - |
| 6. | 1898 | பண்முறைத் தேவார அடங்கல் | சண்முக முதலியார் சென்னை முதலியார் ஆறுமுகவிலாச அச்சுக்கூடம் | வேங்கட நாயுடு | - | மூன்றாம் முறை மறுபதிப்பு |
| 7. | 1905 | தலமுறைத் தேவார | சென்னை கலாரத் நாகர அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி சீர்வளர்சீர் சாமிநாத சாமிகள் | |

| 8. | 1906 | பண்முறை தேவார அடங்கல் | எஸ்.பி இராஜாராம், ஸன் ஆப் இந்தியா அச்சகம், சென்னை | திருமயிலை வித்வான் சண்முகம் | | மறுபதிப்பு |
|---|---|---|---|---|---|---|
| 9. | 1907 | தேவாரம் | பங்காளம் அப்புபிள்ளை சென்னை நேஷனல் அச்சுக்கூடம் | | | |
| 10. | 1911 | தலமுறை மூவர் தேவாரம் | யாழ்ப்பாண வண்ணநகர்ச் சுவாமிநாத பண்டிதர், சென்னை வித்தியா நுட்பாலன அச்சுக்கூடம் | | | |
| 11. | 1917 | பண்முறை தேவார அடங்கல் | நமச்சிவாய முதலியார் நிரஞ்சன விலாஸ் அச்சகம், சென்னை | | | மறுபதிப்பு |
| 12. | 1917 | தேவார வேதசாரம் | சைவ சித்தாந்த மகாசமாஜம் இலங்கை | செந்தில்நாதய்யர், இலங்கை | மங்கையர்க்கரசி ஏகாம்பர முதலியார் | |
| | 1996 மறுபதிப்பு | | கலா சம்ரஷ்ண சங்கம், தஞ்சாவூர் | | மாதுஸ்ரீ பாலம் அம்மையார் | |
| 13. | 1953 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் பதிப்பு | - | - | - |
| 14. | 1957 | திருநாவுக்கரசர் 4ஆம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் தருமபுரம் | சீர்வளர்சீர் சொக்கலிங்கத தம்பிரான் பதிப்பாசிரியர் | தருமையாதீனம் 25வது குருமகா சந்நிதானம் | திரு. முத்து சு. மாணிக்க வாசக முதலியார், குறிப்புரை ஆசிரியர் |
| 15. | 1959, 61, 70, 76, 86, 92, 95, 99 | திருநாவுக்கரசர் தேவாரம் தலமுறை | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | எட்டு பதிப்புகள் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 16. | 1968 | மூவர்தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 17. | 1972 | பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு தொகுதிகள்) | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (காசித் திருமட நிதிய வெளியீடு) | வித்துவான் க. வெள்ளைவாரணர் | | 2412 பக்கங்கள் கொண்ட பெரிய வரலாற்று நூல் |

| 18. | 1997 | மறுபதிப்பு திருநாவுக்கரசர் நான்காம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் - தருமபுரம். காந்தளகம் - சென்னை. | வித்துவான் சீர்வளர்சீர் ராமலிங்கத் தம்பிரான் | தருமையாதீனம் 26வது குருமகா சந்நிதானம் | குறிப்புரையாசிரியர் - திரு. முத்து சு. மாணிக்க வாசக முதலியார் |
|---|---|---|---|---|---|---|
| 19. | 1998 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் மறுபதிப்பு | | | |
| 20. | - | தேவாரம் மூன்று தொகுதிகள் | பிரெஞ்சு நிறுவனம் | கல்விக்கடல் கோபாலய்யர் | | |
| 21. | 2002 | திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் | காசித்திருமடம் திருப்பனந்தாள் | | பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி மறுபதிப்பு 9ஆம் பதிப்பு | 3000 படிகள் - மூலம் மட்டும் |
| 22. | 2003 | பன்னிரு திருமுறை | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | வ.த. இராம சுப்பிரமணியம் | அருட்செல்வர் மகாலிங்கம் | ஐந்தாம் பதிப்பு மூலமும், தெளிவுரையும் 12 திருமுறைகள் |
| 23. | 2004 | பன்னிரு திருமுறை | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | வ.த. இராம சுப்பிரமணியம் | அருட்செல்வர் மகாலிங்கம் | ஐந்தாம் பதிப்பு மூலமும், தெளிவுரையும் 12 திருமுறைகள் |
| 24. | 2004 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 10ஆம் பதிப்பு | பன்னிரு திருமுறை பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 25. | 2006 | பன்னிரு திருமுறை | சதுரா பதிப்பகம் | தொகுப்பாசிரியர் சதுரா. ஜூ.ச.முரளி | | பன்னிரு திருமுறைகள் மூலம் மட்டும் ஒரே நூல் |
| 26. | 2006 | பன்னிரு திருமுறை | சதுரா பதிப்பகம் | தொகுப்பாசிரியர் சதுரா. ஜூ.ச.முரளி | | பன்னிரு திருமுறைகள் மூலமும் உரையும் மூன்று தொகுதிகள் |
| 27. | 2007, 2012 மறுபதிப்பு | பன்னிரு திருமுறை | மெய்யப்பனார் மணிவாசகர் அச்சகம் / பதிப்பகம் வெளியீடு | பதிப்பு ஆசிரியர் முனைவர் ச.வே. சுப்பிரமணியம் தமிழூர் | | மூலம் மட்டும் |
| 28. | 2007 | பன்னிரு திருமுறை | தமிழகச் சைவநெறிக் கழகம் | சரவண பவானந்த தேசிகர் | பன்னிரு திருமுறைப் பதிப்பு | |
| 29. | 2008 | திருநாவுக்கரசர் தேவாரம் தலமுறை | திருப்பனந்தாள் காசித்திருமடம் | பதினொராம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்பு | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 30. | 2008 | பன்னிரு திருமுறை | சதுராபதிப்பகம் | தொகுப்பாசிரியர் சதுரா. ஜீ.ச.முரளி | | மூலமும், உரையும் ஒன்று முதல் ஆறு திருமுறை வரை |

| 31. | 2008 | மூவர் தேவாரம் | சதுராபதிப்பகம் | பதிப்பாசிரியர் சதுரா. ஜீ.ச. முரளி | | 7 திருமுறைகள் மூலம் மட்டும் |
|---|---|---|---|---|---|---|
| 32. | 2008 | திருநாவுக்கரசர் தேவாரத்தில் சிவ மூர்த்தங்கள் | கபிலன் பதிப்பகம், புதுச்சேரி | ஆசிரியர் முனைவர் பா. சுந்தர், திருச்சி | | |
| 33. | 2010 | திருநாவுக்கரசர் தேவாரம் | கைலாஷ் பிரிண்டர்ஸ் | | | 4, 5, 6 திருமுறைகள் |
| 34. | 2010 | பன்னிரு திருமுறைகள் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | உரைஆசிரியர் வ.த. இராம சுப்பிரமணியம் | அருட் செல்வர் மகாலிங்கம் | மூலமும், உரையும் |
| 35. | 2011 | திருநாவுக்கரசர் தேவாரம் நான்காம் திருமுறை | தருமை ஆதீனம் ஞானசம்பந்தம் பதிப்பகம் | பொழிப்புரை தி.வே. கோபாலய்யர் புதுச்சேரி | இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, மயிலாடுதுறை | விளக்கக் குறிப்புகள் முத்து சு. மாணிக்கவாசக முதலியார் |
| 36. | 2015 | திருநாவுக்கரசர் தேவாரம் நான்காம் திருமுறை | திருவாவடுதுறை ஆதீனம் | | இருபத்து நான்காவது குருமகா சந்நிதானம் திருப்பெருந் திரு. அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் | மூலம் மட்டும் |
| 37. | 2015 | நான்காம் திருமுறை திருநாவுக்கரசர் தேவாரம் | கற்பகம் பல்கலைக்கழகம் | பன்னிரு திருமுறை ஆய்வு மையம் | கற்பகம் அறக்கட்டளை | மூலமும், உரையும் |

✶ திருப்பனந்தாள் காசித் திருமடம் பத்துப் பதிப்புகளாக 30,000 படிகளை மூலமாக அடக்க விலையில் வெளியிட்டுப் பெரும்பணி செய்துள்ளார்கள்.

✶ வர்த்தமானன் பதிப்பகத்தார் சுருக்கமான உரையுடன் மூலத்தை ஏழு பதிப்புகளாகப் பல தொகுதிகளாக 12 திருமுறைகளையும் அருட்செல்வர் மகாலிங்கம் அருட்கொடையுடன் வெளியிட்டுத் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்துள்ளார்கள்.

✶ இதுவரை வெளிவந்துள்ள உரைகளிலேயே மிக விரிவானது, விளக்கமானது 1957, 1997, 2011 ஆண்டுகளில் வெளிவந்த தருமையாதீன உரைதான். குருமகா சந்நிதானம் அவர்கள் முத்து சு. மாணிக்கவாசகனார், வித்துவான் கோபாலய்யர் போன்ற உரையாசிரியர்களைக் கொண்டு வெளியிட்டருளினார்கள். அவற்றின் மறுபதிப்பு காந்தளகம் அச்சகத்தின் மூலம் வெளியிட்டுள்ளார்கள்.

✶ நமது நான்காம் திருமுறை நூலை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குரு மகா சந்நிதானங்களுக்கும், நூல் வெளியீட்டாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அப்பதிப்புகளின் கொடையாளர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள்.

## நான்காம் திருமுறை

### தேவாரம் "பாடியவாறு" அட்டவணை

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | நான்காம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| | 574-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் அவதாரம் | 18 | | |
| | 599-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் சமணம் சார்ந்தது | 37 | | |
| | 619-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் சமணத்திலிருந்து சைவரானது | 67 | | |
| 1. | சூலை நோய் தீரும்பொருட்டு இறைவன் திருமுன் - திருவதிகை வீரட்டம் - நாவரசர் நாமம் பெற்றது | 70<br>74 | கூற்றாயினவாறு | 1 |
| 2. | திருவதிகை வீரட்டம் (யானையை ஏவியபோது) | 115 | சுண்ணவெண் | 2 |
| 3. | திருவதிகை வீரட்டம் (கல்லோடு கட்டி கடலில் இட்டபோது) | 126 | சொற்றுணை வேதியன், நமச்சிவாயப் பதிகம் | 11 |
| 4. | திருப்பாதிரிப் புலியூர் (சடையாரைக் கும்பிட்டு) | 133, 134 | ஈன்றாளுமாய் | 94 |
| 5. | திருவதிகை வீரட்டம் (மறுபடியும் ஊருக்கு வந்து) | 144 | முளைக்கதிர் | 10 |
| 6. | திருவதிகை வீரட்டம் | 144 | இரும்புகொப்பளித்த | 24 |
| 7. | திருவதிகை வீரட்டம் | 144 | வெண்ணிலா | 25 |
| 8. | திருவதிகை வீரட்டம் | 144 | நம்பனே | 26 |
| 9. | திருவதிகை வீரட்டம் | 144 | மடக்கினார் | 27 |
| 10. | திருவதிகை வீரட்டம் | 144 | முன்பெலாம் | 28 |
| 11. | திருவதிகை வீரட்டம் | 144 | மாசில்ஒள் | 104 |
| 12. | கோவலூர் வீரட்டம் | 148 | செத்தையேன் | 69 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | நான்காம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 13. | தூங்கானை மாடம் (பெண்ணாகடம்) (மூவிலைச் சூலம் என் மேல் பொறி) | 151 | பொன்னார் திருவடி | 109 |
| 14. | கோயில் (தில்லை) திருநடம் எதிர் கும்பிடும் போது | 168 | கருநட்டகண்டன் | 81 |
| 15. | கோயில் (தில்லை) திருநடம் எதிர் கும்பிடும் போது | 169 | பத்தனாய்ப் பாடமாட்டேன் | 23 |
| 16. | கழிப்பாலை | 173 | வனபவளவாய் | 6 |
| 17. | கழிப்பாலை | 173 | நங்கையை | 30 |
| 18. | கழிப்பாலை | 173 | நெய்தற்குருகு | 106 |
| 19. | கோயில் (புலியூர் / தில்லை) கழிப்பாலை சென்று மீண்டு வந்து | 176 | செஞ்சடைக் கற்றை | 22 |
| 20. | கோயில் (புலியூர் / தில்லை) கழிப்பாலை சென்று மீண்டு வந்து | 176 | பாளையுடை | 80 |
| | 644-ஆம் ஆண்டு அப்பரும் திருஞானசம்பந்தரும் சீகாழியில் சந்தித்தல் | 182 | | |
| 21. | கழுமலம் (சீகாழி) | 187 | பார்கொண்டு மூடி | 82 |
| 22. | கழுமலம் (சீகாழி) | 187 | படையார் மழு | 83 |
| | நாவரசரும், பிள்ளையாரும் சேர்ந்து கோலக்கா வழிபாடு முடிந்ததும் இருவரும் பிரிதல் | 187 | | |
| 23. | குறுக்கை வீரட்டம் | 189 | ஆதியிற் பிரமனார் | 49 |
| 24. | குறுக்கை வீரட்டம் | 189 | நெடியமால் பிரமனோடு | 50 |
| 25. | சாய்க்காடு | 189 | தோடுலா மலர் | 65 |
| 26. | வலம்புரம் | 189 | தெண்டிரை தேங்கி | 55 |
| 27. | நனிபள்ளி | 189 | முற்றுணை | 70 |
| 28. | செம்பொன் பள்ளி | 190 | ஊனினுள்ளுயிரை | 29 |
| 29. | துருத்தி | 190 | பொருந்திய | 42 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | நான்காம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 30. | கோடிக்கா | 190 | நெற்றிமேற்கண் | 51 |
| 31. | ஆவடுதுறை | 191 | மஞ்சனே | 57 |
| 32. | இடைமருது | 192 | காடுடைச் | 30 |
| 33. | நாகேச்சரம் | 192 | கச்சைசேர் | 66 |
| 34. | சத்தி முற்றம் | 193, 194 | கோவாய் முடுகி | 96 |
| 35. | நல்லூர் | 197 | அட்டுமினில் | 97 |
| 36. | அவளிவண நல்லூர் | 198 | தோற்றினான் | 59 |
| 37. | திங்களூர் (அப்பூதியடிகள் மகனை உயிர்ப்பிக்கப் பாடியது) எண்ணலங்காரம் | 208 | ஒன்றுகொலாம் (விடம் நீக்கப்பாடுவது) | 18 |
| 38. | பழனம் | 211 | சொன்மாலை | 12 |
| 39. | சோற்றுத்துறை | 212 | பொய்விரா | 41 |
| 40. | சோற்றுத்துறை | 212 | காலையெழுந்து | 85 |
| 41. | வேதிகுடி | 212 | கையது காலெரி | 90 |
| 42. | கண்டியூர் | 212 | வானவர் தானவர் | 93 |
| 43. | பழனம் | 212 | ஆடினார் ஒருவர் | 36 |
| 44. | பழனம் | 212 | மேவித்து | 87 |
| 45. | சேறை | 216 | பெருந்திரு | 73 |
| 46. | பெருவேளூர் | 217 | மறையணி நாவி | 60 |
| 47. | ஆரூர் (புறத்தே) | 219 | குலம்பலம்பா | 101 |
| 48. | ஆரூர் (தேவாசிரியன்) | 223 | காண்டலே கருத்தாய் | 20 |
| 49. | ஆரூர் | 223 | மெய்யெலாம் | 5 |
| 50. | ஆரூர் (ஊரில்தங்கி) | 226 | பாடிளம் | 4 |
| 51. | ஆரூர் (ஊரில்தங்கி) | 226 | சூலப்படை | 19 |
| 52. | ஆரூர் (ஊரில்தங்கி) | 226 | படுகுழி | 52 |
| 53. | ஆரூர் (ஊரில்தங்கி) | 226 | குழல்வளங் | 53 |
| 54. | ஆரூர் (ஊரில்தங்கி) | 227 | வேம்பினைப் பேசி | 102 |
| 55. | ஆரூர் அரநெறி | 227 | எத்தீ புகினும் | 17 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | நான்காம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| | 648-ஆம் ஆண்டு புகலூர் எல்லையில் அப்பரும், ஞானசம்பந்தரும் சந்தித்தல் | 234 | | |
| 56. | புகலூரில் ஆரூரைப் பற்றிப் பாடியது<br>ஆரூர் வணங்கச் சம்பந்தர் பிரிதல் | 235<br>237 | முத்துவிதான | 21 |
| 57. | புகலூர் (திருமுன்) | 239 | செய்யர்வெண் | 16 |
| 58. | புகலூர் (திருமுன்) | | பகைத்திட்டார் | 54 |
| | அருகிலுள்ள பல தலவழிபாடு, மீண்டும் புகலூர் | 240 | | |
| | சம்பந்தர் ஆரூர் சென்று மீண்டும் புகலூர் வரல் | 241 | | |
| | முருகர் மடத்தில் உடனுறைதல் | 243 | | |
| | இருவரும் சேர்ந்து தலயாத்திரை 246 – 289 | | | |
| 59. | கடவூர் (திருமுன்) | 247 | பொள்ளத்த | 31 |
| 60. | கடவூர் (திருமுன்) | 247 | மருட்டுயர் | 107 |
| 61. | வீழிமிழலை (காசு பெற்றுச் சோறு போட்ட நாள்) | 262 | வான் சொட்ட | 95 |
| 62. | மறைக்காடு (திருக்கதவம் திறந்தபின் - வாய்மூர் சென்று திரும்பிய பின் - சம்பந்தர் மதுரை செல்லப் பிரிந்தபின் - மீண்டும் மறைக்காட்டில் பாடியது) | 290 | இந்திரனோடு | 33 |
| 63. | மறைக்காடு (10 பாடல்களும் இராவணன் வரலாறு) | 290 | தேரையும் மேல் கடாவி | 34 |
| 64. | நாகைக் காரோணம் (மறைக்காட்டிலிருந்து வீழிமிழலை செல்லும் வழியில்) | 291 | மனைவிதாய் | 71 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | நான்காம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 65. | நாகைக் காரோணம் (மறைக்காட்டிலிருந்து வீழிமிழலை செல்லும் வழியில்) | 291 | வடிவுடை மாலை | 103 |
| 66. | பயற்றூர் (சாத்தனை மகனாக வைத்ததைப் பாடுகிறார்) | 291 | உரித்திட்டார் | 32 |
| 67. | கொண்டீச்சரம் (குறிக்கோள் இலாது கெட்டபாடல் பாடியது) | 291 | வரைகிலேன் | 67 |
| 68. | வீழிமிழலை | 292 | பூதத்தின் படை | 64 |
| 69. | ஆவடுதுறை (ஞானசம்பந்தர் ஆயிரம் பொன் பெற்ற வரலாற்றைப் போற்றி பரவுகிறார்) | 293 | மாயிருஞாலம் | 56 |
| 70. | இன்னம்பர் (போலும், போலும்) | 301 | விண்ணவர் | 72 |
| 71. | இன்னம்பர் (இணையடி) | 301 | மன்னும் மலை | 100 |
| 72. | ஆப்பாடி | 301 | கடலகமேழி | 48 |
| 73. | அண்ணாமலை | 312 | ஓதிமாமலர்கள் | 63 |
| 74. | கச்சி ஏகம்பம் (திருமுன்) | 324 | கரவாடும் வன்னெஞ்ச | 7 |
| 75. | கச்சி (உழவாரப்பணி செய்யும்போது) | 325 | நம்பனை | 44 |
| 76. | கச்சி (உழவாரப்பணி செய்யும்போது) | 325 | ஓதுவித்தாய் | 99 |
| 77. | கச்சி மேற்றளி | 326 | மறையதுபாடி | 43 |
| 78. | மாற்பேறு | 327 | மாணிக்குயிர் | 108 |
| 79. | ஒற்றியூர் | 337 | செற்றுக்களிற்றுரி | 86 |
| 80. | ஒற்றியூர் | 337 | வெள்ளத்தை | 45 |
| 81. | ஒற்றியூர் | 337 | ஓம்பினேன் | 46 |
| 82. | ஆலங்காடு | 342 | வெள்ளநீர் | 68 |
| 83. | பருப்பதம் | 349 | கன்றினார் தங்கள் | 58 |
| 84. | கயிலாயம் | 355 | கனகமாவயிர | 47 |
|  | கயிலை வரை சென்று |  |  |  |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | நான்காம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| | பொய்கையில் மூழ்கி ஐயாற்றில் எழுந்து கயிலைக் காட்சி கண்டு மறைந்தபின் கண்டமை பாடுவது | | | |
| 85. | ஐயாறு | 384 | மாதர்ப்பிறைக் | 3 |
| 86. | ஐயாறு (ஐயன் ஐயாறனாரே) | 385 | கங்கையை | 38 |
| 87. | ஐயாறு | 385 | குண்டனாய் | 39 |
| 88. | ஐயாறு | 385 | தானலாது | 40 |
| 89. | ஐயாறு | 385 | அந்திவட்ட | 98 |
| 90. | ஐயாறு | 385 | குறுவித்தவா | 91 |
| 91. | ஐயாறு (ஐயாறன் அடித்தலமே) என்ற மகுடம். 20 பாடல்கள் உள்ள ஒரே பதிகம் | 385 | சிந்திப்பரியன | 92 |
| 92. | ஐயாறு | 385 | விடகிலேன் | 13 |
| 93. | நெய்த்தானம் | 386 | காலனைவீழச் | 37 |
| 94. | நெய்த்தானம் | 386 | பாரிடஞ்சாடிய | 89 |
| 95. | பூந்துருத்தி திருஞானசம்பந்தர் சந்திப்பு | 389 | மாலினைமால் | 88 |
| 96. | பூந்துருத்தி (அங்கமாலை) | 390 | தலையே நீ | 9 |
| 97. | ஆலவாய். அப்பர் பின் பாண்டிய நாடுசெல்லுதல் (ஆலவாயில் அப்பனே அருள் செயாயே) | 406 | வேதியாவேத | 62 |
| 98. | இராமேச்சரம் | 409 | பாசமுங்கழி | 61 |
| 99. | புகலூர் | 426 | தன்னைச்சரண | 105 |
| 100. | புகலூர் (அறைகூவும் பதிகம்) | 415 | சிவனெனும் | 8 |
| 101. | புகலூர் தசபுராணத்தடைவு | 415 | பருவரையொன்று | 14 |
| 102. | புகலூர் பாபநாசத்திருப்பதிகம் | 415 | பற்றற்றார் சேர் | 15 |
| 103. | புகலூர் (நினைந்த திருநேரிசை) | 414 | முத்தினை | 74 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | நான்காம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 104. | புகலூர் (தனித்திரு நேரிசை) | 414 | தொண்டனேன் | 75 |
| 105. | புகலூர் (தனித்திரு நேரிசை) | 414 | மருளவாம | 76 |
| 106. | புகலூர் (தனித்திரு நேரிசை) | 414 | கடும்பகனட்டமாடி | 77 |
| 107. | புகலூர் (குறைந்த நேரிசை) | 414 | வென்றிலேன் | 78 |
| 108. | புகலூர் (குறைந்த திருநேரிசை) | 414 | தம்மானங்காப்ப | 79 |
| 109. | புகலூர் (ஆருயிர்த் திருவிருத்தம்) | 415 | எட்டாந்திசை | 84 |
| 110. | புகலூர் | 415 | சாம்பலைப்பூசி | 110 |
| 111. | புகலூர் (சரக்கறைத் திருவிருத்தம்) | 426 | விடையும் விடை | 111 |
| 112. | புகலூர் (தனித் திருவிருத்தம்) | 426 | வெள்ளிக்குழை | 112 |
| 113. | புகலூர் (தனித் திருவிருத்தம்) | 426 | பவளத்தடவரை | 113 |





# திருநாவுக்கரசர் பெருமை

தருமை ஆதீனப் புலவர் பல்கலைக்கல்லூரி முதல்வர்
சித்தாந்த சிரோமணி, சித்தாந்த இரத்நாகரம், மதுரகவி
முதுபெரும்புலவர்
**வித்துவான் திரு முத்து சு. மாணிக்கவாசக முதலியார்**

**தி**ருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் சைவ வேளாளர் குலத்தில், குறுக்கையர் குடியில் புகழனார்க்கும் மாதினியார்க்கும் தோன்றியவர். திலகவதியார்க்குப் பின் வந்தவர் மருள் நீக்கியார் என்ற பெயரினார். கலை பலவும் நிரம்பக் கற்றவர். இருவரும் இளம் வயதில் பெற்றோரை இழந்தனர்.

திலகவதியாரை மணக்க இசைந்த கலிப்பகையார் சோழ மன்னன் படைத் தலைவர். அவர் சென்று வடநாட்டு மன்னரொடு நெடுநாள் போர் புரிந்து துறக்கம் உற்றார். அதை அறிந்த திலகவதியார் தாமும் இறக்கத் துணிந்தபோது மருள்நீக்கியார் விழுந்து வணங்கி "அன்னையும் அத்தனும் அகன்ற பின்னையும், நான் உம்மை வணங்கப் பெறுதலினால், 'உயிர் தரித்தேன்!' இனி என்னைத் தனியாகக் கைவிட்டு ஏகுவீர் எனில், யானும் உமக்கு முன்னம் உயிர் நீப்பன்" என்று மொழிந்து இடருள் முழுகினார். திலகவதியாரும் தம்பியார் உளராக வேண்டும் என வைத்த தயா, இறப்பை விலக்க உயிர் தாங்கி மனைத்தவம் புரிந்திருந்தார். சிவபெருமான் திருவடிக்கண் அன்பு பூண்டு திருவருள் நெறி ஒழுகி வாழ்ந்தார்.

மருள்நீக்கியார் சமண் சமய நூல்களைக் கற்றார். அச்சமயத்தைச் சார்ந்தார்; சமணர்க்குத் தலைவராய்த் தருமசேனர் எனப் புகழ் பெற்று விளங்கினார்.

திருவதிகையில் திருத்தொண்டு புரிந்துறையும் திலகவதியார், தம் தம்பியார் பர சமயமான படுகுழியில் வீழ்ந்து கெடுவதை ஆற்றாராய், திருவீரட்டானேசுவரரை நாள்தொறும் வேண்டி அக்குழியினின்றும் சைவ சமயப் பேரின்பக் கரையில் ஏற்றியருளப் போற்றினார். "சூலை நோய் தந்து ஆட்கொள்வோம் கவலாதே" என்று கனவில் அருளினார் அதிகைப்பிரானார். அவ்வாறே அவர்க்குச் சூலை நோய் உண்டாயிற்று. மந்திரம் முதலியவற்றால் நீக்க முயன்றனர். நோய் மேன்மேல் மிகுந்ததே அன்றிக் குறைந்திலது. மிக வருந்தித் தமக்கையார்க்குச் சொல்லி அழைத்துவர ஆள்விட்டார். அவர் அங்கு வாரேம் என்றார். மருள்நீக்கியாரே தமக்கையார்பால் ஏவலன் துணைக்கொண்டு வந்தார். கண்டார். வணங்கினார்.

திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்து ஏற்று உருஆர அணிந்து உற்ற இடத்து உய்யும் நெறி தரும் அவர், முன் செல்லப் பின்சென்று, திருவீரட்டானத்திறைவர் பெருங்கோயிலைத் தொழுது வலங்கொண்டு இறைஞ்சி நிலமிசை விழுந்தார். தம்பிரான் திருவருளால் தமிழ்மாலைகள் சார்த்தும் உணர்வுற்றார். குருவருள் கிடைக்கப் பெற்றார்.

‘‘கூற்றாயினவாறு விலக்ககிலீா்’’ எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடினாா். சூலை அகன்றது. திருவருள் பெறத் துணையாயிருந்த சூலைக்குச் செய்யும் நன்றியை நாடினாா். சிவபிரான், செந்தமிழின் சொல் வளப் பதிகத் தொடை பாடியதற்குத் திருவுளம் மகிழ்ந்ததால், ‘‘நாவுக்கரசு என்னும் பெயா் வழங்குக’’ என்று வானிலே உடலிலியொலியாக ஒரு வாய்மை எழுந்தது. அந்நாள் முதல், முப்பொறித் தூய்மையொடும் திருப்பணி செய்பவராய், சிவச்சின்னம் பூண்டு, தியானம், ஞானம், திருவாசகம், உழவாரம் எல்லாம் கொண்டு கசிந்துருகி வழிபட்டு இன்புற்றிருந்தாா்.

சமணா் துன்புறுத்த முயன்று, நீற்றறையில் இட்டனா். ‘‘ஈசன் அடியாா்க்கு ஈண்டு வருந்துயா் உளவோ? வீங்கிள வேனிற் பொழுது தைவருதண் தென்றல், தண்கழுநீர்க்குளம்போன்று மொய் ஒளி வெண்ணிலவு அலா்ந்து, மாசில் வீணை யொலியினதாகி, ஈசன் எந்தை இணையடி நீழல் அருளாகிக் குளிா்ந்தது. அந்நீற்றறை மாசிலாமதியும் மங்கையாம் கங்கைப் புனலும் மன்னி வளா் சென்னியன் பேச இனியானை வணங்கி இனிதிருந்தாா் நாவரசா். ஏழுநாள் கழித்து, பல்லவனும் சமணா் பல்லவரும் நீற்றறையைத் திறந்து பாா்த்தனா், வியந்தனா். இன்ப வெள்ளத்தில் முழுகி அம்பலவாணா் மலா்த் தாளமுதுண்டு தெளிந்து உவந்திருந்த நாவரசரைத் தீய நஞ்சு கலந்த பாலடிசில் உண்ணப் பண்ணினா். எந் நஞ்சும் அமுது ஆம் எங்கள் நாதன் அடியாா்க்கு, இந் நஞ்சும் அமுதாயிற்று. ஆனது அற்புதமோ?. ஆளுடைய அரசரை மிதிக்க யானையை ஏவினா். அது பாகனையும் சமணரையும் கண்ணம் ஆக்கி, நம் அண்ணலை வணங்கிப் போயிற்று. மந்தரகிரி போலும் அது மன்னனையும் வருத்திற்று.

கற்றுணைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சினா் சமணா். சொற்றுணை வேதியன் பொற்றுணைத் திருந்தடி தொழுது நீலக்குடியரன் நல்ல நமச்சிவாய நாமத்தை நவிற்றி நன்றே உய்ந்தாா் நாவரசா். மும்மலமான கல்லில் இருவினையான கயிற்றால் ஆா்த்துப் பாவக்கடலிற் பா ய்ச்சப்படும் மாக்களை முத்திக் கரையில் ஏற்றியருளும் அத் திருவைந் தெழுத்து, நாவரசை இவ்வுவா்க்கடலின் ஆழாது ஒரு கல் மேல் ஏற்றுதல் வியப்போ?. திருப்பாதிரிப்புலியூரை அடுத்த கரையேற விட்டகுப்பமே அவ்வுண்மையைத் தேற்றி நிற்குஞ் சான்றாகும். அத் ‘‘தோன்றாத்துணை’’ யைத் தொழுது உண்மையை உணா்வாா் உணா்க.

சொல்வேந்தா் திருவதிகையிற்சென்று வழிபட்டு வாழ்ந்திருந்தாா். பல்லவ மன்னன் பல்லவமும் நீங்கி நல்லவனாகி, நாயனாரை வணங்கித் தூயனும் சைவனும் ஆனான். சமணருடைய மடம், கோயில் முதலியவற்றைச் சிவாலயம் ஆக்கினான்.

‘‘பாடலி புத்திரத்தில் அமண் பள்ளியொடு பாழிகளும்
கூடஇடித்துக் கொணா்ந்து குணபரவீச் சரம்எடுத்தான்’’

நாவரசா் சிவதலம் பலவற்றை அடைந்து வழிபட்டுப் பாடினாா். சமண்சாா்புதீர நினைந்து வேண்டித் திருத்தூங்கானை மாடத்தில் ‘‘வடியேறு திரிசூலக்குறி’’, ‘‘இடபம்’’ ஆகிய இலச்சினை திருத்தோளிற் பொறிக்கப்பெற்றாா். தில்லைச் சிதம்பரத்தை வணங்கி எல்லையில்லா இன்புற்றாா்.

திருக்காழியில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை வணங்கி ‘‘அப்பர்’’ எனப் பெயர் உற்றார். ஆனந்தவுருவானார் அளவில்லாச் சிவதலங்களை வழிபட்டுத் திருச்சத்திமுற்றத்தில் திருவடி சூட்ட வேண்டினார். திருநல்லூரில் நனைந்தனைய திருவடி தலைமேல் வைத்தருளப் பெற்று நம்மையும் வாழ்வித்தார். திங்களூரில் தம்மை மறவாது தம் திருவடியையே எண்ணும் அன்பால் செப்பும் ஊதியம் கைக்கொண்ட அப்பூதியடிகளாரின் பிள்ளையான மூத்த திருநாவுக்கரசு, நச்சராத் தீண்டி இறக்க, திருவருளைத் துணைக் கொண்டு உயிர்ப்பித்தருளினார்.

திருவாரூர் முதலிய தலங்களைப் போற்றினார். திருஞானசம்பந்தர், முருக நாயனார் முதலோரொடும் திருப்புகலூர் முதலியவற்றை வழிபட்டார். திருவீழிமிழலையிற் படிக்காசு பெற்றுப் பஞ்சம் தீர்த்து மக்களை வாழ்வித்தார். திருமறைக்காட்டில் விண்ணோர் பூசித்துச் சார்த்திய திருக்கதவு திறக்கப் பண்ணினோ் மொழியாளுமை பங்கரைப் பாடினார். சோணாடு, நடுநாடு, தொண்டைநாடு முதலியவற்றில் உள்ள பல சிவதலங்களைப் பணிந்தார். திருக்கயிலையை வணங்கப் பெருமுயற்சிகொண்டு பேரிடர்ப்பட்டார். பந்தணவும் மெல்விரலாள் பங்கன் திங்களணி செஞ்சடையான் அந்தணன் ஆகிப் போந்து, உரையாடி, பழுதிலாத் திருமேனியாக்கி அழுதுருகிநிற்கும் ஐயரை ஐயாற்றிற் சென்று பொய்கையில் கயிலையைக் காண்க என்று ஏவி, அவ்வாறே காட்டக் கண்டு களித்துப் பாடினார். அங்கு அது திருக்கோயிலாகி இன்றும் இலங்குகின்றது.

திருப்பூந்துருத்தியிற் சென்று வழிபட்டுத் தங்கியிருந்தார் காழிவேந்தர். பூழிவேந்தனை வாழ்வித்து மீண்டு அங்குற்றநாளில் அவர்க்குச் சிவிகை தாங்கிப் புவியில் ஓங்கினார் நம் பாவேந்தர். அவ்வூர்த் திருமடத்தில் வாழ்ந்தனர் இருவரும் சிலகாலம்.

பாவேந்தர் பாண்டிநாடடைந்தார். திருவாலவாய், திருவிராமேச்சுரம் முதலியவற்றை வழிபட்டார். சோணாட்டை மீண்டும் உற்றார். திருப்புகலூரிலே வழிபாடு செய்து கொண்டிருந்த போது உழவாரப்படையால் செதுக்கும் இடங்களில், பொற்குவையும் நவமணிக்குவையும் தோன்ற அவற்றை ஓடும் கல்லுமாக மதித்து வீசியெறிந்தார். குறைவிலாத நிறைவினார் வானர மகளிர் வந்து வானரச் செயல் பல புரிந்தனர். வாகீசர் மயங்காத மனத்தீசருமாய் விளங்கினார். மயக்கவலியின்றித் தியக்கம் எய்தி மீண்டனர்அம் மகளிர். திருப்புகலூரிலே இடையறாது வழிபட்டு மன்னிய அன்புறுபத்தி வடிவான வாகீசர் பதிகம் பல பாடி, சிவாநந்த ஞானவடிவேயாகி, அண்ணலார் சேவடிக் கீழ் அமர்ந்துள்ளார். அந்நாள் சித்திரைச் சதயத் திருநாள்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடி வாழ்க!

## திருமுறையாசிரியர் இருபத்தெழுவர் அருளிய விவரம்

| வ. எண் | ஆசிரியர் | அருளிய நூல் | திரு முறை | பதிகங்கள் | பாடல்கள் |
|---|---|---|---|---|---|
| 1. | திருஞானசம்பந்தர் | திருக்கடைக்காப்பு | 1<br>2<br>3 | 136<br>122<br>127 | 1469<br>1331<br>1369 |
| 2. | திருநாவுக்கரசர் | தேவாரம் | 4<br>5<br>6 | 113<br>100<br>99 | 1070<br>1015<br>981 |
| 3. | சுந்தரமூர்த்தி | திருப்பாட்டு | 7 | 100 | 1026 |
| 4. | மாணிக்கவாசகர் | திருவாசகம்<br>திருக்கோவையார் | 8<br>8 | -<br>- | 658<br>400 |
| 5. | திருமாளிகைத்தேவர் | திருவிசைப்பா | 9 | 4 | 45 |
| 6. | சேந்தனார் | திருவிசைப்பா<br>திருப்பல்லாண்டு | 9<br>9 | 3<br>1 | 34<br>13 |
| 7. | கருவூர்த்தேவர் | திருவிசைப்பா | 9 | 10 | 103 |
| 8. | பூந்துருத்திநம்பி காட நம்பி | திருவிசைப்பா | 9 | 2 | 12 |
| 9. | கண்டராதித்தர் | திருவிசைப்பா | 9 | 1 | 10 |
| 10. | வேணாட்டடிகள் | திருவிசைப்பா | 9 | 1 | 10 |
| 11. | திருவாலியமுதனார் | திருவிசைப்பா | 9 | 4 | 42 |
| 12. | புருடோத்தம நம்பி | திருவிசைப்பா | 9 | 2 | 22 |
| 13. | சேதிராயர் | திருவிசைப்பா | 9 | 1 | 10 |
| 14. | திருமூலர் | திருமந்திரம் | 10 | - | 3047 |
| 15. | திருவாலவாயுடையார் | திருமுகப்பாசுரம் | 11 | - | 1 |
| 16. | காரைக்காலம்மையார் | மூத்த திருப்பதிகம்<br>திருவிரட்டை மணிமாலை<br>அற்புதத் திருவந்தாதி | 11<br>11<br>11 | 2<br>-<br>- | 22<br>20<br>101 |
| 17. | ஐயடிகள் காடவர்கோன் | க்ஷேத்திரத் திருவெண்பா | 11 | - | 24 |
| 18. | சேரமான் பெருமாள் நாயனார் | பொன்வண்ணத்தந்தாதி<br>திருவாரூர் மும்மணிக்கோவை<br>திருக்கைலாய ஞானஉலா | 11<br>11<br>11 | -<br>-<br>- | 100<br>30<br>1 |
| 19. | நக்கீர தேவர் | கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி | 11 | - | 100 |

| வ. எண் | ஆசிரியர் | அருளிய நூல் | திரு முறை | பதிகங்கள் | பாடல்கள் |
|---|---|---|---|---|---|
| | | திருவீங்கோய்மலை எழுபது | 11 | - | 70 |
| | | திருவலஞ்சுழி மும்மணிக்கோவை | 11 | - | 15 |
| | | திருவெழுகூற்றிருக்கை | 11 | - | 1 |
| | | பெருந்தேவபாணி | 11 | - | 1 |
| | | கோபப் பிரசாதம் | 11 | - | 1 |
| | | கார் எட்டு | 11 | - | 8 |
| | | போற்றித் திருக்கலி வெண்பா | 11 | - | 1 |
| | | திருமுருகாற்றுப்படை | 11 | - | 1 |
| | | திருக்கண்ணப்ப தேவர் திருமறம் | 11 | - | 1 |
| 20. | கல்லாட தேவர் | திருக்கண்ணப்ப தேவர் திருமறம் | 11 | - | 1 |
| 21. | கபில தேவர் | மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை | 11 | - | 20 |
| | | சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை | 11 | - | 37 |
| | | சிவபெருமான் திருவந்தாதி | 11 | - | 100 |
| 22. | பரண தேவர் | சிவபெருமான் திருவந்தாதி | 11 | - | 100 |
| 23. | இளம்பெருமான் அடிகள் | சிவபெருமான் திருமும்மணிக் கோவை | 11 | - | 30 |
| 24. | அதிராவடிகள் | மூத்த பிள்ளையார் திருமும்மணிக் கோவை | 11 | - | 23 |
| 25. | பட்டினத்தடிகள் | கோயில் நான்மணி மாலை | 11 | - | 40 |
| | | திருக்கழுமல மும்மணிக் கோவை | 11 | - | 12 |
| | | திருவிடைமருதூர் மும்மணிக்கோவை | 11 | - | 30 |
| | | திருவேகம்பமுடையார் திருவந்தாதி | 11 | - | 100 |
| | | திருவொற்றியூர் ஒருபாஒருபது | 11 | - | 10 |
| 26. | நம்பியாண்டார் நம்பி | திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை | 11 | - | 20 |
| | | கோயில் திருப்பண்ணியர் திருவிருத்தம் | 11 | - | 70 |
| | | திருத்தொண்டர் திருவந்தாதி | 11 | - | 90 |
| | | ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி | 11 | - | 100 |

| வ. எண் | ஆசிரியர் | அருளிய நூல் | திரு முறை | பதிகங்கள் | பாடல்கள் |
|---|---|---|---|---|---|
| | | ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் | 11 | - | 11 |
| | | ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை | 11 | - | 30 |
| | | ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை | 11 | - | 1 |
| | | ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் | 11 | - | 49 |
| | | ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை | 11 | - | 1 |
| | | திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை | 11 | - | 11 |
| 27. | சேக்கிழார் பெருமான் | திருத்தொண்டர் புராணம் | 12 | - | 4286 |



# நான்காம் திருமுறை

## அற்புதத் திருப்பதிகங்களும் பண்களும்

### 1. அற்புதத் திருப்பதிகங்கள்

| எண் | அற்புதத் திருப்பதிகம் | பதிக எண் |
|---|---|---|
| 1. | சூலை நோய் நீங்கப் பாடியருளியது **- கூற்றாயினவாறு** | 1 |
| 2. | கொலை யானை வணங்கப் பாடியது **- சுண்ண வெண்** | 2 |
| 3. | கல்லைப் புணையாகக் கொண்டு கரையேறியது **- சொற்றுணை** | 11 |
| 4. | அப்பூதியடிகள் மகனார்க்கு விடம் தீர்த்தது **- ஒன்றுகொலாம்** | 18 |
| 5. | இடபக்குறி, சூலக்குறி பொறிக்கப் பெற்றது - **பொன்னார் திருவடிக்கு** | 109 |
| 6. | கயிலைக் காட்சி கண்டு பாடியது - **மாதர்ப்பிறை** | 3 |

### 2. பண்கள்

| எண் | பண்கள் | | பதிகங்கள் |
|---|---|---|---|
| 1. | கொல்லி<br>திருப்பதிகம்<br>திருநேரிசை<br>திருவிருத்தம் | <br>1<br>22-79 - 58<br>80-113 - 34 | 93 |
| 2. | காந்தாரம் | 2-7 | 6 |
| 3. | பியந்தைக் காந்தாரம் | 8 | 1 |
| 4. | சாதாரி | 9 | 1 |
| 5. | காந்தார பஞ்சமம் | 10-11 | 2 |
| 6. | பழந்தக்கராகம் | 12-13 | 2 |
| 7. | பழம்பஞ்சுரம் | 14-15 | 2 |
| 8. | இந்தளம் | 16-18 | 3 |
| 9. | சீகாமரம் | 19-20 | 2 |
| 10. | குறிஞ்சி | 21 | 1 |
| | | | 113 |

## திருப்பதிகங்களின் சிறப்புப் பெயர்கள்

| எண் | சிறப்புப் பெயர் | பதிக எண் |
|---|---|---|
| | **திருவிருத்தம்** | |
| 1. | ஆருயிர்த் திருவிருத்தம் | 84 |
| 2. | சரக்கறைத் திருவிருத்தம் | 111 |
| 3. | தனித் திருவிருத்தம் | 112, 113 |
| 4. | பசுபதித் திருவிருத்தம் | 110 |
| 5. | பொதுத் திருவிருத்தம் | 110–113 |
| | **திருநேரிசை** | |
| 1. | குறைந்த திருநேரிசை | 78, 79 |
| 2. | கொப்பளித்த திருநேரிசை | 24 |
| 3. | தனித் திருநேரிசை | 75 – 77 |
| 4. | நினைந்த திருநேரிசை | 74 |

## சிறப்புக் குறிப்புடைய திருப்பதிகங்கள்

| எண் | சிறப்புக் குறிப்பு | பதிக எண் |
|---|---|---|
| 1. | சூலை நோய் நீக்கியது | 1 |
| 2. | கொல்ல வந்த களிறு கும்பிட்டு மீண்டது | 2 |
| 3. | திருவையாற்றிற் கயிலைக்காட்சி பெற்றது | 3 |
| 4. | பழமொழி | 5 |
| 5. | சிவனெனும் ஓசை | 8 |
| 6. | திருவங்கமாலை | 9 |
| 7. | ஆழிமிசைக் கல்மிதப்பில் அமர்ந்தது (நமச்சிவாயத் திருப்பதிகம்) | 11 |
| 8. | தசபுராணம் | 14 |
| 9. | பாவநாசத் திருப்பதிகம் | 15 |
| 10. | நஞ்சு தீர்த்த திருப்பதிகம் | 18 |
| 11. | திருவாரூர்த் திருவாதிரைச் சிறப்பு | 21 |

| எண் | சிறப்புக் குறிப்பு | பதிக எண் |
|---|---|---|
| 12. | திருவாவடுதுறையில் ஆளுடைய பிள்ளையார்க்கு ஆயிரம் பொன் அருளியதை உணர்த்தியது | 56 |
| 13. | மன்றுளாரது "என்று வந்தாய்" என்னும் திருக்குறிப்பு | 81 |
| 14. | தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் உண்மை | 101 |
| 15. | திருவாரூர்ப் பங்குனியுத்தரச் சிறப்பு | 102 |
| 16. | நம்பிநந்தியடிகள் திருத்தொண்டின் பெருமை | 102 |
| 17. | பாடல்தோறும் பல வரலாறுகள் கூறுவன | 14, 49, 65, 73 |
| 18. | இராவணனை அடர்த்ததைப் பாடல்கள் தோறும் கூறுவன | 34, 47 |
| 19. | குறிக்கொண்டருள வேண்டல் | 95 |

| | |
|---|---|
| தலங்கள் | 50 |
| பதிகங்கள் | 113 |
| பாடல்கள் | 1070 |

## திருநாவுக்கரசர் திருப்பதிகங்கள்

| | | |
|---|---|---|
| 1. | நமச்சிவாயத் திருப்பதிகம் | "சொற்றுணை வேதியன்" என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகம் |
| 2. | பொருளமைப்பால் பெயர் பெற்ற பதிகங்கள் | திருவங்கமாலை, தசபுராணம் குறைந்த நேரிசை |
| 3. | பாடல்தோறும் பயின்ற சொற் பொருளமைப்பால் பெயர் பெற்ற பதிகங்கள் | கொப்பளித்த திருநேரிசை, நினைத்த திருநேரிசை, ஆருயிர்த் திருவிருத்தம், சரக்கறைத் திருவிருத்தம், பசுபதித் திருவிருத்தம் |
| 4. | முதற்குறிப்புப் பெயர் பெற்றது | சிவனெனுமோசை |
| 5. | ஈற்றுத் தொடராற் பெயர் பெற்றது | பாவநாசத் திருப்பதிகம் |
| 6. | பொது வகையால் பெயர் பெற்றவை | தனித்திரு நேரிசை |

# திருநாவுக்கரசர் வழிபாட்டு வரலாறு

| தல வ.எண் | வழிபட்ட திருத்தலங்கள் | பதிகங்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிற செய்திகள் |
|---|---|---|---|---|
| 1. | திருவதிகை வீரட்டானம் | 2 | திருவதிகை வீரட்டானத்தில் திருநீறும், ஐந்தெழுத்தும் தருமசேனரை, சமணசமயத் தொடக்கினின்றும் தூய்மைப்படுத்துதல்.மேலும் நாவுக்கரசர் என்ற பட்டம் அசரீரியாக வழங்கப்பெறல். பாடலிபுத்திரத்தில் சமணர் செய்த நீற்றறையில் இட்டது. விடம் ஊட்டியது, யானையால் இடரப்பெற்றது, கல்லில் பூட்டிக்கடலில் பாய்ச்சுதல் ஆகிய வஞ்சங்களிலிருந்து இறையருளால் நாவுக்கரசர் மீள்தல் | சமணர் சார்பினால் தீங்கு செய்த மகேந்திர வர்மப் பல்லவ அரசன் தனது பழவினைப் பாசம் நீங்கி சைவசமயத்தைத் தழுவுதல். மேலும் திருவதிகையில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கக் 'குணபரவீச்சரம்' என்னும் கோயிலை எடுப்பித்தல். பாவேந்தர், திருவதிகையில் ஏழைத்திருத்தாண்டகம் பாடுதல் |
| 2. | பாடலிபுத்திரம் | 2 | | |
| 3. | வங்கக்கடல் | 1 | | |
| 4. | திருப்பாதிரிப்புலியூர் | 1 | | |
| | நடுநாடு | | | |
| 5. | திருவதிகை வீரட்டானம் | 14 | | |
| 6. | திரு ஆமாத்தூர் | 2 | | தில்லையில் 'அரியானை' எனத் தொடங்கும் பதிகத்தில் இறைவன் அரியனாந்தன்மையும், எளியனாந் தன்மையும் பற்றிக் கூறுவதும், அவனைப் 'பேசாத நாட்கள் பிறவாத நாட்களே' என்று மனிதரது வாழ்நாளின் பயனைக் குறிப்பாக உணர்த்துதல். தில்லையில் ஆனந்தக்கூத்தர் 'என்று வந்தாய்' என்று கேட்பதுபோல உணர்கிறார். தில்லை, மேற்குவாயில் அரசுகள்; தெற்கு - பிள்ளையார்; வடக்கு - நம்பிகள்; கிழக்கு - அடிகள் எனப் பெருமக்கள் எழுந்தருளிய சிறப்புற்றுள்ளது. |
| 7. | திருக்கோவிலூர் வீரட்டம் | 1 | | |
| I 8. | திருமுண்டீச்சரம் | 1 | | |
| 9. | திருத்தூங்கானை மாடம் | 1 | | |
| 10. | திருநெல்வாயில் அரத்துறை | 1 | | |
| 11. | திருமுதுகுன்றம் | 1 | | |
| | சோழநாடு | | திருத்தூங்கானை மாடத்தில் சமண் தொடக்கிற்கு ஆட்பட்ட தன் உடல் மேலும் தூய்மைபெற நாவரசர் வேண்ட,இறையருளால் சூலக்குறி, இடபக்குறி பொறிக்கப்பெறல். | |
| 12. | தில்லை | 8 | | |
| 13. | திருவேட்களம் | 1 | | |
| 14. | திருக்கழிப்பாலை | 5 | | யோகிகள் ஞாயிற்றின் உதவியின்றியே நாட்கிழமைகளை அறியவல்லவர்கள். |
| | | 41 | | |

| தல வ.எண் | வழிபட்ட திருத்தலங்கள் | பதிகங்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிற செய்திகள் |
|---|---|---|---|---|
| 1. | திருநாரையூர் | 2 | | சீர்காழியில் ஆளுடைய பிள்ளையாரைச் சந்தித்தல். முதல்முறைச் சந்திப்பாக அமைதல். ஆளுடைய பிள்ளையார் நாவுக்கரசரை 'அப்பரே' என அழைக்க 'அடியேன்' எனத் திருநாவுக்கரசர் தம்மைக் கூறிக்கொண்டது- உண்மை அன்பின் வெளிப்பாடாய் அமைதல். |
| 2 | திருக்கழுமலம் | 2 | | |
| | திருத்தோணிபுரம் | 1 | | |
| 3. | திருக்குரக்குக்கா | 1 | | |
| 4. | திருப்புன்கூர் } | 1 | | |
| 5. | திருநீடூர் } | | | |
| 6. | திருக்குறுக்கை வீரட்டம் | 2 | | திருக்குறுக்கை வீரட்டம் பதிகத்தில்("நீற்றினை நிறையப்பூசி") பிரமன் அர்ச்சித்தது, மார்க்கண்டர்க்காகக் கூற்றினை உதைத்தது, சண்டீசர், கோச்செங்கட்சோழன் சரிதக்குறிப்பு, விட்டுணுவுக்குச் சக்கரம் அருளியது, சாக்கியர், கண்ணப்பர், மாவலி, கணம்புல்லர், இராவணன் என அவ்வவர்களுக்கு அருளிய சிவபெருமானின் கருணைத் திறங்கள் போற்றப்படல் |
| 7. | திருநின்றியூர் | 1 | | |
| 8. | திருநனிப்பள்ளி | 1 | | |
| 9. | திருஓமாம்புலியூர் | 1 | | |
| 10. | திருக்கடம்பூர் கரக்கோயில் | 2 | | |
| 11. | திருவலம்புரம் | 2 | | |
| II 12. | திருச்சாய்க்காடு | 2 | | |
| 13. | திருவெண்காடு | 2 | | |
| 14. | திருப்புள்ளிருக்கு வேளூர் | 2 | | |
| 15. | திருச்செம்பொன்பள்ளி | 2 | | |
| 16. | திருமயிலாடுதுறை | 1 | | |
| 17. | திருத்துருத்தி | 1 | | |
| 18. | திருமணஞ்சேரி | 1 | | |
| 19. | திருஅன்னியூர் | 1 | | |
| 20. | திருஆப்பாடி | 1 | | |
| 21. | திருப்பந்தணை நல்லூர் | 1 | | |
| 22. | திருமங்கலக்குடி | 1 | | |
| 23. | திருத்தென்குரங்காடுதுறை | 1 | | |
| 24. | திருக்கஞ்சனூர் | 1 | | |
| 25. | திருக்கோடிக்கா | 3 | | |
| 26. | திருவாவடுதுறை | 5 | | |
| | | 40 | | |

| தல வ.எண் | வழிபட்ட திருத்தலங்கள் | பதிகங்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிற செய்திகள் |
|---|---|---|---|---|
| 1. | திருவிடைமருதூர் | 5 | திருநாவுக்கரசர்,<br>திருச்சத்தி முற்றத்தில்,<br>"கூற்றம் குமைப்பதன்முன்<br>பூவார் அடிகள் என்தலைமேல்<br>பொறித்து வைப்பாய்" என வேண்ட<br>பெருமானும் நல்லூருக்கு வா! என<br>அருள்செய்தல் | திருச்சத்தி முற்றம் - இஃது இறைவரைச் சத்தி<br>பூசித்துத் தழுவி முத்தமிட்ட காரணத்தால்<br>பெற்றபெயர். |
| 2. | திருநாகேச்சரம் | 3 | | |
| 3. | திருச்சத்திமுற்றம் | 1 | | |
| 4. | திருநல்லூர் | 2 | | நல்லூரில் - "நன்மை பெருகு<br>அருள்நெறியை" பாடல்<br>ஒருவரை வாழ்த்தப் பயன்படும்<br>வாழ்த்துப்பாடலாகும்.<br>அமர்நீதி நாயனார் வழிபாட்டுத்தலம். |
| 5. | திருக்கருகாவூர் | 1 | | |
| 6. | திருப்பாலைத்துறை | 1 | | |
| 7. | அவளிவணல்லூர் | 1 | | |
| 8. | திருவெண்ணியூர் | 2 | | |
| III 9. | திருப்பூவனூர் | 1 | | |
| 10. | திருப்பழனம் | 5 | | திருப்பாலைத்துறைப் பதிகத்தில்,<br>"விண்ணினார் பணிந்தேத்த" எனத்<br>தொடங்கும் பாடல் அதிசூக்கும பஞ்சாட்சர<br>மந்திரத்தால் ஈசனைத் தியானம் செய்வோர்<br>பெருஞ்சிறப்பாகிய முக்தி நெறியைப் பெறுவர்<br>என்று குறிப்பால் உணர்த்துதல் ஆயிற்று.<br>வேதத்தின் நடுவுள் சிவ பஞ்சாட்சரம்<br>விளங்குதலைப் போன்று, இத்திருமுறையின்<br>நடுவுள் இவ்வதிசூக்கும பஞ்சாட்சரம்<br>விளங்குகிறது. மூவர் தேவாரத்துள்,<br>நடுநாயகமாகத் திகழும் திருநாவுக்கரசு<br>சுவாமிகள் தேவாரத்துள், நாயனார்<br>அருளிச்செய்த 4, 5, 6 திருமுறைகளுள்,<br>நடுவில் உள்ளதாகிய 5ஆம் திருமுறையில்<br>நடுவுள் விளங்கும் 51ஆவது திருப்பதிகத்துள்,<br>நடுவுள் மேவும் திருப்பாட்டு 'சிவய' என்று மூல<br>மந்திரமாக விளங்கித் தெய்வீக அமைப்புச்<br>சித்தம்கொண்டு திகழ்வதாகும். |
| 11. | திங்களூர் | 1 | | |
| 12. | திருச்சோற்றுத்துறை | 4 | திருநல்லூரில் சிவபெருமான்<br>நாவுக்கரசரின்<br>வேண்டுகோளுக்கிணங்க<br>நாவுக்கரசர்தம் தலைமீது திருவடி<br>சூட்டி அருளுதல். | |
| 13. | திருவேதிகுடி | 1 | | |
| 14. | திருக்கண்டியூர் | 1 | | |
| 15. | திருவலஞ்சுழி | 2 | | |
| 16. | திருவலஞ்சுழியும் கொட்டையூரும் | 1 | | |
| 17. | திருக்குடமூக்கு | 1 | | |
| 18. | திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் | 1 | | |
| 19. | திருச்சேறை | 2 | | |
| 20. | கடுவாய்க்கரைப்புதூர் | 1 | திங்களூரில் அப்பூதியடிகளின்<br>மகனைப் பாம்பு தீண்ட<br>இறையருளால் விடத்தை நீக்கி<br>உயிர்ப்பித்தல் | |
| 21. | திருஅரிசிற்கரைப்புதூர் | 1 | | |
| 22. | திருச்சிவபுரம் | 1 | | |
| 23. | திருநீலக்குடி | 1 | | |
| | | 40 | | |

| தல வ.எண் | வழிபட்ட திருத்தலங்கள் | பதிகங்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிற செய்திகள் |
|---|---|---|---|---|
| 1. | திருக்கோழம்பம் | 1 | சூலை நோய்ப்பிணி ஒழிந்து கரையேறித் திருவதிகை சேர்ந்தது, இறைவரருளப் பெற்ற செயல். தூங்கானை மாடத்தில் சூல இடபக்குறிகள் தோளில் பொறிக்கப்பெற்றது, தாம் வேண்டிப் பெற்ற செய்தி. அஃது அமண்சமயத் தொடக்குண்டு போந்த உடல் தன்னுடனே உயிர்வாழத் தரியாமைக்காகப் பெற்ற உடற்சுத்தியாம். இங்கு திருவாரூரில் நாயனார் பெற நினைந்தது, தாம் பெற்ற சிவாநந்தானுபவம் மேன்மேற் பெருகுதற்கும், உரிய சீரடியாரிணக்கமாம். இவை சிவஞான போதம் 12-ஆம் சூத்திரத்தினுட் பேசப்படுவன. | <u>திருவாரூரில்</u><br><br>பழமொழிகளைப் பதிகத்தில் அமைத்துப்பாடிய சிறப்பு பழமொழிப்பதிகம். திருவாரூர்த் திருவாதிரை நாள் தரிசித்தமை. ஆரூர்ப் பெருமானுடைய பெயரையும் பின் அவரது வண்ணத்தினையும் பின் அவரிருக்கும் ஊரையும் கேட்டு அவருக்கே அடிமையாகி உலகத்தை விட்டுத் தன்னையும் மறந்து அவர் தாளின் கீழ்த்தலைப்பட்டு பக்குவப்பட்ட ஆன்மாக்களின் தன்மை. |
| 2. | திருநல்லம் | 1 | | |
| 3. | திருஅன்னியூர் | 1 | | |
| 4. | திருக்கருவிலிக்கொட்டிடை | 1 | | |
| 5. | திருவாஞ்சியம் | 1 | | |
| 6. | திருப்பெருவேளூர் | 1 | | |
| 7. | திருவாரூர் | 19 | | |
| 8. | திருவாரூர் அரநெறி | 2 | | |
| IV 9. | திருவலிவலம் | 1 | | |
| 10. | திருக்கீழ் வேளூர் | 1 | | |
| 11. | திருக்கன்றாப்பூர் | 1 | | |
| 12. | திருப்பேரெயில் | 1 | | |
| 13. | திருப்பள்ளியின் முக்கூடல் | 1 | | |
| 14. | திருப்பயற்றூர் | 1 | | |
| 15. | திருப்புகலூர் | 3 | | |
| 16. | திருச்செங்காட்டங்குடி | 1 | | |
| 17. | திருநள்ளாறு | 2 | | |
| 18. | திருமருகல் | 1 | | |
| | | 40 | | |

| தல வ.எண் | வழிபட்ட திருத்தலங்கள் | பதிகங்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிற செய்திகள் |
|---|---|---|---|---|
| 1. | திருப்புகலூர் | 1 | உலகோருக்கு ஏற்பட்ட வற்கடத்தைப் போக்க திருவீழிமிழலையானை வணங்கிப் படிக்காசு பெற்றுப் பஞ்சம் தீர்த்தல். திருமகனாராதலில் பிள்ளையார் வாசியுடன் காசும், கைத்தொண்டராகும் அடிமையினால் நாயனார் வாசியில்லாக் காசும் பெற்றனர். | "முத்துவிதானம்" பாடி திருவாரூர்ச் சிறப்பினை எடுத்துரைத்தல். திருப்புகலூரில் முருகநாயனாரது திருமடத்தில் ஆளுடைய பிள்ளையார், திருநாவுக்கரசர் சந்திப்பு இரண்டாவது, மூன்றாவது முறையாக நிகழ்தல். திருநீலநக்கர், சிறுத்தொண்டர் அங்கு வந்து ஒருப்படு சிந்தையினால் உடனுறைவின் பயன்பெற்றமர்தல். |
| 2. | திருக்கடவூர் வீரட்டம் | 3 | | |
| 3. | திருக்கடவூர் மயானம் | 1 | | |
| 4. | திருஆக்கூர் | 1 | | |
| 5. | திருவீழிமிழலை | 8 | | |
| 6. | திருமீயச்சூர் | 1 | | |
| 7. | திருத்தலையாலங்காடு | 1 | | "முத்துவிதான மணிப்பொற்கவரி" என்னும் பதிகம் - திருவாரூர் மாதாந்திர விழாக்களை உள்ளடக்கியது. திருக்கடவூரில் குங்கிலியக் கலய நாயனார் இல்லம் செல்லுதல். |
| 8. | திருமறைக்காடு | 5 | | |
| V 9. | திருவாய்மூர் | 2 | திருமறைக்காட்டில் திருக்கதவம் திறப்பித்தல். மறைக்காட்டு நிகழ்வுக்குபின் இறைவர் அவர் கனவில் தோன்றி திருவாய்மூருக்கு அழைத்தார். இறைவனே வழிகாட்டி அழைக்க அவர் பின்னே சென்றார். ஆனாலும் அவரை நெருங்க முடியவில்லை. திருஞானசம்பந்தர் வரவுக்குப்பின் இருவருக்கும் இறைவர் காட்சி தந்தார். | |
| 10. | திருநாகைக் காரோணம் | 4 | | திருமறைக்காட்டில் திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் எழுந்தருளியிருந்த சமயத்தில் மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் பாண்டிய நாட்டில் சமணர் தம் செருக்கைப் போக்க, பிள்ளையாருக்கு வேண்டுகோள் விடுத்தனர். அவர் செல்வதை நாவுக்கரசர் வேண்டாமெனத் தடுக்க, பிள்ளையாரோ, சமண் மாறவும், சைவம் விளங்கவும் திருநீறு செய்விக்கும் என்ற உறுதிப்பாடு விளங்கும் "வேயுறு தோளிபங்கன்" என்று தொடங்கும் கோளறு திருப்பதிகத்தை அருளிய தன்மை குறிக்கத்தக்கது. |
| 11. | திருக்கோளிலி | 2 | | |
| 12. | திருகொண்டீச்சரம் | 2 | | |
| 13. | திருவாவடுதுறை | 1 | | |
| 14. | திருப்பழையாறை வடதளி | 1 | | |
| 15. | திருஇன்னம்பூர் | 4 | | |
| 16. | திருப்புறம்பயம் | 1 | | |
| 17. | திருவிசயமங்கை | 1 | | |
| 18. | திருஆலம்பொழில் | 1 | | |
| 19. | திருக்காட்டுப்பள்ளி | 1 | திருப்பழையாறை வடதளியில் சமண் பாழிகளால் மறைக்கப்பட்டிருந்த சிவனுருவை உண்ணா நோன்பிருந்து வெளிப்படச் செய்தது. | பழையாறை வடதளியில் இறைவர் தம் திருவுருவங்களை அமணர் மறைத்துப் பாழியாக்கிக்கொண்டபோது எல்லாம் தாமேயாகும் தன்மையில் அவ்வாறே அமர்ந்தருளினார். அப்பர் வண்ணங்கொண்டு வணங்க வரங்கிடந்தபோது அவர் வேண்டியவாறே வெளிப்பட்டனர். சைவத்திறத்தின் முற்றிய முழுநிலைகள் இங்கு காணத்தக்கன. |
| 20. | திருக்கானூர் | 1 | | |
| 21. | திருஅன்பில் ஆலந்துறை | 1 | | |
| | | 43 | | இப்பதிகம் முழுமையும் நாயனாரது சரித ஆராய்ச்சிக்குப் பெருத்த அகச் சான்றுகளுடன் விளங்குகின்றது. |

| தல வ.எண் | வழிபட்ட திருத்தலங்கள் | பதிகங்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிற செய்திகள் |
| --- | --- | --- | --- | --- |
| 1. | திருஆனைக்கா | 3 | உடற்களைப்போடு திருப்பைஞ்ஞீலி இறைவனை வணங்கச் சென்று கொண்டிருந்த திருநாவுக்கரசருக்குப் பொதிசோறு தந்து அருளல் | அண்ணாமலையினைத் தூரத்தே தொழுதலும் அதனை வலங்கொள்ளுதலும் முறை. இவை இன்றும் பல்லாயிரக்கணக்கான மக்களாற் செய்யப்படுதல் இதன் சிறப்புக் காட்டுவது. பிரமா, விட்டுணுக்களின் இகல் தீர்க்கும் பொருட்டுப் பேரழற் தூணாக நின்ற சிவபெருமான், பின்னர் அவர்கள் வேண்டுதலுக்கிரங்கி, மன்னுயிர் மேல்வைத்த கருணையால் மலையுருவாய் நின்றார் என்பதும் பின்னர் இலிங்க உருவாய் நின்றார் என்பதும் வரலாறுகளாதலின் இவ்வழிபாடுகள் இத்தலத்துக்குச் சிறப்பாகச் செய்யப்படுவன. |
| 2. | திருஎறும்பியூர் | 2 | | |
| 3. | திருச்சிராப்பள்ளி | 1 | | |
| 4. | திருக்கற்குடி | 1 | | |
| 5. | திருப்பராய்த்துறை | 1 | | |
| 6. | திருவாட் போக்கி | 1 | | |
| 7. | திருக்கடம் பந்துறை | 1 | சிவபெருமான் நாவரசரோடு கோயில் வரை செல்லுதல். | |
| 8. | திருப்பைஞ்ஞீலி | 1 | | |
| VI | <u>கொங்குநாடு</u> | | | |
| 9. | திருப்பாண்டிக் கொடுமுடி | 1 | | |
| | <u>நடுநாடு</u> | | | |
| 10. | திருவண்ணாமலை | 4 | | திருவாயிலினை நிலமுறப் பணிந்தெழுதல், திருமுன்றிலை அணைந்து திருமாளிகையைச் சூழ்ந்து வலம்வருதல் முதலிய இவை, திருமுன்பு அணைந்திறைஞ்சுமுன் இன்றியமையாது செய்யத்தக்க வழிபாட்டு முறைகளாம். |
| | <u>தொண்டைநாடு</u> | | | |
| 11. | திருக்கச்சியேகம்பம் | 7 | | |
| 12. | திருக்கச்சி மேற்றளி | 1 | | |
| 13. | திருமாற்பேறு | 4 | | |
| 14. | திருக்கழுக்குன்றம் | 1 | | தலயாத்திரையில் வழிச்செல் வருத்தமும், பசியும், நீர் வேட்கையும் முதலியவற்றிற்கு சித்தம் அலையாது சென்றால் இறைவர் நம் வருத்தம் தணித்தாற்றி அருள் புரிவார். |
| 15. | திருவான்மியூர் | 1 | | |
| 16. | திருவொற்றியூர் | 5 | | |
| 17. | திருப்பாசூர் | 2 | | |
| 18. | திருவாலங்காடு | 2 | | |
| 19. | திருக்காளத்தி | 1 | | |
| | <u>வடநாடு</u> | | | |
| 20. | திருப்பருப்பதம் | 1 | | |
| | <u>துளுவநாடு</u> | | | |
| 21. | திருக்கோகரணம் | 1 | | |
| | | 42 | | |

| தல வ.எண் | வழிபட்ட திருத்தலங்கள் | பதிகங்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிற செய்திகள் |
|---|---|---|---|---|
| 1.<br><br>2.<br>3.<br>4.<br>VII 5. | கயிலாயம்<br><br>சோழநாடு<br>திருவையாறு<br>திருநெய்த்தானம்<br>திருமழபாடி<br>திருப்பூந்துருத்தி | 3<br><br>13<br>5<br>2<br>18<br><br>41 | திருக்கயிலாயப் பயணத்தின் போது புலி போன்ற விலங்குகள் விலகிப் போதல் - நாகங்களின் படங்களே விளக்குகளாக உதவுதல் - கால், கை, தசைகளும் தேயத்தாவித் தாவிச் சென்று - அசரீரி வாக்குப்பெற்று திருவைந்தெழுத்தைக் கூறி பொய்கையில் மூழ்கி திருவையாற்றில் எழுந்து கயிலைக் காட்சியைக் காண இறையருள் கூட்டுவித்தல்.<br><br>"மாதர்ப் பிறைக்கண்ணியானை என்ற திருப்பதிகத்தால் போற்றித் துதித்தல்" | திருநாவுக்கரசர் "சேவடிக்கீழ் நாம் இருப்பதே" என்ற மகுடமும் கருத்தும் கொண்டு போற்றும் திருக்குறுந்தொகைப் பதிகம் பாடி, திருப்பூந்துருத்தியில் திருமடம் எடுப்பித்தார்.<br><br>நாயனாரை திருமறைக் காட்டில் பிரிந்தருளிய ஆளுடைய பிள்ளையார், சமணர்களை வாதில் வென்று திருநீற்றின் ஒளிவிளங்கச் செய்து, பாண்டியரது கூன் நிமிர்த்திச் சோழ நாட்டுக்கு வந்து திருநாவுக்கரசரைச் சந்தித்தல். இது நான்காவது முறை சந்திப்பாகும். |
| <br>1.<br>2.<br>3.<br>4.<br>VIII<br><br>5. | பாண்டி நாடு<br>திருப்புத்தூர்<br>திருஆலவாய்<br>திருப்பூவணம்<br>திருஇராமேச்சுரம்<br><br>சோழநாடு<br>பூம்புகலூர் | <br>1<br>2<br>1<br>1<br><br><br>20<br><br>25 | திருப்புகலூரில் நாவுக்கரசர் பணிசெய்யும் நாளில் அவரது நன்னிலையினை உலகுக்குக் காட்டும் பொருட்டு, இறைவர் அருளினாலே உழவாரம் நுழைந்த விடமெல்லாம் பொன்னினோடு நவமணிகள் பொலிந்தன. அவற்றை அங்கு பருக்கைக் கற்களோடு உடன்வைத்து உழவாரத்தில் ஏந்தி வாவியில் எறிந்தார். இதேபோல் அரம்பையர் வருகையால் தம் சித்தம் சிறிதும் சிதையாமல், "பொய்ம்மாயப் பெருங்கடலில்" என்னும் திருத்தாண்டகம் பாடியருளினார்.<br><br>நாவுக்கரசரின் பெருமையை உலகுக்கு உணர்த்திய இறைவர் சித்திரை சதயநாளில் அவருக்குத் திருவடி தீட்சை அருளி ஏற்றல் | திருப்புகலூரில் - நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், ஷேத்திரக்கோவை, குறைந்த திருநேரிசை,, தனி நேரிசை, ஆருயிர்த்திருவிருத்தம், தசபுராணம், பாவநாசப் பதிகம், சரக்கறைத் திருவிருத்தம் முதலிய எண்ணிறந்த திருப்பதிகங்களைப் பாடியருளுதல். |

*உ*
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# கோயில்கள்

*கோடி மாதவங்கள் செய்து குன்றினார் தம்மையெல்லாம்*
*வீடவே சக்கரத்தால் எறிந்து பின் அன்பு கொண்டு*
*தேடி மால் செய்த கோயில் திருஇராமேச்சுரத்தை*
*நாடி வாழ் நெஞ்சமே நீ நன்னெறி யாகுமன்றே* 4-61-9

**ப**ல்லாயிரம் ஆண்டுகள் பல கோடிக்கணக்கான தவங்களைச் செய்து சிவபெருமானிட மிருந்து வரங்களைப் பெற்ற அரக்கர் குழுவினர் அதைத் தவறாகப் பயன்படுத்தியதன் விளைவாக, தாமும் தவமிருந்து நித்தலும் ஆயிரம் பூக்கொண்டு பூசை, தவம் செய்து சிவபெருமானிடமிருந்து பெற்ற சக்கரத்தை வீசிஎறிந்து இராமபிரான் அவர்களை வெற்றிகொண்டு பின் சேதுக்கரையில் தாபித்துப் பூசை செய்த சிவலிங்கம் உள்ள இராமேச்சுரக் கோயிலை நாடி வாழ்ந்தால் நாம் ஞான நன்னெறியில் சென்று நன்மையெனப்படுவன எல்லாவற்றுள்ளும் சிறந்த நன்மையெனப் படுவதாகிய வீடுபேற்றை அடையலாம் என்று நாவுக்கரசர் மேற்காண் பாடலில் பாடுகிறார். இராமன் சிவனடியார் என்பதை நாம் எப்போதும் நினைவில் கொள்ளவேண்டும்.

இராமாயண வரலாறு சுமார் 12000 ஆண்டுகளுக்கு முன் நடந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் பதிவு செய்கிறார்கள். இராமனின் பிறந்த தேதி கி.மு. 17.01.10205 திங்கட்கிழமையென்றே ஒரு வரலாற்று ஆசிரியர் பதிவு செய்துள்ளார். வேறு குறிப்புகளில் சில வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் தொன்மை தொன்மை தான். 1400 ஆண்டுகளுக்கு முன்னர் அவதாரம் செய்த திருநாவுக்கரசு சுவாமிகள் இந்தக் கோயிலைப் பற்றிப் பாடியதோடு, ஏராளமான கோயில்களைப் பற்றியும் பாடியுள்ளார். திசையெட்டும் தோன்றுவதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே என்றும் பாடுகிறார். 12000 ஆண்டுகட்கு முற்பட்ட கோயிலை 1400 ஆண்டுகட்கு முற்பட்ட நமது உழவாரப் படைப்பாளி பாட அது இன்றைக்கு 21ஆம் நூற்றாண்டில் எப்படி பரிணாம வளர்ச்சி பெற்று நமது வினை நுகர்வுக்கு உதவியாக அமைந்துள்ளது என்பதை ஆராய்வதாகவும், 21 ஆம் நூற்றாண்டின் உழவாரப் படையாளிகளின் பணியைப் போற்றும் வண்ணமும் இந்தக் கட்டுரையை அமைத்திருக்கிறோம்.

"மின்சாரம், தொலைக்காட்சி, கணினி, அலைபேசி, வலைதளம் என்று விஞ்ஞானத்தின் உச்சகட்டத்துக்குச் சென்றுவிட்டோமோ ?" என்று மெய்ஞ்ஞானிகள் அவதரித்த நாட்டில் வாழும் நாம் வியந்து கொண்டிருக்கிறோம். இவை இந்த நூற்றாண்டில்தான் கண்டு பிடிக்கப்பட்டுள்ளனவா ? இல்லை. எப்போதும் உள்ளவைதான் இவை. நமக்கு இப்போதுதான் தெரிந்துள்ளது. நமது மூதாதையர்களும் இதைவிட மேலான கருவிகளைப் பயன்படுத்தியிருக்கலாம். 25.04.2015 இந்த மாதம் நேபாளத்தில் நடந்த நிலநடுக்கம், சில ஆண்டுகளுக்கு முன்நடந்த சுனாமி என்ற பேரழிவுகளை நோக்கும்போது ஒரு விநாடிப் பொழுதில் நமது மூதாதையர்கள் கண்டுபிடிப்புகள் அனைத்தும் அழிந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. மறுபடியும் கண்டுபிடிக்கிறோம். ஆக்குவாய் – காப்பாய் – அழிப்பாய் – அருள்தருவாய் என்ற

மணிவாசகரின் பாடல் எண்ணிப் பார்க்க நிலையாமை புரியும். என்றும் நிலைத்து நிற்பது இறைவன் புகழே அதை நிலைநாட்டும் கோயில்களைப் பற்றிய நமது அறிவை சற்று விரிவாக்கிக் கொள்வோமாக!

இறைவனை வழிபடுதற்கென ஊர்தோறும் திருக்கோயில்களை நிறுவிப் போற்றுதல் என்பது நம் தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்றுவரும் நாட்டுப் பண்பாகும்.

"தேசம் உமை அறிவதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளோ" எனவரும் திருத்தாண்டகத் தொடர், தமிழ் நாட்டுத் திருக்கோயில்களின் தொன்மையை உணர்த்தி நிற்றலை அறியலாம்.

உலகமக்கள் பசியும், பிணியும், பகையும் நீங்கி அன்புடையவர்களாய் நல்வாழ்வு பெற்று மகிழ்தற்கு, ஊர்தோறும் அமைந்த திருக்கோயில் வழிபாட்டு முறையே பெருந்துணை புரிகிறது. இத்தகைய திருக்கோயில்களைப் பெறாத ஊர்கள் மற்ற வளங்களில் எவ்வளவு சிறப்புற்றிருந்தாலும் ஊர்கள் ஆக மாட்டா என்பதைக் கீழ்க்காணும் திருத்தாண்டகம் சுட்டிக்காட்டுகின்றது.

"திருக்கோயில் இல்லாத திருவிலூரும்
திருவெண்ணீ றணியாத திருவிலூரும்
பருக்கோடி பத்திமையாற் பாடாவூரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லாவூரும்
விருப்பொடு வெண்சங்கம் ஊதாவூரும்
விதானமும் வெண்கொடியும் இல்லாவூரும்
அருப்பொடு மலர் பறித்திட்டுண்ணா வூரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவிகாடே"

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டா" என்ற உலக நீதியாலும் அறியலாம். சங்ககாலந் தொட்டே தமிழ்நாட்டில் வழங்கும் தெய்வ வழிபாடுகள் பலவற்றுள்ளும் சிவ வழிபாடே முதன்மை பெற்று விளங்கும் தொன்மையும் சிறப்பும் வாய்ந்ததென்பதை,

"ஆடக மாடத் தறிதுயிலமர்ந்தோன்
சேடங்கொண்டு சிலர் நின்றேத்தத்
தெண்ணீர்க் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கினான்"

என்ற சிலம்படிகளாலும்,

"நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீறாக"

என்ற மணிமேகலை அடிகளாலும் அறியலாம்.

பழங்காலத்தில் கல்லையும், இயற்கையையும், பஞ்சபூதங்களையும் வழிபட்டனர்.

ஊர்தோறும் அமைந்த பொதுஇல் எனப்படும் அம்பலத்திலே தெய்வம் உறையும் தறியாகிய தூண்ஒன்று நாட்டப்பெற்றிருந்தது. நீராடித் தூய்மையுடையராகி மகளிர் பலரும் அம்பலத்தை மெழுகித் தூய்மைசெய்து அந்தியில் நந்தா விளக்கேற்றி வழிபட்ட செய்தியை,

"கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி
அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்கம் ஏறிப்பலர் தொழ
வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்"

என்ற பட்டினப்பாலை அடிகள் உணர்த்துகின்றன. நறுமலர் தூவி வழிபட்டுள்ளனர். ஊருக்குப் புதியவர்கள் அவ்வம்பலத்திலே தங்கியிருந்திருக்கிறார்கள்.

கந்து – தெய்வம் உறையும் தறி

இங்ஙனம் பண்டை நாளில் ஊர்தோறும் தெய்வமுறையும் தறியாகிய "கந்து" நடப்பெற்ற அம்பலங்களே தேவார ஆசிரியர் காலத்தில் சிவபெருமானது இலிங்கமாகிய அருவுருவத் திருமேனியை வழிபடுதற்குரிய சிவாலயங்களாகத் திகழ்வனவாயின. முளைக்குச்சி என்று கிராமங்களிலே சொல்லப்படும் தறியே சிவலிங்கமென்பதைக் கன்றாப்பூர்த் திருப்பதிகத்தில் திருநாவுக்கரசர்,

"காதன்மையாற் தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" **6–61–1**

என்று பதிவு செய்கிறார்.

வெற்றிடத்தில் இருந்த தறியைச் சுற்றிச் சுடுமண்ணாகிய செங்கல்லும், சாந்தும் கொண்டு தொடங்கிய கோயில் நிர்மாணப் பயணம் மகேந்திரவர்மன், நரசிம்மவர்மன் காலங்களில் கற்கோயிலாக மாறுகின்றது. தறிகளும் நல்ல கல் சிவலிங்கங்களாக உருவெடுகின்றன. காலச்சக்கரம் சுழலச்சுழல கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், பெரிய திருமதில்கள் என்று பிரம்மாண்டமான கோயில்கள் எழ ஆரம்பித்தன. பொதுநிகழ்ச்சிகளையும், ஊர்க்கூட்டங்களையும் நடத்திக் கொள்ளவும், தானியச் சேமிப்புக் கூடாரங்களாகவும், போர்க்காலங்கள் மற்றும் பெரிய வெள்ளம், வறட்சிக் காலங்களில் மக்கள் கூட்டம் தங்குவதற்கும், அன்னம்பாலிப்பு நிகழ்வுகளுக்கும் கோயில்கள் பயன்படுத்தப்பட்டன.

கடைச்சங்க காலத்தில் தமிழகத்தை ஆண்ட முடிமன்னர்களுள் கோச்செங்கணான் என்னும் வேந்தப்பெருமான் 70 மாடக்கோயில்கள், பெருங்கோயில்கள் கட்டியதைத் திருஞானசம்பந்தரும், சுந்தரரும் தமது பதிகங்களில் குறிப்பிட்டுள்ளனர். இச்செய்தியை,

"இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோ ளீசற்கு
எழில்மாடம் எழுபது செய்துலகமாண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே"

என்ற பெரிய திருமொழி **(6–6–8)** பாடலில் திருமங்கையாழ்வார் குறித்துள்ளார். தமிழ்நாட்டில்

இருந்து பலவகைக் கோயில்களை அப்பர் சுவாமிகள் கீழ்க்காண் பாடல் மூலம் எடுத்தியம்பியுள்ளார்.

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோடெட்டும் மற்றுங்
கரக் கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீருமன்றே" **6–71–5**

**இப்பாடலில் குறிக்கப்பட்டுள்ளதும் மற்றும் இன்றுள்ளதுமான கோயில் வகைகள்**

**இளங்கோயில் (பாலாலயம்) (தற்காலிகக் கோயில்)**

வழக்கமாகப் பூசைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் கோயில்கள் பராமரிப்புப் பணிக்காக / திருப்பணிக்காகத் தயாராகும் நிலையில், வழக்கமாகக் கருவறையில் இருக்கும் மூர்த்தங்களை வேறிடத்திற்கு மாற்றி வைத்துவிட்டுத் திருப்பணியைத் தொடங்குவார்கள். கோயிலுக்குள்ளேயே வழக்கமாக வடகிழக்கு மூலையில் 16' x 16' என்ற சுமாரான அளவில் ஒரு தற்காலிக வடிவமைப்பை ஏற்படுத்தி சுயம்புவாக இல்லாத மூர்த்தமாக இருந்தால் அவரையே சிவ சடங்குகள் செய்து எடுத்து இளங்கோயிலில் வைப்பார்கள். மூர்த்தம் எடுக்க முடியாவிடில் அத்திக்கட்டையில் சிவலிங்கம் செய்து மூலவரின் சக்தியை அக்கட்டையில் இறக்கி அதையே சிவலிங்கமாக வழிபடுவார்கள். படமாகவோ, கண்ணாடியாகவோ வைத்தும் வழிபடுவதற்கு ஆகமம் இடம் கொடுக்கிறது. விமானங்களையும் படமாக வரைந்து பாலாலயத்தில் அவ்வம்மூர்த்திக்குப் பின்வைத்து வழிபடுவார்கள். பாலாலய மூர்த்தங்களுக்கு எல்லாப் பூசைகளும் சிறப்பாகச் செய்யப்பட வேண்டும். சுவாமி மூலாலயத்துக்குச் சென்றபின் பூசைகளைத் தொடங்கலாம் எனச் சிலர் நினைக்கிறார்கள். இது தவறு. சுயம்பு என்கின்ற தான்தோன்றி மூர்த்தமாக சுவாமி இருந்தால் அவருக்கும் மூலாலயக் கருவறையில் தினமும் சுருக்கமாகப் பூசை செய்துவிட்டுத் திருப்பணி முடியும்வரை பெட்டிபோட்டு மூடிவிடவேண்டும். தினமும் பூசையின் போது பெட்டியைத் திறப்பதற்கும், மற்ற நேரங்களில் மூடி வைப்பதற்கும் வசதியாகப் பெட்டியை வைத்துக் கொள்ள வேண்டும். கருவறையில் பராமரிப்பு வேலை இல்லாத சூழலில் விமானத்தை மட்டும் பாலாலயம் செய்வதற்கும் ஆகமம் இடங்கொடுக்கிறது. திருமீயச்சூர் இளங்கோவிலைப் பற்றித் திருமுறையில் செய்திகள் உள்ளன. பராமரிப்பு / திருப்பணி முடிந்தபின் கும்பாபிடேக நாளில் சுவாமி பாலாலயத்திலிருந்து யாகாலயம் என்று சொல்லப்படும் யாகசாலைக்குச் சென்று 2/4/6 காலங்கள் அங்கிருந்து பின் மூலாலயம் சென்று விடுவார்.

"தோற்றுங் கோயிலுந் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையாற்
கேற்றங்கோயில் கண்டீர் இளங்கோயிலே"

இளங்கோயிலே – பதிக மகுடம்

### மாடக்கோயில்

பூமி அல்லது நில மட்டத்துக்குச் சற்று உயரமாகப் படிகள் ஏறிச் செல்லுமாறு (சுமார் 15 முதல் 30 அடி உயரம்) அமைக்கப்பட்ட கோயில்கள் மாடக் கோயில்கள் எனப்படும். சிலந்தியாகிய கோச்செங்கணான் அடுத்த பிறவியில் யானை ஏற முடியாத வகையில் உயரமாகக் கட்டியவை மாடக் கோயில்கள். (எ.கா) அம்பர், வலிவலம், ஆவூர், நன்னிலம், சாய்க்காடு.

### பெருங்கோயில்

மாடக்கோயில்களிலேயே சற்றுப் பெரியவனவாயின பெருங்கோயில்கள். "நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே". ஆக்கூர், குடவாயில் போன்றவை அதற்கு உதாரணங்கள். அதிகமான, உயரமான விமானங்கள், கோபுரங்கள், பிரகாரங்கள், மதில்களுடன் விளங்கினால் அதைப் பெருங்கோயில் எனலாம்.

### கற்கோயில் / கற்றளிக் கோயில்

பூமி மட்டத்திலிருந்து முழுக்க முழுக்க கருங்கற்களாலேயே கட்டப்பட்ட கோயில்கள் கற்கோயில்கள் எனப்படுகின்றன. கருங்கல் திருப்பணி என்பது கடுமையான திருப்பணியாகும். கல்லினால் கோயில் கட்டியவர் கயிலைவிட்டகலார் என்ற முதுமொழியும் உண்டு. இது எல்லோராலும் செய்யமுடியாது. பொருட்செலவும் மிகுதியாகும். பணியின் தரத்தைப் பொறுத்துப் பல ஆண்டுகளாகும் கல்வேலைப்பாடுகள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு பொருளும், காலமும் அதிகமாகும். சிற்ப, வர்க்க வேலைப்பாடுகள் குறைவாக உள்ள வேலைக்கு உத்திரமட்ட வேலை என்று பெயர். அதிக வேலைப்பாடுகள் கொண்ட வேலைக்கு இரட்டப் பஞ்சாங்க வேலை என்றும், மிக அதிக வேலைப்பாடுகள் கொண்ட வேலைக்கு முழுக்கால் முகபத்திர வேலை என்றும் பெயர். வசதியைப் பொறுத்து கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், பிரகாரம், இராஜகோபுரம் அனைத்தையும் கல்காரமாகச் செய்பவர்கள் உண்டு. மன்னர்கள் காலத்துக்குப் பிறகுச் செட்டிநாட்டவர்கள் பல கோயில்களை இவ்வாறு செய்துள்ளார்கள்.



வேலைப்பாட்டுடன் கோயில்



வேலைப்பாடற்ற கோயில்



விமானம்



கோபுரம்

இவற்றின் ஆயுளைக் கணக்கிடவே முடியாது. அவ்வப்போது செடிகொடிகள் முளைப்பதைத் தவிர்த்து வந்தால் பல ஆண்டுகள் இருக்கும். மேற்கூரையைக் கூட மூடுகல் என்ற கல்லால்தான் மூடுவார்கள். கம்பிகள், கான்கிரீட் என்ற பேச்சுக்கே இடமில்லை. இரும்புக்கம்பிக்கு 200/300 ஆண்டுகள்தான் ஆயுள். கல்லுக்கு ஆயுள் மிக மிக அதிகம்.



கோபுரம்



விமானம்

கோபுரம் வேறு விமானம் வேறு. நிலவு கால் மேல் நாம் போய் வரும் நடைபாதையில் அமைக்கப்படுவது கோபுரம்
விமானம் என்பது கருவறையின் மீது கட்டப்படுவது

கல்காரத்துக்கு மேல் விமானத்தையும், கற்களால் கட்டுவது இன்னும் கடினம். தஞ்சைப் பெருங்கோயில், கங்கைகொண்ட சோழபுரம், திருந்துதேவன்குடி, திருப்பழனம், பசுபதி கோயில், சீனிவாசநல்லூர் போன்ற கோயில் விமானங்களும் கற்களால் ஆனவை. தமிழகத்தில் உள்ள 98 சதவீதம் விமானங்கள் செங்கல்லால் ஆனவை. ஆவுடையார் கோயில் கொடுங்கைகள், மதுரை ஆலவாய்க் கோயிலின் கம்பத்தடி மண்டபம், திருவானைக்கா கொடிமர மண்டபம் இவையெல்லாம் கல்காரத்தில் சிற்பிகளுக்கு சவால்விடும் வேலைப்பாடுகள். 21 ஆம் நூற்றாண்டு இயந்திரமயமான காலம் பெருங்கற்களை வெட்டி, வேண்டிய வண்ணம் அறுத்துச் சேர்ப்பதற்கும், சுமப்பதற்கும், தூக்கி வைப்பதற்கும் இயந்திரங்கள் வந்துவிட்ட நிலையில், பொருள்வசதி இருந்தால் தஞ்சைக் கோவிலை விட பிரம்மாண்டமாகவே கட்டலாம். தமிழகத்தின் 99 விழுக்காடு கோயில்களில் மூலவர் விமானத்தின் உயரத்தைவிட இராசகோபுரம் எப்போதும் உயரம் அதிகமாகவே இருக்கும். ஆனால் தஞ்சை பெரியகோயில், கங்கைகொண்ட சோழபுரம் போன்ற 1 விழுக்காடு கோயில்களில் மூலவர் விமானம் இராசகோபுரத்தைவிட உயரமாக இருக்கும்.

### செங்கல் கோயில்

தரைமட்டத்திலிருந்து செங்கற்களாலேயே கட்டப்படும் கோயில்களுக்குச் செங்கற் கோயில்கள் என்று பெயர். இவையும் சிற்பியின் வேலைப்பாட்டைப் பொறுத்துப் பலவகையாகக் கட்டப்படும். இவற்றிற்கு அடிக்கடி பூச்சு, பராமரிப்பு, வர்ண வேலைகள் அவசியம். பராமரிப்பு இல்லாவிடில் ஆயுள் குறையும். இவ்வகை வேலைகளில் மேல்கூறை மூடுகல்லாகவும் அமையும். சில இடங்களில் மர உத்தர மூடிகளையும் அமைப்பார்கள். விமானங்களையும், கோபுரங்களையும் கண்டிப்பாக செங்கல்லாகத்தான் அமைக்க முடியும்.

மிகப்பழமையான சில கோயில்கள், பாதியளவு கருங்கற்களாகக் கட்டப்பட்டுச் சந்தர்ப்ப சூழ்நிலைகள் சரியில்லாமல், செங்கல்லாக மாற்றிக் கட்டியனவாகவும் உள்ளன. செங்கல்கோயில் சற்று சீக்கிரமாகவே கட்டிவிடலாம். அளவான பொருளாதாரம் இருந்தாலும் போதும்.

### கொகுடிக்கோயில்

கொகுடி – முல்லை. முல்லை நிலத்தில் அமைந்து பெயர் பெற்றிருந்ததாலோ அல்லது தலக்கொடியாக முல்லை அமைந்து அதையே கொண்டு அதிகமாகப் பூசிக்கப்பட்டதாலோ, முல்லைக்கொடிகள் நிறைந்து விளங்கிய கோயிலாக இருந்ததாலோ கொகுடிக் கோயில் எனப்பட்டிருக்கலாம். இப்போது தென்திருமுல்லைவாயில், வடதிருமுல்லைவாயில் என்று சொல்லுகிறோமோ அதுபோலவாகும். கருப்பறியலூர் திருத்தலத்தை கொகுடிக் கோயில் என்று சொல்லுவார்கள்.

### ஞாழக்கோயில்

ஞாழல் – புலிநகக்கொன்றை. அவ்வத்தலங்களில் உள்ள மரம், செடி, கொடி முதலிய தாவரங்களின் சார்பினால் அமைந்த கோயில்கள். கொன்றை சுவாமிக்கு மிக விசேடமானது. திருஞானசம்பந்தர் நிறையப் பாடல்களில் கொன்றையைப் பாட அதைக் கண்டு வியந்த சேக்கிழார், 'வம்பறா வரிவண்டு மணம் நாற மலரும் மதுமலர் நற்கொன்றையான்' என்று பாடுகிறார். சரக்கொன்றை, புலிநகக்கொன்றை என்று இது பலவகைப்படும். பிரணவ வடிவமான மலர் புலிநகக் கொன்றையில் மாலை கட்டினால் அது வடம் போல மிக அழகாக இருக்கும். அது தல மரமாக இருந்து அதனால் பூசை செய்யப்பட்ட காரணத்தால் ஞாழக்கோயில் எனப்பட்டது. ஞாழல்வாயில் என்ற பெயரிலும் கோயில்கள் இருந்துள்ளன.

### கரக்கோயில்

குதிரை பூட்டிய தேர்போன்று சக்கரங்களுடன் அமைந்த சக்கரக்கோயிலே கரக்கோயில் எனப்படுகிறது. கடம்பூர் கோயில் கரக்கோயிலாகும். தாராசுரத்திலும் இத்தகைய அமைப்பைக் காணலாம். இந்திரன் கரத்தால் அகழ்ந்த கோயில்கள் கரக்கோயில்கள் என்றும் சொல்லப்பட்டதாகவும் வரலாறு உண்டு.

"வேறு சிந்தை யிலாதவர் தீவினை
கூறுசெய்த குழக னுறைவிடம்
ஏறு செல்வத் திமையவர் தாந்தொழும்
ஆறு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே"

கடம்பூர்க்கரக்கோயிலே – பதிக மகுடம்

### மணிக்கோயில்

நல்ல மணி முதலியவற்றால் அழகுறப் புனையப்பட்டவை மணிக்கோயில்கள். திருவாரூர் திருக்கோயிலை மணிக்கோயில் எனவும், பூங்கோயில் எனவும் சேக்கிழார் பதிவு செய்துள்ளார். கோயிலுக்குள் மணி அடிப்பது மிக முக்கியமானதாகும். தீய சக்திகள் மணி சப்தம் கேட்டு கோயிலை விட்டு வெளியேறும் என்று சொல்லப்படுகிறது. நல்ல மணிகளின் ஒலி நேரம் தவறாமல் முறையாக ஒலிக்கப்பட்டாலும் அது மணிக்கோயில் என்று சொல்லலாம். திருச்சி மாவட்டம் துவரங்குறிச்சி அருகில் மணியங்குறிச்சி என்ற ஊரில் கோவில் மணி துல்லியமாக நேரந் தவறாமல் ஒலிப்பதால் ஊர்க்காரர்களின் கைக்கெடியாரங்களை அதை வைத்தே சரிசெய்து கொள்கிறார்கள். உருத்திராக்கமணி மற்றும் உருண்டையான விமானம் அமையப்பெற்ற கோயில் என்றும் சொல்லுவார்கள்.

### ஆலக்கோயில்

ஆலமரத்தைத் தல விருட்சமாக உடைய கோயில் ஆலக்கோயில். ஆலம் உண்ட பெருமான் ஆதலின் மற்ற கோயில்களிலிருந்து வேறுபடுத்த ஆலக்கோயில் என்று சொல்லியிருக்கலாம். ஆல – கொண்டாட என்றும் ஒரு பொருள் உண்டு. எப்போதும் திருவிழாக் கோலம் பூண்டிருந்ததால் ஆல கோயில் என்று பெயரிட்டிருக்கலாம். ஒரு காலத்தில் ஆலமரத்தின் அடியில் அமையப் பெற்ற கோயிலாகவும் இருந்திருக்கலாம்.

### மூலட்டானம்

திருக்கோயில்களில் இறைவன் அருவுருவத் திருமேனியான சிவலிங்கத் திருமேனியுடன் எழுந்தருளியிருக்கும் கருவறையினை "மூலஸ்தானம்" என்பர். வடசொற்றொடராகிய இதனை மூலட்டானம் என வழங்குதல் தமிழ் மரபு. எல்லாத் திருக்கோயில்களிலும் சிவலிங்கத் திருமேனியுடன் இறைவன் வீற்றிருந்தருளும் சிறப்புடைய அருள் நிலையத்தினை மூலட்டானம் எனப் பொதுவாக வழங்குதல் உண்டு. எனினும் திருவாரூர் திருக்கோயிலுள் புற்றிடங்கொண்ட பெருமான் எழுந்தருளிய இடத்தையே "திருமூலட்டானம்" எனத் திருநாவுக்கரசர் திருப்பதிகங்களில் குறித்துள்ளார். இவ்வாறே தில்லைப் பெருங்கோயிலில் சிவலிங்கத் திருமேனி அமைந்த நிலையத்தைத் திருமூலட்டானம் எனச் சிறப்பாக வழங்குதல் உண்டு.

## மூலட்டானத்தில் சிவலிங்கம் தாபிக்கும் விதிகள்

### சிவலிங்கத் திருமேனியில் கலா தத்துவ நியாசங்கள்




அத்துவா என்றால் வழி என்பது பொருளாகும். வினைகளை ஈட்டுவதற்கும், கழிப்பதற்கும், உண்டான வழிகள் என்று சைவ சித்தாந்த உரைகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை சொற் பிரபஞ்சம், பொருட்பிரபஞ்சம் என்று இரண்டாகச் சொல்லப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| சொற்பிரபஞ்சம் | மந்திரம் (11) | பதம் (81) | வன்னம் (எழுத்து) (51) |
| பொருட்பிரபஞ்சம் | புவனம் (224) | தத்துவம் (36) | கலை (5) |

இவற்றையெல்லாம் சிவலிங்கத்தில் பதிய (நியாசம் செய்தல்) வைத்தல் என்ற கிரியை கும்பாபிடேகத்தின் போது நடைபெறும். பிரம்ம, விட்டுணு, உருத்திர பாகங்களில், ஈசானம், தத்புருடம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் என்ற ஐந்து முகங்களில் முழு சொற்பிரபஞ்சம், பொருட்பிரபஞ்சம் என்ற அவர் படைத்த அனைத்தையுமே மந்திரங்களால் சிவலிங்கத்தில் பதிய வைத்துப்பின், சிவபெருமானால் படைக்கப்பட்ட பஞ்சபூதங்களின் வழி அவர்தம் அருளாற்றல் பெற்றுள்ள யாகசாலையின் கடதீர்த்தங்கள் சுவாமிக்கு அபிடேகம் செய்யப்படுவதால் பெறற்கரிய மந்திரசக்திகள் பெற்று மூலட்டானம் திருவருள் நிலையமாகத் திகழ்கிறது. அனைத்து தனு,

கரண, புவன போகங்களுடன், நம்மையும் அவருக்கே சமர்ப்பித்துக் குடமுழுக்கை நிறைவு செய்கிறோம். அவர் அருள் பாலிக்கட்டும்.

## கருவறையில் தேவதாபனம் (பிரதிட்டை)




கருவறையில் அமைக்கும் தெய்வத் திருவுருவங்களை அவரவர்க்கு விருப்பப்பட்ட இடத்திலோ அல்லது மையத்திலோ வைக்கக்கூடாது. சிற்ப சாத்திரப்படி அவ்வவற்றுக்குரிய இடங்களில்தான் வைக்கவேண்டும். கருவறையின் நடுமையத்தில் கிழக்கு மேற்காகச் செல்லும் நூலுக்கு பிரம்மசூத்திரம் அல்லது பூர்வசூத்திரம் என்றும் தெற்கு வடக்காகச் செல்லும் நூலுக்கு சோமசூத்திரம் அல்லது தாராசூத்திரம் என்றும் பெயர். பிரம்ம சூத்திரமும், சோமசூத்திரமும் சேரும் நடுவிடத்தில் சிவலிங்கத்தை மட்டும்தான் தாபனம் (பிரதிட்டை) செய்யவேண்டும். சோம சூத்திரத்துக்குப்பின் மீதமுள்ள பகுதிகள் 10 பாகமாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு தெய்வத்தையும் ஒவ்வொரு பாகத்தில் பிரதிட்டை செய்யலாம். பிரும்மசூத்திரத்துக்கு முன்பாக அதாவது கருவறையின் முன்பாதிப் பகுதியில் எந்தத் திருவுருவத்தையும் பிரதிட்டை செய்யக்கூடாது.

கர்ப்பகிரகம் அல்லது கருவறையின் உட்பகுதியில் மத்தியிலிருந்து பின் பகுதியை 10 பாகம் செய்து மத்தியில் சிவலிங்கத்தையும் 10ஆவது பதத்தில் சைவ மகேச்சுர பிம்பங்களையும், 9வது பதத்தில் நான்முகனையும், 8ஆவது பதத்தில் திருமாலையும், 7ஆவது பதத்தில் சண்முகரையும், 6ஆவது பதத்தில் சரசுவதி முதலியவர்களையும், 5ஆவது பதத்தில் சூரியன், சாஸ்தா போன்றோர்களையும், 4வது பதத்தில் விநாயகரையும், 3ஆவது பதத்தில் பைரவரையும், 2ஆவது பதத்தில் சத்தியையும், 1ஆவது பதத்தில் பூதங்கள், நாகம் இவற்றையும் பிரதிட்டை செய்யவும்.

## பஞ்ச ஆவரண பூஜை




| பின்கோடு | இடம் | தகுதி |
|---|---|---|
| நமசிவய | ஐந்தாம் பிரகாரம் | நர்சரிப் பள்ளி |
| சிவயநம | நான்காம் பிரகாரம் | ஆரம்பப் பள்ளி |
| சிவயசிவ | மூன்றாம் பிரகாரம் | உயர்நிலைப் பள்ளி |
| சிவசிவ | இரண்டாம் பிரகாரம் | இளங்கலைக் கல்லூரி |
| சிவ | முதல் பிரகாரம் | முதுநிலைக் கல்லூரி |
| சி | மூலட்டானம் | முனைவர் பட்டம் |

சரியான பின்கோடு நம்பரை எழுதினால்தான் கடிதம் சரியான இடத்திற்குச் செல்லும் 90% உயிர்கள் இப்போது கடிதம் எழுதுவதில்லை. எதிர்கால சந்ததிக்கு பின்கோடு என்றால் என்னவென்றே தெரியாது. அவர்கள் அலைபேசி எண்களை வைத்துக்கொள்ளலாம். கணினிகளின் கடவுச்சொற்களே ஐந்தெழுத்தாகும்.

முழுமுதற்கடவுளான சிவபெருமானைப் பூசை செய்யும் போது ஏவலர்களாகவும், காவலர்களாகவும் உள்ள தெய்வங்களையும் பூசிப்பது வழக்கம். இத்துணைத்தெய்வங்கள் சிவபெருமானைச் சுற்றி படிப்படியாக அமைந்துள்ள வீதிகள், பிரகாரங்கள் அல்லது ஆவரணங்களில் வீற்றிருப்பர். இந்த ஆவரணங்களைப் பூசித்து அதன்பிறகு மையத்தில் உள்ள தெய்வத்தைப் பூசிப்பதே ஆவரணாதி பூசை எனப்படும்.

சிவ பூசையில் பல ஆவரணங்கள் இருந்தாலும் குறிப்பிடத்தக்க ஐந்து ஆவரணங்களை மட்டும் இப்போது நடைமுறையில் பூசை செய்கின்றோம். இதனைப் "பஞ்சாவரண பூசை" என அழைப்பர்.

சிவபெருமானைச் சுற்றி அமைந்துள்ள முதல் ஆவரணம் அணுக்கச் சுற்று எனப்படும். இதில், பஞ்சப் பிரம்மங்களும் ஆறு அங்கங்களும் பூசிக்கப்படுகின்றன. பஞ்சப்பிரம்மங்கள் என்பவர் ஐந்து முகங்களுக்குரிய ஈசானர், தத்புருஷர், வாமதேவர், அகோரர், சத்யோஜாதர் ஆகிய மூர்த்திகளும், ஆறு அங்கங்கள் என்பன,

சிவபெருமானின்

ஹ்ருதயவடிவான ஞானசக்தி
சிரசுவடிவான ஆதிசக்தி
சிகையான பராசக்தி
நேத்திரமான இச்சாசக்தி
அத்திரமான கிரியாசக்தி

இவற்றை சுற்றி விளங்கும் கவசம் ஆகிய கவச சக்தி ஆகியவையாகும்.

இரண்டாவது ஆவரணத்தில் நான்கு முகமும் பத்துகைகளும் கொண்டு பத்மாசனத்தில் வீற்றிருப்பவர்களான எண்மர் வீற்றிருக்கின்றனர்.

இவர்கள், அஷ்டவித்யேசுவரர் என அழைப்பர். இவர்கள் 1) அனந்தர் 2) சூக்ஷ்மர் 3) சிவோத்தமர் 4) ஏகநேத்திரர் 5) ஏகருத்திரர் 6) திரிமூர்த்தி 7) ஸ்ரீகண்டர் 8) சிகண்டி என எண்மராவர்.

மூன்றாவது ஆவரணத்தில் கிழக்கில் நந்திதேவரும், தென் கிழக்கில் மகாகாளரும், தெற்கில் பிருங்கியும் தென்மேற்கில் விநாயகரும், மேற்கில் விருஷபரும், வடமேற்கில் ஸ்கந்தரும், வடக்கில் தேவியும், வடகிழக்கில் சண்டேசுவரரும் எழுந்தருளியுள்ளனர்.

நான்காவது ஆவரணத்தில் தசதிக் பாலகர்கள் எழுந்தருளியுள்ளனர். கிழக்கில் இந்திரனும், தென்கிழக்கில் அக்னியும், தெற்கில் யமனும், தென்மேற்கில் நிருதியும், மேற்கில் வருணனும், இவ்விருவர்களுக்கு இடையில் பிரமனும், வடமேற்கில் வாயுதேவனும், வடக்கில் குபேரனும், வடகிழக்கில் ஈசானனும் அவருக்குத் தெற்கில் விஷ்ணுவும் எழுந்தருளியுள்ளனர்.

ஐந்தாவது ஆவரணத்தில் தசாயுதங்கள் வைத்துப் பூசிக்கப்படுகின்றன. இவை வஜ்ஜிரம் (கிழக்கு), சக்தி (தென்கிழக்கு), தண்டாயுதம் (தெற்கு), கத்தி (தென்மேற்கு), பாசம் (மேற்கு) கொடி (வடமேற்கு), கதை (வடக்கு), திரிசூலம் (வடகிழக்கு), பத்மம் (கிழக்கு வடக்கிழக்கிற்கு நடுவில்), சக்கரம் (தென்மேற்கு மேற்கிற்கு இடையில்) எனப் பத்தாகும்.

இந்த ஐந்து ஆவரணங்களை கும்பாபிஷேகம் முதலான சிவவேள்விச் சாலையில் மந்திரப்பூர்வமாக வழிபாடு செய்கின்றனர். யாகசாலைகளில் இத் தேவர்களின் முழு உருவங்களை வைப்பதற்குப்பதில் பூரண கும்பங்களை வைத்து வழிபடுவர். சில சிவ பூஜாதுரந்தரர்கள் நித்திய பூசையிலும் பஞ்சாவரணங்களை மந்திரப்பூர்வமாகப் பூசை செய்கின்றனர்.

# இன்றைய கோயில்களும் உழவாரப் படையாளிகளும்

தமிழ்நாட்டில் பாடல்பெற்ற சிவத்தலங்கள் 276. பாடல் பெறாதவைகளாகப் பல்லாயிரம் உள்ளன. 21ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் பிறந்து சைவம் தழைக்க வாழ்ந்துகொண்டிருக்கும் நாமெல்லாம் பெரும்பேறு பெற்றவர்கள் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் நெற்றி நிறையத் திருநீறு அணிந்து, மார்பில் கண்டிகையுடன் ஐந்தெழுத்தோதிச் சைவத்தைப் பின்பற்றி வாழ்ந்து வருகிறோம். இந்த வாய்ப்புகள் முற்பிறவியில் பிறந்தவர்களுக்குக் கிடைக்கவில்லை.

காரைக்கால் அம்மையார் காலத்தில் சிவபெருமான் திருவுரு எது என்று பலரும் வினவும் நிலை இருந்தது. சிவபெருமான் திருவுருவம் பற்றி இகழும் நிலை இருந்தது. வெற்று நூலறிவு பேசி நுழைவு இல்லாதவர்கள் இருந்தார்கள். திருவருளால் மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையவர்கள் இல்லை என்றெல்லாம் காரைக்கால் அம்மையார் கீழ்காண் பாடல்களில் பதிவு செய்கிறார்.

"அன்றும் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்
இன்றும் திருவுருவம் காண்கிலேன் – என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட்கு என்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது"

பின்னர் வந்த திருஞானசம்பந்தர், சிவபெருமானின் உருவத்திருவுரு இது– என்று கூறுபவராகத் தமது முதல் பாடலிலேயே, "தோடுடைய செவியன் – விடையேறி தூவெண் மதிசூடி" என்று இறைவனைக் காட்சிப்படுத்துபவராகப் பாடியுள்ளார்.

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே"

என்று சுட்டிக்காட்டியுள்ளார்.

எட்டாம் நூற்றாண்டில் மங்கையர்க்கரசியார் காலத்தில் திருநீறு இடுவதற்கே தடைவிதித்திருந்த செய்தியையும் படித்திருக்கிறோம். போக்குவரத்து வசதிகள் இல்லாததால் தலப்பயணம் செய்யும் வாய்ப்புகள் குறைவாக இருந்திருக்கின்றன. அச்சு இயந்திரங்கள், மின்சாரம், கணினிகள் என்ற விஞ்ஞானத் தொழில் நுட்பங்கள் எல்லாம் நடைமுறைக்கு வராத காலங்கள் அவை. இந்த அளவு நூல்களையெல்லாம் ஓலைச்சுவடியில் காண்பது அரிது. நினைத்த அளவிலே ஆயிரக்கணக்கான நூல்களை அச்சடித்து வெளியிடும் ஆற்றலைச் சிவபெருமான் நமக்குத்தான் 21ஆம் நூற்றாண்டில் அளித்துள்ளான். கற்காலத்தில் ஆரம்பித்து அலைபேசி, வலையதள காலத்திலே வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நமது மரத்தடிகளிலும் ஆரம்பித்துக் கொடுத்த சிவத்தறிவழிபாடு இன்று கிரானைட் கற்கோயில்களாகவும், பொற்கோவில்களாகவும் மிளிர்கின்றன. நம் நாட்டின் சிவாலயங்களில் பொதுவாக சிவலிங்கத்துக்கு மூலக்கருவறை கொண்டு கோயில்கள் கட்டப்பட்டு பின்பு சிறிது சிறிதாக அம்மைக்கும் கருவறை, பின்பு விநாயகர், முருகன், சண்டிகேசுவரர், பைரவர் போன்றவர்களுக்கு சந்நிதிகள் பிரகாரங்களில் ஏற்படுத்தப்பட்டன. பெரும்பாலான கோயில்களில் சுவாமியும், அம்பாளும் கிழக்கு திசை

பார்த்தேயிருப்பார்கள். 20–25% விழுக்காடு கோவில்களில் அம்மை தெற்குப்பார்த்த நிலையில் இருப்பர். ஒரு சிவாலய வரைப்படத்தைக் கீழ்க்கண்டவாறு வரைந்துள்ளோம். இருவரும் கிழக்குப் பார்த்த நிலையில் உள்ள மதுரை போன்ற சில கோயில்களில் அம்மை சுவாமிக்கு வலப்புறம் வீற்றிருப்பார். 75 சதவீதக் கோயில்களில் சுவாமிக்கு இடப்புறம் வீற்றிருப்பார். வலப்புறம் இருப்பவரே வலிமையானவர் / செல்வாக்கானவர் என்பது செவி வழிச் செய்தி.

திருமடங்களும் ஏராளமான சைவ அமைப்புகளும் தோன்றி தம்மாலான முயற்சிகளைச் செய்து சைவமும், தமிழும் தழைக்க அரும்பாடுபட்டு வருகிறார்கள். அவர்களையெல்லாம் பாராட்ட வேண்டியது நமது கடமை. அவர்கள் எதையும் எதிர்பார்த்து இச்செயல்களைச் செய்யவில்லை. அவர்கள் வினைக்கழிவுக்கு வாய்ப்பாக இறைவன் இதை நல்கியுள்ளான்.

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" – பெரியபுராணம்

என்று வாழ்ந்து வருகிறார்கள். பெரும்பாலான ஊர்களில் அவரவர் வசதிக்கும், நேரத்துக்கும் ஏற்ப ஒரு வழிபாட்டு அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு நித்திய, நைமித்திக, உற்சவப் பெருந்திருவிழாப் பூசைகளை சிறப்போடு நடத்தி வருகிறார்கள். பிரதோசம் போன்ற நிகழ்வுகளுக்கு வரலாறு காணாத கூட்டங்கள் வருகின்றன. நிறைநிலா நாளன்று அண்ணாமலையாரை வலம் வருதலும், தொழுதலும் திருநாவுக்கரசர் பாடியதைப்போல நடக்கின்றன. நல்லோரை நாட்களில் கும்பாபிடேகம் எனப்படும் குடமுழுக்கு நடைபெறாத நாளே இல்லை. ஒரே நாளில் பல விழாக்கள், எதற்குச் செல்வதென்றே தெரியவில்லை. பல்லாயிரக்கணக்கான அடியவர்கள் சமயதீக்கை பெற்றுச் சிவபூசை செய்து வருகிறார்கள். சமயம், விசேடம், நிர்வாணம் என்று ஆசாரிய அபிடேகத்துடன் ஞான நன்னெறியை நோக்கிப் பயணம் செய்துகொண்டுள்ள நிலையைப் பார்த்துத்தான் நாம் 21–ஆம் நூற்றாண்டில் சைவனாக வாழ பேறுபெற்றவர்கள் என்று கூறுகிறோம். அப்பரடிப்பொடி, சேக்கிழாரடிப்பொடி என்று பெயரிட்டு மகிழ்கிறார்கள். மனையறத்தின் வேராய் விளங்கும் அடியேனின் துணைவியார் தமது சைவ மங்கையர் தோழிக்கூட்டத்துடன் சேர்ந்து இரட்டையர்களாகிய எங்கள் பேரக்குழந்தைகளுக்கு அருள்நந்திசிவம், அருணகிரிசிவம் என்று பெயரிட்டபோது பேரானந்தம் பெற்றோம். நன்றாகப் பூசை நடக்கும் கோயில்களோடு தங்கள் பயணத்தை அவர்கள் நிறுத்திக் கொள்வதில்லை. கீழ்க்காண் அன்பர்களும், அமைப்புகளும், உழவாரமும், திருக்கோயிலும் தமது உயிர் என்று வாழ்ந்த சொல்வேந்தருக்குப்பின் வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினராக திருநாவுக்கரசு நாயனார் உழவாரப் பணிகளைத் தலைமேல் இட்ட கட்டளையாகச் செய்து வருகிறார்கள்.

1. கொங்குநாட்டில் – விசயமங்கலம் அப்பரடிப்பொடி வீ. சொக்கலிங்கம் அவர்கள் 30 ஆண்டுகளுக்கு மேலாக குறைந்தது மாதம் 1 முறை நூற்றுக்கு மேற்பட்ட அடியார்களுடன் சென்று கிராமங்களில் பாழடைந்து கிடக்கின்ற சிவாலயமாக இருந்தால் அங்கு போய் நாள் முழுவதும் தங்கி உழவாரம் செய்து அதைப் பூசை நிலைக்குக் கொண்டு வருகிறார். "இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால் – இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்" என்று அத்திருக்கூட்டத்தில் ஒவ்வொரு அடியாரும் ஒரு வேலை செய்வதைப் பார்க்கும் போது, ஆனந்தக் கண்ணீர் வருகிறது. நல்ல உடல்வாகு உள்ளவர்கள் மண்வெட்டி, கடப்பாறையுடன் கோயில் மற்றும் மதில் மேல் சென்று செடி, கொடிகளை அகற்றுவர்.

திருஅலகிட விரும்புவர் அவ்வாறே செய்வர். மெழுகுபவர் மெழுகுவர். இன்னொரு அணி பூத்தொடுக்கும். பூசைக்குத் தேவையான ஏற்பாடுகள் செய்வர். மற்றொரு அணி அபிடேகம், நைவேத்தியம் போன்ற பணிகள் செய்யும். காலை 8 மணிக்குள் ஆலயத்துக்கு வரவேண்டுமென்று விபரமான விலாசத்துடன் முன்பே தபால் அட்டை அனுப்பி விடுவார். மதியம் 2 மணி வரை உழவாரம் செய்யப்பட்டு கோவில் சீர் செய்யப்படும். உணவு இடைவேளைக்குப் பின் சிறப்பான சிவபூசை. 4–5 மணிக்கு அவர் சிறப்பான சொற்பொழிவையாற்றுவார் மாலை 6 மணிக்கு நிறைவு செய்வார்.

2. ஒத்தக்கால்மண்டபம் கு. கோவிந்தராசு, வெங்கடாசலம், சந்திரசேகர், மாரியப்பன், கிருஷ்ணசாமி, பாலசுப்பிரமணியம் போன்ற அடியார் பெருமக்களை உறுப்பினர்களாகக் கொண்ட நிறைநிலா வழிபாட்டு மன்ற அன்பர்கள் கொங்குச் சோழர்கள் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு கட்டிய புற்றிடங் கொண்டீசர் கோயிலைப் புதுப்பித்து, 25 ஆண்டுகளாகப் பராமரித்து, இரண்டு குடமுழுக்குகளை காணச்செய்து, முழுக்க முழுக்கத் தமிழ் முறையில் தினசரி வழிபாடுகள், சிறப்பு வழிபாடுகள், பெருந்திருவிழாக்கள் நடத்தி மகிழ்கின்றனர். கோவில் என்பது ஏதோ கல்லும், மணலும், சாந்தும் மட்டுமல்ல. அக வழிபாடும் மிக அவசியம் என்று உணர்ந்து தினமும் உழவாரம் முடிந்தபின் மாலை புற்றிடங்கொண்டார் முன் நின்று சிவபுராணம், பஞ்சபுராணம் பாடி வழிபாட்டை நிறைவு செய்வதைத் தம் வாழ்நாள் புண்ணியமாகக் கொண்டுள்ளார்கள். பள்ளியறையிலிருந்து காலையில் சுவாமி எழுந்தருளி வருவதும், இரவுப் பூசைக்குப்பின் பள்ளியறைக்குத் திரும்புவதும் திருவங்கமாலை உட்படத் தேவாரத் திருவாசகப் பாடல்களுடன் பூசை நடைபெறுவதைக் கேட்டும், கண்டும் மகிழ வேண்டும். தினமும் வேள்வி, உற்சவருக்குக் கலசநீர் அபிடேகம், 1008 மலர் வழிபாடு, பொன்னூசல், குளிர்சாதனப்பள்ளியறை என்று இவற்றை ஒத்தக்கால்மண்டபம் புற்றிடங்கொண்டீசர் கோயிலில்தான் காணமுடியும். யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று, தமிழகம் முழுவதும் உள்ள திருவாதவூர், திருப்பழனம், கோழம்பம், கழுக்குன்றம் போன்ற பல ஊர்களுக்கும் சென்று பல அரிய திருப்பணிகளைச் செய்துள்ளார்கள். பல நூல்களை அச்சடித்து வெளியிட்டுப் பலருக்கு தீக்கை வாங்கிக் கொடுத்துச் சிவசீலர்கள் ஆக்கியுள்ளார்கள். முதுமுனைவர் ந.இரா. சென்னியப்பனாரைத் தலைவராகக் கொண்டு செயல்படும் பேரூர் மணிவாசகர் அருட்பணி மன்றத்தின் செயல்பாடுகளை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. தாய்த்தமிழால் செய்ய முடியாதது எதுவுமில்லை என்று நிரூபித்து வருகிறார்கள். தமிழகம் முழுவதும் சென்று சைவத்திருமுறை வகுப்புகள், குடமுழுக்கு விழாக்கள், நூல் வெளியீடுகள் தமிழில் வாழ்க்கை, வழிபாட்டு நெறி / பூசனைகள் என்ற சீரிய பணிகளைச் செய்து வருகிறார்கள். அதன் செயலர் குமரலிங்கம், மற்ற உறுப்பினர்கள் பலர், ஒத்தக்கால்மண்டபம் ஞானப்பண்ணையில் வளர்ந்தவர்கள்.

3. உடுமலைப்பேட்டையில் உழவாரம் என்ற அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு பெருந்தகைகள் யு.கே.பி. முத்துக்குமாரசாமி அவர்களும், நா. சோமசுந்தரம் அவர்களும், அமராவதி ஆற்றங்கரையில் கேவில்லேஜஸ் என்று ஆங்கிலத்தில் சொல்லப்படும் ககரவார கிராமங்களான கணியூர், கடத்தூர், கொமரலிங்கம், கொழுமம், கண்ணாடிப்புத்தூர் ஆகிய தலங்களைப் புதுப்பித்து பூசை நெறிகளையும் பின்பற்றச் செய்து வருகிறார்கள்.

4. இதே மாதிரி திருப்பணியை கோவில்பட்டி குரு பாலசுப்பிரமணியம் (பிருங்கி முனிவரின் சீடர்) செய்து வருகிறார். பெரிய மதில்களுக்குத் தூய்மை செய்து சுண்ணாம்பு அடிப்பதில் இவர்கள் வல்லவர்கள். திருவண்ணாமலையிலும் ஒரு திருக்கூட்டம் உள்ளது. தற்போது

திருமழபாடி கோயிலுக்குக்கூட வந்து செய்து கொடுத்தார்கள். அனைவரும் பணிக்குச் செல்பவர்கள். சனி ஞாயிறுகளில் விடுமுறை எடுக்காமல் அவர்கள் வருவது தான் இறைவன் கருணை. திருச்சியில் தாயுமானசுவாமிகள் திருக்கூட்டம் என்றவொரு அமைப்பு மகத்தான பணியைச் செய்து வருகிறது. சிதலமடைந்த சிவாலயத்தைத் திருப்பணிக்காக எடுத்துக்கொண்டு வாரமொருமுறை ஞாயிறன்று 10/20 பேர் சென்று அவர்களே சிற்பியாகவும், கொத்தனாராகவும், தச்சராகவும், உதவியாளராகவும் வேலை செய்வதைப் பார்த்து அடியேன் கண்ணீர்விட்டு அழுது, அவர்களுக்கு உணவாவது கொடுப்போம் என்று அந்த ஊருக்கு அருகில் உள்ள கடைகளில் கிடைப்பதை வாங்கிக்கொண்டு போய்க் கொடுத்து மகிழ்வேன். பல ஆண்டுகள் திருப்பணி செய்து விசயமங்கை, கோவிந்தாபுத்தூர், பழையாறை வடதளி, தென்தளி, நெடுங்களம், பட்டூர், பயற்றூர் என்று ஏராளமான கோயில்களைச் செய்துள்ளார்கள். ஜோதிமலை இறைவர் பணித்திருக்கூட்டம் என்றொரு அமைப்பு, கும்பகோணத்தில் இருந்துகொண்டு தன்னால் ஆன பணிகளைச் செய்து வருகிறது. சென்னையில் ஆடலரசன் ஒரு சிறந்த அடியார். மாதந்தோறும் உழவாரப்பணி, திருப்பணிக்கு உதவுதல், எண்ணெய், ஆடை வழங்குதல் என்று ஒல்லும் வகையால் எல்லா சிவதர்மங்களையும் செய்துவருகிறார்.

5. அழுந்தை மறையோர் சார்பில் அழுந்தைக்கருகில் உள்ள கோமல் சேகர், வீழிக்கார்த்திக், ஆரூர்க்கண்ணன், பொன்செய்வீரமணி, மாயவரம் ஜோதி போன்ற அடியார்கள் பொருளுள்ளவர்களை அணுகிப் பொருளைப் பிட்டுபோல் இரந்து அவர்களுக்கும் புண்ணியத்தைக் கொடுத்து, தாமும் அடைந்து திருப்பணி, குடமுழுக்கு நடத்துவதுடன், நல்ல நூல்களை வெளியிட்டு, நன்னெறிச் சொற்பொழிவுகள், கூட்டங்கள் நடத்தி மக்களுக்கு வழிகாட்டியாக விளங்கி வருகிறார்கள். மகாலட்சுமி சுப்பிரமணியம் என்ற அம்மையார் ஏராளமான சிவாலயத் திருப்பணிகளைச் செய்து வருகிறார். அவரும் மலேசியாவைச் சேர்ந்த அன்பழகி சுந்தரேசன் போன்றோரும் வெளிநாடுவாழ் இந்தியர்களைத் திருப்பணிகளில் பங்குபெறச் செய்வதன் மூலம் புண்ணியத்தைத் தேடிக் கொடுக்கிறார்கள். செட்டிநாட்டு அன்பர்கள் ஏராளமான கற்காரக் கோயில்களைக் கட்டியதோடு மிக முறையாக அழகாகக் குடமுழுக்கு செய்வார்கள். ஒருவர் தன் வாழ்நாள் முழுதும் எந்த கோயிலானாலும் அஷ்டபந்தன மருந்து கொடுக்கிறார். ஒருவர் திருமுறைப் பாராயணத்துக்கு, ஓதுவாருக்கு சன்மானம் அளிக்கிறார். மற்றவர் மலர்களை அளிக்கிறார். இப்படி அவர்கள் பணி தொடர்கிறது.

6. வெங்கடேசன் என்ற அடியார் ஒரு திருக்கூட்டத்துடன் சென்னை, தொண்டை நாட்டுப் பகுதிகளில் வயல்வெளிகளில் கிடைக்கும் சிவலிங்கங்களையெல்லாம் எடுத்து ஒரு கூரை அமைத்து எதிர்காலக் கோயிலுக்கு அடிக்கல் நாட்டி வருகிறார்.

இவர்களைப் போன்று ஏராளமானவர்கள் திருப்பணி செய்ய இறைவன் ஒரு வாய்ப்பைக் கொடுத்து அவர்கள்தம் வினைகளை நுகரச்செய்து நன்னெறிக்குக் கொண்டு வந்து தன் திருவடிக்கீழ் கொணர முயற்சி செய்கிறார். இவர்களுக்கும், இன்னும் பலருக்கும் இன்னும் சில வாய்ப்புகள் உள்ளன. ஆயிரக்கணக்கான சிவாலயங்கள் இன்னும் திருப்பணிகளுக்காகக் காத்துக் கிடக்கின்றன. கோடிக்கணக்கான மக்களால் ஆயிரக்கணக்கான திருப்பணிகள் செய்ய முடியாதா? அதற்காகச் சில படங்களைப் பிரசுரிக்கிறோம். அடவிக்காடே என்று அப்பர் சொன்ன நாட்டில் அப்படிப்பட்ட காடுகள் வரலாமா?

தம்முடைய கோயில்கள் என்ற நிலையில் சிவபெருமான் நினைத்தால் பாழான நிலைக்குச் செல்லாமல் எப்போதும் நல்ல நிலைமையிலேயே வைத்திருக்க முடியாதா? நினைத்த மாத்திரத்திலேயே நிறைவேற்ற மாட்டாரா? அவர் நடுவுநிலை தவறாதவர். நீதியானவர். தமக்கொன்றும், மற்றவர்க்கொன்றும் செய்யமாட்டார். நம்மில் சிலர் வினைக்கழிவு மூலம் தம் திருவடியையடைய அவர் திருக்கண்ணோக்கம் கொண்டுள்ளார். அதற்காக வௌவால்களையும், அவ்வகை உயிரினங்களையும் படைத்து நாம் போகாத கோயில்களுக்கு அவற்றை அனுப்பித் திருவிளையாடல் நடத்துகிறார். கடந்த மாதம் செய்தித்தாளில் படித்த ஒரு சிறுகதை நினைவுக்கு வருகிறது. ஜப்பானிய நாட்டு மக்களுக்கு அப்போதே பிடிக்கப்பட்ட புத்தம்புது மீன்கள் (Fresh Fish) நன்றாகப் பிடிக்கும். ஓய்வே இல்லாமல் பல நாள் பிடித்ததன் விளைவாகக் கரையோரங்களில் அந்த மீன்கள் கிடைப்பது அரிதாகி நாளாக நாளாக நடுக்கடல் வரை அதிக தூரம் சென்று அம்மீன்களைப் பிடித்து வந்தார்கள். அந்தக் காலதாமதத்தால் மீன் "புத்தம்புதிது" என்ற தன்மையை இழக்க, அவர்களால் அதை சுவைத்துச் சாப்பிட முடியவில்லை. எனவே கப்பலுக்குள் கடலைப்புகுத்தி அதாவது பெரிய பெரிய நீர்த்தொட்டிகளைக் கப்பலில் வைத்து நடுக்கடலுக்குள் சென்று மீன்களைப் பிடித்து உயிருடனே உடனே அந்தத் தொட்டிகளில் போட்டுக்கொண்டு வந்து விற்பனை செய்தார்கள். சுவை சற்று நன்றாக இருந்தது. ஆனால் பழைய சுவை வரவில்லை. நல்ல ஆராய்ச்சியாளர்களான ஜப்பானியர்கள் இதற்குரிய காரணத்தை ஆராய்ந்தார்கள். பல நாள் ஆய்வுக்குப்பின் கரையோரத்தில் இயற்கையாகப் பிடிக்கும் மீன்களின் உடல்வாகு கப்பல் நீர்த்தொட்டியில் வரும் மீன்களுக்கு இல்லாதிருப்பது தெரியவந்தது. ஏனென்று ஆராய்ந்தபோது அதற்கு உடற்பயிற்சி தொட்டி நீரில் நீந்தும்போது தேவையில்லாததும் தெரியவந்தது. உணவுக்காக அலைந்து திரிந்தால் ஏற்படும் உடல் வனப்புடன் உயிருக்கும் பயந்து அலைந்தால் வனப்புக்கூடி சுவையும் அதிகரிக்கும் எனக் கண்டார்கள். உடனே மீன் விழுங்கி என்ற ஒருவகை ஷார்க் உயிரினங்களை அதே ஆழ்கடலிலிருந்து பிடித்து கப்பல் தொட்டித் தண்ணீரில் இட்டு அதே தொட்டியில் மீன்களையும் இட்டார்கள். உயிருக்குப் பயந்த மீன்கள் வட்டமடிக்க அது உடற்பயிற்சியாகி வனப்புயர்ந்து சுவை கிட்டியது.

அதைப்போல நாமும் வாழ்வில் உய்திபெறத்தான் அரக்கர்களையும், அசுரர்களையும், முரண்பாடானவர்களையும் படைத்துள்ளார் என்று கொள்ளவேண்டும். நமது சமயசாரியார்கள் கூட பல இடங்களில் நகைச்சுவையாக, 'சுவாமிகூட முரண்பாடாக பாம்பையும், மதியையும் தலையில் வைத்துள்ளார்; மங்கையையும் கங்கையையும் வைத்துள்ளார்' என்று பாடியுள்ளார்கள். ஒரு கெட்டது இருந்தால், நல்லது கவனமாக முன்னேறும் என்ற கோட்பாட்டையும் வகுத்துள்ளார்.

நாகத்தை நங்கையஞ்ச நங்கையை மஞ்ஞையென்று
வேகத்தைத் தவிர நாகம் வேழத்தினுரிவை போர்த்து
பாகத்தி னிமிர்தல் செய்யாத்திங்களை மின்னென்றஞ்சி
ஆகத்திற் கிடந்த நாகமடங்குமா ரூரனார்க்கே. **4–53–2**

பாம்பு, நங்கை, திங்கள் மூன்றையும் சிவபிரான் அணிந்திருத்தலைக் கருதிய கற்பனை இது. பாம்பினை அஞ்சினாள் கங்கை நங்கை. அந்நங்கையை மயிலென்று கருதி அஞ்சிற்று பாம்பு. பாம்பு தன்னை விழுங்குமென்று அஞ்சிய திங்கள், யானைத் தோல் போர்வைக்குள் ஒளித்துக்கொண்டு, நிமிர்ந்து பார்த்தலும் செய்யாதிருந்தது. திங்களொளியை மின்னலென்று கருதி, நாகம் அஞ்சி ஒடுங்கியது என்ற பொருளையறிந்து மகிழலாம்.

இருபத்தொன்றாம் நூற்றாண்டில் மானுடப்பிறப்பெடுத்துள்ள நமக்கெல்லாம் திருவருளைப் பெறக் கோயில் தொண்டுநெறிகளும், பூசனைகளும் தான் உகந்த வழி. எல்லா யுகங்களிலும், எல்லா நூற்றாண்டுகளிலும் ஒரே வழியாக முத்திப் பாதையை இறைவன் வகுப்பதில்லை. சரியை, கிரியை, யோக நெறிகள் மாறிக் கொண்டேயிருக்கும். ஆனால் ஞானநெறி மாறாது. சிறுத்தொண்ட நாயனாருக்கு மகவை அரியும் வன்தொண்டையாற்றச் செய்து முத்தி அளித்தார். அவர் ஒரு படைத்தளபதி. எனவே ஒரு உயிரைப் பலியாக்கும் துணிவும், செயல்வீரமும் அவருக்கிருந்தன. ஆனால் முருகநாயனாருக்கு மெல்லிய மலர்த்தொண்டைக் கொடுத்து மென்தொண்டு நெறியில் வீடுபேறளித்தார். 710 கோடி மானுட வர்க்கத்தையும் 6 அடிக்குள் 710 கோடி வகையாகப் படைத்துள்ள இறைவனுக்கா தெரியாது, யாருக்கு எப்படி முத்தி என்பது? இந்த நூற்றாண்டில் நமக்குப் பூசனைகளும், கோயில் திருப்பணிகளும் நிச்சயமாக நம்மை ஞானநெறிக்கு இட்டுச் செல்லும். எனவே, ஒரு சிவாலயத்தைத் தத்து எடுத்துக்கொண்டு வாழ்நாள் முழுவதும் திருஞானசம்பந்தர் எப்படி தமிழகத்தின் எந்தக் கோயிலுக்குச் சென்றாலும் சீர்காழியை மறக்காமல் பாடினாரோ, அப்படி அந்தக் கோயில்தொண்டின் பகுதிகளான உழவாரம், பூசை, பெருந்திரு விழாக்களில் கலந்து கொள்வதுடன், உலகம் முழுவதையும் "ஞாலம் நின்புகழே மிக வேண்டும் தென்ஆலவாயில் உறையும் எம் ஆதியே" என்ற திருஞானசம்பந்தரின் வாக்கைத் தாரக மந்திரமாகக் கொண்டு உய்ந்து வீடுபேறு அடைவோமாக.

# தொடர்ச்சி

தருமை ஆதீனப் புலவர், சித்தாந்தரத்நாகரம், மதுரகவி, வித்துவான்
**திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்**

*"துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே*
*அஞ்செழுத்து ஓதின் நாளும் அரனடிக்கு அன்பதாகும்*
*வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா அமணர் தந்த*
*நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி அடிகளாரே"* 4-70-5

**நா**ன்காம் திருமுறையில் வரும் இப்பாடல் அப்பர் சுவாமிகளால் நனிபள்ளியில் பாடப்பட்டது. மயிலாடுதுறை அருகில் உள்ளது. திருஞானசம்பந்தரின் தாயார் அவதாரத்தலம். திருஞானசம்பந்தர் தம் தகப்பனார் தோள்(பியன்) மீது இருந்துகொண்டு 'காரைகள் கூகை முல்லை' என்ற பதிகம் பாடியதனால் பாலை நிலம் நெய்தல் நிலமான தலம். யானை வலம் வரும் அளவு மிகப் பெரிய கருவறை. இப்பாடலில் வரும் "தொடர்ச்சி" என்ற சொல் முக்கியமானது. இச்சொல்லைப் பற்றிப் பல விவாதங்களும், கட்டுரைகளும் அக்காலத்திலேயே வெளிவந்ததாக, மூதறிஞர்கள் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறோம். அவ்வகையில், அதைப்பற்றிக் கிடைத்த கட்டுரையாக **1965–**ஆம் ஆண்டு வெளிவந்த சைவ சித்தாந்த மகா சமாஜ வைரவிழா மலரிலிருந்து எடுக்கப்பட்டதனை இந்நூலில் பதிப்பிக்கிறோம்.

தொடர்ச்சி என்பது (தொடர்+சி) தொடர்தல் என்னும் தொழிலைக் குறிக்கும் பெயர்ச்சொல். படர்ச்சி, அடர்ச்சி என்ப போல்வது இது. 'அறத்தின் திரியாப் படர்ச்சி வழிபாடு' என்பதில் படர்ச்சி என்னும் சொல் படர்தல் என்னும் தொழிலைக் குறித்தல் அறிந்ததே. அவ்வாறே தொடர்தலைக் குறிப்பது தொடர்ச்சி. **இங்கு தொடர்தலாகிய தொழிலையும், அத்தொழிலைச் செய்யும் முதலையும் குறித்தே இக்கட்டுரை எழுதப்படுகின்றது.**

உயிர்கள் முதன்முதலாகப் பெற்றுள்ளது ஆணவத்தொடர்ச்சி, அடுத்தது மாயைத் தொடர்ச்சி, அதனொடு வினைத்தொடர்ச்சி. இவை காரணத்தொடர்ச்சி. இவற்றின் காரியத் தொடர்ச்சிக்குக் கணக்கில்லை. இவற்றுள்ளும் ஆணவத் தொடர்ச்சியே ஏனைத் தொடர்ச்சிகளுக்கும் காரணம். மாயாகாரியங்கள் இல்லையேல், வினை நிகழ்ச்சியே இல்லை. வினைக்கும் பற்றுக்கோடு மாயை என்னும் உண்மையை இதனால் அறியலாம். தொடர்ச்சியைப் பற்று எனலும் பொருந்தும். உள்ளம், உரை, உடல் மூன்றும் தொடரின் தொடர்ச்சி, பற்றின் பற்று. அறிவின் தொடர்ச்சி முடிவானது. ஆன்மாவும், கடவுளும் அறிவுடைய பொருள்கள். அவை அறிவால் தொடர்தற்கு ஏற்புடையவை. ''பொன்னம்பலத் தாடும் சொக்கனே எவர்க்கும் தொடர்வரியத் தொண்டனேன் தொடருமா தொடரே" (திருவிசைப்பா : 9) என்பதில் தொடர்தல்

இவ்விரண்டற்கும் உரித்தாதல் உணரலாம். 'தொடர் வரியாயை' என்றதில், உடல், உரை, உள்ளம், உணர்வு நான்கனாலும் தொடர்வதற்கு அருமையை உணர்த்தினார். "பாச ஞானத்தாலும், பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதி ஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத நீழற் கீழ் நில்" என்னும் சிவாகம வசனத்தால், பாசஞானம், பசுஞானம் ஆகிய ஈருணர்வும் தொடர்வரிதாதல் விளங்கும். பதிஞானமே தொடர்தற்குக் கருவி என்பதும் உறுதியாயிற்று. **ஆகவே, கடவுளைத் தொடரக் கடவுளுணர்வே உயிர்கட்கும் கருவி. மற்றெல்லாக் கருவிகளும் அக்கருவியைப் பெறத் துணையாதல் வேண்டும்.**

கடவுளைத் தொடர்தற்கு அவனுணர்வு கருவி. அவனுணர்வைத் தொடர்தற்குக் கருவி, பொருள், காட்டு, காலம் முதலியனவும், குருபதேசமும் மரபு பிறழாமல் வாய்த்தல் வேண்டும். **(சித்தியார் 234–5).** அவை வாய்த்தல் இன்றி, புகழ் வரவும், பொருள் வரவும் பற்றிய 'யான்', 'எனது' என்னும் செருக்கால் அழியும் பொருள்களுள் ஒவ்வொன்றையோ, பலவற்றையோ தொடர்ச்சியாகக் கொண்டு, சிற்றின்பமும் பெருந்துன்பமும் அடைதல் அறிவிற்கு ஏற்றதன்று. அத்தொடர்ச்சி எல்லாம் கடவுளைக் காட்டா. "நாட்டற்று, நாடும் பொருள் அனைத்தும் நானாவிதமாகத், தேடும் இடம் அன்று சிவம்" என்பதால் அவ்வுண்மை புலப்படும். உணர்வின் தொடர்ச்சி ஏதாவதொரு நிலையில் முடிவடையும். ஆனால், கடவுளின் நிலையோ உணர்வினாலும், உணர இயலாத ஆழமும், அகலமும் ஒருங்கே உடையது. "ஓட்டற்று நின்ற உணர்வானது பதிமுட்டித் தேட்டற்று நின்ற இடம் சிவம் ஆம்" என்றதும் அதையே. இங்கு, ஓட்டு, தேட்டு, நாட்டு என்ற மூன்றையும் ஓட்டம், தேட்டம், நாட்டம் என்று கொள்ளல் வேண்டும். ஓட்டம் அற்று நின்ற உணர்வானது பதியை முட்டித் தேட்டம் அற்று தேடுதல் வேண்டாதது. பல்வேறு தொடர்ச்சிகளையும் போக்கும் தொடர்ச்சியே 'பற்றை அறுப்பதோர் பற்று', 'பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்று' எனப் பெற்றது. அத்தொடர்ச்சி கைவர, பற்றின்மையைப் பற்றுதல் வேண்டும். "ஏ சிவ ஞானி! "இருமைப் பயனை விரும்புவார்க்கு அவற்றை நுகர உடல் முதலியவற்றைக் கொடு! எனக்கு அவை வேண்டா". பற்றில்லாமையிற் பற்றுண்டாக்கு" என்று வேண்டும் முறை சிவப்பிரகாசர் திருவாக்காலும் அறியப்படும்.

> "இருந்து மேனியோடு இம்மை மறுமையில்
> பொருந்து போகம் புரி, சிவஞானி நீ,
> விரும்புவார்கட்கு, எனக்கு அருள் மெய் விழைந்து
> அருந்தும் ஆசை யிலாமையில் ஆசையே"

– சிவஞான பாலைய சுவாமிகள் கலம்பகம் – **16**

இங்கு, பொய்யா மொழிகளும் நினைவில் முன் நிற்கும். 'பற்றற்றான் பற்றினைப் பற்றுவிடற்குப் பற்றுக'. அது வாய்த்தவர்க்கு வேறு தொடர்ச்சியும் வேண்டுமோ? எல்லாத்

தொடர்ச்சிக்கும் இன்றியமையாத உடற்றொடற்சியே ஒழிந்தால், பிற தொடர்ச்சிகள் எவ்வாறு ஏற்படும்? "மற்றும் தொடர்ப்பாடு எவன் கொல்?", "பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு, உடம்பும் மிகை".

பற்று அற்றான் பற்றும் தொடர்ச்சியாகும்; பற்றற்றானும் தொடர்ச்சி யாவான். உலகியலில் வைப்பாட்டியைத் 'தொடர்ச்சி' என்று வழங்குவது இன்றும் உண்டு. அவளும் அவனும் ஒருவருக்கொருவர் 'தொடர்ச்சி' ஆவர். அவ்வாறே ஆன்மாவும் கடவுளும் 'தொடர்ச்சி' ஆவர். 'உலப்பிலா ஆநந்தம் ஆய தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த செல்வம்' கடவுள். அதனால், அவ்வாறு புறம் புறம் திரிதலாகிய தொடர்ச்சி கடவுட்கு உரியதாய், அப்பெயர் எய்தும், 'தொண்டனேன் தொடருமா தொடரே' என்றதால், ஆன்மாவின் தொடர்ச்சியாகக் கொண்டதால் கடவுட்கு யாது பயன்?. கடவுளைத் தொடர்ச்சியாகக் கொண்ட ஆன்மாவிற்கே 'அந்தமில்லா ஆநந்தம்' ஆம். ஆகவே, பற்று அறுப்பதோர் பற்று, தொடர்ச்சி ஆகிய கடவுளைத் தொடர்ந்து பற்றை அறுத்தல் ஆன்மாவின் தலையாய கடன். பற்றறுத்தல் என்றால் என்ன? பாசம், பாசஞானம், பசுஞானம், பசுத்துவம் ஆகிய நான்கையும் நீக்குதலே ஆகும். "பற்றற பற்றற என்பதெல்லாம் பசுபாசம்விடல், மற்று ஒரு பற்றறல் இல்லை என்றால்... சிற்றம்பல நாடி... தபோ தனரே ஒழிந்தே இரும் உம்மையும்" என்னும் உபதேசத்தை இங்கு உணர்தல் நன்று.

எப்பொருளையும் பற்றலாகாது என்று அறிவானது அசைவற இருக்க முயன்றால், அவ்வறிவொடு மனம் விரைந்து எழும், காரணம் யாது? பழக்கமே ஆகும். அறிவு மனத்தைப் பிடிப்பது பிறப்பு. விடுப்பது இறப்பு. மனத்தை, 'நிறுத்தி ஒடுக்குதலே முத்தி', அதை 'விடயத்து ஓட விடுக்குதலே பந்தம்' என்றலும் உண்டு. ஒடுக்குதல் ஆவது, அறிவு மனத்தோடு கூடாதிருப்பதே. ஒடுக்க ஒடுக்க விரைந்து எழுவது மனத்தியல்பு. அதனொடு கூடாமையே அதற்கும் மேலான உபாயம். கூடாத அறிவினை மனம் ஒன்றும் செய்யாது. நம்மனம் எத்தனையோ பொருள்களோடு தொடர்ச்சி இல்லாமல் இருக்கின்றது. அதற்கு என்ன காரணம்? நம் அறிவு அம்மனத்தோடு அப்பொருள்களின் திறத்தில் கூடாமையே ஆகும்.

எல்லாப் பொருள்களையும் தேடி அழிக்காமல் காத்துக் கொண்டிருந்த ஒருவன், உடலை விடுங்காலத்தில், ஓர் இமைப் பொழுது அவ்வுடலிலே தங்கியிருக்க வேண்டி, அப்பொருளெல்லாவற்றையும் ஈடாகக் கொடுத்து, ஆயுளைப் பெறுதல் ஒல்லுமோ, ஒல்லாதன்றோ? அதனால், அத்தொடர்ச்சிகளால் ஏதேனும் பயன் உண்டோ? பயனில்லாத முயற்சி ஏன்? பயனாவதுதானே வேண்டும்? அதை எப்போதும் தொடர முயலவேண்டும். அஃது எளிதில் எய்தாது. அதைத் தொடர்வரே தொண்டர். அவரைத் துக்கம் முதலிய எவையும் தொடரமாட்டா. அவை தொடராமல் தொடர்ந்து காக்கும் கடவுளைவிட்டு மற்றவற்றைத் தொடர்தல் அறிவாகாது. "தொடரும் தொண்டரைத் துக்கம் தொடர்ந்துவந்து அடரும் போது அரனாய் அருள் செய்பவர்"

கடவுளே. 'தொடரும்' என்பதற்குச் செயப்படுபொருள் கடவுள். வினைமுதல் – தொண்டர். 'அரன்' என்பது இங்கு அழிப்பவன் என்ற பொருளது. துக்கத்தைத் தொடராமல் அழிப்பவனாகி என்றதாம்.

மருளவாவும் மனம் மயக்கத்தை விளைக்கும் பொருளவாவுக்கும் அதுவே காரணம். அருளவாப் பொருளவாவைப் போக்கும். அருளவாவை நிலைபெறச் செய்வதற்குச் சிவநாமத்தை இடைவிடாது ஓதி, நாவிற்கும், மனத்திற்கும், அறிவிற்கும், உணர்விற்கும் பழக்கம் முற்றுறச் செய்தல்வேண்டும். அதுவும் பழக்கம் தவிரப் பழகுவதாகும். சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி யெம்மானைப் பிடித்துத் திரிந்து, தொடர்ச்சி அறாமல் என்னைப் பலநாள் அழைத்துவரும் தொடர்ச்சியை ஒழியவிடாமல் கடை (வரையில் விடா)ப்பிடி, உடையவனாக இருக்கின்றான்" என்று முன்நின்று திருவருள் புரிவார் கடவுள்.

இராப்பகல் முழுதும் இடைவிடாமல், சிவநாம ஜபம்செய்து வருதல் நெடுங்காலப் பழக்கத்தால் ஆவதே. அதனால், காலை, பகல், மாலை, நள்ளிரவு ஆகிய நாற்பொழுதில் எப்பொழுதேனும் அரன் நாமத்தையே ஓதிவரும் பழக்கத்தை அடைந்து, பின்னர், எப்போதும், கடவுளாகிய தொடர்ச்சியை மறவாமையால் அமைத்த மனக்கோயிலுள் அவனை இருத்தி வழிபட்டு உய்யலாம்.

## நான்காம் திருமுறைப் பதிகங்கள் - பண்களின் கட்டளைகள் - யாப்பு வகைகள்

நான்காந் திருமுறையில் 113 திருப்பதிகங்கள் உள்ளன. ''வாகீசர் அருந்தமிழின் முந்தாய பல தமிழுக்கு ஒன்றொன்றா மொழிவித்து '' எனத் திருமுறை கண்டபுராணம் கூறும். இதனைக் கூர்ந்து நோக்குங்கால், திருநாவுக்கரசர் அருளிய தேவாரத்துள் பல பண்கள் ஒவ்வொரு கட்டளையே பெற்றிருத்தலும், ஒருசில பண்கள் ஒன்றுக்கு மேற்பட்ட கட்டளைகளைப் பெற்றிருத்தலும் ஒருவாறு உய்த்துணரப்படும்.

### கொல்லி

''நான்காந் திருமுறையில் முதற்பதிகமாக விளங்குவது, ''கூற்றாயினவாறு விலக்ககிலீர்'' என்னும் முதற் குறிப்புடைய கொல்லிப்பண்ணாகும்.

கூற்றாயின வாறு விலக்ககிலீர் கொடுமைபல செய்தன நானறியேன்
தானாதன தான தனத்தனனா தனனாதன தானன தானதனா

என அறுசீரடியால் வருவது இதன் கட்டளையமைப்பாகும்.

கூற்றா யினவா றுவிலக் ககிலீர் கொடுமை பலசெய் தனநா னறியேன்
தானா தனனா தனனா தனனா தனனா தனனா தனனா தனனா

என இதனையே எண் சீரடியாகப் பகுத்திசைத்தலும் உண்டு.

### காந்தாரம்

இத்திருமுறையில் 2 முதல் 7 வரையுள்ள பதிகங்கள் காந்தாரப் பண்ணுக்கு உரியன. இப்பதிகங்களில் அமைந்த யாப்பு விகற்பங்கள் மூன்றாகும்.

### யாப்பு - 1

சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த்திங்கட் சூளா மணியும்
தானன தானன தானா தனதானா தானா தனனா

எனவரும் ''தானன'' என்பது தனதன, தனான என ஆதலும், ''தானா'' என்பது தனனா ஆதலும் ''தனானா'' தானா ஆதலும் அமையும் 2 முதல் 4 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. 2-ஆம் பதிகத்தில்,

அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை

என்ற அடியும், 3-ஆம் பதிகத்தில்,

''கண்டே னவர்திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன்'' என்ற அடியும் பாடல் தோறும் நாலடிமேல் ஓரடி வைப்பாக அமைந்துள்ளன.

### யாப்பு - 2

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள்தொழாதே

தானனா தானான தானனா தானா தானா

எனவரும், ''தானனா'' என்பது தானான, தனதான, தனதனன என ஆதலும் ''தானா'' தனனா ஆதலும் அமையும். காய்ச்சீர் நான்கு பெற்ற தரவு கொச்சகக் கலிப்பாவின் பின் அடிதோறும் இரண்டு மாச்சீர் பெற்று வருவது இவ் யாப்பாகும். 5, 6-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
தனதானா தானானா தனதானா தனதானா

எனக் காய்ச்சீர் நான்கு பெற்று வரும் தரவு கொச்சகம். இம் மூவகையாப்பும் ஓசைத்திறத்தால் ஒரே கட்டளையாக அடங்கும்.

## பியந்தைக் காந்தாரம்

இதன் கண் எட்டாவது பதிகம் பியந்தைக் காந்தாரமாகும்.

சிவனெனு மோசையல்லா தறையோ வுலகிற் றிருநின்ற செம்மை யுளதே
தனதன தானதான தனனா தனனா தனதான தான தனனா

எனவரும், இப்பதிகம் ஆளுடைய பிள்ளையார் அருளிய இரண்டாம் திருமுறையில் 84 முதல் 86 வரையுள்ள பியந்தைக் காந்தாரப் பதிகங்களுக்குரிய கட்டளையமைப்பினை யுடையதாகும். ''தன தன'' தானன எனவும், ''தான'' தனன எனவும், ''தனனா தனனா'' தன தான தான எனவும் வருதல் உண்டு.

## திருவங்கமாலை

ஒன்பதாம் பதிகம் சாதாரிப்பண்ணுக்கு உரியதாகும்.

தலையே நீவணங்காய் - தலை – மாலை தலைக் கணிந்து
தனனா தானதான - தன - தான தனா தனனா

தலையா லேபலி தேருந் தலைவனைத் - தலையே நீவணங்காய்
தனனா தானன தான தனாதன - தனனா தானதானா

எனவரும், ஈரடியாக வரும் இப்பதிகப் பாடல்கள் மூன்றாந் திருமுறையில் 56 முதல் 62 வரையுள்ள பஞ்சமப்பதிகங்களின் யாப்பினை முதலடிக்குரிய யாப்பாகவும் முதற்றிரு முறையில் ''பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி'' என்பது முதலாக வரும் பழந்தக்கராகப் பதிகங்களின் முதலாம், மூன்றாம் அடிகளின் அமைப்பினை இரண்டாமடியின் முற்பாதியாகவும், முதலடியின் முற்பாதியாக உள்ள தொடரையே இரண்டாமடியின் பிற்பாதியாகவும் பெற்றன. சிறுவர்களும் எளிதிற் பொருளுணர்ந்து இசையுடன் பாடி மகிழும் நிலையில் அமைந்திருத்தல் இப்பதிகத்தின் தனிச் சிறப்பாகும். எண்வகைப்பட்ட குணங்களையுடைய இறைவனது திருவடியினை வணங்காத தலைகள் தத்தமக்கு உரிய புலனுணர்வினைக் கொள்ளும் ஆற்றலை இழந்த ஐம்பொறிகள் போலச்சிறிதும் பயனில்லாதன என்பார்.

கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

என்றார் தெய்வப்புலவர். காணாத கண், கேளாத செவி முதலியன போல, இறைவனை வணங்காத தலைகளும் பயனில என்பதாம். இவ்வாறு சிறப்புடைய அங்கமாகிய தலைமேல் வைத்துக் கூறினாரேனும், உடலுறுப்புக்கள் என்ற இனம்பற்றி இறைவனை வாழ்த்தாத நா, அவனது பொருள்சேர் புகழுரைகளைக் கேளாத செவிகள் முதலிய ஏனைய அங்கங்களும், அவ்வாறே பயனில என்பதும் குறிப்பினாற் கொள்ளவைத்தார். இக்குறிப்பினை நன்குணர்ந்து மக்கள் எல்லோரும் தம்முடைய தலை, கண், செவி, மூக்கு, வாய், நெஞ்சு, கைகள், யாக்கை, கால்கள் ஆகிய அங்கங்கள் யாவும் இறைவழிபாட்டில் எளிதில் ஈடுபட்டு இன்புறும் இயல்பினவாகத் திருந்திப் பொறிவாயில் ஐந்தவித்தான்

அருளிய ஒழுக்க நெறியில் ஒழுகும் வண்ணம் திருநாவுக்கரசரால் அருளிச் செய்யப்பெற்றதே. ''திரு அங்கமாலை'' என்னும் இத்திருப்பதிகமாகும். கடவுள் வழிபாட்டில் ஈடுபடுதற்கேற்ற தகுதி பெற்றமையால் திருத்தகவினவாக விளங்கும் தலை, கண் முதலிய அங்கங்களின் சிறப்பியல்பினை முடிமுதல் அடிவரை வரிசையாக விரித்துரைத்தல் பற்றி இப்பதிகம் திருஅங்கமாலையென்னும் பெயர்த்தாயிற்று, அங்கம்– உறுப்பு, மாலை - இயல்பு, வரிசை.

### காந்தார பஞ்சமம்

இத்திருமுறையில் 10, 11 என்னும் எண்ணுள்ள பதிகங்கள் காந்தாரபஞ்சமம் என்ற பண்ணில் அமைந்தன.

முளைக்கதிர் இளம்பிறை மூழ்க வெள்ளநீர்
தனதன தனதன தான தானனா

என இவ்வாறு விளம், விளம், மா, விளம் என நாற்சீரடிகளால் நடப்பது இக்கட்டளையாகும். 10, 11-ஆம் பதிகங்கள் ஒரேயாப்பின.

### பழந்தக்கராகம்

12, 13 ஆம் பதிகங்கள் பழந்தக்கராகம் என்ற பண்ணுக்கு உரியன.

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
தானானா தனதானா தனதனனா தானானா

எனக் காய்ச்சீர் நான்கு கொண்ட அடிகளால் ஆகிய தரவு சொச்சகமாக அமைந்தன. அத்திருப்பதிகங்கள் இவற்றின் கட்டளையடியினை பதினைந்தெழுத்தால் இயன்றதாகக் கொள்வர் யாழ்நூலார்.

### பழம் பஞ்சுரம்

14, 15-ஆம் பதிகங்கள் பழம் பஞ்சுரம் என்ற பண்ணுக்கு உரியன. இப்பண்ணமைந்த பதிகங்களில் இரண்டு யாப்பு வடிவங்கள் உள்ளன.

### யாப்பு - 1

பெருவரை யொன்று சுற்றி யரவங்கை விட்ட
தனதன தான தான தனதான தான

இமையோ ரிரிந்து பயமாய்
தனனா தனன தனனா

எனவரும் பாடலானது, இத்திருமுறையில் முன்வந்த ''சிவனெனுமோசை'' என்ற பியந்தைக் காந்தாரப் பதிகத்தின் யாப்பினை ஒத்தமைந்தது. இத்திருப்பதிகத்தின் யாப்புக்கும் 14-ஆம் பதிகமாகிய இது சிவனது அநாதி முறைமையான பழைய வரலாறுகள் பத்தினையும் விரித்துரைத்துப் போற்றுவதாதலின் ''தசபுராணம்'' என்னும் பெயருடையதாயிற்று.

யாப்பு - 2

பற்றற் றார்சேர் பழம்பதியைப் பாசூர் நிலாய பவளத்தை
தானா தானா தனதனனா தானா தனான தனதானா

எனவரும், இது மூன்றாந் திருமுறையில் 41-ஆம் எண்ணுள்ள ''நிறைவெண்டிங்கள்'' என்னும் கொல்லிக் கௌவாணப் பதிகயாப்பினைப் பெரிதும் ஒத்திருத்தல் காணலாம். 15-ஆம் பதிகம் இறைவனது திருவருட் பெருமையினை யெண்ணி நெஞ்சம் நெக்குருகிப் போற்றி வழிபடும் மெய்யன்பர்களது பண்டைப் பிறப்பின் தீவினையாகிய பாவம் நீங்குதலைக் குறிக்கொண்டு பாடப்பெற்றதாதலின் ''பாவநாசத் திருப்பதிகம்'' என்னும் பெயருடையதாயிற்று. இதன் இறுதித் திருப்பாடலில் ''எந்தைபெம்மான் என்னெம்மான் என்பார் பாவம் நாசமே'' என இத்திருப்பதிக வழிநின்று இறைவனைப் பரவிப் போற்றுவோர் அடையும் பயன் அறிவுறுத்தப் பெற்றிருத்தல் காணலாம்.

## இந்தளம்

16 முதல் 18 வரையுள்ள பதிகங்கள் மூன்றும் இந்தளப் பண்ணில் அமைந்தன.

செய்யர்வெண் ணூலர் கருமான் மறிதுள்ளும்
தேமாங்காய் தேமா புளிமா புளிமாங்காய்

என வெண்டளை பிழையாது பன்னிரண்டெழுத்துக்களாலாய நாற்சீரடியாக வருதல் இப்பதிகச் செய்யுளின் கட்டளையடியாகும். பாடலின் ஈற்றடி நேரசை முதலாகத் தொடங்கின.

ஒன்றுகொ லாமவர் ஊர்வது தானே

என ஓரெழுத்துக் குறைந்து பதினோரெழுத்துக்களாலும், நிரையசை முதலாகத் தொடங்கின.

இரண்டுகொ லாமவர் எய்தின தாமே

எனப் பன்னிரண்டெழுத்துக்களாலும் வரும். மேற்குறித்த எழுத்தளவும் வெண்டளையும் பிழையாது நிற்க, மாச்சீர் விளச்சீர் காய்ச்சீர்கள் விரவிவருதல் இவ்யாப்பின் அமைப்பாகும். 16-ம் பதிகத்தின் மூன்றாமடியினை

மெய்யர்மெய்ந் நின்றவர்க் கல்லா தவர்க்கென்றும்
தேமாங்காய் கூவிளம் தேமா புளிமாங்காய்

எனப் பிரித்திசைத்து வெண்டளை பிழையாமை கண்டுகொள்க.

எத்தீ புகினும் எமக்கொரு தீதிலை
தெத்தே யெனமுரன் றெம்முன் உழிதர்வர்
முத்தீ யனையதொர் மூவிலை வேல்பிடித்
தத்தீநி றத்தார் அரனெறி யாரே.

என்பது 17-ம் பதிகத்தின் முதற்பாடல், இதன் முதலடியில் ''எத்தீ புகினும்'' என்ற பாடத்திற்கு வேறாக ''எத்திசைபுகினும்'' என்ற பாடம் சில பதிப்புக்களில் காணப்படுகிறது. ''எத்திசை புகினும்'' என வரும் இருசீர்களும் ''கூவிளம் புளிமா'' என நின்று நிரையொன்றாசிரியத் தளையாய் வெண்டளை

பிழைத்தலால் ''எத்தீபுகினும்'' என்ற பாடமே இப்பதிகத்தின் யாப்பமைதிக்கு ஏற்புடையதென்பது நன்கு துணியப்படும்.

திருமூலா் அருளிய திருமந்திர மாலையிலுள்ள திருப்பாடல்கள்யாவும் மேற்குறித்த இந்தளப் பதிகங்களின் யாப்பின் வண்ணம் அமைந்தனவாகும்.

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தானைந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே

எனவரும் திருமந்திரப் பனுவல், நாற்சீரடி நான்கினால் இயன்று முதல் மூன்றடிகளிலும் அடியொன்றற்குப் பன்னிரண்டெழுத்துக்களும், ஈற்றடி நேரசையினை முதலாகக் கொண்டு தொடங்கியதாயின் பதினோரெழுத்தும் பெற்று வெண்டளைபிழையாது வந்தமை காணலாம். எனவே திருமூலநாயனார் அருளிய திருமந்திரயாப்பு, திருநாவுக்கரசர் அருளிய இந்தளப் பதிகங்களின் யாப்புக்கு மூல இலக்கியமாக அமைந்தது எனக்கொள்ளுதல் பொருந்தும்.

## சீகாமரம்

19, 20-ஆம் பதிகங்கள் சீகாமரப்பண்ணுக்கு உரியன. இவற்றுள்

சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழானை நான்கண்ட தாரூரே

எனவரும் 19-ஆம் திருப்பதிகம், வெண்பாக்களிற் பயிலுதற்குரிய மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர் ஆகிய சீர்களைப் பெற்று வெண்டளை தழுவி நடக்கும் கொச்சகக் கலிப்பா யாப்பில் அமைந்ததாகும்.

ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமேல் நின்றாயால்
வானோர் வணங்க மறைமேன் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின் றியேநிற்பாய் (வேட்டுவவரி)

என்பது முதலாகச் சிலப்பதிகாரத்தில் வரும் வரிப்பாடல்கள் மேற்குறித்த வண்ணம் வெண்டளை தழுவி நடக்கும் கொச்சகக் கலிப்பாவுக்குரிய இலக்கியமாகத் திகழ்தல் காணலாம். இப்பாடல்களின் ஈற்றுச்சீர் இரண்டினை நீக்கிவிட்டு, அவ்விடத்து ஓரசைச்சீர் ஒன்றினைப் பெய்து வாசித்தால் இக் கொச்சகக் கலிப்பாக்கள் வெண்பாவின் வடிவினைப் பெறுதல் காணலாம்.

ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழானை நான் கண்ட தாரூரே.

என மேற்காட்டிய பாடலில் வெண்பாவின் உருவம் புலனாதல் காண்க.

20-ஆம் பதிகம்,

காண்ட லேகருத் தாய்நி னைந்திருந் தேன்மனம் புகுந் தாய்கழலடி
தான தானன தான தானன தான தானன தானனதன

பூண்டுகொண் டொழிந்தேன் - புறம் - போயினா லறையோ
தானனா தனனா தன தானனா தனனா

என முன்னீரடிகளைப் போன்று பின்னீரடிகளும் வருவன. இரண்டாந் திருமுறையில் 49 முதல் 58 வரையுள்ள சீகாமரப் பதிகங்களின் யாப்பினை ஒத்தமைந்தது இத்திருப்பதிகமாகும்.

## குறிஞ்சி

21-ஆம் பதிகம் குறிஞ்சிப் பண்ணுக்கு உரியது

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
தானா தனனா தனனா தனன தனதானா

எனவருதல், இதன் கட்டளையடியாகும். ''தானா''''தனான''''தனனா''''தானன'' என்பன ஒத்த அளவினவாய் வருதல் பொருந்தும் முதற்றிருமுறையில் குறிஞ்சி யென்ற பண்ணுக்கு உரியனவாய் 97 முதல் 102 வரையுள்ள பதிகங்களை யொத்த யாப்பியல்புடையது இத்திருப்பதிகமாகும்.

## திருநேரிசை

இத்திருமுறையில் 22 முதல் 79 முடியவுள்ள பதிகங்கள்

''விளம், மா, மா, விளம், மா, மா

என்று அறுசீரடி யாப்பாகவரும் திருநேரிசைப் பதிகங்களாகும்.

## திருவிருத்தம்

80 முதல் 113 வரையுள்ள பதிகங்கள் கட்டளைக் கலித்துறை யாப்பாகிய திரு விருத்தப்பதிகங்கள். இவ்விருவகைத் திருப்பதிகங்களையும் கொல்லிப்பண்ணின் இருவேறு கட்டளைகளாகக் கொள்வர். ''நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டில் இரண்டு'' எனத் திருமுறைகண்ட புராணம் கூறுதலால் திருநேரிசைப் பதிகங்களை நேரிசைக் கொல்லியென்றும் திருவிருத்தப் பதிகங்களை விருத்தக் கொல்லியென்றும் வழங்கும் வழக்குண்மை இனிது விளங்கும். இத்திருமுறையின் முதற்கண் கொல்லிப் பண்ணுக்குரியதாகக் குறிக்கப்பெற்ற ''கூற்றாயின'' என்ற திருப்பதிகம் ''வாகீசர் அருந்தமிழின் முந்தாய பல தமிழுக்கு ஒன்றொன்றா மொழிவித்து'' என்றபடி தனியே ஒரு கட்டளையாகக் கொள்ளப் பெற்றமையாலும் நேரிசையின் பின்னுள்ள திருவிருத்தப் பதிகங்களைத் திருமுறைகண்ட புராணம் குறிப்பிடாது விட்டமையாலும் ''நேரிசையாங் கொல்லிக்கு இரண்டு'' என்னும் தொகையுள் நேரிசை ஒரு கட்டளையாகவும் திருவிருத்தம் ஒரு கட்டளையாகவும் அடங்கினமை உய்த்துணரப்படும்.

## நான்காம் திருமுறை
## முதல் பதிகம் “கூற்றாயினவாறு” எழுந்த சூழலும், வரலாறும்

திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் சைவ வேளாளர் குலத்தில், குறுக்கையர் குடியில் புகழனார்க்கும் மாதினியார்க்கும் தோன்றியவர். திலகவதியார்க்குப் பின் வந்தவர், மருள் நீக்கியார் என்ற பெயரினர். கலை பலவும் நிரம்பக் கற்றவர். இருவரும் இளம் வயதில் பெற்றோரை இழந்தனர்.

திலகவதியாரை மணக்க இசைந்த கலிப்பகையார் சோழ மன்னன் படைத்தலைவர். அவர் சென்று வடநாட்டு மன்னரொடு நெடுநாள் போர் புரிந்து துறக்கம் உற்றார். அதை அறிந்த திலகவதியார் தாமும் இறக்கத் துணிந்தபோது மருள்நீக்கியார் விழுந்து வணங்கி "அன்னையும் அத்தனும் அகன்ற பின்னையும், நான் உம்மை வணங்கப் பெறுதலினால் உயிர் தரித்தேன்; இனி என்னைத் தனியாகக் கைவிட்டு ஏகுவீர் எனில், யானும் உமக்கு முன்னம் உயிர் நீப்பன்” என்று மொழிந்து இடருள் முழுகினார். திலகவதியாரும் தம்பியார் உளராக வேண்டும் என வைத்த தயா, இறப்பை விலக்க உயிர்தாங்கி மனைத்தவம் புரிந்திருந்தார். சிவபெருமான் திருவடிக்கண் அன்புபூண்டு, திருவருள் நெறி ஒழுகி வாழ்ந்தார்.

மருள்நீக்கியார் சமண சமய நூல்களைக் கற்றார். அச்சமயத்தைச் சார்ந்தார். சமணர்க்குத் தலைவராய்த் தருமசேனர் எனப் புகழ்பெற்று விளங்கினார்.

திருவதிகையில் திருத்தொண்டு புரிந்துறையும் திலகவதியார், தம் தம்பியார் பரசமயமான படுகுழியில் வீழ்ந்து கெடுவதை ஆற்றாராய், திருவீரட்டானேசுவரரை நாள்தோறும் வேண்டி, அக்குழியினின்றும் சைவ சமயப் பேரின்பக் கரையில் ஏற்றியருளப் போற்றினார். "சூலை நோய் தந்து ஆட்கொள்வோம்; கவலாதே” என்று கனவில் அருளினார் அதிகைப்பிரானார். அவ்வாறே அவர்க்குச் சூலைநோய் உண்டாயிற்று. சமணரும், மந்திரம் முதலியவற்றால் நீக்க முயன்றனர். நோய் மேன்மேல் மிகுந்ததே அன்றிக் குறைந்திலது. மிக வருந்தித் தமக்கையார்க்குச் சொல்லி அழைத்துவர ஆள்விட்டார். அவர், அங்கு வாரேம் என்றார். மருள்நீக்கியாரே, தமக்கையார்பால் ஏவலன் துணைக்கொண்டு மீண்டுவந்தார். கண்டார். வணங்கினார்.

திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்து ஏற்று, உருஆர அணிந்து உற்ற இடத்து உய்யும் நெறி தரும் அவர், முன் செல்லப் பின்சென்று, திருவீரட்டானத்திறைவர் பெருங்கோயிலைத் தொழுது வலங்கொண்டு, இறைஞ்சி, நிலமிசை விழுந்தார். தம்பிரான் திருவருளால், தமிழ்மாலைகள் சார்த்தும் உணர்வுற்றார். குருவருள் கிடைக்கப் பெற்றார்.

"கூற்றாயினவாறு விலக்ககிலீர்” எனத் தொடங்கும் இத்திருப்பதிகம் பாடினார். சூலை அகன்றது. திருவருள் பெறத் துணையாயிருந்த சூலைக்குச் செய்யும் நன்றியை நாடினார். சிவபிரான், செந்தமிழின் சொல் வளப் பதிகத் தொடை பாடியதற்குத் திருவுளம் மகிழ்ந்ததால், "நாவுக்கரசு என்னும் பெயர் வழங்குக” என்று வானிலே உடலிலியொலியாக ஒரு வாய்மை எழுந்தது. அந்நாள் முதல், முப்பொறித் தூய்மையொடும் திருப்பணி செய்பவராய், சிவ சின்னம் பூண்டு, தியானம், ஞானம், திருவாசகம், உழவாரம் எல்லாம் கொண்டு கசிந்துருகி வழிபட்டு இன்புற்று இருந்தார்.

பிற சமயத்திலிருந்து மீண்டும் சைவ சமயம் புகுவார்க்கு திருநீற்றை ஐந்தெழுத்தோதி நின்மலன் பேரருள் நினைந்து கொடுத்தலே தீட்சைக்குச் சமமாகும் என்ற கருத்தை நாவரசர் வாழ்வு நிலைநாட்டுகிறது. அவையே அவர்களைத் தூய்மைப்படுத்தி சைவம் புகுவதற்குத் துணை செய்யும் சாதனமாகின்றன.

## நான்காம் திருமுறை
## முதல் பதிகம் - கொல்லி (அற்புதத் திருப்பதிகம்)

### 4.001.01
### முதல் பதிகம்

"கூற்றாயினவாறு" என்று தொடங்குகிறது. கொல்லிப்பண்ணில் அமைந்தது. "கொல்லியாம் பண் உகந்தார் குறுக்கை வீரட்டனாரே" என்பதும் அப்பர் வாக்கு. கூற்று என்பதற்கு இருவகையாகப் பொருள் கொள்ளலாம்.

கூற்று – சொல்

– உடல் உயிர் வேறு செய்யும் கூற்றுவன்
(ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான் மலை உத்தமனே)
உடலையும், உயிரையும் கூறுபடச்செய்வது.

### சொல்

கயிலையில் தாம்கூறிய கூற்று இங்கு இவ்வண்ணம் ஆகிவிட்டதாக நினைந்து பாடுதல்

கூற்று – ஆயின – ஆறு – சொல்லால் விளைந்த – வழிவந்ததாகிய இந்நோய்.

### திருவதிகை

திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கயிலையில் வாகீச முனிவராக விளங்கிய நிலையில், இராவணன் கயிலையைப் பெயர்க்கும் நிகழ்வு நடந்தது. அவன் நிலைகண்டு இரங்கி அவன் தப்பிக்க இறைவன் "சாமகானப் பிரியன்" என்று கூறிவிடுகிறார். பின் இராவணன் சாமகானம் பாடி இறையருள் பெறுகிறான். இவ்விடத்தில் இறைவன் திருவுள்ளம் அறியாது, வாகீசர் இராவணனுக்கு உதவியமையால் அவன் அனுபவிக்க வேண்டிய துன்பத்தை, இவர் அனுபவிக்க நேர்ந்து விட்டது. அதை எண்ணிப் பாடுவதாகவும் கொள்ளலாம்.

"கூற்று" என்பதை, "ஊனுயிர் வேறு செய்யும் சொல்" என்று கொண்டு, "எமன் வந்து நலிய வைக்கும்போது (மரணவேதனையுறும்போது) ஏற்படும் துன்ப அளவிற்கு இப்போதே துன்புறுகிறேன்" என்று பாடுவதாகவும் கொள்ளலாம்.

திருஞானசம்பந்தர், இறைவன் திருவுள்ளம் அறியாது எதனையும் செய்யமாட்டார். "வாது செய்யத் திருவுள்ளமே", "வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே" என்ற வாசகங்களை எப்போதும் நினைக்க வேண்டும்.

திருநாவுக்கரசர் தாம் இறைவன் திருவுள்ளம் அறியாது, இராவணனிடம் கூறிய கூற்றே, கூற்றாக வாட்டுகிறது என பாடுவதாகக் கொள்ளலாம்.

### கொடுமை பல செய்தன நானறியேன்

முற்பிறவியில் இராவணனுக்கு உதவியதும், இப்பிறவியில் சமணசமயம் சார்ந்ததும் அறியாமல் செய்தவை.

இந்நிலையில் இறைவன் என்னை ஏற்றுக்கொண்டார். ஏற்றாய் இனி இரவும் பகலும் பிரியாது தொழுவேன்.

ஏற்றாய் – எருதின்மேல் ஏறிவரும் பெருமானே
என்னை ஏற்றுக்கொண்டாய்

## 1. திருவதிகை வீரட்டானம்

பண் : கொல்லி

பதிக எண் : 1

1. கூற்றாயின வாறு விலக்ககிலீர்
   கொடுமைபல செய்தன நான்அறியேன்
ஏற்றாய்அடிக் கேஇர வும்பகலும்
   பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றின் அகம்படியே
   குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன்அடி யேன்அதி கைக்கெடில
   வீரட்டா னத்துறை அம்மானே. 1

கெடில ஆற்றின் வடகரையில் விளங்கும் திருவதிகை என்னும் வீரட்டானத் திருப்பதியில் உகந்தெழுந்தருளியிருக்கும் தலைவனே! யான் இப்பிறப்பில் என் அறிவு அறியப் பல கொடுஞ் செயல்களைச் செய்தேனாக எனக்குத் தோன்றவில்லை. அவ்வாறாகச் சூலைநோய், யாருக்கும் நோய்முதல் புலப்படாத வகையில் என் வயிற்றினுள் குடலோடு ஏனைய உள் உறுப்புக்களைக் கட்டிச் செயற்படாமல் மடக்குதலால் அடியேன் அவ்வலியைப் பொறுக்க இயலாதேனாக உள்ளேன். கூற்றுவனைப் போல அந்நோய் அடியேனைத் துன்புறுத்தும் செயலை நீக்கும் ஆற்றலுடையீர். அந்நோயை விலக்கினால் எப்பொழுதும் காளை மீது ஊரும் உம் அடிக்கண் நீங்காமல் மனத்தால் துணிவும் தலையால் தணிவும் மொழியால் பணிவும் தோன்ற வணங்குவேன். ஏற்றாய் அடிக்கு + ஏ. ஏ– தேற்றம்.

---

"அதிகைக் கெடில வீரட்டானத்துறை அம்மானே" என்பது பதிக மகுடம்.

2. நெஞ்சம்உமக் கேயிட மாகவைத்தேன்
   நினையாதொரு போதும் இருந்தறியேன்
வஞ்சம்இது வொப்பது கண்டறியேன்
   வயிற்றோடு துடக்கி முடக்கியிட
நஞ்சாகிவந் தென்னை நலிவதனை
   நணுகாமல் துரந்து கரந்தும்இடீர்
அஞ்சேலும்என் னீர்அதி கைக்கெடில
   வீரட்டா னத்துறை அம்மானே. 2

அதிகைக் கெடில வீரட்டானத்துறை அம்மானே! என் நெஞ்சத்தை உம்மிடத்திலேயே உறைவிடம் பெறுமாறு பண்படுத்திவிட்டேன். இனி ஒரு பொழுதும் உம்மை நினையாமல் இருக்க மாட்டேன். இச்சூலைநோயைப் போலக் காரணத்தைப் புலப்படுத்தாமல் காரியத்தில் செயற்படும் கொடுநோயை அடியேன் இதுகாறும் அனுபவித்தறியேன். வயிற்றினோடு ஏனைய உள்ளுறுப்புக்களைக் கட்டி அவை செயற்படாமல் மடக்கியிடுவதற்கு விடம் போல வந்து என்னைத் துன்புறுத்தும் நோயை விரட்டியோ செயற்பாடு இல்லாமல் மறைத்தோ என்னைக் காப்பீராக. அஞ்சேல் என்று எனக்கு அருளுவீராக.

---

மூலம் + ஸ்தானம் – மூலட்டானம்
வீரம் + ஸ்தானம் – வீரட்டானம்

| | |
|---|---|
| **3.** பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர்<br>படுவெண்டலை யிற்பலி கொண்டுழல்வீர்<br>துணிந்தேஉமக் காட்செய்து வாழலுற்றாற்<br>சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்<br>பிணிந்தார்பொடி கொண்டுமெய் பூசவல்லீர்<br>பெற்றம்ஏற்றுகந் தீர்சுற்றும் வெண்டலைகொண்<br>டணிந்தீர்அடி கேள்அதி கைக்கெடில<br>வீரட்டா னத்துறை அம்மானே. 3 | அதிகை... அம்மானே! உலகப்பற்றுக்களோடு இணைந்து இறந்தவர்களை எரித்த சாம்பலை உடலில் பூசிக் கொள்ளவல்ல பெருமானே! விடையேறி ஊர்தலை விரும்புகின்றவரே! வெண்தலைமாலை அணிகின்றவரே! உம்மை வழிபடுபவர்களுடைய பாவங்களைப் போக்க வல்லீரே! இறந்துபட்டவருடைய மண்டை யோட்டில் பிச்சை ஏற்றுத் திரிபவரே! உம்மையே பரம்பொருளாகத் துணிந்து உமக்கு அடிமை செய்து அடியேன் வாழக் கருதுதலின், துன்புறுத்தும் சூலைநோயைப் போக்கி அருளுவீராக. |
| **4.** முன்னம்அடி யேன்அறி யாமையினான்<br>முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப்<br>பின்னைஅடி யேன்உமக் காளும்பட்டேன்<br>சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்<br>**தன்னைஅடைந் தார்வினை தீர்ப்பதன்றோ**<br>**தலையாயவர் தங்கடன் ஆவதுதான்**<br>அன்னநடை யார்அதி கைக்கெடில<br>வீரட்டா னத்துறை அம்மானே. 4 | அன்னம் போன்ற நடை அழகை உடைய இளமகளிர் நிறைந்த அதிகை... எம்மானே! இதற்குமுன் அடியேன் உம்மைப் பரம்பொருளாக அறிந்து உம் தொண்டில் ஈடுபடாமையால் தேவரீர் அடியேனை வெகுண்டமையால், சூலைநோய் என்னை வருத்திச் செயற்பட முடியாமல் செய்யவே, அதன் நலிவுக்கு ஆளாகிய பின்னர் அடியேன் உமக்கு அடிமையாகி விட்டேன். அடியேனை வருத்தும் சூலை நோயைத் தவிர்த்து அருளவேண்டும். மேம்பட்டவர்களது கடமை தம்மைச் சரணமாக அடைந்தவர்களுடைய வினைகளைப் போக்குவது அன்றோ! |
| **5.** காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்<br>கரைநின்றவர் கண்டுகொள் என்றுசொல்லி<br>நீத்தாய கயம்புக நூக்கியிட<br>நிலைக்கொள்ளும் வழித்துறை யொன்றறியேன்<br>வார்த்தையிது வொப்பது கேட்டறியேன்<br>வயிற்றோடு துடக்கி முடக்கியிட<br>ஆர்த்தார்புனல் ஆர்ஆதி கைக்கெடில<br>வீரட்டா னத்துறை அம்மானே. 5 | ஆரவாரித்துப் பெருகும் கெடிலக் கரையிலமைந்த அதிகை வீரட்டானப் பெருமானே! குளத்தில் பிறர் இறங்காமல் பாதுகாத்துச் செயற்படுபவர் தம் காவலில் சோர்வு பட்டமையால், கரையில் நின்றவர்கள் இக்குளத்தின் ஆழத்தைக் கண்டு அனுபவிப்பாயாக என்று ஆழமான குளத்தில் விழுமாறு தள்ளிவிட, அக்குளத்தில் ஆழத்தில் நிலையாக நீந்திக் கொண்டிருக்கும் வழிமுறை ஒன்றும் அறியாதேனாகிய அடியேன், சூலை நோய் வயிற்றோடு ஏனைய உள் உறுப்புக்களைக் கட்டி என்னைச் செயற்பட முடியேனாகச் செய்ய, பெருமானாகிய நீயே எல்லா வினைகளையும் போக்கி அருளுவாய் என்ற வார்த்தையை இதற்குமுன் கேட்டு அறியாதேனாய் நாளை வீணாக்கினேன். |

6. சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
**தமிழோடிசை பாடல் மறந்தறியேன்**
நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன்
உன்னாமம்என் னாவில் மறந்தறியேன்
உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய்
உடலுள்ளுறு சூலை தவிர்த்தருளாய்
அலந்தேன்அடி யேன்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 6

நீரும், மலரும், புகையும் கொண்டு வழிபாடு செய்யும் போது அடியார்களாகிய நாமெல்லாம் போற்றி மகிழும் பாடல்.

அதிகை... அம்மானே! இறந்தவர் மண்டை யோட்டில் பிச்சை எடுத்துத் திரியும் பெருமானே! என் உடலின் உள்ளாய் வருத்தும் சூலைநோயைப் போக்கி அருளுவாயாக. இனி அபிடேகத் தீர்த்தத்தையும் பூவையும் உனக்கு சமர்ப்பிப்பதனை மறவேன். தமிழோடு இசைப்பாடலை மறவேன். இன்புறும் பொழுதிலும் துன்புறும் பொழுதிலும் உன்னை மறவேன். உன் திருநாமத்தை என் நாவினால் ஒலிப்பதனை மறவேனாய் இனி இருக்கிறேன். சலம் பூவொடு தூவ – பாடம்.

7. உயர்ந்தேன்மனை வாழ்க்கையும் ஒண்பொருளும்
ஒருவர்தலை காவல் இலாமையினால்
வயந்தேஉமக் காட்செய்து வாழலுற்றால்
வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர்
பயந்தேயென் வயிற்றின் அகம்படியே
பறித்துப்புரட் டிஅறுத் தீர்த்திடநான்
அயர்ந்தேன்அடி யேன்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 7

அதிகை... அம்மானே! அடியேனுக்குத் தலைவராக இருந்து அடியேனை நெறி பிறழாமல் காப்பவர் ஒருவரும் நும்மையல்லாது இல்லாத காரணத்தினால் மனையிலிருந்து வாழும் இல்லற வாழ்க்கையிலும் அதற்கு வேண்டியதாய் நன்னெறியில் ஈட்டப்படும் பொருள் தேடும் செயலிலும் நீங்கினேன். என் வயிற்றினுள்ளே யான் அஞ்சுமாறு குடலைப் பறித்தெடுத்துப் புரட்டி அறுத்துச் சூலை நோய் உள் உறுப்புக்களை இழுக்க, அடியேன் தாங்க முடியாதவனாகி விட்டேன். இனி, உமக்குத் தொண்டனாகி நான் வாழக் கருதினால், அதற்கு ஏற்ப என்னைத் துன்புறுத்தும் சூலைநோயைப் போக்கி அருளுவீராக.

8. வலித்தேன்மனை வாழ்க்கை மகிழ்ந்தடியேன்
வஞ்சம்மனம் ஒன்றும் இலாமையினால்
சலித்தால்ஒரு வர்துணை யாருமில்லைச்
சங்கவெண்குழைக் காதுடை யெம்பெருமான்
கலித்தேயென் வயிற்றின் அகம்படியே
கலக்கிமலக் கிட்டுக் கவர்ந்துதின்ன
அலுத்தேன்அடி யேன்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 8

அதிகை... அம்மானே! வெண்ணிறச் சங்கினால் ஆகிய குழை என்னும் காதணியை அணிந்துள்ள பெருமானே! அடியேன் மனத்தில் வஞ்சனை ஒன்றும் இல்லாமையினால் மனையின்கண் மகிழ்ந்து வாழும் வாழ்க்கையைக் காய்ந்தேன். சூலை நோய் அடியேன் வயிற்றகத்தே செருக்கிக் கலக்கி வயிற்றின் பகுதிகளை மயக்கிக் கைக்கொண்டு துன்புறுத்துதலால் அடியேன் உயிர் வாழ்தலை வெறுத்து விட்டேன். வருந்தும்போது அடியேனுக்குத் துணையாவார் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை. அடியேனை நோயினின்றும் காத்தருள்க.

9. பொன்போல மிளிர்வதொர் மேனியினீர்
புரிபுன்சடை யீர்மெலி யும்பிறையீர்
துன்பேகவ லைபிணி யென்றிவற்றை
நணுகாமல் துரந்து கரந்தும்இடீர்
என்போலிகள் உம்மை யினித்தெளியார்
அடியார்படு வதிது வேயாகில்
அன்பேஅமை யும்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 9

அதிகை அம்மானே! பொன்னார் மேனியினீர்! முறுக்குண்ட செஞ்சடையீர்! கலைகுறைந்த பிறையை உடையீர்! துன்பம் கவலை பிணி என்னும் இவை அடியேனை அணுகாமல் அவற்றை விரட்டுதலையும் மறைத்தலையும் செய்யீராயின் அடியேனைப் போன்றவர்கள் இப்பொழுது உங்களைத் துன்பம் துடைக்கும் பெருமானாராகத் தெளியமாட்டார்கள். எனினும், உங்கள் அன்பே எங்கள் துயர்துடைத்து எங்களை அமைவுறச் செய்யும்.

10. போர்த்தாயங்கோ ரானையின் ஈருரிதோல்
புறங்காடரங் காநட மாடவல்லாய்
ஆர்த்தான்அரக் கன்றனை மால்வரைக்கீழ்
அடர்த்திட் டருள்செய்த அதுகருதாய்
வேர்த்தும்புரண் டும்விழுந் தும்எழுந்தால்
என்வேதனை யான விலக்கியிடாய்
ஆர்த்தார்புனல் சூழ்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே. 10

ஆரவாரித்து நிரம்பும் நீரைஉடைய கெடிலக் கரையிலமைந்த திருவதிகை வீரட்டானத்து உகந்தருளி உறையும் அம்மானே! பண்டு ஓர் யானையின் உதிரப் பசுமை கெடாத தோலைப் போர்த்தவனே! சுடு காட்டையே கூத்தாடும் அரங்காகக் கொண்டு கூத்து நிகழ்த்துதலில் வல்லவனே! ஆரவாரித்துக் கயிலைமலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணனை அப்பெரிய மலையின் கீழ் நசுக்கிப்பின் அருள் செய்த அதனை நினைத்துப்பார்த்து, வியர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தும் அடியேன் சூலை நோயினால் அநுபவிக்கும் துன்பங்களை நீக்கி அருளுவாயாக.

இராவண வரலாற்றுப் பதிவைத் திருஞானசம்பந்தரைப் போலவே அப்பரும் பெரும்பாலான பதிகங்களில் நிறைவுப் பாடலாக மேற்கொள்கிறார்.

## இராவண வரலாற்றுப் பதிவுகளின் ஒப்புநோக்கு

| வ.எண். | ஆளுடைய அரசுகள் | ஆளுடைய பிள்ளையார் |
|---|---|---|
| 1. | பதிகத்தின் நிறைவு பத்தாவது பாடல் இராவணன் பாட்டு | பதிகந்தோறும் எட்டாவது பாடல் இராவணன் பாட்டு |
| 2. | முன்னமே கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த நிகழ்வுகளின் போதே இராவணனை அப்பருக்குத் தெரியும் அப்பர் சொல்லித்தான் அவன் சாமகானம் இசைத்தான். | முன்னைத் தொடர்பு சம்பந்தருக்கு இல்லை |
| 3. | கயிலைமலைப் பெயர்ப்புக்காக சிவாபதாரமாக அவன் முதலில் அடர்த்தும் பின்னர் சரணடைந்தும் துதித்தமையால் அருளியும் செய்த செயல்பாடு சமணசமயப் படுகுழியில் வீழ்ந்து செய்தற்காகச் சூலை நோய் தந்தும் வந்தடைந்ததால் அடிமையாக அருளியதோடு ஒப்பிட வேண்டும். | திருஞானசம்பந்தர் சரித்திரத்தில் அத்தகைய நிகழ்வுகள் இல்லை |

| வ.எண். | ஆளுடைய அரசுகள் | ஆளுடைய பிள்ளையார் |
|---|---|---|
| 4. | அத்தன்மையனாய இராவணனுக்கு அருளும் கருணைத்திறமான அதன் மெய்த் தன்மையறிந்து துதிப்பதையே மேல் கொண்டு வணங்கினார் நாவுக்கரசர் | "மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின் கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட" என்ற ஆக்கப்பாட்டினை ஆளுடைய பிள்ளையார் அருளினார் |

## இரண்டாம் பதிகம் எழுந்த சூழலும், வரலாறும்

**4.002.**

நீற்றறையில் ஏழு நாட்கள் இட்டபின்னும், நஞ்சுகலந்த பாலடிசில் கொடுத்த பின்னும், தம் செயல் நிறைவேறாமை கண்டு, கடையமணர்கள் வாகீசப் பெருந்தகையார் மேல் கோபாதி சயமான கொலைக் களிற்றை விடச் சொன்னார்கள்.

இந்தச் செயல் மிகவும் கொடூரமான செயல். நம் முன்னால், நம்மேல் ஓடுகளிறு ஏவப்பட்டால், நாம் என்ன ஆவோம் ? என்ன செய்வோம் ? என்று கற்பனை செய்து இந்நிகழ்வை ஆயவேண்டும்.

கொலைக்களிறு – கொல்லும் தொழிலில் பழக்கமுடைய யானையைத் தேர்வு செய்து ஏவினான் என்று பொருள். கொல்லுதல் யானையின் இயல்பன்று. கொலையில் பழகிய யானையைவிடச் சொல்கிறான். ஒப்பற்ற வலிமையுடைய அந்த யானையானது ஒரு மலைபோலப் புறப்பட்டு மாடங்களை இடித்து, மண்டபங்களை எடுத்தழித்து பெரும் ஆரவாரத்துடன் நாவரசரை நோக்கி வருகிறது. கூற்றுவன் இவ்வுலகில் மேற்கொண்டுவரும் பல உருவங்களுள், இங்கே களிற்றின் வேடத்தினால் வந்ததுபோல வருகிறது. உலகில் நோய் உருவிலும், பகைவர், புலி முதலிய விலங்குகள் முதலாகிய உருவிலும் வந்து உயிர்கொள்வான் கூற்றுவன். இவை உயிர் பிரிப்பதற்கு வெளிக்காணப்படும் காரணங்களேயன்றி உண்மையில் இவ்வுருவங்களுள் மறைந்து கூற்றுவனே உயிர் கவர்கின்றான் என்பது நாம் அறிந்ததே. திருவிளையாடற் புராணத்தில் பழியஞ்சின படல வரலாறு இதற்கு உதாரணமாகும்.

சங்கிலித் தொடரும் அறும்படித் தறியை முறித்து – மேலே வட்டமிடும் பறவைக் கூட்டங்களும் அஞ்சும்படி – எதிர்க்கும் தடைகளுக்குச் சிறிதும் விலகாமல் – ஊசல்போல அசையும் துதிக்கை முன்னே சுற்ற, பெருங்கோபத்துடன் வாசங்கமழும் மத நீராகிய மழை முன்னேபெருக மதமுடைய மலைபோன்ற யானை வருகிறது.

கிழக்கில் ஐராவதம், தென்கிழக்கில் புண்டரிகம், தெற்கில் வாமனம், தென்மேற்கில் குமுதம், மேற்கில் அஞ்சனம், வடமேற்கில் புட்பதந்தம், வடக்கில் சாருவபூமம், வடகிழக்கில் சுப்ரதீபன் என்று எட்டு யானைகள் (அட்டதிக்கஜங்கள்) திசைகளைக் காக்கின்றன. அமணர்கள் ஏவிய மதயானையின் இடிமுழக்கத்தைக் கேட்டு இந்தத் திசையானைகள் அஞ்சின. காலின் மிதித்த சுவடு நிலத்தில் பொருந்த பூமி நெளிந்தது. கடலினுள் ஊழி முடிவில் எழுகின்ற வடவைத் தீயைப் போலப் பெருஞ்சினத்துடன் யானை வருகிறது.

இதைக் கண்ணுற்றார் நாவுக்கரசர். சிவத்தைத் தவிர வேறெதையும் நினைக்கவே இல்லை. இங்கு தம்முள்ளத்தில் யானையின் சினத்தை மாற்றுவதற்கு அதிதெய்வமாய்ச் சிவபெருமானை தியானிக்க முற்பட்டபோது, நாவரசரை மிகவும் வசீகரித்தது அவரது திருமேனியிற் பொலிந்த திருநீற்று வெண்சாந்தேயாகும். அதனை அடுத்து, அவரது உள்ளத்தைக் கவர்ந்து நின்றது, அம்மையார் பாகத்தில் நின்ற செஞ்சந்தனச்சாந்து. இதனை முதலில் கூறி, தியான சுலோகத்தை ஆரம்பிக்கிறார்.

## உ. திருவதிகை வீரட்டானம்

பண் : காந்தாரம் பதிக எண் : 2

11. சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட்
சூளா மணியும்
வண்ண உரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முர ணேறும் அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலு முடையா ரொருவர்
தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது
மில்லை. 1

பொடியாக அமைந்த திருநீறாகிய வெண்சாந்தும், சந்தனச்சாந்தும் முடிமணியாகிய ஒளி வீசும் பிறையும், அழகிய புலித்தோல் ஆடையும், வள ர்கின்ற பவளக்கொடி போன்ற நிறமும், தலைமை பொருந்திய பாதுகாவலாக அமைந்த, பகைவரோடு மாறுபடும் காளையும், மார்பில் பரவியிருக்கின்ற பாம்புகளும், திண்ணிய கரையைக் கொண்ட பெரிய நீர்ப்பரப்பினதாகிய கெடிலயாற்று அபிடேகத்திற்குரிய தீர்த்தமும் உடைய ஒப்பற்ற அதிகை வீரட்டருடைய அடியேம் யாம், ஆதலின் எங்களுக்கு அஞ்சுதற்குரிய பொருள் யாதும் இப்பொழுது இல்லை. இனித் தோன்றப் போவதும் இல்லை.

12. பூண்டதொர் கேழ லெயிறும் பொன்றிக ழாமை புரள
நீண்டதிண் டோள்வலஞ் சூழ்ந்து நிலாக்கதிர் போல
வெண்ணூலும்
காண்டகு புள்ளின் சிறகுங் கலந்த கட்டங்கக்
கொடியும்
ஈண்டு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது
மில்லை. 2

முற்றலாமையிள நாகமோடேன முளைக் கொம்பவை பூண்டு – தி.ஞா.ச. தேவாரம் 1.1.2

ஆமையினது ஓட்டையும், பன்றியினது முளை போன்ற பல்லையும் கோர்த்து அணிந்த மாலையும், நிலாப் போல் ஒளிவீசும் வெள்ளிய பூணூலும், காண்டற்கினிய கொக்கின் இறகும், தம்மோடு பொருந்திய மழுவின் வடிவம் எழுதப் பெற்ற கொடியும், பெருகி வரும் கெடிலயாற்றுத் தீர்த்தமும் உடைய அதிகை வீரட்டரின் அடியேம் யாங்கள் ஆதலின், அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவதும் இல்லை.

13. ஒத்த வடத்திள நாக முருத்திர பட்ட மிரண்டும்
முத்து வடக்கண் டிகையு முளைத்தெழு மூவிலை
வேலும்
சித்த வடமு மதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது
மில்லை. 3

முத்துவடம் அம்மை பாகத்திலும் கண்டிகை சுவாமி பாகத்திலுமாகக் கொள்ளவேண்டும். சித்தவடமடம் – சுந்தரருக்கு சுவாமி திருவடி தீட்சை செய்த இடம்.

தோளில் மாலையாக அணிந்த இளைய பாம்பும், இரண்டாகிய தோள் பட்டிகையும், பலவடங்களாக அமைந்த முத்து மாலையினை இணைந்த உருத்திராக்கக் கண்டிகையும், மூன்று இலைவடிவாக அமைந்த முத்தலைச் சூலமும், சித்தவடம் என்ற பெயரிய சைவமடம் ஒன்றுடைய திருத்தலமும், மதில்கள் உயரமாக உடைய அதிகை நகரை ஒருபுறம் சூழ்ந்து இயங்கும் விரைந்து செல்லும் கெடில நதித் தீர்த்தமும் உடைய பெருமானுடைய அடியேம் யாங்கள் ஆதலின் அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவதுமில்லை.

| | |
|---|---|
| **14.** மடமான் மறிபொற் கலையு மழுப்பாம் பொருகையில் வீணை<br>குடமால் வரையதிண் டோளுங் குனிசிலைக் கூத்தின் பயில்வும்<br>இடமால் தழுவிய பாக மிருநில னேற்ற சுவடும்<br>தடமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்<br>அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 4 | ஒருகையில் மான்குட்டி, ஒருகையில் மான் தோல் ஆடை, ஒருகையில் மழுப்படை, மற்றொரு கையில் பாம்பு, மற்றொரு கையில் வீணை இவற்றை உடையவராய், மேற்றிசைப் பெருமலையை ஒத்த திண்ணிய தோள்களும், வில்போல் வளைந்து ஆடுகின்ற கூத்தின் பயிற்சியும், பெரிய உலகங்களைத் தானமாக ஏற்ற சுவடுடைய திருமால் தழுவிப் பொருந்தியிருக்கும், இடப்பாகமும், நீர்த்துறைகள் அமைந்த கெடில நதித் தீர்த்தமும் உடைய அதிகை வீரட்டரின் அடியேம் யாங்கள். ஆதலால் அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவதுமில்லை. |
| **15.** பலபல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே<br>கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறும்<br>வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்<br>நலமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்<br>அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 5 | பலப்பல விருப்பங்களை உடையவராய் அவற்றைச் செயற்படுத்தத் துடித்து விரையும் மக்களின் உள்ளத்தில் கலந்து பிறழச் செய்யும் கணபதியாகிய ஆண் யானையையும், இருளைப் போக்கும் வலிமை மிக்க சூரியன் சந்திரன் ஆகிய இரண்டு ஒளிகளையும், மேம்பட்ட கயிலை மலையையும், நன்மைகள் நிறைந்த கெடில நதித் தீர்த்தத்தையும் உடைய அதிகை வீரட்டரின் அடியேம் யாங்கள் ஆதலின் அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவதுமில்லை. |
| **16.** கரந்தன கொள்ளி விளக்குங் கறங்கு துடியின் முழக்கும்<br>பரந்த பதினெண் கணமும் பயின்றறி யாதன பாட்டும்<br>அரங்கிடை நூலறி வாள ரறியப் படாததொர் கூத்தும்<br>நிரந்த கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்<br>அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 6 | உயிர்கள் அறியாதவாறு மறைந்து நின்று அடியார்களுக்கு ஒளி வீசும் திருவருளாகிய விளக்கின் ஒளியும், சுழலுகின்ற துடி என்ற இசைக் கருவியின் ஓசையும், எங்கும் பரவிய தேவ கணத்தர் பதினெண்மரும் வேற்றிடங்களில் பழகி அறியாதனவாகிய பாட்டின் ஒலியும், கூத்துவல்லார் கூத்தாடும் அரங்கங்களில் கண்டு அறியப்படாததாகிய கூத்து நிகழ்ச்சியும், முறையாக ஓடிவரும் கெடில நதித் தீர்த்தத்தின் புனிதமும் உடைய அதிகை வீரட்டரின் அடியேம் யாங்கள் ஆதலின் அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவதும் இல்லை. |

17. கொலைவரி வேங்கை யதளுங் குவவோ
டிலங்குபொற் றோடும்
**விலைபெறு சங்கக் குழையும் விலையில்
கபாலக் கலனும்**
மலைமகள் கைக்கொண்ட மார்பும் மணியார்ந் திலங்கு
மிடறும்
உலவு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது
மில்லை. 7

விலைபெறு – விலையில் – முரண் அணி
விலையில் – வேறு எவரும் கொள்ளாத என்றும் பொருள் கொள்ளலாம்.

தம்மால் கொல்லப்பட்ட கோடுகளை உடைய புலித்தோலும், திரட்சியோடு விளங்கும் பொலிவுடைய தோடும், பெருவிலையுடைய சங்கினாலாகிய காதணியும், விலையே இல்லாத மண்டையோடாகிய உண்கலனும், பார்வதி தங்குமிடமாகக் கொண்ட மார்பும், நீலமணியின் நிறங்கொண்டு விளங்கும் கழுத்தும், ஒழுகுகின்ற கெடில நதித் தீர்த்தமும் உடைய அதிகை வீரட்டரின் அடியேம் யாங்கள். ஆதலால் அஞ்சுவது யாதொன்றும் இல்லை. அஞ்ச வருவதும் இல்லை.

18. ஆடல் புரிந்த நிலையும் அரையி லசைத்த அரவும்
பாடல் பயின்றபல் பூதம் **பல்லா யிரங்கொள் கருவி
நாடற் கரியதொர் கூத்தும்** நன்குயர் வீரட்டஞ்
சூழ்ந்து
ஓடுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது
மில்லை. 8

பல்லாயிரக்கணக்கான கருவிகள் இருந்தாலும் கூத்தப் பெருமானின் கூத்துக்கு இணையாக வாசிக்க முடியாது.

கூத்தாடுதலை விரும்பிச் செய்த நிலையும், இடுப்பில் இறுக்கிக் கட்டிய பாம்பும், இசைக் கருவிகளைக் கைகளில் கொண்டு, பல ஆயிரக்கணக்கில் சூழ்ந்த பாடல்களில் பழகிய பூதங்கள் பலவும், ஆராய்ந்து, அறியமுடியாத கூத்தும், மிக உயர்ந்த வீரட்டக்கோயிலை ஒரு பக்கத்தில் சுற்றி ஓடும் கெடில நதித் தீர்த்தமும் உடைய அதிகை வீரட்டரின் அடியேம் யாங்கள் ஆதலில் அஞ்சுவது யாதொன்றும் இல்லை. அஞ்ச வருவதும் இல்லை.

19. சூழு மரவத் துகிலுந் துகில்கிழி கோவணக் கீளும்
யாழின் மொழியவ ளஞ்ச அஞ்சா தருவரை போன்ற
**வேழ முரித்த நிலையும்** விரிபொழில் வீரட்டஞ்
சூழ்ந்து
தாழுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது
மில்லை. 9

இப்பொழுது – வேழம் எதிர்கொண்டு கொலைக் களிறாக வரும்போது அதன் சினந் தணிப்பிக்க வேண்டி நாயனார் இறைவரை இந்நிலையினராகத் தெளிவுற்று எண்ணி அழைக்கின்றார்.

பாம்பினால் சுற்றப்பட்ட ஆடையும், துணியிலிருந்து கிழித்தெடுக்கப்பட்ட அரைஞாணோடு கூடிய கோவணமும், யாழ் ஒலி போன்ற இனிய குரலை உடைய பார்வதி அஞ்சுமாறு அச்சமின்றிப் பெரிய மலை போன்று வந்த வேழத்தின் தோலை உரித்த காட்சியும், சோலைகள் மிகுந்த வீரட்டத்தை ஒருபுறம் சுற்றிப் பள்ளத்தில் பாயும் கெடில நதித் தீர்த்தமும் உடைய அதிகை வீரட்டரின் அடியேம் யாங்கள் ஆதலின் எங்களுக்கு அஞ்சுதற்குரிய பொருள் யாதும் இப்பொழுது இல்லை. இனி தோன்றப் போவதும் இல்லை.

20. நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தா னொன்பது
மொன்று மலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில்
வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது
மில்லை. 10

பார்வதி நடுங்கும்படியாக நரம்புகளால் செயற்படும் கைகளைக் கோத்து தன் வலிமையை எல்லாம் ஒன்று சேர்த்துக் கயிலை மலையைப் பெயர்த்த இராவணனுடைய பத்துத் தலைகளும் கதறும்படியாக முதலில் அழுத்திப் பின் அவன் பாடிய சாமகானம் கேட்டு அவனுக்கு வரங்கள் கொடுத்து அருள் செய்த பெருமானாய், வளருகின்ற சோலைகளை உடைய வீரட்டக் கோயிலை ஒரு புறம் சுற்றி நீர் நிரம்பியுள்ள கெடில நதித் தீர்த்தத்தை உடைய அதிகை வீரட்டரின் அடியேம் யாங்கள். அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவதும் இல்லை.

## மூன்றாம் பதிகம் எழுந்த சூழலும், வரலாறும்

இமயமலைச் சிகரத்திலுள்ள பூலோகக் கயிலையைக் காண வேண்டுமென்ற பேரவாவினால் பலகாலம் நடந்து சென்று மலையேறுகிறார். பல நாள் நடந்து கால்தேயக் கை சிதைய, மார்பு நைய, என்பு முரிய, ஊன் கெடப் புரண்டு புரண்டு சென்று அங்கமெல்லாம் தேய்ந்து புறத்துறுப்புகள் அழிய ஆரம்பித்து செயலிழக்கும் நிலையில், சிவபெருமான், ஒரு முனிவர் வேடம் புனைந்து "மானுடன் கயிலையை அந்த உருவில் அடைய முடியாது; மீள்வதே அவருக்குக்கடன்" என்றுரைக்கிறார். "ஆளும் நாயகன் இருக்கை கண்டல்லால், மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" என்கிறார் அப்பர். தம் வேடத்தைக் காட்டிய பெருமான் "ஓங்கும் நாவினுக்கு அரசனே எழுந்திரு" என்றார். எழுந்த நாவரசர் "அண்ணலே, அமுதே, திருக்கயிலையில் இருந்த நின் கோலத்தை நான் தொழ அருள்புரி" என்றார். "அம்முறைமை திருவையாற்றிற் காண்" என்றார் இறைவர்.

திருப்பாடல் பல பாடி திருவைந்தெழுத்தோதி அங்கிருந்த வாவியில் மூழ்கினார். பின் திருவையாற்றுத் திருக்குளத்தில் தோன்றி வந்தெழுந்தார். இரு கண்ணீரிலும் குளித்தார். நிற்பவும் சரிப்பவும் துணையொடும் பொலியக் கண்டார். அவற்றிலெல்லாம் சத்தியையும் சிவத்தையும் கண்டார். கண்ட ஆனந்தக் கடலைக் கண்களால் முகந்து கொண்டார். உருகினார், பாடினார், அழுதார். அவர்க்கு அங்கு நிகழ்ந்தவற்றைச் சொல்ல வல்லவர் யார்? ஐயாற்றில் உள்ள அழியாத் தேனை உண்டு களித்துப் பல பதிகங்களில் பாடுகிறார். அவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம் ஆகும்.

கண்ட ஆனந்தக் கடலினைக் கண்களால் முகந்து
கொண்டு, கைகுவித் தெதிர்விழுந் தெழுந்துமெய் குலைய
அண்டர் முன்புநின் றாடினார் பாடினார் அழுதார்
தொண்ட னார்க்கங்கு நிகழ்ந்தன யார்சொல வல்லார்.

– திருத்தொண்டர் புராணம்

"மாதர்ப்பிறைக் கண்ணி யானை மலையான் மகளொடு" மென்னுங்
கோதறு தண்டமிழ்ச் சொல்லாற் குலவு திருப்பதிகங்கள்
"வேத முதல்வரை யாற்றில் விரவுஞ் சராசர மெல்லாம்
காதற் றுணையொடுங் கூடக்கண்டே" னெனப் பாடி நின்றார்.

இப்பதிகத்துள் ஒவ்வொரு பாட்டும் ஒவ்வொரு பதிகம் என்று தெய்வச் சேக்கிழார் பரவி மகிழ்கிறார். ஒவ்வொரு பாட்டும் பதிகத்தின் முடிந்த கருத்தான "கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்" என்ற கருத்தினையே கொண்டு விளங்குதலாற் பதிகங்கள் எனப்பட்டன.

## 3. திருவையாறு

பண் : காந்தாரம் — பதிக எண் : 3

21. மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
**கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.** 1

"கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்" என்பது பதிக மகுடம். யாதும் சுவடுபடாமல் ஐயாறடைவது கயிலை வாவியில் மூழ்கி ஐயாற்றுக் குளத்தில் எழுந்தருளியதற்கான அகச்சான்று. அப்பர் கண்களுக்கு முதலில் காட்சிப்பட்டது பிறை. பின்னர் மனத்துக்குள் ஊன்றியது இறைவரது அருளாகிய அம்மையுடனாம் தன்மை.

விரும்பத்தக்க பிறையை முடிமாலையாகச் சூடிய பெருமானைப் பார்வதியோடும் இணைத்துப் பாடியவர்களாய் அருச்சிக்கும் பூவும் அபிடேக நீரும் தலையில் தாங்கித் திருக்கோயிலை நோக்கிப் பெருமானைத் துதித்த வண்ணம் புகும் அடியவர் பின் சென்ற அடியேன், கயிலை மலைக்குச் சென்றபோது ஏற்பட்ட உறுப்பழிவின் சுவடு ஏதும் தோன்றாத வகையில் தீங்கு நீங்கிய யாக்கை கொண்டு, கயிலை மலையிலிருந்து கால்சுவடு படாமல் திருவையாற்றை அடைகின்ற பொழுதில், விருப்பத்திற்கு உரிய இளைய பெண்யானையோடு, ஆண்யானை சேர்ந்து இரண்டுமாக வருவனவற்றைக் கண்டு, அவற்றை **அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதனவற்றைக் கண்டவ னாயினேன்.**

22. போழிளங் கண்ணியி னானைப் பூந்துகி லாளொடும் பாடி
வாழியம் போற்றியென் றேத்தி வட்டமிட் டாடா வருவேன்
ஆழி வலவனின் றேத்தும் ஐயா றடைகின்ற போது
கோழி பெடையொடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 2

ஆழி வலவன் – கடலரசன் இங்கு பூசித்துக் காவிரியைத் தன்பால் அடையப்பெற்றான் என்ற வரலாறு உண்டு.

சந்திரனுடைய பிளப்பாகிய பிறையை முடிமாலையாகச் சூடிய பெருமானை, பூ வேலைகள் செய்யப்பட்ட மெல்லிய ஆடையை அணிந்த பார்வதியோடு இணைத்துப்பாடி, 'அவர்கள் திருவடி வாழ்க' எனவும், 'அவர்களுக்கு அடியேனுடைய வணக்கம்' எனவும் சுழன்று ஆடிக்கொண்டு வரும் அடியேன் சக்கரப்படையை வலக்கையில் ஏந்தியுள்ள திருமால் நிலையாகப் புகழும் ஐயாற்றை அடையும்போது ஆண்கோழி பெண்கோழியுடன் கூட இரண்டுமாக மகிழ்வுடன் வருவனவற்றைக் கண்டேன். அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம் சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதவற்றைக் கண்டேன்.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **23.** எரிப்பிறைக் கண்ணியி னானை யேந்திழை யாளொடும் பாடி<br>முரித்த விலயங்க ளிட்டு முகமலர்ந் தாடா வருவேன்<br>அரித்தொழு கும்வெள் ளருவி ஐயா றடைகின்ற போது<br>வரிக்குயில் பேடையொ டாடி வைகி வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 3 | நிலவினை உடைய பிறைக் கண்ணியனாகிய பெருமானைச் சிறந்த அணிகளை உடைய பார்வதியோடும், இணைத்துப்பாடிக் கூத்துக்கு ஏற்ற தாளங்களை இட்டுக் கொண்டு முக மலர்ச்சியோடு ஆடிக்கொண்டு வரும் அடியேன் மணலை அரித்துக் கொண்டு வெள்ளிய அருவிபோல ஓடிவருகின்ற காவிரியின் வடகரைக் கண்ணதாகிய திருவையாற்றை அடையும் நேரத்தில் காதற் கீதங்களைப் பாடும் ஆண்குயில் பெண்குயிலோடு கலக்க, இரண்டும் ஓரிடத்தில் தங்கிப் பின் இணையாக வருவனவற்றைக் கண்டேன். அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதனவற்றைக் கண்டேன். |
| **24.** பிறையிளங் கண்ணியி னானைப் பெய்வளை யாளொடும் பாடித்<br>துறையிளம் பன்மலர் தூவித் தோளைக் குளிரத் தொழுவேன்<br>அறையிளம் பூங்குயி லாலும் ஐயா றடைகின்ற போது<br>சிறையிளம் பேடையொ டாடிச் சேவல் வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 4 | பிறை சூடிய பெருமானைப் பார்வதியோடும் இணைத்துப்பாடி நீர்த்துறையை அடுத்துவளர்ந்த செடி கொடிகளின் பல மலர்களையும் அடியேன் தோள்கள் மகிழுமாறு அருச்சித்து நான் தொழுவேனாய்ப் பாடும் இளங் குயில்கள் ஒலிக்கும் ஐயாறு அடைகின்றபோது, இளைய பேடையோடு கலந்து வெண் சிறகுகளை உடைய சேவல் அன்னம் இணையாக வருவனவற்றைக் கண்டேன். அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாத வற்றைக் கண்டேன். |
| **25.** ஏடு மதிக்கண்ணி யானை யேந்திழை யாளொடும் பாடிக்<br>காடொடு நாடு மலையுங் கைதொழு தாடா வருவேன்<br>ஆட லமர்ந்துறை கின்ற ஐயா றடைகின்ற போது<br>பேடை மயிலொடுங் கூடிப் பிணைந்து வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 5 | இளைத்த பிறையைச் சூடிய பெருமானைப் பார்வதியோடும் இணைத்துப் பாடிக் காடுகளையும் நாடுகளையும் மலைகளையும் கையால் தொழுதுகொண்டு ஆடி மகிழ்ந்து வரும் அடியேன் எம்பெருமான் கூத்தாடுதலை விரும்பித் தங்கியிருக்கும் ஐயாற்றை அடையும்போது ஆண் மயில் பெண் மயிலொடும் கலக்க இரண்டும் இணையாய் ஒன்றோடொன்று கூடி வருவனவற்றைக் கண்டேன். அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாத வற்றைக் கண்டேன். |

| | |
|---|---|
| **26.** தண்மதிக் கண்ணியி னானைத் தையனல் லாளொடும் பாடி<br>உண்மெலி சிந்தைய னாகி யுணரா வுருகா வருவேன்<br>அண்ண லமர்ந்துறை கின்ற ஐயா றடைகின்ற போது<br>வண்ணப் பகன்றிலொ டாடி வைகி வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். **6**<br><br>பகன்றில் – பகா + அன்றில்.<br>இணைபிரியாத அன்றிற் பறவை. | குளிர்ந்த பிறை சூடிய பெருமானைப் பார்வதியோடும் இணைத்துப் பாடி உள்ளம் குழைந்த திருவடி நினைவினேன் ஆகி உணர்ந்து உள்ளம் உருகி வரும் அடியேன் தலைமையை உடைய எம்பெருமான் உகந்தருளியிருக்கின்ற ஐயாற்றை அடையும் போது நல்ல நிறமுடைய ஆண் பகன்றில் பெண் பகன்றிலோடு இணைந்து இரண்டுமாய் வருவனவற்றைக் கண்டேன். அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதனவற்றைக் கண்டேன். |
| **27.** கடிமதிக் கண்ணியி னானைக் காரிகை யாளொடும் பாடி<br>வடிவொடு வண்ண மிரண்டும் வாய்வேண் டுவசொல்லி வாழ்வேன்<br>அடியிணை ஆர்க்குங் கழலான் ஐயா றடைகின்ற போது<br>இடிகுர லன்னதோ ரேன மிசைந்து வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். **7** | விரும்பும் பிறை சூடிய பெருமானை மெல்லியலாள் ஆகிய பார்வதியோடும் இணைத்துப்பாடி, வைகறையில் துயில் எழுந்து எம்பெருமானுக்கு உகப்புடையனவாகப் பெறப்படும் மலர்களைக் கொய்துவரும் அடியேன், சிறந்த அணிகலன்களையும் பொன்னையும் மணியையும் கரையில் சேர்க்கும் காவிரியின் வடகரையில் அமைந்த ஐயாற்றை அடையும்போது, இடிகுரலுடைய பன்றிகள் இசைந்து வருவதைக் கண்டேன். அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதவற்றைக் கண்டேன். |
| **28.** விரும்பு மதிக்கண்ணி யானை மெல்லிய லாளொடும் பாடிப்<br>பெரும்புலர் காலை யெழுந்து பெறுமலர் கொய்யா வருவேன்<br>அருங்கலம் பொன்மணி யுந்தும் ஐயா றடைகின்ற போது<br>கருங்கலை பேடையொ டாடிக் கலந்து வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். **8** | விளக்கம் பொருந்திய பிறை சூடிய பெருமானை மெல்லியலாள் ஆகிய பார்வதியோடும் இணைத்துப் பாடி, வைகறையில் துயிலெழுந்து எம்பெருமானுக்கு உகப்புடையனவாகப் பெறப்படும் மலர்களைக் கொய்துவரும் அடியேன், சிறந்த அணிகலன்களையும் பொன்னையும் மணியையும் கரையில் சேர்க்கும் காவிரியின் வடகரையில் அமைந்த ஐயாற்றை அடையும்போது, பெரிய ஆண் மான் தன் பெடையோடு இணைய இரண்டுமாக இணைந்து வருவனவற்றைக் கண்டேன், அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதவற்றைக் கண்டேன். |

| | |
|---|---|
| **29.** முற்பிறைக் கண்ணியி னானை மொய்குழ லாளொடும் பாடிப்<br>பற்றிக் கயிறுக் கில்லேன் பாடியும் ஆடா வருவேன்<br>அற்றருள் பெற்றுநின் றாரோ டையா றடைகின்ற போது<br>நற்றுணைப் பேடையொ டாடி நாரை வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 9 | அமாவாசையை அடுத்து ஒருகலையினதாய் முற்பட்டுத் தோன்றும் பிறைசூடிய பெருமானைச் செறிந்த கூந்தலை உடைய பார்வதியோடும் இணைத்துப்பாடி, அவன் திருவடிகளைப் பற்றி உலகினோடு உள்ள பாசத்தைப் போக்கிக் கொள்ள முடியாத அடியேன், பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் வந்து எம்பெருமானுக்கே அற்றுத் தீர்ந்து அவன் அருள் பெற்று நிலவும் அடியார்கள் உடன் ஐயாற்றை அடையும்போது, சிறந்த துணையாகிய பெடையோடு ஆண் நாரைகள் கூட இரண்டுமாக இணைந்து வருவனவற்றைக் கண்டேன். அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாத வற்றைக் கண்டேன். |
| **30.** திங்கள் மதிக்கண்ணி யானைத் தேமொழி யாளொடும் பாடி<br>எங்கருள் நல்குங்கொ லெந்தை யெனக்கினி யென்னா வருவேன்<br>அங்கிள மங்கைய ராடும் ஐயா றடைகின்ற போது<br>பைங்கிளி பேடையொ டாடிப் பறந்து வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 10 | பிறை சூடிய பெருமானைத் தேன் போன்ற சொற்களை உடைய பார்வதியோடு இணைத்துப் பாடி எம்பெருமான் இப்பொழுது அடியேனுக்கு எங்கு அருள் செய்வானோ என்று திருத்தலங்களை வழிபட்டுவரும் அடியேன் இளமங்கையர்கள் கூத்து நிகழ்த்தும் ஐயாற்றை அடையும்போது பச்சைக்கிளி தன் பெடையோடு மகிழ, இரண்டுமாக இணைந்து பறந்து வருவனவற்றைக் கண்டேன், அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதவற்றைக் கண்டேன். |
| **31.** வளர்மதிக் கண்ணியி னானை வாழ்குழ லாளொடும் பாடிக்<br>**களவு படாததொர் காலங் காண்பான்** கடைக்கணிற் கின்றேன்<br>அளவு படாததொ ரன்போ டையா றடைகின்ற போது<br>இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்<br>கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 11<br>---<br>மாதர் – எரி – முற்பிறைக் கண்ணியான்<br>ஏடு – தண் – கடி – விரும்பு – திங்கள் – வளர்மதிக் கண்ணியான்<br>பிறை – போழிளங் கண்ணியான்<br>என்று 11 வகை கண்ணியான்களைப் போற்றுகிறார். | வளர்தற்குரிய பிறை சூடிய பெருமானை நீண்ட கூந்தலை உடைய பார்வதியோடு இணைத்துப் பாடி, **வீணாகக் கழிக்கப்படாததொரு காலத்தைக் காணும் பொருட்டுக்** கடை வாயிலின்கண் நிற்கும் அடியேன், எல்லையற்ற அன்போடு ஐயாற்றை அடையும் பொழுது இளமையை உடையதாய்க் கலத்தலுக்கு ஏற்றதாய பசுவினை, ஏறு தழுவ, இரண்டுமாய் இணைந்து வருவனவற்றைக் கண்டேன். அவற்றை அடியேன் சக்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதவற்றைக் கண்டேன். |

அளவுபடாத அன்போடு ஐயாறடைகின்ற போது
களவுபடாத ஓர் காலம் காண கடைக்கண் நிற்கின்றேன்.

களவை அடையாத தொரு காலத்தைக் காணும் பொருட்டு கடைவாயிலின் கண் நிற்கின்றேன்.

'ஞாலமே விசும்பே இவை வந்து போம் காலம்' – களவுபடுங்காலம்.

"பரம்பரனைப் பணியாதே பாழுக்கிறைத்த எத்தனையோ காலம்" களவுபட்டன.

கால வரையறையைக் கடந்து காலத்தினையும் தோற்றித் தொழிற்படுத்தும் கால காலனாகிய முதல்வனால் செய்யப்படும் காரியத்திற்குக் காலம் வேண்டா என்று சிவஞான மாபாடியம் சொல்கிறது. அதனால் அவனது அழியாத இன்ப நிலையைப் பெற்றவர்க்குரியது களவுபடாததோர் காலம் என்று உபசரிக்கப்பட்டது. அதைக் காண்பதற்காக இறைவன் கோயிற் கடை வாயிலின்கண் நிற்கின்றேன் என்றார்.

அளவுபடாத பேரன்புக்கும் இவ்வாறே உரைத்துக் கொள்ளலாம். திருவடிக்கு அன்பு அளவுபடாதது. ஏனையனைத்தும் அளவுபடுவனேயாகும்.

முற்பாடல் பலவற்றில் வருவேன் என்றார். இதில் வந்து நிற்கின்றேன் என்கிறார்.

## மூன்றாம் பதிகம் "மாதர்ப்பிறைக் கண்ணியானை" கோடிக்கணக்கான அடியார்கள் மகிழ்ந்தோதும் பதிகம்

எதையும் யானையில் ஆரம்பிக்க வேண்டுமென்று யானையில் ஆரம்பித்து ஏற்றில் நிறைவு செய்கிறார்.

| பாடல் எண். | அப்பர் சத்தியும் சிவமுமாய்க் கண்ட தோற்றம் |
|---|---|
| 1. | காதல் மடப்பிடியோடு களிறு வருவன கண்டேன்<br>இளம் பெண்யானையோடு ஆண்யானை சேர்ந்து வருவதைக் கண்டேன் |
| 2. | ஆண் கோழி பெண்கோழியோடு கூடிவருவது கண்டேன் |
| 3. | ஆண் குயில் பெண்குயிலோடு ஆடிவருவன கண்டேன் |
| 4. | சேவல் பேடையோடாடி வருவன கண்டேன் |
| 5. | ஆண்மயில் பெடை மயிலொடும் கலந்து வருவன கண்டேன் |
| 6. | ஆண் பகன்றில் பெண் பகன்றிலொடு இணைந்து வருவன கண்டேன் |
| 7. | ஏனம் இசைந்து வருவன கண்டேன் |
| 8. | ஆண் மான் பெண் மானோடு இணைந்து வருவதைக் கண்டேன் |
| 9 | ஆண் நாரை பெடையோடு கூடிவருவன கண்டேன் |
| 10. | பசுங்கிளி பெடையோடு கூடிவருவன கண்டேன் |
| 11. | பசுவினை ஏறு தழுவி இணைந்து வருவன கண்டேன். |

## 4. திருவாரூர்

**பதிகக் குறிப்பு :** ஆரூரமர்ந்த அம்மானே, பாடிளம் பூதத்தினான், நரியைக் குதிரை செய்வான். நரகரைத் தேவு செய்வான், நினைப்பவர் நெஞ்சத்துள்ளான், அம்பர ஈரூரியான், ஊழியளக்க வல்லான், ஆழி வளைக் கையினான், உலகிறந்த ஒண்பொருளான், ஆதிரை நாள் உகந்தான், ஆயிரம் சேவடி, தோள், நீள்முடி, பேர் உடையான், நாகம் பள்ளி கொள்வான் உள்ளத்தான், ஐயஞ்சினப் புறத்தான் என்பன முதலிய தன்மைகளால் அறிந்து போற்றப்படுவன்.

**பண் : காந்தாரம்** **பதிக எண் : 4**

32. **பாடிளம் பூதத்தி** னானும்
பவளச்செவ் வாய்வண்ணத் தானும்
கூடிள மென்முலை யாளைக்
கூடிய கோலத்தி னானும்
ஓடிள வெண்பிறை யானும்
ஒளிதிகழ் சூலத்தி னானும்
ஆடிளம் பாம்பசைத் தானு
மாரூ ரமர்ந்தவம் மானே. 1

நித்தியத்துவம் பெற்ற சிவகணமாதலின் இளம்பூதம் என்று பாடுகிறார்.

ஆரூரில் உகந்தருளியிருக்கும் பெருமான், பாடுகின்ற இளைய பூதங்களை உடையவனும், சிவந்த வாயினை உடையவனும், பவளம் போன்ற உடல் நிளஎறத்தினாலும், தன் உடம்பின் பாதியாக இணைந்த பார்வதியைக் கூடியதால் ஏற்பட்ட விசேட அழகினனும், வானில் உலவக்கூடிய வெண்பிறையைச் சூடியவனும், ஒளிவிளங்கும் சூலப்படையை உடையவனும் ஆடுகின்ற இளைய பாம்பினைக் கட்டிக் கொண்டவனும் ஆவான்.

33. நரியைக் குதிரைசெய் வானும்
நரகரைத் தேவுசெய் வானும்
விரதங்கொண் டாடவல் லானும்
**விச்சின்றி நாறுசெய் வானும்**
முரசதிர்ந் தானைமுன் னோட
முன்பணிந் தன்பர்க ளேத்த
அரவரைச் சாத்திநின் றானு
மாரூ ரமர்ந்தவம் மானே. 2

"விச்சதின்றியே விளைவு செய்குவாய்" திருவாசகம். விதை இன்றியே பயிரையும், முட்டை இன்றியே கோழிவர்க்கத்தையும் படைக்க வல்லான்.

நரியைக் குதிரையாக மாற்றும் பெருந்திறம் உடையவனும், நரகர்களையும் தேவர்களாக்க வல்லவனும், அவரவர் மேற்கொள்ளும் விரதங்களுக்கு ஏற்ப அவரவர்க்குப் பயன் அருளுபவனும், **விதை இன்றியே பயிரை உண்டாக்க வல்லவனும்,** எம்பெருமானுக்கு உரிய முரசம் தன் மீது அமர்த்தி முழங்கப்பட அதனைத் தாங்கிய ஆண் யானை முன்னே ஓட, தன் முன்னர் நின்று வணங்கி அன்பர்கள் துதிக்கப் பாம்பினை இடுப்பில் கட்டி நின்றவனும் ஆரூரை உகந்தருளியிருக்கும் எம்பெருமான் ஆவான்.

34. **நீறுமெய் பூசவல் லானு**
நினைப்பவர் நெஞ்சத்து ளானும்
ஏறுகந் தேறவல் லானும்
எரிபுரை மேனியி னானும்
நாறு கரந்தையி னானு
நான்மறைக் கண்டத்தி னானும்
ஆறு சடைக்கரந் தானு
மாரூ ரமர்ந்தவம் மானே. 3

நாம் பூசும் நீறு – பசுவர்க்கங்களால் உயிருக்குக் கிடைக்கிறது. முழுமுதல்வன் பூசும் நீறு – மகா சங்கார காலத்துக் காடுடைய சுடலைப்பொடி. சருவ சங்காரத்துச் சருவலோகச் சுடலைப்பொடி. அதனை ஆற்றி அணிந்து கொள்ளும் வல்லமை அவனுக்கே உரியது. எனவேதான் நீறுமெய்பூச வல்லான்.

திருமேனியில் திருநீற்றைப் பூசுதலில் மேம்பட்டவனும், தன்னை விருப்புற்று நினைக்கும் அடியவர் உள்ளத்து இருப்பவனும், காளையை விரும்பி ஏற வல்லவனும், தீயின் நிறத்தை ஒத்த திருமேனி நிறத்தினனும், நறுமணம் கமழும் கரந்தைப் பூச்சூடியவனும், வேதம் ஓதும் குரல்வளையை உடையவனும் கங்கையைச் சடையில் மறைத்தவனும், ஆரூர் அமர்ந்த அம்மான் ஆவான்.

**35.** கொம்புநல் வேனி லவனைக்
குழைய முறுவல்செய் தானும்
செம்புநல் கொண்டெயின் மூன்றுந்
தீயெழக் கண்சிவந் தானும்
வம்புநற் கொன்றையி னானும்
வாட்கண்ணி வாட்டம தெய்த
அம்பர வீருரி யானு
மாரூ ரமர்ந்தவம் மானே. 4

வேனிலவன் – மன்மதன். திரிபுரத்தை விழித்தெரித்தார். மன்மதனை நகைத் தெரித்தார். அம்பரம் – ஆடை.

குயிலை ஊதுகொம்பாக உடைய சிறந்த இளவேனிற் காலத்திற்கு உரிய மன்மதன் தன் ஆற்றல் அழியுமாறு அவனைக் கண் சிவந்து அழித்தவனும், நல்ல செம்பு முதலியவற்றால் செய்யப்பட்ட திரிபுரம் தீயால் அழியுமாறு புன்முறுவல் செய்தவனும், நறுமணம் கமழும் பெரிய கொன்றை மலரை அணிந்தவனும், வாள் போன்ற கண்களை உடைய பார்வதி மனத்தில் சோர்வு கொள்ளுமாறு யானையின் உதிரப் பசுமை கெடாத தோலை ஆடையாக மேலே போர்த்தவனும் ஆரூர் அமர்ந்த அம்மானே யாவான். இது மொழி மாற்றுப் பொருள்கோள்.

**36.** ஊழி யளக்கவல் லானு
முகப்பவ ருச்சியுள் ளானும்
**தாழிளஞ் செஞ்சடை** யானுந்
தண்ணமர் திண்கொடி யானும்
தோழியர் தூதிடை யாடத்
தொழுதடி யார்கள் வணங்க
ஆழி வளைக்கையி னானு
மாரூ ரமர்ந்தவம் மானே. 5

தாழ்சடை
இளஞ்சடை
செஞ்சடை என மூவடையும் சடையென்னும் ஒரு பெயரைத் தழுவின. "சடையாயெனுமால்" சடையின் பெருமைகளை விவரிக்கவே முடியாது

ஊழிக்காலங்களைத் தான் அளக்கவல்ல, காலங்களுக்கு அப்பாற்பட்டவனும், தன்னை விரும்பும் அடியவர்கள் தலையின்மேல் உள்ளவனும், தொங்குகின்ற வெளிர் செந்நிறமுடைய சடையினனும், குளிர்ச்சி பொருந்திய வலிய கொடியை உடையவனும், தோழிமார்கள் தலைவியருக்காக எம்பெருமானிடம் தூது செல்ல, அடியார்கள் தலையால் தொழுது கைகளால் வணங்க, சக்கரத்தையும் சங்கையும் தாங்குகிற திருமாலின் கையிற் காட்சியளிப்பவனும் திருவாரூர் அமர்ந்த அம்மானாவான். தண்ணம்ஆர் என்று பாடம் ஓதி மழுப்படையின் வடிவம் எழுதிய என்றும் பொருள் கொள்க. தண்ணம் – மழு. (கழ. த. அக. பக். 512)

**37.** ஊர்திரை வேலையுள் ளானு
முலகிறந் தொண்பொரு ளானும்
சீர்தரு பாடலுள் ளானுஞ்
செங்கண் விடைக்கொடி யானும்
வார்தரு பூங்குழ லாளை
மருவி யுடன்வைத் தவனும்
ஆர்திரை நாளுகந் தானு
மாரூ ரமர்ந்தவம் மானே. 6

ஆர்திரை என்பதன் மரூஉவே ஆதிரை

பரவும் அலைகளை உடைய பாற்கடலில் உள்ளவனும், உலகுக்கு அப்பாற்பட்ட மேம்பட்ட பொருளாவானும், சிறந்த பாடல்களில் உள்ளவனும், சிவந்த கண்களை உடைய திருமாலாகிய காளையின் வடிவம் எழுதிய கொடியை உடையவனும், நீண்ட பொலிவு பொருந்திய கூந்தலை உடைய பார்வதியைத் தழுவி ஒருபாகமாக வைத்தவனும், திரு ஆதிரை நாளை விரும்பி ஏற்றவனும் ஆரூர் அமர்ந்த அம்மானே யாவான்.

| | |
|---|---|
| **38.** தொழற்கங்கை துன்னிநின் றார்க்குத்<br>தோன்றி யருளவல் லானும்<br>கழற்கங்கை பன்மலர் கொண்டு<br>காதல் கனற்றநின் றானும்<br>குழற்கங்கை யாளையுள் வைத்துக்<br>கோலச் சடைக்கரந் தானும்<br>அழற்கங்கை யேந்தவல் லானு<br>மாரூ ரமர்ந்தவம் மானே. 7<br><br>கைகள் நமக்கு இம்மாதிரி வடிவமைக்கப்பட்டதே இறைவனைத் தொழுவதற்கும் பூசிப்பதற்குமாகும். | தொழுவதற்கு உள்ளங்கைகளைச் சேர்த்துக் கொண்டு நிற்கும் அடியவர்கள் மனக்கண்முன் தோன்றி அருள் செய்ய வல்லவனும், தன் திருவடிகளில் சேர்ப்பதற்கு உள்ளங்கைகளிற் பல பூக்களையும் கொண்ட அடியார்களுக்கு அன்புமிகுமாறு நிற்பவனும், கூந்தலை உடைய கங்கையை அழகிய சடையில் வைத்து மறைத்தவனும், தீயினைத் தாங்கத் தன் உள்ளங்கையை நீட்டி ஏற்று ஏந்தும் ஆற்றல் உடையவனும் ஆரூர் அமர்ந்த அம்மானேயாவான். |
| **39.** ஆயிரந் தாமரை போலும்<br>ஆயிரஞ் சேவடி யானும்<br>ஆயிரம் பொன்வரை போலும்<br>ஆயிரந் தோளுடை யானும்<br>ஆயிரம் ஞாயிறு போலும்<br>ஆயிரம் நீண்முடி யானும்<br>ஆயிரம் பேருகந் தானு<br>மாரூ ரமர்ந்தவம் மானே. 8 | ஆயிரம் தாமரை மலர்கள் போன்ற ஆயிரம் திருவடிகளை உடையவனும், ஆயிரம் மேருமலைகளைப் போன்ற ஆயிரம் தோள்களை உடையவனும், ஆயிரம் சூரியர்களைப் போன்ற ஆயிரம் நீண்ட முடிகளை உடையவனும், ஆயிரம் பெயர்களை விரும்பிக் கொள்பவனும், ஆரூர் அமர்ந்த அம்மான் ஆவான். ஆயிரம் பன்மை குறித்து நின்றது. |
| **40.** வீடரங் காநிறுப் பானும்<br>விசும்பினை வேதி தொடர<br>ஓடரங் காகவைத் தானும்<br>ஓங்கியொ ரூழியுள் ளானும்<br>காடரங் காமகிழ்ந் தானுங்<br>**காரிகை யார்கண் மனத்துள்**<br>ஆடரங் கத்திடை யானு<br>மாரூ ரமர்ந்தவம் மானே. 9 | முத்தி உலகை ஞான ஆனந்தக் கூத்து நிகழ்த்தும் இடமாக நிலை நிறுத்தியவனும், தன் முடியைக் காண்பதற்குப் பிரமன் வானத்தில் தொடர்ந்து உயரத் தேடி ஓடுகின்ற வெளியிடத்தைத் தான் ஆடும் அரங்கமாகக் கொள்பவனும், பல ஊழிக் காலங்களிலும் உயர்ந்து உள்ளவனும், சுடுகாட்டை ஆடும் அரங்கமாக மகிழ்ந்து ஏற்பவனும் தன்னை **வழிபடும் மகளிருடைய கண்களையும் மனத்தையும் தான் ஆடும் அரங்கமாகக்** கொண்டு அவற்றிடை உறைபவனும் ஆரூர் அமர்ந்த அம்மானேயாவான். |

41. பையஞ் சுடர்விடு நாகப்
பள்ளிகொள்வா னுள்ளத் தானும்
கையஞ்சு நான்குடை யானைக்
கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப்
புகழ்புரிந் தார்க்கருள் செய்யும்
ஐயஞ்சி னப்புறத் தானு
மாரூ ரமர்ந்தவம் மானே. 10

படமெடுக்கும் அழகிய ஒளியை வெளிப்படுத்துகின்ற பாம்பில் பள்ளி கொள்ளும் திருமாலுடைய உள்ளத்தில் இருப்பவனும், இருபது கைகளை உடைய இராவணனைத் தன் கால் விரல் ஒன்றினால் நசுக்கியவனும், பொய் பேசுதற்கு அஞ்சி உண்மையையே பேசிப் புகழை விரும்பும் அடியவர்களுக்கு அருள் செய்வானும், இருபத்தைந்து தத்துவங்களைக் கடந்து நிற்பவனும் ஆரூர் அமர்ந்த அம்மான் ஆவான்.

## 5. திருவாரூர்

பண் : காந்தாரம் பதிக எண் : 5

## திருவாரூர் பழமொழித் திருப்பதிகம்

1. முதல் பழமொழி – கனியிருக்கக் காய் கவர்ந்த கள்வனேனே
2. இரண்டாவது பழமொழி – முயல்விட்டுக் காக்கைப்பின் போனவாறே
3. மூன்றாவது பழமொழி – அறமிருக்க மறம் விலைக்குக் கொண்டவாறே
4. நான்காவது பழமொழி – பனிநீரால் பாவை செயப்பாவித்தேனே
5. ஐந்தாவது பழமொழி – ஏதன் போர்க்காதனாயகப் பட்டேனே
6. ஆறாவது பழமொழி – இருட்டறையின் மலடு கறந்தெய்த்தவாறே
7. ஏழாவது பழமொழி – விளக்கிருக்க மின்மினித் தீய்க்காய்ந்தவாறே
8. எட்டாவது பழமொழி – பாழூரிற் பயிக்கம்புக் கெய்த்தவாறே
9. ஒன்பதாவது பழமொழி – தவமிருக்க அவஞ்செய்து தருக்கினேனே
10. பத்தாவது பழமொழி – கரும்பிருக்க இரும்பு கடித்தெய்த்தவாறே

இப்பதிகத்தின் ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு பழமொழியை வைத்துக்காட்டி அருளியிருத்தலால் இப்பதிகம் பழமொழித் திருப்பதிகம் என்று வழங்கப்படும். தாம் அவதரித்த சைவச்சார்பு இருக்கவும் தாமே வலிந்து சென்று சமண் சார்பிற் சாலநாள் போக்கித் தம் வாழ்நாளை கழித்தமைபற்றி அப்பர் மிக வருந்தி இதனைப் பாடியருளினார் என்பது, அவ்வொரு செயலினுக்கே பத்துப் பழமொழிகளால் உவமித்து வருந்தியதால் விளங்கும்.

நல்லன இருக்க அவற்றைப் பயன்படுத்தி உய்யாது தீமையில் செல்வதற்கு இவை உவமையாவன.

| | |
|---|---|
| **42.** மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த<br>மேனியான் தாள்தொ ழாதே<br>உய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி<br>யுழிதந்தென் னுள்ளம் விட்டுக்<br>கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ<br>மயிலாலு மாரூ ரரைக்<br>கையினாற் றொழா தொழிந்து கனியிருக்கக்<br>காய்கவர்ந்த கள்வ னேனே. 1 | உடம்பெல்லாம் வெண்ணீறு பூசிய பெருமானுடைய திருவடிகளை வழிபடாமல், கடைத்தேறலாம் என்று நினைத்துச் சமணசமயத்தைத் தழுவி உறியைத் தூக்கிக் கொண்டு திரிந்து மனத்தை அச்சமயத்தில் பறி கொடுத்து, கொய்தற்காக அடியவர்கள் உலவும் பூக்களை உடைய சோலைகளில் குயில்கள் கூவவும் மயில்கள் ஆடவும் அமைந்திருக்கும் திருவாரூரில் உகந்தருளியிருக்கும் பெருமானைக் கையினால் தொழாது காலத்தை வீணாக்கிச் சுவையுடைய இனிய கனி இருக்கவும் அதனை விடுத்துச் சுவையற்ற காய்களை விரும்பிய கள்வனாகி விட்டேனே. |
| **43.** என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட்<br>டென்னையோ ருருவ மாக்கி<br>இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட்<br>டென்னுள்ளங் கோயி லாக்கி<br>அன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண்<br>டருள்செய்த வாரூ ரர்தம்<br>முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக்<br>காக்கைப்பின் போன வாறே. 2 | எலும்புகளை அடித்தளமாக அமைத்து நரம்பு களையும் தோலையும் பொருந்துமாறு இணைத்து எனக்கு ஓர் உருவத்தைக் கொடுத்து, இன்பங்களை நுகர் பொருளாக வைத்து, முன்பு அடியேன் செய்து குவித்திருந்த வினைகளைப் போக்கி அடியேனுடைய உள்ளத்தைத் தம் இருப்பிடமாகச் செய்து அடியேன் உள்ளத்தில் அன்பினை நிலைநிறுத்தி, அடியேனை ஆளுதலைக் கடமை (கூழைமை) யாகக் கொண்ட ஆரூர்ப் பெருமானுடைய திரு முன்னர் இருக்கும் வாய்ப்பினை நெகிழவிட்டு, கைப்பற்றுதற்கு எளிதாய் உண்பார்க்குச் சுவையை உடையதான முயலை விடுத்துக் கைப்பற்றுதற்கும் அரிதாய்க் கைக்கொண்டாலும் உணற்குத் தகுதியற்றதாய் உள்ள காக்கை பின் சென்ற அறிவிலியைப் போல ஆகிவிட்டேனே! |
| **44.** பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங்<br>குண்டர்கள்தஞ் சொல்லே கேட்டு<br>உருகுவித்தென் னுள்ளத்தி னுள்ளிருந்த<br>கள்ளத்தைத் தள்ளிப் போக்கி<br>அருகுவித்துப் பிணிகாட்டி யாட்கொண்டு<br>பிணிதீர்த்த வாரூ ரர்தம்<br>அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க<br>மறம்விலைக்குக் கொண்ட வாறே. 3 | முன்பெல்லாம் உடல்பருத்த சமணத் துறவியரின் சொற்களையே செவிமடுத்து அடியேனுடைய தீவினைகளையே பெருகச் செய்து, உளம் உருகி உள்ளத்தில் தேங்கியிருந்த கள்ளஉணர்வை அடியோடு நீங்கி, பிணியை உண்டாக்கித் தம் அருகு வரச் செய்து, அடியவனாகக் கொண்டு அடியேனுடைய பிணியைப் போக்கிய ஆரூர்ப் பெருமானுடைய அருகிலே இருத்தற்குரிய நல்வினையில்லாமல் பல்லாண்டுக் காலம், விலை கொடுத்தாகிலும் பெறத்தக்க அறம் விலை கொடுக்காமலேயே கிட்டவும் அதனை விடுத்து, விலையின்றிக் கிட்டிலும் வெறுக்கத்தக்க பாவத்தை விலை கொடுத்துப் பெற்ற அறிவில்லாதவனாக ஆகிவிட்டேனே. |

| | |
|---|---|
| **45.** குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார்<br>நகைநாணா துழிதர் வேனைப்<br>பண்டமாப் படுத்தென்னைப் பாறலையிற்<br>றொளித்துத்தன் பாதங் காட்டித்<br>தொண்டெலா மிசைபாடத் தூமுறுவ<br>லருள்செய்யு மாரூ ரரைப்<br>பண்டெலா மறியாதே பனிநீராற்<br>பாவைசெயப் பாவித் தேனே. 4 | உடல் பருத்தவனாய்த் தலை மயிரை வலியப் பறித்துத் தலையை மொட்டையாக்கிக் கொண்டு, இள மகளிருடைய ஏளனச் சிரிப்பிற்கும் வெட்கப்படாமல் திரிந்த அடியேனை ஒரு பொருளாக ஏற்றுக்கொண்டு, பால் முதலிய பஞ்சகவ்வியத்தால் தூய்மை பெறச்செய்து தன் திருவடிகளைத் தரிசிப்பதற்குத் தொண்டர்கள் எல்லோரும் தம்புகழைப் பாட அதனைச் செவி மடுத்துப் புன்முறுவலோடு அருள் செய்யும் அப்பெருமானை என் வாழ்க்கையின் முற்பகுதியில் அறியாமல் திரவ வடிவமாக இருக்கும் குளிர்ந்த நீரினால் திடப்பொருளாகிய பொம்மையைச் செய்ய முற்படுபவரைப் போல, உண்மையறிவுக்குப் புறம்பான செயல்களில் ஈடுபட்டேன் ஆனேனே. |
| **46.** துன்னாகத் தேனாகித் துர்ச்சனவர்<br>சொற்கேட்டுத் துவர்வாய்க் கொண்டு<br>என்னாகத் திரிதந்தீங் கிருகையேற்<br>றிடவுண்ட ஏழை யேனான்<br>பொன்னாகத் தடியேனைப் புகப்பெய்து<br>பொருட்படுத்த வாரூ ரரை<br>என்னாகத் திருத்தாதே யேதன்போர்க்<br>காதனா யகப்பட் டேனே. 5 | கொடிய பாம்பினை ஒத்தேனாகித் தீயவர் சொற்களைக் கேட்டு, கடுக்காயை உண்பதால் அதன் கறை படிந்த பற்களை உடையேனாய், என் விருப்பம்போலத் திரிந்து இரு கைகளையும் இணைத்து அவற்றில் பிச்சை ஏற்ற உணவினை உண்ட அறிவிலியாகிய அடியேன், பொன் போன்ற செவ்விய உடலிலே அடியேனை இருத்திக் குறிப்பிடத்தக்க பொருளாக அடியேனை ஆக்கிய ஆரூர்ப் பெருமானை என் உள்ளத்தில் நிலையாக இருக்கச் செய்யாமல், ஒருவன், விளைத்த சண்டையில் அதனோடு யாதும் தொடர்பில்லாத மற்றவன் அகப்பட்டுத் துன்புறுவதுபோல நவீனரான சமணர்கள் செய்த செயல்களில் பரம்பரைச் சைவனாகிய அடியேன் அகப்பட்டுப் பல்லாண்டுகள் துன்புற்றேனே. |
| **47.** பப்போதிப் பவணனாய்ப் பறித்ததொரு<br>தலையோடே திரிதர் வேனை<br>ஒப்போட வோதவித்தென் னுள்ளத்தி<br>னுள்ளிருந்தங் குறுதி காட்டி<br>அப்போதைக் கப்போது மடியவர்கட்<br>காரமுதா மாரூ ரரை<br>எப்போதும் நினையாதே யிருட்டறையின்<br>மலடுகறந் தெய்த்த வாறே. 6 | உலகில் பிறக்கும் பிறவிகளையே நல்கும் நூல்களை ஓதிச் சமணனாய் வலிய மயிர் நீக்கப்பட்ட மொட்டைத் தலையோடு திரியும் அடியேனை நிகரில்லாத வகையில் உவமையிலாக் கலைஞானத்தை உபதேசித்து என் உள்ளத்தினுள்ளே தங்கி உயிருக்கு உறுதியானவற்றைத் தெரிவித்து ஒவ்வொரு கணமும் அடியவர்களுக்குக் கிட்டுதற்கரிய அமுதமாக உள்ள ஆரூர்ப் பெருமானை எப்பொழுதும் நினையாமல், கறப்பவனொருவன், பயனின்மை மட்டிலன்றிக் காலுதையும் பட்டிளைப்பவனாய் இருட்டறையில் மலட்டுப் பசுவை பால் வேண்டிக் கறந்து இளைப்பது போலப் பயனின்றித் துன்புறுதலோடு வாழ்நாளின் முற்பகுதியைக் கழித்தேனே. |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **48.** கதியொன்று மறியாதே கண்ணழலத்<br>தலைபறித்துக் கையி லுண்டு<br>பதியொன்று நெடுவீதிப் பலர்காண<br>நகைநாணா துழிதர் வேற்கு<br>மதிதந்த வாரூரில் வார்தேனை<br>வாய்மடுத்துப் பருகி யுய்யும்<br>விதியின்றி மதியிலியேன் விளக்கிருக்க<br>மின்மினித்தீக் காய்ந்த வாறே. 7 | இனிச்சென்று சேரும் வழியை அறியாமல், கண் எரியுமாறு தலைமயிரை வலியப்பறித்து, கைகளிலேயே உணவை வாங்கியவாறே உண்டு ஊர்களிலுள்ள பெருந்தெருக்களில் பலரும் காண அவருடைய ஏளனச் சிரிப்புக்கு வெட்காமல் திரியும் அடியேனுக்கு நல்லறிவை வழங்கி ஆரூரில் நிறைந்த தேனாகிய பெருமானை நுகர்ந்து கடைத்தேறும் வாய்ப்பினைப் பெறாத நல்லறிவு இல்லாத அடியேன், விளக்கு இருக்கவும் மின்மினியினுடைய தீயைக் குளிர் காயக் கொள்வாரைப் போலப் பயனுடைய பொருளை விடுத்துப் பயனில்லாத பொருளைக் கைகொண்டு வாழ்நாளை வீணாய்க் கழித்தேனே. |
| **49.** பூவையாய்த் தலைபறித்துப் பொறியற்ற<br>சமண்நீசர் சொல்லே கேட்டுக்<br>காவிசேர் கண்மடவார்க் கண்டோடிக்<br>கதவடைக்குங் கள்வ னேன்றன்<br>ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை<br>யாட்கொண்ட வாரூ ரரைப்<br>பாவியே னறியாதே பாழூரிற்<br>பயிக்கம்புக் கெய்த்த வாறே. 8 | தலைமயிரை வலியப் பறித்து, நல்வினையில்லாத கீழோராகிய சமணத் துறவியரின் உபதேசத்தைச் செவிமடுத்து, நாகணவாய்ப் பறவை போன்ற இனிய குரலை உடையவர்களாய், குவளை மலர் போன்ற கண்களையும் உடைய பெண்களைக் கண்டாலே தீவினை என்று அவர்களை ஒரோவழிக் கண்டவழி ஓடிச் சென்று இருப்பிடத்தின் கதவினை மூடிக்கொள்ளும் கள்ளத்தன்மை உடைய அடியேனுடைய உயிர் சூலைநோயால் நீங்காதபடி காத்து, என்னை அடிமை கொண்ட ஆரூர்ப் பெருமானை அடியேன் உள்ளவாறு அறியாதே மக்கள் குடிபோகிய ஊரிலே பிச்சை எடுக்கச் சென்று இளைத்தவர் போல் ஆகிவிட்டேனே. |
| **50.** ஒட்டாத வாளவுணர் புரமூன்று<br>மோரம்பின் வாயின் வீழக்<br>கட்டானைக் காமனையுங் காலனையுங்<br>கண்ணினொடு காலின் வீழ<br>அட்டானை யாரூரி லம்மானை<br>யார்வச்செற் றக்கு ரோதம்<br>தட்டானைச் சாராதே தவமிருக்க<br>அவஞ்செய்து தருக்கி னேனே. 9 | தன்னோடு நட்புறாத கொடிய அசுரர்களின் மும்மதில்களும் ஓரம்பினால் உருக்குலையுமாறு அழித்தவனாய், காமன் தன் கண்ணினாலும், காலன் தன் காலினாலும் அழியுமாறு அவர்களைத் துன்புறுத்தியவனாய், ஆரூரின் தலைவனாய், பற்று, பகைமை, கோபம் என்ற தீப்பண்புகள் தன்மாட்டு அணுகப் பெறானாய் உள்ள பெருமானை அணுகாமல் தவம் செய்தற்குரிய செயலாய் இருக்கவும், அதனை விடுத்து, பயனற்ற செயல்களைச் செய்து பெருமிதம் கொண்டு திரிந்தேனே. |

51. மறுத்தானொர் வல்லரக்க னீரைந்து
முடியினொடு தோளுந் தாளும்
இறுத்தானையெழின் முளரித்தவிசின்மிசையி
ருத்தான்றன் தலையி லொன்றை
அறுத்தானை யாரூரி லம்மானை
யாலால முண்டு கண்டம்
கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க
இரும்புகடித் தெய்த்த வாறே. 10

முளரி – தாமரை
தவிசு – தங்குதல், இருக்கை

தேர்ப்பாகன் கூற்றை மறுத்துக் கயிலையைப் பெயர்க்க முற்பட்ட வலிமை உடைய இராவணனுடைய பத்துத் தலைகளும் தோள்களும் அடிகளும் செயலறும்படி நசுக்கியவனாய், அழகிய தாமரை மலரிலிருந்த பிரமன் தலையில் ஒன்றை அறுத்தவனாய், விடமுண்ட நீலகண்டனாய் உள்ள ஆரூர்ப் பெருமானை மனத்து நினையாமல் மெல்லுதற்கு ஏற்றதாய் மிகுசுவை உடையதாய் இருக்கும் கரும்பை விடுத்து, கடிக்க இயலாத சுவையற்ற இரும்பைக் கடித்து அடியேன் வாழ்வின் முற்பகுதியில் இளைத்தேனே.

## 6. திருக்கழிப்பாலை

பண் : காந்தாரம் — பதிக எண் : 6

தலைவனைப் பிரிந்த தலைவியினது மெலிவுகண்டு, செவிலி அல்லது தாய் கூறிய துறையாக அகப் பொருட்சுவையில் அமைந்தது இத்திருப்பதிகம். கழிப்பாலையின் மேல் பாடிய மற்றுமொரு குறுந்தொகைத் திருப்பதிகமும் அகப்பொருள் துறையிலேயே பாடப்பட்டுள்ளது. கழிப்பாலைக்கும் அகத்துறைக்கும் அப்பர் என்ன பொருத்தம் கண்டார் என்பது தெரியவில்லை.

52. வனபவள வாய்திறந்து வானவர்க்குந்
தானவனே யென்கின் றாளாற்
சினபவளத் திண்டோண்மேற் சேர்ந்திலங்கு
வெண்ணீற்ற னென்கின் றாளால்
அனபவள மேகலையொ டப்பாலைக்
கப்பாலா னென்கின் றாளால்
கனபவளஞ் சிந்துங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 1

"கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ" என்பது பதிக மகுடமாகும்.

அழகிய பவளம் போன்ற வாயைத் திறந்து தேவர்களுக்கும் அருள் வழங்குகின்றவனே என்கின்றாள். சிவந்த பவளம் போன்ற திண்ணிய தோள்களின்மேல் சேர்ந்து விளங்கும் வெள்ளிய திருநீறு அணிந்தவனே என்கின்றாள். அன்னம் போன்ற நடையினளாய்ப் பவளத்தாலாகிய மேகலையை அணிந்த பார்வதியோடு சுத்தாவத்தைகளுள் துரியத்துக்கு அப்பாற்பட்ட துரியாதீதத்தில் உள்ளவன் என்கின்றாள். பெரிய பவளங்களைக் கடல் கரையில் சேர்க்கும் திருக்கழிப்பாலையில் உள்ள எம்பெருமானை என்மகள் தரிசித்தாளோ ?

53. வண்டுலவு கொன்றை வளர்புன்
சடையானே யென்கின் றாளால்
விண்டலர்ந்து நாறுவதொர் வெள்ளெருக்க
நாண்மலருண் டென்கின் றாளால்
உண்டயலே தோன்றுவதொ ருத்தரியப்
பட்டுடைய னென்கின் றாளால்
கண்டயலே தோன்றுங் கழிப்பாலைச்
சேர்வனைக் கண்டாள் கொல்லோ. 2

வண்டுகள் உலவும் கொன்றைப் பூக்கள் தங்கிய செந்நிறச் சடையனே! என்கின்றாள். இதழ் விரிந்து நறுமணம் கமழும் புதிய வெள்ளெருக்க மலரும் அச்சடையில் உள்ளது என்றும் பக்கத்தில் காட்சி வழங்கும் மேலாடையாகப் பட்டினைஅவன் அணிந்திருத்தலும் உண்டு என்றும் கூறுகின்ற என் பெண், கழிமுள்ளி கடற்கரையருகே வளருகின்ற கழிப்பாலைப் பெருமானைக் கண்டாளோ ?

| | |
|---|---|
| **54.** பிறந்திளைய திங்களெம் பெம்மான்<br>முடிமேல தென்கின் றாளால்<br>நிறங்கிளருங் குங்குமத்தின் மேனி<br>யவனிறமே யென்கின் றாளால்<br>மறங்கிளர்வேற் கண்ணாள் மணிசேர்<br>மிடற்றவனே யென்கின் றாளால்<br>கறங்கோத மல்குங் கழிப்பாலைச்<br>சேர்வானைக் கண்டாள் கொல்லோ. **3** | இளைய பிறைச்சந்திரன் எம்பெருமான் முடிமேல் உள்ளது என்கின்றாள். அவன் திருமேனியின் நிறம் ஒளிவீசும் குங்குமத்தின் நிறமே என்றும், வீரத்தை வெளிப்படுத்தும் வேல் போன்ற கண்களையுடைய பார்வதிதேவியின் கண்மணி போன்ற, நீலகண்டன் என்றும் கூறுகின்ற என் பெண் ஒலிக்கின்ற கடல் வெள்ளம் மிகுகின்ற கழிப்பாலையை உகந்தருளியிருக்கும் பெருமானைத் தரிசித்தாளோ? |
| **55.** இரும்பார்ந்த சூலத்த னேந்தியொர்<br>வெண்மழுவ னென்கின் றாளால்<br>சுரும்பார் மலர்க்கொன்றைச் சுண்ணவெண்<br>ணீற்றவனே யென்கின் றாளால்<br>பெரும்பால னாகியொர் பிஞ்ஞக<br>வேடத்த னென்கின் றாளால்<br>கரும்பானல் பூக்குங் கழிப்பாலைச்<br>சேர்வானைக் கண்டாள் கொல்லோ. **4** | இரும்பினாலாய சூலமும் மழுப்படையும் ஏந்தியவன் என்கின்றாள். வண்டுகள் பொருந்திய கொன்றை மலரைச் சூடித் திருநீறை அணிந்தவன் என்றும், பெரிய இடப்பகுதியைப் பார்வதி பாகமாகக் கொண்டு அப்பகுதியில் விளங்கும் தலைக்கோலத்தை உடையவன் என்றும் கூறுகின்ற என் பெண், கருங்குவளை மலர்கள் பூக்கும் கழிப்பாலைப் பெருமானைத் தரிசித்தாளோ? |
| **56.** பழியிலான் புகழுடையான் பானீற்ற<br>னானேற்ற னென்கின் றாளால்<br>விழியுலாம் பெருந்தடங்கண் ணிரண்டல்ல<br>மூன்றுளவே யென்கின் றாளால்<br>சுழியுலாம் வருகங்கை தோய்ந்த<br>சடையவனே யென்கின் றாளால்<br>கழியுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச்<br>சேர்வானைக் கண்டாள் கொல்லோ. **5** | எம்பெருமான் பழியில்லாதவன், புகழுடையவன், பால் போன்ற நீறு அணிந்தவன், காளை வாகனத்தை உடையவன் என்கின்றாள். அவனுக்கு விழிகளாக அமைந்தவை இரண்டல்ல, மூன்று என்கின்றாள். அவன், நீர்ச்சுழிகளோடு பரவும் கங்கை வந்து தங்கிய சடைமுடியை உடையவன் என்றும் கூறுகின்ற என் பெண், எங்கும் பரவி ஓடுகின்ற உப்பங்கழிகளால் சூழப்பட்ட திருக்கழிப்பாலைப் பெருமானைத் தரிசித்தாளோ? |
| **57.** பண்ணார்ந்த வீணை பயின்ற<br>விரலவனே யென்கின் றாளால்<br>எண்ணார் புரமெரித்த வெந்தை<br>பெருமானே யென்கின் றாளால்<br>பண்ணார் முழவதிரப் பாடலொ<br>டாடலனே யென்கின் றாளால்<br>கண்ணார் பூஞ்சோலைக் கழிப்பாலைச்<br>சேர்வானைக் கண்டாள் கொல்லோ. **6** | பண்கள் நிறைந்து ஒலித்தற்கு இடமான கருவியாகிய வீணையை ஒலியெழுப்பும் விரல்களை உடையவனே! என்கின்றாள். பகைவருடைய மும்மதில்களையும் தீக்கு இரையாக்கிய எம் தந்தையாகிய பெருமானே! என்கின்றாள். பண்களுக்கு ஏற்ப முழவு என்ற தோற்கருவி ஒலிக்கப் பாடிக் கொண்டு கூத்து நிகழ்த்துபவனே! என்றும் கூறுகின்ற என் பெண், கண்ணுக்கு நிறைவைத் தரும் பூக்கள் நிறைந்த சோலைகளையுடைய திருக் கழிப்பாலை இறைவனைத் தரிசித்தாளோ? |

| | |
|---|---|
| **58.** முதிருஞ் சடைமுடிமேன் மூழ்கு<br>மிளநாக மென்கின் றாளால்<br>அதுகண் டதனருகே தோன்று<br>மிளமதிய மென்கின் றாளால்<br>சதுர்வெண் பளிக்குக் குழைகாதின்<br>மின்னிடுமே யென்கின் றாளால்<br>கதிர்முத்தஞ் சிந்துங் கழிப்பாலைச்<br>சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 7 | நன்கு செறிந்து நிறைந்த சடைமுடிமேல் இளநாகம் மறைந்து கிடக்கிறது என்கின்றாள். அதனைக் கண்டு அஃது ஊறுதாராது என்ற கருத்தோடு அதன் அருகிலே பிறை காட்சி வழங்குகின்றது என்றும், வேலைப்பாடு அமைந்த வெண்ணிறத்ததாகிய பளிங்கினாலாகிய காதணி காதில் இருந்து கொண்டு ஒளி வீசுகின்றது என்றும் கூறுகின்ற என்பெண், ஒளி வீசுகின்ற முத்துக்களைக் கடல் அலை கரைக்கண் செலுத்தும் திருக்கழிப்பாலைப் பெருமானைத் தரிசித்தாளோ? |
| **59.** ஓரோத மோதி யுலகம்<br>பலிதிரிவா னென்கின் றாளால்<br>நீரோத மேற நிமிர்புன்<br>சடையானே யென்கின் றாளால்<br>பாரோத மேனிப் பவள<br>மவனிறமே யென்கின் றாளால்<br>காரோத மல்குங் கழிப்பாலைச்<br>சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 8 | ஓர்ந்து கொள்ளத்தக்க வேதங்களை ஓதிக்கொண்டு உலகம் முழுவதும் பிச்சை ஏற்றுத் திரிகின்றவனே! என்கின்றாள். கங்கை நீர்வெள்ளம் உயர அதற்கேற்ப உயர்ந்து தோன்றும் செந்நிறச் சடையவனே என்றும், உலகைச் சூழ்ந்த கடலில் உள்ள செந்நிறப் பவளம் எம்பெருமானுடைய திருமேனியின் நிறமே! என்றும் கூறுகின்ற என் பெண், கரிய கடல்வெள்ளம் மிகும் திருக்கழிப்பாலையின் பெருமானைத் தரிசித்தாளோ? |
| **60.** வானுலாந் திங்கள் வளர்புன்<br>சடையானே யென்கின் றாளால்<br>ஊனுலாம் வெண்டலைகொண் டூரூர்<br>பலிதிரிவா னென்கின் றாளால்<br>தேனுலாங் கொன்றை திளைக்குந்<br>திருமார்ப னென்கின் றாளால்<br>கானுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச்<br>சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 9 | வானத்தில் உலவ வேண்டிய பிறைதங்கிய செஞ்சடையனே! என்றும் புலால் நாற்றம் கமழும் வெண்ணிற மண்டையோட்டைக் கையில் கொண்டு ஊர்ஊராகப் பிச்சைக்குத் திரிகின்றவனே! என்றும் தேன் என்ற வண்டினங்கள் சுற்றும் கொன்றைப் பூக்கள் சிறந்து விளங்கும் திருமார்பினனே! என்றும், எம்பெருமானைப் பற்றிக் கூறும் என்மகள், எங்கும் பரவுகின்ற நறுமணம் சூழ்ந்த திருக்கழிப்பாலையிலுள்ள பெருமானைத் தரிசித்தாளோ? |

61. அடர்ப்பரிய விராவணனை யருவரைக்கீ
ழடர்த்தவனே யென்கின் றாளால்
சுடர்ப்பெரிய திருமேனிச் சுண்ணவெண்
ணீற்றவனே யென்கின் றாளால்
மடற்பெரிய வாலின்கீ ழறநால்வர்க்
கன்றுரைத்தா னென்கின் றாளால்
கடற்கருவி சூழ்ந்த கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 10

துன்புறுத்தி வெல்லுவதற்கரிய இராவணனைக் கயிலைமலையின் கீழ் வருத்தியவனே! என்றும், ஒளி வீசும் பெருமையை உடைய திருமேனியில் நீறு பூசியவனே! என்றும், பெரிய இலைகளை உடைய கல்லால மரத்தின் கீழிருந்து சனகர் முதலிய முனிவர் நால்வருக்கு ஒரு காலத்தில் அறத்தை உபதேசித்தவனே என்றும் கூறுகின்ற என் பெண், கடலின் தொகுதிகளாகிய உப்பங்கழிகள் சூழ்ந்த திருக்கழிப்பாலையின் பெருமானைத் தரிசித்தாளோ?

## 7. திருக்கச்சியேகம்பம்

பண் : காந்தாரம் பதிக எண் : 7

(ஏழு திருமுறைகளில் எல்லாச் செந்தமிழ் மாலைகளாலும் பாடல் பெற்ற தலம்)

62. கரவாடும் வன்னெஞ்சர்க்
கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை
விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ
வங்கையினி லனலேந்தி
இரவாடும் பெருமானை
யென்மனத்தே வைத்தேனே. 1

கரவு – கள்ளம். இறைவர்பால் வைக்கத்தக்க மனம், மொழி, மெய்களைப் பிறவற்றிற்காக்குதல் கள்ளமெனப்பட்டது. "கருவார்க்கச்சித் திருவேகம்பன்" என்பது ஆளுடைய பிள்ளையார் தேவாரமாகும்.

பெருமானை மறைத்தலும் மறத்தலும் செய்த உலகப் பொருள்களில் திளைக்கும் வலிய நெஞ்சினை உடையவர்கள் உணர்தற்கு அரியவனாய், வஞ்சனையில்லாத அடியவர் உள்ளத்தில் கலந்து கூத்து நிகழ்த்தும் பெருமானாய், காளையை ஏறும் திறனுடையவனாய், பாம்புகள் படமெடுத்து ஆடவும் சடை தொங்கவும், உள்ளங்கையில் தீயினை ஏந்தி இரவினில் கூத்தாடும் பெருமானை என் மனத்தில் நிலையாக வைத்துக் கொண்டேன்.

63. தேனோக்குங் கிளிமழலை
யுமைகேள்வன் செழும்பவளம்
தானோக்குந் திருமேனி
தழலுருவாஞ் சங்கரனை
வானோக்கும் வளர்மதிசேர்
சடையானை வானோர்க்கும்
ஏனோர்க்கும் **பெருமானை**
**யென்மனத்தே வைத்தேனே.** 2

"பெருமானை என்மனத்தே வைத்தேனே" என்பது பதிக மகுடமாகும்.

தேனை ஒத்து இனிமையதாய்க் கிளி மழலை போன்ற மழலையை உடைய உமாதேவியின் கணவனாய், செழும் பவளம் போன்ற செந்நிறமேனியனாய்த் தழல் உருவனாய், எல்லோருக்கும் நன்மை செய்பவனாய், சிவந்த வானத்தை ஒத்த செஞ்சடையில் பிறையைச் சூடியவனாய்த் தேவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தலைவ னாகிய பெருமானை என் மனத்தில் நிலையாக வைத்துக் கொண்டேன்.

64. கைப்போது மலர்தூவிக்
காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத்
தொழநின்ற முதல்வனை
**அப்போது மலர்தூவி**
**யைம்புலனு மகத்தடக்கி**
எப்போது மினியானை
யென்மனத்தே வைத்தேனே. 3

கைகளால், அலரும் பருவத்து மொட்டுக்களையும் பூக்களையும் அர்ப்பணித்து, விருப்போடு தேவர்கள் காலை, நண்பகல், மாலை என்ற மூன்று வேளைகளிலும் தலையால் வணங்கித் தொழுமாறு நிலைபெற்ற முழுமுதற் கடவுளாய் எனக்கு எப்பொழுதும் இனியனாக உள்ள பெருமானை ஐம்புலன்களையும் உள்ளத்தால் அடக்கி, அபிடேக நீரையும் மலர்களையும் அர்ப்பணித்து என் மனத்தில் நிலையாக வைத்துக் கொண்டேன்.

---

தூவியும் – அடக்கியும் மனத்தேவைத்தல் – கரவாடும் வன்னெஞ்சர்க்கரியான், விடையேறும் வித்தகன், சங்கரன், வானோர்க்கும், ஏனோர்க்கும் பெருமான், எப்போது மினியான், ஐம்பூதப் பிண்டமாய் உலகுக்கோர் மெய்ப்பொருளாம் பிஞ்ஞகன், ஆயிரம் பேரம்மான், திருமாலால் பூசன், நிலநீர் தீ வளி ஆகாசமாம் ஈசன், வல்லார்கள் மனத்துறையும் மைந்தன், சொல்லார்ந்த பொருளான், துகளேது மில்லான், பதம் சந்திப் பொருளுருவாம் புண்ணியன் என்றிவை முதலிய பெருமைகளால் அறியப்படுகின்ற மதிற்கச்சியேகம்பமேவிய இறைவரை அப்போது மலர் தூவி ஐம்புலனு மகத்தடக்கி என் மனத்தே வைத்தேன்.

காஞ்சியில் மலர் தூவிப் பூசித்தல் என்ற கோட்பாட்டை நமக்கு உணர்த்தியவர், தழுவக்குழைந்த அம்மை ஆவார். அதற்குப்பின் பூசனை என்னும் மண்வாசனை வாழையடி வாழையாக நமக்குத் தொடர்ந்து வருவது நாம் பெற்ற பேறு.

---

65. அண்டமா யாதியா
யருமறையொ டைம்பூதப்
பிண்டமா யுலகுக்கோர்
**பெய்பொருளாம்** பிஞ்ஞகனைத்
தொண்டர்தா மலர்தூவிச்
சொன்மாலை புனைகின்ற
இண்டைசேர் சடையானை
யென்மனத்தே வைத்தேனே. 4

பெய்பொருள் – அடையப்படும் பொருள்

உலகங்களாய், உலகங்களுக்குக் காரணனாய் அரிய வேதங்களாய், ஐம்பெரும் பூதங்களின் பிண்டமாகவும் உலகத்தார்க்குக் கருத்துப் பொருளாகவும் உள்ளவனும், தலைக்கோலத்தை உடையவனாய், அடியவர்கள் மலர்களை அர்ப்பணித்துச் சொல்லால் ஆகிய பாமாலை புனைந்து அணிவிக்கின்ற, தலைமாலை அணிந்த சடையை உடைய பெருமானுமாபவனை என் மனத்தில் நிலையாக வைத்துக் கொண்டேன்.

---

66. ஆறேறு சடையானை
யாயிரம்பே ரம்மானைப்
பாறேறு படுதலையிற்
பலிகொள்ளும் பரம்பரனை
நீறேறு திருமேனி
நின்மலனை நெடுந்தூவி
ஏறேறும் பெருமானை
யென்மனத்தே வைத்தேனே. 5

கங்கை தங்கிய சடையினனாய், ஆயிரம் திருநாமங்களை உடைய தலைவனாய், பருந்துகள் படிகின்ற இறந்துபட்ட மண்டையோட்டில் பிச்சை ஏற்கும் மேம்பட்ட இறைவனாய், திருநீறு அணிந்த திருமேனியை உடைய தூயோனாய் நீண்ட வாலினை உடைய காளையை இவரும் பெருமானை என் மனத்தில் நிலையாக வைத்துக் கொண்டேன்.

| | |
|---|---|
| **67.** தேசனைத் தேசங்கள்<br>தொழநின்ற திருமாலால்<br>**பூசனைப் பூசனைக**<br>**ளுகப்பானைப்** பூவின்கண்<br>வாசனை மலைநிலம்நீர்<br>தீவளியா காசமாம்<br>ஈசனை யெம்மானை<br>யென்மனத்தே வைத்தேனே. 6<br><br>"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும் உண்மையாவது பூசனை" – திருத்தொண்டர் புராணம் | ஒளிவடிவினனாய், உலகங்கள் வழிபடுமாறு உள்ள திருமாலால் வழிபடப்படுபவனாய், அடியார்கள் செய்யும் வழிபாட்டை உகப்பவனாய், பூவின்கண் நறுமணம் போல எங்கும் பரந்திருப்பவனாய், மலைகளாகவும் ஐம் பூதங்களாகவும் விளங்குகின்றவனாய், எல்லோரையும் அடக்கி ஆள்பவனாய், எங்கள் தலைவனாய் உள்ள பெருமானை என் மனத்தில் நிலையாக வைத்துக் கொண்டேன். |
| **68.** நல்லானை நல்லான<br>நான்மறையோ டாறங்கம்<br>வல்லானை **வல்லார்கண்**<br>மனத்துறையு மைந்தனைச்<br>**சொல்லானைச்** சொல்லார்ந்த<br>**பொருளானைத்** துகளேதும்<br>இல்லானை யெம்மானை<br>யென்மனத்தே வைத்தேனே. 7<br><br>வல்லார் – நினையவல்லார். பொதுநீக்கித்தனை நினையவல்லார். சொல்லான் – பொருளான் – சொல்லும் அதன் பொருளுமாவான். | பெரியவனாய், மேம்பட்ட நான்மறைகளும் ஆறு அங்கங்களும் வல்லவனாய், தன்னை உள்ளவாறு உணரவல்லார்களுடைய உள்ளத்தில் தங்கும் வலியவனாய், வேத வடிவினனாய், வேதத்தில் நிறைந்திருக்கும் பரம்பொருளாய், இயல்பாகவே களங்கம் ஏதும் இல்லாதவனாய், எங்கள் தலைவனாய் உள்ள பெருமானை என் மனத்தில் நிலையாக வைத்துக் கொண்டேன். |
| **69.** விரித்தானை நால்வர்க்கு<br>வெவ்வேறு வேதங்கள்<br>புரித்தானைப் **பதஞ்சந்திப்**<br>**பொருளுருவாம் புண்ணியனை**<br>தரித்தானைக் கங்கைநீர்<br>தாழ்சடைமேன் மதின்மூன்றும்<br>எரித்தானை யெம்மானை<br>யென்மனத்தே வைத்தேனே. 8 | சனகர் முதலிய நால்வருக்கு வேதப் பொருள்களை வெவ்வேறு விதங்களில் விரித்து உரைத்தவனாய், வேதங்களால் பரம்பொருளாக விரும்பப்பட்டவனாய், சொற்களும், சந்தியால் ஆகிய தொடர்களும் அவற்றின் பொருளுமாக உள்ள நல்வினை வடிவினனாய், தாழ்ந்த சடைமுடி மீது கங்கை நீரை ஏற்றவனாய், மும்மதில்களையும் எரித்தவனாய் உள்ள எம் பெருமானை என் மனத்தே வைத்தேனே. |
| **70.** ஆகம்பத் தரவணையா<br>னயனறிதற் கரியானைப்<br>பாகம்பெண் ணாண்பாக<br>மாய்நின்ற பசுபதியே<br>மாகம்ப மறையோது<br>மிறையானை மதிற்கச்சி<br>யேகம்ப மேயானை<br>யென்மனத்தே வைத்தேனே. 9 | பத்து அவதாரங்கள் எடுத்து, பாம்புப் படுக்கை உடைய திருமாலால் அறிய இயலாதவனாய், ஒருபாகம் பெண்பாகமாகவும் மறுபாகம் ஆண்பாகமாகவும், நிலைபெற்ற ஆன்மாக்களின் தலைவனாய், பெரிய தூண்போல அசைக்கமுடியாத, (என்றும் நிலைபெற்ற) வேதங்களை ஓதும் தலைவனாய், மதில்களை உடைய காஞ்சி நகரில் ஒற்றை மாமர நிழலில் உறையும் பெருமானை என் மனத்து வைத்தேனே. |

71. அடுத்தானை யுரித்தானை (1)
யருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானைக் குலவரையே
சிலையாகக் (2) கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச்
சுனைமல்கு (3) கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை (4)
யென்மனத்தே வைத்தேனே. 10

பெருமானின் நான்கு வீரத்தன்மைகள் பேசப்படுகின்றன

தன்னை எதிர்க்க நெருங்கி வந்த யானையைக் கொன்று அதன் தோலை உரித்தவனும், அருச்சுனனுக்குப் பாசுபதப்படை நல்கியவனும், மேருமலையை வில்லாகக் கொண்டு கூரிய அம்பினை மும்மதில்களும் எரியுமாறு செலுத்தியவனாய், சுனைகள் நிறைந்த கயிலாய மலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணனை நசுக்கிச் செயற்பட முடியாதவாறு தடுத்தவனுமான பெருமானை என் மனத்தே வைத்தேனே.

## 8. பொது

**(சிவனெனுமோசை)**

**பண் : பியந்தைக் காந்தாரம்** **பதிக எண் : 8**

72. **சிவனெனு மோசை யல்ல தறையோ வுலகிற்**
**றிருநின்ற செம்மை யுளதே**
அவனுமொ ரைய முண்ணி யதளாடை யாவ
ததன்மேலொ ராட லரவம்
**கவணள வுள்ள** வுண்கு கரிகாடு கோயில்
கலனாவ தோடு கருதில்
அவனது பெற்றி கண்டு மவனீர்மை கண்டு
மகநேர்வர் தேவ ரவரே. 1

ஒலி என்னாது ஓசை என்றது
ஓசை – பொருளுடைய சத்தம்
ஒலி – பொருளற்ற சத்தம்
திருநின்ற செம்மை – செம்பொருள். முத்தி தரும் செம்பொருள்.

உலகிலே **சிவன்** என்னும் ஓசையன்றித் திருவானது நிலைபெறக் காரணமான **செஞ்சொல் வேறு இல்லை என்று ஆணையிட்டுக் கூறுவேன்.** எம்பெருமான் பிச்சை எடுத்து உண்பவன். தோலையே ஆடையாக உடையவன். அத்தோல்மேல் ஆடும்பாம்பை இறுகக்கட்டியவன். **கவண் கல் அளவு சிறிதே உண்பவன்.** சுடுகாடே இருப்பிடம். அவனுடைய உண்கலன் மண்டையோடு. ஆராய்ந்து பார்த்தால் அவன் உடைமைகளைக் கண்டும் அவன் தன்மையைக் கண்டும் தேவர்கள் தம் உள்ளத்தை அப்பெருமானுக்கு அர்ப்பணம் செய்வர்.

நாவரசர் சிவனெனும் ஓசையில் அழுந்தியது பற்றியே "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன்" என்று திருத்தொண்டத்தொகையில் போற்றப்பட்டது. அதுபற்றியே நமச்சிவாயப் பதிகமும் எழுந்தது. சிவநாமமே முழக்கத்திற்குரியது.

**73.** விரிகதிர் ஞாயி றல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணு நிலனும்
திரிதரு வாயு வல்லர் செறுதீயு மல்லர்
தெளிநீரு மல்லர் தெரியில்
அரிதரு கண்ணி யாளை யொருபாக மாக
வருள்கார ணத்தில் வருவார்
எரியர வார மார்ப **ரிமையாரு மல்ல**
**ரிமைப்பாரு மல்ல ரிவரே.** 2

இமையார் – தேவர்; இமைப்பார் – மனிதர்
இமையார் – இமைப்பார். சொற்சிலேடை.
உடன்பாடு. எதிர்மறை இல்லாத தன்மை.

இப்பெருமானார் ஒளிக்கதிர்கள் விரியும் சூரியனும் அல்லர். சந்திரனும் அல்லர். பிரமனும் அல்லர். வேதத்தில் விதித்தனவும் விலக்கியனவும் அல்லர். விண்ணும் நிலனும் அலையும் காற்றும் துன்புறுத்தும் தீயும் தெளிந்த நீரும் அல்லர். செவ்வரி கருவரி பரந்த கண்களை உடைய பார்வதி பாகராக அருள் காரணத்தால் காட்சி வழங்கும் இவர் கோபிக்கின்ற பாம்பினை மார்பில் மாலையாக உடையவர். இவர் கண் இமைக்காத தேவரும் கண் இமைக்கும் மக்களும் அல்லர். இவரே எல்லாமாகி அல்லராய் உடனும் ஆவர்.

**74.** தேய்பொடி வெள்ளை பூசி யதன்மேலொர் திங்கள்
திலகம் பதித்த நுதலர்
காய்கதிர் வேலை நீல வொளிமா மிடற்றர்
கரிகாடர் காலொர் கழலர்
வேயுட னாடு தோளி யவள்விம்ம வெய்ய
மழுவீசி வேழ வுரிபோர்த்
**தேயிவ ராடு மாறு மிவள்காணு மாறு**
மிதுதா னிவர்க்கொ ரியல்பே. 3

இவர் ஆடுமாறும் } இவர்க்கு இயல்பு
இவள் காணுமாறும் }

நுண்ணிய வெண்ணீறு பூசித் திங்கள் போன்ற வடிவுடைய திலகத்தை இட்ட நெற்றியை உடையவர். சூரியன் தோன்றும் கீழ்க்கடலின் நீல ஒளி பொருந்திய கழுத்தினர். சுடுகாட்டில் உறைபவர். காலில் ஒற்றைக் கழல் அணிபவர். மூங்கில் போன்ற தோள்களை உடைய பார்வதி நடுங்குமாறு கொடிய மழுப்படையை வீசி யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்து இவர் கூத்தினை நிகழ்த்துவதும், அதனைப் பார்வதி காணுமாறு செய்வதும் இவருக்கு இயல்பு போலும்.

**75.** வளர்பொறி யாமை புல்கி வளர்கோதை வைகி
வடிதோலு நூலும் வளரக்
கிளர்பொறி நாக மொன்று மிளிர்கின்ற மார்பர்
கிளர்காடு நாடு மகிழ்வர்
நளிர்பொறி மஞ்ஞை யன்ன தளிர்போன்று சாய
லவடோன்று வாய்மை பெருகிக்
குளிர்பொறி வண்டு பாடு குழலா ளொருத்தி
யுளள்போல் குலாவி யுடனே. 4

புல்கி – பொருந்தி

பெருமானார் வளர்ந்த, புள்ளிகளை உடைய ஆமை ஓட்டை அணிந்து, நீண்ட கூந்தலை உடைய பார்வதி தங்கியதும், மான்தோலும் பூணூலும் ஒளிவீசுவதும், மிக்க பொறிகளை உடைய நாகம் விளக்குவதுமான மார்பினராய், காட்டிலும் நாட்டிலும் மகிழ்ந்து ஆடுபவராய் உள்ளார். செறிந்த பொறிகளை உடைய மயில் போன்று கட்புலனாகும் மென்மையும் தளிர் போன்று ஊற்றுக்கினிய மென்மையும் உடையவள் என்று சொல்லப்படும் உண்மை தன்னிடம் நிலைபெறப் புள்ளிகளை உடைய குளிர்ந்த வண்டுகள் பாடும் கூந்தலை உடைய கங்கையாளும் அப்பெருமானோடு கூடி அவருடன் உள்ளாள் போலும்.

| | |
|---|---|
| 76. உறைவது காடு போலு முரிதோ லுடுப்பர்<br>விடையூர்வ தோடு கலனா<br>இறையிவர் வாழும் வண்ண மிதுவேலு மீச<br>ரொருபா லிசைந்த தொருபால்<br>பிறைநுதல் பேதை மாத ருமையென்னு நங்கை<br>பிறழ்பாட நின்று பிணைவான்<br>அறைகழல் வண்டு பாடு மடிநீழ **லாணை**<br>**கடவா தமர ருலகே.** 5<br><br>ஆணைகடவாது அமருலகே – சிவனது முழு முதல் தன்மை | இவர் தங்குமிடம் காடு, உரித்தெடுக்கப்பட்ட புலி முதலியவற்றின் தோலை உடுப்பர். இவர் காளையை ஊர்வர். மண்டையோடு உண்கலம். தலைவராகிய இவர் வாழும் வகை இது. இவர் எல்லோரையும் அடக்கி ஆள்பவர். இவருக்கு உரியது இவர் உடம்பின் வலப்பகுதியே. மற்றொரு பகுதியாகப் பிறைபோன்ற நெற்றியளாய் மடம் என்ற பண்புள்ளவளாய்த் திகழும் விரும்பத்தக்க உமை என்னும் நங்கை உள்ளாள். இடம் பெயர்ந்து ஆடுவதற்காகப் பார்வதியோடும் கூடியிருப்பார். வீரக்கழல் ஒலிக்க வண்டுகள் பாடும் திருவடியின் நிழலாகிய அப்பெருமானுடைய ஆணையைத் தேவர் உலகம் மீறிச் செயற்படமாட்டாது. |
| 77. கணிவளர் வேங்கை யோடு கடிதிங்கள் கண்ணி<br>கழல்கால் சிலம்ப வழகார்<br>அணிகிள ரார வெள்ளை தவழ்சுண்ண வண்ண<br>வியலா ரொருவ ரிருவர்<br>மணிகிளர் மஞ்ஞை யால மழையாடு சோலை<br>மலையான் மகட்கு மிறைவர்<br>அணிகிள **ரன்ன வண்ண மவள்வண்ண**<br>**வண்ண**<br>**மவர்வண்ண வண்ண மழலே.** 6<br><br>இறைவரது சிவன் என்ற பெயரின் இயல்பினையும், இவர் வண்ண வண்ணம் என்று இறைவரது இயல்பையும், இவள் வண்ண வண்ணம் என்று இறைவியாரது இயல்பினையும் பதிகம் முழுவதும் பலபல திறம்படக் கண்டு போற்றுகின்றார். | சோதிடனின் இயல்பை உடையதாய் வளருகின்ற வேங்கைப் பூக்களையும் புதிய பிறையையும் முடிமாலையாகச் சூடி, காலில் கழல் ஒலிப்ப இவற்றால் ஏற்படும் அழகினை உடையவர். அழகு விளங்குகின்ற மாலையையும், வெண்ணீற்றையும் அணிந்து செந்நிறமுடைய இயல்பினர் ஆகிய பெருமான் அம்மையப்பராய் இருவராய் உள்ளார். அழகு விளங்குகின்ற மயில்கள் ஆட மேகங்கள் உலாவும் சோலைகளை உடைய இமயத்து மன்னன் மகளாகிய பார்வதிக்குத் தலைவர். **பார்வதியினுடைய நிறத்தின் வண்ணம் அழகு வெளிப்படுகின்ற அன்ன நிறத்தின் வண்ணமாகும். (காரன்னம்) அவருடைய நிறம் நெருப்பின் நிறமாகும்.** |
| 78. நகைவளர் கொன்றை துன்று நகுவெண் டலையர்<br>நளிர்கங்கை தங்கு முடியர்<br>மிகைவளர் வேத கீத முறையோடும் வல்ல<br>கறைகொண் மணிசெய் மிடறர்<br>முகைவளர் கோதை மாதர் முனிபாடு மாறு<br>மெரியாடு மாறு மிவர்கைப்<br>பகைவளர் நாகம் வீசி மதியங்கு மாறு<br>மிதுபோலு மீச ரியல்பே. 7 | விளக்கம் மிகுகின்ற கொன்றை மலர் நெருங்கிய தலைமாலையும் குளிர்ந்த கங்கையும் தங்கிய சடைமுடியை உடையவர். உலகில் மேம்பட்டு விளங்குகின்ற வேதப் பாடல்களை ஒலிக்கும் முறையோடு பாடுதலில் வல்ல, விடக்கறை பொருந்திய நீலகண்டர். மொட்டுக்களால் ஆகிய மாலையை அணிந்த பார்வதி, பெருமானுடைய கூத்தாடலுக்கு ஏற்பப்பாடும் முறையும் பெருமான் தீயிடை ஆடும் முறையும், இவர் கையில் ஏந்திய பகைத்தன்மை வளர்கின்ற நாகத்தை அகற்றிப் பிறை அசையுமாறு இவர் இவ்வாறு செய்வதும் போலும் இவர் தன்மையாகும். |

| பாடல் | பொருள் |
| --- | --- |
| **79.** ஒளிவளர் கங்கை தங்கு மொளிமா லயன்ற<br>னுடல்வெந்து வீய சுடர்நீ<br>றணிகிள ரார வெள்ளை தவழ்சுண்ண வண்ணர்<br>தமியா ரொருவ ரிருவர்<br>களிகிளர் வேடமுண்டொர் கடமா வுரித்த<br>வுடைதோல் தொடுத்த கலனார்<br>அணிகிள ரன்ன தொல்லை யவள்பாக மாக<br>வெழில்வேத மோது மவரே. 8 | எம்பெருமான் ஒளிவளர்கின்ற கங்கை தங்கும் சடையின் செந்நிற ஒளியை உடையர். திருமால் பிரமன் இவர்கள் உடைய உடல்கள் சாம்பலாக அவர்களுடைய ஒளி வீசுகின்ற வெள்ளை நீற்றினை, ஒளி வீசும் மாலையின் வெண்ணிறத்தோடு பூசிய வெண்பொடி நிறத்தவர். தனியராயிருந்த ஒருவர், அழகு விளங்குகின்ற அன்னம் போன்ற அநாதி சக்தி ஒருபாகமாக, அதனால் மகிழ்ச்சி மிகும் இருவர் வேடமும் அவருக்கு உண்டு. ஒரு மத யானையை உரித்த தோலை மேலுடையாகப் போர்த்த, மண்டையோட்டை உடைய அப்பெருமானார் அழகிய வேதத்தை ஓதிக் கொண்டிருப்பவர் ஆவர். |
| **80.** மலைமட மங்கை யோடும் வடகங்கை நங்கை<br>மணவாள ராகி மகிழ்வர்<br>தலைகல னாக வுண்டு தனியே திரிந்து<br>தவவாண ராகி முயல்வர்<br>விலையிலி சாந்த மென்று வெறிநீறு பூசி<br>விளையாடும் வேட விகிர்தர்<br>அலைகடல் வெள்ள முற்று மலறக் கடைந்த<br>வழனஞ்ச முண்ட வவரே. 9 | பார்வதியோடு, வடக்கில் உற்பத்தியாகும் கங்கை என்ற பெண்ணுக்கும் கணவராகி மகிழ்பவர். மண்டையோட்டையே பிச்சை எடுத்து உண்ணும் பாத்திரமாகக் கொண்டு தனியே திரிந்து, அடியார் செய்யும் தவத்தில் வாழ்பவராகி அவர்களுக்கு அருளும் முயற்சியை உடையார். விலையில்லாது கிட்டும் சந்தனமாக மணங்கமழும் திருநீற்றைப் பூசி விளையாடும் வேடத்தை உடையர். உலகியலிலிருந்து வேறுபட்ட இயல்பை உடைய பெருமான், அலைகளை உடைய கடலின் வெள்ளம் முழுவதும் ஒலிக்குமாறு கடைந்ததனால் ஏற்பட்ட கொடிய விடத்தை உண்ட அப்பெருமான் ஆவார். |
| **81.** புதுவிரி பொன்செ **யோலை யொருகா தொர்காது**<br>சுரிசங்க நின்று புரள<br>விதிவிதி வேத கீத மொருபாடு மோத<br>மொருபாடு மெல்ல நகுமால்<br>மதுவிரி கொன்றை துன்று சடைபாக மாதர்<br>குழல்பாகமாக வருவர்<br>இதுவிவர் வண்ண வண்ண மிவள்வண்ண வண்ண<br>மெழில்வண்ண வண்ண மியல்பே. 10 | புதிதாகச் சுருள் பொன்னால் செய்யப்பட்ட ஓலை ஒருகாதிலும் வளைந்த சங்கு ஒரு காதிலும் காதணிகளாக அமைந்து தோள்கள் மீது புரள, முறைப்படி வேதப்பாடலை ஒருபக்கம் ஓத, இடப்பக்கமாகிய பார்வதி பாகம் மெதுவாக முறுவல் செய்யும். சடைப்பகுதியில் தேன் விரியும் கொன்றைப் பூப் பொருந்த, பெண் பகுதி, கூந்தலைப் பின்னியிருக்கும் பாகமாக வருகின்ற பெருமானுடைய நிறமும், இயல்பும் இவை. தேவியினுடைய நிறமும் இயல்பும் இவை. அழகு வண்ணங்கள் இரண்டன் இயல்பும் இவையே. |

## 9. பொது

**(12 கண்ணிகளால் ஆன திருப்பதிகம்)**

**(திருவங்கமாலை)**

**(உடல் உறுப்புகள் அனைத்தும் சிவ வழிபாட்டுக்கே)**

பண் : சாதாரி — பதிக எண் : 9

82. தலையே நீவணங்காய் – தலை
மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீவணங்காய். 1

தலைகளால் ஆகிய மாலையைத் தலையில் அணிந்து மண்டையோட்டில் எடுக்கும் பிச்சைக்கு உலாவும் தலைவனைத் தலையே! நீ வணங்குவாயாக.

ஏனையோர் தேரும்பலி தத்தம் வறுமையைக் குறித்தது (தாம் உய்யும் பொருட்டு). இறைவன் பலி தேர்வது (உயிர்கள் உய்யும் பொருட்டு). மற்றவர்களின் பிச்சைப்பாத்திரம் அவரவர் தன்மையைப் பொறுத்தது. சிவனின் பாத்திரம் பிரமகபாலமே. தலைமாலை – நூறு கோடி பிரமர், ஆறுகோடி நாராயணர், கங்கை மணல் துகள்கள் அளவு இந்திரர் ஆகிய முத்திறத்தோர் தலைகளை பாம்பு என்னும் கயிறால் கோத்த தலைமாலை.

83. கண்காள் காண்மின்களோ – கடல்
நஞ்சுண்ட கண்டன்றன்னை
எண்டோள் வீசிநின் றாடும்பி ரான்றன்னைக்
கண்காள் காண்மின்களோ. 2

கண்களே! கடல்விடத்தை உண்ட நீலகண்டனாய் எட்டுத் தோள்களையும் வீசிக் கொண்டு நின்ற நிலையில் ஆடும் பெருமானை நீங்கள் காணுங்கள்.

நஞ்சுண்டும் சாகாமையால் "பிறவாயாக்கைப் பெரியோன்" என்பது உறுதியாயிற்று. பிறப்பிறப்பாட்டம் ஒழிய அருளாட்டம் காண வேண்டும். மன்றாடற்காட்சி அன்றாடம் பெற வேண்டும்.

84. செவிகாள் கேண்மின்களோ – சிவன்
எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்திற மெப்போதும்
செவிகாள் கேண்மின்களோ. 3

செவிகளே! சிவபெருமானாகிய எங்கள் தலைவனாய், செம்பவளமும் தீயும் போன்ற திருமேனியனாகிய பெருமானுடைய பண்புகளையும் செயல்களையும் எப்பொழுதும் கேளுங்கள்.

பாசிகள் நிறைந்த குளத்தில் கல்லை எறிந்தால் அந்த அளவு, அந்த விநாடி பாசி நீங்கும். கல் மறைந்தவுடன் பாசி மறுபடியும் சூழும். அதைப்போலவே மலம் மாயையும், ஈசனை நினைக்கும் போது அகலும். நினையாது விட்டால் பின் அணுகும். பிரான்திறம் செவிகள் எப்போதும் கேட்டுக் கொண்டேயிருந்தால், மலம் மாயைகள் அணுகா.

85. மூக்கே நீமுரலாய் – முது
காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கைம ணாளனை
மூக்கே நீமுரலாய். 4

மூக்கே! சுடுகாட்டில் தங்குகின்ற முக்கண்ணனாய்ச் சொல் வடிவமாய் இருக்கும் பார்வதி கேள்வனை நீ எப்பொழுதும் போற்றி ஒலிப்பாயாக.

முரலாய் – முரல்வாய் – மூக்கால் ஒலிப்பாய், முரலுதல் – மூக்கின் தொழில். முதுகாடு – பழங்காடு – சுடுகாடு. அதற்கு முதுமை, தன் கண் வரும் பிணங்களின் முதுகைத் தான் பார்த்துத் தன்முதுகைப் பிறிதொன்றும் பாராதவாறு நெடுங்காலம் நிற்றல்.

மணாளன் நோக்குவது வாக்கின் பொருளுடைய மூக்கின் முரற்சி.
மங்கை நோக்குவது அம்முரற்சியா யமைந்த வாக்கு.
சொல் (வாசகம்) – மங்கை உமை
பொருள் (வாக்கியம்) – மணாளசிவம்
முரலுதல் உயிர்ப்புக்கால் பிராணவாயு மூக்கின் வழி வெளிப்படுவது. அப்போதும் ஐந்தெழுத்து சிந்தனை இருக்க வேண்டும். மூக்கால் முரன்றாலும் அவன் ஏற்பான்.

**86.** வாயே வாழ்த்துகண்டாய் – மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்றன்னை
வாயே வாழ்த்துகண்டாய். **5**

வாயே! மதயானையின் தோலைப் போர்த்துப் பேய்கள் வாழும் சுடுகாட்டில் கூத்து நிகழ்த்தும் பெருமானை நீ எப்போதும் வாழ்த்துவாயாக.

---

வாழ்த்தி வாழாதவர் – உடலுக்கு இடமான காட்டிலே வாழும் பேய் அஞ்ச ஆடும் பிரானை வாழ்த்துவதே அக்காடு போகாதவாறு வீடுபேறு நல்கும் என்பர். வாழ் – தன்வினை, வாழ்த்து – பிறவினை, வாழ்த்துவோருக்கே வாழ்வுண்டு.

**87.** நெஞ்சே நீநினையாய் – நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கை மணாளனை
நெஞ்சே நீநினையாய். **6**

நெஞ்சே! மேல்நோக்கிய செஞ்சடையை உடைய புனிதனாய், மேகங்கள் அசையும் இமயமலை மகளாகிய பார்வதி கேள்வனை எப்பொழுதும் நினைப்பாயாக.

---

வேறு எப்பொருளை நினைப்பினும் வெப்பமே மேவும்; தட்பம் சாராது. அம்மை யப்பனையே நினைத்தால் தான் பிறவிக் கோடையும் நீங்கி பேரின்பக் குளிர்ச்சியும் உண்டாகும். மலைமங்கை தன் நினைப்பால் தனது தாட்சாயணி என்ற பெயர் நீங்கினாற் போல, நின் நினைப்பால், நினது சீவன் என்ற பெயர் நீங்குதலால் மங்கை அடைந்ததைப் போல நீயும் அடைவாய்.

**88.** கைகாள் கூப்பித்தொழீர் – கடி
மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர். **7**

கைகளே! மணங்கமழும் சிறந்த மலர்களைச் சமர்ப்பித்துப் படம் எடுக்கும் வாயை உடைய பாம்பினை இடையில் இறுகக் கட்டிய மேம்பட்ட பெருமானைக் கூப்பித் தொழுவீராக.

**89.** ஆக்கை யாற்பயனென் – அரன்
கோயில் வலம்வந்து
பூக்கையா லட்டிப் போற்றியென் னாதஇவ்
ஆக்கை யாற்பயனென். **8**

எம் பெருமானுடைய கோயிலை வலமாகச் சுற்றி வந்து பூக்களைக் கையால் சமர்ப்பித்து அவனுக்கு வணக்கம் செய்யாத உடம்பினால் யாது பயன்?

| | |
|---|---|
| **90.** கால்க ளாற்பயனென் – கறைக்<br>கண்ட னுறைகோயில்<br>கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக்<br>கால்க ளாற்பயனென். **9** | நீலகண்டனான எம்பெருமான் தங்கியிருக்கும் கோயிலாகிய, அழகான கோபுரத்தை உடைய கோகரணம் என்ற தலத்தை வலம் வாராத கால்களால் யாது பயன்? |

பல கால்களாகி விரிந்து செல்லும் காவிரி முதலியனவும் திருக்கோயில்களைச் சூழ்ந்து செல்லும் சிவ நல்வினையை எய்துகின்றன. இவ்வுடம்பின் கால்கள், திருக்கோயில் சூழாக் கால்களாய் அவ்வாய்க்கால்களினும் இழிந்தன என்ற பொருளில் கால்களாற் பயன் என்? என்றார். திருக்கோயிலை வலம் வரும் மெய்யன்பரை, நஞ்சு தீண்டாப் பேறு தோன்றக் கறைக்கண்டன் கோயில் என்றார்.

| | |
|---|---|
| **91.** உற்றா ராருளரோ – வுயிர்<br>கொண்டு போம்பொழுது<br>குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக்<br>குற்றா ராருளரோ. **10** | கூற்றுவன் நம் உயிரைக் கைப்பற்றிக் கொண்டு போகும் பொழுது குற்றாலத்தில் விரும்பித் தங்கியிருக்கும் கூத்தப்பிரானைத் தவிர நமக்கு வேண்டியவர் என்று யாவர் உளர்? |

நெட்டாலத்து நிழற்கீழிருந்து அறம் புகன்றது பேருணர் வினார்க்கு
குற்றாலத்துறைகின்றது சிற்றுணர் வினார்க்கு

| | |
|---|---|
| **92.** இறுமாந் திருப்பன்கொலோ – ஈசன்<br>பல்கணத் தெண்ணப்பட்டுச்<br>சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்றங்கு<br>இறுமாந் திருப்பன்கொலோ. **11** | எல்லோரையும் அடக்கி ஆளும் எம்பெருமானுடைய பலவாகிய சிவகணத் தவருள் ஒருவனாகிச் சிறிய மானை ஏந்திய அப்பெருமானுடைய சிவந்த திருவடிகளின் கீழ்ச் சென்று அங்கு இன்பச் செருக்கோடு இருப்பேனோ? |

இறுதல் – ஒடிதல், உயிர் உடலின் நீங்குதலையும் இறுதல் என்பர். நீங்கும் பொழுது உயிர் பேரொலி செய்தலும் உண்டு. போர் முதலியவற்றில் இறப்போர் செய்யும் ஆர்ப்பு "இறும் ஆர்ப்பு" எனப்படும். அதன் மரூஉவே இறுமாப்பு, இங்கு இன்பச் செருக்குணர்த்தி நின்றது.

| | |
|---|---|
| **93.** தேடிக் கண்டுகொண்டேன் – திரு<br>மாலொடு நான்முகனும்<br>தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே<br>தேடிக் கண்டுகொண்டேன். **12** | திருமாலும் நான்முகனும் தேடியும் காணமுடியாத தேவனைத் தேடி அவன் என் நெஞ்சத்துள்ளேயே இருக்கின்றான் என்ற செய்தியை அறிந்து கொண்டேன். |

பிரமனும், மாலும் தத்தம் உள்ளே தேடாமல் வெளியே தேடிக்காணார் ஆயினர். "யான்" என் உள்ளே தேடிக் கண்டுகொண்டேன். கண்டு விட்டார் பலர். விடாது கொண்டார் சிலர், அச்சிலருள் யானும் அடங்குவேன்.

எங்களது வழிபடு தெய்வம் ஒத்தக்கால் மண்டபம் புற்றிடங் கொண்டீசர் திருக்கோயிலில் தினமும் இரவு 8.00 மணி நிறைவு வழிபாட்டின்போது நிறை நிலா வழிபாட்டு மன்ற அடியார்கள் பள்ளியறைக்குச் சுவாமியை பவனியாக பல்லக்கில் அழைத்துச் செல்லும்போது மனனத்துடன் இப்பதிகத்தைப் பாடி மகிழ்வார்கள்.

## 10. திருவதிகைவீரட்டானம்

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 10

**94.** முளைக்கதி ரிளம்பிறை மூழ்க வெள்ளநீர்
வளைத்தெழு சடையினர் மழலை வீணையர்
திளைத்ததோர் மானமறிக் கையர் செய்யபொன்
கிளைத்துழித் தோன்றிடுங் கெடில வாணரே. 1

முளைக்கதிர் இளம்பிறை – முளைபிறை,
கதிர்ப்பிறை, இளம்பிறை.
பிறத்தலுடையது – பிறை
முளைத்தலுடையது – முளை
பிறத்தல் – மறைந்தமை நோக்கியது
முளைத்தல் – வெளிப்பட்டுத் தோன்றும் இடம் நோக்கியது

மண்ணைத் தோண்டிய அளவிலே சிவந்த பொன் வெளிப்படும் கெடில நதிக்கரையில் உகந்தருளியிருக்கும் பெருமான் கிரணங்களை உடைய பிறை முழுகுமாறு கங்கை வெள்ளத்தைத் தேக்கிய நிமிர்ந்த சடையினராய், இனிய வீணையை ஒலிப்பவராய், மான்குட்டி மகிழ்ந்திருக்கும் கையினை உடையவராய், அடியவர் கண்ணுக்குக் காட்சி வழங்குகிறார்.

**95.** ஏறின ரேறினை யேழை தன்னொரு
கூறினர் கூறினர் வேத மங்கமும்
ஆறின ராறிடு சடையர் பக்கமும்
கீறின வுடையினர் கெடில வாணரே. 2

ஏழை – பேதை, உமாதேவி. எருதேறி ஏழையுடனே

கெடிலவாணர் காளைவாகனம் உடையவர். பார்வதிபாகர் நான்கு வேதமும் ஆறு அங்கங்களும் அடியார்களுக்கு உபதேசித்தவர். கங்கை தங்கும் சடையினர். பக்கத்திலும் கிழிந்த உடையைக் கொண்டவர்.

**96.** விடந்திகழ் கெழுதரு மிடற்றர் வெள்ளைநீ
றுடம்பழ கெழுதுவர் முழுதும் வெண்ணிலாப்
படர்ந்தழ கெழுதரு சடையிற் பாய்புனல்
கிடந்தழ கெழுதிய கெடில வாணரே. 3

கெழுதரல் – விளக்கம் செய்தல்

முழுவதும் பிறையின் வெள்ளிய ஒளி பரவி, அழகாக நிமிர்ந்த சடையில் பாய்ந்த கங்கைப் புனல் தங்கி அழகுறுத்தும் கெடிலவாணர், விடக்கறை தங்கி விளங்கும் நீலகண்டர், வெண்ணீற்றை உடம்பில் அழகாக அணிந்தவர்.

**97.** விழுமணி யயிலெயிற் றம்பு வெய்யதோர்
கொழுமணி நெடுவரை கொளுவிக் கோட்டினார்
செழுமணி மிடற்றினர் செய்ய வெய்யதோர்
கெழுமணி யரவினர் கெடில வாணரே. 4

கெடிலவாணர் விரும்பத்தக்க சிறந்த இரத்தினங்களை உடைய மேருமலையை, நாகரத்தினங்களையுடைய பாம்பினை நாணாக இணைத்துக் கூரிய பற்களை உடைய அம்புகளைச் செலுத்துவதற்காக வளைத்தார். அவர் நீலகண்டர் நிறத்தால் சிவந்த இரத்தினத்தை உடைய கொடிய நாகபாம்பை அணிகலனாக உடையவர்.

**98.** குழுவினர் தொழுதெழு மடியர் மேல்வினை
தழுவின கழுவுவர் பவள மேனியர்
மழுவினர் மான்மறிக் கையர் மங்கையைக்
கெழுவின யோகினர் கெடில வாணரே. 5

மங்கையோடிருந்து யோகு செய்வான். நேரிழையைக் கலந்திருந்தே புலன்ஐந்தும் வெல்வான்.

கெடில வாணர் கூட்டமாய்த் தம்பக்கல் வந்து தம்மைத் தொழுது எழும் அடியவர்களுக்கு மேல்வரக்கடவ வினைகளைப் போக்குபவர். பவளம் போன்ற செந்நிற மேனியை உடையவர். மழுவையும் மான்குட்டியையும் ஏந்திய கையினர். பார்வதி பாகராய் இருந்தே யோகத்தில் இருப்பவர்.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| 99. அங்கையி லனலெரி யேந்தி யாறெனும்<br>மங்கையைச் சடையிடை மணப்பர் மால்வரை<br>நங்கையைப் பாகமும் நயப்பர் **தென்றிசைக்**<br>**கெங்கைய தெனப்படுங் கெடில வாணரே.** 6<br><br>கெடிலத்தின் சிறப்பு.<br>கையில் அனல், தலையில் புனல் | **தென் திசையில் கங்கை என்று போற்றப்படும் கெடிலநதிக் கரையின்** வீரட்டத்தில் உறையும் பெருமானார் உள்ளங்கையில் நெருப்பினை ஏந்தி, கங்கை என்னும் மங்கையைச் சடையில் சேர்த்தியவர். பார்வதியைத் தம் திருமேனியின் ஒருபாகமாக விரும்புபவர். |
| 100. கழிந்தவர் தலைகல னேந்திக் காடுறைந்<br>திழிந்தவ ரொருவரென் றெள்க வாழ்பவர்<br>வழிந்திழி மதுகர மிழற்ற மந்திகள்<br>கிழிந்ததே னுகர்தருங் கெடில வாணரே. 7 | தேன் கூடு கிழிந்ததால் வழிந்த தேனோடு கீழே இறங்கும் வண்டுகள் ஒலிக்க ஒழுகும் தேனைப் பெண் குரங்குகள் நுகரும் கெடிலவாணர் இறந்தவர்களின் மண்டை ஓட்டினை உண்கலனாக ஏந்திச் சுடுகாட்டில் தங்கிக் கீழ் நிலையில் உள்ளவர் என்று அறிவிலிகள் பரிகசிக்குமாறு வாழ்பவர். |
| 101. கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்<br>கிடந்தபாம் பவளையோர் மயிலென் றையுறக்<br>கிடந்தநீர்ச் சடைமிசைப் பிறையு மேங்கவே<br>கிடந்துதா னகுதலைக் கெடில வாணரே. 8 | பெருமான் திருமார்பில் கிடந்த பாம்பினைத் தன் அருகில் கண்டு பார்வதி மயங்க, அப்பாம்பு அவளை மயிலோ என்று ஐயப்பட, கங்கை தங்கிய சடைமேல் உள்ள பிறையும் பாம்பினைக் கண்டு மனம் வருந்த, இவற்றை எல்லாம் கண்டு சிரிக்கும் மண்டை ஓட்டினைக் கையில் கொண்டவர் கெடில வாணராவர். |
| 102. வெறியுறு விரிசடை புரள வீசியோர்<br>பொறியுறு புலியுரி யரைய தாகவும்<br>நெறியுறு குழலுமை பாக மாகவும்<br>கிறிபட வுழிதர்வர் கெடில வாணரே. 9 | கெடில வாணர் நறுமணம் கமழ்கின்ற விரிந்த சடை புரளுமாறு தலையை அசைத்து, புள்ளிகளை உடைய புலித்தோலை இடையில் அணிந்து, சுருண்ட கூந்தலை உடைய உமாதேவி தம் திருமேனியில் ஒருபாகமாக இருக்கத் தந்திரமாக மாயக் கூத்தாடுவர். |
| 103. பூண்டதே ரரக்கனைப் பொருவின் மால்வரைத்<br>தூண்டுதோ ளவைபட வடர்த்த தாளினார்<br>ஈண்டுநீர்க் கமலவாய் மேதி பாய்தரக்<br>கீண்டுதேன் சொரிதருங் கெடில வாணரே. 10 | பெருக்கெடுத்தோடும் நீர்நிலையில் மலர்ந்திருக்கும் தாமரைப் பூவின் பக்கம் எருமை பாய்தலால் தாமரை இதழ் கிழியத் தேன் வெளிப்படுகின்ற கெடிலவாணர் புட்பக விமானத்தைச் செலுத்தி வந்த இராவணனை ஒப்பற்ற மேம்பட்ட கயிலைமலையைப் பெயர்க்க முற்பட்ட தோள்கள் நசுங்குமாறு வருத்திய திருவடியை உடையவர். |

## 11. பொது

### (நமச்சிவாயத் திருப்பதிகம்)

பண் : காந்தார பஞ்சமம் பதிக எண் : 11

கொலைக்களிறு அரசுகளைத் தொழுது திரும்பியதால் அமணர்கள் அரசைக் கல்லோடு கட்டிக் கடலிற் பாய்ச்சினர். அப்போது சுவாமிகள் பாடியது இப்பதிகம்.

104. சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. 1

| சொல் | பொருள் |
|---|---|
| வேதம்<br>வாசகம் | சிவபெருமான்<br>வாச்சியம் |

வேதமான வாசகத்திற்கு நிகரான வாக்கியப் பொருளாக உள்ளவனாய்ப் பரஞ்சோதியாகிய அழியாத வீட்டுலகினனாய் உள்ள எம்பெருமானுடைய, பொலிவுடைய, தமக்குத்தாமே இணையான சேவடிகளை உள்ளம் பொருந்தக் கைதொழுதலால் கல்லைத் துணையாகச் சேர்த்து அதனோடு இணைத்துக் கடலில் தள்ளிவிட்டாலும் எம்பெருமானுடைய திருவைந்தெழுத்தே நமக்குப் பெரிய துணையாகும்.

---

இருவினையாகிய பாசக்கயிற்றால் மும்மலங்களாகிய கல்லொடு கட்டி வீழ்த்தப்பெற்ற அஞ்ஞானியரை பாவசாகரத்தினின்றும் முத்திக் கரையிலேற்றும் ஆற்றல் வாய்ந்தது. எனவே நாவரசை ஐந்தெழுத்து காப்பாற்றாமல் விடுமா ?

---

105. பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கல நமச்சி வாயவே. 2

---

அருங்கலம் – விலைமதிப்பில்லா ஆபரணம்

| ஐந்தெழுத்து | ஐந்துபதம் |
|---|---|
| சி | சிவம் |
| வ | சக்தியாகிய அருள் |
| ய | உயிர்களாகிய நாம் |
| ந | திரோதான மாயை |
| ம | ஆணவ, கன்ம மலங்கள் |

அருள்பொலிவு, பொங்கி நிறைகின்ற பெருந்திறமே தாமரையைப் பூக்களுள் நாயகமாக விளங்கச் செய்கிறது. ஆவினுக்குரிய அருங்குணங்கள் பலவற்றுள்ளும், அரனாடுவதற்குப் பஞ்ச கவ்வியத்தைத் தந்தமைகின்ற அருள் தன்மையே, ஆவினுக்குப் பெருமை சேர்க்கிறது. பலதிறம் வாய்க்கப்பெற்ற மன்னருக்கும், அவர்தம் செங்கோல் வளையாத நீதித்திறமே பொலிவு சேர்க்கிறது. நாம், நாவினால் ஒலிக்கின்ற மந்திரங்கள் பலவற்றுள்ளும், நாதனது நாமமாகிய, 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தே, உயிர்க்கு உற்ற துணையாகின்றது.

| | |
|---|---|
| 106. விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்<br>உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்<br>பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை<br>நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. 3 | வானளாவ அடுக்கிய விறகிலே கொடிய நெருப்பு அவற்றை உண்பதற்கு புகுந்தால் விறகினுள் ஒன்றும் மீதியிராது எல்லாம் சாம்பலாகும். இறைவனால் படைக்கப்பட்ட உலகில் மக்கள் பலகாலும் பழகிச் செய்த பாவத்தை நெருங்கி நின்று போக்குவது திருவைந்தெழுத்தேயாகும். |
| 107. இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்<br>விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்<br>அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னாமுற்ற<br>நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. 4 | எவ்வளவு வறுமைத் துன்பத்தால் நலிவுறினும் எம்பெருமானை விடுத்து வேறுயாரையும் இரந்து 'என் துன்பத்தைப் போக்கினால் நீ எம்பிரானே' என்று கூறித் துயரத்தைப் போக்கு எனக் கேட்போம் அல்லோம். மலையின் அடியில் அகப்பட்டுக் கிடந்தாலும் அருளினால் நமக்கு ஏற்படும் நடுக்கத்தை நீக்குவது திருவைந் தெழுத்தேயாகும். |
| 108. வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்<br>அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம்<br>திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி<br>நங்களுக் கருங்கல நமச்சி வாயவே. 5<br><br>அகத்தருங்கலம் – திருவைந்தெழுத்து<br>புறத்தருங்கலம் – திருநீறும், கண்டிகையும்<br>விரதம் – இன்ன அறம் செய்வல் எனவும் இன்ன மறம் ஒழிவல் எனவும் **தம் ஆற்றலுக்கும் அறிவுக்குமேற்ப** வரைந்து கொண்டு செயல்படல் | விரதத்தை மேற்கொண்ட சான்றோர்களுக்குத் திருநீறு சிறந்த அணியாகும். நான்மறை ஆறங்கம் ஓதுதல் அந்தணர்களுக்குச் சிறந்த அணியாகும். பிறைக்குச் சிவபெருமானுடைய அழகிய சடை சிறந்த அணியாகும். எம்மைப் போன்ற அடியார்களுக்குச் சிறந்த அணி திருவைந்தெழுத்தேயாகும். |
| 109. சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்<br>நலமில னாடொறு நன்கு வானலன்<br>குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்<br>நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. 6<br><br>சங்கரன் – சுகத்தைப் பண்ணுகின்றவன் | மனக்கோட்டம் இல்லாது எல்லார்க்கும் நன்மையைச் செய்யும் சிவபெருமான். தன்னையே பற்றுக்கோடாகச் சார்ந்த அடியவர்களைத் தவிர மற்றவர்களுக்கு உயர்நலன் செய்யான். அவர்களுக்கு நாடோறும் விரும்பியதனை நல்காது வினைப்பயன்படி நுகருமாறு விடுப்பான். உயர்ந்த குடும்பத்தில் அடியவர்கள் பிறந்தவர் அல்லராயினும் நற்குலத்துக்குரிய நன்மைகளை மிகவும் கொடுப்பது எம்பெருமானுடைய திருவைந் தெழுத்தேயாகும். |

110. வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினா ரந்நெறி கூடச் சென்றலும்
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினே னாடிற்று நமச்சி வாயவே. 7

மேம்பட்ட தொண்டர்கள் உலகப்பற்றுக்களை நீக்கிவிட்டனர். அவர்கள் மேம்பட்ட வீட்டு நெறியையே அடைந்தனர். அடியவர்கள் கூட அடியேனும் ஓடிச் சென்று எம்பெருமான் திருவுருவத்தை அகக்கண்ணால் கண்டேன். அங்ஙனம் கண்டவுடன் திருவைந்தெழுத்தை நாடினேன். நாடிய என்னை அத்திருவைந் தெழுத்தும் நாடியது.

விட்டது உலகினை. பெற்றது பேரின்பத்தை.
வீடு – விடவேண்டியதை விட்டு அதனால் வருந் துன்பத்தினின்றும் நீங்குதல்.
பேறு – கொள்ள வேண்டியதைக் கொண்டு அதனால் வரும் பேரின்பத்தைப் பெறுதல்.

அஞ்செழுத்து அஞ்சு பதம். திருவைந்தெழுத்துள் ஒவ்வொன்றும் ஒருபொருளைக் குறித்தலின், அதனதன் உருவம் தெரிந்து கணித்தல் வேண்டும். "உருவாய்த் தெரிந்து உன்றன் நாமம் பயின்றேன், பணிந்த நாமம் "சிவாயநம" என நீறணிந்தேன்" என்பது நாவரசர் திருவாக்கு.

111. இல்லக விளக்கது விருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. 8

வீட்டில் உள்ள விளக்கு ஆங்குள்ள இருளைப் போக்குவதாம். சொல்லின் அகத்து நின்று விளக்குவதாய், ஒளியுடையதாய், பல இடங்களையும் விளக்குவதாய்ப் பல சமயத்தாரும் தம்மை அறியாமலே காண நிற்பதாய் ஞானம் நிறைந்த உள்ளத்திற்கு விளக்குப் போல ஒளியை நல்குவது திருவைந்தெழுத்து மந்திரமே.

ய,ந,மகாரம் மூன்றில் மற்றெல்லாச் சமயங்களும் அடங்கி விடுகின்றன. வகாரம், சிகாரம் இரண்டும் சைவத்துக்கே உரியன.

புறஞ்செல்லாமல் அகத்தே குறியாக ஐந்தெழுத்தோதி நிட்டைகூட சிவதரிசனம் விளக்கப்படுவதால் விளக்கு.

112. முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாத றிண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே. 9

முந்துறமுன்னம் வீடுபேற்றிற்கு வழிகாட்டிய முதல்வன் முக்கட்பிரானாவான். அவன் அருளிய வழியே உறுதியாகப் பற்றுக் கோடாவது. அந்த வழியிலே சென்று அப்பெருமானுடைய திருவடிகளை அடைபவருக்கு எல்லாம், சிறந்த வழியாக உதவுவது திருவைந்தெழுத்து மந்திரமே.

நன்மையெனப்படுவன எல்லாவற்றுள்ளும் சிறந்த நன்மை வீடுபேறு. அதனை அடைய சிறந்த நெறியான ஞானம் – நன்னெறி எனப்பட்டது. ஞானமாகிய நன்னெறியில் சென்று தலைசிறந்த நன்மையான வீடுபேற்றை அடைய சாதனம் திருவைந்தெழுத்து.

| சாதனம் | → நெறி | → நன்மை |
|---|---|---|
| (கருவி) | (வழி) | (பயன்) |

ஐந்தெழுத்து → ஞானம் → வீடுபேறு (முத்தி)

113. மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. 10

மான்குட்டியைக் கையிலேந்திய, பார்வதி பாகனுடைய பூமாலைகள் சார்த்தப்பெற்ற திருவடிகளை உள்ளம் பொருந்தக் கைதொழுவதற்கு நாவை இணைந்த தழுவிய திருவைந்தெழுத்தைப் பற்றிய இப்பத்துப்பாடல்களை வழிபட வல்ல அடியவர்களுக்கு எத்தகைய துயரங்களும் ஏற்பட மாட்டா.

"மான் பிணை தழுவிய மாது"
மாதியலும் பாதி – முதல்வனின் இடப்பாகம்.
அப்பாகத்துக் கையில் உள்ளது மான் பிணை.
மாதொருபாகமே மான் ஏந்திய பாகம்.
பூப்பிணை – மலர்மாலை.
நாப்பிணை – நாவைப் பிணைந்து தழுவிப் பாடிய நமச்சிவாயப் பதிகம். நாவோடு நாவாக ஐந்தெழுத்து பிணைந்து விடவேண்டும்.

## 12. திருப்பழனம்

(அகத்துறைப் பாடல் பதிகம்)

பண் : பழந்தக்கராகம் — பதிக எண் : 12

114. சொன்மாலை பயில்கின்ற
குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு
பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கண்
முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென்
புதுநலமுண் டிகழ்வானோ. 1

சொல் வரிசையைத் தவறாமல் கூவுகின்ற குயில் இனங்களே! பல வரிசையாக உள்ள கோடுகள் பொருந்திய வண்டுகள் பண்பாடும் திருப்பழனத்தை உகந்தருளியிருப்பவனாய், மாலையின் முற்பகுதியில் ஒளிவீசும் பிறை விளங்கும் சடைமுடியைத் தலையில் உடையவனாய்ப் பொன் போன்ற கொன்றை மாலையை மார்பில் அணிந்த எம்பெருமான் என்னுடைய கன்னி இளமை நலத்தை நுகர்ந்து பின் என்னை இகழ்ந்து புறக்கணிப்பானோ? தூது சென்று எம் பெருமானிடம் என் நிலையைச் சொல்லுங்கள்.

115. கண்டகங்காள் முண்டகங்காள்
கைதைகாள் நெய்தல்காள்
பண்டரங்க வேடத்தான்
பாட்டோவாப் பழனத்தான்
வண்டுலாந் தடமூழ்கி
மற்றவனென் றளிர் வண்ணம்
கொண்டநா டானறிவான்
குறிக்கொள்ளா தொழிவானோ. 2

நீர் முள்ளிகளே! கடல் முள்ளிகளே! தாழைகளே! நெய்தல்களே! பண்டரங்கக் கூத்திற்குரிய வேடத்தானாய், பாட்டுக்கள் நீங்காத திருப்பழனத்தில் உறையும் எம்பெருமான், வண்டுகள் உலாவுகின்ற குளத்தில் யான் மூழ்க என்னைக் காப்பதற்காகத் தானும் குளத்தில் குதித்து என்னைக் கரைசேர்த்தபோழ்து அவன் என் தளிர்போன்ற வண்ணத்தை அனுபவித்த அந்நாளை, தான் நினைவில் வைத்திருப்பவள் ஆதலின் என்னைத் தன் அடியவளாக ஏற்றுக் கொள்ளாது என்னைத் தனித்து வருந்துமாறு விடுபவனல்லன்.

| | |
|---|---|
| 116. மனைக்காஞ்சி யிளங்குருகே<br>மறந்தாயோ மதமுகத்த<br>பனைக்கைம்மா வுரிபோர்த்தான்<br>பலர்பாடும் பழனத்தான்<br>நினைக்கின்ற நினைப்பெல்லா<br>முரையாயோ நிகழ்வண்டே<br>சுனைக்குவளை மலர்க்கண்ணாள்<br>சொற்றூதாய்ச் சோர்வாளோ. 3 | வீட்டுக் கொல்லையில் வளர்க்கப்பட்ட காஞ்சி மரத்தில் தங்கியிருக்கும் இளைய நாரையே! மறந்தாயோ! பிரகாசிக்கின்ற வண்டே! மதம் பொழியும் முகத்தை உடையதாய்ப் பனை போலும் திரண்டு உருண்ட பருத்த துதிக்கையை உடைய யானைத் தோலை மேலே போர்த்தவனாய்ப் பலரும் பாடும் திருப்பழனத்து எம்பெருமான் நினைக்கின்ற நினைவை எல்லாம் அறிந்து வந்து என்னிடம் கூற மாட்டாயா? என் தூதாகச் சென்ற என் தோழி அவன் பால் தான் கொண்ட காதலால் தூது சொல்லவேண்டிய செய்தியை நெகிழவிட்டுவிட்டாளோ? |
| 117. புதியையா யினியையாம்<br>பூந்தென்றால் புறங்காடு<br>பதியாவ திதுவென்று<br>பலர்பாடும் பழனத்தான்<br>மதியாதார் வேள்விதனை<br>மதித்திட்ட மதிகங்கை<br>விதியாள னென்னுயிர்மேல்<br>விளையாடல் விடுத்தானோ. 4 | புதிய இனிய பூமணம் கமழும் தென்றல் காற்றே! சுடுகாட்டைத் தன் இருப்பிடமாகக் கொண்டு பலரும் புகழும் பழனத்தானாய், தன்னை மதியாத தக்கனும் மற்றவரும் செய்த வேள்வியை ஒரு பொருளாகக் கொண்டு அழித்த, விதியைத் தன் இட்டவழக்காக ஆள்கின்ற பெருமான், என் உயிருடன் விளையாடுகின்றானோ? |
| 118. மண்பொருந்தி வாழ்பவர்க்கும்<br>மாதீர்த்த வேதியர்க்கும்<br>விண்பொருந்து தேவர்க்கும்<br>வீடுபேறாய் நின்றானைப்<br>பண்பொருந்த விசைபாடும்<br>பழனஞ்சே ரப்பனையென்<br>கண்பொருந்தும் போதத்துங்<br>கைவிடநான் கடவேனோ. 5<br><br>மண்பொருந்தி எனத்தொடங்கும் இப்பாடலைச் சிவபூசை முடிவில் சொல்லி வருதல் சிவ பூசகர்களது வழக்கம்.<br>கண் பொருந்தல் – இறப்பினை உணர்த்தி நின்ற மங்கல வழக்கு. | இம்மண்ணுலகில் பொருந்தி இம்மை இன்பமே கருதி வாழ்கின்றவருக்கும் மேம்பட்ட தூய்மையை உடைய வேதியர்க்கும் வானத்தில் இருக்கும் தேவர்களுக்கும் துன்ப வீடும் இன்பப் பேறுமாய் நிற்பவனாய், சான்றோர்கள் பண்ணொடு பொருந்த இசைபாடும் திருப்பழனத்தில் உறையும் என் தலைவனை யான் உயிர்போய்க் கண் மூடும் நேரத்திலும் கைவிடக் கூடியவனோ? |

| | |
|---|---|
| 119. பொங்கோத மால்கடலிற் புறம்புறம்போ<br>யிரைதேரும்<br>செங்கால்வெண் மடநாராய் செயற்படுவ<br>தறியேனான்<br>அங்கோல வளைகவர்ந்தா னணிபொழில்சூழ்<br>பழனத்தான்<br>தங்கோல நறுங்கொன்றைத் தாரருளா<br>தொழிவானோ. 6 | மிக்க வெள்ளத்தை உடைய பெரிய கடலில் அலைகளின் பின்னே பின்னே சென்று இரையாகிய மீன்களை ஆராயும் சிவந்த கால்களையும் வெண்ணிறத்தையும் உடைய இளைய நாரையே! அடியேன் இனிச் செய்யும் திறன் அறியேன். என்னுடைய அழகிய திரண்ட வளையல்களைக் கவர்ந்தவனாகிய, அழகிய சோலைகளால் சூழப்பட்ட திருப்பழனத்தில் உறையும் எம்பெருமான் தன்னுடைய அழகிய நறிய கொன்றைப் பூமாலையை அருளாது அடியேனைக் கைவிடுவானோ? |
| 120. துணையார முயங்கிப்போய்த்<br>துறைசேரும் மடநாராய்<br>பணையார வாரத்தான்<br>பாட்டோவாப் பழனத்தான்<br>கணையார விருவிசும்பிற்<br>கடியரணம் பொடிசெய்த<br>இணையார மார்பனென்<br>னெழினலமுண் டிகழ்வானோ. 7 | துணையான பேட்டினைத் தழுவிச் சென்று நீர்த்துறையை அடையும் இளைய நாரையே! முரசங்களின் ஆரவாரமும் பாடல்களின் ஒலியும் நீங்காத திருப்பழனத்தில் உறைபவனாய், அம்பினால் வானத்தில் இயங்கிய காவலை உடைய மும்மதில்களையும் அடியோடு பொடியாக்கியவனும், முடிக்கப்படாமல் இரு பக்கமும் தொங்கவிடப்படும் மாலையை அணிந்த மார்பினை உடையவனுமான எம்பெருமான், என் அழகையும் இனிமையையும் நுகர்ந்து பின் என்னை அலட்சியம் செய்வானோ? |
| 121. கூவைவாய் மணிவரன்றிக்<br>கொழித்தோடுங் காவிரிப்பூம்<br>பாவைவாய் முத்திலங்கப்<br>பாய்ந்தாடும் பழனத்தான்<br>கோவைவாய் மலைமகள்கோன்<br>கொல்லேற்றின் கொடியாடைப்<br>பூவைகாள் மழலைகாள்<br>போகாத பொழுதுளதே. 8 | திரளாக உள்ள மணிகளை வாரிக் கரையிலே சேர்த்துப் பெருகி ஓடிக்கொண்டிருக்கும் காவிரிப் பாவையின்கண் முத்துக்கள் விளங்குமாறு மகளிர் பாய்ந்து நீராடும் திருப்பழனத்தை உடையவனாய், கொவ்வைக் கனி போன்ற சிவந்த வாயை உடைய பார்வதியின் கேள்வனாய், உள்ள எம்பெருமானுடைய காளை எழுதிய கொடியாடை மேலே உள்ள மழலைபோல் இனிமையாகப் பேசும் பூவைகளே! எம்பெருமானுடைய பிரிவாற்றாமல் அடியேனுக்குப் பொழுது ஒவ்வொரு கணமும் ஓர் ஊழியாய் நீண்டு, கழியாது துன்புறுத்துகின்றது. |

122. புள்ளிமான் பொறியரவம்
புள்ளுயர்த்தான் மணிநாகப்
பள்ளியான் றொழுதேத்த
விருக்கின்ற பழனத்தான்
உள்ளுவார் வினைதீர்க்கு
மென்றுரைப்ப ருலகெல்லாம்
கள்ளியே னானிவர்க்கென்
கனவளையுங் கடவேனோ. 9

புள்ளிகளை உடைய மானே! படப்புள்ளிகளை உடைய பாம்பே! அன்னப் பறவையின் உருவத்தை எழுதிய கொடியை உயர்த்திய பிரமனும், படங்களை உடைய திருஅனந்தாழ்வானைப் படுக்கையாக உடைய திருமாலும், தொழுது துதிக்குமாறு பழனத்தில் உறையும் எம்பெருமான் தன்னைத் தியானிப்பவருடைய வினைகளைப் போக்கி இன்பம் அருளுவான் என்று உலகோர் கூறுகின்றனர். உள்ளத்தில் கள்ளத் தன்மையை உடைய அடியேன் வினை தீரப் பெறாமையே அன்றி இத்தலைவனுக்கு என் கனமான வளையல்களையும் இழக்கும் நிலையேன் ஆவேனோ?

123. வஞ்சித்தென் வளைகவர்ந்தான்
வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம்
பரந்தார்க்கும் பழனத்தான்
**அஞ்சிப்போய்க் கலிமெலிய**
**வழலோம்பு மப்பூதி**
குஞ்சிப்பூ வாய்நின்ற
சேவடியாய் கோடியையே. 10

சிவபூசையின் ஓர் அங்கமான சிவாக்கினி காரியத்தை நாடோறும் வழாது புரிந்து நாட்டில் வறுமை இல்லாதவாறு செய்த செம்மையர் அப்பூதியடிகள் என்று நாவரசர் பதிவு செய்கிறார். வேள்வியின் பயன் தண் புனலாவது.

**அஞ்சிப்போய்க் கலியின் துயரம் நீங்குமாறு முத்தீயை ஓம்பும் அப்பூதியின் குடுமிக்குத்** தாமரைப் பூவாக இருக்கும் சிவந்த அடிகளை உடைய கூடல் தெய்வமே! என் வளைகளை வஞ்சித்துக் கவர்ந்த, செம்பஞ்சு போன்ற சிவந்த கால்களையும், வெண் சிறகுகளையும் உடைய அன்னப் பறவைகள் பரவி ஆரவாரிக்கும் பழனத்து எம் பெருமான் அடியேனுக்கு அருள் செய்ய வாரானே என்றாலும், கூடல் சுழியின் இரண்டு முனைகளும் இணைந்து ஒன்று சேருமாறு செய்வாயாக.

## 13. திருவையாறு

**பண் : பழந்தக்கராகம்** **பதிக எண் : 13**

124. விடகிலே னடிநாயேன்
வேண்டியக்கா லியாதொன்றும்
இடகிலே னமணர்கள்த
மறவுரைகேட் டலமந்தேன்
தொடர்கின்றே னுன்னுடைய
தூமலர்ச்சே வடிகாண்பான்
அடைகின்றே னையாறர்க்
காளாய்நா னுய்ந்தேனே. 1

"ஐயாறர்க் காளாய் நானுய்ந்தேனே" பதிக மகுடம்

கீழான நாய் போன்ற யான் பொருட்பற்றை விடுவேன் அல்லேன். வறியவராய் என்னிடம் இரந்து வந்தவர்களுக்கு யாதொன்றும் பிச்சையாக இடுவேன் அல்லேன். சமணத் துறவியரின் அறவுரைகளைக் கேட்டு மனம் சுழன்றேன். உன்னுடைய தூய மலர் போன்ற திருவடிகளைத் தரிசித்து வழிபடத் தொடர்ந்து அடைகின்றேன். ஐயாறனாகிய உனக்கு அடிமைப்பட்டேனாய் அடியேன் கடைத்தேறினேன். இனி உன் திருவடிகளை விடமாட்டேன்.

125. செம்பவளத் திருவுருவர்
திகழ்சோதி குழைக்காதர்
கொம்பமருங் கொடிமருங்குற்
கோல்வளையா ளொருபாகர்
வம்பவிழு மலர்க்கொன்றை
வளர்சடைமேல் வைத்துகந்த
அம்பவள வையாறர்க்
காளாய்நா னுய்ந்தேனே. 2

செம்பவளம் போன்ற அழகிய வடிவினராய், ஒளி வீசும் குழைகளை அணிந்தகாதினராய், கொம்பினை விரும்பிப் படரும் கொடி போன்ற இடையையும், திரண்ட வளையல்களையும் உடைய பார்வதியின் பாகராய், புதிதாக மலரும் கொன்றைப்பூவை வளரும் சடைமேல் வைத்து உகப்பவராகிய அழகிய பவளம் போன்ற நிறத்தையுடைய ஐயாற்றெம்பெருமானுக்கு அடியேன் அடிமையாகிக் கடைத்தேறினேன்.

---

126. நணியானே சேயானே
நம்பானே செம்பொன்னின்
துணியானே தோலானே
சுண்ணவெண் ணீற்றானே
மணியானே வானவர்க்கு
மருந்தாகிப் பிணிதீர்க்கும்
அணியானே யையாறர்க்
காளாய்நா னுய்ந்தேனே. 3

அருகிலும் சேய்மையிலும் உள்ளவனே! பொன்மயமான ஆடையை உடையவனே! தோலாடையையும் உடையவனே! பொடியாகிய வெண்ணீறு அணிந்தவனே! சிந்தாமணி போல்பவனே! தேவர்களுக்கும் பிணியைத் தீர்க்கும் மருந்தாகி நெருங்கியிருப்பவனே! ஐயாறனாகிய உனக்கு அடிமையாய் அடியேன் கடைத்தேறினேன்.

---

127. ஊழித்தீ யாய்நின்றா
யுள்குவா ருள்ளத்தாய்
வாழித்தீ யாய்நின்றாய்
வாழ்த்துவார் வாயானே
பாழித்தீ யாய்நின்றாய்
படர்சடைமேற் பனிமதியம்
ஆழித்தீ யையாறர்க்
காளாய்நா னுய்ந்தேனே. 4

உலகத்தை அழிக்கும் ஊழித்தீயாய் நின்றவனே! விரும்பித் தியானிப்பவர் உள்ளத்தில் உள்ளவனே! உடம்பகத்து இருந்து உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத முத்தீயாய் இருப்பவனே! வாழ்த்தும் அடியவர் வாயில் உள்ளவனே! பிரமனும் திருமாலும காணமுடியாதபடி பெரிய தீத்தம்பமாக நின்றவனே! பரவிய சடையின்மேல், உலகத்தாருக்குக் குளிர்ச்சி தரும் சந்திரனாய், தலைவனைப் பிரிந்த தலைவிக்குக் கடலின் உள்ளிருக்கும் குதிரை முகத்தீப்போல வருத்தும் பிறையைச் சூடியவனே! ஐயாறனாகிய உனக்கு ஆளாய் நான் உய்ந்தேனே.

ஊழித்தீ – ஒடுக்குவது
வாழித்தீ – காப்பது
பாழித்தீ – படைப்பது

உடம்பில் உயிர் இனிது வாழ ஆகவாநீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினி என்ற முத்தீ தேவை. இவை வாழித்தீ என்றும் சொல்லப்படும்.

| | |
|---|---|
| 128. சடையானே சடையிடையே<br>தவழுந்தண் மதியானே<br>விடையானே விடையேறிப்<br>புரமெரித்த வித்தகனே<br>உடையானே யுடைதலைகொண்<br>டூருருண் பலிக்குழலும்<br>அடையானே யையாறர்க்<br>காளாய்நா னுய்ந்தேனே. 5 | சடையை உடையவனே! சடையில் தவழும் பிறையைச் சூடியவனே! காளை வாகனனே! காளை மீது இவர்ந்து முப்புரங்களையும் எரியச் செய்த திறமை உடையவனே! எல்லோரையும் அடிமையாக உடையவனே! மண்டை ஓட்டை ஏந்தி ஊர்தோறும் பிச்சை உணவுக்கு அலைபவனாய் எல்லோரும் அடையத்தக்க சரணியனே! ஐயாறனாகிய உனக்கு அடியேன் ஆளாகி உய்ந்தேனே. |
| 129. நீரானே தீயானே<br>நெதியானே கதியானே<br>ஊரானே யுலகானே<br>யுடலானே யுயிரானே<br>பேரானே பிறைசூடீ<br>பிணிதீர்க்கும் பெருமானென்<br>றாராத வையாறர்க்<br>காளாய்நா னுய்ந்தேனே. 6 | 'நீரும் நெருப்பும் செல்வமும் செல்லும் வழியும் ஊரும் உலகமும் உடலும் உயிருமாகி இருப்பவனே! பலதிரு நாமங்களை உடையவனே! பிறை சூடியே! பிணிகளைப் போக்கும் பெருமானே!' என்று பலகால் அழைத்தும் ஆர்வம் அடங்கப் பெறாது மேன்மேல் வளர்ந்து வரும் நிலையில் அடியேனை ஆட்கொண்டு அருளும் ஐயாறனாகிய உனக்கு ஆளாய் நான் உய்ந்தேன். |
| 130. கண்ணானாய் மணியானாய்<br>கருத்தானா யருத்தானாய்<br>எண்ணானா யெழுத்தானா<br>யெழுத்தினுக்கோ ரியல்பானாய்<br>விண்ணானாய் விண்ணிடையே<br>புரமெரித்த வேதியனே<br>அண்ணான வையாறர்க்<br>காளாய்நா னுய்ந்தேனே. 7 | கண்ணாகவும் கண்ணின் மணியாகவும், அக நோக்கத்திற்கு உரிய கருத்தாகவும், நுகர்ச்சியாகவும், எண்ணாகவும், எழுத்தாகவும், எழுத்தின் இயல்பாகவும், பரவெளியாகவும், வானத்தில் இயங்கிய மும்மதில்களை அழித்த வேதியனாகவும், அடியேனுக்கு நெருங்கிய வனாகவும் உள்ள ஐயாறனாகிய உனக்கு ஆளாய் நான் உய்ந்தேனே. |
| 131. மின்னானா யுருமானாய்<br>வேதத்தின் பொருளானாய்<br>பொன்னானாய் மணியானாய்<br>பொருகடல்வாய் முத்தானாய்<br>நின்னானா ரிருவர்க்குங்<br>காண்பரிய நிமிர்சோதி<br>அன்னானே யையாறர்க்<br>காளாய்நா னுய்ந்தேனே. 8 | மின்னாகவும் இடியாகவும் வேதத்தின் பொருளாகவும், பொன்னாகவும் மணியாகவும் அலைகள் மோதும் கடலில் உள்ள முத்தாகவும் உள்ளவனே! நின்னைப் போலத் தம்மைப் பரம்பொருளாகக் கருதிய பிரமனும் திருமாலும் காணமுடியாத உயர்ந்த தீப்பிழம்பாய் நின்ற அத்தன்மையனே! இவ்வாறு உள்ள ஐயாறனாகிய உனக்கு ஆளாய் நான் உய்ந்தேனே. |

132. முத்திசையும் புனற்பொன்னி
மொய்பவளங் கொழித்துந்தப்
பத்தர்பலர் நீர்மூழ்கிப்
பலகாலும் பணிந்தேத்த
எத்திசையும் வானவர்க
ளெம்பெருமா னெனவிறைஞ்சும்
அத்திசையா மையாறார்க்
காளாய்நா னுய்ந்தேனே. 9

முத்துக்களோடு கூடிவரும் காவிரியின் வெள்ளம், செறிந்த பவளங்களை அரித்துக் கரைசேர்க்க, பத்தர்பலர் காவிரி நீரில் மூழ்கிப் பலகாலும் வணங்கித் துதிக்க எல்லாத் திசைகளிலும் தேவர்கள் 'எம்பெருமான்!' என்று கூப்பிட்டவாறே வழிபடும் அத்திசைகளில் எல்லாம் அவர்கள் வழிபாட்டை ஏற்கும் ஐயாறர்க்கு ஆளாய் நான் உய்ந்தேனே.

133. கருவரைசூழ் கடலிலங்கைக்
கோமானைக் கருத்தழியத்
திருவிரலா லுதைகரணஞ்
செய்துகந்த சிவமூர்த்தி
பெருவரைசூழ் வையகத்தார்
பேர்நந்தி யென்றேத்தும்
அருவரைசூ ழையாறர்க்
காளாய்நா னுய்ந்தேனே. 10

கடலிடையே பெரிய மலைகளால் சூழப்பட்ட இலங்கை நகர் மன்னனாகிய இராவணனை அவன் எண்ணம் அழியுமாறு திருவிரலால் அழுத்தி உதைத்தலாகிய செயலைச் செய்து அவன் செருக்கை அடக்கி மகிழ்ந்த சிவமூர்த்தியாய், பெரிய கடலால் சூழப்பட்ட இந்நில உலகத்தவர் நந்தி என்று பெயரிட்டு வழிபடும் பெரிய மூங்கிற் காடுகள் சூழ்ந்த ஐயாற்று எம்பெருமானுக்கு, அடியேன் அடிமையாகிக் கடைத்தேறினேன்.

## 14. பொது

**(தசபுராணத் தடைவு)**

தசபுராணம் – பதிகத்தின் ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு மாபுராணச் சரிதை விரித்துப் போற்றப்படுவதால் பத்துக் கதைகளாகத் தசபுராணப் பதிகம் என்று இயம்பப்படுகிறது.

**(விடமுண்ட கண்டன்)**

**பண் : பழம்பஞ்சுரம்** **பதிக எண் : 14**

134. பருவரை யொன்றுசுற்றி யரவங்கைவிட்ட
விமையோரிரிந்து பயமாய்த்
திருநெடு மானிறத்தை யடுவான்விசும்பு
சுடுவானெழுந்து விசைபோய்ப்
பெருகிட மற்றிதற்கொர் பிதிகாரமொன்றை
யருளாய்பிரானே யெனலும்
அருள்கொடு மாவிடத்தை யெரியாமலுண்ட
வவனண்டரண்ட ரரசே. 1

பெரிய மலையைச் சுற்றிக் கடைகயிறாகக் கொண்ட பாம்பினை விடுத்து நீங்கிய தேவர் ஓடி அஞ்சும்படியாகத் திருமால் திருமேனியை ஒழித்தற்பொருட்டும், விண்ணைச்சுடும் பொருட்டும் எழுந்து விசையொடு சென்று அந்நஞ்சு எங்கும் பரவ, 'பெருமானே! இவ் விடத்துன்பம் நீங்குதற்கு ஒரு கழுவாய் அருளிச் செய்வாயாக' என்று எல்லோரும் வேண்டவும் அருளினால், அப்பெரிய விடத்தை, மற்றவர்கள் தாக்காதவாறு உண்ட பெருமானே எல்லா அண்டங்களுக்கும் அரசனாவான்.

## அடிமுடி தேடிய வரலாறு

**(வாமன புராணம் – சிவமகா புராணம்)**

135. நிரவொலி வெள்ளமண்டி நெடுவண்டமூட
நிலநின்றுதம்ப மதுவப்
பரமொரு தெய்வமெய்த விதுவொப்பதில்லை
யிருபாலுநின்று பணியப்
பிரமனு மாலுமேலை முடியோடுபாத
மறியாமைநின்ற பெரியோன்
பரமுத லாயதேவர் சிவனாயமூர்த்தி
யவனாநமக்கொர் சரணே. 2

பரவிய ஓசையை உடைய வெள்ளப்பெருக்கு மேற்சென்று நீண்ட கண்டங்களை மூழ்க்க, நிலத்திலே நின்ற தீத்தம்பத்தில் பரம்பொருளாகிய ஒப்பற்ற தெய்வம் அடைய, பிரமனும் திருமாலும் இதனை ஒத்த தீப்பிழம்பு முன்னும் இல்லை என்று கருதி அந்நாளில் இரு பக்கங்களிலும் நின்று பணியுமாறு அவர்கள் அதன் முடியையும் அடியையும் அறிய முடியாமல் நின்ற பெரியோனாய் மேம்பட்ட முற்பட்ட தேவனாம் சிவமூர்த்தியாகிய பெருமானே நமக்குப் பாதுகாவல் நல்கும் சரணியன் ஆவான்.

## மூவரில் மூத்தோன்

**(ஆறு சமயங்களுக்கொரு தலைவன்)**

136. காலமு நாள்களூழி படையாமுனேக
வுருவாகிமூவ ருருவில்
சாலவு மாகிமிக்க சமயங்களாறி
னுருவாகிநின்ற தழலோன்
ஞாலமு மேலைவிண்ணோ டுலகேழுமுண்டு
குறளாயொராலி னிலைமேல்
பாலனு மாயவற்கொர் பரமாயமூர்த்தி
யவனாநமக்கொர் சரணே. 3

குறள் – வாமனன்
கண்ணனுக்கு அருளிய வரலாறு.

நாண்மீன்கள் முதல் ஊழி முடியப் பாகுபட்ட காலத்தையும் படைத்தற்கு முன்பு ஒன்றாய் நின்றவனாய், மும்மூர்த்திகள் உருவிலும் அவர்கள் உயிருக்கு உயிராய் அமைந்தனவாய், அறுவகைச் சமயத்தோருக்கும் அவ்வவர் பொருளாய் விளங்கி நிற்பவனாய், உள்ள சோதி வடிவான பெருமான் வாமனனாகி மண்ணும் மேலை விண்ணுலகும் அடங்கிய ஏழுலகமும் உண்டு, ஓர் ஆலிலை மேல் சிறு குழந்தையாய்ப் பள்ளி கொண்ட திருமாலுக்கும் மேம்பட்ட மூர்த்தியாய் உள்ளவன். அவன் தான் நமக்கு ஒப்பற்ற சரணியன்.

## தாரகாசுரன் வதம் (மச்ச, கந்த புராணம்)

137. நீடுயர் விண்ணுமண்ணு நெடுவேலைகுன்றொ
டுலகேழுமெங்கு நலியச்
சூடிய கையராகி யிமையோர்கணங்கள்
துதியோதிநின்று தொழலும்
ஓடிய தாரகன்ற னுடலம்பிளந்தும்
ஒழியாதகோப மொழிய
ஆடிய மாநடத்தெ மனலாடிபாத
மவையாநமக்கொர் சரணே. 4

நெடிது உயர்ந்த விண்ணும் மண்ணும் நெடிய கடல் மலைகளொடு ஏழுலகமும் முழுதும் வருந்த வருத்திய தாரகனுடைய கொடுமைகளுக்கு ஆற்றாமல் தேவர் கூட்டத்தார் குவித்த கையராகிப் பெருமானுடைய புகழ்களைக் கூறியவாறு தொழுத அளவில், தன் இறுதியை நினைத்து உயிர்தப்பி ஓடிய தாரகனுடைய உடலைப் பிளந்தும் நீங்காத கோபம் நீங்குதற்பொருட்டு மகாதாண்டவத்தை ஆடிய தீயாடியப்பருடைய திருவடிகளே நமக்கு ஒப்பற்ற அடைக்கலம் நல்குவன.

## முப்புரமெரித்தது - மும்மலகாரிய ஒழிப்பு

138. நிலைவலி யின்றியெங்கு நிலனோடுவிண்ணு
நிதனஞ்செய்தோடு புரமூன்
றலைநலி வஞ்சியோடி யரியோடுதேவ
ரரணம்புகுத்த னருளால்
கொலைநலி வாளிமூள வரவங்கைநாணு
மனல்பாயநீறு புரமா
மலைசிலை கையிலொல்க வளைவித்தவள்ள
லவனாநமக்கொர் சரணே. 5

எதிர்த்து நிலைத்து நிற்பதற்குரிய வலிமை இல்லாமையால், மண்ணையும், விண்ணையும் எங்கும் அழித்துக் கொண்டு சஞ்சரிக்கும் திரிபுரங்கள் துன்புறுத்தும் துயரத்துக்கு அஞ்சி ஓடித் திருமாலோடு தேவர்கள் அடைக்கலம் என்று அடையத் தன் அருளால் கொலைத் தொழிலால் வருத்தும் திருமாலாகிய அம்பில் தீக்கடவுள் இணையவும், கையிலுள்ள வாசுகி என்ற பாம்பாகிய நாணில் தீப்பாயவும் மேருமலையாகிய வில் கையில் தளரவும் முப்புரங்களும் சாம்பலாகிவிடுமாறு வில்லை வளைவித்துச் செயற்படுத்திய அருட் கொடையாளனாம் அப்பெருமானே நமக்கு ஒப்பற்ற அடைக்கலம் நல்குபவனாவான்.

## காலனைக் காலால் காய்ந்தது

139. நீலநன் மேனிசெங்கண் வளைவெள்ளெயிற்ற
னெரிகேச னேடிவருநாள்
காலைநன் மாலைகொண்டு வழிபாடுசெய்யு
மளவின்கண்வந்து குறுகிப்
பாலனை யோடவோடப் பயமெய்துவித்த
வுயிர்வவ்வுபாசம் விடுமக்
காலனை வீடுசெய்த கழல்போலுமண்டர்
தொழுதோதுசூடு கழலே. 6

கருநீல மேனியனும் சிவந்த கண்ணினனும் வளைந்த வெள்ளைக் கோரப் பற்களை உடையவனும் நெருப்புப் போன்ற சிவந்த மயிர் முடியை உடையவனும் ஆகிய காலன், மார்க்கண்டேயனைத் தேடிவந்த அன்று, அம்முனிவன் காலையிலே நல்ல மலர் மாலைகளைக் கொண்டு சிவபெருமானை வழிபாடு செய்த நேரத்தில் அவனிடத்து வந்து அணுகி அவனை மிகவும் அச்சுறுத்தி அவன் உயிரைக் கவரக் கயிற்றை வீசினானாக, அக்காலனை உதைத்து அழித்த சிவபெருமான் திருவடிகளே தேவர்கள் தொழுது வாழ்த்தித் தலைமேல் சூடும் திருவடிகளாகும்.

## தக்கயாகப் பரணி

140. உயர்தவ மிக்கதக்க னுயர்வேள்விதன்னி
லவியுண்ணவந்த விமையோர்
பயமுறு மெச்சனங்கி மதியோனுமுற்ற
படிகண்டுநின்று பயமாய்
அயனொடு மாலுமெங்க ளறியாமையாதி
கமியென்றிறைஞ்சி யகலச்
சயமுறு தன்மைகண்ட தழல்வண்ணனெந்தை
கழல்கண்டுகொள்கை கடனே. 7

தவத்தில் மேம்பட்ட தக்கன் நிகழ்த்திய மிகச் சிறப்பான வேள்வியில் அவியைப் பெற்று உண்ண வந்த தேவர்களும் அச்சம் மிக்குற்ற வேள்வித் தலைவனும் அக்கினியும் சந்திரனும் ஒறுக்கப்பட்டு அடைந்த நிலைமையை நோக்கி அச்சத்தோடு நின்று பிரமனும், திருமாலும், 'எங்கள் அறியாமை முதலிய குற்றங்களைப் பொருத்தருள்வாய்' என்று வணங்கி அப்பாற் செல்ல, வெற்றியுற்ற தன்மையைக் கண்ட, தீயைப் போன்ற செந்நிறத்தன் ஆகிய எங்கள் தந்தையின் திருவடிகளைக் கண்டு வழிபடுவதே பிறவாதிருக்க விரும்பும் உயிர்களின் கடமையாகும்.

## நெற்றிக்கண் விழித்த வரலாறு

141. நலமலி மங்கைநங்கை விளையாடியோடி
நயனத்தலங்கள் கரமா
உலகினை யேழுமுற்று மிருண்மூடமூட
விருளோடநெற்றி யொருகண்
அலர்தர வஞ்சிமற்றை நயனங்கைவிட்டு
மடவாளிறைஞ்ச மதிபோல்
அலர்தரு சோதிபோல வலர்வித்தமுக்க
ணவனாநமக்கொர் சரணே. 8

அழகும் பண்பும் மிக்க பார்வதி எம்பெருமானோடு ஓடி விளையாடிய பொழுது அவனுடைய கண்களைக் கைகளால் பொத்த, ஏழு உலகங்களையும் முழுதுமாக இருட்டுக் கவர்ந்து கொள்ளவே, எம்பெருமானுடைய ஒற்றை நெற்றிக்கண் அந்த இருள் அகலுமாறு திறக்க, அதுகண்டு அஞ்சிப் பார்வதி கண்களை மூடிய கைகளை எடுத்துவிட்டு எம்பெருமானை வணங்க, சந்திரனைப் போலவும், சூரியனைப் போலவும் ஏனைய இரு கண்களையும் ஒளிவிடச் செய்த அம்முக்கண் மூர்த்தியே நமக்கு ஒப்பற்ற அடைக்கலம் நல்குபவனாவான்.

## காமதகனம்

142. கழைபடு காடுதென்றல் குயில்கூவவஞ்சு
கணையோனணைந்து புகலும்
மழைவடி வண்ணனெண்ணி மகவோனைவிட்ட
மலரானதொட்ட மதனன்
எழில்பொடி வெந்துவீழ விமையோர்கணங்க
ளெரியென்றிறைஞ்சி யகலத்
தழல்படு நெற்றியொற்றை நயனஞ்சிவந்த
தழல்வண்ணனெந்தை சரணே. 9

கரும்புகள் காடுபோல வளர்ந்துள்ள கருப்பங் கொல்லையில் தென்றல் உலவ, குயில்கூவ, ஐந்து மலரம்புகளை உடையவனாய் நெருங்கி வந்து, தனக்குப் பக்க பலமாக இருப்பதாகக் கூறிய கார்மேக வண்ணனாகிய திருமாலையும் இந்திரனையும் விட்டு நீங்கிய, மலர் அம்புகளை விடுத்த மன்மதனுடைய அழகிய உடல் சாம்பலாகித் தரையில் விழ அதனைக் கண்ட தேவர் கூட்டங்கள் நெருப்பு என்று சொல்லி அஞ்சி நீங்குமாறு நெருப்பை வெளிப்படுத்தும் நெற்றியின் ஒற்றைக்கண் சிவந்த தீ நிறத்தவனாகிய எங்கள் தந்தையே நமக்குச் சரணியன் ஆவான்.

## மாலுக்குச் சக்கரம் ஈதல்

143. தடமல ராயிரங்கள் குறைவொன்றதாக
நிறைவென்றுதன்க ணதனால்
உடன்வழி பாடுசெய்த திருமாலையெந்தை
பெருமானுகந்து மிகவும்
சுடரடி யான்முயன்று சுழல்வித்தரக்க
னிதயம்பிளந்த கொடுமை
அடல்வலி யாழியாழி யவனுக்களித்த
வவனாநமக்கொர் சரணே. 10

பெரிய தாமரைப் பூக்கள் ஆயிரத்தில் ஒன்று குறைய, வழிபாடு நிறைவதற்காகத் தன் செந்தாமரைக் கண் ஒன்றை இடந்து அதனால் அருச்சித்து வழிபாட்டை நிறைவு செய்த திருமாலை எம் தந்தையாகிய பெருமான் மகிழ்ந்து, தன் ஒளிமிக்க சேவடியால் வட்டமாகச் சக்கரத்தை உண்டாக்கி அதனைச் சுழலச் செய்து, சலந்தரனுடைய மார்பைப் பிளந்த கொடுமை மிக்க வலிமை உடைய சக்கரத்தைப் பாற்கடலையுடைய திருமாலுக்கு அளித்தான். அவனே எமக்கு ஒப்பற்ற அடைக்கலம் நல்குபவனாவான்.

### இராவணன் பாட்டு

144. கடுகிய தேர்செலாது கயிலாயமீது
கருதேலுன்வீர மொழிநீ
முடுகுவ தன்றுதன்ம மெனநின்றுபாகன்
மொழிவானைநன்று முனியா
விடுவிடு வென்றுசென்று விரைவுற்றரக்கன்
வரையுற்றெடுக்க முடிதோள்
நெடுநெடு விற்றுவீழ விரலுற்றபாத
நினைவுற்றதென்றன் மனனே. 11

'விரைந்து செல்லும் தேராயினும் அது கயிலை மலை மீது செல்லாது; உன் வீரத்தைப் பெரிதாகக் கருதாது விட்டு ஒழி. என்னிடத்தில் கோபிப்பது அறம் அன்று' என்று நிறுத்திய தேரில் நின்று கூறிய பாகனை வெகுண்டு, வேகமாகச் சென்று விரைவாக இராவணன் கயிலையைப் பெயர்க்க முற்பட, அவனுடைய தலைகளும் தோள்களும் நெடுநெடு என்னும் ஓசையோடு இற்றுவிழுமாறு அழுத்தியது சிவபெருமானுடைய திருவடியின் விரல் ஒன்று. அத்தகைய திருவடிகளை என் உள்ளம் எண்ணலுற்றது.

## 15. பொது
### (பாவநாசத் திருப்பதிகம்)

### திருப்பதிக வரலாறு

யாதேனும் ஒரு தலத்திற்கும் உரியவாகாது பொதுவாயிருக்குந் திருப்பதிகங்களைக் குறிக்க இட்ட காரணப் பெயர்கள் அவ்வப் பதிகத்தின் முதலையோ முடிவையோ பொருளையோ பற்றியவாய்த் திகழ்கின்றன. 'சிவனெனு மோசை' (8) என்பது அப்பதிகத்தின் முதற்கண் உள்ள தொடர்பற்றியது. 'தசபுராணம்' (14) என்பது பொருள் பற்றியது. இது (15) பதிக முடிவின்கண் உள்ள தொடர் பற்றியது. திருப்புகலூரில் திருத்தொண்டு புரிந்து வழிபட்டு வாழ்ந்தருளுங் காலத்தில் மொழிந்து சார்த்தியருளிய வண்டமிழ் மாலைகளுள் ஒன்று, இப்பார் பரவும் பாவநாசப் பதிகம் (பெரிய புராணம். 1680).

**பண் : பழம்பஞ்சுரம்** **பதிக எண் : 15**

145. பற்றற் றார்சேர் பழம்பதியைப்
பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெந் திகழ்கனியைத்
தீண்டற் கரிய திருவுருவை
வெற்றி யூரில் விரிசுடரை
விமலர் கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூரெ முத்தமனை
யுள்ளத் துள்ளேவைத்தேனே. 1

உலகப் பற்றற்றவர்கள் சேரும் பழைய திருத்தலங்களில் திகழ்பவன். பாசூரில் உறையும் பவளம், சிற்றம்பலத்தில் உள்ள கனி, தீண்டுதலுக்கு அரிய திருஉருவம், வெற்றியூரில் விரிந்த ஒளி, தூயவர்கள் தலைவன், கடல் ஒருபுறம் சூழ்ந்த ஒற்றியூர் உத்தமன் ஆகிய பெருமானை அடியேன் உள்ளத்தில் நிலையாக இருத்தினேன்.

| | |
|---|---|
| **146.** ஆனைக் காவி லணங்கினை<br>யாரூர் நிலாய வம்மானைக்<br>கானப் பேரூர்க் கட்டியைக்<br>கானூர் முளைத்த கரும்பினை<br>வானப் பேரார் வந்தேத்தும்<br>வாய்மூர் வாழும் வலம்புரியை<br>மானக் கயிலை மழகளிற்றை<br>மதியைச் சுடரை மறவேனே. 2 | ஆனைக்காவில் உள்ள தெய்வம், ஆரூரில் உறையும் தலைவன், கானப் பேரூரில் உள்ள கரும்பின் கட்டி, கானூரில் முளைத்த கரும்பு, வானத்தினின்றும் நீங்காதவராகிய தேவர் வந்து வழிபடும் திருவாய்மூரில் உறையும் வலம்புரிச் சங்கு போல்வான். பெருமைமிக்க கயிலைமலையில் உறையும் இளைய களிறு, சந்திரனும், சூரியனும் ஆகியவன் என்னும் பெருமானை அடியேன் மறக்க மாட்டேன். |
| **147.** மதியங் கண்ணி ஞாயிற்றை<br>மயக்கந் தீர்க்கு மருந்தினை<br>அதிகை மூதூ ரரசினை<br>யையா றமர்ந்த வையனை<br>விதியைப் புகழை வானோர்கள்<br>வேண்டித் தேடும் விளக்கினை<br>நெதியை ஞானக் கொழுந்தினை<br>நினைந்தேற் குள்ள நிறைந்ததே. 3 | பிறையைக் குறுங்கண்ணியாக உடைய சூரியன், உலகமயக்கத்தைப் போக்கும் மருந்து, திருவதிகையாகிய பழைய ஊரில் உறையும் அரசு, திருவையாற்றில் விரும்பி உறையும் தலைவன், வேதவிதியாக உள்ளவன், எல்லாப் புகழும் தன்பால் வந்து சேரும் மெய்ப்பொருள், தேவர்கள் விரும்பித்தேடும் ஞானஒளி, பெருஞ்செல்வம், ஞானக் கொழுந்து ஆகிய பெருமானை விருப்புற்று நினைத்த அளவில் அடியேனுடைய உள்ளம் மகிழ்ச்சியில் நிறைவுற்றது. |
| **148.** புறம்ப யத்தெம் முத்தினைப்<br>புகலூ ரிலங்கு பொன்னினை<br>உறந்தை யோங்கு சிராப்பள்ளி<br>யுலகம் விளக்கு ஞாயிற்றைக்<br>கறங்கு மருவிக் கழுக்குன்றிற்<br>காண்பார் காணுங் கண்ணானை<br>அறஞ்சூ ழதிகை வீரட்டத்<br>தரிமா னேற்றை யடைந்தேனே. 4 | புறம்பயத்தில் உறையும் எங்கள் முத்து, புகலூரில் விளங்கும் பொன், உறையூரில் ஓங்கிக் காணப்படும் சிராப்பள்ளிக் குன்றிலுள்ள உலகுக்கு ஒளிதரும் சூரியன். அருவிகள் ஒலிக்கும் கழுக்குன்றத்தில் தரிசிக்க வருபவர்களுக்குப் பற்றுக்கோடு, அறச்செயல்கள் யாண்டும் செய்யப்படுகின்ற அதிகை வீரட்டத்தில் உள்ள ஆண் சிங்கம் ஆகிய பெருமானை அடியேன் அடைந்தேன். |
| **149.** கோலக் காவிற் குருமணியைக்<br>குடமூக் குறையும் விடமுணியை<br>ஆலங் காட்டி லந்தேனை<br>யமரர் சென்னி யாய்மலரைப்<br>பாலிற் றிகழும் பைங்கனியைப்<br>பராய்த் துறையெம் பசும்பொன்னைச்<br>சூலத் தானைத் துணையிலியைத்<br>தோளைக் குளிரத் தொழுதேனே. 5 | கோலக்காவில் உள்ள நல்ல நிறமுடைய மாணிக்கம், குடமூக்கில் உறையும் விடமுண்ட பெருமான், ஆலங்காட்டில் உறையும் அழகிய தேன், தேவர்கள் தலைகளுக்குச் சூட்டப்படும் அழகிய மலர், பால்போல் இனிக்கும் புதுமை மாறாத பழம், பராய்த்துறையில் உள்ள பசிய பொன், சூலம் ஏந்தியவன், ஒப்பற்றவன் ஆகிய பெருமானை அடியேன் தோள்கள் குளிருமாறு கைகூப்பி வணங்கினேன். |

| | |
|---|---|
| 150. மருக லுறைமா ணிக்கத்தை<br>வலஞ்சு ழி(ய்)யின் மாலையைக்<br>கருகா வூரிற் கற்பகத்தைக்<br>காண்டற் கரிய கதிரொளியைப்<br>பெருவே ளூரெம் பிறப்பிலியைப்<br>பேணு வார்கள் பிரிவரிய<br>திருவாஞ் சியத்தெஞ் செல்வனைச்<br>சிந்தை யுள்ளே வைத்தேனே. 6 | மருகலில் தங்கும் மாணிக்கம், வலஞ்சுழியில் உள்ள தமிழ்ப்பாமாலை, கருகாவூரில் உள்ள கற்பகம், காண்பதற்கு எளிதில் இயலாத கதிரவன் ஒளி, பெருவேளூரில் உள்ள பிற வாயாக்கைப் பெரியோன், விரும்பித் தொழுவார்கள் பின் பிரிந்து செல்ல மனம் கொள்ளாதவகையில் உள்ள திருவாஞ்சியத்தில் உறையும் எம் செல்வன் ஆகிய பெருமானை அடியேன் மனத்தில் நிலையாக இருத்தினேன். |
| 151. எழிலா ரிராச சிங்கத்தை<br>யிராமேச் சுரத்தெ மெழிலேற்றைக்<br>குழலார் கோதை வரைமார்பிற்<br>குற்றா லத்தெங் கூத்தனை<br>நிழலார் சோலை நெடுங்களத்து<br>நிலாய நித்த மணாளனை<br>அழலார் வண்ணத் தம்மானை<br>யன்பி லணைத்து வைத்தேனே. 7 | அழகுமிக்க அரச சிங்கம், இராமேச்சுரத்தில் உறையும் அழகிய காளை, குழல்வாய் மொழியம்மையைத் தன் மலை போன்ற மார்பில் கொண்ட குற்றாலத்தில் உறையும் எங்கள் கூத்தன். நிழல் மிகுந்த சோலைகளையுடைய நெடுங்களத்தில் உறையும் நித்தியகலியாணன். தீ நிறத்தலைவன் ஆகிய பெருமானை அடியேன் அன்பினால் அடியேனோடு இணைத்து வைத்துக் கொண்டேன். |
| 152. மாலைத் தோன்றும் வளர்மதியை<br>மறைக்காட் டுறையு மணாளனை<br>ஆலைக் கரும்பி னின்சாற்றை<br>யண்ணா மலையெம் மண்ணலைச்<br>சோலைத் துருத்தி நகர்மேய<br>சுடரிற் றிகழுந் துளக்கிலியை<br>மேலை வானோர் பெருமானை<br>விருப்பால் விழுங்கி யிட்டேனே. 8<br><br>திருப்பதிகக் கோவை போலப் பல தலங்கள் பேசப்பட்டுள்ளன. | மாலையில் தோன்றும் ஒளி வளரும் சந்திரன், மறைக்காட்டுள் உறையும் தலைவன், ஆலையில் பிழியப்படும் கரும்பின் இனிய சாறு, அண்ணாமலையிலுள்ள எம் தலைவன், சோலைகளை உடைய துருத்திநகர்க் கோயிலில் விரும்பி உறையும் சூரியனைப் போல ஒளிவீசும் அசைவற நின்ற பேராற்றலன், மேலே உள்ள தேவர்கள் தலைவன் ஆகிய பெருமானை அடியேன் விருப்பத்தோடு விழுங்கி விட்டேன். |
| 153. சோற்றுத் துறையெஞ் சோதியைத்<br>துருத்தி மேய தூமணியை<br>ஆற்றிற் பழனத் தம்மானை<br>யால வாயெம் மருமணியை<br>நீற்றிற் பொலிந்த நிமிர்திண்டோ<br>ணெய்த்தா னத்தெந் நிலாச்சுடரைத்<br>தோற்றக் கடலையட லேற்றைத்<br>தோளைக் குளிரத் தொழுதேனே. 9 | சோற்றுத்துறையில் உறையும் ஞானஒளி, துருத்தியில் விரும்பி உறையும் தூயமணி, ஆற்றின்வளம் மிக்க திருப்பழனத் தலைவன். ஆலவாயிலுள்ள சிந்தாமணி, திருநீற்றால் விளங்கும் திண்ணிய தோள்களை உடைய, நெய்த்தானத்தில் உறையும் எம் நிலவொளி, பிறவிக்கடலை அழிக்கும் ஆற்றல் மிக்க காளை ஆகிய பெருமானை அடியேன் தோள்கள் குளிருமாறு கைகூப்பித் தொழுதேன். |

154. புத்தூ ருறையும் புனிதனைப்
பூவ ணத்தெம் போரேற்றை
வித்தாய் மிழலை முளைத்தானை
வேள்விக் குடியெம் வேதியனைப்
பொய்த்தார் புரமூன் றெரித்தானைப்
பொதியின் மேய புராணனை
வைத்தே னென்றன் மனத்துள்ளே
மாத்தூர் மேய மருந்தையே. 10

புத்தூரில் உறையும் தூயோன், பூவணத்தில் உள்ள எம் போரிடும் காளை, மிழலையில் விதையாகி முளைத்தவன், வேள்விக்குடியில் உறையும் எம் வேதியன், நெறிதவறிய அசுரர்களின் மும்மதில்களையும் எரித்தவன், பொதிய மலையில் விரும்பி உறையும் பழையோன், மாத்தூரில் விரும்பி உறையும் அமுதம் ஆகிய பெருமானை அடியேன் மனத்துள்ளே நிலையாக இருத்தினேன்.

155. முந்தித் தானே முளைத்தானை
மூரி வெள்ளே றூர்ந்தானை
அந்திச் செவ்வான் படியானை
யரக்க னாற்ற லழித்தானைச்
சிந்தை வெள்ளப் புனலாட்டிச்
செஞ்சொன்மாலை யடிச்சேர்த்தி
**எந்தை பெம்மா னென்னெம்மா**
**னென்பார் பாவநாசமே.** 11

பாவநாசமே என முடித்துப் பாவங்கள் நாசமாவதற்குரிய வழிகளை "நான் இவ்வாறு வழிபட்டேன். யாவரும் வழிபடின் பாவம் நாசமாம்" என உபதேசித்தருளுகின்றமையால் இது, "பாவநாசத் திருப்பதிகம்" எனப்படும்.

ஏனைய எல்லாப் பொருள்களுக்கும் முற்பட்டுத் தோன்றியவன். மூத்த வெண்ணிறக் காளையை இவர்ந்தவன். மாலைநேரச் செவ்வானின் நிறத்தினன். இராவணன் ஆற்றலை அழித்தவன் ஆகிய பெருமானை உள்ளத்தில் தோன்றும் அன்பு என்னும் தீர்த்தத்தால் அபிடேகித்து, இனிய சொற்களாலாகிய பாமாலைகளை அவன் திருவடிகளில் சேர்ப்பித்து **எந்தையே, இறைவனே, என் தலைவனே என்று பலகாலும் அவனை அழைத்து மகிழ்பவருடைய தீவினைகள் அழிந்துவிடும்.**

உலகர் பரவ நின்றது இப்பதிகமென்பதால் "பார்பரவும் பாபநாசப் பதிகம்" எனப்படுகிறது.
எந்தை பெம்மான், என் எம்மான் என்பார் பாவநாசமே.

## 16. திருப்புகலூர்

பண் : இந்தளம் பதிக எண் : 16

156. செய்யர் வெண்ணூலர் கருமான் மறிதுள்ளும்
கையர் கனைகழல் கட்டிய காலினர்
மெய்யர் மெய்ந்நின் றவர்க்கல்லா தவர்க்கென்றும்
பொய்யர் புகலூர்ப் புரிசடை யாரே. 1

மெய்யர் – பொய்யர்.
முரண் அணி சுவைபடக் கூறுகிறார்

புகலூரிலுள்ள முறுக்கேறிய சடையினராகிய பெருமானார் நிறத்தில் செய்யராய், வெண்ணீறு அணிந்தவராய், கரிய மான் குட்டி துள்ளும் கையினராய், ஒலிக்கும் வீரக்கழல் கட்டிய காலினராய், உண்மையான நெறியில் ஒழுகும் அடியவர்களுக்கு மெய்யராய், அத்தகுதி யில்லாதவர்க்குப் பொய்யராய் உள்ளார்.

**157.** மேகந லூர்தியர் மின்போன் மிளிர்சடைப்
பாக மதிநுத லாளையொர் பாகத்தர்
நாக வளையினர் நாக வுடையினர்
போகர் **புகலூர்ப் புரிசடை யாரே.** 2

புகலூர்ப் புரிசடையார் மேக நிறத்தினனான திருமாலாகிய காளையைப் பெரிய வாகனமாக உடையவர். மின்னலைப் போல ஒளிவீசும் சடையோடு, பாம்பினைக் கங்கணமாக அணிந்து, யானைத்தோலை மேலுடையாகப் போர்த்திப் பிறை நுதலாளாகிய பார்வதி பாகராய்ப் போகியாயிருந்து உயிர்களுக்குப் போகத்தை அருளுபவராவார்.

பதிக மகுடம் – புகலூர்ப் புரிசடையாரே.
வளை – கங்கணம்;
நாகம் – பாம்பு, யானை,
சர்ப்ப கங்கணம், யானைத் தோலுடை.

சிவபெருமானுக்கு மூன்று வாகனங்கள் குறிப்பாகச் சொல்லப்படும்.
மால்விடை – திருமாலாகிய ஊர்தி
அறவிடை – ஊழிக்காலத்தில் தர்மமே ஊர்தி
மழவிடை – உயிர் விடை

**158.** பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக்
**கருந்தாழ் குழலியுந்** தாமுங் கலந்து
திருந்தா மனமுடை யார்திறத் தென்றும்
பொருந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 3

புகலூர்ப் புரிசடையார் பெரிய தாழ்ந்த சடைமுடி மேலே பிறையைச் சூடிக் கரியதாய் நீண்ட கூந்தலை உடைய பார்வதியோடு தாமும் கலந்து, **திருந்தாத மனமுடையவர் பக்கம், தாம் என்றும் பொருந்தாராக உள்ளார்.**

தல அம்மையின் பெயர்

**159.** அக்கா ரணிவட மாகத்தர் நாகத்தர்
நக்கா ரிளமதிக் கண்ணியர் நாடொறும்
உக்கார் தலைபிடித் துண்பலிக் கூர்தொறும்
புக்கார் புகலூர்ப் புரிசடை யாரே. 4

புகலூர்ப் புரிசடையார் உருத்திராக்கம் நிறைந்த மாலையைப் பூண்ட மார்பினராய், பாம்பினை உடையவராய், ஒளி வீசும் பிறையை முடிமாலையாகச் சூடியவராய், நாள்தோறும் இறந்தவர் மண்டையோட்டினை ஏந்திப் பிச்சை உணவு வாங்க ஊர்தோறும் செல்பவர் ஆவர்.

**160.** ஆர்த்தா ருயிரடு மந்தகன் றன்னுடல்
போர்த்தார் பிறைநுதற் பெண்ணினல் லாளுட்கக்
கூர்த்தார் மருப்பிற் கொலைக்களிற் றீருரி
போர்த்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 5

புகலூர்ப் புரிசடையார் ஆரவாரித்துக் கொண்டு உயிர்களைக் கொல்லும் கூற்றுவனுடைய உடலை அழித்தார். பிறைபோன்ற நெற்றியை உடைய பார்வதி அஞ்சுமாறு கூரிய தந்தங்களை உடைய கொலைத் தொழில் புரியும் யானையைக் கொன்று அதனுடைய உதிரப் பசுமை கெடாத தோலினை உடம்பில் போர்த்தி உள்ளார்.

**161.** தூமன் சுறவந் துதைந்த கொடியுடைக்
காமன் கணைவலங் காய்ந்தமுக் கண்ணினர்
சேம நெறியினர் சீரை யுடையவர்
பூமன் புகலூர்ப் புரிசடை யாரே. **6**

தூமன் – வலிபொருந்திய.
சுறவம் – சுறாமீன்
மன்மதன் – மீனக் கொடியோன்
பூமன் புகலூர் – பூக்கள் மன்னிய திருப்புகலூர்
பூமன் – மலரவன்

வலிமை பொருந்திய சுறாக்கொடியை உடைய மன்மதன் விடுத்த அம்புகளின் வலிமையைக் கோபித்த மூன்றாம் கண்ணையுடையவர். அடியவர்களுக்குப் பாதுகாவலை உடைய வழியை அருளுபவர். மரவுரியை உடுப்பவர். அவர் முருகனார் தொடுத்தளித்த பூக்களை எப்போதும் அணிந்தவராகிய, புகலூரில் உகந்தருளியிருக்கும் முறுக்கேறிய சடையினை உடையவர்.

---

**162.** உதைத்தார் மறலி யுருளவொர் காலால்
சிதைத்தார் திகழ்தக்கன் செய்தநல் வேள்வி
பதைத்தார் சிரங்கரங் கொண்டுவெய் யோன்கண்
புதைத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. **7**

தக்கன் வேள்விச் சிதைவு திருவாசகத்தில் திருவுந்தியார் பதிகத்தில் விரிவாகப் பாடப்பட்டுள்ளது.

புகலூர்ப் புரிசடையார் கூற்றுவன் உருளுமாறு அவனை ஒரு திருவடியால் உதைத்தவர். சிறப்பாக விளங்கிய தக்கன் செய்த பெரிய வேள்வியைச் சிதைத்தவர். அவ்வேள்வியில் பங்கு கொண்ட தம் தவறு கருதி நடுங்கிய தேவர்களின் தலைகளையும் கைகளையு ம் போக்கிச் சூரியனுடைய கண்ணை அவித்தவர்.

---

**163.** கரிந்தார் தலையர் கடிமதின் மூன்றும்
தெரிந்தார் கணைகள் செழுந்தழ லுண்ண
விரிந்தார் சடைமேல் விரிபுனற் கங்கை
புரிந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. **8**

புகலூர்ப் புரிசடையார் இறந்தவருடைய தலை மாலையை அணிந்தவர். காவல் பொருந்திய மும்மதில்களையும் சிவந்த நெருப்பு உண்ணுமாறு அம்புகளைத் தேர்ந்து எடுத்தவர். விரிந்து படர்ந்த சடையின்மேல் நீர்மிக்க கங்கையை விரும்பி ஏற்றவர்.

---

**164.** ஈண்டா ரழலி னிருவருங் கைதொழ
நீண்டார் நெடுந்தடு மாற்ற நிலையஞ்ச
மாண்டார்த மென்பு மலர்க்கொன்றை மாலையும்
பூண்டார் புகலூர் புரிசடை யாரே. **9**

புகலூர்ப் புரிசடையார் செறிந்த தீப்பிழம்பாய்ப் பிரமனும் திருமாலும் கைகளால் தொழுமாறு நீண்டவர். தம்முடைய நீண்டகாலத் தடுமாற்ற வாழ்வை நினைந்து அஞ்சுமாறு வாழ்ந்து இறந்தவர்களின் எலும்பையும் கொன்றைமலர் மாலையையும் அணிந்தவர்.

---

**165.** கறுத்தார் மணிகண்டங் கால்விர லூன்றி
இறுத்தா ரிலங்கையர் கோன்முடி பத்தும்
**அறுத்தார் புலனைந்து மாயிழை பாகம்**
**பொறுத்தார்** புகலூர்ப் புரிசடை யாரே. **10**

புலனைந்தும் அறுத்தாராயிருந்தே ஆயிழை பாகம் பொறுத்தார். போக வடிவங் கொள்வது உயிர்களுக்குப் போகம் புரிதற் பொருட்டேயன்றிப் பிறர் போலத்தாம் அனுபவித்தற்கு அன்று.

புகலூர்ப் புரிசடையார் இரத்தினம் போன்ற செந்நிறமான கழுத்துக் கறுத்து நீலகண்டராயினார். கால் விரலை ஊன்றி இராவணனுடைய பத்துத் தலைகளையும் செயலற்றவை ஆக்கினார். ஐம்புல நுகர்ச்சியையும் துறந்தவர். பார்வதியைப் பாகமாகக் கொண்டவர்.

## 17. திருவாரூர் அரநெறி

பண் : இந்தளம் | பதிக எண் : 17

166. எத்தீ புகினு மெமக்கொரு தீதிலை
தெத்தே எனமுரன் றெம்மு ளுழிதர்வர்
முத்தீ யனையதொர் மூவிலை வேல்பிடித்
தத்தீ நிறத்தா ரரநெறி யாரே. 1

திருவாரூரில் பூங்கோயில் (கமலாலயம்), அரநெறி, பரவையுண்மண்டலி என்னும் மூன்று பாடல் பெற்ற கோயில்கள் அமைந்துள்ளன. பூங்கோயில் எனப்படும் பெரிய கோயிலின் தென்கிழக்குத் திசையில் மேற்குமுகமாய் அமைந்துள்ளது ஆரூர் அரநெறிக்கோயிலாகும்.

உலகம் அறிந்த தீயின் நிறத்தவராகிய அரநெறிப் பெருமானார் முத்தீக்களைப் போன்று, மூன்று இலைவடிவாக அமைந்த வேலினை ஏந்தித் தெத்தே என்ற பண் ஒன்றினை நுணுகிப் பாடிக் கொண்டு எம் உள்ளத்தில் கூத்து நிகழ்த்துகின்றார். ஆதலின் எமக்கு எந்தத் தீயினிடைப் புக நேரினும், அத்தீயினால் தீங்கு யாதும் நிகழாது.

167. வீரமும் பூண்பர் விசயனொ டாயதொர்
தாரமும் பூண்பர் தமக்கன்பு பட்டவர்
பாரமும் பூண்பர்நற் பைங்கண் மிளிரர
வாரமும் பூண்ப ரரநெறி யாரே. 2

நமிநந்தியடிகள் நாள்தோறும் திருவிளக்குத் தொண்டு செய்து வந்தார். 4, 6 ஆம் திருமுறைகளில் அப்பர் பதிகங்கள் உள்ளன.

அரநெறிப் பெருமான் நல்ல பசிய கண்கள் ஒளிவீசும் பாம்பினை மாலையாக அணிபவர். தம்மிடம் அன்புடையவருடைய பொறுப்புகளைத் தாமே ஏற்று அருளுபவர். பார்வதியையும் உடன் அழைத்துச் சென்று அருச்சுனனோடு நிகழ்த்தப்பட்ட போரில் வீரச் செயல்களை நிகழ்த்தியவர்.

168. தஞ்ச வண்ணத்தர் சடையினர் தாமுமொர்
வஞ்ச வண்ணத்தர் வண்டார்குழ லாளொடும்
துஞ்ச வண்ணத்தர் துஞ்சாதகண் ணார்தொழும்
அஞ்ச வண்ணத்த ரரநெறி யாரே. 3

அரநெறிப் பெருமானார் தம்மைத் தஞ்சம் என்று அடைந்தவருக்குத் தாம் அடைக்கலம் நல்கும் இயல்பினர். சடைமுடியை உடையவர். அடியவர் அல்லாதாருக்கு வஞ்சனையான இயல்பினர். வண்டுகள் பொருந்திய கூந்தலை உடைய பார்வதியோடும் பொருந்தும் இயல்பினர். இமையாக் கண்களை உடைய மேலோர் தொழும் அம்சமந்திர ஜபயோகம் புரிபவர்.

169. விழித்தனர் காமனை வீழ்தர விண்ணின்
றிழித்தனர் கங்கையை யேத்தினர் பாவம்
கழித்தனர் கல்சூழ் கடியரண் மூன்றும்
அழித்தன ராரூ ரரநெறி யாரே. 4

ஆரூர் அரநெறிப் பெருமானார் காமன் பொடியாய் விழுமாறு அவனை நெற்றிக் கண்ணால் நோக்கியவர். வானத்திலிருந்து கங்கையைத் தம் சடையில் இறங்கச் செய்தவர். தம்மை வழிபடுபவருடைய தீவினைகளைப் போக்குபவர். கற்களால் சூழப்பட்ட காவல் பொருந்திய மும்மதில்களையும் அழித்தவர்.

| | |
|---|---|
| 170. துற்றவர் வெண்டலை யிற்சுருள் கோவணம்<br>தற்றவர் தம்வினை யானவெ லாமற<br>அற்றவ ராரூ ரரநெறி கைதொழ<br>உற்றவர் தாமொளி பெற்றனர் தாமே. 5 | மண்டையோட்டில் பிச்சைவாங்கி உண்பவரும், சுருண்ட கோவணத்தை இறுக்கிக் கட்டியவரும், இயல்பாகவே வினையின் நீங்கியவருமாய் உள்ள எம்பெருமானாருடைய ஆரூர் அரநெறிக் கோயிலைத் தம் வினைகளாயின எல்லாம் நீங்குமாறு கையால் தொழும் வாய்ப்புப் பெற்றவர். ஞான ஒளி பெற்றவராவர். |
| 171. கூடர வத்தர் குரற்கிண் கிணியடி<br>நீடர வத்தர்முன் மாலை யிடை யிருள்<br>பாடர வத்தர் பணமஞ்சு பைவிரித்<br>தாடர வத்த ரரநெறி யாரே. 6 | ஆரூர் அரநெறிப் பெருமானார் திருவடிகளிலே அரிபெய்சிலம்பினராய் ஒலிக்கும், கிண்கிணியால் ஏற்படும் நீண்ட ஒலியினை உடையவராய், மாலையின் முற்பட்ட பகுதியில் இருளிலே பாடும் ஒலியினராய், படம் விரித்து ஆடும் பாம்பை அணிந்தவராய் உள்ளார். |
| 172. கூடவல் லார்குறிப் பில்லுமை யாளொடும்<br>பாடவல் லார்பயின் றந்தியுஞ் சந்தியும்<br>ஆடவல் லார்திரு வாரூ ரரநெறி<br>நாடவல் லார்வினை வீட வல்லாரே. 7 | உமாதேவியின் குறிப்பறிந்து அவளோடு இணைந்திருத்தலில் வல்லவராய், நண்பகல் அந்தியிலும் காலை மாலைச் சந்திகளிலும் பலகாலும் பாடவல்லவராய், கூத்து நிகழ்த்துதலில் வல்லவராய் உள்ள பெருமானார் உறையும் திருவாரூர் அரநெறியை விரும்பித் தொழவல்லவர்கள் வினைகளைப் போக்கிக் கொள்ளும் ஆற்றலுடையவராவர். |
| 173. பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை<br>மாலையுங் கண்ணியு மாவன சேவடி<br>**காலையு மாலையுங் கைதொழு வார்மனம்**<br>**ஆலைய மாரூ ரரநெறி யார்க்கே. 8** | ஆரூர் அரநெறிப் பெருமானாருக்குப் பாலை ஒத்த வெண்ணிறமுடைய குளிர்ந்த பிறையும் பசிய கொன்றை மாலையும் முடிமாலைகள் ஆகும். அவர் திருவடிகளைக் காலையும் மாலையும் கைதொழவல்ல அடியவர் உள்ளங்களே அவருக்கு உறைவிடமாகும். |
| 174. முடிவண்ணம் வானமின் வண்ணந்தம் மார்பின்<br>பொடிவண்ணந் தம்புக ழூர்தியின் வண்ணம்<br>படிவண்ணம் பாற்கடல் வண்ணஞ்செஞ் ஞாயி<br>றடிவண்ண மாரூ ரரநெறி யார்க்கே. 9 | திருவாரூர் அரநெறியார்க்கு முடியின் நிறம் மேகத்தின் மின்னலின் நிறமாகும். அவர் மார்பில் அணிந்த திருநீற்றின் நிறம் அவர் வாகனமான காளையின் நிறமாகும். அவருடைய திருமேனியின் நிறம் பாற்கடல் நிறமாகும். அவர் திருவடியின் நிறம் சிவந்த காலை ஞாயிற்றின் நிறமாகும். |

| | |
|---|---|
| 175. பொன்னவில் புன்சடை யானடி யின்னிழல்<br>இன்னருள் சூடியெள் காதுமி ராப்பகல்<br>மன்னவர் கின்னரர் வானவர் தாந்தொழும்<br>அன்னவ ராரூ ரரநெறி யாரே. 10 | ஆரூர் அரநெறியார் பொன்போன்ற சிவந்த முறுக்கேறிய சடையை உடையவர். அவர் அவருடைய திருவடி நிழலிலே இனிய அருளைச் சூடி வழிபடுதலை வெறுக்காது இரவும் பகலும் அரசர்களும் கின்னரர் என்ற தேவகணத்தாரும் வானவர்களும் தொழும் அத்தன்மையை உடையவர். |
| 176. பொருண்மன் னனைப்பற்றிப் புட்பகங்கொண்ட<br>மருண்மன் னனையெற்றி வாளுட னீந்து<br>கருண்மன்னு கண்டங் கறுக்கநஞ் சுண்ட<br>அருண்மன்ன ராரூ ரரநெறி யாரே. 11 | ஆரூர் அரநெறியார், குபேரனைப் பிடித்து அவனிடமிருந்து புட்பக விமானத்தைக் கைப்பற்றிக் கொண்ட, உள்ள மயக்கம் கொண்ட அரசனாகிய இராவணனை முதலில் வருத்திப் பின் அவனுக்கு வாளும் உடனே அளித்து, கழுத்துக் கறுக்குமாறு கருமை பொருந்திய விடத்தை உண்ட அருள் வடிவான தலைவராவார். |

## 18. பொது

(விடந்தீர்த்த பதிகம்)

"ஒன்றுகொலா மெனப்பதிக மெடுத்துடையான் சீர்பாடப் பின்றைவிடம் நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான்" என்பது சேக்கிழார் வாக்கு.

அப்பூதியடிகளின் மகனைத் தீண்டிய அரவின் விடத்தைத் தீர்த்து அவனை எழச்செய்தல் சிவபெருமானது திருவருள் சிறப்பு என்பது "உடையான் சீர்பாட" என்றதனால் தெரிந்து கொண்டோம்.

எந்தவொரு வேண்டுதலுடன் சிவபெருமானை அணுகினாலும் அவரையே பொருளாக நினைந்து, உணர்ந்து, உணர்ந்து பாடினால்தான் அது நிகழும். இதைத் தெய்வச் சேக்கிழார் பெருமான்;

இட்ட ஏட்டினில் எழுதிய செந்தமிழ்ப் பதிகம்
மட்டுலாம் குழல் வனமுலை மலைமகள் பாகத்து
**அட்டமூர்த்தியைப் பொருளென உடைமையால்** அமர்ந்து
பட்டதீயிடைப் பசுமையாய் விளங்கியதன்றே – 2689

என்ற பாடல் மூலம் பதிவு செய்கிறார்.

ஏடு நெருப்பில் வேகாதிருக்கக் காரணம் அந்தப் பாடல் சிவபெருமானைப் பொருளாகக் கொண்ட பாடலைப் பெற்றிருந்ததால்தான். அந்த மூர்த்தியை தியான சுலோகமாக மனத்தில் கொண்டு நமது வேண்டுதல் தொடர்பான திருவுருவுகளை வர்ணித்து அவற்றை வேண்டுதலோடு இணைத்துப் பண்ணாகப் பாடினால் வெற்றி நிச்சயம்.

இக்குறிப்புடன் இப்பதிகம் அருளிச் செய்யப்பட்டதென்பது;

அ. "ஒன்றுகொலாம்" அவர் சிந்தை யுயர் வரை" என்று தொடங்கி பத்துக்கொலாம் அடியார் செய்கை தானே'' என்று முடிக்கும் வகையால் அடியார்களது அன்பின் உறைப்பும் தன்மையும் குறிக்கப்படுதலானும்

ஆ) அஞ்சுகொலாம் அவர் ஆடரவின் படம் (5ஆம் பாட்) பத்துகொலாம் அவர் பாம்பின் கண் பாம்பின் பல் (10ஆம் பாட்டு) என்று அரவன்விடம் போக்க அரவங்களுக்கு மூலமாய்ச் சிவபெருமான் அணியும் ஐந்தலை அரவினைக் குறித்தலானும்

இ) உயருமதிசூடுவார், உயர்வரை என்று உயர/வளர வைக்கின்ற சிருட்டியைக் குறித்தலானும்

ஈ) வெண்டலை கையது என்பது ஒடுக்கத்தையும்

உ) ஊர்தியின் பாதங்கள் – தோற்ற ஒடுக்கத்துக்குக் காரணமான அருளினைக் குறித்தலானும்

ஊ) சனனம் முதல் தோற்றமும் (4)

எ) ஊழி படைத்தன (7)

ஏ) வாசல் வகுத்தன (9) முதலியவை மரணத்துக்குப்பின் புனருற்பவத் தொழில் உணர்த்துதலானும்

ஐ) பத்தாவது பாடலில் விடம் வந்த வழியே செல்ல வேண்டுமென்ற குறிப்பில் பாம்பு – பல் – எயிறு என்று குறிப்பிட்டு, அடியார் செய்கையை இயம்புதலானும், இது விடந்தீர்க்க ஏதுவான பதிகமாகிறது.

பாம்பிற்குரிய நால்வேறு பற்களின் பெயர் காளி, காளத்திரி, யமன், யமதூதி எனப்படும். கடுவமரும் நால் எயிற்றுக்கும் பெயர் சொல்வேன். காளி காளாத்திரி யமன். யமதூதனாம் (சித்தராரூடச்சிந்து). உ.வே.சா. ஐந்தலை – பத்து – எயிறு – பல். அடியாரைப் பேணுதலும், ஆண்டவரைப் பரவுதலுமே நமக்கு உறுதிப் பொருளாவன.

**பண் : இந்தளம்** **பதிக எண் : 18**

177. ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவ ரூர்வது தானே. 1

பாடல்தொறும் ஒன்று, இரண்டு, மூன்று என்று 10 பாடல்கள் வரை, எண்ணலங்காரமாகப் பாடுகிறார்.

எம்பெருமானுடைய உள்ளத்தைப்போல உயர்ந்த கயிலை மலையும், அவர் சூடும் உயர்ந்த பிறையும் அவர் பிச்சை எடுக்குமாறு கையில் ஏந்திய மண்டையோடும், அவர் இவரும் காளையும் எண்ணிக்கையில் ஒன்று ஒன்றே போலும்.

178. இரண்டுகொ லாமிமை யோர்தொழு பாதம்
இரண்டுகொ லாமிலங் குங்குழை பெண்ணான்
இரண்டுகொ லாமுரு வஞ்சிறு மான்மழு
இரண்டுகொ லாமவ ரெய்தின தாமே. 2

தேவர்களும் தொழும் எம்பெருமானுடைய பாதங்களும், விளங்கும் அவருடைய காதணிகளும் பெண்ணும் ஆணுமாகிய அவர் உருவமும், அவர் ஏந்திய மான்குட்டியும் மழுவாயுதமும் இரண்டு என்ற எண்ணிக்கை யுடையனபோலும். ஏந்தின தாமே – பாடம்.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| 179. மூன்றுகொ லாமவர் கண்ணுத லாவன<br>மூன்றுகொ லாமவர் சூலத்தின் மொய்யிலை<br>மூன்றுகொ லாங்கணை கையது வின்னாண்<br>மூன்றுகொ லாம்புர மெய்தன தாமே. 3 | எம்பெருமானுடைய நெற்றிக்கண்ணோடு சேர்த்துக் கண்கள் மூன்று. அவர் ஏந்திய சூலத்தில் இலை வடிவான பகுதி மூன்று. அவர் கையிலுள்ள வில், நாண், கணை என்பன மூன்று. அவர் அம்பு எய்து அழித்த பகைவர்களின் மதில் மூன்று போலும். |
| 180. நாலுகொ லாமவர் தம்முக மாவன<br>நாலுகொ லாஞ்சன னம்முதற் றோற்றமும்<br>நாலுகொ லாமவ ரூர்தியின் பாதங்கள்<br>நாலுகொ லாமறை பாடினதாமே. 4 | எம்பெருமானுடைய திருமுகங்கள் நான்கு. அவரால் படைக்கப்பட்ட படைப்பு – நிலம், கருப்பை, முட்டை, வியர்வை, இவற்றிலிருந்து தோன்றும் நால்வகையது. அவர் வாகனமாகிய காளையின் பாதங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. அவர் பாடிய வேதங்கள் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு போலும். |
| 181. அஞ்சுகொ லாமவ ராடர வின்படம்<br>அஞ்சுகொ லாமவர் வெல்புல னாவன<br>அஞ்சுகொ லாமவர் காயப்பட் டான்கணை<br>அஞ்சுகொ லாமவ ராடின தாமே. 5 | எம்பெருமான் ஆட்டுகின்ற பாம்பின் படங்கள் ஐந்து. அவர் வென்ற புலன்களும் ஐந்து. அவரால் வெகுளப்பட்ட மன்மதனுடைய பூ அம்புகள் ஐந்து. அவர் அபிடேகம் செய்வன பசுவினிடத்திலிருந்து தோன்றும் பஞ்ச கவ்வியம் என்ற ஐந்து போலும். |
| 182. ஆறுகொ லாமவ ரங்கம் படைத்தன<br>ஆறுகொ லாமவர் தம்மக னார்முகம்<br>ஆறுகொ லாமவர் தார்மிசை வண்டின்கால்<br>ஆறுகொ லாஞ்சுவை யாக்கின தாமே. 6 | அவர் வேதத்துக்கு அங்கங்களாகப் படைத்தன ஆறு. அவருடைய மகனாகிய முருகனுடைய முகங்கள் ஆறு. அவர் மாலைமிசை அமர்ந்துள்ள வண்டின் கால்களும் ஆறு. அவர் உணவுச் சுவையாக அமைத்தனவும் ஆறுபோலும். |
| 183. ஏழுகொ லாமவ ரூழி படைத்தன<br>ஏழுகொ லாமவர் கண்ட விருங்கடல்<br>ஏழுகொ லாமவ ராளு முலகங்கள்<br>ஏழுகொ லாமிசை யாக்கின தாமே. 7 | அவர் படைத்த படைப்புக்கள் எழுவகையன. அவர் படைத்த கடல்கள் ஏழாகும். அவர் ஆளும் உலகங்களும் மேல் உலகம் ஏழும் கீழ் உலகம் ஏழும். அவர் படைத்த இசைகளும் ஏழு போலும். |
| 184. எட்டுக்கொ லாமவ ரீறில் பெருங்குணம்<br>எட்டுக்கொ லாமவர் சூடு மினமலர்<br>எட்டுக்கொ லாமவர் தோளிணை யாவன<br>எட்டுக்கொ லாந்திசை யாக்கின தாமே. 8 | அவருடைய அழிவில்லாத பெருங்குணங்களும் எட்டு. அவர் சூடும் மலர்களில் இனங்களும் எட்டு. அவருடைய ஒன்றற்கொன்று இணையான தோள்களும் எட்டு. அவர் படைத்த திசைகளும் எட்டுப் போலும். |

| | |
|---|---|
| 185. ஒன்பது போலவர் வாசல் வகுத்தன<br>ஒன்பது போலவர் மார்பினி னூலிழை<br>ஒன்பது போலவர் கோலக் குழற்சடை<br>ஒன்பது போலவர் பாரிடந் தானே. 9 | இவ்வுடம்பில் அவர் வகுத்த துவாரங்கள் ஒன்பது. அவர் மார்பில் அணிந்த பூணூலின் இழைகள் ஒன்பது. அவருடைய அழகிய சுருண்ட சடை ஒன்பதாக வகுக்கப்பட்டது. அவர் படைத்த நிலவுலகம் ஒன்பது கண்டங்களை உடையது போலும். |
| 186. பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்<br>பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன<br>பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்றலை<br>பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே. 10 | அவர் அணிந்த ஐந்தலைப் பாம்பின் கண்களும் உயிரைப் போக்கும் பற்களும் பத்து. அவரால் கோபிக்கப்பட்ட இராவணனுடைய தலைகளும் பத்து. அவர் அழுத்தியதால் நொறுங்கிய அவன் பற்களும் பத்து. அப்பெருமானுடைய அடியார்களுடைய தசகாரியம் என்னும் செயல்களும் பத்துப் போலும். |

## ஏழாம் வேகம்

(தோல் கருத்தால் பிழைப்பதற்கு வழியில்லை)

ஆளுடை அரசு அமுது உண்ண அப்பூதியடிகளின் மனைவியார் ஏற்பாடு செய்தார். நா அரசு உண்ண வாழைக் குருத்தின் இலை பறிக்க மூத்த திருநாவுக்கரசை (மூத்த மகன்) ஏவினார்.

இலை பறிக்கச் சென்ற மைந்தனைப் பையரவு (பாம்பு) தீண்டியது. திருநாவுக்கரசர் உணவுண்ணக் காலம் தாழ்க்குமே எனத் தன் கையில் சுற்றிய பாம்பை உதறி, மகன் ஒடினான். இங்கேதான், சேக்கிழார் “ஏழாம் வேகம்” என்ற தொடரைப் பயன்படுத்தியுள்ளார்.

அதாவது, விஷக்கடி ஏற்பட்டால், அசைவின்றி இருத்தல் வேண்டும். கடிவாயில் கீறி விஷத்தை வெளியேற்றி, அசைவின்றி வைத்தல் முதல் உதவி. பிறகு மருத்துவ உதவி வேண்டும் என்பர். அசைவு ஏற்படுமானால், விஷம் பரவும் என்பது மருத்துவ உண்மை. இந்த விஷம் (நஞ்சு) உடலில் எவ்வாறு பரவும் என்பதும் அது சார்ந்த மருத்துவ முறைகளும் இன்று தனித்துறையாக வளர்ந்து வருகின்றன.

இதனையே, சேக்கிழார் “ஏழாம் வேகம்” என்கிறார். அதாவது, பாம்பின் நஞ்சானது, கடிபட்ட இடத்திலிருந்து இரத்த ஓட்டத்துடன் கலந்து, உடல் முழுவதும் ஒரு சுற்று வருவது ஒரு ஓட்டம் அல்லது ஒரு வேகம் எனப்படும்.

| | |
|---|---|
| முதல் ஓட்டத்தால் / வேகத்தால் பாதிக்கப்படுவது | ஜீரண மண்டலம் (Digestion System) |
| இரண்டாம் ஓட்டத்தால் பாதிக்கப்படுவது | இரத்த மண்டலம் (Blood System) |
| மூன்றாவது ஓட்டத்தால் பாதிக்கப்படுவது | சுக்கிலம் எனப்படும் நாளமில்லாச் சுரப்பி மண்டலம் (Harmone System) |
| நான்காம் ஓட்டத்தால் பாதிக்கப்படுவது | நரம்பு மண்டலம் (Nerve System) |
| ஐந்தாம் ஓட்டத்தால் பாதிக்கப்படுவது | தசை மண்டலம் (Muscular System) |
| ஆறாம் ஓட்டத்தால் பாதிக்கப்படுவது | எலும்பு மண்டலம் (Bone System) |
| ஏழாம் ஓட்டத்தால் பாதிக்கப்படுவது | தோல் மண்டலம் (Epidermal System) பாதிக்கப்படும் |

ஆகவேதான், தோல் கருத்தால் பிழைப்பதற்கு வழியில்லை என்பார்கள் மருத்துவர்கள். "ஏழாம் வேகம்" ஏறிய மூத்த திருநாவுக்கரசு வாழையின் குருத்தை, தாயாரிடம் கொடுத்துவிட்டு விழ, பின்னர் நாவரசர் பதிகம் பாடி (ஒன்றுகொலாம் 4 : 18) பிழைப்பித்தமை அற்புதம், சேக்கிழாரின் அப்பாடல் வருமாறு :

எரிவிடம் முறையே ஏறித் தலைக்கொண்ட **'ஏழாம் வேகம்'**
தெரிவுற எயிறும் கண்ணும் மேனியும் கருகித் தீந்து
விரியுரை குழறி ஆவி விடக்கொண்டு மயங்கி வீழ்வான
பரிகலக் குருத்தைத் தாயார் பால் வைத்துப் படிமேல் வீழ்ந்தான்

(5. திருநின்ற சருக்கம் 1809–27)

தினமணி நாளிதழில் முனைவர் யாழ் சந்திரா அவர்கள் பெயரில் இக்கட்டுரை 26.4.2015 அன்று பிரசுரிக்கப்பட்டிருந்தது.

## 19. திருவாரூர்

**பண் : சீகாமரம்** **பதிக எண் : 18**

187. சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழானை **நான்கண்ட தாரூரே.** 1

சூலப்படை உடையவனாய், குங்குமம் ஒழுகும் அழகிய மலைகளாகிய, அருவிகள் விழும் எட்டு தோள்களை உடையவனாய், பால்போன்ற இனிய சொற்களை உடைய பார்வதி பாகனாய், ஆலமரத்தின் கீழ் இருந்து அறம் உரைத்த பெருமானை நான் ஆரூரில் கண்டேன்.

பதிக மகுடம் – நான் கண்ட தாரூரே.

188. பக்கமே பாரிடங்கள் சூழப் படுதலையில்
புக்கவூர்ப் பிச்சையேற் றுண்டு பொலிவுடைத்தாய்க்
கொக்கிறகின் றூவல் கொடியெடுத்த கோவணத்தோ
டக்கணிந்த வம்மானை நான்கண்ட தாரூரே. 2

இருபுறமும் பூதங்கள் சூழத்தாம் சென்ற ஊர்களில் மண்டையோட்டில் பிச்சை ஏற்று உண்டு, நல்ல விளக்கம் பொருந்துவனவாகக் கொக்கிறகின் தொகுதி, ஒழுங்காக அமைக்கப்பட்ட கோவணம், சங்குமணி இவற்றை அணிந்த தலைவனை அடியேன் கண்டவிடம் ஆரூராகும்.

189. சேய வுலகமுஞ் செல்சார்வு மானானை
மாயப்போர் வல்லானை மாலைதாழ் மார்பானை
வேயொத்த தோளியர்த மென்முலைமேற் றண்சாந்தின்
ஆயத் திடையானை நான்கண்ட தாரூரே. 3

சேய்மையதாகிய வீட்டுலகமாகிய பேறும் அதனை அடைவதற்குரிய வழியாகிய ஆறும் ஆகின்றவனாய், அழிக்கின்ற போரில் வல்லவனாய், மாலை தொங்கும் மார்பினனாய், தம் மென்முலைமேல் குளிர்ந்த சந்தனம் பூசிய, மூங்கிலை ஒத்த தோள்களை உடைய, தன்னை வழிபடும் மகளிர் கூட்டத்திடையே இருக்கும் பெருமானை நான் கண்ட இடம் ஆரூர் ஆகும்.

| | |
|---|---|
| **190.** ஏறேற்ற மாவேறி யெண்கணமும் பின்படர<br>மாறேற்றார் வல்லரணஞ் சீறி மயானத்தில்<br>நீறேற்ற மேனியனாய் நீள்சடைமே னீர்ததும்ப<br>ஆறேற்ற வந்தணனை நான்கண்டதாரூரே. 4 | வாகனமாக ஏறுதற்குரியவற்றில் மேம்பட்டதான காளையை இவர்ந்து எண்வகை அடியவர் கூட்டங்களும் தன்னைப் பின் தொடர வருவானாய், பகைவராய் எதிர்த்தாருடைய வலிய மதில்களைக் கோபித்தவனாய், சுடுகாட்டுச் சாம்பல் பூசிய மேனியனாய், நீண்ட சடைமுடியின் மீது நீர் நிறைந்து அலை எறியுமாறு கங்கையை ஏற்ற சடையனாய் உள்ள பெருமானை நான் தரிசித்த இடம் ஆரூராகும். |
| **191.** தாங்கோல வெள்ளெலும்பு பூண்டுதம் மேறேறிப்<br>பாங்கான வூர்க்கெல்லாஞ் செல்லும் பரமனார்<br>தேங்காவி நாறுந் திருவாரூர்த் தொன்னகரில்<br>பூங்கோயி லுண்மகிழ்ந்து போகா திருந்தாரே. 5 | அழகாக வெண்ணிற எலும்புகளைச் சூடித் தம் காளை மீது இவர்ந்து, பக்கலிலுள்ள ஊர்களுக்கெல்லாம் செல்லும் மேம்பட்டவராய் இனிய குவளைமலர்கள் மணம் வீசும் திருவாரூர் ஆகிய பழைய ஊரில் உள்ள பூங்கோயில் என்ற பெயரை உடைய கோயிலை உகந்து கொண்டு அதனை ஒரு பொழுதும் நீங்காமல் எம்பெருமான் இருந்துள்ளார் |
| **192.** எம்பட்டம் பட்ட முடையானை யேர்மதியின்<br>நும்பட்டஞ் சேர்ந்த நுதலானை யந்திவாய்ச்<br>செம்பட் டுடுத்துச் சிறுமா னுரியாடை<br>அம்பட் டசைத்தானை நான்கண்ட தாரூரே. 6 | எமது பட்டத்தைத் தனது பட்டமாகக் கொண்டு இருப்பவனாய், அழகான பிறையாகிய குறுகலான பட்டம் சேர்ந்த நெற்றியனாய், மாலை நேர வானம் போன்ற சிவந்த பட்டினை உடுத்து, சிறிய மான் தோல் ஆடையாகிய அழகிய பட்டினையும் கட்டிய பெருமானை அடியேன் தரிசித்த இடம் ஆரூராகும். |
| **193.** போழொத்த வெண்மதியஞ் சூடிப் பொலிந்திலங்கு<br>வேழத் துரிபோர்த்தான் வெள்வளையா டான்வெருவ<br>ஊழித்தீ யன்னானை யோங்கொலிமாப் பூண்டதோர்<br>**ஆழித்தேர் வித்தகனை** நான்கண்ட தாரூரே. 7 | மதியத்தின் பிளவாக இரு முனைகளும் ஒத்த வெண்பிறையைச் சூடி, வெள்ளிய வளையல்களை அணிந்த பார்வதி அஞ்சுமாறு யானைத் தோலைப் போர்த்தவனாய், அடியவர்களின் பகைவருக்கு ஊழித்தீ போன்ற கொடியவனாய், கடலாற் சூழப்பட்ட உலகையே ஒலிமிக்க வேதங்களாகிய குதிரைகள் பூண்ட தோராகக் கொண்ட சாதுரியனான பெருமானை அடியேன் தரிசித்த தலம் ஆரூராகும். ஆழித்தேர் – திருவாரூர்த் தேரின் பெயர். |

| | |
|---|---|
| 194. வஞ்சனையா ரார்பாடுஞ் சாராத மைந்தனைத்<br>துஞ்சிருளி லாட லுகந்தானைத் தன்றொண்டர்<br>நெஞ்சிருள் கூரும் பொழுது நிலாப்பாரித்<br>தஞ்சுடராய் நின்றானை நான்கண்ட தாரூரே. 8 | வஞ்சனையுடையவர் யார் மாட்டும் அணுகாத திறமையுடையவனாய், எல்லோரும் உறங்கும் இருள் நேரத்தில் கூத்தாடுதலை விரும்பியவனாய், தன் அடியவர்களுடைய உள்ளத்தில் துயரமாகிய இருள் மிகும்போது ஞானமாகிய ஒளியைப் பரப்பி அழகிய ஞானப் பிரகாசனாய் நின்ற பெருமானை அடியேன் தரிசித்த இடம் ஆரூராகும். |
| 195. காரமுது கொன்றை கடிநாறு தண்ணென்ன<br>நீரமுது கோதையோ டாடிய நீண்மார்பன்<br>பேரமுத முண்டார்க ளுய்யப் பெருங்கடனஞ்<br>சாரமுதா வுண்டானை நான்கண்ட தாரூரே. 9 | நன்கு முதிர்ந்த கொன்றை மரத்தில் பூக்கும் பூவின் நறுமணம் கமழும் குளிர்ந்த நீர் மயமான கங்கையைப் பார்வதியோடு மகிழ்ந்த, நீண்ட மார்பினனாய், பெரிய அமுதத்தை உண்டார் களாய்த் தேவர்கள் உயிர்பிழைப்பதற்காகப் பெரிய கடலின் விடத்தை அமுதமாக உண்ட பெருமானை அடியேன் தரிசித்த இடம் ஆரூராகும். |
| 196. தாடழுவு கையன் றாமரைப்பூஞ் சேவடியன்<br>கோடலா வேடத்தன் கொண்டதோர் வீணையினான்<br>ஆடரவக் கிண்கிணிக்கா லன்னானோர் சேடனை<br>ஆடுந்தீக் கூத்தனை நான்கண்ட தாரூரே. 10<br><br>முழந்தாள் அளவு நீண்ட கைகளை உடையவர்கள் தன்னிகரற்றவர்களாகவும், தன்னலமில்லாதவர்களாகவும் அவரவர் காலங்களுக்கேற்ப மற்றவர்களுக்கு இல்லாத சிறப்பம்சங்கள் உள்ளவர்களாகவும் வாழ்வார்கள் என்பதற்கு மகாத்மாகாந்தி அவர்களும், பெருந்தலைவர் காமராசரும் உதாரணம் ஆவார்கள். | **முழந்தாள் அளவும் நீண்ட கைகளை** உடையவனாய், தாமரைப் பூப்போன்ற சிவந்த திருவடிகளை உடையவனாய், பிறரால் கொள்ள முடியாத வேடத்தினனாய், வீணையைக் கையில் கொண்டவனாய், அசைகின்றவாய் ஒலிக்கின்ற கிண்கிணிகளை அணிந்த திருவடிகளை உடைய அத்தகைய மேம்பட்டவனாய்த் தீயில் கூத்தாடும் பெருமானை அடியேன் தரிசித்த தலம் ஆரூராகும். |
| 197. மஞ்சாடு குன்றடர வூன்றி மணிவிரலால்<br>துஞ்சாப்போர் வாளரக்கன் றோணெரியக் கண் **குருதிச்**<br>**செஞ்சாந் தணிவித்துத் தன்மார்பிற் பால்வெண்ணீற்**<br>**றஞ்சாந் தணிந்தானை நான்கண்ட தாரூரே. 11**<br><br>இராவணனைச் செஞ்சாந்து அணிவித்துத் தான் வெண் சாந்தணிந்தான். | மேகங்கள் அசைந்து செல்லும் கயிலை மலையை இராவணன் பெயர்க்க முற்பட அழகிய கால் விரலால் அழுத்தி, உறங்காது, போர் செய்யும் திறமையை உடைய கொடிய அவ்வரக்கனுடைய தோள்கள் நெரிய அவன் கண்களிலிருந்து புறப்பட்ட இரத்தமாகிய சிவந்த கலவையை அவனை அணியுமாறு செய்து, தன் மார்பிலே பால்போன்ற வெண்ணீற்றுப் பூச்சினை அணிந்த பெருமானை அடியேன் தரிசித்த திருத்தலம் திருவாரூரேயாம். |

## 20. திருவாரூர் (கலைப்பதிகம்)

(கலைஞானங்கள் பலவும் விளங்குதற்கிடமாகிய பதிகம்)

பண் : சீகாமரம் — பதிக எண் : 20

198. காண்டலேகருத் தாய்நினைந்திருந் தேன்மனம்புகுந்
தாய்க ழலடி
பூண்டுகொண் டொழிந்தேன்
புறம்போயினா லறையோ
ஈண்டுமாடங்க ணீண்டமா ளிகை மேலெழுகொடி
வானி ளம்மதி
தீண்டிவந் துலவுந்
**திருவாரூ ரம்மானே.** 1

பதிக மகுடம் – திருவாரூரம்மானே

நெருங்கிய மாடங்கள் நீண்ட மாளிகைகள் இவற்றின் மேல் உயர்த்தப்பட்ட கொடிகள் வானத்திலுள்ள பிறையைத் தீண்டியவாறு வானத்தில் உலவும் திருவாரூரிருள்ள பெருமானே! உன்னைக் காண்பதனையே எண்ணமாகக் கொண்டு உன்னை விருப்புற்று நினைத்தவாறு இருந்த அடியேனுடைய உள்ளத்தில் தீ புகுந்தாயாக, உன் வீரக்கழல் அணிந்த திருவடிகளை என் மனத்திற்கு அணிகலனாக அணிந்து கொண்டிருக்கின்ற என்னை விடுத்துப் புறத்தே போக விடேன். உன்மேல் ஆணை.

199. கடம்படந்நட மாடினாய்களை கண்ணினக்கொரு
காதல் செய்தடி
ஒடுங்கி வந்தடைந்தே
னொழிப்பாய் பிழைப்பவெல்லாம்
முடங்**கிறான்முது நீர்மலங்கிள வாளைசெங்கயல்
சேல்வ ரால்களி**
றடைந்த தண்கழனி
யணியாரூ ரம்மானே. 2

இறால் – மலங்கு – வாளை – கயல் – சேல் – வரால் – களிறு ஆகியன மீன்களின் வகைகள்.

வளைந்த இறால் மீன், பழைய நீர்ப்பள்ளத்தில் உறையும் மலங்கு, இளைய வாளை மீன், சிவந்த கயல் மீன்கள், சேல்மீன்கள், வரால் மீன்கள், களிறு என்ற மீன்கள் வந்து சேரும் குளிர்ந்த வயல்களை உடைய அழகிய ஆரூர்த் தலைவனே! பஞ்சமுக வாத்தியம் ஒலிக்கக் கூத்தாடுபவனே! அடைக்கலம் நல்குபவனாயுள்ள நின்பால் தனியன்பு கொண்டு உன் திருவடிகளில் உலகப் பற்றுக்கள் ஒடுங்க, வந்து அடைந்தேன். அடியேன் செய்த பிழைகளை எல்லாம் போக்குவாயாக.

200. அருமணித்தடம் பூண்முலை யரம்பையரொ
டருளிப் பாடியர் 1
உரிமையிற் றொழுவார் 2
உருத்திர பல்கணத்தார் 3
விரிசடைவிர
திக4 ளந்தணர் 5 சைவர் 6 பாசு
பதர் 7 க பாலிகள் 8
தெருவினிற் பொலியுந்
திருவாரூ ரம்மானே. 3

அரம்பையர் – தேவருலகத்து நாடக மங்கையர். அருளிப்பாடியர் – இறைவனுடைய கட்டளைகளை நிறைவேற்றுவோர். உரிமை – வழிபட்ட உரிமையும், ஏவல் செய்யும் உரிமையும்.

விலை உயர்ந்த மணிகளாலாகிய பெரிய அணிகலன்களைப் பூண்ட மார்பினை உடைய **தேவருலகப் பெண்கள் போல்வாரோடு, கோயில் பணி செய்பவர்கள். ஆதி சைவர்கள், சிவகணத்தார், விரிந்த சடையை உடைய, விரத ஒழுக்கம் பூண்ட மாவிரதிகள், அந்தணர், சைவர், பாசுபதர், கபாலிகள் ஆகிய எண்திறத்தார்** தெருக்களில் பலராகக் காணப்படும் திருவாரூர்த் தலைவனே!

| | |
|---|---|
| 201. பூங்கழறொழு தும்பரவியும் புண்ணியாபுனி<br>தாவுன் பொற்கழல்<br>ஈங்கிருக் கப்பெற்றேன்<br>என்ன குறையுடையேன்<br>ஓங்கு**தெங்கிலை யார்கமுகிள வாழைமாவொடு<br>மாது ளம்பல**<br>தீங்கனி சிதறுந்<br>திருவாரூ ரம்மானே. 4<br><br>தெங்கு, கமுகு, வாழை, மா, மாதுளம் – மருதநிலக் கருப்பொருள்கள். | உயர்ந்த தென்னை மட்டைகளைத் தொடும் அளவு உயர்ந்த கமுகு மரம், இளவாழை, மா, மாதுளம், பலா என்பன இனிய பழங்களை உதிர்க்கும் திருவாரூர்த் தலைவனே! உன்னுடைய பொலிவை உடைய திருவடிகளைத் தொழுதும் முன் நின்று துதித்தும், புண்ணியனாய்ப் புனிதனாயுள்ள உன்னுடைய அழகிய திருவடிகள் என்னிடத்துத் தங்கப் பெற்றதனால் அடியேன் இனிவேறு யாது தேவையை உடையேன்? ஈங்கு – என்னிடம். |
| 202. நீறுசேர்செழு மார்பினாய்நிரம் பாமதியொடு<br>நீள்ச டையிடை<br>ஆறுபாய வைத்தாய்<br>அடியே யடைந்தொழிந்தேன்<br>ஏறிவண்டொடு தும்பியஞ்சிற கூன்றவிண்ட<br>மலரி தழ்வழி<br>தேறல்பாய்ந் தொழுகுந்<br>திருவாரூ ரம்மானே. 5 | வண்டுகள் தும்பிகளோடு ஏறி மலர்களில் அமர்ந்து, அழகிய சிறகுகளை அவற்றில் அழுத்தி வைப்பதனால், மலர்களின் இதழ்கள் வழியாகத் தேன் பாய்ந்து ஒழுகும் திருவாரூர்த் தலைவனே! நீ திருநீறணிந்த வளமான மார்பினை உடையாய், பிறை மதியோடு உன் நீண்ட சடையிலே கங்கை பரவுமாறு அவற்றைச் சடையில் வைத்துள்ளாய். அடியேன் உன்னை அடைந்து தீவினைகளிலிருந்து நீங்கினேன். |
| 203. அளித்துவந்தடி கைதொழுமவர் மேல்வினைகெடும்<br>என்றி வையகம்<br>களித்துவந் துடனே<br>கலந்தாடக் காதலராய்க்<br>குளித்துமூழ்கியுந் தூவியுங்குடைந் தாடுகோதையர்<br>குஞ்சி யுட்புகத்<br>தெளிக்குந் தீர்த்தமறாத்<br>திருவாரூ ரம்மானே. 6 | உலகிலுள்ள அடியார்கள் உன்னுடைய தியானத்திலே களிப்புக் கொண்டு வந்து ஒரு சேரக்கூடி ஆட, அதனைக் கண்டு தாமும் விருப்பமுற்றவராய்க் கழுத்துவரை குளித்தும் தலை நனைய மூழ்கியும் தீர்த்தத்தை ஒருவர்மேல் மற்றவர் வாரி இறைத்தும், நீரில் உட்புக்கு நீராடும் மகளிர் மயிர் முடிமீது அபிடேக நீர் தெளிக்கப்படும் திருவாரூர்த் தலைவனே! அன்பு முதிரப் பெற்றுத் திருக்கோயிலுக்கு வந்து உன் திருவடிகளைக் கைகளால் தொழுகின்ற அடியார்களுடைய வரக்கடவ வினைகளும் அழிந்து விடும் என்று நீ தெரிவிக்கின்றாய் ஆதலின் அடியவர் உன்னடிகளைத் தவறாது வணங்குகின்றனர். |

| | |
|---|---|
| **204.** திரியுமூவெயி றீயெழச்சிலை வாங்கிநின்றவ<br>னேயென் சிந்தையுள்<br>பிரியுமா றெங்ஙனே<br>பிழைத்தேயும் போகலொட்டேன்<br>பெரிய செந்நெற்பி ரம்புரிகெந்த சாலிதிப்பிய<br>மென்றி வையகத்<br>தரியுந் தண்கழனி<br>அணியாரூ ரம்மானே. 7 | உயர்வாகக் கூறப்படும் **செந்நெல், பிரம்புரி, கெந்தசாலி, திப்பியம் என்ற பெயருடைய நெல்வகைகள்** தம்மகத்து அறுவடை செய்யப்படும் குளிர்ந்த வயல்வளமுடைய அழகிய ஆரூர்த் தலைவனே! வானத்தில் உலவும் மும்மதில்களும் தீப்பற்றி எரியுமாறு வில்லை வளைத்து நின்றவனே! என் உள்ளத்திலிருந்து நீ யாங்ஙனம் பிரிவாய்? மறந்தும் கூட நீ என்னை விடுத்து நீங்க உன்னை விடமாட்டேன். |
| **205.** பிறத்தலும்பிறந் தாற்பிணிப்பட வாய்ந்தசைந் துட<br>லம்பு குந்துநின்<br>றிறக்குமா றுளதே<br>யிழித்தேன் பிறப்பினைநான்<br>அறத்தையேபுரிந் தமனத்தனா யார்வச்செற்றக்<br>குரோத நீக்கியுன்<br>திறத்தனா யொழிந்தேன்<br>றிருவாரூ ரம்மானே. 8 | திருவாரூர் அம்மானே! இறந்தால் பிறத்தலும் பிறந்தால் உடலில் புகுந்து நின்று பிணிகள் தோன்ற நுணுகி வருந்தி இறக்குமாறும் உள்ளவே. அதனால் பிறப்பை இழிவாகக் கருதி வெறுத்தேனாய், அறத்தையே விரும்பிய மனத்தினேனாய், ஆசை, பகை, வெகுளி இவற்றை நீக்கி உன் அடிமைத் திறத்தில் ஈடுபட்டேனாய் உலகியற் செயல்களிலிருந்து நீங்கினேன். |
| **206.** முளைத்தவெண்பிறை மொய்சடையுடை<br>யாயெப்போதுமென்<br>னெஞ்சிடங் கொள்ள<br>வளைத்துக் கொண்டிருந்தேன்<br>வலிசெய்து போகலொட்டேன்<br>அளைப்பிரிந்தவ லவன்போய்ப்புகு தந்தகாலமுங்<br>கண்டு தன்பெடை<br>திளைக்குந் தண்கழனித்<br>திருவாரூ ரம்மானே. 9 | வளையிலிருந்து பிரிந்து சென்ற நண்டு மீண்டும் போய் வளையில் புகுந்த காலத்தை நோக்கிப் பெடை நண்டு அதனைக் கண்டு இன்பத்தில் திளைக்கும் குளிர்ந்த வயல்களை உடைய திருவாரூர் அம்மானே! பிறையை அணிந்த செறிந்த சடையனே! எப்பொழுதும் என் நெஞ்சினையே நீ இடமாகக் கொள்ளுமாறு உன்னைப் பலகாலும் சுற்றிக்கொண்டிருந்த அடியேன் இனிப் பிடிவாதம் செய்து அதனை விடுத்துப்போக ஒருப்படேன். |
| **207.** நாடினார்கம லம்மலரய னோடிரணிய<br>னாகங் கீண்டவன்<br>நாடிக் காணமாட்டாத்<br>தழலாய நம்பானைப்<br>பாடுவார்பணி வார்பல்லாண்டிசை கூறுபத்தர்கள்<br>சித்தத் துள்புக்குத்<br>தேடிக் கண்டுகொண்டேன்<br>திருவாரூ ரம்மானே. 10 | திருவாரூர் அம்மானே! தாமரை மலரில் உள்ள பிரமனோடு, இரணியன் மார்பினைப் பிளந்த திருமாலும் தேடினராயும் காண மாட்டாத தீப்பிழம்பு வடிவினனாய், நம்மால் விரும்பப்படும் உன்னைப் பாடுபவராய்ப் பணிபவராய் வாழ்த்துபவராய் உள்ள பக்தர்களின் உள்ளத்தினுள்ளே புகுந்து தேடி அவ்விடத்தில் உன்னைக் கண்டு கொண்டேன். |

## திருவாதிரை திருப்பதிகம் பாடப்பட்ட சூழலும், வரலாறும்

திருநாவுக்கரசர் எதிர் சென்று இறைஞ்சச் சிரபுரத்துத் **தெய்வ வாய்மைப்**
பெருஞானசம்பந்தப் பிள்ளையார் எதிர் வணங்கி "அப்பரே! நீர்
வருநாளில் திருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீர்" என்று கூற
வருநாமத் **தஞ்செழுத்தும் பயில் வாய்மை** அவரும் எதிர் அருளிச் செய்வார்.

திருத்தொண்டர் புராணம் – 1499

"சித்த நிலாவுந் தென் திருவாரூர் நகராளும்
மைத்தழை கண்டர் ஆதிரை நாளின் மகிழ் செல்வம்
இத்தகைமைத்து என்று என் மொழி கேன் ?" என்றருள் செய்தார்
"முத்துவிதான மணிப்பொற் கவரி" மொழி மாலை

திருத்தொண்டர் புராணம் – 1500

**தெய்வ வாய்மைப்** பெருஞானசம்பந்தர், **அஞ்செழுத்தும் பயில் வாய்மை** திருநாவுக்கரசரிடம், 'திருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீர்' என்று கேட்க முத்தான "முத்துவிதான மணிப்பொற்கவரி" என்ற பதிகம் பாடி, ஆரூரின் விழாப்பெருமைகளைக் கூறியதாகத் தெய்வச் சேக்கிழார் மேற்காண் பாடல்களில் பதிவுசெய்கிறார்.

அடியார்களாகிய நாமும், ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது, நம்மால் கேட்கப்படவேண்டியது, அவ்வவ்வூர் சிவன் கோயில் பெருமைகளேயாகும். பல நாட்பிரிந்து திருஆலவாயிலில் தம்மைக் காண வந்த சிவபாத விருதயராகிய அந்த அப்பரைக் கண்டபோது, ஆளுடையப்பிள்ளையார் "என்னையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட பெருந்தகை எம்பெருமாட்டி உடனிருந்ததே" என்று பெருமானது நலம் கேட்டருளும் செய்தியை இங்கு நினைவு கூர்வோமாக.

அடியார் பெருமக்கள் கவரி வீசுதல் உட்பட 16 வகை உபசாரங்களை மேற்கொள்ளும்போது இப்பதிகத்தைப் பாடி மகிழ்கிறார்கள்.

ஆரூர்ப் பெருமானது திருவாதிரைத் திருநாளின் சிறப்பு முத்து விதானம் நாற்றுதல், பத்தர்கள் சூழ்ந்தேத்துதல் முதலிய பெருமைகளை உடையது. இறைவரது திருவிழாப் பெருமையையும், சிறப்பினையும் செம்மை பெற எடுத்துக்கூறும் தனிப்பெருமையுடைய பதிகம் இதுவாகும்.

ஆசாரியார் ஒருவர், இன்னொரு ஆசாரியார் வினவ அருளியதும், அதனைக் கேட்டவுடன், அவர் விழாவைக் காணாவிடினும், விழாக் கண்ட பெருமானைக் கண்டு சேவிக்கப் பிரிந்து சென்று மீண்டருளியதும் ஆகிய பெருஞ்சிறப்பு உடையது. மட்டிட்ட புன்னை. மயிலை நிகழ்வுகளுள் நாம் கற்ற மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் இரண்டனுள் ஒன்றான, 'கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்' என்பதற்கு ஆதாரமாகக் காணும் வகையை அறிவிப்பது இத்திருநிகழ்வாகும்.

## 21. திருவாரூர்

(திருவாதிரைத் திருப்பதிகம்)

பண் : குறிஞ்சி

பதிக எண் : 21

208. முத்துவிதான மணிப்பொற்கவரி முறையாலே
பத்தர்களோடு பாவையர்சூழப் பலிப்பின்னே
வித்தகக்கோல வெண்டலைமாலை விரதிகள்
அத்தனாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 1

நாள் – வண்ணம் அது என்று கூட்டுக. பதிகம் முழுமையும் இவ்வாறு வினைமுற்றுப் பயனிலையில் முடிக்காது, பெயர்ப் பயனிலையில் முடித்துக் கூறியது, திருவிழாக்கண்டார்க்கும், பதிகம் படித்தார்க்கும், வினையில்லையாகும் என்ற சிவக்கவிமணி சி.கே.எஸ். அவர்களின் உரையை ஒப்பிட்டபோது கண்களில் நீர் வந்தது.

எம்பெருமானுக்கு விழாக்காலத்திற் கொண்டு செல்லப்படும் நிவேதனப் பொருள்களின் பின்னே முறைப்படி பத்திமிக்க ஆடவரும் மகளிரும் மாவிரதியரும் சூழ்ந்துவர, வெள்ளிய தலை மாலையை அணிந்த திருவாரூர்த் தலைவன் முத்துக்களால் அமைக்கப்பட்ட மேற்கட்டியின் நிழலிலே அழகிய பொற்காம்பினை உடைய கவரி வீசப்பெறச் சிறப்பான செயற்கையழகோடு திருஆதிரைத் திருநாளில் வழங்கும் காட்சி அது அது என்று எப்பொழுதும் அடியவர் மனக்கண் முன் நிற்பதாகும்.

209. நணியார் சேயார் நல்லார் தீயார் நாடோறும்
பிணிதான் றீரு மென்று பிறங்கிக் கிடப்பாரும்
மணியே பொன்னே மைந்தா மணாளா வென்பார்கட்
கணியா னாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 2

நம் காலத்துச் சிவனடியார்கள் இப்பதிகத்தை மனனம் செய்து பூசையின் நிறைவில் சோசட உபசாரம் என்று 16 வகை உபசாரங்கள் செய்யும்போது (கவரிவீசும் போது) இசையோடு பாடுவதைக் கேட்கும் பேற்றை 21ஆம் நூற்றாண்டில் நாம் பெற்றுள்ளோம்.

திருவாரூருக்கு அண்மையில் உள்ளவர், தூரத்தில் உள்ளவர், நல்லவர்கள், தீக்குணம் மிக்கவர்கள், நாடோறும் தங்கள் பிணிகள் தீர வேண்டும் என்று மிகுதியாக வந்து வழிபடுபவர்கள் ஆகிய யாவரும் 'மணியே பொன்னே வலியவனே தலைவனே' என்று வாய்விட்டு அழைப்ப, அவர்கள் கருத்துக்கு அணியனாய் இருக்கும் ஆரூர்ப் பெருமானுடைய திரு ஆதிரை நாள் திருக்கோலம் அது அது என்று அடியவர் மனக்கண்முன் எப்பொழுதும் நிற்பதாகும்.

210. வீதிகடோறும் வெண்கொடியோடு விதானங்கள்
சோதிகள்விட்டுச் சுடர்மாமணிக ளொளிதோன்றச்
சாதிகளாய பவளமுமுத்துத் தாமங்கள்
ஆதியாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 3

"ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்" பதிக மகுடம்.

வீதிகள் தோறும் வெண் கொடிகளும் மேற் கட்டிகளும் சிறந்த பவளங்களாலும் முத்துக்களாலும் புனையப்பட்ட மாலைகளும் தம்மிடையே பதிக்கப்பட்ட மணிகளால் பேரொளியை வெளிப்படுத்த, எல்லாப் பொருள்களுக்கும் முதல்வனாகிய ஆரூரனுடைய திருவாதிரைத் திருநாளின் பெருவனப்பு எப்பொழுதும் அது அது என்று அடியவர்கள் நினைக்குமாறு உள்ளது.

| | |
|---|---|
| 211. குணங்கள்பேசிக் கூடிப்பாடித் தொண்டர்கள்<br>பிணங்கித்தம்மிற் பித்தரைப்போலப் பிதற்றுவார்<br>வணங்கிநின்று வானவர்வந்து வைகலும்<br>அணங்கனாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 4 | நாள்தோறும் தேவர்கள் வந்து வணங்கி நிற்க, தெய்வத் தலைவனாகிய எம்பெருமானுடைய பல பண்புகளையும் பேசிக்கொண்டு ஒன்று சேர்ந்து அவனைப்பற்றிப் பாடி அடியார்கள் அவனுக்குத் தொண்டு செய்வதில் ஒருவருக்கு ஒருவர் முற்பட்டுப் பித்தரைப்போல அடைவு கெடப் பலவாறு பேசும் ஆரூர் ஆதிரைத் திருநாள் அழகு என்றும் அவர்கள் உள்ளத்தில் நிலை நிற்பதாகும். |
| 212. நிலவெண்சங்கும் பறையும்மார்ப்ப நிற்கில்லாப்<br>பலருமிட்ட கல்லவடங்கள் பரந்தெங்கும்<br>கலவமஞ்ஞை காரென்றெண்ணிக் களித்துவந்<br>தலமராரூ ராதிரைநாளா லதுவண்ணம். 5 | நிலாப் போன்று வெள்ளிய சங்குகளும் பறைகளும் ஒலிப்பவும் நின்ற இடத்தில் மீண்டும் நில்லாமல் கூத்தாடும் பலரும் காலில் கட்டிக் கொண்ட சதங்கை முதலியவற்றின் ஒலி பரவவும் அவற்றின் ஒலிகளை மேகத்தின் ஒலி என்று கருதித் தோகைகளை உடைய ஆண் மயில்கள் மகிழ்வோடு வந்து ஆடிச் சுழலும்படியாக ஆரூர்த் திருவாதிரைத் திருவிழாவின் அழகு என்றும் உள்ளத்தில் நிலைபெறுவதாகும். |
| 213. விம்மாவெருவா விழியாத்தெழியா வெருட்டுவார்<br>தம்மாண்பிலராய்த் தரியார் தலையான் முட்டுவார்<br>எம்மானீச னெந்தையெ னப்ப னென்பார்கட<br>கம்மானாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 6<br><br>இப்பாட்டு அடியார்களின் தம்வசமிழந்த செயல்களைக் குறித்தது.<br>மாண்பு – மாட்சி. நற்பண்பும், நற்செயலும் மாட்சி எனப்படும் | பொருமி, வாய்வெருவி விழித்து உரத்துக்கூறி மற்றவர்களை அஞ்சி ஒதுங்கச் செய்பவராய்த் தமக்கு என்று எந்த நற்செயல்களையும் பண்பையும் கொள்ளாமல் எல்லாம் ஈசன் செயல் என்று மகிழ்ச்சியால் தலையை மோதிக்கொண்டு ‘எம்மான் எம்மை அடக்கி ஆள்பவன்; எம் தலைவன்’ என்று பெருமான் புகழ் ஓதும் அடியவர் தலைவனாகிய ஆரூர்ப் பெருமானின் திருவாதிரைத் திருநாளின் அழகு என்றும் உள்ளத்தில் நிலைபெறுவதாகும். |
| 214. செந்துவர்வாயார் செல்வனசேவடி சிந்திப்பார்<br>மைந்தர்களோடு மங்கையர்கூடி மயங்குவார்<br>இந்திரனாதி வானவர்சித்த ரெடுத்தேத்தும்<br>அந்திரனாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 7<br><br>அந்திரன் – தனியன்<br>தான்தனியன் – திருவாசகம் | இந்திரன் முதலிய தேவர்களும் சித்தர்களும் பலவாறு துதிக்கும் தனியனாகிய ஆரூர்ப் பெருமானுடைய திருவாதிரைத் திருவிழாவில் செம்பவளம் போன்ற வாயை உடைய ஆடவரோடு மகளிரும் கூடி அவன் திருவடிகளைச் சிந்தித்து ஈடுபடுபவருடைய அழகிய காட்சி என்றும் உள்ளத்தில் நிலைபெறுவதாகும். |

215. முடிகள் வணங்கி மூவாதார்கண் முன்செல்ல
வடிகொள் வேய்த்தோள் வானரமங்கையர் பின்செல்லப்
பொடிகள்பூசிப் பாடும்தொண்டர் புடைசூழ
அடிகளாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 8

மூவாதார் – மூத்துச்சாவாதவர்கள் (அமரர்கள்)

தலையால் வணங்கித் தேவர்கள் முன்னே செல்லவும் செப்பமான மூங்கில்போன்ற தோள்களை உடைய தேவருலகப் பெண்கள் பின்னே செல்லவும் திருநீற்றைப் பூசிய அடியவர்கள் நாற்புறமும் சூழ்ந்து நிற்கவும் எம்பெருமான் ஆரூரில் திருவாதிரைத் திருவிழாவில் காணப்படும் அழகு என்றும் உள்ளத்து நிலை பெறுவதாகும்.

216. **துன்பநும்மைத் தொழாதநாள்க ளென்பாரும்**
**இன்பநும்மை யேத்துநாள்க ளென்பாரும்**
நும்பினெம்மை நுழையப்பணியே யென்பாரும்
அன்பனாரூ ராதிரைநாளா லதுவண்ணம். 9

தொழாதநாள் – துன்பம்
ஏத்தும்நாள் – இன்பம்

எல்லோருக்கும் அன்பனாகிய ஆரூர்ப் பெருமானுடைய திருவாதிரைத் திருவிழாவில் அடியார்கள் பெருமானாரே! உம்மை அடியேங்கள் வழிபடாத நாள்கள் துன்பம் தரும் நாள்கள். உம்மை வழிபடும் நாள்கள் அடியேங்களுக்கு இன்பம் தரும் நாள்கள்; ஆதலின் நும் திருவடித் தொண்டில் ஈடுபட்டு அடியேங்கள் நும்பின் எப்பொழுதும் வருமாறு எங்களைச் செயற்படுத்துவீர் என்று வேண்டும் காட்சி என்றும் உள்ளத்து நிலை பெறுவதாகும்.

217. பாரூர்பௌவத் தானைபத்தர் பணிந்தேத்தச்
சீரூர்பாட லாடலறாத செம்மாப்பார்ந்
தோரூரொழியா துலகமெங்கு மெடுத்தேத்தும்
ஆரூரன்ற னாதிரைநாளா லதுவண்ணம். 10

உலகைச் சூழ்ந்து நிற்கும் கடல்போல எல்லை காண ஒண்ணாத பெருமானை அடியார்கள் வணங்கித் துதித்தலால் சிறப்பு மிகுந்த பாடல்கள் ஒலித்தல் நீங்காத பெருமிதத்தை நுகர்ந்தவாறு அப்பகுதியிலுள்ள ஊர்களைச் சேர்ந்தவர்கள் யாவரும் எஞ்சாது எங்கும் எம்பெருமான் புகழை எடுத்துக் கூறித் துதிக்கும் ஆரூர்ப் பெருமானுடைய திருவாதிரைத் திருநாளின் வனப்பு என்றும் அது அது என்று நினைக்குமாறு உள்ளத்தில் நிலைபெறுவதாகும்.

## 22. கோயில்

பண் : கொல்லி | பதிக எண் : 22

இப்பதிகத்தின் பாட்டுக்கள்தோறும் நிலா எறிக்குஞ் சென்னியும், சிற்றம்பலமும், எரிஆடுதலும் குறிக்கப்பட்டன. நிலா எறித்தல் – தோற்றம்; எரியாடுதல் – சங்கார காரணமாகிய முதன்மை; சிற்றம்பலம் – முடிவிலா ஞானம்.

218. செஞ்சடைக் கற்றை முற்றத்
திளநிலா வெறிக்குஞ் சென்னி
நஞ்சடை கண்ட னாரைக்
காணலா நறவ நாறு
மஞ்சடை சோலைத் தில்லை
மல்குசிற் றம்ப லத்தே
துஞ்சடை யிருள் கிழியத்
துளங்கெரி யாடு மாறே. 1

சிவந்த சடைக்கற்றையாகிய முன்னிடத்தில் பிறை ஒளிவீசும் திருமுடியை உடைய, விடம் பொருந்திய கழுத்தினராகிய சிவபெருமானை, மேக மண்டலம் வரை வளர்ந்த தேன் மணம் கமழும் சோலைகளை உடைய தில்லைப் பதியிலே விளங்குகின்ற சிற்றம்பலத்திலே, செறிந்து பரவியுள்ள இருள் நீங்குமாறு கையில் அசைகின்ற தீயோடு கூத்து நிகழ்த்தும் நிலையில் காணலாம்.

219. ஏறனா ரேறு தம்பா
லிளநிலா வெறிக்குஞ் சென்னி
ஆறனா ராறு சூடி
யாயிழை யாளோர் பாக
நாறுபூஞ் சோலைத் தில்லை
நவின்றசிற் றம்ப லத்தே
நீறுமெய் பூசி நின்று
நீண்டெரி யாடு மாறே. 2

காளையை வாகனமாகவுடையவராய், பிறை ஒளிவீசும் தலையிலே கங்கையாற்றை உடையவராய், கங்கையைச் சூடிக்கொண்டு, பார்வதி ஒரு பாகமாக, நறுமணம் கமழும் சோலைகளை உடைய தில்லை நகரிலே தாம் பலகாலும் பழகிய சிற்றம்பலத்திலே உடலில் திருநீறு பூசிக்கொண்டு பலகாலம் ஞானத்தீயிடைக் கூத்தாடுமாற்றைக் காணலாம்.

220. சடையனார் சாந்த நீற்றர்
தனிநிலா வெறிக்குஞ் சென்னி
யுடையனா ருடை தலை(ய்)யி
லுண்பதும் பிச்சை யேற்றுக்
கடிகொள்பூந் தில்லை தன்னுட்
கருதுசிற் றம்ப லத்தே
அடிகழ லார்க்க நின்று
வனலெரி யாடு மாறே. 3

சடையை உடையவராய்த் திருநீற்றையே சந்தனமாகப் பூசியவராய், ஒரேபிறை ஒளிவீசும் தலையை உடையவராய், மண்டையோட்டில் பிச்சை ஏற்று உண்பதனை உடையவராய், நறுமணம் கமழும் பூக்கள் நிறைந்த தில்லை நகரில் சிறப்பாகக் கருதப்படும் சிற்றம்பலத்திலே, திருவடிகளிலே வீரக்கழல் ஆரவாரம் செய்ய நின்று, ஒளிவீசும் ஞானத் தீயிடையே கூத்து நிகழ்த்துமாற்றைக் காணலாம்.

| | |
|---|---|
| **221.** பையர வசைத்த வல்குற்<br>பனிநிலா வெறிக்குஞ் சென்னி<br>மையரிக் கண்ணி யாளும்<br>மாலுமோர் பாக மாகிச்<br>செய்யரி தில்லை தன்னுட்<br>டிகழ்ந்தசிற் றம்ப லத்தே<br>கையெரி வீசி நின்று<br>கனலெரி யாடு மாறே. 4 | குளிர்ந்த பிறை ஒளி வீசும் தலையிலே படம் எடுக்கும் பாம்பை வருத்தும் வனப்புடைய அல்குலை உடைய செவ்வரி கருவரி பரந்த மை தீட்டிய கண்களை உடைய கங்கையோடு, திருமால் ஒருபாகமாக அமைய, வயலிலே தானியங்கள் அறுவடை செய்யப்படுகின்ற தில்லையம்பதியிலே விளங்கும் சிற்றம்பலத்திலே சிவபெருமான் கையில் ஏந்திய நெருப்பினை வீசிக்கொண்டு நின்றவராய், ஒளிவீசும் ஞானத் தீயிடையே கூத்து நிகழ்த்துமாற்றைக் காணலாம். |
| **222.** ஓதினார் வேதம் வாயா<br>லொளிநிலா வெறிக்குஞ் சென்னி<br>பூதனார் பூதஞ் சூழப்<br>புலியுரி யதள னார்தாம்<br>நாதனார் தில்லை தன்னு<br>ணவின்றசிற் றம்ப லத்தே<br>காதில்வெண் குழைகள் தாழக்<br>கனலெரி யாடு மாறே. 5 | ஐம்பூதங்களாக இருக்கும் பெருமான், தம் வாயால் வேதம் ஓதினராய்ப் பிறை ஒளிவீசும் சென்னியராய்ப் புலித்தோலை அணிந்தவராய்த் தாம் எல்லோருக்கும் தலைவராய்ப் பூதங்கள் சூழத் தில்லையம்பதியில் பலகாலும் பழகிய சிற்றம்பலத்திலே காதிலணிந்த வெண் குழைகள் தொங்குமாறு ஒளிவீசும் ஞானத் தீயிடையே கூத்து நிகழ்த்துமாற்றைக் காணலாம். |
| **223.** ஒருடம் பிருவ ராகி<br>யொளிநிலா வெறிக்குஞ் சென்னிப்<br>பாரிடம் பாணி செய்யப்<br>பயின்றவெம் பரம மூர்த்தி<br>காரிடந் தில்லை தன்னுட்<br>கருதுசிற் றம்ப லத்தே<br>பேரிடம் பெருக நின்று<br>பிறங்கெரி யாடு மாறே. 6 | ஒரே உடம்பில் தாமும் பார்வதியுமாக இருவராகி, ஒளிவீசும் பிறையின் ஒளி பரவிய சென்னியராய், பூதக்கூட்டங்கள் தாளம் போட, கூத்தாடுதலில் பழகிய எம் மேம்பட்ட பெருமான், மேகங்கள் தங்கும் தில்லையிலே சிறப்பாகக் கருதப்படும் சிற்றம்பலத்திலே அகண்டமாய் வளருமாறு நின்று, விளங்குகின்ற ஞானத் தீயிடையே கூத்து நிகழ்த்துமாற்றைக் காணலாம். |
| **224.** முதற்றனிச் சடையை மூழ்க<br>முகிழ்நிலா வெறிக்குஞ் சென்னி<br>மதக்களிற் றுரிவை போர்த்த<br>மைந்தரைக் காண லாகு<br>மதர்த்துவண் டறையுஞ் சோலை<br>மல்குசிற் றம்ப லத்தே<br>கதத்ததோ ரரவ மாடக்<br>கனலெரி யாடு மாறே. 7 | முதன்மையும் ஒப்பற்ற தன்மையும் உடைய சடைமுழுதும் பிறை தன் ஒளியைப் பரப்பும் சென்னியை உடையவராய், மதம் பொருந்திய யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்திய வலிமை உடையவராய், தேன் உண்டு களித்து வண்டுகள் ஒலிக்கும் சோலைகள் நிறைந்த சிற்றம்பலத்தில் கோபம் கொண்ட பாம்பு படமெடுத்து ஆடச் சிவபெருமான் ஒளிவீசும் ஞானத் தீயிடையே கூத்து நிகழ்த்துமாற்றைக் காணலாம். |

**225.** மறையனார் மழுவொன் றேந்தி
மணிநிலா வெறிக்குஞ் சென்னி
இறைவனா ரெம்பி ரானா
ரேத்துவா ரிடர்க டீர்ப்பார்
சிறைகொணீர்த் தில்லை தன்னுட்
டிகழ்ந்தசிற் றம்ப லத்தே
அறைகழ லார்க்க நின்று
வனலெரி யாடு மாறே. 8

வேதம் ஓதுபவராய், மழுப்படை ஒன்றை ஏந்தியவராய், அழகிய பிறை நிலவொளி வீசும் சென்னியராய், எல்லோர் உள்ளத்தும் தங்கியிருப்பவராய், எங்கள் தலைவராய், தம்மைத் துதிப்பவர்களுடைய துயரங்களை நீக்குபவராய், நீர்ப் பாசனத்துக்காகத் தேக்கி வைக்கப்பட்டுள்ள தில்லையம்பதியிலே விளங்குகின்ற சிற்றம்பலத்திலே, சிவபெருமான் தம் கழல் ஒலி செய்ய நின்று ஞானத் தீயிடையே கூத்து நிகழ்த்துமாற்றைக் காணலாம்.

**226. விருத்தனாய்ப் பால னாகி**
விரிநிலா வெறிக்குஞ் சென்னி
நிருத்தனார் நிருத்தஞ் செய்ய
நீண்டபுன் சடைக டாழக்
கருத்தனார் தில்லை தன்னுட்
கருதுசிற் றம்ப லத்தே
அருத்தமா மேனி தன்னோ
டனலெரி யாடு மாறே. 9

விருத்தனாய்ப் பாலனாகி – எப்பொருட்கும் முன்னவனாயும் பின்னவனாயும் உள்ளான்.

ஆண்டில் மூத்தவராகவும், மிக இளையவராகவும் காட்சி வழங்குபவராய், பிறை விரிந்த ஒளியைப் பரப்பும் சென்னியராய்க் கூத்து நிகழ்த்துபவராய், நீண்ட சிவந்த சடைகள் தொங்கக் கூத்தாடுதலால் அடியவர் உள்ளத்தில் என்றும் தங்கியிருப்பவராய், தில்லையம்பதியிலே சிறப்பாகக் கருதப் படுகின்ற சிற்றம்பலத்திலே பார்வதி பாகமான திருமேனியோடு ஒளிவீசும் ஞானத் தீயிடைச் சிவபெருமான் கூத்தாடும் காட்சியைக் காணலாம்.

**227.** பாலனாய் விருத்த னாகிப்
பனிநிலா வெறிக்குஞ் சென்னிக்
காலனைக் காலாற் காய்ந்த
கடவுளார் விடையொன் றேறி
ஞாலமாந் தில்லை தன்னுள்
நவின்றசிற் றம்ப லத்தே
நீலஞ்சேர் கண்ட னார்தா
நீண்டெரி யாடு மாறே. 10

பாலனாகவும், மூத்தோனாகவும் காட்சி வழங்கிக் குளிர்ந்த பிறை ஒளிவீசும் சென்னியராய்க் காலனை காலால் வெகுண்ட பெருமானார் காளையை இவர்ந்து உலகவர் கூடி வணங்கும் தில்லையம்பதியில் சிறப்பாகப் போற்றப்படும் சிற்றம்பலத்திலே நீலகண்டராய் விரிவாக ஞானத் தீயிடைக் கூத்து நிகழ்த்தும் காட்சியைக் காணலாம்.

**228.** மதியிலா வரக்க னோடி
மாமலை யெடுக்க நோக்கி
நெதியன்றோ ணெரிய வூன்றி
நீடிரும் பொழில்கள் சூழ்ந்த
மதியந்தோய் தில்லை தன்னுள்
மல்குசிற் றம்ப லத்தே
**அதிசயம்** போல நின்று
வனலெரி யாடு மாறே. 11

அறிவற்ற அரக்கனாகிய இராவணன் விரைந்து சென்று பெரிய கயிலை மலையைப் பெயர்க்க, அதனை மனத்தால் நோக்கிச் செல்வனான அவனுடைய தோள்கள் நெரியுமாறு கால்விரல் ஒன்றனை ஊன்றி, நீண்ட பொழில்கள் சூழ்ந்த தில்லையுள் விளங்கும் சிற்றம்பலத்திலே சிவபெருமான் எல்லோரும் வியக்குமாறு குறுகிய இடத்தில் நின்று ஒளிவீசும் ஞானத் தீயிடைக் கூத்து நிகழ்த்தும் காட்சியைக் காணலாம்.

## அதிசயம்

அதிசயம் – அறிந்து அனுபவிக்கும்படி மனத்துள் எழுகின்ற பெருமித உணர்ச்சி. காண்டற்கரிய கடவுளாகிய நஞ்சுடைக் கண்டனாரை எங்கு காணலாம்? எவ்வாறு காணலாம்? அவர் நிலா எறிக்கும் சென்னியுடன் தில்லைச் சிற்றம்பலத்துள் எரியாடுமாறு காணலாம். அஃது ஒரு அதிசயம் போல உள்ளது. "அதிசயமாம்பாடி" என்கிறார் சேக்கிழார்.

"செஞ்சடைக் கற்றை முற்றத்திள நிலாவெறிக்கு" "மெனுஞ் சிறந்த வாய்மை அஞ்சொல் வளத் தமிழ் மாலை அதிசயமாம் பாடி அன்பு சூழ்ந்த" என்பது சேக்கிழார் வாக்கு. சிறந்த – வாய்மை – அஞ்சொல் – வளம் – தமிழ் – மாலை என்ற அடைமொழிகள் இப்பதிகத்தின் சிறப்பை எடுத்தியம்புகின்றன.

| | | |
|---|---|---|
| சிறப்பு | – | இறைவரைக் காணலாகும் வகையினையும், இடத்தையும் காட்டுதல் |
| வாய்மை | – | அவரது இறைமை அறிவித்தல் |
| அஞ்சொல் | – | நேரிசையின் இனிய இசை |
| வளம் | – | பொருள் வளம் |
| தமிழ் | – | பொருளைத்தரும் சொல்வளம் |
| மாலை | – | நிலா எறித்தலும், சிற்றம்பலத்தில் எரியாடுமாறும் ஒன்றுபோலப் பதிகத்தின் எல்லாப் பாசுரங்களிலும் மொழிதல். |

"இரவு நின்றெரியாடிய எம்மிறை எரிசடை மிளிர்கின்ற
அரவன் ஆண்டுதன் அடியரிற்கூட்டிய அதிசயங் கண்டாமே"

என்று அதிசயத்திற்காக மாணிக்கவாசக சுவாமிகள் ஒரு பதிகமே அருளியுள்ளார்.

"காண்பதற்கரிய நின்கழலும் கண்டிலாத நின் கதிர் நெடுமுடியும்
ஈங்கிவை கொண்டு நீங்காது விரும்பிச் சிறிய பொதுவின் மறுவின்றி
விளங்கியே வருங்காண ஆடுதி; அதுவெனக்கதிசயம் விளைக்குமன்றே
அதிசயம் விளையாது மொழிந்தது"

(11–ஆம் திருமுறை)

கோயின் நான்மணி மாலை – 12 வது பாடல்

(திருவெண்காட்டடிகள் வாக்கு)

அதிசயம் போல உள்ளது. ஆனாலும் கல்லினும் வலிய என்நெஞ்சத்துள் நுழைந்தனை, பெரியதில் பெரியை, சிறியதில் சிறியை. இத்திருமுறையில் முதன் முதலாக இங்கு அதிசயத்தைக் கையாளுகிறார்.

## 23. கோயில்

பண் : கொல்லி

பதிக எண் : 23

229. பத்தனாய்ப் பாட மாட்டேன்
பரமனே பரம யோகீ
எத்தினாற் பத்தி செய்கே
னென்னைநீ யிகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை
யம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் னாடல் காண்பா
னடியனேன் வந்த வாறே. 1

அநாதியான வினையின் நீங்கியவனே! எல்லாருக்கும் முற்பட்டவனே! தில்லை அம்பலத்தே ஆடுகின்ற தலைவனே! மேம்பட்டவனே! மேம்பட்ட யோகியே! அடியேன் பத்தனாய்ப் பாடும் ஆற்றல் இல்லேன். யாதனால் அடியேன் எப்படி பத்தி செய்வேன்? அடியேனை நீ இகழவேண்டா. அடியேன் உன் ஆடலைக் காணத் தில்லை வந்துள்ளேன்.

230. கருத்தனாய்ப் பாட மாட்டேன்
காம்பன தோளி பங்கா
ஒருத்தரா லறிய வொண்ணாத்
திருவுரு வுடைய சோதீ
திருத்தமாந் தில்லை தன்னுட்
டிகழ்ந்தசிற் றம்ப லத்தே
நிருத்தநான் காண வேண்டி
நேர்பட வந்த வாறே. 2

மூங்கில் போன்ற தோள்களை உடைய பார்வதி பாகனே! ஒருவராலும் அறியமுடியாத அழகிய ஒளிவடிவு உடையவனே! பரிசுத்தமாயுள்ள தில்லையிலே விளங்குகின்ற சிற்றம்பலத்தில் உன் திருக்கூத்தைக் காணவேண்டி உன்னை உள்ளத்தில் இருத்தி கருத்தொன்றிப் பாடமாட்டாதேனாகிய அடியேன் வந்துள்ளேன்.

கையொன்று செய்ய, நாவொன்று பாட, கருத்து ஒன்று எண்ண, நிகழும் வழிபாட்டால் பயனில்லை.

231. கேட்டிலேன் கிளைபி ரியேன்
கேட்குமா கேட்டி யாகில்
நாட்டினே னின்றன் பாதம்
நடுப்பட நெஞ்சி னுள்ளே
மாட்டினீர் வாளை பாயு
மல்குசிற் றம்ப லத்தே
கூட்டமாய் குவிமு லையாள்
கூடநீ யாடு மாறே. 3

அடியேன் இதற்குமுன் உன் பெருமையை உள்ளவாறு கேட்டறியேன். இப்பொழுது உன் அடியார்குழாத்தைப் பிரியாமல் உன் பெருமையைக் கேட்குமாறு கேட்பித்தருளி உதவுவாயானால், நீர் நிலைகளில் வாளை மீன்கள் பாயும் வளம் மிகுஞ் சிற்றம்பலத்திலே உன்னோடு கூடியிருக்கும் குவிந்த தனங்களை உடைய பார்வதியோடு கூட நீ ஆடுமாற்றால் (ஆடுதலின் பேறாக) உன் திருவடிகளை நெஞ்சின் நடுவிலே உறுதியாக நிலை நிறுத்தினேன் ஆவேன்.

| | |
|---|---|
| 232. சிந்தையைத் திகைப்பி யாதே<br>செறிவுடை யடிமை செய்ய<br>எந்தைநீ யருளிச் செய்யா<br>யாதுநான் செய்வ தென்னே<br>செந்தியார் வேள்வி யோவாத்<br>தில்லைச்சிற் றம்ப லத்தே<br>அந்தியும் பகலு மாட<br>அடியிணை யலசுங் கொல்லோ. 4 | சிவந்த தீயை ஓம்பும் அந்தணர்களுடைய வேள்விச் செயல்கள் நீங்காத தில்லைச் சிற்றம்பலத்தே அந்தியும் பகலும் நீ கூத்து நிகழ்த்துதலால் உன் திருவடிகள் சோர்வு அடையும்போலும். அடியேன் உள்ளத்தை உலகப் பொருள் நுகர்ச்சியிலிருந்து மாறுபடும் படியாகச் செய்யாமலும் உன்னை அணுகிச் செய்யும் அடிமைத் திறத்தை அடியேனுக்கு அருள் செய்யாமலும் உள்ளாய். இனி அடியேன் செயற்பாலது யாது உள்ளது ? |
| 233. கண்டவா திரிந்த நாளுங்<br>கருத்தினா னின்றன் பாதங்<br>கொண்டிருந் தாடிப் பாடிக்<br>கூடுவன் குறிப்பி னாலே<br>வண்டுபண் பாடுஞ் சோலை<br>மல்குசிற் றம்ப லத்தே<br>எண்டிசை யோரு மேத்த<br>விறைவநீ யாடு மாறே. 5 | அடியேன் அனுபவத்தில் கண்டவாறு ஞான நிலைக்குப் பொருந்தியவண்ணம் உலகியலுக்கு மாறுபட்டு உள்ளத்தில் நின் திருவடிகளை நிலையாகக் கொண்டு ஆடிப்பாடி உன் திருவருட் குறிப்பினாலேயே, வண்டுகள் பண்களைப் பாடும் சோலைகள் மிகுந்த சிற்றம்பலத்திலே எட்டுத் திசைகளில் உள்ளவர்களும் துதிக்குமாறு இறைவனாகிய நீ ஆடும் கூத்தினைக் காண்பதற்கு வந்து சேருவேன். |
| 234. பார்த்திருந் தடியனே னான்<br>பரவுவன் பாடி யாடி<br>மூர்த்தியே யென்ப னுன்னை<br>மூவரின் முதல்வ னென்பன்<br>ஏத்துவா ரிடர்க டீர்ப்பாய்<br>தில்லைச்சிற் றம்ப லத்துக்<br>கூத்தாவுன் கூத்துக் காண்பான்<br>கூடநான் வந்த வாறே. 6 | வழிபடும் அடியவர்களுடைய துயரங்களைத் தீர்ப்பவனே! தில்லைச் சிற்றம்பலத்தில் உள்ள கூத்தனே! உன் கூத்தினைப் பார்த்து இருந்து உன்னை முன்னின்று துதிப்பேன். ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் உன்னை மூவரினும் முதல்வனாகிய மூர்த்தியே என்று அழைப்பேன். உன் கூத்தினைக் காண்பதற்கு அடியவருடன் நான் வந்தவாறு இதுவாம். |
| 235. பொய்யினைத் தவிர விட்டுப்<br>புறமலா வடிமை செய்ய<br>ஐயநீ யருளிச் செய்யா<br>யாதியே யாதி மூர்த்தீ<br>வையகந் தன்னின் மிக்க<br>மல்குசிற் றம்ப லத்தே<br>பையநுன் னாடல் காண்பான்<br>பரமநான் வந்த வாறே. 7 | அழியும் பொருள்களிலுள்ள பற்றினை நீங்குமாறு விடுத்து அகத்தடிமையாகிய மெய்யடிமையைச் செய்ய, என் தலைவனே! எல்லோர்க்கும் ஆதியாய முதல் தெய்வமே! நீ அருள் செய்வாயாக. இவ்வுலகிலே மேம்பட்ட மிகுஞ் சிதம்பரத்தில் உன் கூத்தினை சற்றே காண அடியேன் வந்தவாறு இதுவாம். |

236. மனத்தினார் திகைத்து நாளு
மாண்பலா நெறிகண் மேலே
கனைப்பரா லென்செய் கேனோ
கறையணி கண்டத் தானே
தினைத்தனை வேதங் குன்றாத்
தில்லைச்சிற் றம்ப லத்தே
அனைத்துநின் னிலயங் காண்பா
னடியனேன் வந்த வாறே. 8

விடக்கறையை உடைய நீலகண்டனே! அடியேனுடைய மனம் நிலைகொள்ளாமல் தடுமாறி நாள்தோறும் பெருமை தாராத வழிகளிலே செருக்கித் திரிகின்றது. அடியேன் யாது செய்வேன்? வேதங்களை ஓதுந்திறஞ் சிறிதளவுங் குறைவுபடாத தில்லைச் சிற்றம்பலத்தில் உன் இருப்பிடத்தைத் தரிசிப்பதற்கு அடியேன் வந்தவாறு இதுவாம்.

237. **நெஞ்சினைத் தூய்மை செய்து**
**நினைக்குமா நினைப்பி யாதே**
வஞ்சமே செய்தி யாலோ
வானவர் தலைவ னேநீ
மஞ்சடை சோலைத் தில்லை
மல்குசிற் றம்ப லத்தே
அஞ்சொலாள் காண நின்று
வழகநீ யாடு மாறே. 9

தேவர்கள் தலைவனே! அடியேனுடைய நெஞ்சினைத் தூய்மை செய்து உன்னை எப்பொழுதும் அடியேன் நினைக்குமாறு திருவுள்ளம் பற்றாமல் வஞ்சனை செய்கின்றாயே. மேகங்கள் தங்குதற்கு வந்து சேரும் உயரமான சோலைகளையுடைய தில்லையம்பதியிற் சிதம்பரத்திலே அழகிய சொற்களையுடைய பார்வதிகாண நீ ஆடுந் திறம் இருந்தவாறு என்னே!

238. மண்ணுண்ட மால வனு
மலர்மிசை மன்னி னானும்
விண்ணுண்ட திருவு ருவம்
விரும்பினார் காண மாட்டார்
திண்ணுண்ட திருவே மிக்க
தில்லைச்சிற் றம்ப லத்தே
பண்ணுண்ட பாட லோடும்
பரமநீ யாடு மாறே. 10

பூமியை உண்ட திருமாலும், மலர் மேலுறையும் பிரமனும் விண்ணளவும் ஒளிநிறைந்த உன் திருவுருவைக் காணும் வேட்கையராயிருந்துமே, தானாக நிலைத்துத் திணிந்திருக்கும் சிவத்திரு மேம்பட்ட தில்லைச் சிற்றம்பலத்தின் கண்ணே பண்ணுக்கு அமைந்த பாடல் ஒலிகளின் இடையே பரம்பொருளாகிய நீ வெளிப்படையாக ஆடுமாற்றை – அதன் மாண்பை (இன்னும்) காணமாட்டாராகின்றனர். (அவர் விதி இருந்தவாறென்னே!)

## 24. திருவதிகைவீரட்டானம்

திருநேரிசை (கொப்பளித்த திருநேரிசைப் பதிகம்) பதிக எண் : 24

239. இரும்புகொப் பளித்த யானை
யீருரி போர்த்த வீசன்
கரும்புகொப் பளித்த வின்சொற்
காரிகை பாக மாகச்
சுரும்புகொப் பளித்த கங்கைத்
துவலைநீர் சடையி லேற்ற
அரும்புகொப் பளித்த சென்னி
யதிகைவீ ரட்ட னாரே. 1

கொப்பளித்தல் – தன்மை – பண்பு – மிகுந்து வெளித் தோன்றுதல். கொப்பளித்த என்ற சொல்லும் பொருளும் இப்பதிகம் முழுவதும் வருதலால் இப்பெயர் பெற்றது.

கரும்பின் இனிமை மிகும் சொற்களை உடைய பார்வதியின் பாகராய், வண்டுகள் தேனை மிகுதியாக உண்டு கொப்பளிக்கும் பூவினை அணிந்த கங்கையாளாகிய நீர் வடிவைச் சடையில் ஏற்றவராய், அரும்புகள் தேனை மிகுதியாக வெளிப்படுத்தும் சென்னியை உடைய அதிகை வீரட்டனார், இரும்பின் நிறத்தை கொப்பளித்து விட்டாற்போன்ற செறிவான கருமையுள்ள யானையின் ஈரப்பசுமை கெடாத தோலைப் போர்த்த ஈசனாவார்.

| | |
|---|---|
| **240.** கொம்புகொப் பளித்த திங்கட்<br>கோணல்வெண் பிறையுஞ் சூடி<br>வம்புகொப் பளித்த கொன்றை<br>வளர்சடை மேலும் வைத்துச்<br>செம்புகொப் பளித்த மூன்று<br>மதிலுடன் சுருங்க வாங்கி<br>அம்புகொப் பளிக்க வெய்தா<br>ரதிகைவீ ரட்ட னாரே. 2 | கொம்பின் கூர்மை அதிகரித்த கூரிய வளைந்த வெண்பிறையைச் சூடி, அதன் மேலும் நறுமணம் அதிகரித்த கொன்றை மலரை வளரும் சடையில் அணிந்து, செம்பு மயமான உறுதியான மும்மதில்களும் அழியுமாறு வில்லை வளைத்து அம்பின் விறல் அதிகரிக்குமாறு புரங்களை எய்தவர் அதிகை வீரட்டனாரே. |
| **241.** விடையுங்கொப் பளித்த பாதம்<br>விண்ணவர் பரவி யேத்தச்<br>சடையுங்கொப் பளித்த திங்கட்<br>சாந்தம் வெண் ணீறுபூசி<br>உடையுங்கொப் பளித்த நாக<br>முள்குவா ருள்ளத் தென்றும்<br>அடையுங்கொப் பளித்த சீரா<br>ரதிகைவீ ரட்ட னாரே. 3 | இடபத்தில் தழும்பேற்றும் தம் திருவடிகளைத் தேவர்கள் பாடித் துதிக்க சடைக்கு ஒளித் ததும்ப வைக்கும் சந்திரனின் நிலவு போன்ற வெண்ணீற்றைச் சாந்தமாகப் பூசி உடைமேல் பல்கித் தோன்றும் நாகங்களினைக் கட்டியிருக்கும் திருவடிவை தியானிப்பவரது உள்ளத்தில் நீங்காது சேர்ந்திருப்பவர் அதிகை வீரட்டனாரே. |
| **242.** கறையுங்கொப் பளித்த கண்டர்<br>காமவே ளுருவ மங்க<br>இறையுங்கொப் பளித்த கண்ணா<br>ரேத்துவா ரிடர்க டீர்ப்பார்<br>மறையுங்கொப் பளித்த நாவர்<br>வண்டுண்டு பாடுங் கொன்றை<br>அறையுங்கொப் பளித்த சென்னி<br>யதிகைவீ ரட்ட னாரே. 4<br><br>அதிகை வீரட்டனாரே என்ற பதிக மகுடத்தை வைத்துப் படர்க் கையில் பாடுகின்றார் | விடக்கறை துலக்கமாக விளங்கும் கழுத்தினராய், மன்மதன் வடிவம் அழியுமாறு தீயைச் சிறிது வீசிய நெற்றிக் கண்ணினை உடையவராய், தம்மைத் துதிக்கும் அடியவர் துயர்களைத் தீர்ப்பவராய், வேதம் மிக்குத் தொனிக்கும் நாவினராய், வண்டுகள் தேன் உண்டு பாடப்படுவதும், எல்லோராலும் புகழப்படுவதுமான கொன்றை மலரைச் சூடிய சென்னியராய்க் காட்சி வழங்குகிறார் அதிகை வீரட்டனார். |
| **243.** நீறுகொப் பளித்த மார்பர்<br>நிழறிகழ் மழுவொன் றேந்திக்<br>கூறுகொப் பளித்த கோதைக்<br>கோல்வளை மாதோர் பாகம்<br>ஏறுகொப் பளித்த பாத<br>மிமையவர் பரவி யேத்த<br>ஆறுகொப் பளித்த சென்னி<br>யதிகைவீ ரட்ட னாரே. 5 | திருநீறு பரந்து விளங்கும் மார்பினராய், ஒளி விளங்கும் மழுப்படையைக் கையில் ஏந்தி, எல்லோரும் புகழும் மாலையும் திரண்ட வளைகளும் அணிந்து ஒரு பாகத்தை விளக்கும் பார்வதி சமேதராய், காளையைத் தழும்பேற வைத்த தம் திருவடிகளைத் தேவர்கள் துதிக்குமாறு கங்கை நதி பெருகித் தங்கியிருக்கும் செஞ்சடையை உடையவராய் காட்சி வழங்குகிறார் அதிகை வீரட்டனார். |

| | |
|---|---|
| **244.** வணங்குகொப் பளித்த பாதம்<br>வானவர் பரவி யேத்தப்<br>பிணங்குகொப் பளித்த சென்னிச்<br>சடையுடைப் பெருமை யண்ணல்<br>சுணங்குகொப் பளித்த கொங்கைச்<br>சுரிகுழல் பாக மாக<br>அணங்குகொப் பளித்த மேனி<br>யதிகைவீ ரட்ட னாரே. 6 | வேத மந்திரங்களைச் சொல்லி வணங்குதலை மிகவும் பொருந்திய திருவடிகளைத் தேவர்கள் முன் நின்று போற்றிப் புகழ, ஒன்றோடொன்று ணங்காதவை அதிகம் விளங்கும் சடையினை உடைய பெருமை மிக்க தலைமையாளராய், மலர் மாலைகளின் பூந்தாது மிகவும் பரவிய கொங்கைகளை உடையவளாய்ச் சுருண்ட கூந்தலை உடைய பார்வதியின் பாகராய், தெய்வத் தன்மையை வெளிப்படுத்தும் திருமேனியை உடையவராய்க் காட்சி வழங்குகிறார் அதிகை வீரட்டனார். |
| **245.** சூலங்கொப் பளித்த கையர்<br>சுடர்விடு மழுவாள் வீசி<br>நூலுங்கொப் பளித்த மார்பி<br>னுண்பொறி பளித்த பாகர்<br>மாலுங்கொப் பளித்த பாகர்<br>வண்டுபண் பாடுங் கொன்றை<br>ஆலங்கொப் பளித்த கண்டத்<br>ததிகைவீ ரட்ட னாரே. 7 | சூலம் ஒளிமிகுந்து வீசும் கையினராய், ஒளிவீசும் மழுப்படையை சுழற்றிக் கொண்டு, முப்புரிநூல் ஒளிவீசும் மார்பில் நுண்ணிய புள்ளிகளை உடைய பாம்பினை அணிந்து வண்டுகள் பண்பாடும் கொன்றை மலர்களைச் சூடித் திருமால் மகிழ்ந்திருக்கும் பாகத்தை உடையவராய், விடத்தின் சுவட்டினை வெளிப்படுத்தும் நீலகண்டராய்க் காட்சி வழங்குகிறார் அதிகை வீரட்டனார். |
| **246.** நாகங்கொப் பளித்த கையர்<br>நான்மறை யாய பாடி<br>மேகங்கொப் பளித்த திங்கள்<br>விரிசடை மேலும் வைத்துப்<br>பாகங்கொப் பளித்த மாதர்<br>பண்ணுடன் பாடி யாட<br>ஆகங்கொப் பளித்த தோளா<br>ரதிகைவீ ரட்ட னாரே. 8 | பாம்பு மகிழ்வோடு விளங்கும் கையினராய், நான்கு வேதங்களையும் பாடிக் கொண்டு, மேகம் மிக்குச் செறிந்த வானில் மிளிரும் பிறையை விரிந்த சடைமேலே சூடி, ஒருபாகமாக விளங்கும் உமாதேவி பண்ணோடு பாடக் கூத்தாடுவதற்குத் திருமேனிக்கண் பூரிப்படைந்து விம்முந் தோள்களை உடையவர் அதிகை வீரட்டனார் ஆவர். |
| **247.** பரவுகொப் பளித்த பாடல்<br>பண்ணுடன் பத்த ரேத்த<br>விரவுகொப் பளித்த கங்கை<br>விரிசடை மேவ வைத்து<br>இரவுகொப் பளித்த கண்ட<br>ரேத்துவா ரிடர்க டீர்ப்பார்<br>அரவுகொப் பளித்த கைய<br>ரதிகைவீ ரட்ட னாரே. 9 | துதித்தற்கு ஏற்ற வாழ்த்துக்களைத் துலங்க வெளிப்படுத்தும் பாடல்களைப் பண்ணுடன் பாடி அடியவர்கள் போற்ற, சடைமுடியில் கலந்து தங்குதற்கு மகிழும் கங்கையைத் தம் விரிந்த சடையில் மகிழுமாறு வைத்து, இருள் கம்மிக் கறுத்த நீலகண்டராய், தம்மை வழிபட்டுப் புகழ்பவர்களின் துயரங்களைத் தீர்ப்பவராய், பாம்பு மகிழ்ந்து ஆடும் கையினராய்க் காட்சி வழங்குகிறார் அதிகை வீரட்டனார். |

248. தொண்டைகொப் பளித்த செவ்வாய்த்
துடியிடைப் பரவை யல்குற்
கொண்டைகொப் பளித்த கோதைக்
கோல்வளை பாக மாக
வண்டுகொப் பளித்த தீந்தேன்
வரிக்கயல் பருகி மாந்தக்
கெண்டைகொப் பளித்த தெண்ணீர்க்
கெடிலவீ ரட்ட னாரே. 10

தொண்டைக்கனி அழகுவீசும் சிவந்தவாய், துடி போன்ற இடை, கடல்போன்ற பரந்த அல்குல், மயிர் முடிக்கும் விதங்களில் ஒன்றான கொண்டை பிரகாசிக்கும் கூந்தல், திரண்ட வளையல்கள் எனும் இவற்றை உடைய பார்வதிபாகராய், வண்டுகள் உண்டு மிகுதி என்று வெளிப்படுத்திய தேனைக் கோடுகளை உடைய கயல் மீன்கள் பருகத் தாம் பருகுவதற்குக் கெண்டை மீன்கள் தாவிவரும் தெளிந்த நீரை உடைய கெடில ஆற்றின் கரையிலுள்ள அதிகை வீரட்டத்தை உகந்தருளியிருக்கும் பெருமானாகக் காட்சி வழங்குகிறார்.

## 25. திருவதிகைவீரட்டானம்

**திருநேரிசை** **பதிக எண் : 25**

249. வெண்ணிலா மதியந் தன்னை
விரிசடை மேவ வைத்து
உண்ணிலாப் புகுந்து நின்றங்
குணர்வினுக் குணரக் கூறி
விண்ணிலார் மீயச் சூரார்
வேண்டுவார் வேண்டி லார்க்கே
அண்ணியார் பெரிதுஞ் சேயா
ரதிகைவீ ரட்ட னாரே. 1

"அதிகை வீரட்டனாரே" என்ற பதிக மகுடத்தை வைத்துப் படர்க்கையில் பாடுகின்றார்.

தேவருலகிலும் இருப்பதோடு, நிலவுலகில் மீயச்சூர் முதலிய திருத்தலங்களில் உறைபவராய், தம்மை விரும்புபவருக்கு அண்மையில் உள்ளவராய், வேண்டாதவருக்குப் பெரிதும் தொலைவில் உள்ளவராய் விளங்கும் பெருமானார். வெள்ளிய ஒளிவீசும் பிறையை அது விரும்புமாறு விரிசடையிற் சூடி, அடியேன் உள்ளத்திலே ஞானஒளி நிலப்புகுந்து நின்று, அவ்விடத்தில் உணர்விற்குப் பொருந்துமாறு உணர்த்த வேண்டியவற்றை உணர்த்தி, அதிகை வீரட்டத்தில் உள்ளார்.

250. பாடினார் மறைக ணான்கும்
பாயிருள் புகுந்தென் னுள்ளம்
கூடினார் கூட லால
வாயிலார் நல்ல கொன்றை
சூடினார் சூடன் மேவிச்
சூழ்சுடர் சுடலை வெண்ணீ
றாடினா ராடன் மேவி
யதிகைவீ ரட்ட னாரே. 2

கூடல் நகர ஆலவாய்க் கோயிலிலுள்ள பெருமான் நான்கு வேதங்களையும் பாடிக்கொண்டு நறிய கொன்றை மாலையை விரும்பிச் சூடி, சுடுகாட்டின் ஒளிவீசும் சாம்பல் பூசி, திரிபுரத்தை அழிக்குந் திருவிளையாடலை விரும்பி அதிகை வீரட்டத்தில் தங்கியவராய், பரந்த ஆன்மிக இருளிலே நுழைந்து வந்து, அடியேனுடைய உள்ளத்தை அடைந்தார்.

| பாடல் | | விளக்கம் |
|---|---|---|
| **251.** ஊனையே கழிக்க வேண்டி<br>லுணர்மின்க ளுள்ளத் துள்ளே<br>தேனைய மலர்கள் கொண்டு<br>சிந்தையுட் சிந்திக் கின்ற<br>ஏனைய பலவு மாகி<br>யிமையவ ரேத்த நின்று<br>ஆனையி னுரிவை போர்த்தா<br>ரதிகைவீ ரட்ட னாரே. | 3 | உடம்பு எடுத்தலாகிய பிறவித்துயரை அடியோடு போக்க விரும்பினால், உள்ளத்துள்ளே நினைக்கும் எல்லா எண்ணங்களிலும் உறைபவராய், வண்டுகள் வருந்துமாறு மலர்களைக் கைகளில் கொண்டு தேவர்கள் துதிக்குமாறு, யானைத் தோலைப் போர்த்தி நின்று, அதிகை வீரட்டத்தில் காட்சி வழங்கும் பெருமானாரை உள்ளத்துள்ளே தியானித்து உணருங்கள். |
| **252.** துருத்தியாங் குரம்பை தன்னிற்<br>றொண்ணூற்றங் கறுவர் நின்று<br>விருத்திதான் றருக வென்று<br>வேதனை பலவுஞ் செய்ய<br>வருத்தியால் வல்ல வாறு<br>வந்துவந் தடைய நின்ற<br>அருத்தியார்க் கன்பர் போலு<br>மதிகைவீ ரட்ட னாரே. | 4 | தோல்துருத்தி போன்ற உடம்பிலே தொண்ணுற்றாறு தத்துவங்களும் தாத்துவிகங்களும் உறைவிடங்கொண்டு தங்கள் வாழ்வுக்கு உரிய பொருள்களை அளிக்க வேண்டுமென்று பல துயரம் செய்யுமாறு உயிரினங்களை வருத்துவதனாலே, தம்மால் இயன்றளவு பெருமானாகிய தம்மை நாடி வந்து அடைந்த விருப்பினை உடைய அடியவர்பால் அதிகை வீரட்டனார் தாமும் அன்பராய் உதவுகிறார். |
| **253.** பத்தியா லேத்தி நின்று<br>பணிபவர் நெஞ்சத் துள்ளார்<br>துத்தியைந் தலைய நாகஞ்<br>சூழ்சடை முடிமேல் வைத்து<br>உத்தர மலையர் பாவை<br>யுமையவ ணடுங்க வன்று<br>அத்தியி னுரிவை போர்த்தா<br>ரதிகைவீ ரட்ட னாரே. | 5 | பத்தியோடு வணங்கும் மெய்யன்பர் சித்தத்தில் நிலையாக உள்ளவரும், படப்பொறிகளை உடைய ஐந்தலை நாகத்தைப் பரந்த சடைமுடியின்மேல் சூடி, வடக்கிலுள்ள இமய மலையரசன் மகளான உமாதேவி நடுங்குமாறு யானைத் தோலைப் போர்த்தியவரும் அதிகை வீரட்டனாரே. |
| **254.** வரிமுரி பாடி யென்றும்<br>வல்லவா றடைந்தும் நெஞ்சே<br>**கரியுரி மூட வல்ல**<br>**கடவுளைக்** காலத் தாலே<br>சுரிபுரி விரிகு ழ(ல்)லா<br>டுடியிடைப் பரவை யல்குல்<br>அரிவையோர் பாகர் போலு<br>மதிகைவீ ரட்ட னாரே.<br>――――――<br>யானையின் பசுந்தோல் பிறர்உடம்பில் பட்டால் கொல்லும் யானைத் தோலைத் தன்மேல் மூடவல்லவன் சிவபெருமான் ஒருவனே. | 6 | நெஞ்சே! சுருண்ட கடைகுழன்ற விரிந்த கூந்தலினளாய்த் துடிபோன்ற இடையினளாய்க் கடல் போன்ற அல்குலை உடைய பார்வதி பாகராய் அதிகை வீரட்டராய் யானைத் தோலைப் போர்த்திய கடவுளாய் விளங்குகிறார் அதிகை வீரட்டனார். அவரை என்றும் வரிப் பாடல்களையும் முரிப்பாடல்களையும் பாடிக் கொண்டு நம்மால் இயன்றவாறு அடையக் கடவோம். யானையின் பசுந்தோல் பிறர் உடம்பிற்பட்டால் கொல்லும். |

‘வரிப்பாடலாவது – பண்ணும் திறமும் செயலும் பாணியும் ஒரு நெறியன்றி மயங்கச் சொல்லப்பட்ட வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என இசையோர் வகுத்த எட்டனியல்பும் ஆறனியல்பும் பெற்றுத் தன் முதலும் இறுதியும் கெட்டு இயல்பும் முடமும் ஆக முடிந்து கருதப்பட்ட சந்தியும் சார்த்தும் பெற்றும் பெறாதும் வரும். அதுதான் தெய்வஞ் சுட்டியும் மக்களைப் பழிச்சியும் வரும். (சிலப். கானல்வரி, 1 : 12–20. அரும்பதவுரை) தொல். செய். 153, பேராசிரியர், முரி :– ‘எடுத்த இயலும் இசையும் தம்மில் முரித்துப் பாடுதல் முரியெனப்படுமே’ கானல் வரி : முரிவரி. (14–16) அரும்பதவுரை. ‘இசைநூலாரும் இத்தரவு முதலாயினவற்றை, முகம் நிலை கொச்சகம் முரி என வேண்டுப. கூத்தநூலார் கொச்சகம் உள்வழி அதனை நிலை என அடக்கி முகம் நிலை முரி என மூன்றாக வேண்டுப. அவரும் இக்கருத்திற்கு ஏற்ப முகத்திற்படும் தாவினை முகம் எனவும் இடைநிற்பனவற்றை இடைநிலை எனவும் இறுதிக்கண் முரிந்து மாறுஞ் சுரிதகத்தினை முரி எனவும் கூறினார் என்பது’ (தொல். செய். 132. பேராசிரியர் உரை) சிலப். கடலாடு. 35. அடியார்.... உரை. வரி முரி பாடி என்றும் வல்லவாறு அடைந்தும் (அடைந்தோம்) என்று கொள்க. இதனால், அப்பமூர்த்திகளது பாவன்மையும் புலமையும் ஒப்புயர்வில்லாத உயர்ச்சிய ஆதல் புலப்படும்.

255. நீதியா னினைசெய் நெஞ்சே
நிமலனை நித்த மாகப்
பாதியா முமைதன் னோடும்
பாகமாய் நின்ற வெந்தை
சோதியாய்ச் சுடர்வி ளக்காய்ச்
சுண்ணவெண் ணீறதாடி
ஆதியு மீறு மானா
ரதிகைவீ ரட்ட னாரே. 7

நெஞ்சே! பார்வதி பாகராய்ச் சோதியாய், ஒளி விடும் ஞானதீபமாய் நின்ற எம் பிதாவும், திருநீறு பூசி உலகுக்கெல்லாம் ஆதியும் அந்தமுமாக உள்ளவரும் அதிகை வீரட்டனாராவார். அத்தூயோரை நாடோறும் முறைப்படி தியானம் செய்வாயாக.

256. எல்லியும் பகலு மெல்லாந்
துஞ்சுவேற் கொருவர் வந்து
புல்லிய மனத்துக் கோயில்
புக்கனர் காம னென்னும்
வில்லியங் கணையி னானை
வெந்துக நோக்கி யிட்டார்
அல்லியம் பழன வேலி
யதிகைவீ ரட்ட னாரே. 8

வில்லையும் அம்புகளையும் உடைய மன்மதன் வெந்து விழும்படி நோக்கியவர். அல்லிச் செடிகள் களையாக நிறைந்த வயல்களை உடைய அதிகை வீரட்டனார். ஒப்பற்றவரான அப்பெருமான் செயற்பாடு ஏதும் இன்றி இரவும் பகலும் கழிக்கும் அடியேன் பக்கல்வந்து அடியேனுடைய அற்பமான மனமாகிய கோயிலிலே புகுந்து விட்டார்.

257. ஒன்றவே யுணர்தி ராகி
லோங்காரத் தொருவ னாகும்
வென்றவைம் புலன்க டம்மை
விலக்குதற் குரியீ ரெல்லாம்
நன்றவ னார ண(ன்)னு
நான்முக னாடிக் காண்குற்
றன்றவர்க் கரியர் போலு
மதிகைவீ ரட்ட னாரே. 9

பெரியோனாகிய திருமாலும், பிரமனும் தேடிக் காண முயன்ற அன்று அவர்களுக்குக் காண்டற்கு அரியவரான அதிகை வீரட்டனார், ஐம்புலன்களையும் வென்று விலக்குதற்குரிய நீங்கள் எல்லீரும் மனம் பொருந்தித் தியானிப்பீராயின் ஓங்காரத்தில் உள்ளே உள்ள மெய்ப்பொருளாக உங்களுக்குக் காட்சி வழங்குவார்.

258. தடக்கையா லெடுத்து வைத்துத்
தடவரை குலுங்க வார்த்துக்
கிடக்கையா லிடர்க ளோங்கக்
கிளர்மணி முடிகள் சாய
முடக்கினார் திருவி ரல்தான்
முருகமர் கோதை பாகத்
தடக்கினா ரென்னையாளு
மதிகைவீ ரட்ட னாரே. 10

என்னை அடியவனாக்கிக் கொண்ட அதிகை வீரட்டனார், பெரிய கயிலை மலை நடுங்குமாறு ஆரவாரித்து நீண்ட கைகளால் பெயர்க்க முயன்ற இராவணன் அதன் கீழகப்பட்டுத் துன்பங்கள் மிகுந்து விளக்கமான மணிமுடிகள் நசுங்கி அவலமுறுமாறு தம் திருவடிப் பெருவிரலைச் சற்றே வளைத்து ஊன்றினார். அவரே நறுமணம் கமழும் மாலையை அணிந்த பார்வதியை இடப்பாகமாக அடக்கியவரும் ஆவார்.

## 26. திருவதிகைவீரட்டானம்

**திருநேரிசை** **பதிக எண் : 26**

259. நம்பனே யெங்கள் கோவே
நாதனே யாதி மூர்த்தி
பங்கனே பரம யோகீ
யென்றென்றே பரவி நாளும்
செம்பொனே பவளக் குன்றே
திகழ்மலர்ப் பாதங் காண்பான்
அன்பனே **யலந்து போனே**
னதிகைவீ ரட்ட னீரே. 1

அலந்து போனேன் – மிகவும் துன்பப்பட்டேன்

'திருவதிகை வீரட்டானத்தில் உகந்தருளியிருக்கும் பெருமானீரே! எல்லாராலும் விரும்பப்படுகிறவரே! எங்கள் அரசரே! ஆதிமூர்த்தியாகிய பார்வதிபாகரே! மேம்பட்டயோகீசுவரே! பொன்னையும் பவளமலையையும் ஒத்தவரே! அன்பரே!' என்று உம்மைப் பலகாலும் வாய்விட்டழைத்து உமது தாமரை மலர் போன்ற பாதங்களைக் காணத் துயருற்று அடியேன் வருந்துகின்றேன்.

260. பொய்யினான் மிடைந்த போர்வை
புரைபுரை யழுகி வீழ
மெய்யனாய் வாழ மாட்டேன்
வேண்டிற்றன் றைவர் வேண்டார்
செய்யதா மரைக ளன்ன
சேவடி யிரண்டுங் காண்பான்
ஐயநா னலந்து போனே
னதிகைவீ ரட்ட னீரே. 2

அதிகை வீரட்டனீரே என்ற மகுடத்தை வைத்து முன்னிலையாகப் பாடுகிறார்.

அழியக்கூடிய பொய்ப்பொருள்களால் இணைத்துச் செய்யப்பட்ட உடம்பில் ஒவ்வொரு துவாரமும் செயற்பாடின்றி அழுகிக்கெட, உண்மையான வாழ்வு வாழ இயலாதேனாய், யான் விரும்பிய ஒப்பற்ற பரஞானத்தை என் ஐம்பொறிகளும் தாமும் விரும்பாமல் இடர்ப்படுதலால், அதிகை வீரட்டனாராகிய உமது சிவந்த தாமரையை ஒத்த திருவடிகள் இரண்டையும் காண்பதற்கு இயலாமல் அடியேன் வருந்தி நிற்கின்றேன்.

261. நீதியால் வாழ மாட்டே
னித்தலுந் தூயே னல்லேன்
ஓதியு முணர மாட்டே
னுன்னையுள் வைக்க மாட்டேன்
சோதியே சுடரே யுன்றன்
றூமலர்ப் பாதங் காண்பான்
ஆதியே யலந்து போனே
னதிகைவீ ரட்ட னீரே. 3

"செய்வன செய்து தவிர்வன தவிர்ந்து வாழ்க" அறநூல்.

ஒளியே! ஞானவிளக்கே! அதிகைப்பெருமானே! தூயேன் அல்லேனாகிய அடியேன் நாடோறும் நெறிப்படி வாழமாட்டாமல், கற்றும் கற்றவாறு உணர இயலாதேனாய், உன்னை உள்ளத்துள் நிலையாக வைத்துத் தியானிக்க இயலாதேனாய் முதற்கடவுளாகிய உன்னுடைய தூயமலர்களைப் போன்ற திருவடிகளைக் காண இயலாதேனாய் வருந்தி நிற்கிறேன்.

| | |
|---|---|
| **262.** தெருளுமா தெருள மாட்டேன்<br>தீவினைச் சுற்ற மென்னும்<br>பொருளுளே யழுந்தி நாளும்<br>போவதோர் நெறியுங் காணேன்<br>இருளுமா மணிகண் டாநின்<br>னிணையடி யிரண்டுங் காண்பான்<br>அருளுமா றருள வேண்டு<br>மதிகைவீ ரட்ட னீரே. 4 | இருண்ட நீலமணி போன்ற கழுத்தை உடைய அதிகைப் பெருமானே! தெளிவடையும் வழியை அடைந்து மனத் தெளிவடைதலை இல்லேனாய், தீயவினைகளுக்கு உதவும் தேக பந்துக்கள் என்னும் பொருள்களோடு இயைந்து நாளும் செல்லத்தக்க மேம்பட்ட வழியை அறியேனாய் உள்ள அடியேன் உன் ஒன்றற்கு ஒன்று ஒப்பான திருவடிகள் இரண்டனையும் தரிசிக்குமாறு அருளும் வகையால் அருளவேண்டும். |
| **263.** அஞ்சினா லியற்றப் பட்ட<br>வாக்கைபெற் றதனுள் வாழும்<br>அஞ்சினா லடர்க்கப் பட்டிங்<br>குழிதரு மாத னேனை<br>அஞ்சினா லுய்க்கும் வண்ணங்<br>காட்டினாய்க் கச்சந் தீர்ந்தேன்<br>அஞ்சினாற் பொலிந்த சென்னி<br>யதிகைவீ ரட்ட னீரே. 5 | பஞ்சகவ்வியத்தால் அபிடேகிக்கப்படுதலால் விளங்குகின்ற சென்னியை உடைய அதிகை வீரட்டப் பெருமானே! ஐம்பூதங்களால் இயற்றப்பட்ட இவ்வுடலைப் பெற்று அதன்கண் வாழும் ஐம்பொறிகளால் வருத்தப்பட்டு இவ்வுலகில் திரியும் அறிவற்ற அடியேனைத் திருவைந்தெழுத்தால் நல்வழியில் செல்லுமாறு வழிகாட்டினாயாக. அதனால் அச்சம் நீங்கப் பெற்றேன். |
| **264.** உறுகயி றூசல் போல<br>வொன்றுவிட் டொன்று பற்றி<br>மறுகயி றூசல் போல<br>வந்துவந் துலவு நெஞ்சம்<br>பெறுகயி றூசல் போலப்<br>பிறைபுல்கு சடையாய் பாதத்<br>தறுகயி றூச லானே<br>னதிகைவீ ரட்ட னீரே. 6 | கயிறாகிய ஊஞ்சல் போலப் பிறைச் சந்திரன் அசைந்துகொண்டு தங்கியிருக்கும் சடையினை உடைய அதிகைப் பெருமானே! தன் நிலையை விட்டுச் சென்று பிறிதோர் இடத்தைப் பற்றி மீண்டும் தொங்கிய நிலைப்பக்கம் வந்து சேரும் ஊசற்கயிறு போல ஓர் இடத்தை விடுத்து அலைந்து மீண்டும் அவ்விடத்திற்கே வரும் நெஞ்சம், கயிறற்ற ஊஞ்சலுக்குத் தாய் தரையேயாதல் போல, இப்பொழுது நின் பாதமே இடமாக தங்கி நிற்கும் இயல்பைப்பெற்றுள்ளேன் ஆயினேன். |

| | |
|---|---|
| உறுகயிறூசல் போல் ஒன்றுவிட்டு ஒன்று பற்றி | நிலையில்லாது இங்கும் அங்கும் அலைதல் |
| மறுகயிறூசல் போல வந்து வந்து உலவும் | முன்னும் பின்னும் போதல் |
| பெறுகயிறூசல் போலப் பிறைபுல்குசடை | கயிறு ஊசலைப் பெற்ற தோற்றம் போலச் சடை பிறையினைப் பெற்றது |
| பாதத்து அறுகயிறு ஊசலானேன் | ஊசல் கயிறற்றால் தரையிற் சேர்வதன்றி வேறு துணையில்லாமை போல எனக்கு உன்பாத மன்றி வேறு தாங்கும் துணையில்லை. |

| | |
|---|---|
| **265.** கழித்திலேன் காம வெந்நோய்<br>காதன்மை யென்னும் பாசம்<br>ஒழித்திலே னூன்க ணோக்கி<br>யுணர்வெனு மிமைதி றந்து<br>விழித்திலேன் வெளிறு தோன்ற<br>வினையெனுஞ் சரக்குக் கொண்டேன்<br>அழித்திலே னயர்த்துப் போனே<br>னதிகைவீ ரட்ட னீரே. 7 | அதிகைப் பெருமானே! என்னிடத்திலுள்ள ஆசாபாசம், காமம் என்ற கொடிய நோய் நீங்கப் பெற்றிலேனாய் ஆசை என்னும் பற்றினை விடுத்திலேனாய், உடலுயிர் வாழ்க்கையையே நோக்குபவனாய் இருத்தலால், அதற்குக் காரணமாகிய ஆணவ மறைப்பு விலக, விழிக்கும் மெய்யுணர்வாகிய விழி விழிக்கும் நிலையைப் பெற்றிலேன். அதற்குத் தடையாகிய வினை என்னும் பண்டத்தையும் நிரம்பக் கொண்டுள்ளேன். அதே வேளை, இவற்றின் விருத்திக்கு ஊக்கும் இழிதகவுடையோர் சார்பை விலக்கிக் கொள்ளவும் மறந்து போனேன். நான் என்ன செய்வேன் என்பது குறிப்பு. |
| **266.** மன்றத்துப் புன்னை போல<br>மரம்படு துயர மெய்தி<br>ஒன்றினா லுணர மாட்டே<br>னுன்னையுள் வைக்க மாட்டேன்<br>கன்றிய காலன் வந்து<br>கருக்குழி விழுப்ப தற்கே<br>அன்றினா னலமந் திட்டே<br>னதிகைவீ ரட்ட னீரே. 8 | ஊர்ப் பொதுமன்றத்தில் நிற்கும் புன்னை பலராலும் கல்லெறியப்பட்டும் ஏறி அலைக்கப்பட்டும் சதா வருந்துவதுபோல ஐம்பொறிகளால் சதா அலைக்கப்பட்டும் வருந்துவதன்றி ஒருவகையிலும் உண்மையை உணரமாட்டேன். அதை உணர்விக்கவல்ல உன்னையும் உளத்தில் நிலையாக வைக்கமாட்டேன். இந்நிலையில், சினம்மிக்க எமன் வந்து என்னை மீளவும் பிறப்பில் தள்ளுதற்கு அணுகிக் கொண்டுள்ளான். அது கண்டு நான் சுழன்று போனேன் அதிகை வீரட்டத்துப் பெருமானே. |
| **267.** பிணிவிடா வாக்கை பெற்றேன்<br>பெற்றமொன் றேறு வானே<br>பணிவிடா விடும்பை யென்னும்<br>பாசனத் தழுந்து கின்றேன்<br>துணிவிலேன் றூய னல்லேன்<br>றூமலர்ப் பாதங் காண்பான்<br>அணியனா யறிய மாட்டே<br>னதிகைவீ ரட்ட னீரே. 9<br><br>பாசனம் – பாத்திரம், சுற்றம் | காளையை ஊர்பவனே! அதிகைப் பெருமானே! நோய்கள் விடுத்து நீங்காத இம்மனித உடலைப் பெற்றிருக்கும் அடியேன். செயற்படா தொழியாத துன்பம் நல்கும் நல்வினை தீவினை யாகிய சுற்றத் தொடர்பை நெருக்கமாகக் கொண்டு, அவற்றை அடியோடு நீக்குவதற்குத் தேவையான தூய்மையும் மனஉறுதியும் இல்லாதேனாய், அத்தூய்மை துணிவு என்பனவற்றை நல்கும் உன்னுடைய தூய மலர் போன்ற திருவடிகளைக் காணும் வகையில் உன்னை அறியமாட்டாதவனாய் உள்ளேன். |

268. திருவினாள் கொழுந னாருந்
திசைமுக முடைய கோவும்
இருவரு மெழுந்தும் வீழ்ந்து
மிணையடி காண மாட்டா
ஒருவனே யெம்பி ரானே
யுன்றிருப் பாதங் காண்பான்
அருவனே யருள வேண்டு
மதிகைவீ ரட்ட னீரே. 10

அதிகை வீரட்டனே! வடிவம் புலப்படாது இருப்பவனே! திருமகள் கேள்வனாய திருமாலும், நான்கு திசைகளிலும் நான்கு முகங்களை உடைய பிரமனும் ஆகிய இருவரும் கீழ்நோக்கித் தோண்டியும் மேல்நோக்கிப் பறந்தும், திருவடிகளையோ உன் உச்சியையோ காண இயலாத ஒப்பற்ற பெருமானாகிய உன் திருப்பாதங்களை அடியேன் காணுமாறு அருள் செய்யவேண்டும்.

## 27. திருவதிகைவீரட்டானம்

**திருநேரிசை** **பதிக எண் : 27**

269. மடக்கினார் புலியின் றோலை
மாமணி நாகங் கச்சா
முடக்கினார் முகிழ்வெண் டிங்கள்
மொய்சடைக் கற்றை தன்மேல்
தொடக்கினார் தொண்டைச் செவ்வாய்த்
துடியிடைப் பரவை யல்குல்
அடக்கினார் கெடில வேலி
யதிகை வீரட்ட னாரே. 1

கெடில நதியை ஒருபுறம் எல்லையாக உடைய அதிகை வீரட்டனார் புலியின்தோலை உடையாக உடம்பைச் சுற்றி இடையில் உடுத்துப் பெரிய முடிமணியை உடைய பாம்பினை அதன் மீது கச்சாக இறுக்கிக் கட்டிப் பிறையைச் செறிந்த சடைமீது செருகித் தொண்டைக்கனி போன்ற சிவந்த வாயையும் துடி போன்ற இடையையும் கடல் போன்ற அல்குலையும் உடைய பார்வதியைத் தம் உடம்பின் ஒருபாகமாக அடக்கியவர் ஆவர்.

270. சூடினார் கங்கை யாளைச்
சூடிய துழனி கேட்டங்
கூடினா ணங்கை யாளு
மூடலை யொழிக்க வேண்டிப்
பாடினார் சாம வேதம்
**பாடிய பாணி யாலே**
ஆடினார் கெடில வேலி
யதிகைவீ ரட்ட னாரே. 2

கூத்துப்பாட்டு. இப்பாட்டு அவரது கூத்தை ஒரு நாடகம் போல அலங்கரித்துக் கூறுவது.

கங்கையாளை எம் பெருமான் சடையில் சூடினாராக அவ்வோசை கேட்டுப் பார்வதி ஊடினாளாக அவ்வூடலைப் போக்க வேண்டிக் கெடிலவேலி அதிகை வீரட்டனாராகிய பெருமானார் சாமவேதம் பாடியவராய் அப்பாடலின் தாளத்திற்கு ஏற்ப ஆடியவராவர்.

271. கொம்பினார் குழைத்த வேனற்
கோமகன் கோல நீர்மை
நம்பினார் காண லாகா
வகையதோர் நடலை செய்தார்
வெம்பினார் மதில்கண் மூன்றும்
வில்லிடை யெரித்து வீழ்த்த
அம்பினார் கெடில வேலி
யதிகைவீ ரட்ட னாரே. 3

மரக்கிளைகள் தளிர்த்த வேனிற் காலத்திற்கு உரிய அரசனாகிய மன்மதனை விடுத்த மால், அயன், இந்திரன் முதலோர் அவன் உருவினை மீண்டும் காண முடியாத வகையில் அவன் உடலைத் தீவிழித்து எரித்து வருத்தினார். அச்செயல் செய்த கெடில வேலி அதிகை வீரட்டனார் பகைவர்களுடைய மும்மதில் களையும் வில்லிடைக்கோத்து எரித்து அழித்த அம்பினை உடையவராவர்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **272.** மறிபடக் கிடந்த கையர்<br>வளரிள மங்கை பாகம்<br>செறிபடக் கிடந்த செக்கர்ச்<br>செழுமதிக் கொழுந்து சூடிப்<br>பொறிபடக் கிடந்த நாகம்<br>புகையுமிழ்ந் தழல வீக்கிக்<br>கிறிபட நடப்பர் போலுங்<br>கெடிலவீ ரட்ட னாரே. 4 | கெடில வீரட்டனார் கையில் மான் குட்டியை ஏந்தி, அழகு வளரும் இளையளாகிய பார்வதி பாகராய்ச் செறிந்த செஞ்சடையில் பிறையைச் சூடி, புள்ளிகளை உடைய பாம்பு புகையைக் கக்கி வெகுளுமாறு அதனை இடையில் இறுகக்கட்டி, அடியார்களுடைய உள்ளத்திலே பொய் உணர்வு அழியும்படியாக உலவி வருகிறார். |
| **273.** நரிவரால் கவ்வச் சென்று<br>நற்றசை யிழந்த தொத்த<br>தெரிவரான் மால்கொள் சிந்தை<br>தீர்ப்பதோர் சிந்தை செய்வார்<br>வரிவரா லுகளுந் தெண்ணீர்க்<br>கழனிசூழ் பழன வேலி<br>அரிவரால் வயல்கள் சூழ்ந்த<br>வதிகைவீ ரட்ட னாரே. 5<br><br>அதிகை வீரட்டனாரே என்பது பதிக மகுடம். படர்க்கையில் பாடுகிறார்.<br><br>வரால் கவ்வல் – பாசப்பற்று; நற்றசை – உள்ளுயிர்க்குயிராய்த் திகழும் சிவம். | கோடுகளை உடைய வரால் மீன்கள் தாவும் தெளிந்த நீரை உடைய வயல்கள் சூழ்ந்த மருத நிலத்தை நாற்புறமும் எல்லையாகக் கொண்டு நெல்லரியும் உழவரால் சூழப்பட்ட வயல்களை உடைத்தாய அதிகையின் வீரட்டனார், நரி வரால் மீனைக் கவரச் சென்று தன் வாயில் முன்பு பற்றி இருந்த தசைத் துண்டத்தையும் இழந்தது போல், கிட்டாத ஒன்றை நினைத்துக் கிட்டியதனையும் இழக்கும் இயல்பினதாகிய மனித வாழ்க்கையை ஆராயும் சான்றோர்களுடைய உள்ளத்தில் ஏற்படும் மயக்கத்தை நீக்கும் உபாயத்தைத் திருவுளம் கொண்டு அருளுவார். |
| **274.** புள்ளலைத் துண்ட வோட்டி<br>லுண்டுபோய்ப் பலாசங் கொம்பின்<br>சுள்ளலைச் சுடலை வெண்ணீ<br>றணிந்தவர் மணிவெள் ளேற்றுத்<br>துள்ளலைப் பாகன் றன்னைத்<br>தொடர்ந்திங்கே கிடக்கின் றேனை<br>அள்ளலைக் கடப்பித் தாளு<br>மதிகைவீ ரட்ட னாரே. 6 | புலால் நாற்றத்தால் நெருங்கிவரும் பருந்துகளை விரட்டி மண்டையோட்டிற் பிச்சை எடுத்து உண்டு சென்று, வெப்பத்தாற் முள் முருக்க மரங்களின் சிறுகிளைகள் பட்டுப் போகும் சுடுகாட்டின் வெள்ளிய சாம்பலைப் பூசியவராய், அழகிய வெள்ளிய காளைமீது துள்ளி ஏறி அதனைச் செலுத்துபவராய தம்மை, இவ்வுலகிலே பல காலமாகத் தொடர்ந்து பற்றிக் கிடக்கும் அடியேனைப் பிறவிப் பிணியாகிய சேற்றைத் தாண்டச் செய்து அடிமை கொள்பவராய் உள்ளவர் அதிகை வீரட்டனாரே. |
| **275.** நீறிட்ட நுதலர் வேலை<br>நீலஞ்சேர் கண்டர் மாதர்<br>கூறிட்ட மெய்ய ராகிக்<br>கூறினா ராறு நான்கும்<br>கீறிட்ட திங்கள் சூடிக்<br>கிளர்தரு சடையி னுள்ளால்<br>ஆறிட்டு முடிப்பர் போலு<br>மதிகைவீ ரட்ட னாரே. 7 | அதிகை வீரட்டனார் நெற்றியில் நீறுபூசி, நீலகண்டராய், பார்வதிபாகராய், நான்கு வேதங்களும் ஆறு சாத்திரங்களும் உரைப்பவராய், பிறையைச் சூடி, மேல்நோக்கி உயரும் சடையிலே கங்கையை அடக்கிச் சடையை முடிப்பவர் ஆவார். |

276. காணிலார் கருத்தில் வாரார்
திருத்தலார் பொருத்த லாகார்
ஏணிலா ரிறப்பு மில்லார்
பிறப்பிலார் துறக்க லாகார்
**நாணிலா ரைவ ரோடு**
மிட்டெனை விரவி வைத்தார்
ஆணலார் பெண்ணு மல்லா
ரதிகைவீ ரட்ட னாரே. 8

நாணிலார் ஐவர் – ஐம்பொறிகள் தீமை செய்யக் கூசாமையின் நாணிலார் என்றார். இப்பாட்டு 1. இறைவன் உயிர்களுடன் பிரியாது உடனிருக்குந் தன்மை 2. ஆயினும் காணலாகாத் தன்மை 3. உயிர்களுக்குத் தனுவைக் கொடுத்து வினைகளை நுகரச் செய்து கழிப்பிக்கும் அருந்தன்மை முதலிய இறைவரது உபகாரமும் இலக்கணமும் கூறிற்று.

ஆணும் பெண்ணும் அல்லாதாராகிய அதிகை வீரட்டனார் பிறர் காட்சிக்கு அரியராய், கருத்திற்கும் எட்டாதவராய்; திருத்துவதற்கு இயலாதவராய், தம்மோடு பொருந்தச் செய்வதற்கும் இயலாதவராய், இந்நிலை என்று குறிப்பிடத்தக்க எந்த நிலையும் இல்லாதவராய், இறப்பும் பிறப்பும் அற்றவராய், இவர் நமக்கு உற்றவர் அல்லர் என்று துறக்க முடியாதவராய், உலகியலுக்கு மாறுபட்ட தம் நிலைகளைக் குறித்துச் சிறிதும் நாணுதல் இல்லாதவராய், ஐம்பொறிகளோடு கலந்து தடுமாறுமாறு அடியேனை இவ்வுலகில் தங்க வைத்துள்ளார்.

277. தீர்த்தமா மலையை நோக்கிச்
செருவலி யரக்கன் சென்று
பேர்த்தலும் பேதை யஞ்சப்
பெருவிர லதனை யூன்றிச்
சீர்த்தமா முடிகள் பத்துஞ்
சிதறுவித் தவனை யன்று
ஆர்த்தவா யலற வைத்தா
ரதிகைவீ ரட்ட னாரே. 9

x x x x x x x x 10

அதிகை வீரட்டனார், தூயதான கயிலைமலையை நோக்கி வந்து போரிடும் வலிமையை உடைய இராவணன் அதனைப் பெயர்த்த அளவில் பார்வதி அஞ்சத் தம் கால்விரலை அழுத்தி ஊன்றிச் சிறப்புடைய அவனுடைய தலைகள் பத்தும் சிதறச் செய்து, ஒரு கணத்தில், மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்த அவன் வாய்கள் துயரத்தால் கதறுமாறு செய்தவராவர்.

## 28. திருவதிகைவீரட்டானம்

**திருநேரிசை** **பதிக எண் : 28**

278. முன்பெலா மிளைய காலம்
மூர்த்தியை நினையா தோடிக்
கண்கண விருமி நாளுங்
கருத்தழிந் தருத்த மின்றிப்
பின்பக லுணங்க லட்டும்
பேதைமார் போன்றே னுள்ளம்
அன்பனாய் வாழ மாட்டேன்
அதிகைவீ ரட்ட னீரே. 1

இது நாயனார் சமணத்தினின்றும் சைவம் புகுந்த போது வயது முதிர்ந்திருந்த நிலையைக் குறிப்பால் உணர்த்தியது.

அதிகை பெருமானாரே, உள்ளத்திலே உமக்கு அன்பனாய் வாழமாட்டேனாய், அடியேனுடைய இளமைக்காலமான அம்முற்பட்ட காலமெல்லாம் உம் திருவடிவைத் தியானம் செய்யாமல் அலைந்து, மூப்பு நிலையில் கணீர் என்ற ஓசை உண்டாகுமாறு இருமிக் கருதற்பாலதாகிய சிவ சிந்தனையே இல்லாது, பயனுள்ள செயல்கள் செய்யாமல், உணவு வேளைக்கு உதவுமாறு முற்பகலில் சோறு வடிக்காமல் காலம் கடத்தி அகாலமான பிற்பகலில் உண்டற்கிதமில்லாத வற்றை உலையிலிட்டு சமைக்கவும் இல்லக் கிளத்தியர் போலாகின்றேன். உளமார்ந்த மெய்யன்பினால் வாழ இயலாதவனாகின்றேன்.

| | |
|---|---|
| 279. கறைப்பெருங் கண்டத் தானே<br>காய்கதிர் நமனை யஞ்சி<br>நிறைப்பெருங் கடலுங் கண்டே<br>னீள்வரை யுச்சி கண்டேன்<br>பிறைப்பெருஞ் சென்னி யானை<br>பிஞ்ஞகா விவை யனைத்தும்<br>அறுப்பதோ ருபாயங் காணேன்<br>அதிகைவீ ரட்ட னீரே. 2 | அதிகைப் பெருமானாரே! பெரிய நீலகண்டரே! பிறைசூடி, தலைக்கோலம் அணிந்தவரே! உயிர்களைக் கோபித்துக் கவரும் காலனுக்குப் பயந்து கடல்நீரில் தீர்த்தமாடியும் நீண்ட மலை உச்சியை அடைந்து அங்குத் தவம் செய்தும் பிறப்பு, பிறப்பச்சம் என்ற இவற்றை நீக்கிக் கொள்வதற்குரிய வழியினை அறிந்தேன் அல்லேன். |
| 280. நாதனா ரென்ன நாளு<br>நடுங்கின ராகித் தங்கள்<br>ஏதங்க ளறிய மாட்டா<br>ரிணையடி தொழுதோ மென்பார்<br>ஆதனா னவனென் றெள்கி<br>யதிகைவீ ரட்ட னேநின்<br>பாதநான் பரவா துய்க்கும்<br>பழவினைப் பரிசி லேனே. 3 | சான்றோர்கள் யாரேனும் தம்மைத் தலைவர் என்று குறிப்பிட்டால் அதைக் கேட்டு எம்பெருமானாருடைய அடியவராகிய தமக்கு அடியார் என்ற பெயரைத் தவிரத் தலைவர் என்ற பெயர் ஏலாது என்று நடுங்கித் தம்மைத் தலைவராகக் கருதும் தவறுகளைச் செய்ய அறியாதவராய் யாங்கள் அடியவர்க்கு அடியாராய் உங்கள் திருவடிகளை வழிபடுகிறோம் என்று பதில் கூறுவர். ஆனால் அறிவிலியான யானோ என்னைத் தலைவன் என்று நினைத்து உம்மை இகழ்ந்து அதிகை வீரட்டராகிய உம்முடைய திருவடிகளை வழிபடாது உலகியல் தீமைகளிலேயே அடியேனைச் செலுத்தும் பழந் தீவினையாகிய பரிசிலை உடையேன். |
| 281. சுடலைசேர் சுண்ண மெய்யர்<br>சுரும்புண விரிந்த கொன்றைப்<br>படலைசே ரலங்கன் மார்பர்<br>பழனஞ்சேர் கழனித் தெங்கின்<br>மடலைநீர் கிழிய வோடி<br>யதனிடை மணிகள் சிந்தும்<br>கெடிலவீ ரட்ட மேய<br>கிளர்சடை முடிய னாரே. 4 | மருத நிலத்தைச் சார்ந்த வயல்களுக்கு அருகே வளர்ந்த தென்னை மட்டைகள் பிளக்குமாறு மோதிப் பரவி அவற்றின் மேல் இரத்தினங்களைச் சிதறுகின்ற கெடில நதிக் கரையிலமைந்த அதிகை வீரட்டத்தில் விரும்பி உறையும் உயர் சடைமுடிப் பெருமான் சுடுகாட்டுச் சாம்பலைப் பூசிய உடம்பினராய், வண்டுகள் மொய்க்குமாறு இதழ்கள் விரிந்த கொன்றைப்பூ மாலை சேர்ந்த மார்பினராய் உள்ளார். |

282. மந்திர முள்ள தாக
மறிகட லெழு நெய்யாக
இந்திரன் வேள்வித் தீயி
லெழுந்ததோர் கொழுந்தின் வண்ணம்
சிந்திர மாகநோக்கித்
தெருட்டுவார் தெருட்டவந்து
கந்திர முரலுஞ்சோலைக்
கானலங் கெடிலத்தாரே. 5

மந்திர மலையாகிய மந்திரத்தை உள்ளமைத்துக் கொண்டு கடலையே நெய்யாகக் கொண்டு இந்திரன் செய்த பாற்கடல் கடையும் வேள்வித் தீயின் கொழுந்தாக வெளிப்பட்ட விடத்தின் நீலநிறத்தைத் தம்மை நீலகண்டர் ஆக்கும் சித்திரத்திற்கு உரிய பொருளாகக் கருதித் தம்மால் அறிவுறுத்தப்படும் அடியவர்களுக்கு அறிவிப்பதற்காகப் பெருமான் இந்நிலவுலகிற்கு வந்து மேகங்கள் ஒலிக்கும் சோலைகளை உடைய நறுமணம் கமழும் கெடில நதிக்கரையினதாக அதிகை வீரட்டத்து உள்ளார்.

283. மைஞ்ஞல மனைய கண்ணாள்
பங்கன்மா மலையை யோடி
மெய்ஞ்ஞரம் புதிரம் பில்க
விசைதணிந் தரக்கன் வீழ்ந்து
கைஞ்ஞரம் பெழுவிக் கொண்டு
காதலா லினிது சொன்ன
கிஞ்ஞரங் கேட் டுகந்தார்
கெடிலவீ ரட்ட னாரே. 6

மெய்ஞ்ஞரம்பு, கைஞ்ஞரம்பு என்பன மெய்ந்நரம்பு, கைந்நரம்பு என்பவற்றின் போலியாகும்.

அதிகை வீரட்டனார் மைக்கு அழகு தரும், தமக்குத் தாமே நிகரான கண்களை உடைய பார்வதிபாகராகிய தமது கயிலைமலையை நோக்கி ஓடி அதனைப் பெயர்க்க முற்பட்டு உடம்பிலுள்ள நரம்புகளும் குருதியும் சிந்த, விழுந்து நசுங்கி வேகம் தணிந்து இராவணன் கை நரம்புகளையே வீணையின் நரம்புகளாக அமைத்து அவற்றை ஒலித்துக்கொண்டு அன்பூர இனிமையாகப் பாடிய பாடலைக் கேட்டு உகந்து அவனுக்கு அருளியவர் ஆவார்.

x x x x x x x 7, 8, 9, 10

## 29. திருச்செம்பொன்பள்ளி

திருநேரிசை பதிக எண் : 29

284. ஊனினுள் ளுயிரை வாட்டி
உணர்வினார்க் கெளிய ராகி
வானினுள் வான வர்க்கும்
அறியலா காத வஞ்சர்
நானெனிற் றானே யென்னும்
ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்
தேனுமின் னமுது மானார்
திருச்செம்பொன் பள்ளி யாரே. 1

அடங்கினார்க்கு – எளியர்
ஆணவத்தில் நிமிர்ந்தார்க்கு – அரியர்

திருச்செம்பொன்பள்ளி எம்பெருமான் இவ்வுடம்பினுள் உள்ள உயிரைத் தவம் விரதம் முதலியவற்றால் வாட்டித் தூய்மையுடையதாக்கி மெய்யுணர்வு பெற்ற பெரியவர்களுக்கு எளியராய், உயர்ந்த உலகிலுள்ள தேவர்களும் அறியமுடியாத கள்ளத்தை உடையவராய், சிவபோதத்தினராய் இருக்கும் சிவஞானி களுக்கு அமுதமும், சிவனடியார்களின் நெஞ்சில் தேனும் போல இனிப்பவராய் உள்ளார்.

| | |
|---|---|
| **285.** நொய்யவர் விழுமி யாரு<br>நூலினுண் ணெறியைக் காட்டும்<br>மெய்யவர் பொய்யு மில்லார்<br>உடலெனு மிடிஞ்சி றன்னில்<br>நெய்யமர் திரியு மாகி<br>நெஞ்சத்துள் விளக்கு மாகிச்<br>செய்யவர் கரிய கண்டர்<br>**திருச்செம்பொன் பள்ளி யாரே.** 2<br>பதிக மகுடம் – திருசெம்பொன் பள்ளியாரே.<br>இடிந்தஇல் – இடிந்தவில் – மரூஉ இடிஞ்சில்<br>குற்றிற்சுவர் – மரூஉ குட்டிச்சுவர் | நீலகண்டராய திருச்செம்பொன்பள்ளியார் எளியராய், சீர்மை உடையவராய், வேதநெறியைக் காட்டும் உண்மை வடிவினராய், பொய்யிலியாய், உடல் என்னும் நிலையில்லா வீட்டிலே நெய்யில் தோய்த்த திரியாகவும் நெஞ்சில் ஒளி தருகின்ற விளக்காகவும் உள்ள செந்நிறத்தவராவர். |
| **286.** வெள்ளியர் கரியர் செய்யர்<br>விண்ணவ ரவர்கள் நெஞ்சுள்<br>ஒள்ளிய ரூழி யூழி<br>யுலகம தேத்த நின்ற<br>பள்ளியர் நெஞ்சத் துள்ளார்<br>பஞ்சமம் பாடி யாடும்<br>தெள்ளியார் கள்ளந் தீர்ப்பார்<br>திருச்செம்பொன் பள்ளி யாரே. 3 | திருச்செம்பொன் பள்ளியார் வெண்மை, செம்மை, கருமை என்ற நிறத்தவராய், தேவர்கள் உள்ளத்திலே ஒளி தருபவராய், ஊழிதோறும் உலகங்கள் துதிக்கும் படியான பாற்கடலில் பள்ளி கொண்ட திருமாலுடைய நெஞ்சத்தில் உள்ளவராய், பஞ்சமம் என்ற பண்ணினைப் பாடி ஆடும் ஞானிகளுடைய உள்ளிருளைப் போக்குபவராய் உள்ளார். |
| **287.** தந்தையுந் தாயு மாகித்<br>தானவன் ஞான மூர்த்தி<br>முந்திய தேவர் கூடி<br>முறைமுறை யிருக்குச் சொல்லி<br>எந்தைநீ சரண மென்றங்<br>கிமையவர் பரவி யேத்தச்<br>சிந்தையுட் சிவம தானார்<br>திருச்செம்பொன் பள்ளி யாரே. 4 | திருச்செம்பொன்பள்ளியார் தந்தையாராய்த் தாயாராய், எல்லோருக்கும் கொடை வழங்குபவராய், ஞானவடிவினராய், முற்பட்ட தேவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து முறைப்படி வேதங்களை ஓதி எங்கள் தந்தையே! நீயே அடியேங்களுக்கு அடைக்கலம் நல்குவை' என்று முன்நின்று வழிபட்டுத் துதிக்க, அவர்கள் உள்ளத்துள்ளே மங்கலமூர்த்தியாக இருப்பவராவர். |
| **288.** ஆறுடைச் சடையர் போலும்<br>அன்பருக் கன்பர் போலும்<br>கூறுடை மெய்யர் போலும்<br>கோளர வரையர் போலும்<br>நீறுடை யழகர் போலும்<br>நெய்தலே கமழு நீர்மைச்<br>சேறுடைக் கமல வேலித்<br>திருச்செம்பொன் பள்ளி யாரே. 5 | நெய்தல் பூக்கள் மணம் கமழும் நீர்வளம் உடையதாய்ச் சேற்றிலே மணம் பூக்கும் வயல்களை நாற்புறமும் எல்லையாக உடைய திருச்செம்பொன்பள்ளியார் கங்கை சூடிய சடையராய்த் தம் அன்பர்களிடத்துத் தாமும் அன்பு செய்பவராய், பார்வதிபாகராய், கொடிய பாம்பினை இறுகக் கட்டிய இடையினராய்த் திருநீறணிந்த அழகருமாவார். |

**289.** ஞாலமு மறிய வேண்டில்
நன்றென வாழ லுற்றீர்
காலமுங் கழிய லான
கள்ளத்தை யொழிய கில்லீர்
கோலமும் வேண்டா வார்வச்
செற்றங்கள் குரோத நீக்கில்
சீலமுந் நோன்பு மாவார்
திருச்செம்பொன் பள்ளி யாரே. **6**

உலகத்தார்க்கு ஈது ஓர் உபதேசம். நாலம் (தொங்குவது) என்பதன் மரூஉ ஞாலம் – உலகம். இவ்வாறு தொங்குவதால்தான் இவ்வளவு பெரிய பூலோக உருண்டைத் தன்னைத் தானே சுற்றிக் கொண்டு சூரியனையும் சுற்றிவருகிறது. வானிலே ஒவ்வொரு உலகும் இவ்வாறுதான் உலவிக் கொண்டிருக்கின்றன.

மேம்பட்டது என்று சொல்லி உலகியலில் திளைத்து வாழும் உலகத்தவராகிய நீங்கள் வீணாகக் கழிகின்ற உங்கள் வஞ்சக வாழ்க்கையை விடாது மேற்கொண்டுள்ளீர். நீங்கள் திருச்செம்பொன் பள்ளியாரை அறிய விரும்புவீராயின், உங்கள் போலி அடியவர் வேடத்தையும் காமக் குரோத கோபாதிகளையும் நீங்கள் போக்கி விட்டால் அவர் உங்களுக்கு ஒழுக்கமும் தவ விரதமுமாக இருந்து உதவுவார்.

**290.** புரிகாலே நேசஞ் செய்ய
விருந்த**புண் டரீகத் தாரும்**
எரிகாலே மூன்று மாகி
யிமையவர் தொழநின் றாரும்
தெரிகாலே மூன்று சந்தி
தியானித்து வணங்க நின்று
திரிகாலங் கண்ட வெந்தை
திருச்செம்பொன் பள்ளி யாரே. **7**

புரிதல் – இடைவிடாது சொல்லுதல்

திருச்செம்பொன்பள்ளியார் விருப்பம் முற்பட்ட பொழுதே தம்மிடத்தே அன்பு செய்யும் அடியவர் **இதயத் தாமரையில்** இடம் கொண்டிருப் பவராய், தீ, காற்று, நிலம், நீர், ஆகாயம் என்ற ஐம்பூதங்களுமாகித் தேவர்கள் தொழுமாறு இருப்பவராய், காலை, நண்பகல், அந்தி என்று மூன்று வேளைகளிலும் ஆராயப்படும் திருவடிகளை நினைந்து அடியவர் யாவரும் வணங்க, முக்காலங்களிலும் நிலையாக இருப்பவர் ஆவர்.

**291.** காருடைக் கொன்றை மாலை
கதிர்மதி யரவி னோடும்
நீருடைச் சடையுள் வைத்த
நீதியார் நீதி யுள்ளார்
பாரொடு விண்ணு மண்ணும்
பதினெட்டுக் கணங்க ளேத்தச்
சீரொடு பாட லானார்
திருச்செம்பொன் பள்ளி யாரே. **8**

திருச்செம்பொன்பள்ளியார் கார்காலத்தைத் தனக்குப் பூக்கும் காலமாக உடைய கொன்றைப்பூ மாலையை ஒளிவீசும் பிறை, பாம்பு எனும் இவற்றோடு கங்கை தங்கும் சடையில் வைத்தவராய், நீதியே வடிவான வராய்த் தாமும் அந்நீதியையே நடத்துபவராய், பாதலம், தேவருலகம், மண்ணுலகம் என்ற மூன்று உலகங்களும் பதினெட்டுத் தேவகணங்களும் தம்மைத் துதிக்க, சீரோடு கூடிய பாடல் வடிவாய் உள்ளவர்.

292. ஓவாத மறைவல் லானும்
ஓதநீர் வண்ணன் காணா
மூவாத பிறப்பி லாரும்
முனிகளா னார்க ளேத்தும்
பூவான மூன்று முந்நூற்
றறுபது மாகு மெந்தை
தேவாதி தேவ ரென்றுந்
திருச்செம்பொன் பள்ளி யாரே. 9

| | | |
|---|---|---|
| மண்டலங்கள் | – | 3 |
| ஞாயிற்றின் கதிர் | – | 116 |
| மதியின் கலை | – | 136 |
| தீச்சுடர் | – | 108 |
| மொத்தம் | – | 360 என்று சொல்லுவாருமுண்டு |
| 3 x 360 | – | 1080 என்று சொல்லுவாருமுண்டு |

திருச்செம்பொன்பள்ளியார் என்றும் அழிதல் இல்லாத வேதத்தை ஓதிக் கொண்டிருக்கும் பிரமனும், கடல் நிறத்தவனாகிய திருமாலும் காண முடியாதவராய், மூத்தலோ பிறத்தலோ இல்லாதவராய் 1080 மலர்களைக் கொண்டு முனிவர்கள் வழிபடும் எங்கள் தந்தையாராய், என்றும் தேவர்களுக்கு எல்லாம் தேவருமாய் உள்ளார். 21 ஆம் நூற்றாண்டில் சிவபெருமானை அடைய எளிய வழி சிவபூசை தான். மற்ற வழிகள் கடினமானவை. தினமும் 1008 மலர்களுடன் புரிவதை வடநூலர் சகஸ்ரநாம அர்ச்சனை என்பர். அஷ்டோத்திரம் என்பது 108 மலர் அர்ச்சனையாகும். 1080 மிகவும் சிறப்பானது. இந்நூலின் பதிப்பாசிரியர் தன் வாழ்நாளின் பெரும்பாக்கியமென்று 1080 மலர் அர்ச்சனையைத் தினமும் புரிந்து மகிழ்கிறார். நூலைப் படித்தவர்களெல்லாம் அதைப் புரிந்தால் நூலைப் பிரசுரித்ததன் பயன் நிறைவேறும்.

293. அங்கங்க ளாறும் நான்கும்
அந்தணர்க் கருளிச் செய்து
சங்கங்கள் பாட வாடுஞ்
சங்கரன் மலையெ டுத்தான்
அங்கங்க ளுதிர்ந்து சோர
வலறிட வடர்த்து நின்றும்
செங்கண்வெள் ளேற தேறுந்
திருச்செம்பொன் பள்ளி யாரே. 10

சிவந்த கண்களை உடைய திருமாலாகிய வெண்ணிறக் காளையை இவரும் திருச்செம்பொன் பள்ளியார், கயிலையைப் பெயர்த்த இராவணனுடைய உடல் உறுப்புகள் உதிர்ந்து தளர அவன் வாய்விட்டு அலறுமாறு வருத்தி நின்றும் (நின்றவராயினும்) நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் முனிவர்க்கு உபதேசித்துப் பூதகணங்கள் பாடக் கூத்தாடும் ஆனந்த வடிவினராவர்.

## 30. திருக்கழிப்பாலை

### (வைத்த திருப்பதிகம்)

திருநேரிசை — பதிக எண் : 30

294. **நங்கை**யைப் பாகம் வைத்தார்
ஞானத்தை நவில வைத்தார்
அங்கையி லனலும் வைத்தார்
ஆனையி னுரிவை வைத்தார்
தங்கையின் யாழும் வைத்தார்
தாமரை மலரும் வைத்தார்
**கங்கையைச்** சடையுள் வைத்தார்
கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 1

கழிப்பாலையிற் கடற்கரைத் தலைவராக (சேர்ப்பன்) உள்ள பெருமான் பார்வதிபாகராய், சிவஞானத்தை வழங்குமாறு உபதேசிப்பவராய், உள்ளங்கையில் தீயை ஏந்தியவராய், யானைத் தோலைப் போர்த்தவராய், ஒரு கையில் யாழை ஏந்தியவராய், அந்தணர் கோலத்திற்கேற்பத் தாமரைப்பூ அணிந்தவராய், கங்கையைச் சடையில் வைத்தவராய் உள்ளார்.

இறைவனை நவில்வதே ஞானத்தின் குறிக்கோள். நங்கை, கங்கை இருவரையும் உடன் வைத்தவராதலின் என்னையும் உடன் வைப்பர்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **295.** விண்ணினை விரும்ப வைத்தார்<br>வேள்வியை வேட்க வைத்தார்<br>பண்ணினைப் பாட வைத்தார்<br>பத்தர்கள் பயில வைத்தார்<br>மண்ணினைத் தாவ நீண்ட<br>மாலினுக் கருளும் வைத்தார்<br>கண்ணினை நெற்றி வைத்தார்<br>கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 2 | கழிப்பாலைச் சேர்ப்பனார் அடியவர்கள் வீடு பேற்றை விரும்புமாறும், வேள்விகளை நிகழ்த்துமாறும், பண்களைப் பாடுமாறும், திருவடி வழிபாட்டில் பயிற்சி உறுமாறும் செய்தவர். நெற்றியில் கண்ணுடைய அப்பெருமான் உலகங்களை அளக்குமாறு நீண்ட வடிவெடுத்த திருமாலுக்கு அருள்பாலித்தவர். |
| **296.** வாமனை வணங்க வைத்தார்<br>வாயினை வாழ்த்த வைத்தார்<br>சோமனைச் சடைமேல் வைத்தார்<br>சோதியுட் சோதி வைத்தார்<br>ஆமனெய் யாட வைத்தார்<br>அன்பெனும் பாசம் வைத்தார்<br>காமனைக் காய்ந்த கண்ணார்<br>கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 3<br><br>பதிகம் முழுவதும் பலமுறை படிக்க வைத்தார். கழிப்பாலைச் சேர்ப்பனாரே – பதிக மகுடம். | கழிப்பாலைச் சேர்ப்பனார் தம் சத்தியாகிய பெருமாட்டியை எல்லோரும் வணங்குமாறு செய்தவர். எல்லோர்க்கும் வாழ்த்துவதற்காம் வாயை அருளியவர். பிறையைச் சடையில் சூடி அடியார்களுடைய ஆன்மசொரூபமான ஒளியில் தம் ஞான ஒளியை வைத்து, பசு நெய்யால் தம்மை அபிடேகம் செய்யும் வாய்ப்பினை அடியார்க்கு நல்கி, அன்பென்னும் தொடர்பு சாதனத்தையும் ஆக்கி வைத்தார். அத்துடன் மன்மதனை வெகுண்டு சாம்பலாக்கிய நெற்றிக் கண்ணராய் உள்ளார். |
| **297.** அரியன வங்கம் வேத<br>மந்தணர்க் கருளும் வைத்தார்<br>பெரியன புரங்கண் மூன்றும்<br>பேரழ லுண்ண வைத்தார்<br>பரியதீ வண்ண ராகிப்<br>பவளம்போ னிறத்தை வைத்தார்<br>கரியதோர் கண்டம் வைத்தார்<br>கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 4 | அந்தணர்களுக்கு வேத வேதாங்கக் கல்வியும் சீவகாருணியமும் வழங்கிய கழிப்பாலைச் சேர்ப்பனார் பெரிய மும்மதில்களும் நெருப்பு உண்ணச் செய்து, பெரிய தீயைப் போல ஞானஒளி வீசுபவராய், பவளம் போன்ற செந்நிறத்தினராய் நீலகண்டராய் உள்ளார். |
| **298.** கூரிருள் கிழிய நின்ற<br>கொடுமழுக் கையில் வைத்தார்<br>பேரிருள் கழிய மல்கு<br>பிறைபுனற் சடையில் வைத்தார்<br>ஆரிரு ளண்டம் வைத்தார்<br>அறுவகைச் சமயம் வைத்தார்<br>காரிருள் கண்டம் வைத்தார்<br>கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 5<br><br>கூர் – மிக்க, கொடிய<br>பேர் – பெரிய, புறம்<br>ஆர் – நிறைந்த, எல்லாம்<br>கார் – கரிய | கழிப்பாலைச் சேர்ப்பனார் இருட்டை விரட்டும் கொடிய மழுவினைக் கையில் கொண்டு, பெரிய இருள் நீங்கி ஒளி வீசும் பிறையையும் கங்கையையும் சடையில் வைத்து, எல்லா உலகங்களையும் தம் மாயையாகிய இருளுக்குள் வைத்து அறுவகைச் சமயங்களைப் படைத்து, நீலகண்டராய் விளங்குகிறார். |

299. உட்டங்கு சிந்தை வைத்தா
ருள்குவார்க் குள்ளம் வைத்தார்
விட்டங்கு வேள்வி வைத்தார்
வெந்துயர் தீர வைத்தார்
நட்டங்கு நடமும் வைத்தார்
ஞானமு நாவில் வைத்தார்
கட்டங்கந் தோண்மேல் வைத்தார்
கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 6

---

உள்+தங்கு – உட்டங்கு –உள்குதல்–இடைவிடாது தியானித்தல்

விண்+தங்கு – விட்டங்கு –

நள்+தங்கு – நட்டங்கு – நள்ளிருளில் நட்டம்
கட்டங்கம் – மழு

கழிப்பாலைச் சேர்ப்பனார் தம்மையே தியானிப்பவருக்கு அதற்கு ஏற்ற அலைவில்லாத மனத்தை அருளி அதனைத் தாம் உள்ளே தங்கும் இருப்பிடமாக வைத்தவர். தேவர்கள் விரும்பித் தங்கி அவி நுகரும் வேள்வியையும் அவற்றால் நாட்டில் கொடிய துயர் நீங்குதலையும் அமைத்தவர். நள்ளிருளில் கூத்தாடும் பெருமான் ஞானத்துக்கு உரிய நூல்களைப் பயிலும் ஆற்றலை நாவில் அமைத்துக் கொடுத்தவர். தம் தோள்மேல் கட்டங்கப் படையைக் கொண்டுள்ளார்.

300. **ஊனப்பே ரொழிய** வைத்தார்
ஓதியே யுணர வைத்தார்
ஞானப்பேர் நவில வைத்தார்
ஞானமு நடுவும் வைத்தார்
வானப்பே ராறு வைத்தார்
வைகுந்தற் காழி வைத்தார்
கானப்பேர் காதல் வைத்தார்
கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 7

---

நமக்கிடப்பட்டுள்ள பெயர்களெல்லாம் உடலுக்கு இடப்பட்டுள்ள ஊனப் பெயர்கள். தீக்கையின் போது தான் உயிருக்குப் பெயரிடப்படுகிறது. இது தடத்த பெயர். குருவினால் இடப்படுவது. சூக்குமப் பெயர் இறைவனால் இடப்பட்டுள்ளது.

கழிப்பாலைச் சேர்ப்பனார் **புலால் மயமான இவ்வுடல் தொடர்பான பெயர்கள் நீங்கத் தம் அடியவர் என்ற பெயரை வழங்கி,** ஞானநூல்களை ஓதியே ஞானம் பெறும் வழியை வைத்து, ஞான தேகத்திற்குரிய கடவுளை நினைப்பூட்டும் ஞானப்பெயரையே சொல்லி அழைக்குமாறும் செய்து திருவடி ஞானத்தையும் அந்த ஞானம் தங்குதற்குரிய இதயத்தையும் நல்கி, கங்கையைச் சடையில் வைத்து, திருமாலுக்குச் சக்கரம் நல்கித் திருக்கானப்பேர் என்ற திருத்தலத்தைத் தாம் விரும்பி உறையும் இடமாகக் கொண்டுள்ளார்.

ஊனப்பேர் – பேருந்துகளின் வெளியே உள்ள எண்கள். இதை போக்குவரத்து அதிகாரி கொடுப்பார். ஞானப்பேர் – பேருந்துகளின் உள்ளே உள்ள என்ஜின்/இயந்திரத்தின் எண். இதைப் படைத்தவன் கொடுப்பான் எண்ணைப் பதித்திடுவார். உயிர் உடலைவிட்டுப் பிரிந்தபின் நாம் ஒருவரை ஒருவர் அடையாளம் தெரிய வேண்டுமானால் ஞானப்பேர் தெரியவேண்டும் அதைத் தெரிய முயற்சிப்போம். உயிர் பாக்டீரியாவை விடச் சிறியது. அதை ஊனக்கண்ணால் பார்க்க முடியாது. மைக்ராஸ்கோப் எனப்படும் நுண்கருவிக்கும் புலப்படாது. அதிலே பொறிக்கப்பட்டுள்ள அடையாளம் (பெயர், எண்) பார்க்க ஞானக்கண் வேண்டும். அதை அவர்தான் அருள வேண்டும்.

| | |
|---|---|
| **301.** கொங்கினு மரும்பு வைத்தார்<br>கூற்றங்கள் கெடுக்க வைத்தார்<br>சங்கினுண் முத்தம் வைத்தார்<br>சாம்பரும் பூச வைத்தார்<br>அங்கமும் வேதம் வைத்தார்<br>ஆலமு முண்டுவைத்தார்<br>கங்குலும் பகலும் வைத்தார்<br>கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 8 | கழிப்பாலைச் சேர்ப்பனார் அரும்பில் மகரந்தத்தை வைத்தவர். தீயவார்த்தைகள் பேசுதலைப் போக்க திருமுறை ஓதுதலான நல்ல வழியை வைத்தவர். சங்கினுள் முத்துக்களை வைத்தவர். தாம் பூசத் திருநீற்றைப் பொருளாகக் கொண்டவர். உலகம் உய்ய நால்வேதமும் அங்கமும் பரவச் செய்தவர். உலகம் உய்ய விடம் உண்டவர். மகிழ்வாக உறங்கும் இரவையும், செயற்பட்டு உழைக்கப் பகற்பொழுதையும் அமைத்தவர். |
| **302.** சதுர்முகன் றானுமாலுந்<br>தம்மிலே யிகலக் கண்டு<br>எதிர்முக மின்றி நின்ற<br>வெரியுரு வதனை வைத்தார்<br>பிதிர்முகன் காலன்றன்னைக்<br>காறனிற் பிதிரவைத்தார்<br>கதிர்முகஞ் சடையில்வைத்தார்<br>கழிப்பாலைச் சேர்ப்பனாரே. 9 | கழிப்பாலைச் சேர்ப்பனார் பிரமனும் திருமாலும் தம் இருவருள் பரம்பொருள் யாவர் என்று மாறுபடுதலைக் கண்டு, கண்கூடாக ஆதியும் அந்தமும் காணமுடியாத தீத்தம்பத்தைப் படைத்தார். கடுமையான முகத்தை உடைய கூற்றுவனைக் காலினால் சிதறவைத்தார். பிறையைச் சடையில் வைத்தவருமானார். |
| **303.** மாலினா ணங்கை யஞ்ச<br>மதிலிலங் கைக்கு மன்னன்<br>வேலினான் வெகுண்டெ டுக்கக்<br>காண்டலும் வேத நாவன்<br>நூலினா னோக்கி நக்கு<br>நொடிப்பதோ ரளவில் வீழக்<br>காலினா லூன்றி யிட்டார்<br>கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 10 | மதில்களை உடைய இலங்கைக்கு மன்னனாகிய இராவணன் என்ற, வேல் ஏந்திய வீரன் கோபங்கொண்டு கயிலை மலையைப் பெயர்க்க, அதுகண்டு தம்மிடம் பெருவிருப்புடைய பார்வதி அஞ்ச, அதனைக் கண்ட அளவில் வேதங்களை ஓதுபவனும் பூணூல் அணிந்தவனுமாகிய அவ் விராவணனை மனத்தால் நோக்கி, அவன் ஒரு நொடியில் ஆற்றலிழந்து மலையடியில் விழுமாறு, கால் விரலால் அவனை அழுத்தி நசுக்கிவிட்டவர் கழிப்பாலைச் சேர்ப்பனாரே. |

## 31. திருக்கடவூர் வீரட்டம்

காவிரிக்குத் தென்கரையில் 47வது தலம். இறைவர் செய்த வீரங்கள் எட்டனுள் மார்க்கண்டரைக் காக்கும் பொருட்டு கூற்றுவனை உதைத்த வீரம் நிகழ்ந்த இடம்.

கடவூர் – எமவாதனையைக் கடத்தற்குதவும் ஊர்.

கடம் – கலயம், குடம். சுவாமிக்குக் கலயர் என்ற பெயரும் இப்பொருள் பற்றியது. **இராதாந்தர கற்பத்தில்** திருமால் முதலிய தேவர்கள், தூயதான ஒரு இடத்தில் வைத்து உண்ண வேண்டுமென்று கொணர்ந்து இங்கு வைத்த அமுத கடம் அமுதலிங்கமாக உருப்பட்டமையின் சுவாமி அமுதகடேசுவரர் எனவும், இத்தலம் கடபுரி. கடவூர் என்றும் வழங்கப்படுகிறது.

**பாத்தும கல்பத்தில்** சிவபெருமானிடம் சிவஞானம் பெறும் பொருட்டுப் பிரமதேவர் பெற்ற சிவஞான விதையை விதைத்துத் தோன்றிய வில்வமரத்தை உடைமையால் இது வில்வாரணியத் தலம் என்றும் பெயர் பெற்றது.

அகத்தியர் வழிபட்ட பாப விமோசன லிங்கமும்
புலத்தியர் வழிபட்ட புண்ணிய வர்த்தன லிங்கமும் கோயிலில் உள்ளன.

மார்க்கண்டேயர் காசியினின்றும் கங்கையைத் திருக்கடவூர் மயானத்தருகில் உள்ள காசித் தீர்த்தத்திற்குப் பிலத்துவாரத்தின் வழிக் கொணர்ந்து நாடொறும் அத்தீர்த்தத்தினால் அமுதகலயநாதரை மஞ்சனமாட்டி வழிபட்டனர்.

இன்றும் அந்தக் காசிக் கங்கை நீர்தான் சுவாமிக்குச் திருமஞ்சனம். குங்கிலியக் கலய நாயனாரும், காரிநாயனாரும் பேறு பெற்ற தலம். சத்த கன்னியர், வாசுகி, துர்க்கை முதலியோரும் பூசித்து வரம் பெற்றனர்.

திருக்கடவூரும், திருக்கடவூர் மயானமும் 2 கி. மீட்டர் தொலைவில் நேர்கோட்டில் அமைந்துள்ளன.

கடந்த சில ஆண்டுகளாக இத்தலம் மிகவும் பிரசித்தி பெற்று வருகிறது. 60, 75, 80 வயது நிரம்பியவர்கள் தங்களுடைய போனஸ் வாழ்க்கைக்காகக் காலனுக்குப் பயந்து அங்கே சென்று சஷ்டியப்த பூர்த்தி, பீமரதசாந்தி, சதாபிசேகம் முதலியவற்றைப் பெரும் பொருட்செலவில் செய்து கொள்கிறார்கள். மற்ற கோயில்களில் நல்ல முகூர்த்த நாட்களில்தான் கூட்டம் இருக்கும். ஆனால் பிறந்த நட்சத்திரம் என்பதால் இங்கு முப்பது நாளும் முழுநிலவுதான். ஏனென்றால் இது அபிராம பட்டர் தலம். அவரவர் வசதிக்கேற்ப முதல், இரண்டு, மூன்றாம் பிரகாரங்களில் மேற்காண் நிகழ்வுகள் நடத்தப்படுகின்றன. தங்கும் விடுதிகளுடன் கூடிய நிறைய உணவகங்கள் இப்போது வந்துவிட்டன. 20 ஆண்டுகட்கு முன்பு அங்கு இதுபோன்ற வசதிகள் எதுவுமில்லை.

இலட்சக்கணக்கான மக்கள் மாதாந்திர முழு நிலவன்று வலம் வரும் திருவண்ணாமலை கிரிவலம் – கோள்கள் வழிபட்ட சிவத்தலங்களை வழிபட மக்கள் மேற்கொள்ளும் ஆன்மீகப் பயணங்கள் – திருக்கடவூர் போன்ற தலங்களில் நடைபெறும் குறிப்பிட்ட நிகழ்வுகள் என்று சைவம் ஒரு சிறுமறுமலர்ச்சியை 21ஆம் நூற்றாண்டில் கண்டு கொண்டிருக்கிறது என்பதை நாம் பிற்காலத் தலைமுறையினர்க்காகப் பதிவு செய்கிறோம்.

**திருநேரிசை** **பதிக எண் : 31**

304. பொள்ளத்த காய மாயப்
பொருளினைப் போக மாதர்
வெள்ளத்தைக் கழிக்க வேண்டில்
விரும்புமின் விளக்குத் தூபம்
உள்ளத்த திரியொன் றேற்றி
யுணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலுங்
கடவூர்வீ ரட்ட னாரே. 1

துவாரங்கள் பல உடைய உடம்பெனும் மாயப் பண்டங்களாயப் போகந் தரும் சாதனங்களான மாதர் தொகுதியில் ஏற்படும் பற்றை அறவொழிக்க வேண்டில் சிவபெருமானுக்குத் தீபம் ஏற்றித் தூபம் இட்டு வழிபடும் திருத்தொண்டுகளை விரும்பி மேற் கொள்ளுங்கள். உள்ளமாகிய தகழியிலே உயிராகிய திரியை முறுக்கியிட்டு ஞானமாகிய தீபமேற்றிக் கொண்டிருந்து உணருமாற்றால் உணர வல்லவர்களின் கொடுமைகள் அனைத்தையும் போக்குவர் திருக்கடவூர்ப் பெருமான்.

பொள்ளல் – துவாரம், ஓட்டை.

305. மண்ணிடைக் குரம்பை தன்னை
மதித்துநீர் மைய லெய்தில்
விண்ணிடைத் தரும ராசன்
வேண்டினால் விலக்கு வாரார்
பண்ணிடைச் சுவைகள் பாடி
யாடிடும் பத்தர்க் கென்றும்
கண்ணிடை மணியர் போலுங்
கடவூர்வீ ரட்ட னாரே. 2

இந்நிலவுலகிலே உமக்குக் கிட்டியுள்ள மனித உடம்பாகிய கூட்டினைப் பெருமையாக் கருதி நீங்கள் மயக்கந்தரும் இவ்வுலக வாழ்வில் ஈடுபடுவீராயின், யமலோகத்திலுள்ள தருமராசர் உம் உடம்பிலிருந்து உயிரைப் பிரிக்க விரும்பினால் அதனை அப்பொழுது தடுக்க வல்லவர் யாவர் உளார்? பண்களோடு சுவையாக எம்பெருமான் புகழைப் பாடிக் கூத்தாடும் அடியவர்களுக்கெல்லாம் கண்மணியைப் போன்றிருந்து அவர்கள் உய்ய வழிகாட்டுகிறார் கடவூர் வீரட்டனார்.

**306.** பொருந்திய குரம்பை தன்னுட்
பொய்நடை செலுத்து கின்றீர்
ஒருத்தனை யுணர மாட்டீ
ருள்ளத்திற் கொடுமை நீக்கீர்
வருத்தின களிறு தன்னை
வருத்துமா வருத்த வல்லார்
கருத்தினி லிருப்பர் போலுங்
கடவூர்வீ ரட்ட னாரே. 3

உயிரைத் தன்னுள் பொருந்தச் செய்த மனித உடம்பில் இருந்து பொய்யான வாழ்க்கை வாழ்ந்து கொண்டு இருக்கின்றீர். உணர வேண்டிய ஒப்பற்ற கடவூர் வீரட்டராகிய அவரை உணர்ந்து, பெருமானாரை உணராதீராய் மனத்தில் ஏற்பட்டுள்ள தீங்கான எண்ணங்களை நீக்காதீராய் உள்ளீர். தம்மைத் துன்புறுத்தும் ஐம்பொறிகளாகிய களிறுகளைச் செயற்படா தொழியச் செய்யும் வழியிலே முயன்று அவற்றை அடக்கிய ஞானியருடைய கருத்தில் எப்போதும் உள்ளார் கடவூர் வீரட்டனார்.

**307.** பெரும்புலர் காலை மூழ்கிப்
பித்தர்க்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங்
கார்வத்தை யுள்ளே வைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம்
விதியினா லிடவல் லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார்
கடவூர்வீ ரட்ட னாரே. 4

அடியார்கள் பூசனைப் பாட்டாகும்

வைகறை யாமத்தில் நீராடிப் பெருமானிடத்தில் பத்தர்களாகி அரும்புகளையும் மலர்களையும் முறைப்படி பறித்துக் கொண்டு உள்ளத்தில் அன்பை ஆக்கி விருப்பத்தோடு நல்ல விளக்குகளையும் தூபங்களையும் முறைப்படி இட்டு வழிபடவல்ல அடியவர்களுக்குக் கருப்பங்கட்டி போல இனிப்பவராவார் கடவூர் வீரட்டனார்.

**308.** தலக்கமே செய்து வாழ்ந்து
தக்கவா றொன்று மின்றி
விலக்குவா ரிலாமை யாலே
**விளக்கத்திற் கோழி போன்றேன்**
மலக்குவார் மனத்தி னுள்ளே
காலனார் தமர்கள் வந்து
கலக்கநான் கலங்கு கின்றேன்
கடவூர்வீ ரட்ட னீரே. 5

தலக்கம் – இழிசெயல்
விளக்கத்திற் கோழி போன்றேன் – பழமொழி
விளக்கைச் சுடும் பொருள் என்று எண்ணாது உண்ணும்பழம் என்று எண்ணிப்போய் வீழ்ந்து இறப்பது விட்டிற்பூச்சி.
அதுபோல உழன்று இறக்கும் மக்கள்.

கடவூர் வீரட்டனீரே! நாணத்தக்க செயல்களையே செய்து வாழ்நாளைக் கடத்தி, ஏற்ற செயல் எதுவும் செய்யாமல், தவறு செய்வதைத் தடுத்து நல்வழிப்படுத்துவாரும் ஒருவரும் இல்லாமையால், செஞ்சுடர் விளக்கத்தில் தானே கூவித் தானே அடங்கும் கோழியைப் போல உள்ளேன். என் மனத்தினுள்ளே ஐம்பொறிகளும் கலக்கத்தைத் தருகின்றன. யமனுடைய ஏவலர்கள் வந்து கலக்குதலால் யான் யம பயத்தாற் கலங்குகின்றேன்.

**309.** பழியுடை யாக்கை தன்னிற்
பாழுக்கே நீரி றைத்து
வழியிடை வாழ மாட்டேன்
மாயமுந் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை
யைவரா லலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன்
கடவூர்வீ ரட்ட னீரே. 6

கடவூர் வீரட்டனீரே! குறைபாடுகள் யாவும் உள்ள இந்த உடம்பாகிய பயன் அற்ற பாழ் நிலத்தில், பயன்படும் நீரை வீணாகப் பாய்ச்சி, நேரிய வழியில் வாழ மாட்டாதேனாய், இவ்வுலக வஞ்சனையை உள்ளவாறு தெளிந்து உணர மாட்டேனாய், பாழாகும் வாழ்க்கையை உடைய ஐம்பொறிகளால் பலவாறாக வருத்தப்பட்டு உப்பங்கழியில் அங்கும் இங்கும் அலையும் தோணி போல உள்ளேன்.

**310.** மாயத்தை யறிய மாட்டேன்
மையல்கொண் மனத்த னாகிப்
பேயொத்துக் கூகை யானேன்
பிஞ்ஞகா பிறப்பொன் றில்லீ
நேயத்தா னினைய மாட்டே
னீதனேன் நீசனே னான்
காயத்தைக் கழிக்க மாட்டேன்
கடவூர்வீ ரட்ட னீரே. 7

தலைக்கோலம் அணிந்தவனே! பிறப்பில்லாதவனே! கடவூர் வீரட்டனே! பொய்ப்பொருளைப் பொய்ப்பொருள் என்று அறியமாட்டாதேனாய் மயக்கம் பொருந்திய மனத்தேனாகிப் பேயை ஒத்து அலைந்து திரிந்து, கோட்டானைப் போலத் தெளிவின்றிக் கலங்குகிறேன். அன்போடு உன்னைத் தியானிக்க ஆற்றல் இல்லாத, கீழாருள் கீழேனாகிய அடியேன். இவ்வுடம்பை இழப்பதற்கும் மனம் இல்லாதேனாய் உள்ளேன்.

**311.** பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து
பாழுக்கே நீரி றைத்தேன்
உற்றலாற் கயவர் தேறா
ரென்னுங்கட் டுரையோ டொத்தேன்
எற்றுளே னென்செய்கேனா னிடும்பையால்
ஞானமேதும்
கற்றிலேன் களைகண்காணேன் கடவூர்வீ
ரட்டனீரே. 8

---

"பாலனாய்க் கழிந்த நாளும்" என்ற மற்றொரு பதிகப் பாடலிலும் குறிக்கோள் இலாது கெட்டதைப் பதிவு செய்கிறார்.

கடவூர் வீரட்டனீரே! சிவனடிப் பற்றில்லா வாழ்க்கை வாழ்ந்து பயனற்ற பாழ் நிலத்துக்கு நீர் இறைப்பாரைப் போல அறிவு ஆற்றல்களை வீணாக்கிவிட்டேன். அனுபவித்தால்தான் கீழ்மக்களுக்கு உண்மை புலப்படும் என்னும் பொருள் பொதிந்த வார்த்தைக்கு இலக்கியமாக உள்ளேன். யான் எதற்காக உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்! யான் யாது செய்ய வல்லேன்! ஐம்பொறிகள் வசப்பட்டு வருந்தும் துயரத்தாலே ஞானநூல்களை ஞானதேசிகர் பால் உபதேச முறையில் கற்கவில்லை. ஆதலின் அடியேனுக்குப் பற்றுக்கோடாக இருப்பார் ஒருவரையும் காணேன்.

**312.** சேலினே ரனையகண்ணார் திறம்விட்டுச்
சிவனுக்கன்பாய்ப்
பாலுநற் றயிர்நெய்யோடு பலபல
வாட்டியென்றும்
மாலினைத் தவிர நின்ற
மார்க்கண்டற் காக வன்று
காலனை யுதைப்பர் போலுங்
கடவூர்வீ ரட்ட னாரே. 9

கடவூர் வீரட்டனார், சேல்மீன் போன்ற கண்களை உடைய மகளிரிடம் ஈடுபடும் செயலை விடுத்துச் சிவபெருமானுக்கு அன்பனாய் எம்பெருமானை பஞ்சகவ்வியம் முதலியவற்றால் அபிடேகித்து உலக மயக்கத்தைப் போக்கிச் சிவ வழிபாட்டில் நிலைபெற்ற மார்க் கண்டேயனுக்காகக் கூற்றுவனை உதைத்தவர்.

**313.** முந்துரு விருவ ரோடு
மூவரு மாயி னாரும்
இந்திர னோடு தேவ
ரிருடிக ளின்பஞ் செய்ய
வந்திரு பதுக டோளா
லெடுத்தவன் வலியை வாட்டிக்
**கந்திரு வங்கள்** கேட்டார்
கடவூர்வீ ரட்ட னாரே. 10

இப்பதிகத்துள் 1, 2, 3, 4, 9, 10 பாட்டுக்கள் கடவூர் வீரட்டனாரே என்ற படர்க்கை முடிவும் 5, 6, 7, 8 பாட்டுக்கள் முன்னிலை முடிவும் பெற்றுள்ளன. இரண்டு வெவ்வேறு பதிகங்களாக இருந்து, சில பாடல்கள் காணாமல் போய் கிடைத்த பாடல்களை ஒரு பதிகமாகச் செய்திருப்பார்களோ ?

ஐந்தொழிற் கருத்தாக்கள் நிரலில் முற்படக் கூறப்படும் அயன், அரி எனும் இருவருடன் உருத்திரன், மகேசன், சதாசிவன் என்போரும் கூடி அமையும் ஐவராகவும் தாம் ஒருவரே இருந்து கொண்டு, இந்திரனும் தேவர்களும் முனிவர்களும் தம்மை வழிபட்டு இன்பத்தை விளைக்கவும், கயிலையை நெருங்கி வந்து அதனை இருபது தோள்களாலும் பெயர்த்த இராவணனுடைய வலிமையை அழித்து அவன் வாயினால் **இசைப்பாடல்களைக்** கேட்டு அருளினார் கடவூர் வீரட்டனார்.

முன்னிலையில் தம்மைப் பற்றிப் பேசுகிறார். படர்க்கையில் போலும், போல்வர் என்று பொதுவாகப் பேசுகிறார்.

## 32. திருப்பயற்றூர்

**திருநேரிசை** **பதிக எண் : 32**

**314.** உரித்திட்டா ரானை யின்றோ
லுதிரவா றொழுகி யோட
விரித்திட்டா ருமையா ளஞ்சி
விரல்விதிர்த் தலக்க னோக்கித்
தரித்திட்டார் சிறிது போது
தரிக்கில ராகித் தாமுஞ்
சிரித்திட்டா ரெயிறு தோன்றத்
திருப்பயற் றூர னாரே. 1

பயறு, உளுந்து, வரகு, தினை முதலியவற்றின் பெயர்களால் ஆன ஊர்களாக பயற்றூர், உளுந்தூர், வரகூர், தினைநகர் என்பவை உள்ளன.

திருப்பயற்றூர்ப் பெருமானார் குருதிவெள்ளம் ஆறாக ஓட யானையின் தோலை உரித்துத் தம் திருமேனியில் விரித்துப் போர்த்தார். யானைத்தோலை உரித்ததனையும் போர்த்ததனையும் கண்டு பார்வதிதேவியார் அஞ்சித் தம் விரல்களைப் பலகாலும் உதறி வருந்தியதனைக் கண்டு, சிறிதுநேரம் அத்தோலைப் போர்த்தியபின் அவ்வாறு தொடர்ந்து போர்த்தும் ஆற்றல் இல்லாதவரைப் போலக் காட்சி வழங்கித் தாமும் பற்கள் தோன்றச் சிரித்துவிட்டார்.

| | |
|---|---|
| **315.** உவந்திட்டங் குமையோர் பாகம்<br>வைத்தவ ரூழி யூழி<br>பவந்திட்ட பரம னார்தா<br>மலைசிலை நாக மேற்றிக்<br>கவர்ந்திட்ட புரங்கண் மூன்றுங்<br>கனலெரி யாகச் சீறிச்<br>சிவந்திட்ட கண்ணர் போலுந்<br>திருப்பயற் றூர னாரே. **2** | திருப்பயற்றூரனார் பல ஊழிகளையும் படைத்த பெருமானாராய், விரும்பிப் பார்வதிபாகராய், மலையை வில்லாகக் கொண்டு, பாம்பை அதற்கு நாணாகக் கட்டி, உலகங்களில் பலரையும் சென்று பற்றி வருத்திய மும்மதில்களும் தீக்கு இரையாகுமாறு, வெகுண்டு சிவந்த கண்களையுடையவர். |
| **316.** நங்களுக் கருள தென்று<br>நான்மறை யோது வார்கள்<br>தங்களுக் கருளு மெங்க<br>டத்துவன் றழலன் றன்னை<br>எங்களுக் கருள்செ யென்ன<br>நின்றவ னாக மஞ்சுந்<br>திங்களுக் கருளிச் செய்தார்<br>திருப்பயற் றூர னாரே. **3** | திருப்பயற்றூரனார் நமக்கு அருள்கிட்டும் என்று நான்கு வேதங்களையும் ஓதும் அந்தணர்களுக்கு அவ்வாறே அருள் செய்யும் உண்மைப் பொருளாய்த் தீ நிறத்தவராய் எங்களுக்கு அருள் செய்வீராக என்று எல்லா உயிர்களும் வேண்டித் தொழுமாறு அழியாது நின்ற முதல்வராய்ப் பாம்பினை அஞ்சும் பிறைமதிக்கு அஞ்சவேண்டாதவாறு அருள் செய்துள்ளார். |
| **317.** பார்த்தனுக் கருளும் வைத்தார்<br>பாம்பரை யாட வைத்தார்<br>**சாத்தனை** மகனா வைத்தார்<br>**சாமுண்டி** சாம வேதம்<br>கூத்தொடும் பாட வைத்தார்<br>கோளரா மதிய நல்ல<br>தீர்த்தமுஞ் சடையில் வைத்தார்<br>திருப்பயற் றூர னாரே. **4**<br>__________<br>சாத்தன் – ஐயனார் | திருப்பயற்றூரனார் அருச்சுனனுக்கு அருளி, பாம்பினை இடுப்பில் ஆடுமாறு இறுகக்கட்டி, சாத்தனை மகனாக ஏற்றுக் காளிக்காகச் சாமவேதம் பாடியவாறு கூத்து நிகழ்த்திக் கொடிய பாம்பு, பிறை, கங்கை ஆகிய இவற்றைச் சடையில் அணிந்தவராவார். |
| **318.** மூவகை மூவர் போலு<br>முற்றுமா நெற்றிக் கண்ணர்<br>நாவகை நாவர் போலு<br>நான்மறை ஞான மெல்லாம்<br>ஆவகை யாவர் போலு<br>மாதிரை நாளர் போலும்<br>தேவர்க டேவர் போலும்<br>திருப்பயற் றூர னாரே. **5** | திருப்பயற்றூரனார் அருவம் அருவுருவம் உருவம் என்ற மூவகைப்பட்ட இலயசிவம், போகசிவம், அதிகாரசிவம் என்ற மூவராய், நிறைந்த நெற்றிக்கண்ணராய், முறையாக வைகரி முதலான நால்வகை ஒலிகளை வெளிப்படுத்தும் நாவினை உடையவராய், நான்கு வேதங்கள் சிவாகமம் முதலிய ஞானநூல்கள் என்பவற்றின் வடிவினராய், திருவாதிரை நாளை உகப்பவராய்த் தேவர்களுக்குத் தலைவராய் விளங்குபவராவார். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **319.** ஞாயிறாய் நமனு மாகி<br>வருணனாய்ச் சோம னாகித்<br>தீயறா நிருதி வாயுத்<br>திப்பிய சாந்த னாகிப்<br>பேயறாக் காட்டி லாடும்<br>பிஞ்ஞக னெந்தை பெம்மான்<br>தீயறாக் கையர் போலுந்<br>திருப்பயற் றூர னாரே. 6 | திருப்பயற்றூரனார் தீ நீங்காத கையினராய், தீபங்கள் நீங்காத சுடுகாட்டில் கூத்து நிகழ்த்துபவராய், தலைக்கோலம் அணிந்தவராய், நமக்குத் தந்தையாராய், தலைவராய், ஞாயிறு, சந்திரன்களாகவும், யமன், வருணன், அக்கினி, நிருதி, வாயு, மேம்பட்ட சாந்த வடிவினனாகிய ஈசானன் ஆகிய எண்திசை காப்போராகவும் உள்ளார். |
| **320.** ஆவியா யவியு மாகி<br>யருக்கமாய்ப் பெருக்க மாகிப்<br>பாவியர் பாவந் தீர்க்கும்<br>பரமனாய்ப் பிரம னாகிக்<br>காவியங் கண்ண ளாகிக்<br>கடல்வண்ண மாகி நின்ற<br>தேவியைப் பாகம் வைத்தார்<br>திருப்பயற் றூர னாரே. 7 | திருப்பயற்றூரனார் வேள்வித் தீயின் புகையாய், வேள்வியில் தேவருக்கு வழங்கப்படும் அவி உணவாய், நுண்பொருளாய், மிகப்பெரும் பொருளாய், தீவினை செய்தவருடைய தீவினைகளை எல்லாம் போக்கும் பெருமானாய், பிரமனாய், கருங்குவளை போன்ற கண்களை உடையளாகிக் கடல் போன்ற நீலநிறம் உடைய பார்வதி பாகராகவும் உள்ளார். |
| **321.** தந்தையாய்த் தாயு மாகித்<br>தரணியாய்த் தரணியுள் ளார்க்<br>கெந்தையு மென்ன நின்ற<br>வேழுல குடனு மாகி<br>எந்தையெம் பிரானே யென்றென்<br>றுள்குவா ருள்ளத் தென்றும்<br>சிந்தையுஞ் சிவமு மாவார்<br>திருப்பயற் றூர னாரே. 8 | திருப்பயற்றூரனார், தந்தையாராய்த் தாயாராய் உலகங்களாய், உலகில் உள்ளார் அனைவருக்கும் தலைவராய், ஏழு உலகங்களில் உள்ள உயிர்களின் செயற்பாட்டிற்கு உடனாய் நின்று இயக்குபவராய், 'எந்தையே! எம்பெருமானே!' என்று தியானிப்பவர்கள் உள்ளத்திலே சிந்தையும் சிந்திக்கப்பெறும் சிவமுமாகி உள்ளவராவார். |
| **322.** புலன்களைப் போக நீக்கிப்<br>புந்தியை யொருங்க வைத்து<br>இலங்களைப் போக நின்று<br>விரண்டையு நீக்கி யொன்றாய்<br>மலங்களை மாற்ற வல்லார்<br>மனத்தினுட் போக மாகிச்<br>சினங்களைக் களைவர் போலுந்<br>திருப்பயற் றூர னாரே. 9 | திருப்பயற்றூரனார், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புல நுகர்ச்சிகளையும் அடியோடு போக்கி, உள்ளத்தை ஒருவழிப்பட நிலைநிறுத்தி, மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களையும் கடக்க நான், தான் என்ற இரண்டையும் நீக்கி அவனேதானே ஆகிய அந்நெறியாளராய், மாயை, கன்மம் என்ற மலங்களைச் செயற்படாதவாறு செய்ய வல்ல அடியவர் மனத்திலே இன்பவடிவினராய்ச் சினத்தை விளைக்கும் பிறவித் துன்பங்களை நீக்கி நிற்பவராவர். |

323. மூர்த்திதன் மலையின் மீது
போகாதா முனிந்து நோக்கிப்
பார்த்துத்தான் பூமி மேலாற்
பாய்ந்துடன் மலையைப் பற்றி
ஆர்த்திட்டான் முடிகள் பத்து
மடர்த்துநல் லரிவை யஞ்சத்
தேத்தெத்தா வென்னக் கேட்டார்
திருப்பயற் றூர னாரே. 10

திருப்பயற்றூரனார், சிவபெருமானுடைய கயிலை மலையைக் கடந்து புட்பகவிமானம் போகாதாக, அச்செய்தியைச் சொல்லிய தேரோட்டியை வெகுண்டுநோக்கி, மனத்தான் நோக்கிப் பூமியில் தேரினின்றும் குதித்து விரைந்து கயிலைமலையைப் பெயர்க்க முற்பட்டு இராவணன் அதனைப் பெயர்த்து ஆரவாரம் செய்தபோது மலை நடுங்குதல் கண்டு பார்வதி அஞ்சும் அளவில் அவன் தலைகள் பத்தையும் விரலால் நசுக்கிப் பின் பாடிய தேத்தெத்தா என்ற இசையைக் கேட்டு மகிழ்ந்து அவனுக்கு அருள் செய்பவரானார்.

## 33. திருமறைக்காடு



1. மூவராலும் பாடப்பட்ட பெருமையுடையது.
2. வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்டபடி அடைத்தேயிருந்த கதவினைத் திருநாவுக்கரசர் தேவாரம் பாடித் திறப்பித்தனர்.
3. திருஞானசம்பந்தர் தேவாரப்பதிகம் பாடி அடைக்கச் செய்தருளினார்.
4. நம்பியாரூரரும், சேரமான் பெருமாள் நாயனாரும் ஒருங்கே எழுந்தருளித் தரிசனம் செய்தனர்.
5. முசுகுந்தர் தாபித்த விடங்கத் தலங்கள் ஏழனுள் ஒன்று. புவனிவிடங்கர் – கம்சபாதநடனம்.
6. பார்வதியம்மையார் திருமணத்தை அகத்திய முனிவருக்கு காட்டியருளிய பதி. மணவாளக் கோலத்தைத் திருமூலத்தானத்துள் இலிங்க மூர்த்திக்குப் பின்புறம் காணலாம்.
7. மாவலிச் சக்கரவர்த்தி முற்பிறப்பில் எலியாயிருந்து அஃது இங்குத் திருவிளக்கில் நெய்யுண்ண புக்கபோது மூக்கை சுடர்சுட்டிடக் கனன்று தூண்ட, மங்கியிருந்த விளக்கைத் தூண்டிவிட்டது. நினையாமற் செய்ததாயினும் அச்சிவப் புண்ணியப் பயனால் மறுபிறவியில் மூவுலகாளும் மாவலிச்சக்கரவர்த்தியாய்ப் பிறந்தது.
8. வேதங்கள் பூசித்ததால் வேதாரண்யம்.
9. ஆதிராமர் பூசித்ததால் ஆதிசேது என்றும், கோடிக்கரை என்றும் சொல்லப்படும்.
10. திருவிளையாடற் புராண ஆசிரியர் பரஞ்சோதி முனிவர் அவதாரத்தலம்.
11. இத்தலத்துள்ள மணிகர்ணிகை தீர்த்தத்தினுள் மூழ்கிக் கங்கை புனிதமாயினாள்.
12. வெண்காட்டைப் போலவே தீர்த்த விசேடமுள்ள தலம்.
13. அகோர முனிவரும், பரஞ்சோதியாரும் பாடிய தலபுராணங்கள் உள்ளன.

324. இந்திர னோடு தேவ
 ரிருடிக ளேத்து கின்ற
சுந்தர மானார் போலுந்
 துதிக்கலாஞ் சோதி போலும்
சந்திர னோடு கங்கை
 யரவையுஞ் சடையுள் வைத்து
மந்திர மானார் போலு
 மாமறைக் காட னாரே. 1

மேம்பட்ட மறைக்காட்டுப் பெருமானார் இந்திரனோடு தேவர்களும் முனிவர்களும் புகழுகின்ற அழகராய், எல்லோரும் போற்றும் ஞானஒளியினராய்ச் சந்திரன் கங்கை பாம்பு என்பனவற்றைச் சடையில் வைத்தவராய், தம்மைத் தியானிப்பவரைக் காப்பவராய் உள்ளார்.

325. தேயன நாட ராகித்
 தேவர்க டேவர் போலும்
பாயன நாட றுக்கும்
 பத்தர்கள் பணிய வம்மின்
காயன நாடு கண்டங்
 கதனுளார் காள கண்டர்
மாயன நாடர் போலு
 மாமறைக் காட னாரே. 2

தேயனநாடு – தியானிக்கப்படும் பொருளினுடைய உயரிய நாடு. தேசுடைய நாடு.
பாயன நாடு – பரந்த பிறவியாகிய கட்டறுக்கும் பத்தர்கள் வாழும் நாடு.
காயன நாடு – உடலாகிய கோயில்.
மாயன நாடர் – திருமாலது நாடுதலை உடையவர்; மாயோனது நாடாகிய காடு.

தெய்வத் தன்மையே வடிவான அத்தகைய வீட்டுலகத்தை உடைய தேவர்கள் தலைவரான மாமறைக்காடரைப் பலவாகப் பரவியுள்ள உலகப் பற்றுக்களைத் துறக்கும் பக்தர்களே! வழிபட வாருங்கள். நாடுகளையும் கண்டங்களையும் கோபிப்பனவாய பலகூறுகளாகப் பரவிவந்த ஆலகால விடத்தின் கோபத்தை மனத்துள் கொண்டு அதனை விழுங்கிய நீலகண்டராம் பெருமானார், திருமாலால் தேடப் படுபவராவார்.

326. அறுமையிவ் வுலகு தன்னை
 யாமெனக் கருதி நின்று
வெறுமையின் மனைகள் வாழ்ந்து
 வினைகளா னலிவு ணாதே
சிறுமதி யரவு கொன்றை
 திகழ்தரு சடையுள் வைத்து
மறுமையு மிம்மை யாவார்
 மாமறைக் காட னாரே. 3

மாமறைக்காடனாரே – பதிக மகுடம்.
'மா' என்ற ஒரே அடையைப் பதிக முழுவதும் கொடுத்தார்.

மாமறைக் காடனார் அழியும் இயல்பினை உடைய இவ்வுலகை நிலைபெற்றது என்று நினைத்துக் கொண்டு உலக வாழ்க்கை வழி நின்று வீணாக இல்வாழ்க்கை நடத்தி இரு வினைகளால் துன்புறுத்தப்படாத வகையில், பிறை, பாம்பு, கொன்றை இவற்றைச் சடையுள் வைத்த பெருமானாய், தம் அடியவர்களுக்கு மறுமை இன்பமும் இம்மை இன்பமும் வழங்குபவராவார்.

327. கால்கொடுத் திருகை யேற்றிக்
கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற்
சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத் தாவ மைத்தங்
கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார்
மாமறைக் காட னாரே. 4

பாசநீக்கத்தின் பொருட்டு, வினைகளை உயிர்கள் அனுபவித்துக் கழிக்க வேண்டி, இறைவன் செய்யும் மறைப்பும் அருளேயாகும்.
ஆவி வைத்தல் – உடலுக்குள் உயிர் வைத்தல்.

மாமறைக் காடனார், கால்களைக் கொடுத்து கைகளை ஏற்றி எலும்புக் கழிகளை நிரைத்து மேலே புலாலை வேய்ந்து குருதிநீரைக் கலந்து தோலை தட்டிச் சுவரை வைத்து இரண்டு வாயில்களையும் ஏழு சன்னல்களையும் அமைத்து உயிர்க்கு ஒரு வீடுகட்டி அதனுக்கு மால் என்ற பெயர் குறிக்கும் மயக்கம், காற்று, வேட்கை என்பனவற்றைச் செல்வங்களாகக் கொடுத்து குடியேற்றி வைத்துள்ளார்.

328. விண்ணினார் விண்ணின் மிக்கார்
வேதங்கள் விரும்பி யோதப்
பண்ணினார் கின்ன ரங்கள்
பத்தர்கள் பாடி யாடக்
கண்ணினார் கண்ணி னுள்ளே
சோதியாய் நின்ற வெந்தை
மண்ணினார் வலங்கொண் டேத்து
மாமறைக் காட னாரே. 5

நிலவுலக மக்கள் நகரையே வலம் வந்து போற்றும் மகிமையுள்ள திருமறைக்காட்டுப் பெருமான் விண்ணுலகில் உளரேனும் விண்ணினும் மேம்பட்டவர். உலகம் வேதத்தை விரும்பி ஓதப் பண்ணியவர். பத்தர்கள் இசைப் பாடல்களைப் பாடியாடத் திருவுளம் பற்றியவர். அகக்கண்ணினுள்ளே ஞானவொளியை எய்தி திகழும் எம் தலைவரும் அவராவார்.

329. அங்கையு ளனலும் வைத்தார்
**அறுவகைச் சமயம் வைத்தார்**
தங்கையில் வீணை வைத்தார்
தம்மடி பரவ வைத்தார்
திங்களைக் கங்கை யோடு
திகழ்தரு சடையுள் வைத்தார்
மங்கையைப் பாகம் வைத்தார்
மாமறைக் காட னாரே. 6

அறுவகைச் சமயம் வைத்தார் – உயிர்களின் பக்குவ பேதம் நோக்கிப் படிப்படியாகக் கண்டு ஈடேறப் பல சமயங்களையும் வைத்தார்.

மாமறைக் காடனார் பார்வதி பாகராய், உள்ளங் கையில் தீயையும், ஒரு கையில், வீணையையும் வைத்தார். அறுவகைச் சமயங்களைப் படைத்து அடியவர்கள் தம் திருவடிகளை வழிபடுமாறு செய்தவராவார். விளங்குகிற சடையில் சந்திரனைக் கங்கையோடும் வைத்தவர் ஆவார்.

330. கீதராய்க் கீதங் கேட்டுக்
கின்னரந் தன்னை வைத்தார்
வேதராய் வேத மோதி
விளங்கிய சோதி வைத்தார்
ஏதராய் நட்ட மாடி
யிட்டமாய்க் கங்கை யோடு
மாதையோர் பாகம் வைத்தார்
மாமறைக் காட னாரே. 7

மாமறைக் காடனார் பார்வதி பாகராய், கங்கை யிடம் விருப்பம் உடையவராய், இசை வடிவினராய்ப் பாடலைக் கேட்டு மகிழும் இசை உணர்வை உலகுக்கு வழங்கியவராய், வேத வடிவினராய், வேதம் ஓதுதலால் ஏற்படும் ஞான ஒளியை வழங்குபவராய், எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஆதிகாரணராய்க் கூத்து நிகழ்த்துபவராய் உள்ளார்.

**331.** கனத்தினார் வலியு டைய
கடிமதி லரண மூன்றும்
சினத்தினுட் சினமாய் நின்று
தீயெழச் செற்றார் போலும்
தனத்தினைத் தவிர்ந்து நின்று
தம்மடி பரவு வார்க்கு
**மனத்தினுண் மாசு தீர்ப்பார்**
மாமறை காட னாரே. 8

மாமறைக் காடனார் செருக்குற்ற அசுரர்களுடைய மும்மதில்களையும் கோபத்தின் கோபமாய்க் காட்சி வழங்கித் தீக்கு இரையாகுமாறு அழித்தவர்! உலகச் செல்வத்தின் பற்றுக்களை விடுத்துத் தம் திருவடிகளை முன்நின்று போற்றும் அடியார்களின் மனத்திலுள்ள களங்கங்களை எல்லாம் போக்குபவர்.

மனத்தினுண் மாசு தீர்ப்பார் – மனத்தின் அகத்துக் குற்றம். மனத்தின் புறத்துக் குற்றம் என்று இரண்டுமுண்டு. முன்னது அதன் உள்நிகழ்வது – பின்னது அதன் வெளியில் அம்மனத்தால் நிகழ்வது. உள்மாசு கழுவுவது நீறு என்றே உபநிடதம் உரைக்கும். வாய் அழுக்கை – நினது துதி எனும் புனலாலும்
மெய் அழுக்கை – அருச்சனை எனும் புனலாலும் கழுவ முயல்கிறோம். – சிவப்பிரகாசர்

**332.** தேசனைத் தேசன் றன்னைத்
தேவர்கள் போற்றி சைப்பார்
**வாசனை செய்து நின்று**
வைகலும் வணங்கு மின்கள்
காசினைக் கனலை யென்றுங்
கருத்தினில் வைத்த வர்க்கு
மாசினைத் தீர்ப்பர் போலு
மாமறைக் காட னாரே. 9

வாசனை செய்து நின்று – அகப்புறப் பூசனைகளில் இறைவனை நிறுவி வசிக்கச் செய்தல்.

மாமறைக் காடனார் ஒளி வடிவினராய், எல்லா உலகங்களையும் உடையவராய் உள்ளார். அவரை நறுமணப் பொருள்களைக் கொண்டு வழிபடும் அடியார்களே! நாள்தோறும் வணங்குங்கள். பொன்போல ஒளி வீசுபவராய்க் கனல் போல மாசுகளை எரித்து ஒழிப்பவராய் உள்ள அப்பெருமானாரை என்றும் தியானிப்பவருடைய மாசுகளை அவர் அடியோடு போக்குபவராவார்.

**333.** பிணியுடை யாக்கை தன்னைப்
பிறப்பறுத் துய்ய வேண்டில்
பணியுடைத் தொழில்கள் பூண்டு
பத்தர்கள் பற்றி னாலே
துணிவுடை யரக்க னோடி
யெடுத்தலுந் தோகை யஞ்ச
மணிமுடிப் பத்தி றுத்தார்
மாமறைக் காட னாரே. 10

கயிலையைப் பெயர்த்து அப்புறப்படுத்தலாம் என்ற துணிவினை உடைய இராவணன் விரைந்து சென்று கயிலையைப் பெயர்க்க முற்பட்ட அளவில் பார்வதி அஞ்ச, அவன் தலைகள் பத்தினையும் நசுக்கியவர் மாமறைக் காடனார், பலபற்றுக்களையும் உடைய இவ்வுடல் தொடர்புக்கேதுவான பிறவிப் பிணியைப் போக்கி ஒழிக்கக் கருதினால், தம் பணிவைப் புலப்படுத்தலுக்கு உரிய இறை தொண்டினை மேற்கொண்டு அடியவர்கள் விருப்பத்தோடு மாமறைக்காடனாரை வழிபடுங்கள்.

## 34. திருமறைக்காடு

இப்பதிகம் முழுமையும் இராவணன் கயிலை எடுத்த வரலாறு பற்றியே அருளப்பட்டுள்ளது.
( இராவணனின் பாடல்களே முழுப்பதிகம் )

**திருநேரிசை** (இராவணப் பதிகம்) **பதிக எண் : 34**

**334.** தேரையு மேல்க டாவித்
திண்ணமாத் தெழித்து நோக்கி
ஆரையு மேலு ணரா
வாண்மையான் மிக்கான் றன்னைப்
பாரையும் விண்ணு மஞ்சப்
பரந்ததோள் முடிய டர்த்துக்
காரிகை யஞ்ச லென்பார்
கலிமறைக் காட னாரே. 1

---

கலி, திரு, நான், மணி, தொன், முது, எழின், அணி, மறைக்காடு என்று எட்டு அடைகளை இப்பதிகத்தில் கொடுக்கிறார். முற்பதிகத்தில் 'மா' என்று கூறப்பட்டதன் விளக்கம் போலும்.

செழிப்பு மிக்க மறைக்காடனார், யாரையும் தனக்கு மேம்பட்டவராக மதிக்காதவனும் ஆளுந்தன்மையால் மேம்பட்டவனுமான இராவணன் கயிலாய மலைக்கு மேலும் தேரைச் செலுத்துமாறு தேரோட்டியை ஏவி அவன் அஃது இயலாமையைக் குறிக்க அவனை அதட்டிக் கடுமையாக நோக்கிக் கயிலையைப் பெயர்க்க முற்பட்ட அளவில் மண்ணும் விண்ணும் அஞ்சுமாறு பரந்த அவனுடைய தோள்களையும் முடிகளையும் நசுக்கிப் பார்வதியை அஞ்சேல் என்று அமைதியுறுத்தினார்.

---

**335.** முக்கிமுன் வெகுண் டெடுத்த
முடியுடை யரக்கர் கோனை
நக்கிருந் தூன்றிச் சென்னி
நாண்மதி வைத்த வெந்தை
அக்கர வாமை பூண்ட
வழகனார் கருத்தி னாலே
தெக்குநீர்த் திரைகண் மோதுந்
திருமறைக் காட னாரே. 2

நீரைத் தம்மாட்டுக் கொள்கின்ற அலைகள் கரையை நோக்கி மோதும் திருமறைக்காடனார், தன் முழுவலியையும் பயன்படுத்தி முந்திக் கொண்டு கோபத்தோடு கயிலையைப் பெயர்த்த, முடியை அணிந்த இராவணனைச் சிரித்தபடியே கால் விரலை ஊன்றி நசுக்கியவராய், பிறைசூடிய எம் தலைவராய், எலும்பு, பாம்பு, ஆமையோடு இவற்றை அணிந்த அழகராய்த் தம் விருப்பினாலே மறைக்காட்டை இருப்பிடமாகக் கொண்டுள்ளார்.

---

**336.** மிகப்பெருந் துலாவ மிக்கா
னக்கொரு தேர்க டாவி
அகப்படுத் தென்று தானு
மாண்மையான் மிக்க ரக்கன்
உகைத்தெடுத் தான்ம லையை
யூன்றலு மவனை யாங்கே
நகைப்படுத் தருளி னானூர்
நான்மறைக் காடு தானே. 3

மிகப்பெரிய உருவினனாய் எங்கும் சஞ்சரிப்பவனாய் உள்ள இராவணன் நகைத்துத் தேரோட்டியை அதட்டி, மலையை மேவித் தேரைச் செலுத்தென்று நிர்ப்பந்திக்க, அஃது இயங்காமையால் தன் மிக்க வலிமையை முழுதும் கொண்டு செலுத்தி மலையைப் பெயர்க்கத் தன் உடம்பினைச் செயற்படுத்திய அளவில் அவனை அவ்விடத்திலேயே சிரிக்கப்படுதலுக்கு உரியனாய் நசுக்கியவருடைய ஊர் நான்கு வேதங்களும் வழிபட்ட மறைக்காடாகும்.

**337.** அந்தரந் தேர்க டாவி
யாரிவ னென்று சொல்லி
உந்தினான் மாம லையை
யூன்றலு மொள்ள ரக்கன்
பந்தமாந் தலைகள் பத்தும்
வாய்கள்விட் டலறி வீழச்
சிந்தனை செய்து விட்டார்
திருமறைக் காட னாரே. **4**

வானத்திலே தேரைச் செலுத்தி அதன் செலவு தடைப்பட்ட அளவில் அதனைத் தடைப்படுத்தியவன் யாவன் என்று வினவிக் கோபத்தால் உந்தப்பட்டு இராவணன் அப்பெரிய கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்ட அளவில், அவன் உடம்பில் இணைந்த பத்துத் தலைகளும் வாய் திறந்து அலறித் தரையிலே சாயுமாறு திருமறைக்காடனார் திருவுள்ளத்தில் நினைத்துச் செயற்பட்டார்.

**338.** தடுக்கவுந் தாங்க வொண்ணாத்
தன்வலி யுடைய னாகிக்
கடுக்கவோர் தேர்க டாவிக்
கையிரு பதுக ளாலும்
எடுப்பனா னென்ன பண்ட
மென்றெடுத் தானை யேங்க
அடுக்கவே வல்ல னூரா
மணிமறைக் காடு தானே. **5**

விரைவாகப் புட்பக விமானத்தைச் செலுத்திச் சென்ற வழியில் அதன் செலவினைக் கயிலை மலை தடுக்க அதனைப் பொறுக்க முடியாத ஆத்திரத்தால் மிக்க வலிமையை உடையவனாகி, 'இதுவும் ஒரு பண்டமா? இதோ கையால் பெயர்த்து எறிந்து விடுகிறேன்' என்று கயிலையைப் பெயர்த்த இராவணனை வருந்துமாறு செய்யவல்ல சிவபெருமான் உகந்தருளியுள்ள திருத்தலம் அழகிய மறைக்காடு ஆகும்.

**339. நாண்முடிக் கின்ற சீரா**
னடுங்கியே மீது போகான்
கோள்பிடித் தார்த்த கையான்
கொடியன்மா வலிய னென்று
நீண்முடிச் சடையர் சேரு
நீள்வரை யெடுக்க லுற்றான்
தோண்முடி நெரிய வைத்தார்
தொன்மறைக் காட னாரே. **6**

**ஒவ்வொரு நாளையும் முடிக்குஞ் சிறப்புடைய சூரியன் ஒடுங்கிக் கொண்டு** இலங்கையின் மேல் செல்லாதபடி ஏனைய கிரகங்களையும் தன் ஆணைக்கு உட்படுத்திய செயலினனாய்க் கொடியவனாகிய இராவணன் தான் பெருவலிமை உடையவன் என்று செருக்கி நீண்ட சடைமுடியை உடைய சிவபெருமானுடைய மலையைப் பெயர்க்கத் தொடங்கிய அளவில் பழைய மறைக்காட்டுப் பெருமான் அவனுடைய தோள்களும் தலைகளும் நசுங்குமாறு செய்துவிட்டார்.

---

செங்கதிர்த் தோற்றத்தைக் கொண்டு கணக்கிடுவதே நாள். நாள் இறுதற்கும் அதுவே அடியாகும். அதனால் அக்கதிரை நாளிறு என்றனர். ஞாயிறு என்று மருவிற்று. உறு – ஊறு; இறு–ஈறு. நாளீறு – நாளிறு – ஞாளிறு – ஞாயிறு.
"இருசுடர் மீதோடா இலங்கை". சூரியன் உட்பட கோள்கள் அனைத்தும் இராவணன் அனுமதி பெற்றுத்தான் இலங்கை மீது செல்ல வேண்டும். மண், விண், பாதலம் ஆகிய திரிலோகத்துக்கும் (இலங்கையினளவு) இராவணன் அதிபதி. இந்த வரங்களையெல்லாம் இராவணன் சிவபூசை செய்து சிவபெருமானிடமிருந்து பெற்றான்.

| பாடல் | பொருள் |
|---|---|
| **340.** பத்துவா யிரட்டிக் கைக<br>ளுடையன்மா வலிய னென்று<br>பொத்திவாய் தீமை செய்த<br>பொருவலி யரக்கர் கோனைக்<br>கத்திவாய் கதற வன்று<br>கால்விர லூன்றி யிட்டார்<br>முத்துவாய் திரைகண் மோது<br>முதுமறைக் காட னாரே. 7 | முத்துக்களைத் தம்மிடையே கொண்டனவாய் அலைகள் மோதும் பழைய மறைக்காட்டுப் பெருமான், பத்து வாய்களையும் இருபது கைகளையும் உடைய இராவணன் தான் மிக்க வலிமை உடையவன் என்ற செருக்கால் சத்தப்படாமல் தீவினைகள் செய்பவனாய்க் கயிலையைப் பெயர்த்தலாகிய தீவினையைச் செய்ய அவன் வாயினால் பெரிய குரலில் கதறுமாறு தம் கால்விரலால் அழுத்தி அவனை நசுக்கிவிட்டார். |
| **341.** பக்கமே விட்ட கையான்<br>பாங்கிலா மதிய னாகிப்<br>புக்கனன் மாமலைக் கீழ்ப்<br>போதுமா றறிய மாட்டான்<br>மிக்கமா மதிகள் கெட்டு<br>வீரமு மிழந்த வாறே<br>நக்கன பூத மெல்லா<br>நான்மறைக் காட னாரே. 8 | ஒவ்வொரு பக்கமும் பத்துக் கைகளை உடைய இராவணன் தன் தீச்செயல் விளைவுகளைப் பற்றி அறியும் அறிவு இல்லாதவனாய் மலையின் அடியில் புகுந்து வெளியே வரும் வழியை அறிய இயலாதவனாய் மேம்பட்ட அறிவும் கெட்டு வீரத்தையும் இழந்த நிலையைக் கண்டு மறைக்காட்டுப் பெருமானுடைய பூத கணங்கள் சிரித்தன. |
| **342.** நாணஞ்சு கைய னாகி<br>நன்முடி பத்தி னோடு<br>பாணஞ்சு முன் னிழந்து<br>பாங்கிலா மதிய னாகி<br>நீணஞ்சு தா(அ) னுணரா<br>நின்றெடுத் தானை யன்று<br>ஏணஞ்சு கைகள் செய்தா<br>ரெழின்மறைக் காட னாரே. 9 | இருபது கையனாய்ப் பத்துத் தலைகளை உடைய இராவணன், நைந்து சாமகீதம் பாடும் எண்ணத்தை விடுத்து, தனக்குத் துணையாக உதவாத அறிவினால், பெரும்பயன் தரும் திருவைந்தெழுத்தைத் தியானம் செய்யாது, கயிலையைப் பெயர்க்க முற்பட்டானாக, இனி இந்தக் கைகள் எழுச்சியோடு எந்தச் செயலையும் செய்ய முடியாது போய்விடுமோ என்று அவன் அஞ்சுமாறு அழகிய மறைக்காடனார் அவன் கைகளை நசுக்கினார். |
| **343.** கங்கைநீர் சடையுள் வைக்கக்<br>காண்டலு மங்கை யூடத்<br>தென்கையான் றேர்க டாவிச்<br>சென்றெடுத் தான்ம லையை<br>முன்கைமா நரம்பு வெட்டி<br>முன்னிருக் கிசைகள் பாட<br>அங்கைவா ளருளி னானூ<br>ரணிமறைக் காடு தானே. 10 | கங்காதேவியைச் சிவபெருமான் சடையைல் வைத்திருந்ததைக் கண்ட பார்வதி ஊடல் கொண்ட நேரத்தில், தென் இலங்கை மன்னனாகிய இராவணன் தேரைச் செலுத்திக் கயிலைமலை தேரின் இயக்கத்திற்கு இடையூறாயுள்ளது என்று அதனைப் பெயர்க்க முற்பட்டானாக, பெருமான் கால்விரல் ஒன்றினால் அவனைக் கயிலை மலையின் கீழ் நசுக்க, அவன் தன் நரம்புகளை எடுத்து யாழ் அமைத்து யாழ் இசையோடு வேதத்தைப்பாட அதனால்உ ள்ளம் மகிழ்ந்து அவனுக்குத் தாம் கையில் வைத்திருந்த சந்திரகாசம் என்ற வாளினை அருளினார். அப்பெருமான் உகந்தருளியிருக்கும் திருத்தலம் அழகிய திருமறைக்காடாகும். |

## 35. திருவிடைமருதூர்

1. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது.
2. நான்கு பெருமதில்களுக்கு நான்கு பிரம்மாண்டமான இராஜகோபுரங்கள் என்று உலகிலேயே மதுரை, சிதம்பரம், அண்ணாமலை, திருவாரூர், கழுக்குன்றம், இடைமருது, விருத்தாசலம், காழி, இராமேச்சரம் என்று 10/12 தலங்களுக்குத்தான் உள்ளன. அதிலொன்று இடைமருது.
3. உமாதேவியார், மூத்தபிள்ளையார் – இளையபிள்ளையார், விட்டுணு முதலிய தேவர்களும், வேதங்களும், மூன்று கோடி இருடியர்களும், வசிட்டர் முதலிய மாமுனிவர்களும், ஐராவணமும், சிவவாக்கியர், சமயாசாரியர்கள், பத்திரகிரியார், வரகுணபாண்டியன் போன்ற மன்னர்கள் உட்பட அநேகர் பூசித்துப் பேறுபெற்ற பதி.
4. பதினொராந் திருமுறையில் பட்டினத்து அடிகள் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை என்னும் அருள் நூலால் இதன் பெருஞ்சிறப்புகளையும், பூசித்தோர் பெருமைகளையும் போற்றியருளினார்.
5. பெரிய அன்பின் வரகுணதேவருக்குக் கொலைப்பழி நீங்கிய தலம். அன்பின் உச்சகட்டமாக "அரிதாக எது கிடைப்பினும் அது இடைமருதர்க்கு" என்று வாழ்ந்த வரகுணன் அழகான தன் மனைவியையே இறைவர்க்கு அளித்தான். எல்லா ஒலிகளும் அவன் காதுகளுக்கு அர அர என்றே கேட்டனவாம்.
6. பிரம்மகத்தி நீங்கும் தலம். இத்திருக் கோயிலின் மிகப்பெரிய சுற்றுப்பிரகாரத்தை நியதியாய் வழிபடுவோர் முயலகன், பைத்தியம் முதலிய பெரு நோய்களினின்றும் பாவங்களிலிருந்தும் நீங்கி உய்வது கண்கூடு.
7. பட்டினத்து அடிகள் கீழைக் கோபுர வாயிலிலும், பத்திரகிரியார் மேலைக் கோபுர வாயிலிலும் உள்ளதாக ஐதீகம்.
8. தைப்பூசத்தில் காவிரியில் ஐராவணத் துறையில் நீராட்டும் சிறப்புக் கொண்டாடப்படும். அதற்காக அழகான வேலைப்பாடுகளுடன் கூடிய மண்டபம் உள்ளது. அது சீரமைக்கப்பட வேண்டும்.
9. வட நாட்டில் உள்ள மல்லிகார்ச்சுனம் என்ற சீபர்ப்பதத்துக்கும், தெற்கே பாண்டி நாட்டில் உள்ள திருப்புடை மருதூர் என்ற தலத்துக்கும் இடையில் உள்ளதாலும், இம்மூன்றுக்கும் ஒன்று போல மருது தலமரமாக இருப்பதாலும் இது இடைமருது எனப்படுகிறது.
10. 27 நட்சத்திரங்களுக்காக ஒரு மண்டபத்தில் 27 சிவலிங்கங்கள் பிரதிட்டை செய்யப்பட்டு நட்சத்திரக் கோயிலாக உள்ளது.

**திருநேரிசை** **பதிக எண் : 35**

344. காடுடைச் சுடலை நீற்றர்
கையில்வெண் டலையர் தையல்
பாடுடைப் பூதஞ் சூழப்
பரமனார் மருத வைப்பில்
தோடுடைக் கைதை யோடு
சூழ்கிடங் கதனைச் சூழ்ந்த
ஏடுடைக் கமல வேலி
யிடைமரு திடங்கொண் டாரே. 1

சுடுகாட்டுச் சாம்பலை அணிந்து, கையில் வெள்ளிய மண்டையோட்டினை ஏந்தி, பக்கத்தில் தம்மைச் சார்ந்த பூதங்கள் சூழ மேம்பட்ட சிவபெருமான், மருதநிலத்தில், மடல்களை உடைய தாழைகளோடு சூழும் அகழியைச் சூழ்ந்து தாமரை வேலியாய் அமையும் திருவிடைமருதூரை இடமாகக் கொண்டுள்ளார்.

தோடு–இதழ்; கைதை–தாழை

| | |
|---|---|
| **345.** முந்தையார் முந்தி யுள்ளார்<br>மூவர்க்கு முதல்வ ரானார்<br>சந்தியார் சந்தி யுள்ளார்<br>தவநெறி தரித்து நின்றார்<br>சிந்தையார் சிந்தை யுள்ளார்<br>சிவநெறி யனைத்து மானார்<br>எந்தையா ரெம்பி ரானா<br>ரிடைமரு திடங்கொண் டாரே. 2 | எம் தந்தையாராய் எம் தலைவராய் உள்ள பெருமான் முற்பட்டவர்களுக்கும் முற்பட்டவராய், அரி அயன் அரன் என்ற மூவருக்கும் முதற் பொருளானவராய், அந்திகளிலும் அவ்வந்தித் தொழுகைகளிலும் விளங்கும் அருளுருவினராய், தவநெறியில் ஒழுகுபவர் உள்ளத்திருப்பவராய், மங்கலமான வழிகள் எல்லாமாயும் ஆகியவராய், இடைமருதை இடங்கொண்டவராவர். |
| **346.** காருடைக் கொன்றை மாலை<br>கதிர்மணி யரவி னோடு<br>நீருடைச் சடையுள் வைத்த<br>நீதியார் நீதி யாய<br>போருடை விடையொன் றேற<br>வல்லவர் பொன்னித் தென்பால்<br>ஏருடைக் கமல மோங்கு<br>மிடைமரு திடங்கொண் டாரே. 3 | காவிரியின் தென்கரையில் அழகிய தாமரைகள் செழித்து ஓங்கும் இடைமருது என்ற தலத்தை உறைவிடமாகக் கொண்ட பெருமான் கார் காலத்தில் மலரும் மலர்களை உடைய கொன்றை மாலையை ஒளிவீசும் இரத்தினத்தைத் தலையில் உடைய பாம்பினோடு கங்கை தங்கும் சடையில் வைத்த நேர்மையராய், அறமே வடிவெடுத்ததும் போரிடும் ஆற்றலுடையதுமான காளையைச் செலுத்துவதில் வல்லவராய் உள்ளார். |
| **347.** விண்ணினார் விண்ணின் மிக்கார்<br>வேதங்கள் நான்கு மங்கம்<br>பண்ணினார் பண்ணின் மிக்க<br>பாடலார் பாவந் தீர்க்குங்<br>கண்ணினார் கண்ணின் மிக்க<br>நுதலினார் காமற் காய்ந்த<br>எண்ணினா ரெண்ணின் மிக்க<br>விடைமரு திடங்கொண் டாரே. 4 | அடியவருடைய எண்ணத்தில் மேம்பட்ட, இடைமருதை இடங்கொண்ட பெருமானார் தேவருலகை உடையவராய், அதனினும் மேம்பட்டவராய், நான்கு வேதமும் ஆறு அங்கங்களும் உலகறியச் செய்தவராய், பண்ணில் மேம்பட்ட பாடல்களை உடையவராய், அடியவர்களுடைய பாவங்களைப் போக்கும் கருத்து உடையவராய், மேம்பட்ட நெற்றிக் கண்ணராய் மன்மதனை வெகுண்ட பெருமானாய் உள்ளார். |
| **348.** வேதங்கள் நான்குங் கொண்டு<br>விண்ணவர் பரவி யேத்தப்<br>பூதங்கள் பாடி யாட<br>லுடையவன் புனித னெந்தை<br>பாதங்கள் பரவி நின்ற<br>பத்தர்க டங்கண் மேலை<br>ஏதங்க ளற நின்றா<br>ரிடைமரு திடங்கொண் டாரே. 5 | நான்கு வேதங்களையும் ஒலித்துக்கொண்டு தேவர்கள் முன்நின்று போற்றிப் புகழப் பூதங்கள் பாடக் கூத்தாடுதலை உடைய தூயராகிய எம் தலைவர், தம் திருவடிகளை முன் நின்று துதித்த அடியார்களுடைய பழைய வினைகளையும் இனிவரக் கூடிய வினைகளையும் தீர்ப்பவராக இடைமருதை இடங் கொண்டுள்ளார். |

| | |
|---|---|
| **349.** பொறியர வரையி லார்த்துப்<br>பூதங்கள் பலவுஞ் சூழ<br>முறிதரு வன்னி கொன்றை<br>முதிர்சடை மூழ்க வைத்து<br>மறிதரு கங்கை தங்க<br>வைத்தவ ரெத் திசையும்<br>எறிதரு புனல்கொள் வேலி<br>யிடைமரு திடங்கொண் டாரே. 6 | புள்ளிகளை உடைய பாம்பினை இடையில் இறுகச் சுற்றிப் பூதங்கள் பலவும் தம்மைச் சூழ்ந்திருக்கத் தளிரை உடைய வன்னி, கொன்றை என்பனவற்றைச் செந்நிறம் மிக்க சடையில் கங்கை வெள்ளத்தில் முழுகுமாறு சூடிய பெருமான் நாற்றிசைகளிலும் அலைவீசும் நீரோடு கால்களை எல்லையாக உடைய இடைமருது இடங்கொண்டார். |
| **350.** படரொளி சடையி னுள்ளாற்<br>பாய்புன லரவி னோடு<br>சுடரொளி மதியம் வைத்துத்<br>தூவொளி தோன்று மெந்தை<br>அடரொளி விடையொன் றேற<br>வல்லவ ரன்பர் தங்கள்<br>இடரவை கெடவு நின்றா<br>ரிடைமரு திடங்கொண் டாரே. 7 | இடைமருது இடங்கொண்ட பெருமான் ஒளி வீசும் சடையிலே பரவும் நீரை உடைய கங்கை, பாம்பு ஒளி வீசும் பிறை எனும் இவற்றைச் சூடித் தூய செந்நிறத்தோடு காட்சி வழங்கும் எங்கள் தலைவராய், பகைவர்களை அழிக்கும் பிரகாசமான காளையை ஏறி ஊர வல்லவராய், அன்பர்களுடைய துயரங்களைப் போக்க வல்லவருமாய் உள்ளார். |
| **351.** கமழ்தரு சடையி னுள்ளாற்<br>கடும்புன லரவி னோடு<br>தவழ்தரு மதியம் வைத்துத்<br>தன்னடி பலரு மேத்த<br>மழுவது வலங்கை யேந்தி<br>மாதொரு பாக மாகி<br>எழில்தரு பொழில்கள் சூழ்ந்த<br>விடைமரு திடங்கொண் டாரே. 8 | பூக்களின் நறுமணம் கமழும் சடையினுள்ளே விரைந்து ஓடும் கங்கை, பாம்பு, பிறை இவற்றைச் சூடித் தம் திருவடிகளைப் பலரும் துதிக்குமாறு மழுப்படையை வலக்கையில் ஏந்திப் பார்வதிபாகராய் அழகிய சோலைகள் சூழ்ந்த இடைமருதுப் பெருமான் உள்ளார். |
| **352.** பொன்றிகழ் கொன்றை மாலை<br>புதுப்புனல் வன்னி மத்தம்<br>மின்றிகழ் சடையில் வைத்து<br>மேதகத் தோன்று கின்ற<br>அன்றவ ரளக்க லாகா<br>வனலெரி யாகி நீண்டார்<br>இன்றுட னுலக மேத்த<br>விடைமரு திடங்கொண் டாரே. 9 | பொன்போல ஒளிவீசும் கொன்றைப்பூமாலை, கங்கை, வன்னி இலை, ஊமத்தம் எனும் இவற்றை ஒளிவீசும் சடையிற் சூடி, ஏனைய தேவர்களின் மேம்பட்டுத் தோன்றுகின்ற பிரமனும் திருமாலும் ஒரு காலத்தில் அடிமுடி காணமுடியாதபடி தீத்தம்பமாகக் காட்சி வழங்கிய பெருமான் இப்பொழுது நன்மக்கள் துதிக்குமாறு இடைமருதில் உறைகின்றார். |

353. மலையுடன் விரவி நின்று
மதியிலா வரக்க னூக்கத்
தலையுட னடர்த்து மீண்டே
தலைவனா வருள்க ணல்கிச்
சிலையுடை மலையை வாங்கித்
திரிபுர மூன்று மெய்தார்
இலையுடைக் கமல வேலி
யிடைமரு திடங்கொண் டாரே. 10

கயிலைமலையை அடைந்து அறிவற்ற அரக்கனாகிய இராவணன் அம்மலையைப் பெயர்க்க முற்பட அவனைத் தலை உட்பட உடல் முழுவதும் துன்புறுத்தி மீண்டும் அவன் வேண்ட அவனுக்குத் தலைவராய் இருந்து அவனுக்கு அருட்பேறுகள் பலவற்றை விரும்பி அளித்து, மலையாகிய வில்லை வளைத்து வானில் திரிகின்ற மும்மதில்களையும் எய்து அழித்த பெருமான் இலைகளோடு கூடிய தாமரை மலர்கள் ஊர் எல்லையில் பூத்துக் குலுங்கும் திருவிடைமருதூர் என்ற திருத்தலத்தை உகந்தருளி இருப்பவராவார்.

''இடைமருது இடங்கொண்டாரே'' என்று பாட்டுத்தோறும் மகுடம் வைத்து ஓதியருளியது இத்தலத்தில் இறைவர் தேற்றமாக மகாலிங்கம் என்ற பொதுப்பெயரே தமது சிறப்புப் பெயராகத் தாங்கி விரும்பி வீற்றிருந்தருளும் சிறப்புக்குறித்தது. "இடைமருது மேவி இடங்கொண்டாரே" என்ற பதிக மகுடத்துடன் தாண்டகமும் அருளியுள்ளார்.

## 36. திருப்பழனம்

திருவையாற்று சப்த தானங்களுள் முதலாவது. அப்பூதி அடிகள் பல தர்மங்கள் செய்து வாழ்ந்த பதி. பாம்பு கடித்து இறந்த அவர் மகனை அப்பர் சுவாமிகள் உயிர் பெறுமாறு செய்தருளிய தலம். (இதே திருமுறையில் 18 ஆம் பதிகம்). இதற்கு அருகில் உள்ள திங்களூர் சந்திரன் பூசித்த தலம்.

**திருநேரிசை** **பதிக எண் : 36**

354. ஆடினா ரொருவர் போலு
மலர்கமழ் குழலி னாளைக்
கூடினா ரொருவர் போலுங்
குளிர்புனல் வளைந்த திங்கள்
சூடினா ரொருவர் போலுந்
தூயநன் மறைக ணான்கும்
பாடினா ரொருவர் போலும்
பழனத்தெம் பரம னாரே. 1

திருப்பழனத்து எம்பெருமான் திருக்கூத்தாடு பவரும், மலர் நறுமணம் வீசும் கூந்தலாளாகிய பார்வதியின் பாகரும், கங்கையும் பிறையும் சூடிய ஒப்பற்றவரும், தூயமறைகள் நான்கினையும் பாடுபவரும் ஆவார்.

355. போவதோர் நெறியு மானார்
புரிசடைப் புனித னார்நான்
வேவதோர் வினையிற் பட்டு
வெம்மைதான் விடவுங் கில்லேன்
கூவல்தா னவர்கள் கேளார்
குணமிலா வைவர் செய்யும்
பாவமே தூர நின்றார்
பழனத்தெம் பரம னாரே. 2

பழனத்து எம்பெருமான் உயிர் செல்வதற்குரிய வழியாக ஆனவரும், முறுக்குண்ட சடையை உடைய தூயவருமாவார். அடியேன் பலகாலும் கூறுவனவற்றை என் ஐம்பொறிகளும் ஏற்பதில்லை. ஆதலால் துன்புறுத்தும் வினையில் அகப்பட்டு அதனால் ஏற்படும் வெப்பத்தை நீக்கமுடியாதேனாய் உள்ளேன். நற்பண்பு இல்லாத ஐம்பொறிகளும் செய்யும் தீய வினைகளைப் பழனத்துப் பெருமானாரே தீர்ப்பவராய் இருக்கின்றார்.

| | |
|---|---|
| **356.** கண்டராய் முண்ட ராகிக்<br>கையிலோர் கபால மேந்தித்<br>தொண்டர்கள் பாடி யாடித்<br>தொழுகழற் பரம னார்தாம்<br>விண்டவர் புரங்க ளெய்த<br>வேதியர் வேத நாவர்<br>பண்டையென் வினைக டீர்ப்பார்<br>பழனத்தெம் பரம னாரே. 3 | வீரராய், மழித்த தலையினராய் அல்லது திரிபுண்டரமாய்த் திருநீறு அணிந்தவராய்க் கையில் ஒரு மண்டையோட்டை ஏந்தி, அடியார்கள் பாடி ஆடித் தொழும் திருவடிகளை உடையவராய், பகைவருடைய மும்மதில் களையும் அம்பு எய்து அழித்த வேதியராய், வேதம் ஓதும் நாவினராய் என்னுடைய பழைய வினைகளைத் தீர்ப்பவராய்த் திருப்பழனத்து எம்பெருமான் அமைந்து உள்ளார். |
| **357.** நீரவன் றீயி னோடு<br>நிழலவ னெழில தாய<br>பாரவன் விண்ணின் மிக்க<br>பரமவன் பரம யோகி<br>ஆரவ னண்ட மிக்க<br>திசையினோ டொளிக ளாகிப்<br>பாரகத் தமிழ்த மானார்<br>பழனத்தெம் பரம னாரே. 4 | பழனத்து எம்பெருமான் நீராய்த் தீயாய் ஒளியாய் அழகிய நிலவுலகாய்த் தேவருலகிலும் மேம்பட்ட தெய்வமாய் மேலான சிவயோகியாராய் எங்கும் நிறைந்தவராய் அண்டங்களும் மிக்க திசைகளும் முச்சுடர்களுமாகி மண்ணுலக உயிர்களுக்குக் கிட்டிய விண்ணுலக அமுதமாக உள்ளார். |
| **358.** ஊழியா ரூழி தோறு<br>முலகினுக் கொருவ ராகிப்<br>பாழியார் பாவந் தீர்க்கும்<br>பராபரர் பரம தாய<br>ஆழியா னன்னத் தானு<br>மன்றவர்க் களப் பரிய<br>பாழியார் பரவி யேத்தும்<br>பழனத்தெம் பரம னாரே. 5 | எல்லோரும் முன்நின்று புகழ்ந்து வழிபடும் திருப்பழனத்து எம்பெருமான், ஊழிகளாய், ஊழிதோறும் உலகிற்கு ஒப்பற்ற தலைவராய்ப் பாழாதலை உற்ற மக்களுடைய பாவங்களைப் போக்கும் மேம்பட்டவர்களுக்கும் மேம்பட்டவராய்த் தம்மைப் பரம்பொருளாகக் கருதிய, சக்கரத்தை ஏந்திய திருமாலும் அன்ன வாகனனான பிரமனும் தாம் தீப்பிழம்பாகக் காட்சி வழங்கிய காலத்தில் அடிமுடி அளக்க முடியாத வலிமை உடையவராய் விளங்கியவராவார். |
| **359.** ஆலின்கீ ழறங்க ளெல்லா<br>மன்றவர்க் கருளிச் செய்து<br>**நூலின்கீ ழவர்**கட் கெல்லா<br>நுண்பொரு ளாகி நின்று<br>காலின்கீழ்க் காலன் றன்னைக்<br>கடுகத்தான் பாய்ந்து பின்னும்<br>பாலின்கீழ் நெய்யு மானார்<br>பழனத்தெம் பரம னாரே. 6<br><br>நூலின் கீழவர் – மார்க்கர் கண்ட<br>நூலோதி வீடுகாதலிப்பவர் ஆகிய வைநயிகர் | பழனத்து எம்பெருமான் கல்லால மரத்தின் கீழிருந்து அறங்களை எல்லாம் ஒரு காலத்தில் நால்வருக்கு அருளிச்செய்து நூல்களை ஓதி வீடுபேற்றை விரும்பும் வைநயிகர்களுக்கு நுட்பமான பொருளாய் அமைந்து, காலனைத் தம் காலின் கீழ்க்கிடக்குமாறு விரைந்து பாய்ந்து உதைத்துப்பின், பாலில் உள்ள நெய்போல எங்கும் பரவியிருப்பவராவார். |

| | |
|---|---|
| **360.** ஆதித்த னங்கி சோம<br>நயனொடு மால்பு த(ன்)னும்<br>போதித்து நின்று லகிற்<br>போற்றிசைத் தாரி வர்கள்<br>சோதித்தா ரேழுல குஞ்<br>சோதியுட் சோதி யாகிப்<br>பாதிப்பெண் ணுருவ மானார்<br>பழனத்தெம் பரம னாரே. 7 | சூரியன், அக்கினி, சந்திரன், பிரமன், திருமால், புதன் ஆகியோர் உலகவருக்கு அறிவுறுத்தி நின்று தாமும் சிவபெருமானைப் போற்றி வாழ்பவர்கள். இவர்கள் தம் முயற்சியால் சிவபெருமானைக் கண்ணால் காணலாம் என்று ஏழுலகும் தேடினார்கள். பழனத்து எம் பெருமான் இவர்களுக்கு எட்டாத வண்ணம் சோதிகளுள் மேம்பட்ட சோதியாகிப் பார்வதி பாகராக உள்ளார். |
| **361.** காற்றனாற் காலற் காய்ந்து<br>காருரி போர்த்த வீசர்<br>தோற்றனார் கடலு ணஞ்சைத்<br>தோடுடைக் காதர் சோதி<br>ஏற்றினா ரிளவெண் டிங்க<br>ளிரும்பொழில் சூழ்ந்த காயம்<br>பாற்றினார் வினைக ளெல்லாம்<br>பழனத்தெம் பரம னாரே. 8 | காலினாலே கூற்றுவனை உதைத்து, யானைத் தோலைப் போர்த்தியவராய், அனைவரையும் அடக்கி ஆள்பவர் ஆகிய பழனத்து எம் பெருமான், கடலில் தோன்றிய விடத்தைத் தம் மிடற்றுள் அடக்கி என்றும் உலகிற்குத் தோற்ற மளிக்கும்படி செய்தவராய், தோடு அணிந்த காதினராய், வெண்ணிறமுடைய காளையினராய், பெரிய உலகத்தை எல்லாம் சூழ்ந்த ஆகாயத்தில் வெள்ளிய சந்திரனில் இளைய ஒளியை அமைத்து ஒளிவிடச் செய்தவராய் அடியார்களுடைய வினைகளை எல்லாம் போக்கியவர் ஆவார். |
| **362.** கண்ணனும் பிரம னோடு<br>காண்கில ராகி வந்தே<br>எண்ணியுந் துதித்து மேத்த<br>வெரியுரு வாகி நின்று<br>வண்ணநன் மலர்க டூவி<br>வாழ்த்துவார் வாழ்த்தி யேத்தப்<br>பண்ணுலாம் பாடல் கேட்டார்<br>பழனத்தெம் பரம னாரே. 9 | பழனத்து எம் பெருமான் திருமாலும் பிரமனும் தம் முயற்சியால் காண இயலாதவராகி வந்து தியானித்தும் துதித்தும் புகழுமாறு தீப்பிழம்பின் உருவமாகக் காட்சியளித்து, தம்மை வாழ்த்தும் அடியவர்கள் நல்ல நிறத்தை உடைய மலர்களால் அருச்சித்து வாழ்த்தித் துதிக்க அவர்களுடைய பண்ணோடு கூடிய பாடல்களைக் கேட்டு மகிழ்பவராவார். |
| **363.** குடையுடை யரக்கன் சென்று<br>குளிர்கயி லாயவெற் பின்<br>இடைமட வரலை யஞ்ச<br>வெடுத்தலு மிறைவ னோக்கி<br>விடையுடை விகிர்தன் றானும்<br>விரலினா லூன்றி மீண்டும்<br>படைகொடை யடிகள் போலும்<br>பழனத்தெம் பரம னாரே. 10 | அரசனுக்குரிய வெண் கொற்றக் குடையை உடைய இராவணன் சென்று குளிர்ந்த கயிலாய மலையை, அங்கிருந்த இளையளாகிய பார்வதி அஞ்சுமாறு பெயர்த்த அளவில், காளையை வாகனமாக உடைய, உலகப் பொருள்களி லிருந்து வேறுபட்ட தலைவராகிய பழனத்து எம் பெருமான், தம் விரலினால் அழுத்தி ஊன்றி அவனை நெரித்துப் பின் அவன் பாடலைக் கேட்டு வெகுளி நீங்கி அவனுக்கு வாட்படையை வழங்கியருளியவராவர். |

## 37. திருநெய்த்தானம்

நெய்யாடுதலும், நெய்யணிதலும் ஒரு விழாவாகவே கொண்டாடப்பட்டுள்ளது. "திருமலி நெய்யாடல் விழாச் செங்காட்டங் குடியெடுப்ப" – சிறுத்தொண்டர்புராணம் – 18.

"மீதணியு நெய்யணி விழா வொடு திளைப்பார்" – தி.ஞா.ச. 35

அவ்விழாச் சிறப்பினால் வந்த பெயர்.

**திருநேரிசை** **பதிக எண் : 37**

364. காலனை வீழச் செற்ற
கழலடி யிரண்டும் வந்தென்
மேலவா யிருக்கப் பெற்றேன்
மேதகத் தோன்று கின்ற
கோலநெய்த் தான மென்னுங்
குளிர்பொரிற் கோயின் மேய
நீலம்வைத் தனைய கண்ட
நினைக்குமா நினைக்கின் றேனே. 1

கூற்றுவன் கீழே விழுமாறு அவனை உதைத்த வீரக்கழலணிந்த திருவடிகள் இரண்டும் என் தலைமேல் இருத்தலைப் பெற்றேன். ஆதலின் மிகச் சிறப்பாகக் காட்சி வழங்குகின்ற அழகிய நெய்த்தானத் திருப்பதியின் குளிர்ந்த பொழில்களிடையே அமைந்த கோயிலில் விரும்பி உறைகின்ற நீலகண்டனே! தற்போதம் அற்று நின் போதத்தால் தியானிக்கும் வகையில் உன்னைத் தியானிக்கின்றேன்.

---

365. காமனை யன்றுகண் ணாற்
கனலெரி யாக நோக்கித்
தூமமுந் தீபங் காட்டித்
தொழுமவர்க் கருள்கள் செய்து
சேமநெய்த் தான மென்னுஞ்
செறிபொழிற் கோயின் மேய
வாமனை நினைந்த நெஞ்சம்
வாழ்வுற நினைந்த வாறே. 2

மன்மதனை ஒரு காலத்தில் நெற்றிக்கண்ணால் நெருப்பாகப் பார்த்து அழித்து, நறும்புகையும் தீபமும் காட்டித் தொழும் அடியவர்களுக்கு அருள்கள் செய்து, எல்லா உயிர்களுக்கும் பாதுகாவலைத் தரும் சோலைகளால் சூழப்பட்ட நெய்த்தானம் என்னும் இருப்பிடத்தில் பொருந்தியுள்ள சிவபெருமானைத் தியானிக்கும் அடியேனுடைய மனம் நல்வாழ்வுக்கு உரிய செய்தியைத் தியானித்த செயல் போற்றத்தக்கது.

---

366. பிறைதரு சடையின் மேலே
பெய்புனற் கங்கை தன்னை
உறைதர வைத்த வெங்க
ளுத்தம னூழி யாய
நிறைதரு பொழில்கள் சூழ
நின்றநெய்த் தான மென்று
குறைதரு மடிய வர்க்குக்
குழகனைக் கூட லாமே. 3

பிறைதங்கிய சடையின்மேலே கங்கை தங்குமாறு வைத்த எங்கள் மேம்பட்ட தலைவனாய், பல ஊழிகளின் வடிவினனாய், பலசோலைகளாலும், சூழப்பட்ட நெய்த்தானமாகிய அவன் உகந்தருளும் திருப்பதியைக் குறையிரந்து வேண்டிக் கொள்ளும் திருவடித் தொண்டர்களுக்கு இளையவனாகிய எம்பெருமான் அடைவதற்கு எளியவனாய் உள்ளான்.

**367.** வடிதரு மழுவொன் றேந்தி
வார்சடை மதியம் வைத்துப்
பொடிதரு மேனி மேலே
புரிதரு நூலர் போலும்
நெடிதரு பொழில்கள் சூழ
நின்றநெய்த் தான மேவி
அடிதரு கழல்க ளார்ப்ப
வாடுமெம் மண்ண லாரே. 4

நெய்த்தானம் – தில்லைத் தானம் என்றும் வழங்கப்படும்.

சிள்வீடு என்ற வண்டுகள் ஒலிக்கும் சோலைகள் சூழ நிலைபெற்ற நெய்த் தானத்தில் விரும்பி உறைந்து திருவடிகளில் அணிந்த கழல்கள் ஒலிக்குமாறு கூத்து நிகழ்த்தும் எம் மேம்பட்ட தலைவர் காய்ச்சி வடிக்கப்பட்டுக் கூரிதாக்கப்பட்ட மழுவைக் கையிலேந்தி, நீண்ட சடையிலே பிறையை அணிந்து திருநீறு அணிந்த மார்பிலே பல நூல்களை முறுக்கி அமைக்கப்பட்ட பூணூலை அணிந்தவராவார்.

**368.** காடிட மாக நின்று
கனலெரி கையி லேந்திப்
பாடிய பூதஞ் சூழப்
பண்ணுடன் பலவுஞ் சொல்லி
ஆடிய கழலர் சீரா
ரந்தணெய்த் தான மென்றும்
கூடிய **குழக னாரைக்**
**கூடுமா றறிகி லேனே.** 5

கையில் ஒளிவீசும் நெருப்பை ஏந்திச் சுடுகாட்டை இடமாகக் கொண்டு பாடுகின்ற பூதங்கள் தம்மைச் சூழப் பண்ணோடு பல பாடல்கள் பாடி ஆடிய திருவடிகளை உடையவராய்ச் சிறப்புமிக்க அழகிய குளிர்ந்த நெய்த்தானத்தில் எப்பொழுதும் உறைகின்ற இளையவராகிய எம்பெருமானை அடையும் திறத்தை அறியாது இருக்கின்றேனே!

**369.** வானவர் வணங்கி யேத்தி
வைகலு மலர்க டூவத்
தானவர்க் கருள்கள் செய்யுஞ்
சங்கரன் செங்க ணேற்றன்
தேனமர் பொழில்கள் சூழத்
திகழுநெய்த் தான மேய
கூனிள மதியி னானைக்
கூடுமா றறிகி லேனே. 6

"நெய்யாடிய பெருமானிடம்" என்பது தி.ஞா.ச. தேவாரம். ஏழூர் தலங்களுள் ஒன்று.

தேவர்கள் நாடோறும் வணங்கித்துதித்து மலர்களை அருச்சிக்க, அவர்களுக்கு வேண்டியவற்றை வழங்கும் நன்மை செய்பவனாய், சிவந்த கண்களையுடைய திருமாலாகிய காளையை உடையவனாய், வண்டுகள் விரும்பித் தங்குகின்ற சோலைகள் நாற்புறமும் சூழ விளங்கும் நெய்த்தானத்தில் விரும்பி உறைகின்ற, வளைந்த பிறை சூடிய பெருமானைக் கூடும் திறத்தை அறியாது உள்ளேனே!

**370.** காலதிர் கழல்க ளார்ப்பக்
கனலெரி கையில் வீசி
ஞாலமுங் குழிய நின்று
நட்டம தாடு கின்ற
மேலவர் முகடு தோய
விரிசடை திசைகள் பாய
மாலொரு பாக மாக
மகிழ்ந்தநெய்த் தான னாரே. 7

திருமாலைத் தம் திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டு மகிழ்ந்த நெய்த்தானப் பெருமானார் காலிலே அசைகின்ற கழல்கள் ஒலியெழுப்ப, ஒளிவீசுகின்ற தீயினைக் கையில் வைத்து வீசிக்கொண்டு தரையில் பள்ளம் தோன்றவும், விரிந்த சடை வானத்தை அளாவ எட்டுத் திசைகளிலும் பரவவும் கூத்து நிகழ்த்தும் மேம்பட்டவராவார்.

371. பந்தித்த சடையின் மேலே
பாய்புன லதனை வைத்து
அந்திப்போ தனலு மாடி
யடிகளை யாறு புக்கார்
வந்திப்பார் வணங்கி நின்று
**வாழ்த்துவார் வாயி னுள்ளார்**
**சிந்திப்பார் சிந்தை யுள்ளார்**
திருந்துநெய்த் தான னாரே. 8

முடிக்கப்பட்ட சடையின்மேலே கங்கையைச் சூடி மாலை நேரத்தில் தீயில் கூத்தாடும் பெருமானார் திருவையாற்றை அடைந்தவராய்த் தம்மைக் கும்பிடுபவராய் வணங்கி வழிநின்று வாழ்த்துபவராகிய அடியவர்களின் நாவில் நின்று, தியானம் செய்பவர் மனத்தில் உறைந்து சிறந்த நெய்த்தானத்தில் நிலையாகத் தங்கி விட்டார்.

372. சோதியாய்ச் சுடரு மானார்
சுண்ணவெண் சாந்து பூசி
ஓதிவா யுலக மேத்த
வுகந்துதா மருள்கள் செய்வார்
ஆதியா யந்த மானார்
யாவரு மிறைஞ்சி யேத்த
**நீதியாய் நியம மாகி**
**நின்றநெய்த் தான னாரே.** 9

சரசுவதி பூசித்த தலம். தட்சிணா மூர்த்தி நின்ற கோலத்தில் உள்ளார்.

ஆதியும் அந்தமும் ஆகியவராய், எல்லோரும் விரும்பித் துதிக்க, நீதியாகவும் தவம் முதலிய வகுக்கப்பட்ட நெறிகளாகவும், நிலை பெற்றிருக்கும் திருநெய்த்தானப் பெருமான் ஒளியாகவும், அவ்வொளியை வெளிப்படுத்தும் சூரியன் முதலிய சுடர்ப் பொருள்களாகவும் ஆயினவராய், திருநீற்றைச் சந்தனமாகப் பூசி வேதம் ஓதி, நன்மக்கள் தம்மைத் துதித்தலால் தாம் அவர்களுக்கு அருள் செய்பவராவார்.

373. இலையுடைப் படைகை யேந்து
மிலங்கையர் மன்னன் றன்னைத்
தலையுட னடர்த்து மீண்டே
தானவற் கருள்கள் செய்து
சிலையுடன் கணையைச் சேர்த்துத்
திரிபுர மெரியச் செற்ற
நிலையுடை யடிகள் போலு
நின்றநெய்த் தான னாரே. 10

இலை வடிவமாக அமைந்த வேலினைக் கையில் ஏந்திய இராவணனைத் தலை உட்பட உடல் முழுவதையும் நசுக்கிப் பின் மீண்டும் அவனுக்குப் பல அருள்களைக் கொடுத்து, வில்லிலே அம்பினை இணைத்து மும்மதில்களையும் அழியுமாறு வெகுண்ட, என்றும் அழியாத நிலையை உடைய பெருமான் நிலைபெற்ற திருநெய்த்தானத் திருப்பதியை உகந்திருப்பவராவார்.



## 38. திருவையாறு

### (வைத்த பதிகம்)

**தல விசேடம் : –**

திருவையாறு – ஐந்து ஆறுகள் சேர்ந்த தலமாதலின் இப்பெயர் பெற்றது. இக்காரணத்தால் இதனைப் பஞ்சநதமென்பதும், பஞ்சாக்கரசெபச் சிறப்பினால் செபயோகம் என்பதும் வடவர் வழக்கு. இத்தலத்தை விரும்பித் தங்கிவிட்ட காவிரியைப் பெறுவதற்குக் கடலரசன் இங்குவந்து பூசித்ததன் பயனாகக் காவிரி ஒரு கலையோடும் கிழக்கே சென்று, கடலடைந்தனள் என்பது தலவரலாறு. "ஆழி வலவனின் றேத்தும்" என்ற தேவாரம் இக்குறிப்புப் பற்றியதென்ப. சிலாத முனிவர் தவத்தால் அவர்க்கு மகனாக அவதரித்த திருநந்திதேவர் பூசித்துச் சிவசாரூபமும், கணநாயகமும் பெற்றுச் சுயசா தேவியை மணம் செய்விக்கப்பெற்று அபிடேகிக்கப் பெற்ற சிறப்பினை "நங்க ணாதனா நந்தி தவஞ்செய்து, பொங்கு நீடரு ளெய்திய பொற்பது" (45) என்ற திருமலைச் சிறப்பில் ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார். தம்மை வழிபட்ட மறைச் சிறுவர் ஒருவரின் பொருட்டு இறைவர் இயமனைத் தண்டித்து, அவரை ஆட்கொண்டமை பற்றி, "ஆட்கொண்டார்" என்ற திருப்பெயருடன் தெற்குக் கோபுர வாயிலில் விளங்க வீற்றிருந்தருளுகின்றார். சத்தத்தானம் என்னும் ஏழு தலங்களுள் முதன்மை பெற்றது. இலக்குமி பூசித்துப் பேறுபெற்ற தலம். திருக்கோயில் இரண்டாவது சுற்றில் இலக்குமி தவஞ் செய்து கொண்டிருக்கிறாள் என்றலால், இன்றும் அங்கு ஒருவரும் போவதில்லை. தம்மைப் பூசிக்கும் சைவர் ஒருவர் காசிக்குச் சென்று குறித்த காலத்தில் வாராமையால் பூசைமுறை தவறநேர்ந்தபோது அவரது வடிவோடு இறைவர் தாமே எழுந்தருளித் தம்மைத்தாமே பூசித்த சிறப்பு திருவாசகத்துள் "ஐயாறதனிற் சைவ னாகியும்" என்று போற்றப்பட்டதென்ப. அதன் நினைவாக இன்றும் திருவிழாவில், இறைவர், சைவராக இருந்து மகேசுர பூசை கொண்டருளும் சிறப்பு ஒரு திருநாளாகக் கொண்டாடப் பெறுகின்றது. அதன் பயனாக இன்றளவும் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனகர்த்தர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டு வருகின்றது. இந்திரன் – வாலி முதலியோர் பூசித்தமை திருப்பதிகங்களுட் காண்க. திருநாவுக்கரசு நாயனார் உள்ளிட்ட, மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. ஆளுடைய நம்பிகளும் சேரமான் பெருமானாயனாரும் திருக்கண்டியூரை வணங்கியபோது திருவையாறு எதிரே தோன்றியதால் தரிசிக்க விரும்ப, அக்காலம் காவிரி கரைபுரள வெள்ளம் பெருகியதால் வருந்தி நின்று, அக்கரையில் நின்றபடியே "ஐயாறுடைய அடிகளோ" என்று நம்பிகள் திருப்பதிகம் பாடிய அளவில், ஐயாறப்பர் "ஓலம் ஓலம்" என்று அழைத்து, அவர்கள் வந்து மீளுமளவும் காவிரியை வழிவிலகி நிற்கும்படி செய்தருளி, அவ்விரு பெருமக்களையும் வந்து தரிசிக்கச் செய்தருளிய பெருமையுடையது. (கழறிற் – புரா – 131 – 140) சுவாமி – செம்பொற் சோதிநாதர், ஐயாறப்பர்; (பஞ்சநதீசுவரர்). அம்மை – அறம் வளர்த்த நாயகி; (தர்மசம்வர்த்தினி). விநாயகர் – ஆதி விநாயகர்; தீர்த்தம் – சூரிய புட்கரணி – காவிரி முதலியன; பதிகம் 18. அப்பர் திருக்கயிலைக்காட்சி கண்டருளிய விழா ஆண்டுதோறும் சிறப்பாக நடைபெறுகிறது.

**374.** கங்கையைச் சடையுள் வைத்தார்
கதிர்ப்பொறி யரவும் வைத்தார்
திங்களைத் திகழ வைத்தார்
திசைதிசை தொழவும் வைத்தார்
மங்கையைப் பாகம் வைத்தார்
மான்மறி மழுவும் வைத்தார்
அங்கையு ளனலும் வைத்தார்
ஐயனை யாற னாரே. 1

நம் தலைவனாராகிய ஐயாறனார், சடையில் கங்கையையும் ஒளிவீசும் புள்ளிகளையுடைய பாம்பையும் பிறையையும் விளங்குமாறு வைத்துத் தம்மை எல்லாத் திசையிலுள்ளாரும் தொழுமாறு அமைத்துக் கொண்டு பார்வதி பாகராய், மான்குட்டியையும், மழுப்படையையும், உள்ளங் கையில் வைத்த தீயையும் உடையவராவார்.

ஐயனை ஐயாறனாரே – பதிக மகுடம்

**375.** பொடிதனைப் பூச வைத்தார்
பொங்குவெண் ணூலும் வைத்தார்
கடியதோர் நாகம் வைத்தார்
காலனைக் கால வைத்தார்
வடிவுடை மங்கை தன்னை
மார்பிலோர் பாகம் வைத்தார்
அடியிணை தொழவும் வைத்தார்
ஐயனை யாற னாரே. 2

ஒளி விளங்கும் பூணூலை அணிந்து, கொடிய நாகத்தைப் பூண்டு, கூற்றுவனை உயிர்காக்குமாறு உதைத்து, அழகிய பார்வதியை ஒரு பாகமாக மார்பில் வைத்து ஐயாற்றுத் தலைவராம் பெருமான் அடியவர்கள் திருநீற்றைப்பூசித்தம் திருவடிகளைத் தொழுமாறு வைத்தவராவார்.

**376.** உடைதரு கீளும் வைத்தார்
உலகங்க ளனைத்தும் வைத்தார்
படைதரு மழுவும் வைத்தார்
பாய்புலி தோலும் வைத்தார்
விடைதரு கொடியும் வைத்தார்
வெண்புரி நூலும் வைத்தார்
அடைதர வருளும் வைத்தார்
ஐயனை யாற னாரே. 3

கீளொடு கோவணம் அணிந்து, உலகங்களை நிலைநிறுத்தி, மழுப்படை ஏந்தி, பாய்கின்ற புலியின் தோலை உடுத்து, காளை எழுதிய கொடியை உயர்த்தி, வெண்புரிநூல் அணிந்து அடியார்கள் தம்மை அடைய அருள்புரிபவர் ஐயாறராகிய நம் தலைவராவார்.

**377.** தொண்டர்க டொழவும் வைத்தார்
தூமதி சடையும் வைத்தார்
**இண்டை**யைத் திகழ வைத்தார்
எமக்கென்று மின்பம் வைத்தார்
வண்டுசேர் குழலி னாளை
மருவியோர் பாகம் வைத்தார்
அண்டவா னவர்க ளேத்து
மையனை யாற னாரே. 4

எல்லா உலகங்களிலும் உள்ள தேவர்கள் வழிபடும் தலைவராகிய ஐயாறனார், சடையில் தூய பிறையைச் சூடி, முடிமாலையை விளங்க வைத்து, வண்டுகள் சேர்ந்த கூந்தலையுடைய பார்வதி பாகராய், அடியார்கள் தம்மைத் தொழவும் அடியவராகிய எங்களுக்கு என்றும் இன்பம் பெருகவும் வாய்ப்பு அளித்துள்ளார்.

இண்டை – இலையும், பூவும் இடையிட்டுத் தொடுக்கப்படும் மாலை. சிவலிங்கத்துக்கு இன்றியமையாத தொரு மாலை. "இண்டை கட்டி வழிபாடு செய்யும் கேதாரமே" திருஞானசம்பந்தர்.

| | |
|---|---|
| **378.** வானவர் வணங்க வைத்தார்<br>வல்வினை மாய வைத்தார்<br>கானிடை நடமும் வைத்தார்<br>காமனைக் கனலா வைத்தார்<br>ஆனிடை யைந்தும் வைத்தார்<br>ஆட்டுவார்க் கருளும் வைத்தார்<br>ஆனையி னுரிவை வைத்தார்<br>ஐயனை யாற னாரே. **5** | தலைவராகிய ஐயாறனார் வானவர் தம்மை வணங்கச் செய்தவராய், அடியார்களுடைய கொடிய வினைகளை அழிய வைத்தவராய், சுடுகாட்டிடைக் கூத்து நிகழ்த்துபவராய், மன்மதனைத் தீயினால் சாம்பலாகுமாறு செய்து, பசுவினிடைப் பஞ்ச கவ்வியத்தை அமைத்து அதனால் தம்மை அபிடேகிப்பவருக்கு அருள் செய்து, யானைத்தோலைப் போர்த்திக் கொண்டவராவார். |
| **379.** சங்கணி குழையும் வைத்தார்<br>சாம்பர்மெய் பூச வைத்தார்<br>வெங்கதி ரெரிய வைத்தார்<br>விரிபொழி லனைத்தும் வைத்தார்<br>கங்குலும் பகலும் வைத்தார்<br>கடுவினை களைய வைத்தார்<br>அங்கம தோத வைத்தார்<br>ஐயனை யாற னாரே. **6** | தலைவராகிய ஐயாறனார் சங்கினாலாகிய காதணியை அணிந்தவராய், அடியவர்களும் திருநீறு அணிய வைத்தவராய், சூரியனை வெயிலை வெளிப்படுத்துமாறு செய்தவராய், எல்லா உலகங்களும் படைத்தவராய், இரவையும், பகலையும் தோற்றுவித்தவராய், கொடிய வினைகளைப் போக்கும் வழிகளை உலகுக்கு அறிவித்தவராய், வேதாங்கங்கள் ஆறினையும் ஓதி உணர வைத்தவராய் உள்ளார். |
| **380.** பத்தர்கட் கருளும் வைத்தார்<br>பாய்விடை யேற வைத்தார்<br>சித்தத்தை யொன்ற வைத்தார்<br>சிவமதே நினைய வைத்தார்<br>முத்தியை முற்ற வைத்தார்<br>**முறைமுறை நெறிகள் வைத்தார்**<br>அத்தியி னுரிவை வைத்தார்<br>ஐயனை யாற னாரே. **7** | தலைவராகிய ஐயாறனார் பத்தர்களுக்கு அருள்பவராய், காளையை ஏறியூர்பவராய், அடியவர் மனத்தை ஒருவழிப்படுத்துபவராய், அம்மனம் சிவனையே நினைக்குமாறு செய்பவராய், அடியார்களுக்கு முத்தி நிலையை முழுதுமாக வைத்தவராய், அந்நிலை எய்துதற்குரிய வழிகளை அமைத்தவராய், யானைத்தோலைப் போர்வையாகக் கொண்டவராய் உள்ளார். |
| **381.** ஏறுகந் தேற வைத்தார்<br>இடைமரு திடமும் வைத்தார்<br>நாறுபூங் கொன்றை வைத்தார்<br>நாகமு மரையில் வைத்தார்<br>கூறுமை பாகம் வைத்தார்<br>கொல்புலித் தோலும் வைத்தார்<br>ஆறுமோர் சடையில் வைத்தார்<br>ஐயனை யாற னாரே. **8** | தலைவராகிய ஐயாறனார் தாம் விரும்பி இவரக் காளை வாகனத்தை உடையவராய், இருப்பிடமாக இடைமருதூரைக் கொண்டவராய், நறுமணங்கமழும் கொன்றைப் பூவைச் சூடியவராய், இடையில் பாம்பினை இறுகக்கட்டியவராய், பார்வதிபாகராய், கொல்லும் புலியின் தோலை ஆடையாக உடையவராய்க் கங்கையைச் சடையில் சூடியவராய் உள்ளார். |

382. பூதங்கள் பலவும் வைத்தார்
பொங்குவெண் ணீறும் வைத்தார்
கீதங்கள் பாட வைத்தார்
கின்னரந் தன்னை வைத்தார்
பாதங்கள் பரவ வைத்தார்
பத்தர்கள் பணிய வைத்தார்
ஆதியு மந்தம் வைத்தார்
ஐயனை யாற னாரே. 9

தலைவராகிய ஐயாறனார் பல பூதகணங்களை உடையவராய், ஒளிவீசும் வெண்ணீறு அணிந்தவராய், இசைப்பாடல்களை அடியவர் பாட வைத்தவராய், இசைக்குச் சிறப்பிடம் வழங்கியவராய், தம் திருவடிகளை அடியவர்கள் முன் நின்று போற்றி வழிபடச் செய்பவராய், தம்மையே ஆதியும் அந்தமுமாக வைத்தவராய் உள்ளார்.

383. இரப்பவர்க் கீய வைத்தார்
ஈபவர்க் கருளும் வைத்தார்
**கரப்பவர்** தங்கட் கெல்லாங்
கடுநர கங்கள் வைத்தார்
பரப்புநீர் கங்கை தன்னைப்
படர்சடைப் பாகம் வைத்தார்
அரக்கனுக் கருளும் வைத்தார்
ஐயனை யாற னாரே. 10

கரப்பவர் – ஈயாது மறைப்பவர்

தலைவராகிய ஐயாறனார், பிச்சை எடுப்பவருக்கு வழங்கும் உள்ளத்தை நன்மக்களுக்கு அருளியவராய், அங்ஙனம் கொடுப்பவர்களுக்குத் தம் அருளை வழங்கியவராய், நிறைய வைத்துக் கொண்டு இரப்பவர்களுக்கு வழங்காது மறைப்பவர் களுக்குக் கொடிய நரகத் துன்ப நுகர்ச்சியை வழங்குபவராய், பரவிய நீரை உடைய கங்கையைப் பரந்த சடையின் ஒரு பகுதியில் வைத்தவராய், இராவணனுக்கு அருள் செய்தவராய் விளங்குகின்றார்.

## 39. திருவையாறு

சமணரோடு கூடித் திரிந்த மயக்கத்தை அறுத்துத் தம்மை வந்தடைய அருளிய திருவையாறு அமர்ந்து அருளும் தேன் போன்ற இறைவரை அடைந்து உய்ந்தேன். அவரை வணங்கவல்லார் வல்வினை மாயும். பதிகம் முழுவதும் அமணரினின்று போந்த சரிதக் குறிப்பு.

**திருநேரிசை** **பதிக எண் : 39**

384. குண்டனாய்ச் சமண ரோடே
கூடிநான் கொண்ட மாலைத்
துண்டனே சுடர்கொள் சோதீ
தூநெறி யாகி நின்ற
அண்டனே யமர ரேறே
திருவையா றமர்ந்த தேனே
தொண்டனேன் றொழுதுன் பாதஞ்
சொல்லி நான்றிரிகின் றேனே. 1

அறிவிலியாய் அடியேன் சமணரோடு கூடிப் பெற்ற மனமயக்கத்தை ஒழித்தவனே! ஞானப் பிரகாசனே! தூய வழியாக நின்ற உலகத் தலைவனே! தேவர்கள் தலைவனே! திருவையாற்றில் உகந்தருளியிருக்கும் தேன் போன்ற இனியவனே! அடியேன் உன் திருவடிகளைத் தொழுது அவற்றின் பெருமைகளைச் சொல்லிக் கொண்டு நாட்டில் உலவுகின்றேன்.

**385.** பீலிகை யிடுக்கி நாளும்
பெரியதோர் தவமென் றெண்ணி
வாலிய தறிகள் போல
மதியிலார் பட்ட தென்னே
வாலியார் வணங்கி யேத்துந்
**திருவையா றமர்ந்த தேனோ**
டாலியா வெழுந்த நெஞ்ச
மழகிதா வெழுந்த வாறே. 2

"திருவையாறமர்ந்த தேனே" என்பது பதிக மகுடம்.
வடகுரங்காடு துறையில் வழிபட்ட வாலி இங்கும் வணங்குகிறார்.

மயிற்பீலியைக் கையில்வைத்துக் கொண்டு அச்செயலையே பெரிய தவமாகக் கருதி, மேல்தோல் உரிக்கப்பட்டதனால் வெண்மையாக உள்ள தடிகள்போல ஆடையின்றி அறிவுகெட்ட சமணர்கள் என்ன பயனை அனுபவித்தார்கள்? தூய அறிவினை உடையவர்கள் வணங்கித் துதிக்கின்ற திருவையாற்றை உகந்தருளி இருக்கின்ற தேன் போன்ற பெருமானோடு கூடிக் களிக்கும் அடியேன் உடைய நெஞ்சம் உண்மையில் அழகியதாகவே எழுந்தியல்லா தாகிறது.

**386.** தட்டிடு சமண ரோடே
தருக்கிநான் றவமென் றெண்ணி
ஒட்டிடு மனத்தி னீரே
யும்மையான் செய்வ தென்னே
மொட்டிடு கமலப் பொய்கைத்
திருவையா றமர்ந்த தேனோ
டொட்டிடு முள்ளத் தீரே
யும்மைநா னுகந்திட் டேனே. 3

ஒட்டிடு மனத்தினீரே – சமணம். உள்ளாத மனம்
ஒட்டிடு உள்ளத்தீரே – சைவம். உள்ளிய உள்ளம்
மனத்தினீரே – பன்மை இகழ்ச்சி குறித்தது.
உள்ளத்தீரே – பன்மை பெருமையும், புகழ்ச்சியும் குறித்தது.

உணவுக்குரிய உண்கலன்களாகிய தட்டுக்களைக் கையில் இடுக்கிக் கொள்ளும் சமணரோடு செருக்குற்று அச்செயலையே தவம் என்று கருதி யான் அவர்களோடு இணைந்து வாழுமாறு செய்த மனமே! உனக்கு நான் என்ன தண்டனை கொடுப்பேன்? மொட்டோடு கூடிய தாமரைகள் காணப்படும், மானிடர் ஆக்காத நீர்நிலைகளை உடைய திருவையாற்றில் விரும்பி உறையும் தேன்போன்ற எம்பெருமானோடு இப்பொழுது இணைந்து வாழும் நெஞ்சே! உன் செயலைக் கண்டு உன்னை நான் இப்பொழுது மெச்சுகின்றேன்.

**387.** பாசிப்பன் மாசு மெய்யர்
பலமிலாச் சமண ரோடு
நேசத்தா லிருந்த நெஞ்சை
நீக்குமா றறிய மாட்டேன்
தேசத்தார் பரவி யேத்துந்
திருவையா றமர்ந்த தேனை
வாசத்தால் வணங்க வல்லார்
வல்வினை மாயு மன்றே. 4

பல்துலக்காததனால் பசிய நிறம்படிந்த பல்லினராய் அழுக்குப் படிந்த உடம்பினராய்ப் பயனற்ற வாழ்வினை வாழும் சமணரோடு அன்பினால் கூடிவாழ்ந்த மனத்தை அவரிடம் இருந்து பிரித்து நல்வழிப்படுத்தும் வழியை அறியமாட்டாதேனாய் முன்பு அடியேன் இருந்தேன். உலகிலுள்ள நன்மக்கள் எல்லோரும் அன்பினால் முன்நின்று துதித்து வணங்குகின்ற திருவையாறு அமர்ந்த தேனை நறுமணம் கமழும் பூக்களோடு சென்று வணங்கும் ஆற்றல் உடையவர்களுடைய கொடிய வினைகள் அழிந்து ஒழியும் என்பதை இப்பொழுது அறிந்தேன்.

| | |
|---|---|
| **388.** கடுப்பொடி யட்டி மெய்யிற்<br>கருதியோர் தவமென் றெண்ணி<br>வடுக்களோ டிசைந்த நெஞ்சே<br>மதியிலீ பட்ட தென்னே<br>மடுக்களில் வாளை பாயுந்<br>திருவையா றமர்ந்த தேனை<br>அடுத்துநின் றுன்னு நெஞ்சே<br>யருந்தவஞ் செய்த வாறே. 5 | கடுக்காய்ப் பொடியை உடம்பில் தடவிக் கொள்ளும் அதனையே ஒரு தவ வாழ்க்கை என்று கருதும் குற்றங்களிலே பொருந்திய என் மனமாகிய அறிவுகெட்ட பொருளே! நீ அந்தப் பயனற்ற செயல்களால் பெற்ற பயன்தான் யாது ? நீர்த்தேக்கங்களிலே வாளை மீன்கள் துள்ளித்திரியும் திருவையாறு அமர்ந்ததேனை அணுகி நிலையாக நின்று தியானிக்கும் மனமே! நீ சிறந்த தவச் செயலை இப்பொழுதே செய்தனை ஆகின்றாய். |
| **389.** துறவியென் றவம தோரேன்<br>சொல்லிய செலவு செய்து<br>உறவினா லமண ரோடு<br>முணர்விலே னுணர்வொன் றின்றி<br>நறவமார் பொழில்கள் சூழ்ந்த<br>திருவையா றமர்ந்த தேனை<br>மறவிலா நெஞ்ச மேநன்<br>மதியுனக் கடைந்த வாறே. 6 | வீண் செயல் என்று ஆராய்ந்து உணராதேனாய்ச் சமணர்களோடு கொண்ட உறவினாலே அவர்கள் குறிப்பிட்ட வழியிலேயே காலம் போக்கி உண்மையான செயல்பற்றிய அறிவு இன்றி நல்லுணர்வு இல்லேனாய் வாழ்ந்தேன். தேன் நிரம்பிய சோலைகள் சூழ்ந்த திருவையாறு அமர்ந்த தேனை மறவாமையால் வாழும் மனமே! உனக்கு இந்த நன்மதி வாய்த்தவாறென்னே! |
| **390.** பல்லுரைச் சமண ரோடே<br>பலபல கால மெல்லாம்<br>சொல்லிய செலவு செய்தேன்<br>சோர்வனா னினைந்த போது<br>மல்லிகை மலருஞ் சோலைத்<br>திருவையா றமர்ந்த தேனை<br>எல்லியும் பகலு மெல்லா<br>நினைந்தபோ தினிய வாறே. 7<br><br>‘தேன்’ என்றதன் கருத்து திருவையாற்றில் ஒரு பெட்டகத்துள் எழுந்தருளிய சிவலிங்கப் பெருமானுக்கு தேனாட்டு நிகழும்போது கண்டு உணர்ந்து கொள்ளத்தக்கது | வினவிய ஐயங்களுக்குப் பல வழிகளைக் கொண்டு விடைகூறும் சமணர்களோடு பழகிப் பல ஆண்டுகள் அவர்கள் குறிப்பிட்ட வழியில் வாழ்ந்து, அவ்வாறு வாழ்ந்த வாழ்வை நினைக்கும் போது அடியேன் வாழ்நாள் வீணானது குறித்து மனத்தளர்வு உறுகின்றேன். மல்லிகைச் செடிகளின் பூக்கள் மலரும் சோலைகளையுடைய திருவையாறு அமர்ந்த தேனை இப்பொழுது இரவு பகல் ஆகிய எல்லாக் காலத்தும் தியானிக்கும் இனிமை இருந்தவாறென்னே! |

| | |
|---|---|
| 391. மண்ணுளார் விண்ணு ளாரும்<br>வணங்குவார் பாவம் போக<br>எண்ணிலாச் சமண ரோடே<br>யிசைந்தனை **யேழை நெஞ்சே**<br>தெண்ணிலா வெறிக்குஞ் சென்னித்<br>திருவையா றமர்ந்த தேனைக்<br>கண்ணினாற் காணப் பெற்றுக்<br>கருதிற்றே முடிந்த வாறே. 8<br><br>இத்திருப்பதிகம் முழுவதும் திருவையாற்றிலே சிவாநந்தத் தேனை நுகரும் பேரின்பத்தை முன்னரே அடையவொட்டாது செய்த சமண சமயச் சார்பை நினைந்து ஏழை நெஞ்சுக்கு இரங்கிக் கூறியதாக அறிய வேண்டும். | அறிவில்லாத மனமே! மக்களும் தேவரும் தம் தீவினை நீங்கத் தெளிந்த பிறை ஒளிவீசும் சென்னியை உடையராய்த் திருவையாறு அமர்ந்த தேன் போன்ற எம்பெருமானை மண்ணவரும் விண்ணவரும் வணங்குவாராக, நீ ஒரு பொருளாக எண்ணத்தகாதவரான சமணரோடு இணைந்து காலத்தைப் போக்கினாயே. அப்பெருமானை நாம் கண்ணினால் காணப் பெற்றதனால் நாம் விரும்பிய வீடுபேற்றின்பம் கைகூடிவிட்ட காரியமாயிற்று. |
| 392. குருந்தம தொசித்த மாலும்<br>குலமலர் மேவி னானும்<br>திருந்துநற் றிருவ டியுந்<br>திருமுடி காண மாட்டார்<br>அருந்தவ முனிவ ரேத்துந்<br>திருவையா றமர்ந்த தேனைப்<br>பொருந்திநின் றுன்னு நெஞ்சே<br>பொய்வினை மாயு மன்றே. 9 | இடைக்குலச் சிறுமியர் மரக்கிளைகளில் தொங்க விடப்பட்ட தம் ஆடைகளைத் தாங்களே எடுத்துக்கொண்டு உடுத்து மாறு குருந்தமரத்தைக் கண்ணனாக அவதரித்த காலத்தில் வளைத்துக் கொடுத்த திருமாலும், மேம்பட்ட தாமரையில் விரும்பித் தங்கிய பிரமனும் மேம்பட்ட பெரிய திருவடிகளையும் திருமுடியையும் காண இயலாதவர்களாக, மேம்பட்ட முனிவர்கள் உயர்த்திப் புகழும் திருவையாறு அமர்ந்த தேனை உன்னுள் பொருத்தித் தியானிக்கும் மனமே! அச்செயலால் நம் பொய்யான உடலிலிருந்து நுகரும் வினைப்பயன்கள் யாவும் அழிந்து விடுதல் தெளிவு. |
| 393. அறிவிலா வரக்க னோடி<br>யருவரை யெடுக்க லுற்று<br>முறுகினான் முறுகக் கண்டு<br>**மூதறி வாள னோக்கி**<br>**நிறுவினான்**சிறு விரலா<br>னெரிந்துபோய் நிலத்தின் வீழ<br>அறிவினா லருள்கள் செய்தான்<br>றிருவையா றமர்ந்த தேனே. 10<br><br>மலையெடுத்தது அறிவின்மையால். சாமகானம் பாடி அருள்கள் பெற்றது அறிவினால். அறிவு என்பது | இறைவனுடைய ஆற்றலைப் பற்றிய உண்மை அறிவு இல்லாத இராவணன் விரைந்து சென்று கயிலைமலையைப் பெயர்ப்பதற்கு முழுமையாக முயன்ற செயலைக்கண்டு, உண்மையான ஞான வடிவினனாகிய திருவையாறு அமர்ந்த தேன்போன்றவன் தன் மனத்தால் நோக்கித் தன் கால்விரல் ஒன்றனை அழுத்த அதனால் இராவணன் உடல் நொறுங்கித் தரையில் வீழப் பின் அவன் இறைவனைப் பற்றிய அறிவோடு சாமவேதகீதம் பாட, அவனுக்கு அப்பெருமான் அருள்களைச் செய்தான். |

இறைவனின் கருணை என்னும் சத்தியாகிய அருளாகக் கொள்ளலாம். (ஞானம் – ஈசன் பால் அன்பே)

மூதறிவாளன் – எழுவாய்; காண்டல், நோக்கல், நிறுவல், செய்தல் நான்கும் அவன் வினைகள். அரக்கனுடையவை. அறிவின்மை, எடுக்கலுறுதல், முறுகல், நெரிதல், போதல், வீழ்தல். அறிவு – இருவரதுமாம். முதல்வன் – பேரறிவாளன், அரக்கன் – சிற்றறிவாளன்.

## 40. திருவையாறு

**( இல்லை, இல்லை என்று எதிர்மறை முகத்தால் இன்றியமையாமையை விளக்கும் பதிகம் )**

**திருநேரிசை** **பதிக எண் : 40**

**394.** தானலா துலக மில்லை
சகமலா தடிமை யில்லை
கானலா தாட லில்லை
கருதுவார் தங்க ளுக்கு
வானலா தருளு மில்லை
வார்குழன் மங்கை யோடும்
ஆனலா தூர்வ தில்லை
யையனை யாற னார்க்கே. 1

நம் தலைவராகிய ஐயாறனார் தொடர்பின்றி உலகங்களின் நிலைபேறு இல்லை. உலகங்களிலுள்ள ஆன்மாக்களைத் தவிர வேறு அடிமைகள் அவர்க்கு இல்லை. சுடுகாட்டினைத் தவிர வேறு கூத்தாடும் இடம் இல்லை. தம்மை உண்மையால் தியானிப்பவர்க்கு வீடு பேற்றைத் தவிர வேறு சிறு சிறப்புக்களை அவர் அருளுவதில்லை. நீண்ட கூந்தலை உடைய பார்வதியோடும் இவர்ந்து செல்வதற்குக் காளையைத் தவிர வேறு வாகனமும் அவர்க்கு இல்லை.

ஆய எவ்வகைப் பொருள்களும் அவனுடைய பொருள்கள். உடைப்பொருள் அடிமையும், உடைமையும் என இருவகைப்படும். அவற்றுள் உயிர் வருக்கமெல்லாம் இறைவனுக்கு அடிமை எனவும், மாயை, கன்மங்களும், அவற்றின் காரியங்களும் ஆகிய உலகம், உடைமை எனவும் சிவஞானபோதம் அவையடக்கத்தில் சொல்லப்பட்டுள்ளது.

சகம் – தோன்றியழிவது; உலகம்; காரியம்; மாயை – காரணம்.

**395.** ஆலலா லிருக்கை யில்லை
யருந்தவ முனிவர்க் கன்று
நூலலா னொடிவ தில்லை
நுண்பொரு ளாய்ந்து கொண்டு
மாலுநான் முகனுங் கூடி
மலரடி வணங்க வேலை
**ஆல**லா லமுத மில்லை
யையனை யாற னார்க்கே 2

ஐயன் ஐயாறனார்க்குக் கல்லால மரத்தைத் தவிர வேற்றிடம் உபதேச பீடமாக அமைவதில்லை. பெருந்தவத்தையுடைய முனிவர்களுக்கு அப்பிரானார் நுண்பொருளாய்வு செய்து வேதாகமப் பொருள்களைத் தவிர வேற்றுப் பொருள்களை உபதேசிப்பதில்லை. திருமாலும் பிரமனும் கூடித் தம் மலர் போன்ற திருவடிகளை வணங்க அவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கித் தாம் உட்கொண்ட கடல் விடத்தைத் தவிர அவருக்கு உணவு வேறு இல்லை.

ஆல் – முன்னையது மரம்
பின்னையது விடம்

**396.** நரிபுரி சுடலை தன்னி
ணடமலா னவிற்ற லில்லை
சுரிபுரி **குழலி யோடுந்**
**துணையலா லிருக்கை யில்லை**
தெரிபுரி சிந்தை யார்க்குத்
தெளிவலா லருளு மில்லை
அரிபுரி மலர்கொ டேத்து
மையனை யாற னார்க்கே. 3

எஞ்ஞான்றும் அருளுடன் கூடியவர்

திருமால் விரும்பிய மலர்களைக் கொண்டு வழிபடும் ஐயன் ஐயாறனார் நரிகள் விரும்பி உலவும் சுடுகாட்டில் நடமாடல் தவிர மற்றொன்றுஞ் செய்வதில்லை. சுருண்ட முறுக்குண்ட கூந்தலை உடைய பார்வதியைத் தவிர வாழ்க்கைத் துணையாக வேறு ஒருவரையும் கொண்டு வாழ்தல் இல்லை. தன்னுண்மையை ஆராய்ந்து சிந்தித்தலை யுடைய அடியார்களுக்கு உள்ளத் தெளிவினை வழங்குவதைத் தவிர எம்பெருமான் அருளக் கூடியதும் வேறொன்றும் இல்லை.

---

**397.** தொண்டலாற் றுணையு மில்லை
தோலலா துடையு மில்லை
கண்டலா தருளு மில்லை
கலந்தபின் பிரிவ தில்லை
பண்டைநான் மறைகள் காணாப்
பரிசின னென்றென் றெண்ணி
அண்டவா னவர்க ளேத்து
மையனை யாற னார்க்கே. 4

பழைய நான்மறைகளாலும் உள்ளவாறு உணர இயலாதவர் என்று தியானித்துத் தேவர்களும் துதிக்கும் ஐயன் ஐயாறனார்க்குத் தொண்டர்களைத் தவிரத் துணையாவார் பிறர் இல்லை. தோல்களைத் தவிர வேறு ஆடைகள் இல்லை. அடியார்களின் அநுபூதியிற் கண்டாலல்லாமல் அவர் அவர்களுக்கு அருளுவதில்லை. அடியார்களோடு கூடிய பின்னர் அவர்களை அப்பெருமான் பிரிவதில்லை.

---

**398.** எரியலா லுருவ மில்லை
யேறலா லேற லில்லை
கரியலாற் போர்வை யில்லை
காண்டகு சோதி யார்க்குப்
பிரிவிலா வமரர் கூடிப்
பெருந்தகைப் பிரானென் றேத்தும்
அரியலாற் றேவி யில்லை
யையனை யாற னார்க்கே. 5

ஐயனை ஐயாறனார்க்கே என்பது பதிக மகுடம்

ஐயன் ஐயாறனார்க்குத் நெருப்புருவம் தவிர வேற்றுருவமில்லை. காளையைத் தவிர வேற்று வாகனங்களில் அவர் ஏறுவதில்லை. யானைத் தோலைத் தவிர வேறு போர்வை இல்லை. காணுவதற்கு ஏற்ற ஞானப் பிரகாசம் உடைய அப்பெருமானுக்கு, பிரியாது தேவர்கள் கூடி 'மேம்பட்ட சிறப்பினை உடைய பெருமான்' என்று துதிக்கும் திருமாலைத் தவிர வேறு தேவி இல்லை.

**399.** என்பலாற் கலனு மில்லை
யெருதலா லூர்வ தில்லை
புன்புலா னாறு காட்டிற்
பொடியலாற் சாந்து மில்லை
துன்பிலாத் தொண்டர் கூடித்
தொழுதழு தாடிப் பாடும்
அன்பலாற் பொருளு மில்லை
யையனை யாற னார்க்கே. 6

ஐயன் ஐயாறனார்க்கு எலும்புகளைத் தவிர வேறு அணிகலன்கள் இல்லை. காளையைத் தவிர வேற்று வாகனங்களில் அவர் ஊர்வதில்லை. கீழான புலால் நாற்றம் வீசும் சுடுகாட்டுச் சாம்பலைத் தவிர வேற்றுப் பொருள்களைப் பூசுவதில்லை. உலகத் துன்பங்களில் அழுந்துதல் இல்லாத அடியவர்கள் ஒன்று கூடித் தொழுது, மனம் உருகிக் கண்ணீர் வடித்து ஆடிப்பாடும் அன்பினைத் தவிர அவர் வேறு எதனையும் குறிப்பிடத்தக்க பொருளாய்க் கருதுவதில்லை.

அலாது – இல்லை என்று எதிர்மறை முகத்தால் கூறியவை உறுதிப் பொருள்பட நின்று இன்றியமையாமையை விளக்கின.

**400.** கீளலா லுடையு மில்லை
கிளர்பொறி யரவம் பைம்பூண்
தோளலாற் றுணையு மில்லை
தொத்தலர் கின்ற வேனில்
வேளலாற் காயப் பட்ட
வீரரு மில்லை மீளா
ஆளலாற் கைம்மா றில்லை
யையனை யாற னார்க்கே. 7

அரை நாண் பட்டிகையோடு கூடிய கோவணமாகிய கீள் உடையைத் தவிர ஐயன் ஐயாறனார்க்கு வேறு உடையும் இல்லை. ஒளி வீசும் புள்ளிகளை உடைய பாம்புகளை அழகிய அணிகலன்களாக அணியும் தம் தோள்களைத் தவிர வேறு துணையும் இல்லை. பூங்கொத்துக்கள் மலரும் இளவேனிற் காலத்திற்கு அரசனாகிய மன்மதனைத் தவிர அவரால் நெற்றிக்கண் பொறியால் எரிக்கப்பட்ட வீரன் வேறு ஒருவனும் இல்லை. அப்பெருமானுக்கு அவரை விடுத்து என்றும் நீங்குதல் இல்லாத அடிமைத் தொழில் செய்வதனைத் தவிரக் கைம்மாறாக அடியார்கள் செய்யத்தக்கது பிறிதொன்றுமில்லை.

இறைவர் உயிர்களுக்கு நித்தம் நீங்காது செய்யும் அருளுக்குக் கைம்மாறு அவருக்கு நித்தம் நீங்காது, ஆட்செய்வதைத் தவிர வேறொன்றுமில்லை. திருவாசகம் கைம்மாறு கொடுத்தல் பதிகத்துக்குப் பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார் உரையைப் படிக்க வேண்டும். நானோ பரம ஏழை. என்னையே கொடுத்துவிட்ட பின் கைம்மாறு கொடுப்பதற்கு என்ன இருக்கிறது ?.

**401.** சகமலா தடிமை யில்லை
தானலாற் றுணையு மில்லை
நகமெலாந் தேயக் கையா
னாண்மலர் தொழுது தூவி
முகமெலாங் கண்ணீர் மல்க
முன்பணிந் தேத்துந் தொண்டர்
அகமலாற் கோயி லில்லை
யையனை யாற னார்க்கே. 8

ஐயன் ஐயாறனார்க்கு உலக உயிர்களைத் தவிர அடியமையாவார் வேறு இல்லை. தமக்குத் தாமே ஒப்பாவார் அன்றி ஒப்பாவார் வேறு இல்லை. நகங்களெல்லாம் தேயுமாறு கைகளால் புதுமலர்களைக் கொய்து வணங்கி அவற்றை அவருக்கு அர்ப்பணித்து முகமெல்லாம் கண்ணீர் வழிந்துபரவ, அவர் திருமுன்னர் வணங்கித் துதிக்கும் தொண்டர்களின் உள்ளத்தைத் தவிர அவருக்கு வேறு இருப்பிடம் இல்லை.

அவனன்றி ஓரணுவும் அசையாது

402. உமையலா துருவ மில்லை
யுலகலா துடைய தில்லை
நமையெலா முடைய ராவர்
நன்மையே தீமை யில்லை
கமையெலா முடைய ராகிக்
கழலடி பரவுந் தொண்டர்க்
கமைவிலா வருள்கொ டுப்பா
ரையனை யாற னார்க்கே. 9

வினைப் பயனாக எய்தும் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு மேலும் வினையேறாது திருவடித் தொண்டு பூண்டார்க்கு அளவிலாது அருள் கொடுப்பது ஆண்டவன் கடமை. அவரால் எப்போதும் நன்மையே தீமையில்லை.

ஐயன் ஐயாறனார்க்கு பார்வதியோடு இணைந்த உருவமன்றி வேற்று உருவம் இல்லை. இவ்வுலகங்களைத் தவிர அவருக்கு வேறு உடைமைப் பொருள் இல்லை. அவர் அடியவராகிய நம்மை எல்லாம் தம் அடிமைகளாக உடையவர். உயிர்களுக்கு அவரால் நன்மையே அன்றித் தீமை சற்றும் இல்லை. பகைவரையும் பொறுக்கும் பொறுமை உடையவராகித்தம் திருவடிகளை முன்நின்று துதிக்கும் அடியவர்களுக்குக் குறைவில்லாத அருள்களை அவர் நல்குபவராவார்.

403. மலையலா லிருக்கை யில்லை
மதித்திடா வரக்கன் றன்னைத்
தலையலா னெரித்த தில்லை
தடவரைக் கீழ டர்த்து
நிலையிலார் புரங்கள் வேவ
நெருப்பலால் விரித்த தில்லை
அலையினார் பொன்னி மன்னு
மையனை யாற னார்க்கே. 10

அலைகளை உடைய காவிரி நிலையாக ஓடும் ஐயாற்றில் வாழ் பெருமானுக்குக் கயிலை மலையைத் தவிர வேறு சிறப்பான இருப்பிடம் இல்லை. தம்மை மதியாது கயிலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணனுடைய தலையைத் தவிர வேற்றவருடைய தலையை அவர் மலைக்கீழ் வருத்தி நெரித்தலை அறியாதவர் அவர். நிலைபேறில்லாத அசுரர்களின் மும்மதில்களும் அழிய நெருப்பைப் பரப்பியதனைத் தவிர அவர் வேற்றுச் செயல் எதுவும் செய்யவில்லை.

## 41. திருச்சோற்றுத்துறை

மூவர் பாடல் பெற்றது. திருவையாற்று சப்த தானங்களுள் ஒன்று. பஞ்ச காலத்தில் வந்த சிவனடியார்க்கெல்லாம் அடைக்கலம் தந்துதவியவர், தல இறைவியாம் அன்னபூரணி அம்மையார். இது அருளாளர் ஒருவர் அட்சய பாத்திரம் பெற்ற தலம். சோறு – முத்தி என்ற பொருளும் உண்டு.

**திருநேரிசை** **பதிக எண் : 41**

404. பொய்விரா மேனி தன்னைப்
பொருளெனக் காலம் போக்கி
மெய்விரா மனத்த னல்லேன்
வேதியா வேத நாவா
ஐவரா லலைக்கப் பட்ட
வாக்கைகொண் டயர்த்துப் போனேன்
செய்வரா லுகளுஞ் செம்மைத்
திருச்சோற்றுத் துறைய னாரே. 1

பொய்விராமேனி – பொய்யாய உடல்

வயல்களிலே வரால் மீன்கள் துள்ளித் திரியும் திருச்சோற்றுத்துறைப் பெருமானே! வேதங்களால் பரம் பொருளாக உணரப்பட்டவரே! வேதங்களை ஓதும் நாவினரே! பொய்ப்பொருள்களே கலந்து அமைக்கப்பட்ட இவ்வுடம்பை நிலையான பொருளாகக் கருதி இதனைப் பேணுவதிலேயே காலத்தை வீணாக்கி மெய்ப்பொருளிலே பொருந்தும் சார்பு அற்றேனாய் ஐம்பொறிகளால் வருத்தப்பட்ட இவ்வுடம்பைக் கொண்டு மயங்கிக் காலத்தைக் கழித்துவிட்டேன்.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **405.** கட்டராய் நின்று நீங்கள்<br>காலத்தைக் கழிக்க வேண்டா<br>எட்டவாங் கைகள் வீசி<br>யெல்லிநின் றாடு வானை<br>அட்டகா மலர்கள் கொண்டே<br>யானஞ்சு மாட்ட வாடிச்<br>சிட்டரா யருள்கள் செய்வார்<br>திருச்சோற்றுத் துறைய னாரே. 2 | மலபந்தம் உடையோராய் உடற் கட்டினைப் பேணுவதில் நீங்கள் காலத்தைக் கழித்தல் கூடாது. தம் எண் கைகளையும் வீசியவராய் இரவில் ஆடுபவராய் உள்ளார் சோற்றுத்துறையரனார். சோலைகளிலிருந்து கிட்டும் எட்டுப்பூக்களையும் நீங்கள் அர்ப்பணித்துப் பஞ்ச கவ்வியத்தால் அபிடேகிக்க அவ்வபிடேகத்தை ஏற்று சிட்டராய் உள்ள அப்பெருமான் உங்களுக்கு அருள்கள் செய்வார். |
| **406.** கல்லினாற் புரமூன் றெய்த<br>கடவுளைக் காத லாலே<br>எல்லியும் பகலு முள்ளே<br>யேகாந்த மாக வேத்தும்<br>பல்லில்வெண் டலைகை யேந்திப்<br>பல்லிலந் திரியுஞ் செல்வர்<br>சொல்லுநன் பொருளு மாவார்<br>திருச்சோற்றுத் துறைய னாரே. 3 | மலையை வில்லாக வளைத்து முப்புரங்களையும் அழித்த பெருமானை அன்போடு தனித்திருந்து இரவும் பகலும் உள்ளத்தில் தியானியுங்கள். பல்லில்லாத வெள்ளிய மண்டையோட்டை உண்கலமாக ஏந்திப் பல வீடுகளிலும் பிச்சைக்காகத் திரியும் செல்வராய், வேதமாயும் வேதத்தின் விழுப்பொருளாயும் உள்ள அவர் உங்களால் தியானிக்கத்தக்க திருச்சோற்றுத் துறையனாரே. |
| **407.** கறையராய்க் கண்ட நெற்றிக்<br>கண்ணராய்க் பெண்ணோர் பாகம்<br>இறையரா யினிய ராகித்<br>தனியராய்ப் பனிவெண் டிங்கட்<br>பிறையராய்ச் செய்த வெல்லாம்<br>பீடராய்க் கேடில் சோற்றுத்<br>துறையராய்ப் **புகுந்தென் னுள்ளச்**<br>**சோர்வுகண் டருளி னாரே.** 4 | நீலகண்டராய், நெற்றிக்கண்ணராய்ப் பார்வதிபாகத் தலைவராய், இனியராய், ஒப்பற்றவராய் இருப்பாராய், குளிர்ந்த வெண் பிறையைச் சூடியவராய், பெருஞ்செயல்களையே செய்பவராய் உள்ள, என்றும் அழிதல் இல்லாத திருச்சோற்றுத்துறை இறைவர் அடியேனுடைய உள்ளத்திலே புகுந்து அதனுடைய தளர்ச்சியைக் கண்டு, அது நீங்க அருள் செய்தவராவார். |
| **408.** பொந்தையைப் பொருளா வெண்ணிப்<br>பொருக்கெனக் காலம் போனேன்<br>எந்தையே யேக மூர்த்தி<br>யென்றுநின் றேத்த மாட்டேன்<br>பந்தமாய் வீடு மாகிப்<br>பரம்பர மாகி நின்று<br>சிந்தையுட் டேறல் போலுந்<br>திருச்சோற்றுத் துறைய னாரே. 5 | பல ஓட்டைகளை உடைய இவ்வுடலைப் பேணத் தக்க பொருளாய்க் கருதி விரைவாகக் காலத்தை, 'பற்றினையும் வீட்டின்பத்தையும் தருபவராய் மேலாருள் மேலாராய் நின்று உள்ளத்தில் தேன் போன்று இனிக்கும் திருச்சோற்றுத் துறைப் பெருமானே! எம் தலைவரே! தனிப் பெருந் தெய்வமே' என்று துதியாதேனாய், விரைந்தகலக் காலங் கழித்தேன். |

| | |
|---|---|
| **409.** பேர்த்தினிப் பிறவா வண்ணம்<br>பிதற்றுமின் பேதை பங்கன்<br>பார்த்தனுக் கருள்கள் செய்த<br>பாசுப தன்றி றமே<br>ஆர்த்துவந் திழிவ தொத்த<br>வலைபுனற் **கங்கை யேற்றுத்**<br>**தீர்த்தமாய்ப் போத விட்டார்**<br>திருச்சோற்றுத் துறைய னாரே. 6 | பார்வதிபாகராய், அருச்சுனனுக்கு அருள்கள் செய்த பாசுபத வேடத்தினராய் ஆரவாரித்துக் கொண்டு வானிலிருந்து இறங்கிய அலையோடு கூடிய நீரை உடைய கங்கையைச் சடையில் ஏற்று உலகவருக்கு நீராடுதற்குரிய தீர்த்தமாகப் பெருகவிட்ட திருச்சோற்றுத் துறையனார் செய்திகளை, இனி மீண்டும் பிறவி எடுக்காத பேறு பெறுவதற்காகப் பலகாலும் அடைவுகேடாகக் கூறுங்கள். (அடைவு கெட – வாயில் வந்தவந்த படி) |
| **410.** கொந்தார்பூங் குழலி னாரைக்<br>கூறியே காலம் போன<br>எந்தையெம் பிரானாய் நின்ற<br>விறைவனை யேத்தா தந்தோ<br>முந்தரா வல்கு லாளை<br>யுடன்வைத்த வாதி மூர்த்தி<br>செந்தாது புடைகள் சூழ்ந்த<br>திருச்சோற்றுத் துறைய னாரே. 7 | விரைந்து ஊரும் பாம்பின் படம் போன்ற அல்குலை உடைய பார்வதியின் பாகரான, எங்கள் தந்தையாராய், எங்கள் தலைவராய் உள்ள சிவந்த மகரந்தங்கள் எல்லா இடங்களிலும் பரவிக் கிடக்கும் திருச்சோற்றுத் துறைவனாரே ஆதிமூர்த்தியாவர். அவரைத் துதிக்காமல் கொத்துக்களாக மலர்ந்த பூக்களைக் கூந்தலில் அணிந்த மகளிரைப் புகழ்ந்தவாறே எம் காலங்கள் வீணாகி விட்டனவே! |
| **411.** அங்கதி ரோன வனை<br>யண்ணலாக் கருத வேண்டா<br>வெங்கதி ரோன்வ ழியே<br>போவதற் கமைந்து கொண்மின்<br>அங்கதி ரோன வனை<br>யுடன்வைத்த வாதி மூர்த்தி<br>செங்கதி ரோன்வ ணங்குந்<br>திருச்சோற்றுத் துறைய னாரே. 8 | அழகிய கிரணங்களை உடைய பிறையைக் கங்கை பாம்பு முதலியவற்றுடன் சடையில் வைத்த முதற்கடவுள் சூரியனால் வணங்கப்படுகின்ற திருச்சோற்றுத் துறையனாரே ஆதலின் அழகிய கிரணங்களை உடைய சூரியனைத் தலைமைக் கடவுளாகக் கருதாமல் அந்தச் சூரிய மண்டலத்தின் வழியாக அர்ச்சிராதி மார்க்கமாய் வீட்டுலகத்தை அடைவதற்கு உங்களைப் பக்குவப்படுத்திக் கொள்ளுங்கள். |
| **412.** ஓதியே கழிக்கின் றீர்க<br>ளுலகத்தீ ரொருவன் றன்னை<br>நீதியா னினைய மாட்டீர்<br>நின்மல னென்று சொல்லீர்<br>சாதியா நான்மு கனுஞ்<br>சக்கரத் தானுங் காணாச்<br>சோதியாய்ச் சுடர தானார்<br>திருச்சோற்றுத் துறைய னாரே. 9<br><br>சிவபிரானை ஓதி அறிதல் அரிது. உள்ளே தேடியுணர்தல் எளிது. வெளியே தேடி அறியவோ, உணரவோ முடியாது. | ‘அவன் அருளாலே அவனைக் காணவேண்டும்’ என்பதனைச் செயற்படுத்தாமல் தம் முயற்சியால் எம் பெருமானைக் காணலாம் என்று முயன்ற பிரமனும், திருமாலும் காண முடியாத ஞான ஒளியினையுடையராய்த் தீத்தம்பமான திருச்சோற்றுத் துறையனார் ஆகிய ஒப்பற்ற பெருமானை நெறிமுறைப்படி தியானம் செய்ய மாட்டீராய், அவரைத் தூயவர் என்று போற்றாதீராய் உலகமக்களாகிய நீங்கள் பயனற்ற நூல்களைப் பயின்றே காலத்தைக் கழிக்காதீர்கள். |

413. மற்றுநீர் மனம்வை யாதே
மறுமையைக் கழிக்க வேண்டில்
பெற்றதோ ருபாயந் தன்னாற்
பிரானையே பிதற்று மின்கள்
கற்றுவந் தரக்க னோடிக்
கயிலாய மலையெ டுக்கச்
செற்றுகந் தருளிச் செய்தார்
திருச்சோற்றுத் துறைய னாரே. 10

மறுமையில் பிறப்பு ஏற்படாத வகையில் மறுமை என்பதனையே அடியோடு நீங்கள் போக்க விரும்பினால், மற்றைப் பொருள்களிடத்தில் மனத்தை நிலையாக வைக்காமல், பல நூல்களையும் கற்ற செருக்கோடு அரக்கனாகிய இராவணன் விரைந்து சென்று கயிலை மலையைப் பெயர்க்கமுற்பட முதற்கண் அவனை ஒறுத்துப் பின் அவனுக்கு அருள்கள் செய்த திருச்சோற்றுத் துறையனை, அனுபவப் பொருளை ஞானதேசிகர்பால் கேட்டுப் பெற்ற முத்தி உபாயங்களால் பலகாலும் அடைவுகெடத் துதித்துப் பேசுங்கள்.

## 42. திருத்துருத்தி

துருத்தி – குத்தாலம். காவிரியின் தென்கரைத்தலம். வேள்விக்குடி வடகரைத்தலம். சிவபெருமான் வேள்விக்குடியில் அம்மையை மணப்பதற்கு முன் இங்கு பிரமசாரியாக எழுந்தருளியிருந்து வேதமோதினாராதலின் உத்தரவேதீசுவரர் எனப்படுகிறார். தான் அருளிய வேதத்தைத் தாமே அவ்வாறு சொன்னமையால் சுவாமி பெயர் சொன்னவாறறிவார். உளத்தில் எண்ணியவற்றை வாயாற் சொன்னவாறு அறிவார். சுந்தரர் தோல் வியாதி தீர்ந்த ஊர்.

**திருநேரிசை** **பதிக எண் : 42**

414. பொருத்திய குரம்பை தன்னைப்
பொருளெனக் கருதவேண்டா
இருத்தியெப் பொழுதும் நெஞ்சு
ளிறைவனை யேத்து மின்கள்
ஒருத்தியைப் பாகம் வைத்தங்
கொருத்தியைச் சடையுள் வைத்த
துருத்தியஞ் சுடரி னானைத்
தொண்டனேன் கண்ட வாறே. 1

பொருந்திய குரம்பை – எலும்பு, தோல் போர்த்த உடம்பு

எம்பெருமான் இவ்வுயிருக்குச் செயற்பாட்டுச் சாதனமாம்படி தாதுக்களால் இணைத்துள்ள இவ்வுடலே காப்பற்றத்தக்க உயர்ந்த பொருளாகக் கருதுதல் வேண்டா. எம் பெருமானை எப்பொழுதும் நெஞ்சத்துள் இருக்கச் செய்து அவனைத் துதியுங்கள். பார்வதிபாகனாய்க் கங்கா சடாதரனாய் உள்ள திருத்துருத்தியின் ஞானச் சுடரை அடியேன் கண்டு உய்ந்தவாறு என்னே!

415. சவைதனைச் செய்து வாழ்வான்
சலத்துளே யழுந்து கின்ற
இவையொரு பொருளு மல்ல
விறைவனை யேத்து மின்னோ
அவைபுர மூன்று மெய்து
மடியவர்க் கருளிச் செய்த
சுவையினைத் துருத்தி யானைத்
தொண்டனேன் கண்ட வாறே. 2

சவை – பயனற்றவை

குடும்பத்தைப் பெருக்கி உயிர் வாழ்தலுக்கான வஞ்சனையிலே அழுந்திச் செய்யும் உங்களுடைய இச்செயல்கள் எல்லாம் குறிப்பிடத்தக்க நற்பயன் தருவன அல்ல என்றறிந்து எம் பெருமானையே துதியுங்கள். மும்மதில்களையும் அம்பு எய்து அழித்து அடியார்களுக்கு அருள் செய்த சுவைப் பொருளாக உள்ள துருத்திப் பெருமானை அடியவனாகிய யான் தரிசித்துப் பெற்ற இன்பம் இருந்தவாறு என்னே!

**416.** உன்னியெப் போதும் நெஞ்சு
ளொருவனை யேத்து மின்னோ
கன்னியை யொருபால் வைத்துக்
கங்கையைச் சடையுள் வைத்துப்
பொன்னியி னடுவு தன்னுட்
பூம்புனல் பொலிந்து தோன்றும்
துன்னிய துருத்தி யானைத்
தொண்டனேன் கண்ட வாறே. 3

பார்வதிபாகராய்க் கங்கா சடாதரனாய்க் காவிரியின் இனிய நீரின் நடுவிலே விளங்கித் தோன்றும் திருத்துருத்திப் பெருமானைத் தரிசித்து அடியேன் கண்ட மகிழ்வு இருந்தவாறு என்னே! ஆதலின் என்னை ஒத்த மகிழ்வினை அடைய எப்பொழுதும் ஒப்பற்ற அப்பெருமானை உள்ளத்தில் இருத்திப் போற்றுங்கள்.

**417.** ஊன்றலை வலிய னாகி
யுலகத்து ளுயிர்கட் கெல்லாம்
தான்றலைப் பட்டு நின்று
சார்கன லகத்து வீழ
வான்றலைத் தேவர் கூடி
வானவர்க் கிறைவா வென்னும்
தோன்றலைத் துருத்தி யானைத்
தொண்டனேன் கண்ட வாறே. 4

உலகுயிர் எல்லாம் ஈன்றும் பவன் பிரமசாரியாகும். பான்மொழி கன்னியாகும். சித்தியார் 2.77

உலகத்தில் எல்லா உயிர்களுக்கும் அவற்றின் புலால் உடம்பிலும் கலந்து வலிமை தருபவனாகி, உயிர்களுக்குள்ளும் தான் உயிராய் நின்று, அவ்வுயிர்கள் தத்தம் வினைகளுக்கு ஏற்பத் தீயைப் போன்ற துன்பங்களில் அகப்பட அத்துயரம் தாங்காமல் வருந்தும் தேவர்கூட 'எங்கள் தலைவனே' என்று தம் துயர்களைப் போக்குமாறு வேண்டும் மேம்பட்டவனான திருத்துருத்திப் பெருமானைத் தரிசித்து அடியேன் உய்ந்த சீர் இருந்தவாறு என்னே!

**418.** உடறனைத் கழிக்க லுற்ற
வுலகத்து ளுயிர்கட் கெல்லாம்
இடர்தனைக் கழிய வேண்டி
லிறைவனை யேத்து மின்னோ
கடறனி னஞ்ச முண்டு
காண்பரி தாகி நின்ற
சுடர்தனைத் துருத்தி யானைத்
தொண்டனேன் கண்ட வாறே. 5

துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே – பதிகமகுடம்.

கடலில் தோன்றிய விடத்தை உண்டு மற்றவர்கள் தம்முயற்சியால் காண்பதற்கு அரியனாக இருக்கும் ஞானவடிவினனாகிய திருத்துருத்திப் பெருமானை அடியேன் தரிசித்து உய்ந்த பேறு இருந்தவாறென்னே! உடல் தொடர்பை அடியோடு போக்கக் கருதும் உயிர்களாகிய உங்களுக்குள்ள துயர்களைப் போக்க நீர் விரும்பினால் அப்பெருமானைத் துதித்துப் போற்றுங்கள்.

**419.** அள்ளலைக் கடக்க வேண்டி
லரனையே நினைமி னீர்கள்
பொள்ளலிக் காயந் தன்னுட்
புண்டரீ கத்தி ருந்த
வள்ளலை வான வர்க்குங்
காண்பரி தாகி நின்ற
துள்ளலைத் துருத்தி யானைத்
தொண்டனேன் கண்ட வாறே. 6

பல துவாரங்களை உடைய இவ்வுடலிலே, இதய மாகிய தாமரையில் இருக்கும் வள்ளலாய், தேவர்களுக்கும் தம் முயற்சியால் காண்பதற்கு அரியவனாக இருக்கும், காளையை ஏறி ஊரும் பெருமானை, அடியேன் கண்டு உய்ந்த சீர் இருந்தவாறென்னே! ஆதலின் இப்பிறவியாகிய சேற்றினை நீங்கள் தாண்டிச் செல்ல விரும்பினால் சிவபெருமானையே தியானம் செய்யுங்கள்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| 420. பாதியி லுமையா டன்னைப்<br>பாகமா வைத்த பண்பன்<br>வேதிய னென்று சொல்லி<br>விண்ணவர் விரும்பி யேத்தச்<br>சாதியாஞ் சதுர்மு கனுஞ்<br>சக்கரத் தானுங் காணாச்<br>சோதியைத் துருத்தி யானைத்<br>தொண்டனேன் கண்ட வாறே. 7 | பார்வதிபாகன், வேதியன் என்று தேவர்கள் விரும்பித் துதித்தவாறிருக்க, பிறப்பெடுத்த பிரமனும், திருமாலும் காணாத சோதியாகிய திருத்துருத்திப் பெருமானை அடியேன் கண்டு உய்ந்த நலம் இருந்தவாறென்னே! |
| 421. சாமனை வாழ்க்கை யான<br>சலத்துளே யழுந்த வேண்டா<br>தூமநல் லகிலுங் காட்டித்<br>தொழுதடி வணங்கு மின்னோ<br>சோமனைச் சடையுள் வைத்துத்<br>தொன்னெறி பலவுங் காட்டும்<br>தூமனத் துருத்தி யானைத்<br>தொண்டனேன் கண்ட வாறே. 8 | பிறையைச் சடையில் சூடி அடியார்கள் உய்வதற்குப் பழைய நல்ல வழிகளைக் காட்டும் தூய திருவுளங்கொண்ட திருத்துருத்திப் பெருமானை அடியேன் கண்டு உய்ந்த நலம் இருந்தவாறென்னே! ஆதலின் தொண்டர் களாகிய நீங்கள் அழிந்து போகக் கூடிய மனை வாழ்க்கை என்ற வஞ்சனையுள் அழுந்தாது எம்பெருமானுக்கு நல்ல அகிற் புகையை அர்ப்பணித்துத் தலையால் தொழுது அவன் திருவடிகளை உடலால் வணங்குங்கள். |
| 422. குண்டரே சமணர் புத்தர்<br>குறியறி யாது நின்று<br>கண்டதே கருது வார்கள்<br>கருத்தெண்ணா தொழிமி னீர்கள்<br>விண்டவர் புரங்க ளெய்து<br>விண்ணவர்க் கருள்கள் செய்த<br>தொண்டர்க டுணையி னானைத்<br>துருத்திநான் கண்ட வாறே. 9 | பகைவர்களுடைய மும்மதில்களையும் அம்பு எய்து அழித்துத் தேவர்களுக்கு அருள்களை வழங்கி அடியார்களுக்குத் துணைவனாக இருக்கும் பெருமானை அடியேன் திருத்துருத்தியுள் தரிசித்து உய்ந்த சீர் இருந்தவாறென்னே! உடல் பருத்த சமணரும் புத்தரும் அடையவேண்டிய குறிக்கோளை அறியாமல் தம் தம் ஆராய்ச்சியால் கண்டவற்றையே முடிந்த பொருள்களாகக் கருதுவர். ஆதலின் அவர்கள் கருத்தை உண்மையாகக் கருதாமல் புறக்கணித்து விடுங்கள். |
| 423. பிண்டத்தைக் கழிக்க வேண்டிற்<br>பிரானையே பிதற்று மின்கள்<br>அண்டத்தைக் கழிய நீண்ட<br>வடலரக் கன்ற னாண்மை<br>கண்டொத்துக் கால்வி ரலா<br>லூன்றிமீண் டருளிச் செய்த<br>துண்டத்துத் துருத்தி யானைத்<br>தொண்டனேன் கண்ட வாறே. 10 | உலகங்களைக் கடந்த நீண்ட புகழை உடைய வலிய அரக்கன் கயிலையைப் பெயர்க்க முற்பட்ட ஆள்வினையை நினைத்து அவனைக் கால் விரலால் ஊன்றி நெரித்துச் செருக்கு அழித்து மீண்டும் அவனுக்கு அருள்கள் செய்தவரும், மதியின் கூறாகிய பிறையை அணிந்தவருமான திருத்துருத்திப் பெருமானை அடியேன் கண்டு உய்ந்த சிறப்பு இருந்தவாறென்னே! நீங்களும் இவ்வுடல் தொடர்பாகிய பிறவியை அடியோடு போக்க விரும்பினீர்கள் ஆயின் அப்பெருமான் பண்பு செயல்களையே அடைவு கேடாகப் பேசுங்கள். |

## 43. திருக்கச்சிமேற்றளி

திருநேரிசை

பதிக எண் : 43

424. மறையது பாடிப் பிச்சைக்
கென்றகந் திரிந்து வாழ்வார்
பிறையது சடைமு டிமேற்
பெய்வளை யாள்த னோடும்
கறையது கண்டங் கொண்டார்
காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
இறையவர் பாட லாட
லிலங்குமேற் றளிய னாரே. 1

காஞ்சிமா நகரிலே தலைவராய்ப் பாடல் ஆடல் விளங்கும் மேற்புறக் கோயிலில் உறையும் பெருமான் வேதங்களைப் பாடிக்கொண்டு பிச்சை எடுப்பதற்காக வீடுதோறும் திரிந்து வாழ்பவராய், பிறையை அணிந்த சடையிலே கங்கையைச் சூடியவராய்க் கழுத்தில் விடத்தின் கருஞ்சுவடு கொண்டவராய் உள்ளார்.

தளி – கோயில்; காஞ்சி நகரின் மேற்கு எல்லையில் உள்ளது பற்றி கச்சி மேற்றளி.

425. மாலன மாயன் றன்னை
மகிழ்ந்தனர் விருத்த ராகும்
பாலனார் பசுப தியார்
பால்வெள்ளை நீறு பூசிக்
காலனைக் காலாற் செற்றார்
காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏலநற் கடம்பன் றந்தை
யிலங்குமேற் றளிய னாரே. 2

முருகனுடைய தந்தையாராய்க் காஞ்சி நகரத்து விளங்கும் மேற்புறக் கோயிலிலுள்ள பெருமான் மேகம் போன்ற நிறத்தை உடைய திருமாலைத் தம் திருமேனியில் மகிழ்ந்து ஏற்றவராய், எவர்க்கும் மூத்தவராகவும் இளைய சிறுவராகவும் வடிவு கொள்பவராய், ஆன்மாக்களுக்குத் தலைவராய், பால் போன்ற வெள்ளிய திருநீற்றைப் பூசுபவராய்க் கூற்றுவனைத் தம் திருவடியால் ஒறுத்தவராய் உள்ளார்.

இலங்கு மேற்றளியனாரே – பதிக மகுடம்

426. விண்ணிடை விண்ண வர்கள்
விரும்பிவந் திறைஞ்சி வாழ்த்தப்
பண்ணிடைச் சுவையின் மிக்க
கின்னரம் பாடல் கேட்பார்
கண்ணிடை மணியி னொப்பார்
காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
**எண்ணிடை யெழுத்து மானா**
**ரிலங்கு**மேற் றளிய னாரே. 3

எண்ணும் எழுத்துமாய் விளங்கும் காஞ்சி மேற்றளியனார் வானத்திலுள்ள தேவர்கள் விருப்பத்துடன் வந்து வணங்கி வாழ்த்தப் பண் இன்பம் மிக்க இன்னிசைப் பாடல்களைக் கேட்பவராய்க் கண்மணிபோல அடியவர் களுக்கு ஞானஒளி வழங்குபவராய் உள்ளார்.

427. சோமனை யரவி னோடு
சூழ்தரக் கங்கை சூடும்
வாமனை வான வர்கள்
வலங்கொடு வந்து போற்றக்
காமனைக் காய்ந்த கண்ணார்
காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏமநின் றாடு மெந்தை
யிலங்குமேற் றளிய னாரே. 4

மன்மதனை வெகுண்ட நெற்றிக் கண்ணராய், இரவில், யாமத்தில் கூத்து நிகழ்த்தும் எந்தையாராய், பிறையைப் பாம்பினோடும் கங்கையோடும் சூடும் அழகராய்த் தேவர்கள் வலப்புறமாகச் சுற்றி வந்து துதிக்குமாறு காஞ்சி மேற்றளியனார் அமர்ந்துள்ளார்.

| | |
|---|---|
| **428.** ஊனவ ருயிரி னோடு<br>முலகங்க ளூழி யாகித்<br>தானவர் தனமு மாகித்<br>தனஞ்சய னோடெ திர்ந்த<br>கானவர் காள கண்டர்<br>காஞ்சிமா நகர்தன் னுள்ளால்<br>ஏனமக் கோடு பூண்டா<br>ரிலங்குமேற் றளிய னாரே. 5 | நீலகண்டராய், எலும்போடு பன்றிக் கொம்பினை அணிந்தவராய், அருச்சுனனோடு எதிர்த்துப் போரிட்ட வேடராய், உலகங்களிலும், ஊழிகளிலும், உடம்பினுள்ளும், உயிரினுள்ளும், உடனாய்க் கலந்து இருப்பவராய்த் தானம் செய்பவராய்ச் செல்வ வடிவினராய்க் காஞ்சி மேற்றளியனார் அமைந்துள்ளார். |
| **429.** மாயனாய் மால னாகி<br>மலரவ னாகி மண்ணாய்த்<br>தேயமாய்த் திசையெட் டாகித்<br>தீர்த்தமாய்த் திரிதர் கின்ற<br>காயமாய்க் காயத் துள்ளார்<br>காஞ்சிமா நகர்தன் னுள்ளால்<br>ஏயமென் றோளி பாக<br>ரிலங்குமேற் றளிய னாரே. 6 | தமக்குப் பொருந்திய மென்மையான தோள்களை உடைய பார்வதியின் பாகராய், திருமாலாகவும், இந்திரனாகவும், பிரமனாகவும், நிலமாகவும், நாடாகவும் எண் திசைகளாகவும், புதின நீர்களாகவும் இயங்குதிணைகளுக்கு உரிய உடல்களாகவும், அவ்வுடல்களில் உள் இருப்பவராகவும் காஞ்சிமேற்றருளியனார் கரந்து எங்கும் பரந்து உள்ளார். |
| **430.** மண்ணினை யுண்ட மாயன்<br>றன்னையோர் பாகங் கொண்டார்<br>பண்ணினைப் பாடி யாடும்<br>பத்தர்கள் சித்தங் கொண்டார்<br>கண்ணினை மூன்றுங் கொண்டார்<br>காஞ்சிமா நகர்தன் னுள்ளால்<br>எண்ணினை யெண்ண வைத்தா<br>ரிலங்குமேற் றளிய னாரே. 7 | உலகை விழுங்கிய திருமாலை ஒரு பாகமாகக் கொண்டவராய், இன்னிசைகளைப் பாடிக் கூத்தாடும் அடியார்கள் உடைய உள்ளங்களைத் தமக்கு இருப்பிடமாகக் கொண்டவராய், முக்கண்ணராய், அடியார்களுடைய எண்ணத்திலே தம்மையே தியானிக்குமாறு வைத்தவராய்க் காஞ்சி மேற்றளியனார் அமைந்துள்ளார். |
| **431.** செல்வியைப் பாகங் கொண்டார்<br>சேந்தனை மகனாக் கொண்டார்<br>மல்லிகைக் கண்ணி யோடு<br>மாமலர்க் கொன்றை சூடிக்<br>**கல்வியைக் கரையி லாத**<br>காஞ்சிமா நகர்தன் னுள்ளால்<br>எல்லியை விளங்க நின்றா<br>ரிலங்குமேற் றளிய னாரே. 8 | பார்வதிபாகராய், முருகனை மகனாகக் கொண்டவராய் மல்லிகை, கொன்றை இவற்றாலாய முடி மாலையைச் சூடிக் கல்வியைக் கரை கண்ட சான்றோர் வாழும் காஞ்சிநகரிலே, சூரியன் விளக்கமுற **அவனொளிக்கு உள்ளொளியாய்** மேற்றளியனார் விளங்குகின்றார். |

432. வேறிணை யின்றி யென்றும்
விளங்கொளி மருங்கி னாளைக்
கூறியல் பாகம் வைத்தார்
கோளரா மதியும் வைத்தார்
ஆறினைச் சடையுள் வைத்தார்
அணிபொழிற் கச்சி தன்னுள்
ஏறினை யேறு மெந்தை
யிலங்குமேற் றளிய னாரே. 9

தனக்கு இணையில்லாதபடி ஒளிவீசும் குறுகிய இடையை உடைய பார்வதியின் பாகராய்க் கொடிய பாம்பு, பிறை, கங்கை என்ற இவற்றைச் சடையுள் வைத்துக் காளையை ஏறி ஊரும் எம் தந்தையாராய்க் கச்சிமேற்றளியனார் விளங்குகிறார்.

433. தென்னவன் மலையெ டுக்கச்
சேயிழை நடுங்கக் கண்டு
மன்னவன் விரலா லூன்ற
மணிமுடி நெரிய வாயால்
கன்னலின் கீதம் பாடக்
கேட்டவர் காஞ்சி தன்னுள்
இன்னவற் கருளிச் செய்தா
ரிலங்குமேற் றளிய னாரே. 10

காஞ்சி – காஞ்சி என்னும் மரம் பற்றிய காரணப்பெயர்

காஞ்சியில் இலங்கும் மேற்றளியனார் தென் திசையை ஆண்ட இராவணன் கயிலையைப் பெயர்க்கப் பார்வதி நடுங்கக் கண்டு, என்றும் நிலையாயிருக்கும் அவர் தம் விரலால் அழுத்த, அதனால் இராவணனுடைய அழகிய தலைகள் நெரியப் பின் அவன் வாயினால் கரும்பைப் போன்ற இனிய பாடல்கள் பாட, அவற்றைக் கேட்டு மகிழ்ந்து அவனுக்கு இன்னருள் செய்தவராவர்.

## 44. திருக்கச்சியேகம்பம்

**திருநேரிசை** **பதிக எண் : 44**

434. நம்பனை நகர மூன்று
மெரியுண வெருவ நோக்கும்
அம்பனை யமுதை யாற்றை
யணிபொழிற் கச்சி யுள்ளே
கம்பனைக் கதிர்வெண் டிங்கட்
செஞ்சடைக் கடவு டன்னைச்
செம்பொனைப் பவளத் தூணைச்
சிந்தியா வெழுகின் றேனே. 1

நம்மால் விரும்பப்படுபவனாய், மும்மதில்களும் தீக்கு இரையாகி வெறுவும் தன்னால் நோக்கும் நோக்காகிய அம்பினை உடையவனாய், அமுதனாய் பேரின்ப பெருக்காறாய், அழகிய சோலையை உடைய காஞ்சிமாநகரில் ஒற்றை மாமரத்தடியில் உறைபவனாய், ஒளி வீசும் கிரணங்களை உடைய பிறையைச் சிவந்த சடையில் அணிந்த கடவுளாய்ச் செம்பொன்னும் பவளத் தூணும் போன்றுள்ள சிவபெருமானைத் தியானிப்பதனால் யான் உள்ளக் கிளர்ச்சி உடையேன் ஆகின்றேன். (ஆறு – நெறி எனலுமாம்).

435. ஒருமுழ முள்ள குட்ட
மொன்பது துளையு டைத்தாய்
அரைமுழ மதன கல
மதனில்வாழ் முதலை யைந்து
பெருமுழை வாய்தல் பற்றிக்
கிடந்துநான் பிதற்று கின்றேன்
கருமுகில் தவழு மாடக்
கச்சியே கம்ப னீரே. 2

கார்மேகங்கள் தவழும் கச்சிமாநகரின் ஏகம்பம் என்ற திருக்கோயிலில் உறையும் பெருமானே! ஒரு முழ நீளமும் அரை முழ அகலமும் ஒன்பது துளைகளும் தன்கண் வாழும் முதலைகள் ஐந்தும் உடைய சிறுகுளத்தின் பெரிய குகை போலும் நீர் வரும் வாய்த்தலைப்பை பிடித்துக் கொண்டு கிடந்து அடியேன் அடைவு கேடாகப் பலகாலும் பேசுகின்றேன்.

**436.** மலையினார் மகளோர் பாக
மைந்தனார் மழுவொன் றேந்திச்
சிலையினான் மதில்கண் மூன்றுந்
தீயெழச் செற்ற செல்வர்
இலையினார் சூல மேந்தி
யேகம்ப மேவி னாரைத்
**தலையினால் வணங்க வல்லார்**
**தலைவர்க்குந் தலைவர் தாமே.** 3

பார்வதி பாகரான இளையராய், ஒற்றை மழுப்படையை ஏந்தியவராய், வில்லினால் மும்மதில்களும் தீப்பற்றி எரியுமாறு அவற்றை அழித்த செல்வராய், இலைவடிவமான சூலத்தைக் கையில் ஏந்தி ஏகம்பத்தை விரும்பி உறையும் பெருமானைத் தம் தலையால் வணங்க வல்ல அடியவர்கள் பெரிய தலைவர்களுக்கும் தலைவராகும் உயர் நிலையினராவர்.

**437.** பூத்தபொற் கொன்றை மாலை
புரிசடைக் கணிந்த செல்வர்
தீர்த்தமாங் கங்கை யாளைத்
திருமுடி திகழ வைத்து
ஏத்துவா ரேத்த நின்ற
வேகம்ப மேவி னாரை
வாழ்த்துமா றறிய மாட்டேன்
மால்கொடு மயங்கி னேனே. 4

பொன்போன்று பூத்த கொன்றைமாலையை முறுக்குண்ட சடைக்கண் அணிந்த செல்வராய், பரிசுத்தமான கங்கையைத் தம் அழகில் முடியிலே விளங்குமாறு வைத்து, தம்மை வழிபடும் அடியார்கள் ஏத்துதற்குப் பொருளாய் நின்ற ஏகம்பத்தை விரும்பி நிலையாக உறையும் பெருமானை வழிபடும் முறையை அறிய இயலாதேனாய், இப்பொழுது அவனிடம் பற்றுக்கொண்ட யான் வீணாகக் கழிந்த காலத்தை நினைத்து மயங்கினேன்.

**438.** மையினார் மலர்நெ டுங்கண்
மங்கையோர் பங்க ராகிக்
கையிலோர் கபால மேந்திக்
கடைதொறும் பலிகொள் வார்தாம்
எய்வதோ ரேன மோட்டி
யேகம்ப மேவி னாரைக்
கையினாற் றொழவல் லார்க்குக்
கடுவினை களைய லாமே. 5

மை பூசிய குவளை மலர் போன்ற நீண்ட கண்களை உடைய பார்வதிபாகராய், கையில் மண்டை ஓட்டைப் பிச்சை பெறும் பாத்திரமாக ஏந்தி வீட்டு முகப்புத்தோறும் பிச்சை பெறுவாராய், தம்மால் அம்பு எய்யப்படும் பன்றியை விரட்டி, ஏகம்பம் மேவிய பெருமானைக் கைகளால் தொழவல்ல அடியவர்களுக்குக் கொடிய தீவினைகளைப் போக்கிக் கொள்ளுதல் இயலும்.

**439.** **தருவினை** மருவுங் கங்கை
தங்கிய சடைய னெங்கள்
அருவினை யகல நல்கு
மண்ணலை யமரர் போற்றும்
திருவினைத் திருவே கம்பஞ்
செப்பிட வுறைய வல்ல
உருவினை யுருகி யாங்கே
யுள்ளத்தா லுகக்கின் றேனே. 6

சிவபுண்ணியப் பேற்றை அளிக்கவல்ல கங்கை தங்கிய சடையனாய், எங்கள் அரிய வினைப் பயன்கள் எம்மை விடுத்து நீங்குமாறு அருள் வழங்கும் தலைவனாய், தேவர்கள் போற்றும் செல்வமாய், திருவேகம்பத்தில் அடியவர் தன் புகழைப் பாடத் தங்கியிருத்தலில் வல்லனாய், உள்ள சிவபெருமான் உருவினை நினைத்து உருகி உளமார மகிழ்கின்றேன்.

---

தருவினை – கொடுக்குஞ் செயல். தரு – மரம். கங்கையாறு மூழ்குவார் தீவினை கெடுத்து நல்வினை நல்கும். கரைகளில் மரங்களை உடையது.

| | |
|---|---|
| 440. கொண்டதோர் கோல மாகிக்<br>கோலக்கா வுடைய கூத்தன்<br>உண்டதோர் நஞ்ச மாகி<br>யுலகெலா முய்ய வுண்டான்<br>எண்டிசை யோரு மேத்த<br>நின்றவே கம்பன் றன்னைக்<br>கண்டுநா னடிமை செய்வான்<br>கருதியே திரிகின் றேனே. 7<br><br>கோலம் – வேடம் | தான் விரும்பிக் கொண்ட வடிவுடையவனாய்த் திருக்கோலக்கா என்ற திருத்தலத்தை உடைய கூத்தனாய், உலகங்கள் எல்லாம் உயிர் பிழைக்குமாறு விடத்தை உண்டவனாய் எட்டுத் திசையிலுள்ளாரும் போற்றுமாறு நிலைபெற்ற ஏகம்பனைத் தரிசித்து அவனுக்கு அடிமைத் தொண்டு செய்வதற்கு அடியேன் தலந்தொறும் அலைகின்றேன். |
| 441. படமுடை யரவி னோடு<br>பனிமதி யதனைச் சூடிக்<br>கடமுடை யுரிவை மூடிக்<br>கண்டவ ரஞ்ச வம்ம<br>இடமுடைக் கச்சி தன்னு<br>ளேகம்ப மேவி னான்றன்<br>நடமுடை யாடல் காண<br>ஞாலந்தா னுய்ந்த வாறே. 8 | படத்தை உடைய பாம்பினோடு குளிர்ந்த பிறையைச் சூடி, மதம் பெருக்கும் யானைத் தோலைப் போர்த்துப் பார்ப்பவர்கள் அஞ்சுமாறு, செல்வத்தை உடைய காஞ்சிநகரில் ஏகம்பத்தை உறைவிடமாக விரும்பி ஏற்றுக் கொண்ட சிவபெருமானுடைய சிறப்பான ஆடலைக் காண்பதனால் உலகம் தீவினையிலிருந்து பிழைத்தது. இது வியக்கத்தக்கது. |
| 442. பொன்றிகழ் கொன்றை மாலை<br>பொருந்திய நெடுந்தண் மார்பர்<br>நன்றியிற் புகுந்தெ னுள்ள<br>மெள்ளவே நவில நின்று<br>குன்றியி லடுத்த மேனிக்<br>குவளையங் கண்ட ரெம்மை<br>இன்றுயில் போது கண்டா<br>ரினியரே கம்ப னாரே. 9 | குன்றிமணி போலச் சிவந்த திருமேனியில் கருங்குவளை போல அமைந்த நீலகண்டராய்ப் பொன் நிறக் கொன்றை மாலை பொருந்திய நெடிய குளிர்ந்த மார்பினராய் என் உள்ளத்தில் நன்மை தரும் வகையில் புகுந்து என்மனம் மெதுவாக வணக்கம் சொல்லுமாறு நின்று யான் இனிமையாகத் துயின்றபோது காணப் பெற்றார். அதனால் ஏகம்பனார் எனக்கு இனியராகின்றார். |
| 443. துருத்தியார் பழனத் துள்ளார்<br>தொண்டர்கள் பலரு மேத்த<br>அருத்தியா லன்பு செய்வா<br>ரவரவர்க் கருள்கள் செய்தே<br>எருத்தினை யிசைய வேறி<br>யேகம்ப மேவி னார்க்கு<br>**வருத்திநின் றடிமை செய்வார்**<br>**வல்வினை மாயு மன்றே.** 10 | அடியவர் பலரும் போற்றிப் புகழுமாறு திருத்துருத்தி, திருப்பழனம் என்ற தலங்களில் உறைபவராய், விருப்பத்தோடு தம்மிடம் அன்பு காட்டுபவர்களுக்கு அருள்கள் செய்து காளையைப் பொருந்துமாறு இவர்ந்து ஏகம்பத்தை விரும்பி உறையும் எம்பெருமானுக்கு, உடம்பை முயற்சியில் ஈடுபடுத்தி அடிமை செய்யும் அடியவர்களுடைய கொடிய தீவினைகள் அழிந்து ஒழியும். |

## 45. திருவொற்றியூர்

திருநேரிசை

பதிக எண் : 45

444. வெள்ளத்தைச் சடையில் வைத்த
வேதகீ தன்றன் பாதம்
மெள்ளத்தா னடைய வேண்டின்
மெய்தரு ஞானத் தீயால்
கள்ளத்தைக் கழிய நின்றார்
காயத்துக் கலந்து நின்று
**உள்ளத்து ளொளியு** மாகு
மொற்றியூ ருடைய கோவே. 1

உள்ளத்துள் ஒளி – காட்டும் உபகாரம்

கங்கையைச் சடையில் வைத்தவனாய் வேதங்களிலும், கீதங்களிலும் பேசப்படும் பெருமானுடைய பாதங்களை மெதுவாக வழுவின்றிப் பெற விரும்பினால், மெய்ப்பொருளை வழங்கும் ஞானமாகிய தீயினால் கள்ளம் முதலிய குற்றங்களாகிய காட்டினை எரித்தொழித்துச் செப்பஞ் செய்த அடியவர்களுடைய உள்ளத்திலே திருவொற்றியூர் உடைய பெருமான் சிவப்பிரகாசமாக விளங்குவான்.

445. வசிப்பெனும் வாழ்க்கை வேண்டா
வானவ ரிறைவ னின்று
புசிப்பதோர் பொள்ள லாக்கை
யதனொடும் புணர்வு வேண்டில்
அசிர்ப்பெனு மருந்த வத்தா
லான்மாவி னிடம தாகி
உசிர்ப்பெனு முணர்வு முள்ளா
ரொற்றியூ ருடைய கோவே. 2

வசிப்பு – உடலில் உலகில் காலதேச வரையறைக்குட்பட்டு வசித்தல்; அசிர்ப்பு – இளைப்பு

ஒரு குறுகிய காலத்து உயிர் வாழ்வதாகிய வாழ்க்கையை வாழ விரும்பாது, உணவு உண்பதனாலேயே செயற்படும் ஒன்பது துளைகளை உடைய இவ்வுடம்பில், தேவர் தலைவனாகிய எம் பெருமான் கூடி நிற்றலை விரும்புவீராயின், நீர் உடம்பு இளைக்க நோற்கும் அரிய தவத்தின் பயனாய் உம் ஆன்மாவில் இடம் பெற்று, உம் மூச்சுக் காற்றிலும் உணர்விலும் கலந்து உறைவான் திருவொற்றியூரை இடமாகக் கொண்ட எம்பெருமான்.

446. தானத்தைச் செய்து வாழ்வான்
சலத்துளே யழுந்து கின்றீர்
வானத்தை வணங்க வேண்டில்
வம்மின்கள் வல்லீ ராகில்
ஞானத்தை விளக்கை யேற்றி
நாடியுள் விரவ வல்லார்
ஊனத்தை யொழிப்பர் போலு
மொற்றியூ ருடைய கோவே. 3

“ஒற்றியூருடைய கோவே” என்பது பதிக மகுடமாகும்.

பல கொடைகளைத் தக்கவருக்கு வழங்கி வாழும் பொருட்டுப் பலவித சஞ்சலங்களிலே அழுந்தி மன அலைதலைவுற்று நிற்கின்ற நீங்கள், சஞ்சலமற்ற வாழ்வு தரும் அருள் வெளியை வணங்குதற்கு ஆற்றல் உடையீராயின் வாருங்கள். சிவஞானமாகிய தீபத்தை ஏற்றி ஆராய்ந்து அநுபூதியில் கண்டு சிவானந்தம் நுகரவல்ல அடியார்களுடைய பிறவிப் பிணியை அடியோடு கழித்து வீடுபேறு நல்குவான் திருவொற்றியூர்ப் பெருமான்.

447. காமத்து எழுந்தி நின்ற
 கண்டரா லொறுப்புண் ணாதே
 சாமத்து வேத மாகி
 நின்றதோர் சயம்பு தன்னை
 ஏமத்து மிடையி ராவு
 மேகாந்த மியம்பு வார்க்கு
 ஓமத்து ளொளிய தாகு
 மொற்றியூ ருடைய கோவே. 4

உலக வாழ்வில் பல பற்றுக்களில் பெரிதும் ஈடுபட்டுக் கூற்றுவனுடைய ஏவலர்களால் தண்டிக்கப் பெறாமல் சாமவேத கீதனாகிய தான்தோன்றி நாதனைப் பகற்பொழுதில் நான்கு யாமங்களிலும், இரவுப் பொழுதில் நள்ளிரவு ஒழிந்த யாமங்களிலும் தனித்திருந்து உறுதியாக மந்திரம் உச்சரித்து வழிபடுபவர்களுக்கு திருவொற்றியூர்ப் பெருமான் வேள்வியின் ஞானத்தீயாகக் காட்சி வழங்குவான்.

---

சயம்பு – சுயம்பு; தான்தோன்றி.
ஏகாந்தம் – ஒரு முடிவு, ஒருதலை.
அநேகம் + அந்தம் – அநேகாந்தம் – பலதலை
ஏமம் – இடையிராவொழிந்த ஏனை எல்லாக் காலமும் குறித்தது.

448. சமையமே லாறு மாகித்
 தானொரு சயம்பு வாகி
 இமையவர் பரவி யேத்த
 வினிதினங் கிருந்த வீசன்
 கமையினை யுடைய ராகிக்
 கழலடி பரவு வார்க்கு
 உமையொரு பாகர் போலு
 மொற்றியூ ருடைய கோவே. 5

அறுவகை வைதிகச் சமயங்களாகித் தான்தோன்றி நாதராய்த் தேவர்கள் முன்நின்று புகழ்ந்து துதிக்க, அவர்களிடையே மகிழ்வுடன் இருக்கும், எல்லோரையும் அடக்கியாளும் பெருமானாய், பகைவர் செய்யும் தீங்குகளையும் பொறுக்கும் பொறுமை உடையவர் ஆகித் தம் திருவடிகளை முன் நின்று வழிபடுபவர்களுக்கு பார்வதி பாகராய்க் காட்சி வழங்குவார் திருவொற்றியூர்ப் பெருமான்.

449. ஒருத்திதன் றலைச்சென் றாளைக்
 கரந்திட்டா னுலக மேத்த
 ஒருத்திக்கு நல்ல னாகி
 மறுப்படுந் தொளித்து மீண்டே
 ஒருத்தியைப் பாகம் வைத்தா
 னுணர்வினா லைய முண்ணி
 ஒருத்திக்கு நல்ல னல்ல
 னொற்றியூ ருடைய கோவே. 6

திருவொற்றியூர்ப்பெருமான், தன் தலையை அடர்த்த கங்கையைச் சடையில் மறைத்து அக்கங்கைக்கு இனியவன் போன்று அவளைச் சிறை செய்து மறைத்து, மீண்டும் பார்வதியாகிய ஒருத்தியை உடம்பின் ஒரு பாகமாகக் கொண்டு, தன் விருப்பத்தோடு பிச்சை எடுத்து உண்ணும் அப்பெருமான் கங்கை, உமை என்ற இருவருள் ஒருவருக்கும் நல்லவன் அல்லன்.

450. பிணமுடை யுடலுக் காகப்
பித்தராய்த் திரிந்து நீங்கள்
புணர்வெனும் போகம் வேண்டா
போக்கலாம் பொய்யை நீங்க
நிணமுடை நெஞ்சி னுள்ளா
னினைக்குமா நினைக்கின் றாருக்கு
உணர்வினோ டிருப்பர் போலு
மொற்றியூ ருடைய கோவே. 7

பிணமாதலும் முடை நாற்றமும் உடைய இவ்வுடம்பைப் பேணிப் பாதுகாப்பதற்காக அதனிடத்து விருப்பினிராய்த் திரிந்து சிற்றின்ப வேட்கையை நீவிர்கொள்ளற்க. போக்குவதற்கு உரியதாகும் பொய்யான இப்பிறவிப்பிணியைப் போக்க, கொழுப்பினை உடைய இவ்வுடலின் நெஞ்சினுள் கரந்து உறையும் இறைவரைத் தியானிக்கும் முறையாலே தியானிக்கும் அடியவர்களுக்கு திருவொற்றியூர்ப் பெருமான் வாய்த்த சிவஞானத்தோடு குணியாய் இருந்து விளங்குவார்.

451. பின்னுவார் சடையான் றன்னைப்
பிதற்றிலாப் பேதை மார்கள்
துன்னுவார் நகரந் தன்னுட்
டொல்வினை தீர வேண்டின்
மன்னுவான் மறைக ளோதி
மனத்தினுள் விளக்கொன் றேற்றி
உன்னுவா ருள்ளத் துள்ளா
ரொற்றியூ ருடைய கோவே. 8

முறுக்கேறிய நீண்ட சடையை உடைய திருவொற்றியூர்ப் பெருமானுடைய திருநாமங்களை அடைவு கேடாகப் பலகாலும் வாய்விட்டு உரைக்காத அறிவிலிகளே! நீர் இனி அடையப் போகும் நரகத்தில் அனுபவிக்கக் கூடிய பழைய வினைகள் நீங்கவேண்டும் என்று நீர் கருதினால், நிலைபெற்ற மேலான வேதங்களை ஓதி மனத்தினுள்ளே ஞானச் சுடர்விளக்கை ஏற்றித் தியானிப்பவர் உள்ளத்தில் அவர் உள்ளார் என்பதனை உணர்ந்து செயற்படுவீராக.

452. முள்குவார் போகம் வேண்டின்
முயற்றியா லிடர்கள் வந்தால்
எள்குவா ரெள்கி நின்றங்
கிதுவொரு மாய மென்பார்
பள்குவார் பத்த ராகிப்
பாடியு மாடி நின்றும்
உள்குவா ருள்ளத் துள்ளா
ரொற்றியூ ருடைய கோவே. 9

முள்குவார் – முயங்கும் மகளிர்
எள்குவார் – இகழ்வார்
பள்குவார் – அச்சத்தில் ஆள்பவர்
உள்குவார் – நினைப்பவர்.

நெஞ்சமே! உன்னால் தழுவப்படும் மகளிருடைய இன்பத்தை நீ விரும்பினால் அதனை அடையப் பலகாலும் முயல்கின்றாய். அவர்கள் உனக்கு ஒரு துயரம் வந்தால் அதனைத் தீர்க்க முற்படாமல் உன்னைப் பரிகசிப்பர். உன்னுடைய இந்த நிலை புதுமையாய் இருக்கிறது என்று இகழ்வார்கள். அம்மகளிர் மோகத்தை அச்சத்தால் விடுத்தவராய், திருவொற்றியூர்ப் பெருமானுக்கு அடியவராய்ப் பாடியும் ஆடியும் நின்று தியானிப்பவர் உள்ளத்தில் அவர் நிலை பெற்றிருப்பவராய்த் துன்பம் வரும்போது அதனைத் துடைப்பவர் ஆவார் என்பதனை உணர்ந்து வாழ்.

453. வெறுத்துகப் புலன்க ளைந்தும்
வேண்டிற்று வேண்டு நெஞ்சே
மறுத்துக வார்வச் செற்றக்
குரோதங்க ளான மாயப்
பொறுத்துகப் புட்ப கத்தே
ருடையானை யடர வூன்றி
ஒறுத்துகந் தருள்கள் செய்தா
ரொற்றியூ ருடைய கோவே. 10

நெஞ்சே! புலன்கள் ஐந்தனையும் நுகரச் செய்யும் பொறிகள் ஐந்தும் நீ வெறுத்து அழியுமாறு தாம் முன்பு வேண்டியவற்றையே பலகாலும் வேண்டி நிற்கும். பொறிகளுக்கு இரை வழங்குதலை மறுத்து ஆர்வம், பகை, கோபம் எனும் இவை அழியுமாறு மற்றவரால் வரக்கூடிய துன்பங்களைப் பொறுத்து மகிழ்வோ டிருப்பாயாக. புட்பகவிமானத்தை உடைய இராவணனை முதலில் ஒறுத்துப் பின் உகந்து அருள் செய்தவர் திருவொற்றியூர்ப் பெருமான்.

## 46. திருவொற்றியூர்

திருநேரிசை

பதிக எண் : 46

454. ஓம்பினேன் கூட்டை வாளா
வுள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழை போலக்
கருதிற்றே முகக்க மாட்டேன்
பாம்பின்வாய்த் தேரை போலப்
பலபல நினைக்கின் றேனை
ஓம்பிநீ யுய்யக் கொள்ளா
யொற்றியூ ருடைய கோவே. 1

காம்பிலா மூழை – பிடித்தற்குரிய காம்பு இல்லாத அகப்பை.

உள்ளத்துள்ளே நேர்மைக்குப் புறம்பான வளைவான செய்திகளைத் தேக்கி வைத்துக் கொண்டு இவ்வுடம்பினைப் பயனற்ற வகையில் பாதுகாத்துக் கொண்டு, காம்பு இல்லாத அகப்பை முகக்கக் கருதியதனை முகக்க இயலாதவாறுபோல, உன் திருவருள் துணை இல்லாததனால் நினைத்த பேறுகளைப் பெற இயலாதேனாய்ப் பாம்பின் வாயில் அகப்பட்ட தேரை விரைவில் தான் அழியப் போவதனை நினையாது வேறு என்னென்னவோ எல்லாம் நினைப்பதுபோல, எண்ணாத பல எண்ணங்களையும் எண்ணி நெஞ்சம் புண்ணாகின்ற அடியேனை ஓம்பி அடியேன் உய்யும் வண்ணம் திருவொற்றியூர்ப் பெருமானாகிய நீ அருளவேண்டும்.

455. மனமெனுந் தோணி பற்றி
மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச்
செறிகட லோடும் போது
மனனெனும் பாறை தாக்கி
மறியும்போ தறிய வொண்ணா
துனையுனு முணர்வை நல்கா
யொற்றியூ ருடைய கோவே. 2

மனனம் செய்து அன்றாடம் பல அடியார்கள் பாடிக் கொண்டிருக்கிறார்கள். மனன் – மன்மதன்.

x x x x x x x x x x 3, 4, 5, 6, 7, 8, 9, 10

திருவொற்றியூர் உடைய கோவே! மனம் என்னும் தோணியைப் பொருந்தி, அறிவு என்று சொல்லப்படும் தண்டை ஊன்றிச் சினம் எனும் சரக்கை அத்தோணியில் ஏற்றிப் பாசக் கடலாகிய பரப்பில் அத்தோணியைச் செலுத்தும்போது, மன்மதன் என்ற பாறை தாக்க, அத்தோணி கீழ்மேலாகக் கவிழும்போது உன்னை அறிய இயலாதேனாய் வருந்துவேன். அப்போது அடியேன் என்னை மறந்து உன்னையே தியானிக்கும் அறிவை அடியேனுக்கு விரும்பி அளிப்பாயாக.

## 47. திருக்கயிலாயம்

திருநேரிசை

பதிக எண் : 47

456. கனகமா வயிர முந்து
மாமணிக் கயிலை கண்டும்
உனகனா யரக்க னோடி
யெடுத்தலு முமையா ளஞ்ச
அனகனாய் நின்ற வீச
னூன்றலு மலறி வீழ்ந்தான்
மனகனா யூன்றி னானேன்
மறித்துநோக் கில்லை யன்றே. 1

பதிகம் முழுவதும் எல்லாப் பாடல்களும் கயிலை மலை எடுத்த இராவணன் பாட்டுக்களே. "ஊன்றினானேன் மறித்து நோக்கில்லை யன்றே" என்பது பதிக மகுடமாகும். காளத்தி மலையைப் பாடியபின் தொடர்ந்த பயணத்தில் பாடியிருக்கலாம்.

பொன்னும் வயிரமும் முற்பட்ட சிறந்த இரத்தினங்களும் உடைய கயிலையைப் பார்த்ததும் அதனைப் பெயர்த்துவிடும் அகந்தையுற்ற மனத்தானாய் அரக்கன் ஓடிவந்து அதனைப் பெயர்க்க முற்பட்ட அளவிலே பார்வதி அச்சம் கொள்ளப் பாவ மில்லாதவனாய் நிலைபெற்று எல்லோரையும் அடக்கி ஆளும் பெருமான் விரலைச் சற்று ஊன்றிய அளவிலே அரக்கனாகிய இராவணன் அலறிக் கொண்டு செயலற்றுக் கீழே விழுந்தான். எம் பெருமான் நிலைபெற்ற உள்ளத்தனாய் விரலை அழுந்த ஊன்றி இருந்தானாயின் மீண்டும் இராவணன் கண்விழித்துப் பார்க்கும் வாய்ப்பே ஏற்பட்டிருக்க மாட்டாது.

457. கதித்தவன் கண்சி வந்து
கயிலைநன் மலையை யோடி
அதிர்த்தவ னெடுத்தி டல்லு
மரிவைதா னஞ்ச வீசன்
நெதித்தவ னூன்றி யிட்ட
நிலையழிந் தலறி வீழ்ந்தான்
மதித்திறை யூன்றி னானேன்
மறித்துநோக் கில்லை யன்றே. 2

மன எழுச்சியை உடைய இராவணன் கோபத்தாற் கண்கள் சிவக்கப் பெரிய கயிலை மலையை நோக்கி ஆரவாரித்துக் கொண்டு ஓடிப் பெயர்க்க முற்பட்ட அளவில், பார்வதி அஞ்ச, எல்லோரையும் ஆள்பவனாகிய தவச் செல்வனான சிவபெருமான் விரலைச் சிறிது ஊன்றியிட்ட நிலையிலேயே அவன் ஆற்றல் அழிந்து கதறிக்கொண்டு விழுந்தான். பெருமான் அவனை அழித்தலைக் கருதி விரலை அழுத்தமாக ஊன்றியிருந்தால் இராவணன் மீண்டும் கண் விழித்துப் பார்க்கும் நிலை ஏற்பட்டிருக்காது.

458. கறுத்தவன் கண்சி வந்து
கயிலைநன் மலையைக் கையால்
மறித்தலு மங்கை யஞ்ச
வானவ ரிறைவ னக்கு
நெறித்தொரு விரலா லூன்ற
நெடுவரை போல வீழ்ந்தான்
மறித்திறை யூன்றி னானேன்
மறித்துநோக் கில்லை யன்றே. 3

மறித்தும் – மீண்டும்

கரிய நிறத்தை உடைய இராவணன் வெகுண்டு கயிலையாகிய பெரிய மலையைக் கையால் புரட்ட முயன்ற அளவில் பார்வதி பயப்படத் தேவர் தலைவனாகிய சிவபெருமான் சிரித்து ஒருவிரலை மெதுவாக ஊன்றி அவனை நெரிக்கப் பெரியமலை கீழே விழுவதுபோல அவன் விழுந்தான். மீண்டும் அவ்விரலை பெருமான் ஊன்றியிருந்தால் இராவணன் மீண்டும் கண்விழிக்கும் வாய்ப்பே ஏற்பட்டிருக்காது.

| | |
|---|---|
| 459. கடுத்தவன் கண்சி வந்து<br>கயிலைநன் மலையை யோடி<br>எடுத்தலு மங்கை யஞ்ச<br>விறையவ னிறையே நக்கு<br>நொடிப்பள விரலா லூன்ற<br>நோவது மலறி யிட்டான்<br>மடித்திறை யூன்றி னானேன்<br>மறித்துநோக் கில்லை யன்றே. 4 | கோபம் கொண்ட இராவணன் கண்கள் சிவக்கக் கயிலை நன்மலையை ஓடி எடுத்த அளவில் பார்வதி அஞ்ச, எம் பெருமான் அதனை நோக்கி முறுவலித்து ஒருகண நேரம் தன் கால் விரலை ஊன்றிய அவ்வளவில் இராவணன் உடல் நொந்து கதறி விட்டான். கால்விரலை மடித்துச் சிறிது அழுந்த ஊன்றியிருந்தானாகில் மறித்தும் நோக்கு இல்லை அன்றே. |
| 460. கன்றித்தன் கண்சி வந்து<br>கயிலைநன் மலையை யோடி<br>வென்றித்தன் கைத்த லத்தா<br>லெடுத்தலும் வெருவ மங்கை<br>நன்றுத்தா னக்கு நாத<br>னூன்றலு நகழ வீழ்ந்தான்<br>மன்றித்தா னூன்றி னானேன்<br>மறித்துநோக் கில்லை யன்றே. 5 | வெகுண்டு கண் சிவந்து கயிலை நன்மலையை நோக்கி ஓடி இராவணன் பல வெற்றிகளைப் பெற்ற தன் கைகளால் எடுத்தலும் பார்வதி அஞ்ச எம் பெருமான் நன்கு சிரித்துத் தன் கால் விரலை ஊன்றிய அளவில் அவன் துன்புற்று வீழ்ந்தான். அவனைத் தண்டிக்கக் கருதி விரலைப் பெருமான் அழுத்தி ஊன்றியிருந்தால் மறித்தும் நோக்கு இல்லை அன்றே. |
| 461. களித்தவன் கண்சி வந்து<br>கயிலைநன் மலையை யோடி<br>நெளித்தவ னெடுத்தி டல்லு<br>நேரிழை யஞ்ச நோக்கி<br>வெளித்தவ னூன்றி யிட்ட<br>வெற்பினா லலறி வீழ்ந்தான்<br>மளித்திறை யூன்றி னானேன்<br>மறித்துநோக் கில்லை யன்றே. 6<br><br>---<br>பெருமான் காலை அழுத்தி ஊன்றியிருந்தால்<br>இராவணன் இல்லாமலே போயிருப்பான். | செருக்குற்ற இராவணன் கண்சிவந்து கயிலை நன்மலையை நோக்கி ஓடிச்சென்று உடலை நெளித்துக் கொண்டு பெயர்க்க முற்பட்ட அளவில் பார்வதி அஞ்ச, அதனை நோக்கி வெண்ணிற நீறு பூசிய பெருமானை மலையை அழுத்த, இரவாணன் அலறிக்கொண்டு விழுந்தான். விரலை மடித்துக் கொண்டு அழுத்தமாக ஊன்றியிருந்தால் மறித்தும் நோக்கு இல்லை அன்றே. |

| | |
|---|---|
| 462. கருத்தனாய்க் கண்சி வந்து<br>கயிலைநன் மலையைக் கையால்<br>எருத்தனா யெடுத்த வாறே<br>யேந்திழை யஞ்ச வீசன்<br>திருத்தனாய் நின்ற தேவன்<br>றிருவிர லூன்ற வீழ்ந்தான்<br>வருத்துவா னூன்றி னானேன்<br>மறித்துநோக் கில்லை யன்றே. 7 | இலங்கைத் தலைவன் வெகுண்டு கயிலை நன் மலையைக் காளை போன்றவனாய்க் கழுத்தைக் கொடுத்துப் பெயர்த்த அளவில் பார்வதி அஞ்ச, எல்லோரையும் ஆள்பவனாய்த் தீய வினைகளிலிருந்து திருத்தி ஆட்கொள்ளும் எம் பெருமான் திருவிரலை ஊன்றிய அளவில் அவன் செயலற்று விழுந்தான். இராவணனைத் துன்புறுத்தும் எண்ணத்தோடு விரலை ஊன்றியிருந்தால் மறித்தும் நோக்கு இல்லை அன்றே. |
| 463. கடியவன் கண்சி வந்து<br>கயிலைநன் மலையை யோடி<br>வடிவுடை மங்கை யஞ்ச<br>வெடுத்தலு மருவ நோக்கிச்<br>செடிபடத் திருவி ரல்லா<br>லூன்றலுஞ் சிதைந்து வீழ்ந்தான்<br>வடிவுற வூன்றி னானேன்<br>மறித்துநோக் கில்லை யன்றே. 8 | கொடிய இராவணன் வெகுண்டு ஓடிச்சென்று கயிலை நன்மலையைப் பார்வதி அஞ்சுமாறு பெயர்த்த அளவில் சிவபெருமான் பொருந்த நினைத்து அவனுக்குத் தீங்கு நிகழுமாறு திருவிரலால் அழுத்திய அளவில் உருச்சிதைந்து விழுந்தான். விரல் நன்றாகப் பொருந்த ஊன்றியிருந்தாராயின் மறித்தும் நோக்கு இல்லை அன்றே. |
| 464. கரியத்தான் கண்சி வந்து<br>கயிலைநன் மலையைப் பற்றி<br>இரியத்தா னெடுத்தி டல்லு<br>மேந்திழை யஞ்ச வீசன்<br>நெரியத்தா னூன்றா முன்ன<br>நிற்கிலா தலறி வீழ்ந்தான்<br>மரியத்தா னூன்றி னானேன்<br>மறித்துநோக் கில்லை யன்றே. 9 | உள்ளம் கரியக் கண்கள் சிவக்கக் கயிலை மலையைப் பற்றி அது உறுதிகெட்டுத் தளர இராவணன் பெயர்த்த அளவில் பார்வதி அஞ்ச, ஈசன் இராவணன் உடல் நெரியுமாறு தன் கால்விரலைச் சிறிது ஊன்றாத முன்னரே கனத்தைத் தாங்கமுடியாத அவன் அலறியவாறு விழுந்தான். அவன் இறக்குமாறு எம் பெருமான் விரலை ஊன்றியிருப்பின் மறித்தும் நோக்கு இல்லை அன்றே. |
| 465. கற்றனன் கயிலை தன்னைக்<br>காண்டலு மரக்க னோடிச்<br>செற்றவ னெடுத்த வாறே<br>சேயிழை யஞ்ச வீசன்<br>உற்றிறை யூன்றா முன்ன<br>முணர்வழி வகையால் வீழ்ந்தான்<br>மற்றிறை யூன்றி னானேன்<br>மறித்துநோக் கில்லை யன்றே. 10 | சிவபெருமானுடைய கயிலைமலையைக் கண்ட அளவில் இராவணன், வெகுண்டு ஓடிச் சென்று, அதனை எடுத்த அளவில் பார்வதி அஞ்ச, எம் பெருமான் அவன் செயலை உள்ளத்துக் கொண்டு தன் விரலை ஊன்றிய மாத்திரத்தே அறிவு அழியும் நிலையில் இராவணன் விழுந்தான். சற்று எம்பெருமான் அழுத்தி ஊன்றியிருந்தால் மீண்டு அவன் உயிரோடு கண் விழித்துப் பார்க்கும் வாய்ப்பே ஏற்படாது போயிருக்கும். |

## 48. திருவாப்பாடி

(சண்டேசுர நாயனார் வெண் மணலைச் சிவலிங்கமாகப் பிடித்துப் பூசித்துச் சண்டீசப்பதம் பெற்ற வரலாற்றுப் பதி)

**திருநேரிசை** **பதிக எண் : 48**

466. கடலக மேழி னோடும்
பவனமுங் கலந்த விண்ணும்
உடலகத் துயிரும் பாரு
மொள்ளழ லாகி நின்று
தடமலர்க் கந்த மாலை
தண்மதி பகலு மாகி
மடலவிழ் கொன்றை சூடி
மன்னுமாப் பாடி யாரே. 1

ஏழு கடலும், காற்றும், விண்ணும், உடல்களில் உள்ள உயிர்களும், உலகமும், தீயும் ஆகிநின்று, பெரிய மலர்கள் மணம் வீசும் மாலைக்காலமும், குளிர்ந்த சந்திரன் ஒளிவிடும் இரவும், சூரியன் ஒளிவிடும் பகற்காலமும் ஆகி, நிலைபெற்று நின்ற ஆப்பாடியார் இதழ் விரிகின்ற கொன்றை பூமாலையைச் சூடியவராவார்.

'பாடலுகந்தார்' என்ற இறைவனின் பெயர் மருவி பாலுகந்தநாதர் என்றாகிவிட்டது.

467. ஆதியு மறிவு மாகி
யறிவினுட் செறிவு மாகிச்
சோதியுட் சுடரு மாகித்
தூநெறிக் கொருவ னாகிப்
பாதியிற் பெண்ணு மாகிப்
பரவுவார் பாங்க ராகி
வேதியர் வாழுஞ் **சேய்ஞல்**
விரும்புமாப் பாடி யாரே. 2

ஆதியும் அறிவும் ஆகி அறிவினுள் செறிந்திருப்பவராய், ஒளியை உட்கொண்ட ஞானச்சுடராய், தூய வழிக்குச் செலுத்தும் ஒப்பற்றவராய்ப் பாதி பெண் உருவினராய், வழிபடுபவர்களுக்குத் துணைவராய் வேதியர்கள் வாழும் **சேய்ஞலூரை** விரும்பி, அதனை அடுத்த ஆப்பாடியில் பெருமான் அமைந்துள்ளார்.

சேய்ஞலூர் – சண்டேசுரர் அவதாரத்தலம். முருகப் பெருமான் வழிநடைப்படலத்தில் சூரசம்ஹாரத்துக்கு முன் சிவலிங்கம் தாபித்துப் பூசித்த தலம். மண்ணியாற்றங்கரையில் உள்ளது. பாடி வீடமைத்து முருகப்பெருமான் ஓர் இரவு முழுவதும் தங்கிச் சென்ற இடம் என்று கச்சியப்ப சிவாசாரியார் கந்த புராணத்தில் பதிவு செய்துள்ளார்.

468. எண்ணுடை யிருக்கு மாகி
யிருக்கினுட் பொருளு மாகிப்
பண்ணொடு பாட றன்னைப்
பரவுவார் பாங்க ராகிக்
கண்ணொரு நெற்றி யாகிக்
கருதுவார் கருத லாகாப்
பெண்ணொரு பாக மாகிப்
பேணுமாப் பாடி யாரே. 3

மிக மேம்பட்டதாக எண்ணப்படும் இருக்கு வேதமாய், அவ்வேதம் குறிப்பிடும் பரம்பொருளாய், பண்ணோடு பாடல் பாடுபவர் துணைவராய், நெற்றிக்கண்ணராய், உண்மை ஞானிகள் அல்லாதாருக்கு அறிதலும் எண்ணுதலும் இயலாத பார்வதி பாகராய்த் திருவாப்பாடியை விரும்பி உறையும் சிவபெருமான் அமைந்துள்ளார்.

469. அண்டமா ரமரர் கோமா
னாதியெம் மண்ணல் பாதம்
கொண்டவன் குறிப்பி னாலே
கூப்பினான் றாப ரத்தைக்
கண்டவன் றாதை பாய்வான்
காலற வெறியக் கண்டு
தண்டியார்க் **கருள்கள்** செய்த
தலைவராப் பாடி யாரே. 4

எல்லா உலகங்களுமாய், தேவர் தலைவராய், எல்லோருக்கும் ஆதியாய் உள்ள அண்ணலாரின் திருவடிகளை மனத்துள் கொண்டு, அப்பெருமான் குறிப்பினாலே மணலிலே மணலால் விசாரசருமன் இலிங்க வடிவத்தை அமைக்க அதனைக் கண்ட அவன் தந்தையாகிய எச்சதத்தன் சிவபூசையை அழிக்க ஓடிவர, விசாரசருமன் அவன் கால்களை வெட்டியதனைக் கண்டு அவனுக்குச் சண்டீசன் என்ற பதவியை அருளிச் செய்தவர் திருவாப்பாடிப் பெருமானாவார்.

அருள்கள் 1. அடுத்த தாதை இனி உனக்கு நாம்

2. தொண்டர் தலைமை; நாம் உண்ட கலமும், உடுப்பனவும், சூடுவனவும் ஆகிய அனைத்துக்கும் உரிமையுற்றமை; சண்டீசனுமாம் பதப்பேறு. இதற்கெல்லாம் காரணம் அவர் செய்த சிவபூசை. பெரியபுராணத்துள் சண்டேசுவர நாயனார் புராணத்தில் இதை விரிவாகக் காணலாம். சேய்ஞலூர் அருகில் உள்ளது ஆப்பாடி.

---

470. **சிந்தையுந் தெளிவு மாகித்**
**தெளிவினுட் சிவமு மாகி**
வந்தநற் பயனு மாகி
வாணுதல் பாக மாகி
மந்தமாம் பொழில்கள் சூழ்ந்த
மண்ணித் தென்கரைமேன் மன்னி
அந்தமோ டளவி லாத
வடிகளாப் பாடி யாரே. 5

சிந்தித்தல், தெளிதல், தெளிவினுள் விளங்கும் தூய நிலையாகிய நிட்டை, இவற்றால் பயனாகிய வீடுபேறு ஆகியவைகளாகிப் பார்வதி பாகராய், முடிவும் அளவும் இல்லாதவராய்த் தென்றல் வீசப்பெறுவதாய் மண்ணியாற்றின் அழகிய கரையில் நிலை பெற்றிருக்கும் ஆப்பாடியை உறைவிடமாகக் கொண்ட பெருமான் அமைந்துள்ளார்.

---

471. வன்னிவா ளரவு மத்த
மதியமு மாறுஞ் சூடி
மின்னிய வுருவாஞ் சோதி
மெய்ப்பொருட் பயனு மாகிக்
கன்னியோர் பாக மாகிக்
கருதுவார் கருத்து மாகி
இன்னிசை தொண்டர் பாட
விருந்தவாப் பாடி யாரே. 6

வன்னி, ஒளி பொருந்திய பாம்பு, ஊமத்தை, பிறை, கங்கை இவற்றைச் சூடி, மின்னல் போல ஒளி வீசும் வடிவினை உடைய ஒளிமயமாய், **ஞானத்தின் பயனாகிய பரமுத்தியாய்ப்** பார்வதி பாகராய், தியானிப்பவர் தியானத்தில் இருப்பவராய், இனிய இசைகளை அடியார்கள் பாடுமாறு ஆப்பாடியார் இருக்கின்றார்.

---

472. உள்ளுமாய்ப் புறமு மாகி
யுருவுமா யருவு மாகி
வெள்ளமாய்க் கரையு மாகி
விரிகதிர் ஞாயி றாகிக்
கள்ளமாய்க் கள்ளத் துள்ளார்
கருத்துமா யருத்த மாகி
அள்ளுவார்க் கள்ளல் செய்திட்
டிருந்தவாப் பாடி யாரே. 7

உள்ளும் புறமுமாய், அருவும் உருவுமாய், வெள்ளமும் கரையுமாய்க் கிரணங்கள் விரிகின்ற சூரியனாய், கள்ளமும் கள்ளத்து உள்ளாருமாய்க் கருத்துள் இருப்பவராய்ச் செல்வ வடிவினராய், தம்மைப் பலவகையாலும் அனுபவிக்கும் அடியவர்களுக்கு அவர்கள் விரும்பியவாறு கொள்ளத் தம்மை வழங்கிக் கொண்டு இருப்பவர் ஆப்பாடிப் பெருமான் ஆவார்.

ஆப்பாடியார் மண்ணியாற்றின் தென்கரையில், ஆத்தி மரநீழலில் உள்ளார்.

| | |
|---|---|
| **473.** மயக்கமாய்த் தெளிவு மாகி<br>மால்வரை வளியு மாகித்<br>தியக்கமா யொருக்க மாகிச்<br>சிந்தையு ளொன்றி நின்று<br>இயக்கமா யிறுதி யாகி<br>யெண்டிசைக் கிறைவ ராகி<br>அயக்கமா யடக்க மாய<br>வைவராப் பாடி யாரே. 8 | மயக்கமும் தெளிவுமாகிப் பெரிய மலைகளும் காற்றுமாகி, அசைவும் அசைவின்மையுமாகி, அடியவர் சிந்தையுள் பொருந்திநின்று, அதனை இயக்குபவராய், உலகுக்கெல்லாம் இறுதியாய், எண் திசைகளுக்கும் தலைவராய், நோயற்றவராய்ப் பொறிவாயில் ஐந்தும் அவித்தவராய், உள்ளவர் திருவாப்பாடிப் பெருமான் ஆவார். |
| **474.** ஆரழ லுருவ மாகி<br>யண்டமேழ் கடந்த வெந்தை<br>பேரொளி யுருவி னானைப்<br>பிரமனு மாலுங் காணாச்<br>சீரவை **பரவி யேத்திச்**<br>**சென்றடி வணங்கு வார்க்குப்**<br>பேரரு ளருளிச் செய்வார்<br>பேணுமாப் பாடி யாரே. 9<br><br>பரவுதலும், ஏத்துதலும், சென்று அடி வணங்குதலும், சிவபெருமானுடைய பேரருள் பெறும் வழிகளாகும். | பெரிய தீத்தம்பத்தின் உருவினராய் ஏழுலகமும் கடந்த எம் தந்தையாராகிய பேரொளிப் பெருமானைப் பிரமனும் திருமாலும் முடி அடி காணமுடியாதிருந்த சிறப்பினை முன்நின்று **துதித்துப் புகழ்ந்து, திருவடிகளை வணங்குபவருக்கு,** ஆப்பாடியை விரும்பி உறையும் அப்பெருமான் பெருமளவில் அருள் செய்பவராவார். |
| **475.** திண்டிற லரக்க னோடிச்<br>சீகயி லாயந் தன்னை<br>எண்டிற லிலனு மாகி<br>யெடுத்தலு மேழை யஞ்ச<br>விண்டிறல் நெரிய வூன்றி<br>மிகக்கடுத் தலறி வீழப்<br>பண்டிறல் கேட் டுகந்த<br>பரமராப் பாடி யாரே. 10 | மிக்க உடல் வலிமையை உடைய இராவணன் எம் பெருமானைப் பற்றி எண்ணியறியும் அறிவு வலிமை இல்லாதவனாய்ப் பெருமைமிக்க கயிலாய மலையைப் பெயர்க்க முற்பட்ட அளவில் பார்வதி பயப்பட, அவன் உடல் வலிமை நீங்குமளவுக்கு அவன் உடல் நெரியுமாறு மிகவும் வெகுண்டு விரலை ஊன்ற அவன் அலறிவிழப் பின் அவன் பாடிய பண்களையும் அவற்றின் திறங்களையும் கேட்டுகந்த பெருமான் திருஆப்பாடியார் ஆவார். |

## 49. திருக்குறுக்கைவீரட்டம்

(பல புராண வரலாறுகளைக் கூறும் பதிகம்
ஒவ்வொரு பாடலிலும் ஒரு சரிதம்)

திருநேரிசை                                                                 பதிக எண் : 49

**பிரமன் அர்ச்சனை செய்தது**

476. **ஆதியிற் பிரம னார்தா**
மார்ச்சித்தா ரடியி ணைக்கீழ்
ஓதிய வேத நாவ
ருணருமா றுணர லுற்றார்
சோதியுட் சுடராய்த் தோன்றிச்
சொல்லினை யிறந்தார் பல்பூக்
கோதிவண் டறையுஞ்சோலைக்
குறுக்கைவீ ரட்ட னாரே.                    1

ஆதிப்பிரமர் வண்டுகள் மலர்களைக் கோதி ஒலிக்கும் சோலைகளால் சூழப்பட்ட குறுக்கை வீரட்டனார் திருவடிக் கீழ் அர்ச்சனை செய்தார். வேதம் ஓதிய நாவினை உடைய பிரமனார் தம்மை வழிபாட்டால் உணருந் தன்மையைச் சிவபெருமான் உணர்ந்தவராவர். அப்பெருமான் சூரியன் முதலிய ஒளிப்பொருள்களுக்கு ஒளிதருபவராய் ஆரேனும் அமர்ந்திருந்து சொல்லும் நிலையைக் கடந்த பெருமையுடையவர்.

---

ஆதியில் பிரமனார் – ஆதியில் முதற்கற்பத்தில், முதற்படைப்பில், படைப்பின் தொடக்கத்தில் நூறு கோடி பிரமர்களுள் ஆதியில் தோன்றிய பிரமனார் அடியிணைக் கீழ் அர்ச்சித்தார். ஐந்தாவது பாட்டில் (480) திருமால் அர்ச்சிக்கிறார்.

---

**மார்க்கண்டர்க்காகக் கூற்றினை உதைத்தது**

477. **நீற்றினை நிறையப் பூசி**
**நித்தலு நியமஞ் செய்து**
**ஆற்றுநீர் பூரித் தாட்டு**
மந்தண னாரைக் கொல்வான்
சாற்றுநா ளற்ற தென்று
தருமரா சற்காய் வந்த
கூற்றினைக் குமைப்பர் போலுங்
குறுக்கைவீ ரட்ட னாரே.                    2

திருநீற்றை உடல்நிறையப் பூசி நாடோறும் செய் கடன்களைச் செய்து, காவிரி நீரை நிறைத்து அபிடேகம் செய்யும் மார்க்கண்டேயருக்குப் பிரமனால் குறிப்பிடப்பட்ட வாழ்நாள் முடிந்து விட்டது என்று அவரைக் கொல்வதற்காகத் தருமராசருடைய ஆணைப்படி வந்த கூற்றுவனைக் குறுக்கை வீரட்டனார் தண்டித்தார்

---

நீறு, நியமம், நீர் – முதலானவை முக்கியம்.

### சண்டீச நாயனார் சரிதம்

**478.** தழைத்ததோ ராத்தி யின்கீழ்
**தாபர மண**லாற் கூப்பி
அழைத்தங்கே யாவின் பாலைக்
கறந்துகொண் டாட்டக் கண்டு
பிழைத்ததன் தாதை தாளைப்
பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோ ரமுத மீந்தார்
குறுக்கைவீ ரட்ட னாரே. 3

தழைகள் நிரம்பிய ஆத்தி மரத்தின் கீழே மணலால் இலிங்கம் அமைத்து எம்பெருமானை அவன் திருநாமங்களைக் கூறி அழைத்து விசாரசருமன் பசுவின் பாலைக் கறந்து கொண்டு அபிடேகம் செய்ததனைக் கண்டு தவறு செய்த தன்னுடைய தந்தையின் கால்களைப் பெரிய வளைந்த மழுவாயுதத்தால் வெட்ட அவ்விசார சருமனுக்குக் குறுக்கை வீரட்டனார் சிவானந்தமாகிய அமுதத்தைக் குழைத்துக் கொடுத்துள்ளார். **மனனம் செய்து சண்டேசுரவர் வழிபாட்டின் போது பாட வேண்டியது.**

தாதை – வடசொல்; தந்தை – தமிழ்ச்சொல்.

தாபரம் – சிவன் திருமேனி. சிவன் பூசை கொள்ளும் உருவம், தாபரம் – சங்கமம் என்று இருவகைப்படும். தாபரமாவது – மண் முதலிய பொருள்களால் ஆக்குவது. ஏனையது சிவனடியார் திருவுருவம். "சந்தி மூன்றிலும் தாபர நிறுத்திச் சகளி செய்து இறைஞ்சும் அகத்தியன்" – ஆரூரர்

### கோச்செங்கட் சோழனார் சரிதம்

**479.** சிலந்தியு மானைக் காவிற்
றிருநிழற் பந்தர்செய்து
உலந்தவ ணிறந்த போதே
கோச்செங்க ணானு மாகக்
கலந்தநீர்க் காவிரீ சூழ்
சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித் திட்டார்
குறுக்கைவீ ரட்ட னாரே. 4

திருவானைக்காவிற் பெருமானுக்கு அழகிய நிழலைத்தரும் பந்தலை அமைத்த சிலந்தி இறந்தபின் மறுபிறப்பில், சுவாமியுடன் கலந்து பயின்ற நீரை உடைய காவிரியாற் சூழப்பட்ட சோழ நாட்டு மன்னர் மரபிலே கோச்செங்கண்ணான் என்ற பெயருடைய அரசனாகுமாறு பிறப்பித்து விட்டார் குறுக்கை வீரட்டனார்.

### திருமால் பூசித்துச் சக்கரம் பெற்ற வரலாறு

**480.** ஏறுட னேழ டர்த்தா
னெண்ணியா யிரம்பூக் கொண்டு
ஆறுடைச் சடையி னானை
யர்ச்சித்தா னடியி ணைக்கீழ்
வேறுமோர் பூக்கு றைய
மெய்ம்மலர்க் கண்ணை யீண்டக்
கூறுமோ ராழி யீந்தார்
குறுக்கைவீ ரட்ட னாரே. 5

ஏழு இடபங்களையும் ஒரு சேர அழித்த கண்ணனாக அவதரித்த திருமால் கங்கா சடாதரனை அவன் திருவடிகளின் கீழ் ஆயிரம் தாமரைப்பூக்கள் கொண்டு அருச்சித்தானாக அப்பூக்களில் ஒரு பூக்குறைய அக்குறைவை நீக்கத் தாமரை போன்ற தன் கண் ஒன்றனைப் பெயர்த்து அருச்சிக்க, அத்திருமாலுக்கு எல்லோராலும் புகழப்படும் சக்கராயுதத்தை வழங்கினார் குறுக்கை வீரட்டனார்.

கண்ணன் ஏழு விடை அடர்த்த வரலாறு பாகவதத்தில் உள்ளது.

**சாக்கியநாயனார் சரிதம்**

481. கல்லினா லெறிந்து கஞ்சி
தாமுணுஞ் சாக்கி யனார்
நெல்லினார் சோறு ணாமே
நீள்விசும் பாள வைத்தார்
எல்லியாங் கெரிகையேந்தி
யெழிறிகழ் நட்டமாடிக்
**கொல்லியாம் பண்ணுகந்தார்**
குறுக்கை வீரட்டனாரே. 6

சிவபெருமான் மீது நாடோறும் ஒரு கல்லினை எறிந்த பின்னரே தாம் உண்ணும் நியமத்தைக் கொண்ட சாக்கிய நாயனார் இவ்வுலகிலிருந்து அரிசிச் சோறு உண்ணாமல் மேம்பட்ட வீட்டுலகை ஆளுமாறு செய்தவர். இரவிலே உள்ளங்கையில் தீயை ஏந்தி அழகிய கூத்து நிகழ்த்திக் கொல்லிப்பண்ணை விரும்பிப் பாடும் குறுக்கை வீரட்டனாராவர்.

**கண்ணப்ப நாயனார் சரிதம்**

482. காப்பதோர் வில்லு மம்புங்
கையதோ ரிறைச்சிப் பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத்
தூயவாய்க் கலச மாட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய
குருதிநீ ரொழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார்
குறுக்கைவீ ரட்ட னாரே. 7

காவல் செய்வதற்குரிய வில்லும் அம்பும் ஒரு கையிலும், நிவேதனத்திற்குரிய இறைச்சிச் சுமை மற்றொரு கையிலும் பொருந்த, காலில் தோலாலாகிய பெரிய செருப்பினை அணிந்து, தூயவாயினில் நீரைக் கொண்டு கலசநீரால் அபிடேகிப்பது போல எம் பெருமானை அபிடேகித்து, அப்பெருமானுடைய ஒளிவீசும் பெரிய கண்களில் இரத்தம் பெருகி ஒழுகத் தன் கண் ஒன்றனைப் பெயர்த்து முதலில் ஒரு கண்ணில் அப்பிப்பின் மற்றொரு கண்ணைப் பெயர்க்க அதன்கண் அம்பினைச் செலுத்திய அளவில் அத்திண்ணனுடைய கையைப் பற்றிக் கொண்டார் குறுக்கை வீரட்டனார்.

**மாவலி சரிதம்**

483. நிறைமறைக் காடு தன்னில்
நீண்டெரி தீபந் தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச்
சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடன் மண்ணும் விண்ணும்
நீண்டவா னுலக மெல்லாம்
குறைவறக் கொடுப்பர்போலுங்
குறுக்கைவீ ரட்ட னாரே. 8

நிறைமறை – வேதத்தில் அடங்காத பொருள் வேறின்மையால் நிறைமறை என்றார்.

மந்திர சித்தி நிறைந்த வேதங்கள் பூசித்த மறைக்காட்டில் நீண்டு எரியும் திறத்ததாகிய விளக்கினைக் கறுத்த நிறத்தை உடைய எலி தன் மூக்கினை அத்தீப்பிழம்பு சுட்டிட அதனால் வெகுண்டு திரியைத் தூண்டி விளக்கு நல்ல ஒளியோடு எரியச் செய்ய அந்த எலிக்கு மறுபிறப்பில் கடலால் சூழப்பட்ட நிலஉலகம், தேவர் உலகம், நீண்ட மேலுலகங்கள் ஆகியவற்றை எல்லாம் மாவலிச் சக்கரவர்த்தியாக ஆளுமாறு குறைவற வழங்கினார் குறுக்கை வீரட்டனார்.

**கணம்புல்ல நாயனார் சரிதம்**

| | |
|---|---|
| **484.** அணங்குமை பாக மாக<br>வடக்கிய வாதி மூர்த்தி<br>வணங்குவா ரிடர்க டீர்க்கு<br>மருந்துநல் லருந்த வத்த<br>கணம்புல்லர்க் கருள்கள் செய்து<br>காதலா மடியார்க் கென்றும்<br>குணங்களைக் கொடுப்பர் போலுங்<br>குறுக்கைவீ ரட்ட னாரே. 9 | பார்வதியைப் பாகமாகத் தம் திருமேனியில் அடக்கிக் கொண்ட வடிவினராய், தம்மை வணங்குபவர்களுடைய துயரம் போக்கும் மருந்தாகியவராய், நல்ல மேம்பட்ட தவத்தை உடைய கணம்புல்ல நாயனாருக்கு அருள்களை செய்து, தம்மிடம் அன்பு பூணும் அடியவர்களுக்கு, நல்ல பண்புகளை அருளுவார் குறுக்கை வீரட்டனார். |

**இராவணன் சரிதம்**

| | |
|---|---|
| **485.** எடுத்தன னெழிற் கயிலை<br>யிலங்கையர் மன்னன் றன்னை<br>அடுத்தொரு விரலா லூன்ற<br>வலறிப்போ யவனும் வீழ்ந்து<br>விடுத்தனன் கைந்ந ரம்பால்<br>வேதகீ தங்கள் பாடக்<br>கொடுத்தனர் கொற்ற வாணாள்<br>குறுக்கைவீ ரட்ட னாரே. 10 | கயிலைமலையைப் பெயர்க்க முற்பட்ட இலங்கையின் மன்னனாகிய இராவணனைப் பொருந்திய கால் விரலால் அழுத்திய அளவில் அலறிப் போய் அவன் செயலற்று விழுந்து, செருக்கினை விடுத்துக் கை நரம்புகளை வீணை நரம்புகள் ஆக்கி ஒலித்து வேத, கீதங்களைப் பாட, அவனுக்கு வெற்றியைத் தரும் வாளினையும் நீண்ட ஆயுளையும் நல்கினார் குறுக்கை வீரட்டனார். |

## 50. திருக்குறுக்கை வீரட்டம்

தீர்க்கவாகு முனிவர் என்பவர் இறைவனைக் காண இத்தலத்திற்கு வந்து தம்முடைய நீண்ட கரங்களால் ஆகாய கங்கையை அள்ளி அபிஷேகிக்கத் தமது கரங்களை மேலே நீட்ட கரங்கள் குறைந்தன. தன் அன்பில் ஏதேனும் சிறு குறை இருக்குமென எண்ணித் தன் தலையைக் கல்லில் மோதிக்கொள்ள இறைவன் காட்சி தந்தார். இம் முனிவர் கை இத்தலத்தில் குறுகியமையால் குறுங்கை எனப்பட்டுக் குறுக்கையாகியது எனப் புராண வரலாறு கூறுகிறது. காமதகனம் நடந்த அட்ட வீரட்டத்தலம். மயிலாடுதுறைக்கு அருகில் உள்ளது. அகத்தியர் பூசித்தது. காளியும், துர்க்கையும் காவல் புரிவது. முருகக்கடவுள் பூசித்துச் சூலாயுதம் பெற்றது. இலக்குமியின் நடுக்கத்தைப் போக்கியது. வாணாசுரனுக்கு அஞ்சிய மகாவிட்டுணுவுக்கு அபயம் அளித்தது. சோழநாடு முழுவதும் நெல் விளைய வேண்டுமென விரும்பிய சயத்துவசனுக்கு அவன் விருப்பப்படியே அருள்பாலித்த தலம். எட்டு வீரட்டத் தலங்களுள் ஒன்று.

திருநேரிசை

பதிக எண் : 50

486. நெடியமால் பிரம னோடு
நீரெனும் பிலயங் கொள்ள
அடியொடு முடியுங் காணா
ரருச்சுனற் கம்பும் வில்லும்
துடியுடை வேட ராகித்
தூயமந் திரங்கள் சொல்லிக்
கொடிநெடுந் தேர்கொ டுத்தார்
குறுக்கைவீ ரட்ட னாரே. 1

உலகங்களை எல்லாம் ஊழி வெள்ளம் மூழ்க்கிய காலத்தில், சிவபெருமான் தீப்பிழம்பாகத் தோன்ற, பிரமனும், நெடியோனாகிய திருமாலும் முறையே அவருடைய முடிஅடிகளைக் காணா நிலையினராயினர். அப்பெருமான் திருக்குறுக்கை வீரட்டத்து உறைபவராய்த் துடி என்னும் பறையை ஒலிக்கும் வேடர் வடிவினராய் அருச்சுனனுக்குத் தூயமந்திரங்களை உபதேசித்து, அம்பும் வில்லும் கொடிகள் உயர்த்தப்படும் தேரும் வழங்கியுள்ளார்.

487. ஆத்தமா மயனு மாலு
மன்றிமற் றொழிந்த தேவர்
சோத்தமெம் பெருமா னென்று
தொழுதுதோத் திரங்கள் சொல்லத்
தீர்த்தமா மட்ட மீமுன்
சீருடை யேழு நாளும்
கூத்தராய் வீதி போந்தார்
குறுக்கைவீ ரட்ட னாரே. 2

குருவிற்குத் தொண்டு செய்யும் பிரமனும் திருமாலும் ஏனைய தேவர்களும் 'எம்பெருமானே உனக்கு அஞ்சலி செய்கிறோம்' என்று தொழுது தோத்திரங்களை மொழியக் குறுக்கை வீரட்டனார் பிரமோற்சவ வேள்வி நிகழும் அட்டமிக்கு முற்பட்ட ஏழு நாள்களும் கூத்தாடுபவராய்த் திருவீதி உலாவை நிகழ்த்தியவராவர். பிரதமை முதல் அட்டமி முடிய.

ஆத்தம் – குரு சேவை. சோத்தம் – அஞ்சலி

x x x x x x x x x x 3, 4, 5, 6, 7, 8, 9, 10

## 51. திருக்கோடிகா

திருநேரிசை

பதிக எண் : 51

488. நெற்றிமேற் கண்ணி னானே
நீறுமெய் பூசி னானே
கற்றைப்புன் சடையி னானே
கடல்விடம் பருகி னானே
செற்றவர் புரங்கண் மூன்றுஞ்
செவ்வழல் செலுத்தி னானே
குற்றமில் குணத்தி னானே
கோடிகா வுடைய கோவே. 1

கோடிகா உடைய பெருமான் நெற்றிக்கண்ணனாய், நீற்றைத் திருமேனியிற் பூசியவனாய், முறுகிக் கற்றையான சிவந்த சடையினனாய், கடலில் தோன்றிய நஞ்சினைப் பருகியவனாய், பகைவருடைய முப்புரங்களிலும் தீயைச் செலுத்தியவனாய், குற்றமற்ற நற்பண்பினனாய் உள்ளவனாவான்.

| | |
|---|---|
| **489.** கடிகமழ் கொன்றை யானே<br>கபாலங்கை யேந்தி னானே<br>வடிவுடை மங்கை தன்னை<br>மார்பிலோர் பாகத் தானே<br>அடியிணை பரவ நாளு<br>மடியவர்க் கருள் செய்வானே<br>கொடியணி விழவ தோவாக்<br>கோடிகா வுடைய கோவே. 2 | கொடிகள் ஏற்றப்பட்டுத் திருவிழாக்கள் நடத்தப் பெறுதல் நீங்காத கோடிகாப் பெருமான் நறுமணம் கமழும் கொன்றைப் பூவினனாய், கையில் ஏந்திய மண்டையோட்டை உடையவனாய், அழகிய பார்வதியைப் பாகமாக மார்பில் கொண்டவனாய்த் தன் திருவடிகளை வழிபடுமாறு நாள்தோறும் அடியவர்களுக்கு அருள் செய்பவனாவான். |
| **490.** நீறுமெய் பூசி னானே<br>நிழறிகழ் மழுவி னானே<br>ஏறுகந் தேறி னானே<br>யிருங்கட லமுதொப் பானே<br>ஆறுமோர் நான்கு வேத<br>மறமுரைத் தருளி னானே<br>கூறுமோர் பெண்ணி னானே<br>கோடிகா வுடைய கோவே. 3<br><br>"கோடிகாவுடைய கோவே" – பதிக மகுடம். | கோடிகாப் பெருமான் நீற்றைத் திருமேனியில் பூசியவனாய், ஒளிவீசும் மழுப்படையினனாய், காளையை விரும்பி ஏறி ஊர்ந்தவனாய், பெரிய கடலில் தோன்றிய அமுதத்தை ஒப்பவனாய், நான்கு வேதங்களும் ஆறு அங்கங்களும் ஆகிய அறத்தை உபதேசித்தவனாய், பார்வதி பாகனாய் உள்ளான். |
| **491.** காலனைக் காலாற் செற்றன்<br>றருள்புரி கருணை யானே<br>நீலமார் கண்டத் தானே<br>நீண்முடி யமரர் கோவே<br>ஞாலமாம் பெருமை யானே<br>நளிரிளந் திங்கள் சூடும்<br>கோலமார் சடையினானே<br>கோடிகா வுடைய கோவே. 4 | கோடிகா உடைய பெருமான் காலனைக் காலால் ஒறுத்து மார்க்கண்டேயனுக்கு அருள்புரிந்த கருணையாளனாய், நீல கண்டனாய், நீண்டமுடிகளை உடைய தேவர்களுக்குத் தலைவனாய் உலகம் முழுதும் பரவிய பெருமானாய், குளிர்ந்த பிறைசூடும் அழகிய சடையினை உடையவனாய் உள்ளான். |
| **492.** பூணர வாரத் தானே<br>புலியுரி யரையி னானே<br>காணில்வெண் கோவ ணம்முங்<br>கையிலோர் கபால மேந்தி<br>ஊணுமோர் பிச்சை யானே<br>யுமையொரு பாகத் தானே<br>கோணல்வெண் பிறையி னானே<br>கோடிகா வுடைய கோவே. 5 | கோடிகா உடைய தலைவன் பாம்பை மாலையாகப் பூண்டு புலித்தோலை இடையில் உடுத்து வெண்கோவணம் தரித்து, கையில் மண்டையோட்டை ஏந்தி, பிச்சை ஏற்ற உணவையே உண்பவனாய்ப் பார்வதிபாகனாய் வளைந்த வெள்ளிய பிறையைச் சூடியவனாய் உள்ளான். |

| | |
|---|---|
| **493.** கேழல்வெண் கொம்பு பூண்ட<br>கிளரொளி மார்பி னானே<br>ஏழையே னேழை யேனா<br>னென்செய்கே னெந்தை பெம்மான்<br>மாழையொண் கண்ணி னார்கள்<br>வலைதனின் மயங்கு கின்றேன்<br>கூழையே றுடைய செல்வா<br>கோடிகா வுடைய கோவே. 6 | கோடிகா உடைய பெருமானே! பன்றியின் வெண்ணிறக் கொம்பினை அணிந்த ஒளிவீசும் மார்பினனாய், குட்டையான காளையை உடைய செல்வனே! எம் தந்தையாகிய தலைவனே! அழகிய ஒளி பொருந்திய கண்களை உடைய மகளிரின் பார்வையாகிய வலையில் அகப்பட்டு மயங்குகின்றேன். அறிவிலியாகிய அடியேன் யாது செய்குவென்? |
| **494.** அழலுமி ழங்கை யானே<br>யரிவையோர் பாகத் தானே<br>தழலுமி ழரவ மார்த்துத்<br>தலைதனில் பலிகொள் வானே<br>நிழலுமிழ் சோலை சூழ<br>நீள்வரி வண்டி னங்கள்<br>குழலுமிழ் கீதம் பாடுங்<br>கோடிகா வுடைய கோவே. 7 | நெருப்பை ஏந்திய உள்ளங்கையை உடையவனே! பார்வதிபாகனே! நெருப்பைக் கக்குகின்ற பாம்பினைக் கட்டிக் கொண்டு மண்டையோட்டில் பிச்சை பெறுபவனே! நிழலை வெளிப்படுத்துகின்ற சோலைகள் சூழ்ந்திருக்க அவற்றில் நீண்டகோடுகளை உடைய வண்டினங்கள் வேய்ங்குழல் ஒலிபோன்ற பாடல்களைப் பாடும் கோடிகாவை உடைய பெருமானே! |
| **495.** ஏவடு சிலையி னானே<br>புரமவை யெரிசெய் தானே<br>மாவடு வகிர்கொள் கண்ணாள்<br>மலைமகள் பாகத் தானே<br>ஆவடு துறையு ளானே<br>யைவரா லாட்டப் பட்டேன்<br>கோவடு குற்றந் தீராய்<br>கோடிகா வுடைய கோவே. 8 | அம்பை இணைத்த வில்லைக் கொண்டு மும்மதில்களையும் தீக்கு இரையாக்கியவனே! மாவடுவின் பிளப்பைப் போன்ற கண்களை உடைய பார்வதிபாகனே! ஆவடுதுறையில் உறைபவனே! கோடிகா உடைய தலைவனே! ஐம்பொறிகளாலும் யான் அவை விரும்பியவாறு செயற்படுத்தப்பட்டுள்ளேன். பசுக்கொலைக்கு ஒப்பாகிய என் குற்றங்களைப் போக்குவாயாக. |
| **496.** ஏற்றநீர்க் கங்கை யானே<br>யிருநிலந் தாவி னானும்<br>நாற்றமா மலர்மே லேறு<br>நான்முக னிவர்கள் கூடி<br>ஆற்றலா லளக்க லுற்றார்க்<br>கழலுரு வாயி னானே<br>கூற்றுக்குங் கூற்ற தானாய்<br>கோடிகா வுடைய கோவே. 9 | கோடிகாவில் உள்ள பெருமானே! கங்கையைச் சடையில் ஏற்றவனே! பெரிய உலகங்களை ஈரடியால் அளந்த திருமாலும் நறுமணம் கமழும் தாமரை மலர்மேல் தங்கும் பிரமனும் ஆகிய இருவரும் கூடித் தம் ஆற்றலால் அளக்க முயன்றவர்களுக்குத் தீத்தம்ப வடிவாயினவனே! யமனுக்கும் யமனாயினாய் நீ. |

497. பழகநா னடிமை செய்வேன்
பசுபதீ பாவ நாசா
மழகளி யானையின் றோல்
மலைமகள் வெருவப் போர்த்த
அழகனே யரக்கன் றிண்டோ
ளருவரை நெரிய வூன்றும்
குழகனே கோல மார்பா
கோடிகா வுடைய கோவே. 10

கோடிகா உடைய கோவே! ஆன்மாக்களின் தலைவனே! பாவங்களைப் போக்குபவனே! இளைய மதமயக்கமுடைய யானையின் தோலைப் பார்வதி அஞ்சுமாறு போர்த்த அழகனே! அரக்கனாகிய இராவணனுடைய வலிய தோள்கள் கயிலை மலையின் கீழ் அகப்பட்டு நெரியுமாறு கால்விரலை அழுத்திய அழகனே! நின் தொண்டிற் பழகுமாறு நான் அடித்தொண்டு செய்வேன்.

## 52. திருவாரூர்

**(ஐவர் வந்து முறைமுறை செய்யும் துயரங்கள்)**

**திருநேரிசை** **பதிக எண் : 52**

498. படுகுழிப் பவ்வத் தன்ன
பண்டியைப் பெய்த வாற்றால்
கெடுவதிம் மனிதர் வாழ்க்கை
காண்டொறுங் கேது கின்றேன்
முடுகுவ ரிருந்து **ளைவர்**
மூர்க்கரே லிவர்க ளோடும்
அடியனேன் வாழ மாட்டே
னாரூர்மூ லட்ட னீரே. 1

பதிகத்தின் எல்லாப் பாடல்களிலும் ஐம்பொறிகளினால் படும் துன்பங்களைக் குறிப்பிடுகிறார். ஆரூர் மூலட்டனீரே என்பது பதிக மகுடம்.

பெரிய பள்ளமான கடல் போன்ற வயிற்றை நிரப்புவதற்குரிய செயல்களில் ஈடுபடும் வகையால் இந்த மனித வாழ்வு பாழாகிறது. ஆதலால் இவ்வாழ்க்கையை நினைக்குந் தோறும் இதை விலக்க உதவுபவரை அழைக்கின்றேன். இவ்வுடம்பினுள் அறிவற்ற முரடாகிய **ஐம்பொறிகள்** இருந்து என்னைத் தம் விருப்பப்படி செயற்படுமாறு தூண்டுகின்றன. ஆரூர் மூலட்டானத்துள்ள பெருமானே! அடியேன் இவைகளோடு சேர்ந்து வாழும் ஆற்றல் உடையேன் அல்லேன்.

499. புழுப்பெய்த பண்டி தன்னைப்
புறமொரு தோலான் மூடி
ஒழுக்கறா வொன்ப துவா
யொற்றுமை யொன்றுமில்லை
சழக்குடை இதனு **ளைவர்**
சங்கடம் பலவுஞ் செய்ய
அழிப்பனாய் வாழ மாட்டே
னாரூர்மூ லட்ட னீரே. 2

ஆரூர் மூலட்டனீரே! புழுக்களை உள்ளே அடக்கி வைத்த வண்டியை வெளியே ஒரு தோலினாலே மறைத்து, திரவம் ஒழுகுதல் நீங்காத ஒன்பது வழிகள் ஒன்றற்கு ஒன்று ஒவ்வாத வகையில் அதன்கண் அமைய, இவ்வண்டிக்குள் குற்றமுடைய ஐம்பொறிகளும் பல துயரங்களை விளைக்க, அவற்றால் கலக்கமுற்று வாழ இயலாதேனாய் உள்ளேன்.

| | |
|---|---|
| **500.** பஞ்சின்மெல் லடியி னார்கள்<br>பாங்கரா **யவர்க** ணின்று<br>நெஞ்சினோய் பலவுஞ் செய்து<br>நினையினும் நினைய வொட்டார்<br>நஞ்சணி மிடற்றி னானே<br>நாதனே நம்பனே நான்<br>அஞ்சினேற் கஞ்ச லென்னீ<br>ராரூர்மூ லட்ட னீரே. 3 | விடத்தை அணிந்த கண்டரே! தலைவரே! அடியவரால் விரும்பப்படுகின்றவரே! பஞ்சினைப் போன்ற மெல்லிய பாதங்களை உடைய பெண்கள் பக்கம் சேர்ந்து கொண்டு என் நெஞ்சில் நோய்கள் பலவற்றை உண்டாக்கி உம்மை விருப்புற்று நினைப்பதற்கும் இசையாது செய்யுங் கலக்கத்தைக் கண்டு அஞ்சுகின்ற எனக்கு, ஆரூர்ப் பெருமானாகிய நீர் அஞ்சேல் என்று அடைக்கலம் தருகின்றீர் அல்லீர். |
| **501.** கெண்டையந் தடங்க ணல்லார்<br>தம்மையே கெழும வேண்டிக்<br>குண்டராய்த் திரிதந் **தைவர்**<br>குலைத்திடர்க் குழியி னூக்கக்<br>கண்டுநான் றரிக்க கில்லேன்<br>காத்துக்கொள்கறை சேர் கண்டா<br>அண்டவா னவர் போற்று<br>மாரூர்மூ லட்ட னீரே. 4 | நீலகண்டரே! எல்லா உலகங்களிலும் உள்ள தேவர்கள் போற்றும் ஆரூர்ப் பெருமானே! கெண்டைமீன் போன்ற அழகிய பெரிய கண்களை உடைய மகளிரைத் தழுவுவிக்க விரும்பி மூர்க்கராய்த் திரியும் என் ஐம்பொறிகளும் என்னை நிலை குலையச் செய்து துன்பக் குழியிலே தள்ளுகையினாலே அவற்றின் செயல்களைப் பொறுக்கும் ஆற்றல் இலேனாகிய என்னைப் பாதுகாத்து உம் அடிமையாகக் கொள்வீராக. |
| **502.** தாழ்குழ லின்சொ னல்லார்<br>தங்களைத் தஞ்ச மென்று<br>ஏழையே னாகி நாளு<br>மென்செய்கே னெந்தை பெம்மான்<br>வாழ்வதே லரிது போலும்<br>வைகலு **மைவர்** வந்து<br>ஆழ்குழிப் படுக்க வாற்றே<br>னாரூர்மூ லட்ட னீரே. 5 | என் தந்தையாகிய பெருமானே! ஆரூர் மூலத் தானத்தில் உறைபவரே! தாழ்ந்த கூந்தலையும் இனிய சொற்களையும் உடைய மகளிரையே பற்றுக்கோடாகக் கொண்டு அறிவற்றவனாகி நாடோறும் யான் யாது செயற்பாலேன்? நாள்தோறும் என் ஐம்பொறிகள் ஆழ்ந்த குழியில் என்னைத் தள்ள முயல்வதால் பொறுக்க முடியாத துயரினேனாய் உள்ளேன். இவ்வுலகில் ஒருவர் தம் குறிக்கோளுக்கு நேர்மையாக வாழ்வதே அரிய செயல்போலும். |

<table>
<tr><td>503. மாற்றமொன் றருள கில்லீர்<br>மதியிலேன் விதியி லாமை<br>சீற்றமுந் தீர்த்தல் செய்யீர்<br>சிக்கன வுடைய ராகிக்<br>கூற்றம்போ லைவர் வந்து<br>குலைத்திட்டுக் கோகு செய்ய<br>ஆற்றவுங் கில்லே னாயே<br>னாரூர்மூ லட்ட னீரே. 6</td><td>ஆரூர் மூலத்தானத்துப் பெருமானே! அடியேன் நல்லறிவின்மை காரணமாக நேரிய வழியில் செல்ல இயலாமை குறித்துத் தேவரீர் திருவுள்ளத்தில் எழுந்த கோபத்தைத் தணித்துக் கொள்ளுதலும் செய்யீராயினீர். தம் விருப்பப்படி செயல்புரிவிப்பதில் உறுதியுடைய என் ஐம்பொறிகள் கூற்றுவனைப் போலவந்து என்னைச் சிதற அடித்துத் தோள்தட்டி ஆர்த்து நிற்க நாயேன் அவைகள் தரும் துயரைப் பொறுக்க இயலாதேனாய் உள்ளேன். யான் உய்வதற்கு உரிய ஒரு உபாயத்தையும் நீர் அருளுகின்றீரில்லை.</td></tr>
<tr><td>504. உயிர்நிலை யுடம்பே காலா<br>வுள்ளமே தாழி யாகத்<br>துயரமே யேற்ற மாகத்<br>துன்பக்கோ லதனைப் பற்றிப்<br>பயிர்தனைச் சுழிய விட்டுப்<br>பாழ்க்குநீ ரிறைத்து மிக்க<br>அயர்வினா லைவர்க் காற்றே<br>னாரூர்மூ லட்ட னீரே. 7</td><td>ஆரூர்ப் பெருமானே! உயிர் நிற்றற்குரிய இவ்வுடலைக் காலாக நிறுவித் துயரத்தையே ஏற்ற மரமாக அமைத்து, உள்ளத்தையே ஏற்றச் சாலாகக் கொண்டு துன்பமாகிய, ஏற்றத்தோடு கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும் கழியைப் பற்றிப் பயிர்கள் சுருண்டு போகுமாறு அவற்றை விடுத்துப் பாழான வீண்தரைக்கே நீரை இறைத்து மிக்க தளர்ச்சியோடு என்னைத் தீய வழியிலேயே செலுத்தும் ஐம்பொறிகளின் ஆதிக்கத்தைத் தாங்க இயலாதேனாய் உள்ளேன்.</td></tr>
<tr><td>505. கற்றதே லொன்று மில்லை<br>காரிகை யாரோ டாடிப்<br>பெற்றதேற் பெரிதுந் துன்பம்<br>பேதையேன் பிழைப்பி னாலே<br>முற்றினா லைவர் வந்து<br>முறைமுறை துயரஞ் செய்ய<br>அற்றுநா னலந்து போனே<br>னாரூர்மூ லட்ட னாரே. 8</td><td>ஆரூர்ப் பெருமானே! அடியேன் அனுபவப் பொருளை ஞானதேசிகர்பால் கற்றுக் கொண்டது ஏதுமில்லை. மகளிர் பின்னே அலைந்து அறிவற்ற நான் பெருந்துயரம் உற்றேன். என் தவற்றினாலே ஐம்பொறிகளும் தம் ஆற்றலிலே நிறைவுற்றதனால் அவை தாம் விரும்பியவற்றைப் பெற்றுத்தருமாறு என்னை வருத்த அவற்றை எதிர்க்கும் ஆற்றலற்று அடியேன் துயருற்றவனானேன்.</td></tr>
<tr><td>506. பத்தனாய் வாழ மாட்டேன்<br>பாவியேன் பரவி வந்து<br>சித்தத்து ளைவர் தீய<br>செய்வினை பலவுஞ் செய்ய<br>மத்துறு தயிரே போல<br>மறுகுமென் னுள்ளந் தானும்<br>அத்தனே யமரர் கோவே<br>யாரூர்மூ லட்ட னாரே. 9</td><td>தலைவரே! தேவருக்கு அரசரே! ஆரூர் மூலத்தானத்தாரே! தீவினை செய்த அடியேன் பத்தனாக வாழ இயலாதேனாக, என் உள்ளம் முழுவதும் பரவி ஐம்பொறிகள் தீய செயல்கள் பலவற்றையும் செய்ய அவை என்னை வருத்துவதனால் மத்தினால் கடையப்பட்ட தயிரைப் போல என் உள்ளம் நிலை சுழல்கிறது.</td></tr>
</table>

| | |
|---|---|
| 507. தடக்கைநா லைந்துங் கொண்டு<br>தடவரை தன்னைப் பற்றி<br>எடுத்தவன் பேர்க்க வோடி<br>யிரிந்தன பூத மெல்லாம்<br>முடித்தலை பத்துந் தோளு<br>முறிதர விறையே யூன்றி<br>அடர்த்தருள் செய்த தென்னே<br>யாரூர்மூ லட்ட னீரே. 10 | ஆரூர் மூலத்தானத்தாரே! நீண்ட இருபது கைகளைக் கொண்டு பெரிய கயிலைமலையைப் பிடித்துப் பெயர்த்து எடுக்க முயன்ற இராவணன் செயலால் பூதங்கள் எல்லாம் அஞ்சி ஓட, அவனுடைய முடிகள் அணிந்த தலைகளும் இருபது கைகளும் முறியுமாறு சிறிதளவு கால் விரல் ஒன்றனை ஊன்றி வருத்திப் பின் அவனுக்கு அருள் செய்த நும் செயல் இருந்தவாறென்னே! |

## 53. திருவாரூர்

திருநேரிசை — பதிக எண் : 53

| | |
|---|---|
| 508. குழல்வளங் கொண்ட சொல்லாள்<br>கோலவேற் கண்ணி தன்னைக்<br>கழல்வளங் கொண்டுநீங்காக்<br>கணங்களக் கணங்க ளார<br>அழல்வளங் கொண்ட கையா<br>னருட்கதி ரெறிக்கு மாரூர்<br>தொழல்வலங் கொண்டல் செய்வான்<br>றோன்றினார் தோன்றி னாரே. 1 | வேய்ங்குழல் ஓசையை வென்ற இனிய சொல்லையுடையவளாய் அழகிய வேல் போன்ற கண்களையுடைய பார்வதியின் திருவடிகளை வலம் வந்து நீங்காத அடியவர்களுடைய கண்கள் நிறைவுறும்படியாகத் தீயினை வலக்கையில் கொண்ட பெருமான் அருளாகிய ஒளியைவீசும் திருவாரூரைத் தொழுவதற்கும் வலம் வருவதற்கும் வாய்ப்புடையவராகப் பிறப்பெடுத்தவரே பயனுடைய பிறப்பினைப் பெற்றவராவார். |
| 509. நாகத்தை நங்கை யஞ்ச<br>நங்கையை மஞ்ஞை யென்று<br>வேகத்தைத் தவிர நாகம்<br>வேழத்தி னுரிவை போர்த்து<br>பாகத்தி னிமிர்தல் செய்யாத்<br>திங்களை மின்னென் றஞ்சி<br>ஆகத்திற் கிடந்த நாக<br>மடங்குமா ரூர னார்க்கே. 2 | ஆரூரனிடத்தில் பாம்பைப் பார்த்துப் பார்வதி அஞ்ச, அப்பார்வதியை மயில் என்று கருதிப் பாம்பு தான் சீறிச் செயற்படும் உற்சாகத்தை நீக்கிச் சோர்வடைய, அப்பாம்பு தன்னை விழுங்கும் என்று அஞ்சிப்பிறை யானைத்தோலுள் மறைய ஒரு பகுதியும் நிமிர்ந்து பார்த்தலைச் செய்யாத சந்திரனை மின்னல் என்று கருதி அஞ்சி மார்பில் கிடந்த நாகம் சோர்ந்து கிடக்கிறது. |
| 510. தொழுதகங் குழைய மேவித்<br>தொட்டிமை யுடைய தொண்டர்<br>அழுதகம் புகுந்து நின்றா<br>ரவரவர் போலு மாரூர்<br>எழிலக நடுவெண் முத்த<br>மன்றியு மேர்கொள் வேலிப்<br>பொழிலகம் விளங்கு திங்கட்<br>புதுமுகிழ் சூடி னாரே. 3 | தம்முள் ஒத்த தன்மை உடைய தொண்டர்கள் தொழுது மனம் உருகுமாறு விரும்பி அழுதனராக, ஆரூரிலே பல வேலிப்பரப்புடைய சோலையின் நடுவே விளங்கும் பூங்கோயிலின் மூலத்தானத்திலே உறைந்து முத்துக்களையும் பிறையையும் சூடிய பெருமான் அவ்வடியவருடைய உள்ளத்திலே புகுந்து நிற்குமாற்றலால், தாமும் அவ்வவ்வடியவர் போல்வாரா நின்றார். |

| | |
|---|---|
| **511.** நஞ்சிருண் மணிகொள் கண்டர்<br>நகையிரு ளீமக் கங்குல்<br>வெஞ்சுடர் விளக்கத் தாடி<br>விளங்கினார் போலு மூவா<br>வெஞ்சுடர் முகடுதீண்டி<br>வெள்ளிநா ராசமன்ன<br>அஞ்சுட ரணிவெண்டிங்க<br>ளணியுமா ரூரனாரே. 4 | அழியாத சூரிய மண்டலத்தின் உச்சியைத் தொட்டுக் கொண்டுள்ள சடைமுடியில் வெள்ளிக் கம்பி இருந்தாற்போன்ற அழகிய ஒளி வீசும் பிறையை அணிந்த ஆரூர்ப் பெருமான் நஞ்சினால் இருண்ட நீலகண்டராய், இருள்மிக்க சுடுகாட்டில் இரவிலே வெளிப்படுகின்ற சுடுகாட்டுத் தீயாகிய விளக்கு வெளிச்சத்திலே கூத்தாடி விளங்குபவராவார். |
| **512.** எந்தளிர் நீர்மை கோல<br>மேனியென் றிமையோ ரேத்தப்<br>பைந்தளிர்க் கொம்ப ரன்ன<br>படர்கொடி பயிலப் பட்டுத்<br>தஞ்சடைத் தொத்தி னாலுந்<br>தம்மதோர் நீர்மை யாலும்<br>அந்தளி ராகம் போலும்<br>வடிவரா ரூர னாரே. 5 | எம்முடைய கற்பக மரத் தளிரின் தன்மையான அழகிய மேனியை உடைய ஆரூரன் என்று தேவர்கள் போற்றுமாறு, பசிய தளிரை உடைய காமவல்லி போன்று, தம் மேனிமீது படரும் கொடி போன்ற பார்வதியால் தழுவப்பட்டு, தம்முடைய சடைத் தொகுதியினாலும் தம்முடைய தனிப்பண்பினாலும் அழகிய தளிரினது வடிவம் போன்றவர் ஆவார் ஆரூரனார். |
| **513.** வானகம் விளங்க மல்கும்<br>வளங்கெழு மதியஞ் சூடித்<br>தானக மழிய வந்து<br>தாம்பலி தேர்வர் போலும்<br>ஊனகங் கழிந்த ஓட்டி<br>லுண்பது மொளிகொ ணஞ்சம்<br>ஆனகத் தஞ்சு மாடு<br>மடிகளா ரூர னாரே. 6 | புலாலின் சுவடு நீங்கப் பெற்ற மண்டையோட்டில் பிச்சை எடுத்து, ஒளி பொருந்திய விடத்தை உண்டு, பஞ்ச கவ்வியத்தில் நீராடும் ஆரூர்ப் பெருமான் வான்வெளி எங்கும் ஒளிபடருமாறு வளரும் பிறையைச் சூடி, பிச்சை இட இளைய மகளிருடைய மனம் பெண்மைக்குரிய பண்புகள் அழியுமாறு வந்து பிச்சை எடுத்துத் திரிவார் போலும். |
| **514.** அஞ்சணை கணையி னானை<br>யழலுற வன்று நோக்கி<br>அஞ்சணை குழலி னாளை<br>யமுதமா வணைந்து நக்கு<br>அஞ்சணை யஞ்சு மாடி<br>யாடர வாட்டுவார் தாம்<br>அஞ்சணை வேலி யாரூ<br>ராதரித் திடங்கொண் டாரே. 7 | ஐந்து வேலிப் பரப்புடைய திருவாரூர்க் கோயிலை விரும்பி உறையும் பெருமான் ஐங்கணைகளை உடைய மன்மதனைச் சாம்பலாகுமாறு ஒரு காலத்தில் நெற்றிக் கண்ணால் நோக்கி, ஐந்து விதமாக முடிக்கப்படும் (ஐம்பால்) கூந்தலையுடைய பார்வதியை அமுதமாகக் கருதி அவளோடு பொருந்தி, சிரித்து, பஞ்சகவ்வியத்தால் அபிடேகம் கொண்டு, ஐந்து தலைகளை உடையதாய்ப் படம் எடுத்து ஆடும் பாம்பினை ஆட்டுபவராக உள்ளார். |

அ. அஞ்சணை கணையினான் – ஐந்து பூக்களை அம்பாகவுடைய மன்மதன்.
ஆ. அஞ்சணை குழலினாள் – ஐந்து வகையாக முடிக்கப்பட்ட கூந்தலை உடைய அம்பிகை.
இ. அஞ்சணை அஞ்சு – ஆனைந்து, பஞ்சகவ்யம் ஈ. அஞ்சனை வேலி ஆரூர் – ஆரூர் கமலாலயக் குளம், பூங்கோயில், செங்கழுநீர் ஓடை, ஒவ்வொன்றும் 5 வேலி பரப்பளவுடையன.

| | |
|---|---|
| **515.** வணங்கிமுன் னமர ரேத்த<br>வல்வினை யான தீரப்<br>பிணங்குடைச் சடையில் வைத்த<br>பிறையுடைப் பெருமை யண்ணல்<br>மணங்கம ழோதி பாகர்<br>மதிநிலா வட்டத் தாடி<br>அணங்கொடி மாட வீதி<br>யாரூரெம் மடிக ளாரே. 8 | சந்திர மண்டலம் வரையில் உயர்ந்து அந்த வட்டமான பகுதியில் அடைந்து சந்திரனை அணுகுகின்ற அழகிய கொடிகள் உயர்த்தப்பட்ட மாடங்களை உடைய வீதிகளைக் கொண்ட ஆரூரில் உள்ள எம்பெருமான் தேவர்கள் தம்முடைய வலிய வினைப் பயன்கள் தீருமாறு முன் நின்று வணங்கித் துதிக்க ஒன்றோடொன்று கலந்து பின்னி முறுகிய சடைகளிடையே பிறையைச் சூடிய பெருமையை உடைய தலைவராவார். |
| **516.** நகலிடம் பிறர்கட் காக<br>நான்மறை யோர்க டங்கள்<br>புகலிட மாகி வாழும்<br>புகலிலி யிருவர் கூடி<br>இகலிட மாக நீண்டங்<br>கீண்டெழி லழல தாகி<br>அகலிடம் பரவி யேத்த<br>வடிகளா ரூர னாரே. 9 | வீண் பேச்சிற் பொழுதுபோக்கி நல்லோர் இகழ்ச்சிக்கிடமாகும் நிலை (அடியோரல்லாத) பிறர்க்காக நான்கு வேதங்களையும் ஓதும் பக்தர்களுக்கு அடைக்கலமாகி வாழ்பவராய், தமக்கு அடைக்கலம் தருபவர் பிறர் யாரும் இல்லாதவகையில் அனைவருக்கும் தாமே அடைக்கலமாகும் பெருமானாய், திருமாலும் பிரமனும் ஒன்று சேர்ந்து தமக்குள் மாறுபட்டு அடியும் முடியும் தேடும் தீப்பிழம்பாக நீண்டு, உலகத்தார் முன் நின்று துதித்துப் புகழுமாறு ஆரூர்த் தலைவர் விளங்குகிறார். |
| **517.** ஆயிர நதிகண் மொய்த்த<br>வலைகட லமுதம் வாங்கி<br>ஆயிர மசுரர் வாழு<br>மணிமதின் மூன்றும் வேவ<br>ஆயிரந் தோளு மட்டித்<br>தாடிய வசைவு தீர<br>ஆயிர மடியும் வைத்த<br>வடிகளா ரூர னாரே. 10 | நதிகள் பலவாக வந்து கலக்கும் அலைகளையுடைய கடலில் தோன்றிய அமுதினைத் தேவர் நுகருமாறு வழங்கி, அசுரர் பலர் வாழும் அழகிய மதில்கள் மூன்றையும் வேவச் செய்து ஆயிரம் தோள்களையும் சுழற்றி ஆடிய களைப்புத் தீருமாறு தமக்குத் தொண்டு புரிய அடியவர் பலரைக் கொண்டுள்ளவர் ஆரூரனாகிய பெருமான். |

## 54. திருப்புகலூர்

**(96 தத்துவக்குடிலில் ஐவரின் ஆட்சி)**

**திருநேரிசை** **பதிக எண் : 54**

| | |
|---|---|
| **518.** பகைத்திட்டார் புரங்கண் மூன்றும்<br>பாறிநீ றாகி வீழப்<br>புகைத்திட்ட தேவர் கோவே<br>பொறியிலே னுடலந் தன்னுள்<br>அகைத்திட்டங் கதனை நாளு<br>மைவர்கொண் டாட்ட வாடித்<br>திகைத்திட்டேன் செய்வ தென்னே<br>திருப்புக லூர னீரே. 1 | திருப்புகலூர் பெருமானே! பகையாயின அசுரர்களுடைய முப்புரங்களும் சிதறிச் சாம்பலாய் விழுமாறு தீக்கு இரையாக்கிய தேவர் தலைவரே! நல்வினை இல்லேனுடைய உடலிலே கிளைத்து அதனை நாடோறும் ஐம்பொறிகளும் செயற்படுத்ததனால் வருந்தி மயங்கி விட்டேன். யான் யாது செயற்பாலேன்? |

| | |
|---|---|
| **519.** மையரி மதர்த்த வொண்கண்<br>மாதரார் வலையிற் பட்டுக்<br>கையெரி சூல மேந்துங்<br>கடவுளை நினைய மாட்டேன்<br>ஐநெரிந் தகமி டற்றே<br>யடைக்கும்போ தாவி யார்தாம்<br>செய்வதொன் றறிய மாட்டேன்<br>திருப்புக லூர னீரே. 2 | திருப்புகலூர்ப் பெருமானே! மை தீட்டப்பட்டுச் செவ்வரி பரந்து செழித்த ஒளிபொருந்திய பெண்களின் பார்வையாகிய வலையில் அகப்பட்டுக் கையிலே நெருப்பையும் சூலத்தையும் ஏந்தும் கடவுளாகிய உம்மைத் தியானிக்க இயலாதேனான் கோழை திரண்டு சாய்ந்து கழுத்தின் உட்புறத்தை அடைக்கும் போது என் உயிர் என்ன பாடுபடுமோ அறியேன். |
| 520. **முப்பது முப்பத் தாறு**<br>**முப்பது** மிடுகு ரம்பை<br>அப்பர்போ லைவர் வந்து<br>வதுதரு கிதுவி டென்று<br>ஒப்பவே நலிய லுற்றா<br>லுய்யுமா றறிய மாட்டேன்<br>செப்பமே திகழு மேனித்<br>திருப்புக லூர னீரே. 3 | செந்நிற மேனியை உடைய திருப்புகலூர்ப் பெருமானே! தொண்ணூற்றாறு தத்துவ தாத்துவிகங்களால் அமைக்கப்பட்ட இவ்வுடம்பாகிய குடிலிலே தலைவர்களைப் போல ஆட்சிப் புரியும் ஐம்பொறிகளும் அவ்வப்போது தோன்றி அதனைக்கொடு, இதனை விடு என்று ஒருசேரத் துன்புறுத்தத் தொடங்கினால் அவற்றில் இருந்து தப்பிக் கடைத்தேறும் வழியை அடியேன் அறியமாட்டேன். |

## தொண்ணூற்றாறு

சைவ சமயச் சித்தாந்த நூல்கள் கூறும் தத்துவங்கள் முப்பத்தாறு. அவை கருவிகள் எனப்பெறும். தாத்துவீகங்கள் அறுபது. அவை கருவிக் கூறுகள் எனப்படும். ஆகக் கூடுதல் தொண்ணூற்றாறாகும். அவையாவன,

| | | | | |
|---|---|---|---|---|
| 1. ஐம்பூதங்கள் | – | நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் | – 5 | 36 தத்துவங்கள் |
| 2. தன்மாத்திரைகள் | – | சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் | – 5 | |
| 3. ஞானேந்திரியங்கள் (அறிவுக்கருவிகள்) | – | மெய், வாய், கண், மூக்கு, செவி | – 5 | |
| 4. கன்மேந்திரியங்கள் (செயற்கருவிகள்) | – | கருவாய், எருவாய், கால், கை, வாய் | – 5 | |
| 5. ஆன்மதத்துவங்கள் | – | மனம், புத்தி, சித்தம், அகங்காரம் | – 4 | |
| 6. வித்யாதத்துவங்கள் | – | காலம், நியதி, வித்தை, கலை, அராகம், புருடன், மாயை | – 7 | |
| 7. சிவதத்துவங்கள் | – | சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் | – 5 | |

| | | | |
|---|---|---|---|
| 8. பிருதிவியின் கூறுகள் | – மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை | – 5 | 60 தாத்துவீகங்கள் |
| 9. அப்புவின் கூறுகள் | – நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை | – 5 | |
| 10. தேயுவின் கூறுகள் | – ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல் | – 5 | |
| 11. ஆகாயக் கூறுகள் | – குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சர்யம் | – 5 | |
| 12. வாயுக்கள் (ஒவ்வொரு பணிக்கும் உடலில் ஒரு வாயு, கொட்டாவி விட, தும்ம, கண் இமைக்க, எருவாய், வாயு வெளியேற) | – பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயன் | – 10 | |
| 13. நாடிகள் | – இடைகலை, பிங்கலை, கழுமுனை, காந்தாரி, அத்தி, சுகுவை, அலம்புடை, சங்குனி, வைரவன், குகுதை (குரு) | – 10 | |
| 14. ஆகாய வழி ஆசைகள் | – பொருள், மகன், உலகம் | – 3 | |
| 15. சோத்திராதியின் விடயங்கள் | – சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் | – 5 | |
| 16. வாக்காதி விடங்கள் | – வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் | – 5 | |
| 17. பிரகிருதியின் குணங்கள் | – சாத்விகம், இராசதம், தாமதம் | – 3 | |
| 18. விந்துவின் வழிவாக்கு | – சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி | – 4 | |
| | **ஆகக் கூடுதல்** | **96** | |

**அந்தக்கரணங்கள் நான்கு :**

| | | |
|---|---|---|
| மனம் | – | ஐம்புலன்களைப் பற்றும் தன்மையது |
| புத்தி | – | உறுதிப்படுத்தும் தன்மையது |
| சித்தம் | – | சிந்தித்து நிச்சயிக்க உதவுவது |
| அகங்காரம் | – | அகங்கரித்து எழுச்சியை ஏற்படுத்துவது |
| ஐவர் | – | மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள் அறிவுக்கருவிகள் – ஞானேந்திரியங்கள் – இவை நுகர்வன , பற்றுவன.ள |
| ஐம்புலன்கள் | – | அவை சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். |

| | |
|---|---|
| **521.** பொறியிலா வழுக்கை யோம்பிப்<br>பொய்யினை மெய்யென் றெண்ணி<br>நெறியலா நெறிகள் சென்றே<br>னீதனே னீதி யேதும்<br>அறிவிலே னமரர் கோவே<br>யமுதினை மன்னில் வைக்கும்<br>செறிவிலேன் செய்வ தென்னே<br>திருப்புக லூர னீரே. 4 | திருப்புகலூர்ப் பெருமானே! பொலிவில்லாத அழுக்கு உருவமான இவ்வுடம்பைப் பாதுகாத்துப் பொய்யான வழியையே மெய்வழியாகக் கருதிக் கீழ்மகனாகிய அடியேன் வழியல்லா வழியிலே வாழ்ந்தேன்! நெறிமுறையான செய்திகளை அறியும் ஆற்றல் இல்லேன். தேவர்கள் தலைவனே! அமுதமாகிய உன்னை மனத்தில் நிலையாக வைத்ததற்குரிய யோகமுயற்சி உடையேன் அல்லேன். யாது செயற்பாலேன்? |
| **522.** அளியினார் குழலி னார்க<br>ளவர்களுக்கு கன்ப தாகிக்<br>களியினார் பாட லோவாக்<br>கடவூர் வீரட்ட மென்னும்<br>தளியினார் பாத நாளுந்<br>நினைவிலாத் தகவி னெஞ்சம்<br>தெளிவிலேன் செய்வ தென்னே<br>திருப்புக லூர னீரே. 5 | திருப்புகலூர்ப் பெருமானே! வண்டுகளால் மொய்க்கப் பெறும் கூந்தலை உடைய பெண்கள்பால் அன்பு செலுத்தி சிவானந்தக் களிப்பினார்கள் பாடும் பாடல்கள் நீங்காத கடவூர் வீரட்டம் என்னும் கோயிலுள்ள அமுதகடேசராம் பெருமானை நாள் தோறும் விருப்புற்று நினைக்காததும், தகுதியற்றதுமான நெஞ்சம் தெளிவு பெறாத அடியேன் யாது செய்வேன்? |
| **523.** இலவினார் மாதர் பாலே<br>இசைந்துநா னிருந்து பின்னும்<br>நிலவுநாள் பலவென் றெண்ணி<br>நீதனே னாதி யுன்னை<br>உலவிநா னுள்க மாட்டே<br>னுன்னடி பரவு ஞானம்<br>செலவிலேன் செய்வ தென்னே<br>திருப்புக லூர னீரே. 6 | திருப்புகலூர்ப் பெருமானே! இலவம் பூப்போன்ற வாயும் பாதங்களும் உள்ள பெண்கள்பால் இசைந்திருந்து இன்னும் அவர்களோடு பல நாள்கள் கூடி இருக்கப் போகிறோம் என்று கருதிக் கீழ்மகனாகிய அடியேன் அப்பெண்டிர் பக்கமே உலாவிக் கொண்டு உன்னை விருப்புடன் நினையாதேனாய் உன் திருவடிகளை முன்நின்று வழிபடும் சிவஞானம் என் உள்ளத்தில் பொருந்தும் நிலையினேன் அல்லேனாய் வாழும் யான் யாது செயற்பாலேன்? |
| **524.** காத்திலே னிரண்டு மூன்றுங்<br>கல்வியே லில்லை யென்பால்<br>வாய்த்திலே னடிமை தன்னுள்<br>வாய்மையாற் றூயே னல்லேன்<br>பார்த்தனுக் கருள்கள் செய்த<br>பரமனே பரவு வார்கள்<br>தீர்த்தமே திகழும் பொய்கைத்<br>திருப்புக லூர னீரே. 7 | பொய்கைகள் விளங்கும் திருப்புகலூர்ப் பெருமானே! ஐம்பொறிகளையும் அடக்கினேன் அல்லேன். ஞான தேசிகராற் பெற்ற அனுபவ ஞானம் அடியேன்பால் இல்லை. உம் தொண்டில் அடியேன் வாய்ப்புப் பெற்றேன் அல்லேன். வாய்மையோடு தூய்மை உடையேன் அல்லேன். அருச்சுனனுக்கு அருள்கள் செய்த பெருமானே! வழிபடுவோர்களுடைய தீவினைகளுக்குக் கழுவாயாகி உள்ளவரே! யான் யாது செயற்பாலேன்? |

| | |
|---|---|
| **525.** நீருமாய்த் தீயு மாகி<br>நிலனுமாய் விசும்பு மாகி<br>ஏருடைக் கதிர்க ளாகி<br>யிமையவ ரிறைஞ்ச நின்றார்<br>ஆய்வதற் கரிய ராகி<br>யங்கங்கே யாடு கின்ற<br>தேவர்க்குந் தேவ ராவார்<br>திருப்புக லூர னாரே. 8 | நீராய்த், தீயாய், நிலனாய், வானமாய், அழகிய ஒளிப்பொருள்களாய்த் தேவர்கள் வழிபட நிற்பவராய், ஆராய்ந்தறிவதற்கு அரியராய்ப் பலப்பல இடங்களில் கூத்து நிகழ்த்தும் தேவதேவர் திருப்புகலூர்ப் பெருமானாவார். |
| **526.** மெய்யுளே விளக்கை யேற்றி<br>வேண்டள வுயரத் தூண்டி<br>உய்வதோ ருபாயம் பற்றி<br>யுகக்கின்றே னுகவா வண்ணம்<br>ஐவரை யகத்தே வைத்தீ<br>ரவர்களே வலியர் சாலச்<br>செய்வதொன் றறிய மாட்டேன்<br>திருப்புக லூர னீரே. 9 | திருப்புகலூர்ப் பெருமானே! இவ்வுடம்பினுள்ளே ஞான விளக்கை ஏற்றி, மும்மலங்களையும் கடத்தற்கு வேண்டிய அளவில் அதனைத் தூண்டிவிட்டுப் பிறவித் துன்பத்தினின்றும் தப்பிக்கொள்வதற்கு உரிய உபாயத்தை உறுதியாகப் பிடித்து மேலுயர்ந்து கொண்டிருக்கும் அடியேன் உயர முடியாதபடி ஐம்பொறிகளை அடியேன் உடலில் சால வலிமை உடையனவாக வைத்திருக்கின்றீர். ஆதலின், அடியேன் செய்வதறியேன். |
| **527.** அருவரை தாங்கி னானு<br>மருமறை யாதி யானும்<br>இருவரு மறிய மாட்டா<br>வீசனா ரிலங்கை வேந்தன்<br>கருவரை யெடுத்த ஞான்று<br>கண்வழி குருதி சோரத்<br>திருவிரல் சிறிது வைத்தார்<br>திருப்புக லூர னாரே. 10 | திருப்புகலூர்ப் பெருமான் கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்து உயர்த்திய திருமாலும், அரிய வேதங்களை ஓதும் பிரமனும் ஆகிய இருவரும் அறியமாட்டாத ஈசனாய் இலங்கை மன்னனான இராவணன் கயிலையைப் பெயர்த்தபோது அவன் கண்வழியே இரத்தம் பெருகுமாறு கால்விரல் ஒன்றைச் சிறிது வைத்தவராவார். |

## 55. திருவலம்புரம்

திருமால் பூசித்துச் சங்கு பெற்ற மூவர் தேவாரத்தலம். திருவலஞ்சுழியில் காவிரியில் இறங்கின ஏரண்ட முனிவர் இங்கு கரையேறினார். பெரும்பள்ளம் என்று வழங்குகிறது. அவர் முடியில் உண்டான பள்ளம் போல் சுவாமி முடியிலும் பள்ளம் உள்ளது. அப்பர் சுவாமிகளைத் தாமே அழைத்துத் தரிசனம் தந்தார்.

திருநேரிசை பதிக எண் : 55

528. தெண்டிரை தேங்கியோ தஞ்
சென்றடி வீழுங் காலைத்
தொண்டிரைத் தண்டர் கோனைத்
தொழுதடி வணங்கி யெங்கும்
வண்டுகண் மதுக்கண் மாந்தும்
வலம்புரத் தடிக டம்மைக்
கொண்டுநற் கீதம் பாடக்
குழகர்தா மிருந்த வாறே. 1

எங்கும் வண்டுகள் தேனை வயிறாரப் பருகும் வலம்புரத்திலுள்ள பெருமான் கடலிலுள்ள தெளிந்த அலைகள் செறிந்து நம் திருவடிகளில் விழுந்து அலசும்போது, தொண்டர்கள் தம்மை அழைத்தவண்ணம் தொழுது அடியின் கண் வணங்கித் தம்மை உள்ளத்திலும், தம் சிறப்பை உரையிலும் கொண்டு பாடும் வண்ணம் இருந்தாவாறென்னே!

529. மடுக்களில் வாளை பாய
வண்டின மிரிந்த பொய்கைப்
பிடிக்களி றென்னத் தம்மிற்
பிணைபயின் றணைவ ரால்கள்
தொடுத்தநன் மாலை யேந்தித்
தொண்டர்கள் பரவி யேத்த
வடித்தடங் கண்ணி பாகர்
வலம்புரத் திருந்த வாறே. 2

மாவடு போன்ற பெரிய கண்களை உடைய பார்வதிபாகர், மடுக்களிலே வாளை மீன்கள் பாயவும் வண்டினங்கள் அஞ்சி ஓடிய பொய்கைகளில் பிடியும் களிறும் போல வரால் மீன்கள் இரட்டையாகக் கலந்து கொண்டு அணைபவும் வளம் சான்ற திருவலம்புரத்திலே, தொடுக்கப்பட்ட மாலைகளை ஏந்தியவர்களாய் அடியார்கள் முன்நின்று துதித்துப்போற்றும் வண்ணம் இருந்தவாறென்னே!

530. தேனுடை மலர்கள் கொண்டு
திருந்தடி பொருந்தச் சேர்த்தி
ஆனிடை யஞ்சுங் கொண்டே
யன்பினா லமர வாட்டி
வானிடை மதியஞ் சூடும்
வலம்புரத் தடிக டம்மை
நானடைந் தேத்தப் பெற்று
நல்வினைப் பயனுற் றேனே. 3

தேனுள்ள பூக்களைப் பறித்துக் கொண்டு வந்து தம் அழகிய திருவடிகளிலே பொருந்துமாறு அவற்றை அர்ப்பணித்துப் பஞ்சகவ்வியத்தால் அடியார்கள் அபிடேகம் செய்ய அந்த அபிடேகத்தை உவந்து ஏற்று வானில் உலவவேண்டிய பிறையைச் சடையில் சூடிய வலம்புரத்துப் பெருமானை அடியேன் சரணமாக அடைந்து துதித்து நல்வினைப் பயனைப் பெற்றவனானேன்.

531. முளையெயிற் றிளநல் லேனம்
பூண்டுமொய் சடைக டாழ
வளையெயிற் றிளைய நாகம்
வலித்தரை யிசைய வீக்கிப்
புளைகயப் போர்வை போர்த்துப்
புனலொடு மதியஞ் சூடி
வளைபயி லிளைய ரேத்தும்
வலம்புரத் தடிக டாமே. 4

வலம்புரப் பெருமான் இளைய பெரிய பன்றியின் மூங்கில் முளைபோன்ற பற்களை அணிகலனாக மார்பில் பூண்டு, செறிந்த சடைகள் தாழ, வளைந்த பற்களை உடைய பாம்பினை இடைக்குப் பொருந்த இறுக்கிக்கட்டி, துதிக்கையை உடைய யானைத் தோலைப் போர்வையாக அணிந்து, கங்கையையும் பிறையையும் சடையிற் சூடி வளையல்களை அணிந்த மகளிர் தோத்திரிக்குமாறு அமைந்துள்ளார்.

| | |
|---|---|
| **532.** சுருளுறு வரையின் மேலாற்<br>றுலங்கிளம் பளிங்கு சிந்த<br>இருளுறு கதிர்நு ழைந்த<br>விளங்கதிர்ப் பசலைத் திங்கள்<br>அருளுறு மடிய ரெல்லா<br>மங்கையின் மலர்க ளேந்த<br>மருளுறு கீதங் கேட்டார்<br>வலம்புரத் தடிக ளாரே. 5 | இரா வேளையில் நெற்பயிர்க்குள் விரவி அதற்கு வளர்ச்சிதரும் சந்திரன், மலைச்சிகரம் போல முடியப்பெற்ற தமது சுருண்ட சடையிலே நுழைந்து பளிங்கு போன்ற ஒளியை வெளிப்படுத்திக் கொண்டிருக்க, தம் அருளை அடைய விரும்பிய அடியார் எல்லோரும் அழகிய கைகளில் மலர்களை ஏந்தி நிற்க, அவர் பாடுகிற குறிஞ்சி யாழ்த்திறமான மருள் எனும் பண்ணிசை பொருந்திய பாடல்களைத் திருச்செவி சாத்தியவராய் உள்ளார். |
| **533.** நினைக்கின்றே னெஞ்சு தன்னா<br>னீண்டபுன் சடையி னானே<br>அனைத்துடன் கொண்டு வந்தங்<br>கன்பினா லமைய வாட்டிப்<br>புனைக்கின்றேன் பொய்ம்மை தன்னை<br>மெய்ம்மையைப் புணர மாட்டேன்<br>எனக்குநான் செய்வ தென்னே<br>யினிவலம் புரவ னீரே. 6 | நீண்ட சிவந்த சடையை உடைய வலம்புரத்துப் பெருமானே! அபிடேகத்துக்குரிய எல்லாப் பொருள்களையும் கொண்டு வந்து உம்மை அன்போடு முறையாக அபிடேகித்து நற்கதியைச் சேர வல்லேன் அல்லேனாய்ப் பொய்மையைப் பெருக்கி வாழும் அடியேன், அச்செயல்களை மனத்தினால் நினைத்துப் பார்க்கின்றேனன்றி மெய்ம்மையைப் பொருந்த வல்லேனல்லேன். இனி, யான் எனக்குச் செய்து கொள்ளக்கூடியது யாதோ அறியேன். |
| **534.** செங்கயல் சேல்கள் பாய்ந்து<br>தேம்பழ மினிய நாடித்<br>தங்கயந் துறந்து போந்து<br>தடம்பொய்கை யடைந்து நின்று<br>கொங்கையர் குடையுங் காலைக்<br>கொழுங்கனி யழுங்கி னாராம்<br>மங்கல மனையின் மிக்கார்<br>வலம்புரத் தடிக ளாரே. 7 | செங்கயல்களும், சேல்களும் தீங்கனியைப் பெற நாடித் தமது நீர்நிலைகளிலிருந்து பாய்ந்து போய், பெரும் பொய்கையை அடைந்து நின்று கொங்கையழகியரான மகளிர் முழுகும் போதில் அவர் கொங்கைகளைக் கனியென்று கருதிப் பற்றுதலால் வருந்தும் அம்மங்கையரின் மனைமாட்சி நிலவும் மனைகளால் மிக்க நிறையும் வலம்புரத்தார் (எம்) அடிகள்! (மிக்கு + ஆர் – மிக்கு நிறையும்) |
| **535.** அருகெலாங் குவளை செந்நெல்<br>அகலிலை யாம்ப னெய்தல்<br>தெருவெலாந் தெங்கு மாவும்<br>பழம்விழும் படப்பை யெல்லாம்<br>குருகினங் கூடி யாங்கே<br>கும்மலித் திறகு லர்த்தி<br>மருவலா மிடங்கள் காட்டும்<br>வலம்புரத் தடிக ளாரே. 8 | ஊரின் அருகில் எல்லாம் செந்நெற்பயிர்களும் அப்பயிர்களின் இடையே பூத்த குவளை ஆம்பல் நெய்தல் என்ற பூக்களும் உள்ளன. தெருக்களிலெல்லாம் தென்னையும் மாமரங்களும் உள்ளன. மனைக்கொல்லை களிலெல்லாம் பழங்கள் விழுகின்றன. அவ்வூரில் பறவை இனங்கள் கூடி ஒலித்து இறகுகளை உலர்த்தித் தங்கும் இடங்கள் பல உள்ளன. இத்தகைய வளங்கள் சான்ற வலம்புரத்திலே எம்பெருமான் உகந்தருளி உறைகின்றார். |

536. கருவரை யனைய மேனிக்
கடல்வண்ண னவனுங் காணான்
திருவரை யனைய பூமேற்
றிசைமுக னவனுங் காணான்
ஒருவரை யுச்சி யேறி
யோங்கினா ரோங்கி வந்து
அருமையி லெளிமை யானா
ரவர்வலம் புரவ னாரே. 9

கரிய மலை போன்ற திருமேனியை உடைய கடல் நிறத்தவனாகிய திருமாலும், திருமகள் தங்குவதற்கு என்று வரையறுக்கப்பட்ட தாமரைப்பூ மேல் உறையும் பிரமனும் காண முடியாதவராய், ஒப்பற்ற கயிலைமலையின் உச்சியில் மேம்பட்டு உறையும் பெருமான் தம் அருமையை எளிமையாக்கிக் கொண்டு வந்து திருவலம்புரத்திறைவனாக உள்ளார்.

537. வாளெயி றிலங்க நக்கு
வளர்கயி லாயந் தன்னை
ஆள்வலி கருதிச் சென்ற
வரக்கனை வரைக்கீ ழன்று
தோளொடு பத்து வாயுந்
தொலைந்துட னழுந்த வூன்றி
ஆண்மையும் வலியுந் தீர்ப்பா
ரவர்வலம் புரவ னாரே. 10

தன் ஆற்றலைப் பெரிதாக மதித்து கயிலாயத்தைப் பெயர்க்கச் சென்ற இராவணன் தன் தோள்களிருபதும் வாய்கள் (தலைகள்) பத்தும் அம்மலைக்கீழ் நசுங்கித் தொலையுமாறு, சிரித்துக் கொண்டே, தம் திருவடிகளால் அழுத்தமாக ஊன்றி அவ்வகையால் அவனது ஊக்கத்தையும் வலிமையையும் போக்கிய அத்தகையர் வலம்புரவனார் ஆவர்.

## 56. திருவாவடுதுறை

மூவர் பதிகப் பாடலும், சேந்தனார் திருவிசைப்பாப் பதிகமும், திருமூலர் திருமந்திரம் 3000–மும் பாடற்பெற்ற தனிச் சிறப்புடையது. திருக்கயிலாயத்தில் இறைவனோடு சொக்கட்டானாடிக் களித்தமையால் உமாதேவியார் பசுவடிவமெய்தினார் என்பதும், இங்குப் பூசித்து அவ்வடிவம் நீங்கப் பெற்றனரென்பதும், அதனால் இப்பெயர் போந்ததென்பதும் தலவரலாறு. இங்குவந்து அடைந்த பசுக்கள் என்னும் எல்லாவுயிர்களுக்கும் பசுத்தன்மையாகிய மலப்பிணிப்பு நீங்கி முத்தியளிக்கும் தலம் என்பதும் குறிப்பு. அநாதிமுத்தித் தலம். கோமுத்திபுரம், பிப்பிலாரணியம், நவகோடி சித்த வாசபுரம் முதலிய பற்பலவாகிய காரணப் பெயர்களுடையது. முசுகுந்த மன்னர் இங்குப் பூசித்து மகப்பேறு பெற்றனர். வாதவூரடிகள் குருதரிசனங் கண்டு போற்றினர். தம் தந்தையார் செய்யும் சிவவேள்வியின் பொருட்டு, "இடரினுந் தளரினும்" என்ற திருப்பதிகம் பாடி ஆளுடைய பிள்ளையார் இங்கு இறைவரிடத்து ஆயிரம்பொன் கொண்ட உலவாக்கிழி பெற்றுத் தந்தைக்குக் கொடுத்தனர். இச்செய்தியை திருநாவுக்கரசு நாயனார் பின்முறை இங்கு வந்து தரிசித்தபோது "கழுமல வூரர்க் கம்பொன், ஆயிரங் கொடுப்பர்போலும்" என்று போற்றியருளினார்.

**திருநேரிசை** **பதிக எண் : 56**

538. மாயிரு ஞால மெல்லா
மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப்
படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த
கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலும்
ஆவடு துறைய னாரே. 1

ஆவடுதுறையனாருடைய மலர் போன்ற திருவடிகளைப் பெரிய உலகத்தவர் யாவரும் வணங்குவர். அப்பெருமான் பரவிய பெரிய கங்கா தேவியைப் பரந்த சடையில் வைப்பவர். மரங்கள் தோறும் காய்கள் மலியும் பெரிய சோலைகளால் சூழப்பட்ட சீகாழி ஊரினராகிய ஞானசம்பந்தப் பெருமானுக்குச் சிறந்த ஆயிரம் பொன்களை அளித்தவர் ஆவர்.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **539.** மடந்தைபா கத்தர் போலும்<br>மான்மறிக் கையர் போலும்<br>குடந்தையிற் குழகர் போலுங்<br>கொல்புலித் தோலர் போலும்<br>கடைந்தநஞ் சுண்பர் போலுங்<br>காலனைக் காய்வர் போலும்<br>அடைந்தவர்க் கன்பர் போலும்<br>ஆவடு துறைய னாரே. 2 | பார்வதி பாகராய், மான்குட்டியை ஏந்திய கையினராய், கும்பகோணப்பதியில் இளையவராய், தம்மால் கொல்லப்பட்ட புலித்தோலை ஆடையாக உடுத்தவராய், கடல் கடைந்த காலத்து எழுந்த நஞ்சினை உண்டவராய், கூற்றுவனை வெகுண்டவராய்த் தம்மை அடைந்த அடியவருக்கு அன்பராய் அமைந்துள்ளார் ஆவடுதுறையனார். |
| **540.** உற்றநோய் தீர்ப்பர் போலும்<br>உறுதுணை யாவர் போலும்<br>செற்றவர் புரங்கண் மூன்றுந்<br>தீயெழச் செறுவர் போலும்<br>கற்றவர் பரவி யேத்திக்<br>**கலந்துலந் தலந்து பாடும்**<br>**அற்றவர்க்** கன்பர் போலும்<br>ஆவடு துறைய னாரே. 3<br><br>கலத்தல், உலத்தல், அலத்தல், பாடுதல், அறுதல் ஐந்தும் உடையார்க்கு அன்பர்.<br>கலத்தல் – உள்ளம், உயிர், உணர்வு கலத்தல்.<br>அலத்தல் – பாசப்பற்றால் துயருறுதல். | அடியார்கள் உற்ற துயரைத் தீர்ப்பவராய் அவர்களுக்கு மேம்பாடான துணைவராய் பகைத்த அசுரரின் மும்மதில்களையும் தீக்கிரையாக்கியவராய், ஞானதேசிகர்பால் உபதேசம் பெற்ற கல்வியாளராம் அடியவர்களாய்க் கூடி வந்து அலந்து பாடுவோராய்த் தம்மிடமே அற்றுத் தீர்ந்த பற்றினராய் அன்பர்களுக்கு அன்பராய் உள்ளார் ஆவடுதுறையனார்.<br><br>உலத்தல் – பற்றுவற்றுதல்<br>அறுதல் – பற்றுமுற்று அற்றொழித்தல். |
| **541.** மழுவமர் கையர் போலும்<br>மாதவள் பாகர் போலும்<br>எழுநுனை வேலர் போலும்<br>என்புகொண் டணிவர் போலும்<br>தொழுதெழுந் தாடிப் பாடித்<br>தோத்திரம் பலவுஞ் சொல்லி<br>அழுமவர்க் கன்பர் போலும்<br>ஆவடு துறைய னாரே. 4 | கையில் மழுப்படையை ஏந்தியவராய், பார்வதி பாகராய், கூரிய நுனியை உடைய சூலத்தை ஏந்தியவராய், எலும்பினை மாலையாக அணிபவராய், தொழுது எழுந்து ஆடிப் பாடித் தோத்திரங்கள் பலவும் சொல்லி அழும் அடியவர்களுக்கு அன்பராய் உள்ளார் ஆவடுதுறைப் பெருமான். |
| **542.** பொடியணி மெய்யர் போலும்<br>பொங்குவெண் ணூலர் போலும்<br>கடியதோர் விடையர் போலுங்<br>காமனைக் காய்வர் போலும்<br>வெடிபடு தலையர் போலும்<br>வேட்கையாற் பரவுந் தொண்டர்<br>அடிமையை ஆள்வர் போலும்<br>ஆவடு துறைய னாரே. 5 | நீறணிந்த மேனியராய், ஒளி வீசும் வெள்ளிய பூணூலை அணிந்தவராய், விரைந்து செல்லும் காளை வாகனத்தவராய், மன்மதனை வெகுண்டவராய், சூட்டினால் வெடித்த தலைமாலையை உடையவராய், விருப்பத்தோடு முன்நின்று துதிக்கும் அடியவர்களுடைய தொண்டை விரும்புபவராக உள்ளார் ஆவடுதுறைப் பெருமான். |

| | |
|---|---|
| **543.** வக்கர னுயிரை வவ்வக்<br>கண்மலர் கொண்டு போற்றச்<br>சக்கரங் கொடுப்பர் போலுந்<br>தானவர் தலைவர் போலும்<br>துக்கமா மூடர் தம்மைத்<br>துயரிலே வீழ்ப்பர் போலும்<br>அக்கரை யார்ப்பர் போலும்<br>ஆவடு துறைய னாரே. **6** | வக்கரன் உயிரைப் போக்குவதற்குத் திருமால் தன் கண்ணாகிய மலரை அர்ச்சித்து வழிபட அவருக்குச் சக்கரம் வழங்கியவராய், தானம் புரிபவர்களுக்குத் தலைவராய், அறிவற்றவர் களைத் துக்கம் தரும் பிறவித்துயரிலே வீழ்த்துபவராய், அக்கு மணியை இடையிலே அணிபவராய் உள்ளார் ஆவடுதுறைப் பெருமான். |
| **544.** விடைதரு கொடியர் போலும்<br>வெண்புரி நூலர் போலும்<br>படைதரு மழுவர் போலும்<br>பாய்புலித் தோலர் போலும்<br>உடைதரு கீளர் போலும்<br>உலகமு மாவர் போலும்<br>அடைபவ ரிடர்க ளீர்க்கும்<br>ஆவடு துறையனாரே. **7** | காளை வடிவம் எழுதிய கொடியை உடையவராய், வெள்ளிய பூணூலை அணிந்தவராய், மழுப்படையை ஏந்தியவராய், பாயும் இயல்புள்ள புலியின் தோலை உடுத்தவராய், கீள் உடையை அணிபவராய், உலகங்களை ஆள்பவராய், தம்மை அடையும் அடியார்களின் துயரங்களைத் தீர்ப்பவ ராயுள்ளார் ஆவடுதுறைப் பெருமான். |
| **545.** முந்திவா னோர்கள் வந்து<br>முறைமையால் வணங்கி யேத்த<br>நந்திமா காள ரென்பார்<br>நடுவுடை யார்க ணிற்பச்<br>சிந்தியா தேயொ ழிந்தார்<br>திரிபுர மெரிப்பர் போலும்<br>அந்திவான் மதியஞ் சூடும்<br>ஆவடு துறைய னாரே. **8** | மாலையில் வானத்தில் தோன்றும் பிறையைச் சூடிய ஆவடுதுறைப் பெருமான், முற்பட்டுத் தேவர்கள் வந்து முறைப்படி வணங்கித் துதிக்க, சிவபாதங்களைத் தம் நெஞ்சில் நடுதலாகிய செம்மையுள்ள நந்தி மாகாளர் என்பவர்களைத் தவிரத் தம்மை வழிபடாது வீணானவரான அசுரர்களுடைய மும்மதில்களையும் அழித்தவராவர். |
| **546.** பானம ரேன மாகிப்<br>பாரிடந் திட்ட மாலும்<br>தேனமர்ந் தேறு மல்லித்<br>திசைமுக முடைய கோவும்<br>தீனரைத் தியக் கறுத்த<br>திருவுரு வுடையர் போலும்<br>ஆனரை யேற்றர் போலும்<br>ஆவடு துறைய னாரே. **9** | தம் பத்து அவதாரங்களுள் ஒன்றான பன்றி அவதாரத்தில் பூமியை அண்டவெளியிலிருந்து பெருவெள்ளத்தில் பெயர்த்தெடுத்த திருமாலும், தேன் மிக்க தாமரையின் அகவிதழிலிருக்கும் பிரமனும் தாம் தீத்தம்பத்தின் அடியையோ முடியையோ காணமாட்டாத துயரத்தினராக அவர்கள் மயக்கத்தைப் போக்கிய அழகிய வடிவினை உடையராய், வெண்ணிறக் காளை வாகனமுடையவராய் உள்ளார் ஆவடுதுறைப் பெருமான். |

547. பார்த்தனுக் கருள்வர் போலும்
படர்சடை முடியர் போலும்
ஏத்துவா ரிடர்கள் தீர
வின்பங்கள் கொடுப்பர் போலும்
கூத்தராய்ப் பாடி யாடிக்
கொடுவலி யரக்கன் றன்னை
ஆர்த்தவா யலறு விப்பார்
ஆவடு துறைய னாரே. 10

ஆவடுதுறைப் பெருமானார் அருச்சுனனுக்கு அருள் புரிந்தவராய், விரிந்து பரவிய சடைமுடியை உடையவராய், தம்மை வழிபடுபவர்களுடைய துயரங்கள் தீர அவர்களுக்கு இன்பம் நல்குபவராய், கூத்தாடுபவராய்ப் பாடியும் ஆடியும் விளங்குபவராய் உள்ளார். அவர், கொடிய வலிமையை உடைய இராவணனை, அவன் ஆரவாரித்துக் கொண்டு கயிலைமலையைப் பெயர்க்க வந்த அளவில், அவனுடைய வாய்கள் துயரம் தாங்காமல் அலறுமாறு செய்தவராவர்.

## 57. திருவாவடுதுறை

**திருநேரிசை** **பதிக எண் : 57**

548. மஞ்சனே மணியு மானாய்
மரகதத் திரளு மானாய்
நெஞ்சுளே புகுந்து நின்று
நினைதரு நிகழ்வி னானே
துஞ்சும்போ தாக வந்து
துணையெனக் காகி நின்று
அஞ்சலென் றருள வேண்டும்
ஆவடு துறையு ளானே. 1

ஆவடுதுறைப் பெருமானே! வலிமை உடையவனே! மணியே! மரகத மணிக் குவியலே! அடியேனுடைய உள்ளத்திற் புகுந்து உன்னை நினைக்கும் நிலையை இன்று தந்துள்ளவனே! யான் உயிர் நீக்கும் போது வந்து அடியேனுக்குத் துணையாக நின்று அஞ்சாதே என்று நீ அருள் செய்யவேண்டும்.

549. நானுகந் துன்னை நாளும்
நணுகுமா கருதி யேயும்
ஊனுகந் தோம்பு நாயே
னுள்ளுற வைவர் நின்றார்
தானுகந் தேயு கந்த
தகவிலாத் தொண்டனே னான்
ஆனுகந் தேறு வானே
ஆவடு துறையு ளானே. 2

காளையை விரும்பி ஏறி ஊர்பவனே! ஆவடு துறைப் பெருமானே! நான் விரும்பி உன்னை அணுகி வரக் கருதிய போதும், உடம்பையே விரும்பிப் பாதுகாக்கும் அடியேனுடைய உட்புறத்தில் நிலையாக நிற்கும் ஐம்பொறிகளும் விரும்புவனவற்றையே யானும் விரும்பிச் செயற்பட்டு உன் தொண்டன் என்று கூறும் தகுதியற்றவனாய் உள்ளேன்.

550. கட்டமே வினைக ளான
காத்திவை நோக்கி யாளாய்
ஒட்டவே யொட்டி நாளு
முன்னையுள் வைக்க மாட்டேன்
பட்டவான் றலைகை யேந்திப்
பலிதிரிந் தூர்க டோறும்
அட்டமா வுருவி னானே
யாவடு துறையு ளானே. 3

தன் பரிசழிந்த பெரிய மண்டையோட்டைக் கையில் ஏந்திப் பிச்சை எடுத்து ஊர்கள்தோறும் திரிந்தவனாய் உள்ள அட்ட மூர்த்தியாம் ஆவடுதுறைப் பெருமானே! அடியேன் துன்பம் மேவுதற்குக் காரணமான வினைகள் சாராதவாறு தடுத்து, உனக்கு அடியவனாய், நீ அருட் கண்ணால் நோக்கி அடியேன் உயிரோடு ஒட்டும்படியே, அடியேனும் உன்னோடு ஒட்டி நாளும் உன்னைத் தியானித்தலைச் செய்ய இயலாதேனாய் உள்ளேன்.

| | |
|---|---|
| **551.** பெருமைநன் றுடைய தில்லை<br>யென்றுநான் பேச மாட்டேன்<br>ஒருமையா லுன்னை யுள்கி<br>யுகந்துவா னேற மாட்டேன்<br>கருமையிட் டாய வூனைக்<br>கட்டமே கழிக்கின் றேனான்<br>அருமையா நஞ்ச முண்ட<br>ஆவடு துறையு ளானே. 4 | பெருமைகளை மிகுதியாக உள்ள தில்லைத் திருத்தலத்தைப் பற்றிப் பேசி நல்வினைகளைத் தேடிக் கொள்ளமாட்டேன். ஒருமைப்பட்ட உள்ளத்தாலே உன்னை நினைத்து உகந்து பேசி வீட்டுலகை அடையமாட்டேன். ஆணவச் சார்பால் எய்திய உடம்பைத் துயரத்திலேயே கழிக்கின்றேன். நுகர்தற்கு அரிய விடத்தை உண்டு அருளிய ஆவடுதுறைப் பெருமானே! அடியேற்கு அருளுக. |
| **552.** துட்டனாய் வினைய தென்னுஞ்<br>சுழித்தலை யகப்பட் டேனைக்<br>கட்டனா வைவர் வந்து<br>கலக்காமைக் காத்துக் கொள்வாய்<br>மட்டவிழ் கோதை தன்னை<br>மகிழ்ந்தொரு பாகம் வைத்து<br>அட்டமா நாக மாட்டும்<br>ஆவடு துறையு ளானே. 5 | நறுமணம் கமழும் மாலையை அணிந்த பார்வதியை மகிழ்வோடு ஒரு பாகமாகக் கொண்டு எட்டுப் பெரிய பாம்புகளை ஆட்டுகின்ற ஆவடுதுறைப் பெருமானே! கொடியவனாய் வினை என்று சுழியில் அகப்பட்ட என்னைப் பாசத்தை உடையேனாக ஐம்பொறிகள் கலக்க முடியாதபடி பாதுகாத்து உன் அடியவனாகக் கொள்வாயாக. |
| **553.** காரழல் கண்டமே யாய்க்<br>கடிமதிற் புரங்கண் மூன்றும்<br>ஓரழ லம்பி னாலே<br>யுகைத்துத்தீ யெரிய மூட்டி<br>நீரழற் சடையு ளானே<br>நினைப்பவர் வினைக டீர்ப்பாய்<br>ஆரழ லேந்தி யாடு<br>ஆவடு துறையு ளானே. 6 | கரிய நெருப்பைப் போன்ற விடத்தை கழுத்தில் இருத்தி, பெரிய மதில்களை உடைய முப்புரங்களையும் ஒரு தீ அம்பைச் செலுத்தித் தீயினால் எரியுமாறு செய்து, கங்கையைத் தீப் போன்ற சடையில் வைத்துத் தன்னை விரும்பும் அடியவர்களுடைய வினைகளைத் தீர்ப்பவனாய் அரிய நெருப்பை உள்ளங்கையில் ஏந்திக் கூத்து நிகழ்த்தும் ஆவடுதுறைப் பெருமானே! |
| **554.** செறிவிலேன் சிந்தை யுள்ளே<br>சிவனடி தெரிய மாட்டேன்<br>குறியிலேன் குணமொன் றில்லேன்<br>கூறுமா கூற மாட்டேன்<br>நெறிபடு மதியொன் றில்லே<br>னினையுமா நினைய மாட்டேன்<br>அறிவிலே னயர்த்துப் போனே<br>னாவடு துறையு ளானே. 7 | ஆவடுதுறைப் பெருமானே! மனத்திலே அலைதல் இன்றி செறிவு இல்லாதேனாய்ச் சிவன் அடிகளை அறிய மாட்டேனாய்க் குறிக்கோள் இன்றி நற்பண்பின்றிப் பெரியோர்கள் கூறும் வழியிலே உன் புகழைச் சொல்ல மாட்டாதேனாய் நல்வழியில் செல்லும் அறிவில்லேனாய் நினைக்க வேண்டிய வழியிலே நினைக்க மாட்டேனாய் இவ்வாறு உண்மை அறிவு இன்மையால் புல்லறிவினால் மயங்கிப் போயினேன். |

| | |
|---|---|
| 555. கோலமா மங்கை தன்னைக்<br>கொண்டொரு கோல மாய<br>சீலமே யறிய மாட்டேன்<br>செய்வினை மூடி நின்று<br>ஞாலமா மிதனு ளென்னை<br>நைவியா வண்ண நல்காய்<br>ஆலமா நஞ்ச முண்ட<br>வாவடு துறையு ளானே. 8 | ஆலகால விடத்தை உண்ட ஆவடுதுறைப் பெருமானே! அழகிய பார்வதி பாகனான அழகினை உடைய உன் தன்மையை அறிய மாட்டேனாய் யான் செய்யும் இருவினையும் என்னைப் பிணித்து இவ்வுலகப் பாசத்துள் என்னை வருத்தாத வகையில் அடியேனை விரும்பிப் பாதுகாப்பாயாக. |
| 556. நெடியவன் மலரி னானுந்<br>நேர்ந்திரு பாலு நேடக்<br>கடியதோ ருருவ மாகிக்<br>கனலெரி யாகி நின்ற<br>வடிவின வண்ண மென்றே<br>யென்றுதாம் பேச லாகார்<br>அடியனே னெஞ்சி னுள்ளார்<br>ஆவடு துறையு ளானே. 9 | திருமாலும் பிரமனும் தம்முள் உடன்பட்டு அடியும் முடியும் தேடுமாறு விரைவில் தீத்தம்பமாய் நின்ற தன் வடிவமும் தன் நிறமும் இன்ன என்று தம்மால் பேச இயலாதாராக அவ்விருவரும் இருக்க ஆவடுதுறைப் பெருமான் அடியேன் உள்ளத்துள்ளே நிலையாக வீற்றிருக்கிறான். |
| 557. மலைக்குநே ராய ரக்கன்<br>சென்றுற மங்கை யஞ்சத்<br>தலைக்குமேற் கைக ளாலே<br>தாங்கினான் வலியை மாள<br>வுலப்பிலா விரலா லூன்றி<br>யொறுத்தவற் கருள்கள் செய்து<br>அலைத்தவான் கங்கை சூடும்<br>ஆவடு துறையு ளானே. 10 | கயிலை மலைக்கு நேராக இராவணன் சென்று சேரப் பார்வதி அஞ்சத் தன் தலைக்கு மேலே கைகளாலே அம்மலையைப் பெயர்க்கத் தாங்கிய அவன் வலிமை அழியுமாறு என்றும் அழிவில்லாத தன் கால்விரலால் ஊன்றி அவனைத் தண்டித்து, அலைகளை உடைய சடையில் கங்கையைச் சூடும் ஆவடுதுறைப் பெருமான் பின் அவனுக்கு அருள் செய்தான். |

## 58. திருப்பருப்பதம்

ஆந்திர மாகாணத்தில் கர்னூல் மாவட்டத்தில் நந்தியால் ரயில்நிலையம் அருகில் உள்ளது. வடமொழியில் ஸ்ரீசைலம், ஸ்ரீ பர்வதம், மல்லிகார்ச்சுனம் என்று வழங்கப்படும். மருது மூன்றனுள் இது தலை மருது. இடைமருது நமது சோழ நாட்டிலும், புடை மருது பாண்டி நாட்டிலும் உள்ளன. சிலாத முனிவர் தவஞ் செய்த காரணத்தால் சைலம் என்று வழங்கப்படுகிறது. சிலாத முனிவரின் மகன் நந்திதேவர் தவஞ்செய்து இறைவனைத் தாங்குவதற்கு இம்மலை உருவாய் உள்ளாராதலின் இப்பெயர் பெற்றதென்பர். கந்தபுராணம் வழி நடைப்பயணத்தில் முருகன் இத்தலத்தைக் கண்டதாகக் கச்சியப்ப சிவாசாரியார் பதிவு செய்கிறார். இதன் பெருமைகளை சிவ ரகசியப் பேரிதிகாசம் என்ற நூல் எடுத்துப் பேசும். இது 12 சோதிர்லிங்கத் தலங்களுள் ஒன்று. சக்தி பீடங்களுள் ஒன்று. அம்மை பிரமராம்பாள் பீடம் இங்குள்ளது. மூவர் பாடல் பெற்றது.

**நாளும் வந்து பருப்பத நாயகரை வணங்கி நன்மையடையும் ஞானமோனிகள்.**

1. விஞ்சையர் / வித்தியாதரர் – வித்தைகள் பலவும் பயின்றவர்.
2. இயக்கர்கள் / யக்ஷர் – வானில் இயங்குபவர்கள், மக்கள் முதலிய உயிர்களைப் பீடித்து இயக்குபவர்கள்.
3. சித்தர்கள் – அணிமா முதலிய அட்டசித்துக்கள் பலவற்றிலும் வல்லவர்கள்.
4. கானகின்னரர்கள் – இசையில் வல்ல தேவசாதியர்.
5. காமசாரிகள் – தம்மிச்சைப்படி எங்கும் சஞ்சரிக்க வல்லவோர் தேவச்சாதியார்.
6. கிம்புருடர் – வேறொருவர் காணாமல் உலாவும் ஆற்றல் பெற்றவர்.

இவ்வாறு தேவ சாதியர்களும், இந்திரன், பிரம்மா, திருமால் போன்ற தேவர்களும் பூமிக்கு வந்து சிவாலயத்தில் சிவதரிசனம் / பூசை செய்யும் போது நாமெல்லாம் பார்த்து, கேட்டு அனுபவிக்கும் அளவுக்கு நம்மை நாமே உயர்த்திக் கொள்வோமாக!

**திருநேரிசை** **பதிக எண் : 58**

**558.** கன்றினார் புரங்கண் மூன்றுங்
கனலெரி யாகச் சீறி
நின்றதோ ருருவந் தன்னா
னீர்மையு நிறையுங் கொண்டு
ஒன்றியாங் குமையுந் தாமு
மூர்பலி தேர்ந்து பின்னும்
பன்றிப்பின் வேட ராகிப்
**பருப்பத நோக்கி னாரே.** 1

பருப்பத நோக்கினாரே – பதிக மகுடம்.
காளத்தியைக் கடந்து கயிலை செல்லும் காதல் நோக்கில் சென்றாராதலின் இவ்வாறு பாடுகிறார்.

தம்மை வெகுண்ட பகைவர்களின் மும்மதில்களும் தீக்கு இரையாகுமாறு கோபித்து, தாமும் பார்வதியுமாக இணைந்து ஊர்தோறும் பிச்சைக்காகத் திரிந்து நின்ற தம் வேடப் பாங்கால் பிச்சையிட வந்த மகளிரின் இயல்பையும் நிறை என்ற பண்பையும் கவர்ந்தவராய்ப் பின்னும் அருச்சுனனுக்கு உதவ வேண்டிப் பன்றிப் பின் வேடராய்ச் சென்றவருமாவார். அப்பெருமான் திருப்பருப்பதத்தைத் தம் உறைவிடமாகக் கொண்டார்.

**559.** கற்றமா மறைகள் பாடிக்
கடைதொறும் பலியுந் தேர்வார்
வற்றலோர் தலைகை யேந்தி
வானவர் வணங்கி வாழ்த்த
முற்றவோர் சடையி னீரை
யேற்றமுக் கண்ணர் தம்மைப்
பற்றினார்க் கருள்கள் செய்து
பருப்பத நோக்கி னாரே. 2

முனிவர்களுக்குக் கற்பித்தல் வகையால் தாம் கற்ற வேதங்களைப் பாடி, வீட்டுவாயில் தோறும் பிச்சை எடுப்பவராய், மண்டை ஓட்டைக் கையில் ஏந்தி, தேவர்கள் வணங்கி வாழ்த்துமாறு கங்கை முழுவதையும் தம் சடையில் ஏற்ற முக்கட்பெருமான் தம்மைப் பற்றிய அடியவர்கள்மாட்டு அன்பு செய்து திருப்பருப்பதத்தைத் தம் உறைவிடமாகக் கொண்டார். (காட்டிக் காண்டல் என்ற நயம்பற்றிக் கற்பித்துக் கற்ற எனப்பட்டது)

| | |
|---|---|
| **560.** கரவிலா மனத்த ராகிக்<br>கைதொழு வார்கட் கென்றும்<br>இரவுநின் றெரிய தாடி<br>யின்னருள் செய்யு மெந்தை<br>மருவலார் புரங்கண் மூன்று<br>மாட்டிய வகைய ராகிப்<br>பரவுவார்க் கருள்கள் செய்து<br>பருப்பத நோக்கி னாரே. 3 | இரவிலே தீயில் நின்று ஆடுபவராய், பகைவருடைய மும்மதில்களையும் அழித்த செயலினராய், வஞ்சனையில்லாத மனத்தவராகிக் கையால் தொழும் அடியவர்களுக்கு என்றும் இனிய அருள்கள் செய்யும் எம் தந்தையாராகிய பெருமான் தம்மை முன்நின்று துதிப்பவர்களுக்குப் பல அருள்செய்து திருப்பருப்பதத்தைத் தம் உறைவிடமாகக் கொண்டார். |
| **561.** கட்டிட்ட தலைகை யேந்திக்<br>கனலெரி யாடிச் சீறிச்<br>சுட்டிட்ட நீறு பூசிச்<br>சுடுபிணக் காட ராகி<br>விட்டிட்ட வேட்கை யார்க்கு<br>வேறிருந் தருள்கள் செய்து<br>பட்டிட்ட வுடைய ராகிப்<br>பருப்பத நோக்கி னாரே. 4 | பண்டு உடலோடு பொருந்தியிருந்து பின் நீங்கிய மண்டையோட்டைக் கையில் ஏந்தி, ஒளிவீசும் தீயில் கூத்து நிகழ்த்தி, சாம்பலைப் பூசி, சுடுகாட்டில் தங்குபவராகி, உலகப்பற்றினை நீக்கிய அடியவர்களுக்குச் சிறப்பாக அருள்கள் செய்து பட்டுடையை அணிந்த பெருமான் பருப்பதம் நோக்கினாரே. |
| **562.** கையராய்க் கபால மேந்திக்<br>காமனைக் கண்ணாற் காய்ந்து<br>மெய்யராய் மேனி தன்பால்<br>விளங்கு வெண் ணீறுபூசி<br>உய்வரா யுள்கு வார்கட்<br>குவகைகள் பலவுஞ் செய்து<br>பையரா வரையி லார்த்துப்<br>பருப்பத நோக்கி னாரே. 5 | மண்டையோட்டை ஏந்திய கையினராய், மன்மதனை நெற்றிக் கண்ணால் வெகுண்டு சாம்பலாக்கி, வடிவை எடுத்துக் கொண்டவராய், உடம்பிலே விளங்கும் வெண்ணீற்றைப் பூசி, தாம் கடைத்தேறுபவர்களாய்ப் பெருமானாகிய தம்மைத் தியானிப்பவர்களுக்கு மகிழ்ச்சி தரும் செயல்களைச் செய்து, படம்எடுக்கும் பாம்பினை இடையில் இறுகக்கட்டிப் பெருமான் பருப்பதம் நோக்கினார். |
| **563.** வேடராய் வெய்ய ராகி<br>வேழத்தி னுரிவை போர்த்து<br>ஓடரா யுலக மெல்லா<br>முழிதர்வ ருமையுந் தாமும்<br>காடராய்க் கனல்கை யேந்திக்<br>கடியதோர் விடைமேல் கொண்டு<br>பாடராய்ப் பூதஞ் சூழப்<br>பருப்பத நோக்கி னாரே. 6 | பெருமான், அருச்சுனன் பொருட்டு வேடன் வடிவம் எடுத்தவராய், கொடியவராகி யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்து, மண்டையோட்டை ஏந்தி உலகமெல்லாம் சுற்றித் திரிபவராய், உமையம்மையும் தாமுமாய்ச் சுடுகாட்டில் உறைந்து, கையில் தீயை ஏந்தி, விரைந்து செல்லும் காளையை ஏறி ஊர்ந்து பாடிக் கொண்டு பூதங்கள் தம்மைச் சூழ திருப்பருப்பதம் நோக்கினார். |

| | |
|---|---|
| **564.** மேகம்போன் மிடற்ற ராகி<br>வேழத்தி னுரிவை போர்த்து<br>ஏகம்ப மேவி னார்தா<br>மிமையவர் பரவி யேத்தக்<br>காகம்பர் கழற ராகிக்<br>கடியதோர் விடையொன் றேறிப்<br>பாகம்பெண் ணுருவ மானார்<br>பருப்பத நோக்கி னாரே. 7 | கார்மேகம் போன்ற நீலகண்டராய், யானையின் தோலைப் போர்த்து, ஏகம்பத்தில் விரும்பி உறையும் பெருமானாய், தேவர்கள் முன்நின்று துதித்துப் புகழ, அவர்களைக் காப்பாற்றும் ஏகாம்பரநாதர் காலில் வீரக்கழலைப் பூண்டு பார்வதி பாகராய்க் காளையை ஏறி ஊர்ந்து பருப்பதம் நோக்கினார். |
| **565.** பேரிடர்ப் பிணிக டீர்க்கும்<br>பிஞ்ஞக னெந்தை பெம்மான்<br>காருடைக் கண்ட ராகிக்<br>கபாலமோர் கையி லேந்திச்<br>சீருடைச் செங்கண் வெள்ளே<br>றேறிய செல்வர் நல்ல<br>பாரிடம் பாணி செய்யப்<br>பருப்பத நோக்கி னாரே. 8 | பெரிய துயர்களைத் தரும் பிணிகளைப் போக்குபவரும், தலைக்கோலத்தை அணிந்தவரும் எமக்குத் தந்தையாருமாகிய பெருமான், நீலகண்டராய், ஒரு கையில் மண்டையோட்டை ஏந்திச் சிறப்புப் பொருந்திய சிவந்த கண்களை உடைய திருமாலாகிய வெண்ணிறக் காளையை ஏறி ஊர்ந்த செல்வராய்ப் பெரிய பூதங்கள் தாளம்போடப் பருப்பதம் நோக்கினார். |
| **566.** அங்கண்மா லுடைய ராய<br>வைவரா லாட்டு ணாதே<br>உங்கண்மால் தீர வேண்டி<br>லுள்ளத்தா லுள்கி யேத்தும்<br>செங்கண்மால் பரவி யேத்திச்<br>சிவனென நின்ற செல்வர்<br>பைங்கண்வெள் ளேற தேறிப்<br>பருப்பத நோக்கி னாரே. 9 | சிவந்த கண்களை உடைய திருமால் முன்நின்று துதித்துப் புகழ்ந்து சிவனாதல் உணருமாறு நிலைபெற்ற செல்வத்தை உடைய பெருமானார் பசிய கண்களை உடைய வெண்ணிற இடபத்தை இவர்ந்து பருப்பதத்தை அடைந்து அங்கு உறைகிறார். உடம்பாகிய அவ்விடத்திலே மயக்கத்தை உடைய ஐம்பொறிகளால் அவை விரும்பியபடி செயற்படுதலொழிந்து உங்களுடைய மயக்கம் நீங்குதலை விரும்பினால் அப்பெருமானாரை மனத்தால் தியானித்துத் துதியுங்கள். |
| **567.** அடல்விடை யூர்தி யாகி<br>யரக்கன்றோ ளடர வூன்றிக்<br>கடலிடை நஞ்ச முண்ட<br>கறையணி கண்ட னார்தாம்<br>சுடர்விடு மேனி தன்மேற்<br>சுண்ணவெண் ணீறு பூசிப்<br>படர்சடை மதியஞ் சேர்த்திப்<br>பருப்பத நோக்கி னாரே. 10 | வலிய காளையை வாகனமாகக் கொண்டு, இராவணன் தோள்கள் வருந்துமாறு திருவடி விரல் ஒன்றனை ஊன்றி, கடலில் தோன்றிய விடத்தை உண்ட நீலகண்டர் ஒளி வீசும் தம் திருமேனியின் மீது திருநீற்றை அணிந்து, பரவிய சடையிலே பிறையைச் சூடிப் பருப்பதம் நோக்கினார். |

## 59. திருஅவளிவணல்லூர்

திருநேரிசை

பதிக எண் : 59

568. தோற்றினா னெயிறு கவ்வித்
தொழிலுடை யரக்கன் றன்னைத்
தேற்றுவான் சென்று சொல்லச்
சிக்கெனத் தவிரு மென்று
வீற்றினை யுடைய னாகி
வெடுவெடுத் தெழுந்த வன்றன்
ஆற்றலை யழிக்க வல்லா
ரவளிவ ணல்லூ ராரே. 1

தீத்தொழிலை உடைய இராவணன் கோபத்தால் தன் பற்கள் உதட்டைக் கவ்வ வெகுட்சியடைந்த போது அவன் கோபத்தைத் தணிக்க வேண்டித் தேரோட்டி உறுதியாகக் கோபத்தை விடுக்குமாறு சொல்ல, தற்பெருமை உடையவனாகிக் கயிலையைப் பெயர்க்க விரைந்து எழுந்த அவனுடைய ஆற்றலை அழித்த பெருமான் அவளிவணல்லூரில் உறைகின்றார்.

569. வெம்பினா ரரக்க ரெல்லா
மிகச்சழக் காயிற் றென்று
செம்பினா லெடுத்த கோயில்
சிக்கெனச் சிதையு மென்ன
நம்பினா ரென்று சொல்லி
நன்மையான் மிக்கு நோக்கி
**அம்பினா லழிய வெய்தா**
ரவளிவ ணல்லூ ராரே. 2

இராவணன் சீதாபிராட்டியை வஞ்சனையால் சிறை வைத்த செயல் பெரிய குற்றமாயிற்று. ஆதலால் அச் செயலால் செம்பினால் உறுதியாக அமைக்கப்பட்ட அவன் அரண்மனை உறுதியாக அழிந்துவிடும் என்று நன்மனம் கொண்ட அரக்கர்கள் எல்லோரும் வேண்டினாராக, 'நம்மை விரும்பினவர்களுக்கு நாம் நன்மை செய்ய வேண்டும்' என்று விரும்பி நோக்கி, **இராமபிரான் அம்பினால் இலங்கையை அழிப்பதற்கு அவன் உள்ளிருந்து அம்பு எய்தவர் அவளிவணல்லூர்ப் பெருமானாவார்.**

---

பதிகத்தின் பத்துப் பாடல்களிலும் இராவணன் குறிக்கப் பெறுகிறான்.

570. கீழ்ப்படக் கருத லாமோ
கீர்த்திமை யுள்ள தாகில்
தோட்பெரு வலியி னாலே
தொலைப்பனான் மலையை யென்று
வேட்பட வைத்த வாறே
விதிர்விதிர்த் தரக்கன் வீழ்ந்து
ஆட்படக் கருதிப் புக்கா
ரவளிவ ணல்லூ ராரே. 3

புகழாந் தன்மை என்மாட்டு இருக்குமாயின் எந்நிலையிலும் அப்புகழ் கீழ்ப்பட நினைக்கலாமோ ? 'என் தோள் வலிமையாலே இம்மலையை இடம் பெயர வைக்கிறேன்' என்று தன் விருப்பம் நிறைவேற இராவணன் செயற்பட்ட அளவிலே அவன் நடுநடுங்கி விழுந்து அடியவனாகுமாறு கருதி விரலால் அழுத்திய பெருமான் அவளிவணல்லூரில் உறைகின்றார்.

| | |
|---|---|
| **571.** நிலைவலம் வல்ல னல்ல<br>னேர்மையை நினைய மாட்டான்<br>சிலைவலங் கொண்ட செல்வன்<br>சீரிய கயிலை தன்னைத்<br>தலைவலங் கருதிப் புக்குத்<br>தாக்கினான் றன்னை யன்று<br>அலைகுலை யாக்கு வித்தா<br>ரவளிவ ணல்லூ ராரே. 4 | நிலைத்த வெற்றியை அடையவல்லவன் அல்லனாய், நேர்மையை நினைக்காமல், வில்லின் வெற்றியைக் கொண்ட செல்வராய் தம்முடைய கயிலைமலையைத் தலைகளின் வலிமையை நினைத்துப் பெயர்க்க முற்பட்ட இராவணனை அன்று உடல் வருந்திக் குலையச் செய்த பெருமான் அவளிவணல்லூரில் உறைகின்றார். |
| **572.** தவ்வலி யொன்ற னாகித்<br>தனதொரு பெருமை யாலே<br>மெய்வ்வலி யுடைய னென்று<br>மிகப்பெருந் தேரை யூர்ந்து<br>செவ்வலி கூர்வி ழி(ய்)யாற்<br>சிரம்பத்தா லெடுக்குற் றானை<br>அவ்வலி தீர்க்க வல்லா<br>ரவளிவ ணல்லூ ராரே. 5 | குறைந்த வலிமையை உடையவனாய் இருந்தும், செருக்கினாலே தன்னை உண்மையான வலிமை உடையவன் என்று கருதி மிகப் பெரிய தேரை ஊர்ந்து சென்று சிவந்த கொடிய கூர்மையான விழிகளால் கயிலையை நோக்கித் தன் பத்துத் தலைகளாலும் அதனைத் தூக்க முற்பட்ட இராவணனுடைய வலிமையைப் போக்கிய பெருமான் அவளிவணல்லூரில் உறைகின்றார். |
| **573.** நன்மைதா னறிய மாட்டா<br>னடுவிலா வரக்கர் கோமான்<br>வன்மையே கருதிச் சென்று<br>வலிதனைச் செலுத்த லுற்றுக்<br>கன்மையான் மலையை யோடிக்<br>கருதித்தா னெடுத்து வாயால்<br>அம்மையோ வென்ன வைத்தா<br>ரவளிவ ணல்லூ ராரே. 6 | நியாய உணர்வில்லாத இராவணன் தனக்கு நன்மையாவது இன்னது என்று அறிய இயலாதவனாய், தன் உடல் வலிமையையே பெரியதாகக் கருதித் தன் வலிமையைச் செயற்படுத்த முற்பட்டு, கல்லாந் தன்மையுடைய மலையை ஓடிச்சென்று தூக்கமுற்பட்டு வருந்தி, வாயினால் அம்மையோ என்று அலற வைத்த பெருமான் அவளிவணல்லூரில் உறைகிறார். |
| **574.** கதம்படப் போது வார்கள்<br>போதுமக் கருத்தி னாலே<br>சிதம்பட நின்ற நீர்கள்<br>சிக்கெனத் தவிரு மென்று<br>மதம்படு மனத்த னாகி<br>வன்மையான் மிக்கு நோக்க<br>அதம்பழத் துருவு செய்தா<br>ரவளிவ ணல்லூ ராரே. 7 | 'சிவபெருமான் வெகுளும் வகையில் அவனை எதிர்த்துச் செயற்படுபவர்கள் அழிந்து விடுவார்கள் என்ற எண்ணத்தால் இதற்கு முன் எல்லாச் செயல்களிலும் வெற்றியையே அடைந்த தாங்கள் தோல்வி தரக்கூடிய இச்செயலைத் தவிர்த்து விடுங்கள்' என்ற தேரோட்டி சொல்லை மதியாது செருக்குக் கொண்ட மனத்தினனாய்த் தன் உடல் வன்மையால் கயிலையைப் பெயர்க்க மிகவும் முயல, அவ்விராவணன் உடம்பை அத்திப்பழம் போலச் சிவந்தும் குழைந்தும் நசிந்தும் போகுமாறு செய்த பெருமான் அவளிவணல்லூரில் உறைகின்றார். |

| | |
|---|---|
| 575. நாடுமிக் குழிதர் கின்ற<br>நடுவிலா வரக்கர் கோனை<br>ஓடுமிக் கென்று சொல்லி<br>யூன்றினா னுகிரி னாலே<br>பாடிமிக் குய்வ னென்று<br>பணியநற் றிறங்கள் காட்டி<br>ஆடுமிக் கரவம் பூண்டா<br>ரவளிவ ணல்லூ ராரே. 8 | பல நாடுகளிலும் சுற்றித் திரிந்த நியாய உணர்வில்லாத இராவணனை இவ்விடத்தை விட்டு விரைந்தோடு என்று அதட்டிக் கால்விரல் நகத்தினாலே அவனை ஊன்ற, நசுங்கிய அவன் மிகுதியாகப் பாடி உயிர் பிழைப்பேன் என்று எண்ணி பாடிப் பணிய அவனுக்குப் பல நன்மைகளைச் செய்தவராய்ப் படமெடுத்து ஆடும் பாம்புகளை மிகுதியாக அணிந்தவ ராகிய பெருமான் அவளிவணல்லூரில் உறைகின்றார். |
| 576. ஏனமா யிடந்த மாலு<br>மெழிறரு முரளி யானும்<br>ஞானந்தா னுடைய ராகி<br>நன்மையை யறிய மாட்டார்<br>சேனந்தா னிலாவ ரக்கன்<br>செழுவரை யெடுக்க வூன்றி<br>ஆனந்த வருள்கள் செய்தா<br>ரவளிவ ணல்லூ ராரே. 9 | பன்றி வடிவெடுத்துப் பூமியைத் தோண்டிச் சென்ற திருமாலும், அழகிய தாமரையில் உறையும் பிரமனும் ஞானம் உடையவராய்த் தமக்கு நன்மை எது என்று அறியமாட்டாதவராய் இருந்தனர். பருந்துபோலப் பல இடங்களிலும் உலாவும் தன்மையை உள்ள இராவணன் கயிலை மலையைப் பெயர்க்க அவனை அமுத்திப் பின் அவனுக்கு மகிழ்ச்சி தரும் அருள்களைச் செய்த பெருமான் அவளிவணல்லூரில் உறைகின்றார். |
| 577. ஊக்கினான் மலையை யோடி<br>யுணர்விலா வரக்கன் றன்னைத்<br>தாக்கினான் விரலி னாலே<br>தலைபத்துந் தகர வூன்றி<br>நோக்கினா னஞ்சத் தன்னை<br>நோன்பிற வூன்று சொல்லி<br>ஆக்கினா ரமுத மாக<br>வவளிவ ணல்லூ ராரே. 10 | ஓடிச் சென்று கயிலையைப் பெயர்க்க முற்பட்ட அறிவில்லாத இராவணனைக் கால்விரலால் அமுத்திப் பத்துத் தலைகளும் நொறுங்கச் செய்து அவன் அஞ்சுமாறு அவனுடைய நோன்பின் பயன்களுங் கெட நோக்கிய பெருமான் பின் அவனை அமுத்தியதால் ஏற்பட்ட துயரைப் போக்கி அமுதம் போல் உதவி அவனை அழியாமற் காத்தார் அவளிவணல்லூரார். |

## 60. திருப்பெருவேளூர்

(காட்டூர் ஐயன் பேட்டை)

பெருவேளூரில் நாவரசரின் சொற் பிரயோகங்கள்

1. மலர்கள் தூவி நாடொறும் வணங்குவேனே.
2. ஓத நாவுடையனாகி உரைக்குமாறு உரைக்குற்றேனே.
3. உறவினால் வல்லனாகி உணருமாறு உணர்த்துவேனே.
4. பொய்ஞ்ஞெக நினைய மாட்டாப் பொறியிலா வறிவிலேனே.
5. கூட நான் வல்லமாற்றங் குறுகுமா மிறைஞ்சுவேனே.
6. இச்சைசேர்ந்த மரநானு மிறைஞ்சுமா றிறைஞ்சுவேனே.
7. மெத்தநே யவனை நாளும் விரும்புமாறறிகிலேனே.
8. அண்டமா மாதியானை அறியுமா றறிகிலேனே.
9. மருவிநான் வாழ்த்தியுய்யும் வகையது நினைக்கின்றேனே.
10. உருகிய வடியரேத்து முள்ளத்தால் உள்குவேனே.

திருநேரிசை பதிக எண் : 60

578. மறையணி நாவி னானை
மறப்பிலார் மனத்து ளானைக்
கறையணி கண்டன் றன்னைக்
கனலெரி யாடி னானைப்
பிறையணி சடையி னானைப்
பெருவேளூர் பேணி னானை
நறையணி மலர்கள் தூவி
நாடொறும் வணங்கு வேனே. 1

வேதம் ஓதும் நாவினராய், தம்மை மறவாதார் மனத்தில் உள்ளவராய், நீலகண்டராய், ஒளிவீசும் நெருப்பில் கூத்து நிகழ்த்துபவராய், பிறையை அணிந்த சடையினராய்ப் பெருவேளூரை விரும்பி உறையும் பெருமானை நறுமண மலர்களைத் தூவி நாள்தோறும் வணங்குவேன் நான்.

579. நாதனா யுலக மெல்லா
நம்பிரா னெனவு நின்ற
பாதனாம் பரம யோகி
பலபல திறத்தி னாலும்
பேதனாய்த் தோன்றி னானைப்
பெருவேளூர் பேணி னானை
**ஓதநா வுடைய னாகி**
**யுரைக்குமா றுரைக்குற் றேனே.** 2

தலைவனாய், உலகிலுள்ளார் எல்லாம் நம்முடைய பெருமான் என்று கூறுமாறு நிலைபெற்ற திருவடிகளை உடைய மேம்பட்ட யோகியாய், பலவகையாலும் ஒன்றோடொன்று ஒவ்வாப் பலவேடமும் தரித்துக் கொண்டு தோன்றுபவனாய்ப் பெருவேளூரை விரும்பி உறையும் பெருமானைத் தோத்திரிக்கும் நாவினை உடையேனாகிச் சான்றோர் உரைக்கும் வகையிலே உரைத்தலை உடையேன் நான்.

திருநாவுக்கரசர் என்னுந் திருப்பெயரின் காரணம் புலப்படுதலை உணரலாம். ஓத நாவுடையன் – நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே. நமச்சிவாயவே நா நவின்றேத்தும். நாவுடைமைக்குத்தக்க செயல் சிவகீர்த்தனம் ஓதுதலே.

| | |
|---|---|
| **580.** குறவிதோண் மணந்த செல்வக்<br>குமரவே டாதை யென்றும்<br>நறவிள நறுமென் கூந்த<br>னங்கையோர் பாகத் தானைப்<br>பிறவியை மாற்று வானைப்<br>பெருவேளூர் பேணி னானை<br>உறவினால் வல்ல னாகி<br>யுணருமா றுணர்த்து வேனே. 3 | குறத்தியாகிய வள்ளியின் தோள்களை மணந்த செல்வனாகிய குமரவேளுடைய தந்தையாராய், என்றும் மணமுள்ள கூவிளம் பூவை அணிந்த நறிய மெல்லிய கூந்தலை உடைய இளைய நங்கையாகிய பார்வதி பாகராய்ப் பிறவிப் பிணியைப் போக்குபவராய்ப் பெருவேளூரை விரும்பி உறையும் பெருமானை அவரிடத்து அடியேன் கொண்ட உறவினால் யான் உணர்ந்த வண்ணம் உணர்த்துவேன் நான். |
| **581.** மைஞ்ஞவில் கண்டன் றன்னை<br>வலங்கையின் மழுவொன் றேந்திக்<br>கைஞ்ஞவின் மானி னோடுங்<br>கனலெரி யாடி னானைப்<br>பிஞ்ஞகன் றன்னை யந்தண்<br>பெருவேளூர் பேணி னானைப்<br>பொய்ஞ்ஞெக நினைய மாட்டாப்<br>பொறியிலா வறிவி லேனே. 4 | நஞ்சுண்ட கருமை படர்ந்த நீல கண்டனாய், வலக்கையில் ஒரு மழுவை ஏந்தி, இடக்கையிற் பொருந்திய மானோடு ஒளி வீசும் தீயிடை ஆடுபவனாய், தலைக்கோலம் அணிந்தவனாய், அழகிய பெருவேளூரில் விரும்பி உறையும் பெருமானைப் பொய்ம்மை நீங்க நினைக்க இயலேனாய் நினைதற்காம் நல்வினையும் அறிவும் இல்லாதவன் நான். |
| **582.** ஓடைசேர் நெற்றி யானை<br>யுரிவையை மூடி னானை<br>வீடதே காட்டு வானை<br>வேதநான் காயி னானைப்<br>பேடைசேர் புறவ நீங்காப்<br>பெருவேளூர் பேணி னானைக்<br>கூடநான் வல்ல மாற்றங்<br>குறுகுமா றறிகி லேனே. 5 | நெற்றிப்பட்டம் அணிந்த யானைத் தோலைப் போர்த்தவராய், அடியார்களுக்கு வீடுபேறு வழங்குபவராய், நான்கு வேத வடிவினராய், பேடையொடு கூடிய புறாக்கள் நீங்காது உறையும் பெருவேளூரை விரும்பி உறையும் பெருமானைக் கூடவல்ல, உலகியலுக்கு மாறுபட்ட வழியாகிய இறை நெறியிலே சென்று அவனை நெருங்கிய முறையை அறியேன். |
| **583.** கச்சைசேர் நாகத் தானைக்<br>கடல்விடங் கண்டத் தானைக்<br>கச்சியே கம்பன் றன்னைக்<br>கனலெரி யாடு வானைப்<br>பிச்சைசேர்ந் துழல்வி னானைப்<br>பெருவேளூர் பேணி னானை<br>இச்சைசேர்ந் தமர நானு<br>மிறைஞ்சுமா றிறைஞ்சு வேனே. 6 | நாகத்தைக் கச்சாக அணிந்து, கடல் விடத்தைக் கழுத்தில் இருந்தி, காஞ்சியில் ஏகம்பத்தில் உறைபவராய், ஒளிவீசும் தீயில் கூத்து நிகழ்த்தபவராய், பிச்சை எடுப்பதற்கு அலைபவராய், பெருவேளூரை விரும்பித் தங்கும் பெருமானை என் இச்சை நிறைவுற வழிபடும் வழியாலே வழிபடுவேன் நான். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **584.** சித்தராய் வந்து தன்னைத்<br>திருவடி வணங்கு வார்கள்<br>முத்தனை மூர்த்தி யாய<br>முதல்வனை முழுது மாய<br>பித்தனைப் பிறரு மேத்தப்<br>பெருவேளூர் பேணி னானை<br>மெத்தநே யவனை நாளும்<br>விரும்புமா றறிகி லேனே. 7 | ஞானிகளாய் வந்து தம் திருவடிகளை வணங்குபவர்களுக்கு முத்தியை வழங்குபவராய், ஞானமூர்த்தியாகிய முதல்வராய், எல்லா உலகமும் தாமேயாகிய பித்தராய், மற்றவர் யாவரும் தம்மைத் துதிக்குமாறு பெருவேளூரை விரும்பிய மிக்க அன்புடைய பெருமானை நாளும் விரும்பும் திறத்தை அறியாதேன் நான். |
| **585.** முண்டமே தாங்கி னானை<br>முற்றிய ஞானத் தானை<br>வண்டுலாங் கொன்றை மாலை<br>வளர்மதிக் கண்ணி யானைப்<br>பிண்டமே யாயி னானைப்<br>பெருவேளூர் பேணி னானை<br>அண்டமா மாதி யானை<br>யறியுமா றறிகி லேனே. 8 | தலைமாலையைப் பூண்டவராய், பூரண ஞானமுடையவராய், வண்டுகள் உலவும் கொன்றை மாலையையும் பிறையையும் முடிமாலையாக உடையவராய், என் உடலாகவும் உள்ளவராய்ப் பெருவேளூர்ப் பெருமானாய் எல்லா உலகங்களுமான முதற் கடவுளாய் உள்ள பெருமானை அறியும் வழியால் அறிய இயலாதேனாய் உள்ளேன் நான். |
| **586.** விரிவிலா வறிவி னார்கள்<br>வேறொரு சமயஞ் செய்து<br>எரிவினாற் சொன்னா ரேனு<br>**மெம்பிராற் கேற்ற தாகும்**<br>பரிவினாற் பெரியோ ரேத்தும்<br>பெருவேளூர் பற்றி னானை<br>மருவிநான் வாழ்த்தி யுய்யும்<br>வகையது நினைக்கின் றேனே. 9 | விரிவடையாத சிற்றறிவுடையவர்கள் புதியதொரு சமயத்தை உண்டாக்கி வயிற்றெரிச்சலால் அச்சமயத்துக்குப் பிரசாரம் செய்தாராகிலும் அதுவும் பெருமானுக்கு ஏற்புடைய செயலேயாகும். பெரியோர்கள் அன்போடு துதிக்கும் பெருவேளூர்ப் பெருமானைப் பொருந்தி அடியேன் வாழ்த்திப் பிறவிப் பிணியிலிருந்து விடுபடும் வழியை விருப்புற்று நினைக்கின்றேன் நான். |
| **587.** பொருகட லிலங்கை மன்ன<br>னுடல்கெடப் பொருத்தி நல்ல<br>கருகிய கண்டத் தானைக்<br>கதிரிளங் கொழுந்து சூடும்<br>பெருகிய சடையி னானைப்<br>பெருவேளூர் பேணி னானை<br>உருகிய வடிய ரேத்து<br>முள்ளத்தா லுள்கு வேனே. 10 | அலைகள் மோதும் கடலிடை அமைந்த இலங்கை மன்னனாகிய இராவணனுடைய உடல் நசுங்குமாறு தம் கால்விரலை அழுத்தியவராய், நல்ல நீலகண்டராய், ஒளிவீசும் பிறையைச் சூடும் பரந்த சடையினராய்ப் பெரு வேளூரில் உள்ள பெருமானாரை மனம் உருகிய அடியவர்கள் போற்றும் உள்ளத்தை அடியேனும் பக்குவத்தால் பெற்று அப்பெருமானை விருப்புற்று நினைப்பேன் நான். |

## 61. திருவிராமேச்சுரம்

திருநேரிசை

பதிக எண் : 61

588. பாசமுங் கழிக்க கில்லா
வரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு
மதியினான் மால்செய் கோயில்
நேசமிக் கன்பி னாலே
நினைமினீர் நின்று நாளும்
தேசமிக் கானி ருந்த
திருவிரா மேச்சு ரம்மே. 1

நீக்க வேண்டிய பாசத்தை நீக்கும் ஆற்றல் இல்லாத அரக்கர்களை அழித்து மேம்பட்ட சிவஞானத்தால் இராமனாய் அவதரித்த திருமால் அமைத்த கோயிலிலே ஒளிமிக்க சிவபெருமான் உகந்தருளியிருக்கும் திரு இராமேச்சுரத்தை வாசனை மிக்க பூக்களை அர்ப்பணித்து நாள்தோறும் நிலையாகப் பற்றுமிகுந்த அன்போடு எல்லீரும் விருப்புற்று நினையுங்கள்.

589. முற்றின நாள்க ளென்று
முடிப்பதே கார ண(ம்)மாய்
உற்றவன் போர்க ளாலே
யுணர்விலா வரக்கர் தம்மைச்
செற்றமால் செய்த கோயி
றிருவிரா மேச்சு ரத்தைப்
**பற்றிநீ பரவு நெஞ்சே**
படர்சடை யீசன் பாலே. 2

தலத்தைக் குறிவைத்து ஈசனைப் போற்ற வேண்டும்

நெஞ்சே! அரக்கர்கள் உயிர் வாழ்வதற்கு வகுத்த நாள்கள் முடிந்து விட்டதனால் அவர்களை அழிப்பதனையே காரணமாகக் கொண்டு ஏற்பட்ட வலிய போரினால் மெய்யுணர்வு இல்லாத அரக்கர்களை அழித்த இராமன் ஆகிய திருமால் அமைத்த இராமேச்சுரத்தை உகந்தருளியிருக்கும், பரவிய சடையை உடைய சிவபெருமானிடத்துப் பற்றினைக் கொண்டு நீ முன் நின்று போற்றுவாயாக.

590. கடலிடை மலைக டம்மா
லடைத்துமால் கரும முற்றித்
திடலிடைச் செய்த கோயிற்
றிருவிரா மேச்சு ரத்தைத்
தொடலிடை வைத்து நாவிற்
சுழல்கின்றேன் தூய்மை யின்றி
உடலிடை நின்றும் பேரா
வைவராட் டுண்டு நானே. 3

கடலிடத்தை மலைகளால் அடைத்துத் திருமால் தம் செயலை முடித்துப் பின் கடலை அடுத்த மேட்டில் செய்த இராமேச்சுரத்தை, இவ்வுடம்பினின்றும் நீங்காத ஐம்பொறிகளால் தம் விருப்பப்படி செயற்படுத்தப்பட்டு தூய்மையின்றி, நாவிடை வைத்துப் போற்றுதலைச் செய்து தடுமாறுகின்றேன். (நாவில் தொடல் இடை – வாக்கு).

591. குன்றுபோற் றோளு டைய
குணமிலா வரக்கர் தம்மைக்
கொன்றுபோ ராழி யம்மால்
வேட்கையாற் செய்த கோயில்
நன்றுபோ னெஞ்ச மேநீ
நன்மையை யறிதி யாயில்
சென்றுநீ தொழுதுய் கண்டாய்
திருவிரா மேச்சு ரம்மே. 4

நெஞ்சமே! நீ நன்மையை அறிவாயானால் மலைகளைப் போன்ற தோள்களையுடைய நற்பண்பு இல்லாத அரக்கர்களைக் கொன்று போரிடும் சக்கராயுதத்தை உடைய திருமால் விருப்பத்தோடு அமைத்த இராமேச்சுரக் கோயிலை, சென்று தொழுது கடைத்தேறுவாயாக. அறியாயாயின் நின் நிலை நன்றல்ல. (நன்று போல்).

592. வீரமிக் கெயிறு காட்டி
விண்ணுற நீண்ட ரக்கன்
கூரமிக் கவனைச் சென்று
கொன்றுடன் கடற்ப டுத்துத்
தீரமிக் கானி ருந்த
திருவிரா மேச்சு ரத்தைக்
கோரமிக் கார்த வத்தாற்
கூடுவார் குறிப்பு ளாரே. 5

கடலைச் சேது கட்டித்தடுத்து, வீரம் மேம்பட்டுக் கோரைப் பற்களை வெளியே காட்டிக் கொண்டு வானளாவ உயர்ந்த கொடுமை மிக்க அரக்கனாகிய இராவணனை இலங்கைக்குச் சென்று அங்கே கொன்று, மீண்டு பேராற்றலுடைய திருமால் கோயில் செய்து வழிபட்டிருந்த இராமேச்சுரத்தை, அஞ்சத்தகும் பான்மையுள்ள தீவிர சாதனைகளால் சென்றடைவார் தம் குறிக்கோள் நிரம்பப் பெறுவர்.

593. ஆர்வல நம்மின் மிக்கா
ரென்றவவ் வரக்கர் கூடிப்
போர்வலஞ் செய்து மிக்குப்
பொருதவர் தம்மை வீட்டித்
தேர்வலஞ் செற்ற மால்செய்
திருவிரா மேச்சு ரத்தைச்
சேர்மட நெஞ்ச மேநீ
செஞ்சடை யெந்தை பாலே. 6

இராமன் பூசித்த ஈச்சரம் – இராமேச்சரம்.

மட நெஞ்சமே! 'நம்மை விட வலிமை மிக்கவர் யாவர்' என்று செருக்குற்ற அவ்வரக்கர்கள் ஒன்று கூடிப் போரிலே வெற்றியைக் கருதி வலிமை மிக்குப் போரிட்டாராக, அவர்களை அழித்து அவர்களுடைய தேர்ப்படையின் வலிமையையும் போக்கிய திருமால் அமைத்த இராமேச்சுரத்தை அணுகிச் செஞ்சடைப் பெருமான் பால் அடைவாயாக.

594. வாக்கினா லின்பு ரைத்து
வாழ்கிலார் தம்மை யெல்லாம்
போக்கினாற் புடைத்த வர்கள்
உயிர்தனை யுண்டு மாறான்
தேக்குநீர் செய்த கோயி
றிருவிரா மேச்சு ரத்தை
நோக்கினால் வணங்கு வார்க
ணோய்வினை நுணுகு மன்றே. 7

இனிமையாகப் பேசுதற்கு அமைந்த வாயாலே இனிய சொற்களைப் பேசி வாழாத அரக்கர்களை அழிக்கத்தக்க படைகளால் தாக்கி அவர்கள் உயிரை உண்டு திருமால் கடல் நீரைத் தேக்கிய அணையின் கரையில் அமைத்த கோயிலாகிய இராமேச்சுரத்தை அகநோக்கிலும் புறநோக்கிலும் கண்டு தரிசித்துத் தலையால் வணங்குபவருடைய நோய்களும் வினைகளும் அழிந்து விடும்.

595. பலவுநா டீமை செய்து
பார்தன்மேற் குழுமி வந்து
கொலைவிலார் கொடிய ராய
வரக்கரைக் கொன்று வீழ்த்த
சிலையினான் செய்த கோயி
றிருவிரா மேச்சு ரத்தைத்
தலையினால் வணங்கு வார்கள்
தாழ்வராந் தவம தாமே. 8

இராமன் கும்பிட்ட நாதன் – இராமநாதன்.

பலகாலமாக இவ்வுலகில் கூட்டமாகத் தோன்றித் தீமைகளையே செய்து கொல்லும் வில்லை ஏந்திய கொடியவர்களான அரக்கர்களைக் கொன்று வீழ்த்திய வில்லை ஏந்திய திருமால் அமைத்த இராமேச்சுரக் கோயிலைத் தலையினால் வணங்கும் அடியவர்கள் பின் உடம்பாலும் முழுமையாக விழுந்து வணங்குவார்கள். அச்செயல் தவப் பயனால் நிகழ்வதாகும்.

596. கோடிமா தவங்கள் செய்து
குன்றினார் தம்மை யெல்லாம்
வீடவே சக்க ரத்தா
லெறிந்துபின் னன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயி
றிருவிரா மேச்சு ரத்தை
நாடிவாழ் நெஞ்ச மேநீ
நன்னெறி யாகு மன்றே. 9

நெஞ்சே! பல ஆண்டுகள் சிறந்த தவத்தைச் செய்து, ஒழுக்கக் கேடு உள்ள அரக்கர்களை எல்லாம் அவர்கள் அழியுமாறு சக்கரம் முதலிய படைகளால் அழித்துப் பின்தக்க இடத்தைத் தேடித் திருமால் அமைத்த இராமேச்சுரத்தை நீ விரும்பிச் சென்று வாழ்தி, அதுவே உனக்கு நன்னெறியாம்.

---

கோடி மாதவங்கள் – பெரு வரங்களாகிய ஆற்றல், ஆயுள், ஆயுதம் முதலியவற்றைப் பெறுவதற்காக இராவணன் சிவபெருமானை நோக்கிப் பல கோடிக்காலம் எண்ணற்ற தியாகங்களைச் செய்து நிறைவு செய்த அருந்தவங்கள்.

"கோடிமாதவங்கள் செய்" தாராயினும் அவையெல்லாம் வினைகளைப் பெருக்க ஏதுவாயினவேயன்றி, வினை கழிக்க ஏதுவாகாமற்கழிந்தன; மதி – சிவபூசை செய்தலே பாதகங்களைத் தீர்க்க வல்லது என்று சிவாகமங்களில் கண்ட உண்மையில் செலுத்திய அறிவு.

தேசம் – தேசு – சிவவொளி.

597. வன்கண்ணர் வாள ரக்கர்
வாழ்வினை யொன்ற றியார்
புன்கண்ண ராகி நின்று
போர்கள்செய் தாரை மாட்டிச்
செங்கண்மால் செய்த கோயி
றிருவிரா மேச்சு ரத்தைத்
தங்கணா லெய்த வல்லார்
தாழ்வராந் தலைவன் பாலே. 10

---

இராமன் தாபித்த லிங்கம் – இராமலிங்கம்

அகத்தில் உள்ள வன்மையைப் புறத்தில் காட்டும் கண்களை உடைய கொடிய அரக்கர்கள் வாழும் செயலை அறியாராய்த் துன்புறுத்தும் இயல்பினராய் நின்று போர்களைச் செய்ய, அவரை அழித்துச் சிவந்த கண்களை உடைய திருமால் அமைத்த இராமேச்சுரக் கோயிலைத் தம் கண்ணால் தரிசிக்கும் நற்பேறு உடையவர்கள் சிவபெருமான் பக்கலிலேயே தங்கும் வாய்ப்பினைப் பெறுவர்.

598. வரைகளொத் தேயு யர்ந்த
மணிமுடி யரக்கர் கோனை
விரையமுற் றறவொ டுக்கி
மீண்டுமால் செய்த கோயில்
திரைகள்முத் தால்வ ணங்குந்
திருவிரா மேச்சு ரத்தை
உரைகள்பத் தாலு ரைப்பா
ருள்குவா ரன்பி னாலே. 11

மலைகளை ஒத்து உயர்ந்த, மணிகள் வைத்து இழைக்கப்பட்ட கிரீடங்களை உடைய அரக்கர் தலைவனான இராவணனை விரைவாக அடியொடு அழித்துத் தமிழகம் திரும்பித் திருமால் செய்த கோயிலாய் அலைகள் முத்துக்களைச் சமர்ப்பித்து வணங்கும் திரு இராமேச்சுரத்தை முன்னைய இப்பத்துப் பாடல்களாலும் போற்றுபவர்கள் அன்பினாலே தியானித்து நற்பேறு பெறுபவராவர்.

## 62. திருவாலவாய்

திருநேரிசை

பதிக எண் : 62

599. வேதியா வேத கீதா
விண்ணவ ரண்ணா வென்றென்
**றோதியே மலர்கள் தூவி**
யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய்
படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே யால வாயில்
அப்பனே யருள்செ யாயே. 1

மறைமுதல்வனே! மறைகளைப் பாடுகின்றவனே! தேவர்கள் தலைவனே! பார்வதிபாகனே! பரவிய சடையிற் பிறையைச் சூடும் ஆதிப்பெருமானே! திருஆலவாயிலுள்ள அப்பனே! உன் திருநாமங்களைப் பலகாலும் ஓதி மலர்கள் தூவி ஒருவழிப்பட்ட மனத்தோடு உன் திருவடிகளை அடியேன் காணுமாறு அருள் செய்வாயாக.

ஓதியே மலர்களைத் தூவுதல் வேண்டும். தூவுதல் – தந்திரம்; ஓதுதல் – மந்திரம்; அம்மந்திரத்தின் வாச்சியப் பொருளாக நினைத்தல் – பாவனை. மந்திரம், தந்திரம், பாவனை மூன்றும் ஒருங்கு நிகழாதது நிறைவழிபாடன்று.

600. நம்பனே நான்மு கத்தாய்
நாதனே ஞான மூர்த்தீ
என்பொனே யீசா வென்றென்
றேத்திநா னேசற் றென்றும்
பின்பினே திரிந்து நாயேன்
பேர்த்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே யால வாயில்
அப்பனே யருள்செ யாயே. 2

எல்லோராலும் விரும்பப்படுபவனே! நான்கு முகங்களை உடையவனே! தலைவனே! ஞான வடிவினனே! என் பொன் போன்றவனே! எல்லோரையும் ஆள்பவனே! அன்பனே! ஆலவாயில் அப்பனே! உன்னைப் பலகாலும் துதித்து அடியேன் மனத்திரிபுகளை நீக்கி, பொறிபுலன்களின் வழியே சென்று பிறவாத வண்ணம் நாயேனுக்கு அருள் செய்வாயாக.

601. **ஒருமருந் தாகி** யுள்ளா
யும்பரோ டுலகுக் கெல்லாம்
**பெருமருந் தாகி** நின்றாய்
பேரமு தின்சு வையாய்க்
**கருமருந் தாகி** யுள்ளா
யாளும்வல் வினைக டீர்க்கும்
**அருமருந் தால** வாயில்
அப்பனே யருள்செ யாயே. 3

ஒப்பற்ற தேவாமிருதமாய் உள்ளவனே! தேவர்களுக்கும் மக்களுக்கும் தலையான மருந்தாக உள்ளவனே! சிறந்த அமுதின் சுவையாய்ப் பிணி தீர்க்கும் மருந்தாகி உள்ளவனே! எங்கள் வலிய வினைகளைப் போக்கி எங்களை அடிமை கொள்ளும் அருமருந்தாய் ஆலவாயில் உறையும் தலைவனே! அருள் செய்வாயாக.

ஒரு மருந்து – தனி மருந்து. ஒப்பொன்றும் இல்லாதது.
பெரு மருந்து – ஏனைய மருந்துகட்குத் தலையான மருந்து.
கரு மருந்து – பிறவிப் பிணி தீர்க்கும் மருந்து.
அரு மருந்து – ஒரு மருந்து, பெரு மருந்து, கரு மருந்து.
சிவபெருமான் – ஞானாமிர்தம். மும்மருந்தும் அரு மருந்தாகின்ற சுவை.

| | |
|---|---|
| **602.** செய்யநின் கமல பாதஞ்<br>சேருமா தேவர் தேவே<br>மையணி கண்டத் தானே<br>மான்மறி மழுவொன் றேந்தும்<br>சைவனே சால ஞானங்<br>கற்றறி விலாத நாயேன்<br>ஐயனே யால வாயில்<br>அப்பனே யருள்செ யாயே. 4 | தேவர்தேவனே! நீலகண்டனே! மான்மறியையும் மழுப்படையையும் ஏந்தியுள்ளவனாய சைவ சமயக்கடவுளே! ஞானத்தை முறையாகக் கற்றறியும் வாய்ப்பு இல்லாத அடியேனுடைய தலைவனே! ஆலவாயில் உறையும் அப்பனே! உன்னுடைய சிவந்த தாமரை போன்ற பாதங்களை அடியேன் சேரும்படி மிகவும் அருள் செய்வாயாக. |
| **603.** வெண்டலை கையி லேந்தி<br>மிகவுமூர் பலி கொண் டென்றும்<br>உண்டது மில்லை சொல்லி<br>லுண்டது நஞ்சு தன்னைப்<br>பண்டுனை நினைய மாட்டாப்<br>பளகனே னுளம தார<br>அண்டனே யால வாயில்<br>அப்பனே யருள்செ யாயே. 5<br><br>பளகு – குற்றம் | உலகத் தலைவனே! ஆலவாய் அப்பனே! வெள்ளிய மண்டையோட்டைக் கையில் ஏந்தி மிகவும் ஊர்களில் பிச்சையெடுத்தும் அப்பிச்சை உணவை உண்ணாது விடம் ஒன்றையே உண்டவன் என்று சொல்லப்படும் உன்னை அடியேன் வாழ்வின் முற்பகுதியில் விருப்புற்று நினைக்காத குற்றத்தினேன். அத்தகைய அடியேனுடைய உள்ளம் நிறையும்படி அருள்செய்வாயாக. |
| **604.** எஞ்சலில் புகலி தென்றென்<br>றேத்திநா னேசற் றென்றும்<br>வஞ்சக மொன்று மின்றி<br>மலரடி காணும் வண்ணம்<br>நஞ்சினை மிடற்றில் வைத்த<br>நற்பொருட் பதமே நாயேற்<br>கஞ்சலென் றால வாயில்<br>அப்பனே யருள்செ யாயே. 6 | விடத்தைக் கழுத்தில் அடக்கிய, சிவம் என்ற சொற் பொருளானவனே! ஆலவாயில் அப்பனே! என்றும் அழிவில்லாத அடைக்கலமாகும் இடம் என்று புகழ்ந்து நான் மகிழ்ந்து என்றும் வஞ்சனையின்றி உன் மலர் போன்ற திருவடிகளைத் தரிசிக்கும் வண்ணம் நாயேனுக்கு அஞ்சாதே என்று அருள் செய்வாயாக. |
| **605.** வழுவிலா துன்னை வாழ்த்தி<br>வழிபடுந் தொண்ட னேனுன்<br>செழுமலர்ப் பாதங் காணத்<br>தெண்டிரை நஞ்ச முண்ட<br>குழகனே கோல வில்லீ<br>கூத்தனே மாத்தா யுள்ள<br>அழகனே யால வாயில்<br>அப்பனே யருள்செ யாயே. 7 | தெள்ளிய அலையில் தோன்றிய விடத்தை உண்ட இளையோனே! அழகிய வில்லை ஏந்தியவனே! கூத்தனே! மாற்றுயர்ந்த தங்கம் போன்றுள்ள அழகனே! ஆலவாயில் பெருமானே! குறைபாடில்லாமல் உன்னை வாழ்த்தி வழிபடும் அடியவனாகிய யான் உன்னுடைய செழித்த மலர்போன்ற திருவடிகளைத் தரிசிக்குமாறு அருள்செய்வாயாக. |

| | |
|---|---|
| 606. நறுமலர் நீருங் கொண்டு<br>நாடொறு மேத்தி வாழ்த்திச்<br>செறிவன சித்தம் வைத்துத்<br>திருவடி சேரும் வண்ணம்<br>மறிகடல் வண்ணன் பாகா<br>மாமறை யங்க மாறும்<br>அறிவனே யால வாயில்<br>அப்பனே யருள்செ யாயே. 8 | கடல் நிறத்தவனான திருமாலை உடலின் ஒரு பாகமாக உடையவனே! மேம்பட்ட வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அறிபவனே! ஆலவாயில் அப்பனே! நறிய மலர்களையும் தீர்த்தங்களையும் கொண்டு நாள்தோறும் புகழ்ந்து வாழ்த்தித் திருவடிகளைச் செறிதற்குரிய வழிகளை உள்ளத்துக் கொண்டு உன் திருவடிகளை அடியேன் சேரும் வண்ணம் அருள் செய்வாயாக. |
| 607. நலந்திகழ் வாயி னூலாற்<br>சருகிலைப் பந்தர் செய்த<br>சிலந்தியை யரச தாள<br>வருளினா யென்று திண்ணம்<br>கலந்துடன் வந்து நின்றாள்<br>கருதிநான் காண்ப தாக<br>அலந்தன னால வாயில்<br>அப்பனே யருள்செ யாயே. 9 | நன்மைகள் விளங்குதற்குக் காரணமான தன் வாயினால் நூற்கப்பட்ட நூலினாலே சருகான இலைகள் விழுந்து தங்கி நிழல் தரும் பந்தலாக அமைந்த சிலந்தியை மறுபிறப்பில் அரசாளும் மன்னனாகப் பிறக்குமாறு அருள்செய்தாய் என்று உள்ளத்திலே உட்கொண்டு வந்து உன் திருவடிகளைக் காணவருந்தும் அடியேன் காணுமாறு ஆலவாயில் அப்பனாகிய நீ அருள் செய்வாயாக. |
| 608. பொடிக்கொடு பூசிப் பொல்லாக்<br>குரம்பையிற் புந்தி யொன்றிப்<br>பிடித்துநின் றாள்க ளென்றும்<br>பிதற்றிநா னிருக்க மாட்டேன்<br>எடுப்பனென் றிலங்கைக் கோன்வந்<br>தெடுத்தலு மிருபது தோள்<br>அடர்த்தனே யால வாயி<br>லப்பனே யருள்செ யாயே. 10<br><br>"ஆலவாயில் அப்பனே அருள் செயாயே<br>என்பது பதிக மகுடம்" | திருநீற்றைப் பூசி அழகில்லாத இந்த உடலிலே மனம் ஒரு வழிப்பட்டு உன் திருவடிகளைப் பற்றி என்றும் அவற்றின் பெருமையை அடைவுகேடாகப் பேசிய வண்ணம் காலம் போக்க இயலாதேனாய் உள்ளேன். கயிலையைப் பெயர்ப்பேன் என்று கருதி இராவணன் வந்து அம்மலையை எடுக்க முயன்ற அளவில் அவனுடைய இருபது தோள்களையும் வருத்திய ஆலவாயில் பெருமானே! அடியேனுக்கு அருள் செய்வாயாக. |

## 63. திருவண்ணாமலை

இறைவனொடு இரண்டறக் கலந்த நிலைமையை உணர்த்துவதற்காக நாவரசர் உபயோகித்த சொற்பிரயோகங்கள்.

1. நின்னையல்லால் நினையுமா நினைவிலேன்
2. உன்னை அல்லால் சொல்லுமாறு ஒரு சொல்லும் இல்லேன்
3. மருவி அல்லால் மற்றொரு மாடுஇலேன்
4. உன்னை அல்லால் ஏது நான் நினைவிலேனே
5. உன்னை அல்லால் யாது நான் நினைவிலேனே
6. பண் செய்த பாத நான் மறப்பிலேனே
7. நின்றன் பாதத்திறமலாற் றிற மிலேனே
8. உன்றன் மலரடி மறப்பிலேனே
9. திருவடி மறப்பிலேனே

### அணி அணாமலை யுளானே

தொழும்பர்க்கு அணியாயும் (அருகிலும்) தொண்டு செய்யாத தேவர் முதலியோர்க்கு அண்ணாதாராயும் உள்ள மலையே, அண்ணாமலை மேல் அணிமலை என்று சேக்கிழார் 1578 ஆம் பாடலில் விளக்கியுள்ளார். அண்ணாமலை மேல் அணிமலையை, ஆரா அன்பின் அடியவர்தம் கண்ணாரமுதை, விண்ணோரைக் காக்கக் கடலில் வந்தெழுந்த உண்ணா நஞ்சமுண்டானைக் கும்பிட்டு உருகுந் சிந்தையுடன் பண்ணார் பதிகத் தமிழ் பாடிப் பணிந்து பரவிப் பணி செய்தார் – 1578.

அண்ணாமலையின் மேல் விளங்கும் அணிமலையினை அடங்காத அன்பினையுடைய அடியவர்கள் கண்ணால் நுகரும் அமுது போல்பவரை தேவர்களைக் காக்கும் பொருட்டுப் பாற்கடலில் வந்தெழுந்த யாவராலும் உண்ணத்தகாத விடத்தை அமுது செய்த பெருமானைக் கும்பிட்டு உருகுகின்ற சிந்தையோடும் பண்ணிறைந்த தமிழ்த் திருப்பதிகத்தைப் பாடி பணிந்து துதிசெய்து திருப்பணிகள் செய்தனர்.

அண்ணா – தேவர்களுக்கும் மனத்தாலும் அணுக முடியாத

அணி – அடியவர்க்கு அண்ணிய

அமுது – உண்டால் சாவு போக்கும் மருந்து

கண்ணாரமுது – பார்த்தால் சாவு போக்கும் மருந்து

பார்வையால் விடம் தரும் நச்சுப் பிராணிகளும் உள.

(திருஷ்டிவிடம் – வடசொல்)

உண்ணா – பிறர் எவர்க்கும் உண்ணலாகாத

பரவி – பலவகையால் தோத்திரம் செய்தல்

பணி – கைத்திருப்பணி

609. ஓதிமா மலர்கள் தூவி
யுமையவள் பங்கா மிக்க
சோதியே துளங்கு மெண்டோட்
சுடர்மழுப் படையி னானே
ஆதியே யமரர் கோவே
யணியணா மலையு ளானே
நீதியா **னின்னை யல்லா**
**னினையுமா நினைவி லேனே.** 1

பார்வதிபாகனே! மேம்பட்ட சோதியே! கூத்தினிடத்தே அசைகின்ற எட்டுத் தோள்களை உடையவனே! மழுப்படையை ஏந்தியவனே! ஆதியே! தேவர்கட்குத் தலைவனே! அழகிய அண்ணாமலையில் இருப்பவனே! உன் திருநாமங்களை ஓதிச் சிறந்த மலர்களை அர்ப்பணித்து முறைப்படி உன்னைத் தியானிப்பதனைத் தவிர மற்றும் பொருள்களை ஊன்றி நினையேன்.

---

எல்லா உயிரும் உய்யும் பொருட்டு அங்கம், பிரத்தியங்கம், சாங்கம், உபாங்கம் உடைய திருவுருக் கொண்டருளினான்.

மனம், மொழி மெய்களால் அர்ச்சித்த வரலாறு. ஓதி – வாயினால்; தூவி – உடலால்; நினைவு – மனத்தால். மந்திரம், தந்திரம், பாவனை என்றும் சொல்லுவர்.

---

610. பண்டனை வென்ற வின்சொற்
பாவையோர் பங்க நீல
கண்டனே கார்கொள் கொன்றைக்
கடவுளே கமல பாதா
அண்டனே யமரர் கோவே
யணியணா மலை யுளானே
**தொண்டனே னுன்னை யல்லாற்**
**சொல்லுமா சொல்லி லேனே.** 2

பண்ணை வென்ற இனிய சொல்லையுடைய பார்வதிபாகனே! நீலகண்டனே! கார்காலத்தில் மலரும் கொன்றைப் பூவை அணிந்த கடவுளே! தாமரை போன்ற திருவடிகளை உடையவனே! தேவனே! தேவர்கள் தலைவனே! அழகிய அண்ணாமலையில் உள்ளவனே! அடியவனாகிய யான் உன்னைத் தவிரப் பிறரை உயர்த்திச் சொல்லும் சொற்களைச் சொல்லுவேன் அல்லேன்.

---

கொன்றைக் கடவுள்.

---

611. உருவமு முயிரு மாகி
யோதிய வுலகுக் கெல்லாம்
பெரு**வினை பிறப்பு** வீடாய்
நின்றவெம் பெருமான் மிக்க
அருவிபொன் சொரியு மண்ணா
மலையுளா யண்டர் கோவே
மருவிநின் பாத மல்லால்
மற்றொரு மாடி லேனே. 3

சடமாகிய மாயையாகவும், சித்தாகிய ஆன்மாக்களாகவும் ஆகியனவாய், குறிப்பிடப்படும் உயிர்களுக்கெல்லாம் மூல கருமமும் பிறப்பும் பிறப்பிலிருந்து விடுதலையுமாய் நின்ற எம்பெருமானே! நீர் மிகுந்த அருவிகள் பொன்னைச் சொரியும் அழகிய அண்ணாமலையில் உள்ள தேவர் தலைவனே! உன் திருவடிகளைப் பொருந்தி அவற்றைத் தவிர வேறு செல்வம் இல்லாதேன் ஆவேன்.

---

வினை பிறப்பு – வினைக்கீடாய் பிறப்பு

612. பைம்பொனே பவளக் குன்றே
பரமனே பால்வெண் ணீறா
செம்பொனே மலர்செய் பாதா
சீர்தரு மணியே மிக்க
அம்பொனே கொழித்து வீழு
**மணியணா மலையு ளானே**
என்பொனே யுன்னை யல்லா
லேதுநா னினைவி லேனே. 4

பசிய பொன்னே! பவளமலையே! மேம்பட்டவனே! பால் போன்ற வெண்ணிய நீற்றை அணிந்தவனே! செம்பொன்னே! மலர் போன்ற திருவடிகளை உடையவனே! சிறப்பு மிக்க மாணிக்கமும் மேம்பட்ட அழகிய பொன்னும் அருவிகளால் கொழித்து ஒதுக்கப்படும் அழகிய அண்ணாமலையில் உள்ள அடியேனுடைய பொன் போன்ற அரியவனே! உன்னைத் தவிர அடியேன் உள்ளத்தில் வேற்றுப்பொருள் யாதனையும் நினைக்கின்றேன் அல்லேன்.

613. பிறையணி முடியி னானே
பிஞ்ஞகா பெண்ணோர் பாகா
மறைவலா இறைவா வண்டார்
கொன்றையாய் வாம தேவா
அறைகழ லமர ரேத்து
**மணியணா மலையு ளானே**
இறைவனே யுன்னை யல்லால்
யாதுநா னினைவி லேனே. 5

வாமதேவா – இறைவரது ஐம்முகங்களுள் ஒன்று. ஈசானம் – மேல்நோக்கியது; தத்புருடம் – கிழக்கு. அகோரம் – தெற்கு; வாமதேவம் – வடக்கு; சத்யோசாதம் – மேற்கு

பிறையைச் சூடிய சடைமுடியை உடையவனே! தலைக்கோலம் அணிந்தவனே! பார்வதி பாகனே! வேதங்களில் வல்லவனே! தலைவனே! வண்டுகள் பொருந்திய கொன்றை மலரைச் சூடியவனே! வாமதேவனே! ஒலிக்கும் கழலணிந்த திருவடிகளைத் தேவர்கள் போற்றும் அழகிய அண்ணாமலையில் உறைபவனே! அடியேன் உளத்தில் தங்கியிருப்பவனே! உன்னைத் தவிர அடியேன் வேறு எந்தப் பொருளையும் விருப்புற்று உறுதியாக நினைப்பேன் அல்லேன்.

614. புரிசடை முடியின் மேலோர்
பொருபுனற் கங்கை வைத்துக்
கரியுரி போர்வை யாகக்
கருதிய கால காலா
அரிகுல மலிந்தவண்ணா
மலையுளா யலரின்மிக்க
வரிமிகு வண்டுபண்செய்
பாதநான் மறப்பிலேனே. 6

முறுக்குண்ட சடையின் மீது அலைகள் மோதும் நீரை உடைய கங்கையை வைத்து, யானைத் தோலை மேற்போர்வையாகக் கொண்டவனாய்க் காலனுக்கும் காலனானவனே! குரங்குக் கூட்டங்கள் மிக்க அண்ணாமலையில் உறைவோனே! மலரினும் மேம்பட்ட, கோடுகளை உடைய வண்டுகள் பண்பாடும் உன் திருவடிகளை அடியேன் மறத்தலைச் செய்யேன்.

**615. இரவியு மதியும்** விண்ணு
மிருநிலம் புனலுங் காற்றும்
உரகமார் பவன மெட்டுந்
திசையொளி யுருவ மானாய்
**அரவுமிழ் மணிகொள்சோதி**
யணியணா மலையுளானே
பரவுநின் பாதமல்லாற்
பரமநான் பற்றிலேனே. 7

பரமனே! சூரியன், சந்திரன், வானம், பூமி, நீர், காற்று, பாம்புகள் தங்கும் பாதலம், எண் திசைகள் இவற்றிலே ஒளி உருவமாக இருப்பவனே! பாம்புகள் உமிழ்கின்ற இரத்தினங்களால் ஒளிவீசும் அழகிய அண்ணாமலைப் பெருமானே! அடியேன் முன் நின்று போற்றும் உன் திருவடிகளைத் தவிர வேறு பற்றுக்கோடு உடையேன் அல்லேன்.

---

இறைவரது அட்டமூர்த்தங்கள். அரவுமிழ் மணிகொள் சோதி. அரவின் மணிபோல் ஒளிவீசும் சோதித் திருமேனி. உமிழ் – நாகங்கள். இரவில் தம்முடைய மணிகளை உமிழ்ந்து அவற்றின் ஒளியில் உலாவி இரை தேடி வந்து மீளவும் அம்மணிகளை உட்கொள்ளும்.

---

**616.** பார்த்தனுக் கன்று நல்கிப்
பாசுப தத்தை யீந்தாய்
நீர்த்ததும் புலாவு கங்கை
நெடுமுடி நிலாவ வைத்தாய்
ஆர்த்துவந் தீண்டு கொண்ட
லணியணா மலையு ளானே
தீர்த்தனே நின்றன் பாதத்
திறமலாற் றிறமி லேனே. 8

அருச்சுனனுக்கு அக்காலத்தில் விரும்பிப் பாசுபதப் படையை நல்கியவனே! நீர் ததும்புதல் மிகுங் கங்கையை நீண்ட சடையில் தங்குமாறு வைத்தவனே! ஆரவாரித்துக் கொண்டு ஒன்று சேரும் மேகங்கள் தங்கும் அழகிய அண்ணாமலைப் பெருமானே! தூயோனே! உன் பாதங்களின் தொடர்பன்றி அடியேன் வேறு தொடர்பு இல்லேன்.

---

கொண்டல் – கீழ்க்காற்றால் அடிக்கப்பட்டு வரும் மேகம்.
கோடை – மேற்குக்காற்று
தென்றல் – தெற்கு திசைக்காற்று
வாடை – வடக்கு திசைக்காற்று

---

**617.** பாலுநெய் முதலா மிக்க
பசுவிலைந் தாடு வானே
மாலுநான் முகனுங் கூடிக்
காண்கிலா வகையு னின்றாய்
ஆலுநீர் கொண்டல் பூக
**மணியணா மலையு ளானே**
வாலுடை விடையா யுன்றன்
மலரடி மறப்பி லேனே. 9

பசுவின் பஞ்சகவ்வியத்தில் நீராடுபவனே! திருமாலும் பிரமனும் ஒன்று சேர்ந்து முயன்றும் காண இயலாத வகையில் தீத்தம்பமாய் நின்றவனே! நீரை ஏந்திய மேகங்கள் வரையில் அசைகின்ற உச்சியை உடைய பாக்குமரங்கள் அழகு செய்யும் அண்ணாமலையில் உள்ளவனே! வெண்மையை உடைய காளை வாகனனே! உன்னுடைய மலர் போன்ற பாதங்களை அடியேன் மறவேன்.

618. இரக்கமொன் றியாது மில்லாக்
காலனைக் கடிந்த வெம்மான்
உரத்தினால் வரையை யூக்க
வொருவிர னுதியி னாலே
அரக்கனை நெரித்த வண்ணா
மலையுளா யமர ரேறே
சிரத்தினால் வணங்கி யேத்தித்
திருவடி மறப்பி லேனே. 10

இரக்கம் என்பது சிறிதும் இல்லாத கூற்றுவனைத் தண்டித்த பெருமானே! இராவணன் தன் வலிமையால் கயிலை மலையைப் பெயர்க்க, ஒரு விரல் நுனியினாலே அவனை நெரித்த அண்ணாமலைத் தேவர் தலைவனே! உன்னை அடியேன் தலையால் வணங்கி வாயால் துதித்து மனத்தால் உன் திருவடிகளை மறவாதேனாய் உள்ளேன்.

## திருநாவுக்கரசர் திருவண்ணாமலையைத் தொழுது வலங்கொண்டு மகிழ்ந்த நலம்

"செங்கண் விடையார் திருவண்ணா மலையைத் தொழுது வலங் கொண்டு
துங்க வரையின் மிசையேறித் தொண்டர் தொழும்புக் கெதிர் நிற்கும்
அங்கணரசைத் **தொழுதெழுந்து திளைத்துத் திருநாவுக்கரசர்**
**தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தா**"

– திருத்தொண்டர் புராணம் – 1577

இப்பாடலில் மூன்று முக்கிய செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

1. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பாடப்பட்ட இப்பாடலில் தெய்வச் சேக்கிழார் தொழுது, வலங்கொண்டு என்று இப்போது இலட்சக்கணக்கான மக்கள் வலம் வருகிற செய்தியைப் பதிவு செய்கிறார். அவர்தம் தொலை நோக்குப் பார்வையை எப்படி வருணிப்பது? அவர் தெய்வச் சேக்கிழார் அல்லவா?
2. அவர் திருநாவுக்கரசர் என்று சுவாமிகளின் திருநாமத்தை ஒரு சில பாடல்களிலேயே சொல்கிறார். அதிலும் இப்பாடல் ஒன்று.
3. வீடுபேற்றினுக்கும் மேலானது அடியார்களுடன் அண்ணாமலையை வலம் வருவது என்று சொல்கிறார்.

## இப்பாடலுக்கு விளக்கவுரை

அண்ணாமலையினை தூரத்தே தொழுதலும் அதனை வலங்கொள்ளுதலும் முறை. இன்றும் இவை லட்சக்கணக்கான மக்களால் செய்யப்படுகின்றன. பிரம விட்டுணுக்களின் இகல் தீர்க்கும் பொருட்டு பேரழல் தூணாக நின்ற சிவபெருமான், பின்னர் அவர் வேண்டுதலுக்கிரங்கி, மன்னுயிர்கள் மேல் வைத்த கருணையினால் மலையுருவாய் நின்றார் என்பதும், பின்னர் அதன் மேல் இலிங்க உருவாய் நின்றார் என்பதும் வரலாறு.

**துங்கம் – பெருமை ;** பெருமையாவது பெருந்தேவர்களாலும் முன் அறியப்படாமையும் பின்னர் இப்போது மக்களாலும் அறியப்பட்டு அருள் பெருகத்தந்து நிற்பதுமாம்.

தொழும்பு – அடிமைத்திறம், தொண்டர் தொழும்புக்கு எதிர் நிற்கும் – நாயனாரது அடிமைத் திறத்தின் பொருட்டு எதிர் தோன்றியருளும் அங்கணரசு – சிவபெருமான் அன்பின் மெய்ப்பாடுகள் – தொழுது திளைத்தல்.

**நிறைவடி – தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார்.** வீடு என்பது எல்லாப் பொருள்களுக்கும் மேலாய் அடையப்படுவது என்பதும், பிறவி தீது என்பதும் ஞானநூல்களின் முடிவு. ஆயின் இங்கு அப்பேரின்ப வீட்டின்பத்துக்கு மேலாகிய இன்பம், ஐம்புலன் நுகர்ச்சிக்கும் உட்படுவதாய் அடியார் கூட்டத்துடன் கலந்து அனுபவிக்கப்படுதலால் "தொழுது எழுந்து திளைத்த" போது திருநாவுக்கரசர் அவ்வின்ப நுகர்ச்சி கைகூடப்பெற்ற இப்பிறவியே அவ்வீட்டுக்கு மேலாயது என்ற உண்மையை அநுபூதி நிலையில் கைவரப் பெற்றனர் என்பது கருத்து. சாதித்தார் – சாதனத்தால் அடையும் பொருளாகிய – சாத்தியமாகிய – வீட்டின் மேலாம் பெருமையைச் சாதனமாகிய தொழுவதின் கண்ணே கூடப் பெற்றனர்.

மண்ணிலே வந்த பிறவியே யெனக்கு வாலிதாமின்பமாம் – 253
வாசமலர் மென் கழல் வணங்க வந்த பிறப்பை வணங்குவாம் – 1265

அருணையை நினைக்க முத்தி என்பர். இங்கு நினைத்தும், வந்தும், கண்டும், பாடியும், தொழுதும், எழுந்தும் திளைத்த நாயனார் முத்தியாகிய அவ்வீட்டினுக்கு மேலாம் பெருமையும், இன்பமும் அடைந்தனர். வீட்டினும் இவ்வாறான பிறப்பில் மிக ஆனந்தமும் இருக்கிறது.

திருநடனக் காட்சியின் போதும் நாயனாரின் மனநிலை "இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே" என்றவாறு இருந்திருக்கிறது.

## 64. திருவீழிமிழலை

**திருநேரிசை** **பதிக எண் : 64**

**619.** பூதத்தின் படையர் பாம்பின்
பூணினர் பூண நூலர்
சீதத்திற் பொலிந்த திங்கட்
கொழுந்தர்நஞ் சமுந்து கண்டர்
கீதத்திற் பொலிந்த வோசைக்
**கேள்வியர்** வேள்வி யாளர்
வேதத்தின் பொருளர் வீழி
மிழலையுள் விகிர்த நாரே. 1

பூதத்தின் படையினராய், பாம்பாகிய அணிகளை உடையவராய், பூணூலை அணிந்தவராய், குளிர்ச்சி மிகுந்த பிறையைச் சூடியவராய், விடம் பொருந்திய கழுத்தினராய், பாடலோடு பொருந்திய ஓசைச் சிறப்பை உடைய வேதம் ஓதுபவராய், வேள்வியை ஆள்பவராய் வேதத்தின் பொருளராய் வீழிமிழலையில் விகிர்தராம் இயல்புள்ள சிவபெருமான் விளங்குகிறார்.

---

"நூலது வேதம். நுண் சிகை ஞானமாம்" – திருமந்திரம்.
கேள்வி – கற்றலின்றிக் கேட்டல் கடனாதலின் மறையைக் கேள்வி என்றே வழங்குவர். சுருதி என்றும் சொல்லுவர். முனிவர் கடன் கேள்வி; தேவர் கடன் வேள்வி; தென்புலத்தார் கடன் – புத்திரரைப் பெறுதல்.

**620.** காலையிற் கதிர்செய் மேனி
கங்குலிற் கறுத்த கண்டர்
மாலையில் மதியஞ் சேர்ந்த
மகுடத்தர் மதுவும் பாலும்
ஆலையிற் பாகும் போல
வண்ணத்திட் டடியார்க் கென்றும்
வேலையி னமுதர் வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 2

காலை ஞாயிற்றின் ஒளியை உடைய திருமேனியராய், இரவு இருள் போலக் கறுத்த கழுத்தினராய், மாலையில் தோன்றும் பிறையணிந்த சடை முடியினராய், தேனும் பாலும் கரும்பின் பாகும் கடலில் தோன்றும் அமுதமும் போல அடியவர்களுக்கு இனிப்பை நல்குபவராய் வீழிமிழலையில் உள்ள விகிர்தனார் விளங்குகிறார்.

**621.** வருந்தின நெருந லின்றாய்
வழங்கின நாள ராற்கீழ்
இருந்துநன் பொருள்க ணால்வர்க்
கியம்பின ரிருவ ரோடும்
பொருந்தினர் பிரிந்து தம்பாற்
பொய்யரா மவர்கட் கென்றும்
விருந்தினர் திருந்து வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 3

நெருநல் – நேற்றைய நாள். இன்று – நிகழ்காலம். நாளர் – வருநாளர். எதிர்காலம்

நாளை, நேற்று, இன்று என்னும் முக்காலத்தும் இருப்பவராய், ஆலமரத்தின் கீழ் அமர்ந்து மேம்பட்ட செய்திகளை முனிவர் நால்வருக்கு இயம்பியவராய், திருமாலோடும் பிரமனோடும் பொருந்தியவராய், தம்மை மறந்து தம்மிடம் பொய்யாக நடந்து கொள்பவருக்குத் தம்மை உள்ளவாறு அறிய இயலாத புதியவராய் வீழிமிழலை விகிர்தர் விளங்குகிறார்.

**622. நிலையிலா வூர்**மூன் றொன்ற
நெருப்பரி காற்றம் பாகச்
சிலையுநா ணதுவு நாகங்
கொண்டவர் தேவர் தங்கள்
தலையினாற் றரித்த வென்புந்
தலைமயிர் வடமும் பூண்ட
விலையிலா வேடர் வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 4

நிலையிலாவூர் – திரிகின்ற ஊர் – திரிபுரம்

எங்கும் இயங்கிக் கொண்டிருந்த மும்மதில்களை அக்கினி, திருமால், வாயு இவர்களை உறுப்பாகக் கொண்ட அம்பு, மலையாகிய வில், பாம்பாகிய நாண் இவற்றைக் கொண்டு அழித்தவராய்த் தேவர்களின் தலைமாலையும், தலைமயிராலாகிய பஞ்சவடி என்னும் பூணூலும் அணிந்தவராய், யாரும் விலை மதித்தற்கில்லாத வேடத்தை உடையவராய் வீழிமிழலை விகிர்தனார் விளங்குகிறார்.

**623.** மறையிடைப் பொருளர் மொட்டின்
மலர்வழி வாசத் தேனர்
கறவிடைப் பாலி னெய்யர்
கரும்பினிற் கட்டி யாளர்
பிறையிடைப் பாம்பு கொன்றைப்
பிணையல்சேர் சடையு ணீரர்
விறகிடைத் தீயர் வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 5

இவை இறைவன் உயிரோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையும் சிவ சாதனங்களால் வெளிப்படும் நிலையும் குறித்தன.

வேதத்தின் விழுமிய பொருளாக உள்ளவராய், அரும்பு பூக்கும்போது வெளிப்படும் மணமுடைய தேனாகியவராய், கறக்கும் பசுவின் பாலில் கரந்து எங்கும் பரந்திருக்கும் நெய் போன்றவராய், கரும்புச்சாற்றின் கட்டி போன்று இனியராய், பிறை, பாம்பு, கொன்றை மாலை இவற்றைத் தரித்த சடையில் கங்கை நீரை ஏற்றவராய், விறகிடை மறைந்து பரந்திருக்கும் தீப்போலக் கரந்து எங்கும் பரந்தவராய் வீழிமிழலை விகிர்தனார் விளங்குகிறார்.

**624.** எண்ணகத் தில்லை யல்ல
ருளரல்ல ரிமவான் பெற்ற
பெண்ணகத் தரையர் காற்றிற்
பெருவலி யிருவ ராகி
மண்ணகத் தைவர் நீரி
னால்வர்தீ யதனில் மூவர்
விண்ணகத் தொருவர் வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 6

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி

எண்ணும் எண்ணத்திலே இல்லாதவரும் அல்லராய், உள்ளவரும் அல்லராய், பார்வதி பாகராய், விண்ணில் ஒலிப் பண்பினராய்க் காற்றில் ஒலி ஊறு என்ற இரு பண்பினராய், தீயிடை ஒலி ஊறு ஒளி என்ற மூன்று பண்பினராய், நீரிடை ஒலி ஊறு ஒளி சுவை என்ற நாற்பண்பினராய், மண்ணில் ஒலி ஊறு ஒளி சுவை நாற்றம் என்ற ஐந்து பண்பினராய் வீழிமிழலை விகிர்தனார் உள்ளார்.

**625.** சந்தணி கொங்கை யாளோர்
பங்கினார் சாம வேதர்
எந்தையு மெந்தை தந்தை
தந்தையு மாய வீசர்
அந்தியோ டுதய மந்த
ணாளரா **னெய்யால் வேட்கும்
வெந்தழ லுருவர்** வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 7

சந்தனத்தை அணிந்த தனங்களை உடைய பார்வதி பாகர், சாமவேதர், அடியேனுக்குத் தந்தையாராகவும் பாட்டனாராகவும் முப்பாட்டனாராகவும் உள்ளவர். காலைச் சந்தியிலும் மாலை அந்தியிலும் அந்தணாளர்கள் நெய்யால் வேள்வி செய்யும் விரும்பத்தக்க தீயின் உருவாயிருந்து அருச்சனையேற்று அருள்பவர் என இவ்வாறு வீழிமிழலை விகிர்தனார் உள்ளார்.

எந்தை – என்னப்பன்; எந்தை தந்தை – பாட்டன்; தந்தை தந்தை – பூட்டன்; அவனுக்குத் தந்தை – ஓட்டன். பாட்டி பூட்டி ஓட்டி – ஓட்டிக்கு மேல் உறவில்லை

## திருமால் கண்ணன் ஆன வரலாறு

**626.** நீற்றினை நிறையப் பூசி
நித்தலா யிரம்பூக் கொண்டு
ஏற்றுழி யொருநா ளொன்று
குறையக்கண் ணிறைய விட்ட
ஆற்றலுக் காழி நல்கி
யவன்கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 8

திருநீற்றை நன்கு அணிந்து நாடோறும் ஆயிரம் தாமரைப் பூக்களைக் கொண்டு அர்ச்சனை செய்த காலத்தில் ஒருநாள் ஒரு பூக்குறையவே அப்பூவின் தானத்தில் தன் கண்ணைப் பிடுங்கி அர்ச்சித்த முறுகிய பக்தியை உடைய திருமாலுக்குச் சக்கரத்தைக் கொடுத்து அவன் விண்ணிலிருந்து கொணர்ந்து நிறுவிய கோயிலில் வீற்றிருந்து வீழிமிழலை விகிர்தனார் எல்லோருக்கும் அருள் செய்கிறார்.

**627. சித்தி**செய் பவர்கட் கெல்லாஞ்
சேர்விடஞ் சென்று கூடப்
**பத்தி**செய் பவர்கள் பாவம்
பறிப்பவ ரிறப்பி லாளர்
**முத்தி**செய் பவள மேனி
முதிரொளி நீல கண்டர்
வித்தினின் முளையர் வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 9

சித்தியை விரும்புவார் தாம்தாம் சேர்விடஞ் சென்றுகூட வைத்தும் பத்தி செய்பவர்களின் பாவத்தை விலக்கியும் பக்குவர்க்கு முத்தி வழங்கியும் அருள்பவர் பவளம்போல் மேனியும் ஒளியின் முதிர்ந்த நீலகண்டரும் வித்தின் முளைபோல்வாருமாய் உள்ள திருவீழிமிழலை விகிர்தனாரே.

சித்தி, பத்தி, முத்தி மூன்றையும் அறிவித்தவாறு அறிவோமாக.

**628.** தருக்கின வரக்கன் றேரூர்
சாரதி தடை நிலாது
பொருப்பினை யெடுத்த தோளும்
பொன்முடி பத்தும் புண்ணாய்
நெரிப்புண்டங் கலறி மீண்டு
நினைந்தடி பரவத் தம்வாள்
விருப்பொடுங் கொடுப்பர் வீழி
மிழலையுள் விகிர்த னாரே. 10

செருக்குற்ற இராவணன் தன் தேரைச் செலுத்திய சாரதி தடுத்ததனை மனங்கொள்ளாது கயிலைமலையைப் பெயர்க்க முற்பட்ட இருபது தோள்களும் அழகிய பத்துத் தலைகளும் புண்ணாகுமாறு சிவபெருமானால் நெரிக்கப்பட்டு, அலறி, மறுபடி அவன் அன்போடு நினைந்து சிவபெருமான் திருவடிகளைத் துதிக்க, அவனுக்கு வீழிமிழலை விகிர்தனாராகிய அப்பெருமான் தம்முடைய வாளினை விருப்பத்தோடு வழங்கினார்.

## 65. திருச்சாய்க்காடு

**திருநேரிசை** **பதிக எண் : 65**

**629.** தோடுலா மலர்கள் தூவித்
தொழுதெழு மார்க்கண் டேயன்
வீடுநா ளணுகிற் றென்று
மெய்கொள்வான் வந்த காலன்
பாடுதான் செலலு மஞ்சிப்
பாதமே சரண மென்னச்
சாடினார் காலன் மாளச்
சாய்க்காடு மேவி னாரே. 1

காலனை உதைத்துச் சிவபூசைச் சீலனை வாழ்வித்த வரலாறு.

இதழ்களை உடைய பூக்களால் அர்ச்சித்துத் தொழுது எழுந்த மார்க்கண்டேயன் இறக்கும் நேரம் அணுகிவிட்டது என்று அவன் பொய்யான உடலிலிருந்து மெய்யான உயிரைப் பிரிந்து எடுத்துச் செல்ல வந்த கூற்றுவன் அவன் பக்கம் அணுக, அவன் பயந்து சிவபெருமானுடைய திருவடிகளே தனக்குச் சரணம் என்று சொன்ன அளவில் சாய்க்காட்டில் விரும்பி உறையும் பெருமானார் கூற்றுவன் மாயுமாறு உதைத்தார்.

| | |
|---|---|
| **630.** வடங்கெழு மலைமத் தாக<br>வானவ ரசுர ரோடு<br>கடைந்திட வெழுந்த நஞ்சங்<br>கண்டு பஃறேவ ரஞ்சி<br>அடைந்துநுஞ் சரண மென்ன<br>வருள்பெரி துடைய ராகித்<br>தடங்கட னஞ்ச முண்டார்<br>சாய்க்காடு மேவி னாரே. 2 | பாம்பாகிய கடை கயிறு கோக்கப்பட்ட மந்தர மலையை மத்தாகக் கொண்டு தேவர்கள் அசுரரோடு பாற்கடலைக் கடைய, எழுந்த விடத்தைக் கண்டு பல தேவர்களும் அஞ்சிச் சிவபெருமானை அடைந்து 'நும்மையே அடைக்கலம் அருளுபவராகக் கொண்டுள்ளோம்' என்று வேண்டப் பேரருள் உடையவராய் கடல் நஞ்சினை உண்ட பிரான் திருச்சாய்க்காட்டில் எழுந்தருளியுள்ளார். |
| **631.** அரணிலா வெளிய நாவ<br>லருநிழ லாக வீசன்<br>வரணிய லாகித் தன்வாய்<br>நூலினாற் பந்தர் செய்ய<br>முரணிலாச் சிலந்தி தன்னை<br>முடியுடை மன்ன னாக்கித்<br>தரணிதா னாள வைத்தார்<br>சாய்க்காடு மேவி னாரே. 3 | காவல் அற்ற வெட்ட வெளியில் வளர்ந்த வெண்ணாவல் மரத்தின் குறுகிய நிழலில் சிவபெருமான் இருந்தானாக, தான் இறைவனுடைய அடிமை என்ற கருத்தில் மாறுபாடில்லாத சிலந்தி அம்மரத்தைச் சூழ்ந்து தன் வாய் நூலினால் வெயிலைத் தடுத்து நிழலைச் செய்யும் பந்தரை அமைக்க அச்சிலந்தியை அடுத்த பிறப்பில் முடிசூடும் மன்னனாக்கி உலகை ஆளுமாறு செய்தார் சாய்க்காடு மேவிய சிவபெருமான். |
| **632.** அரும்பெருஞ் சிலைக்கை வேட<br>னாய்விறற் பார்த்தற் கன்று<br>உரம்பெரிய துடைமை காட்டி<br>யொள்ளமர் செய்து மீண்டே<br>வரம்பெரி துடைய னாக்கி<br>வாளமர் முகத்தின் மன்னுஞ்<br>சரம்பொலி தூணி யீந்தார்<br>சாய்க்காடு மேவி னாரே. 4 | பெரிய வில்லைக் கையில் ஏந்திய வேட உருவினராய், ஆற்றல் மிக்க அருச்சுனனுக்கு அவன் தவம் செய்து கொண்டு இருந்த காலத்தில் தம்முடைய பேராற்றலை வெளிப்படுத்தி அவனொடு போர்செய்து, பின்னர்ச் சாய்க்காடு மேவிய பெருமான் அவனைப் பெருமை மிகவும் உடையவனாக்கிப் போர் முகத்தில் நிலைபெற அம்புகள் பொலிகின்ற அம்புப் புட்டிலை அவனுக்கு வழங்கினார். |
| **633.** இந்திரன் பிரம னங்கி<br>யெண்வகை வசுக்க ளோடு<br>மந்திர மறைய தோதி<br>வானவர் வணங்கி வாழ்த்தத்<br>தந்திர மறியாத் தக்கன்<br>வேள்வியைத் தகர்த்த ஞான்று<br>சந்திரற் கருள்செய் தாருஞ்<br>சாய்க்காடு மேவி னாரே. 5 | இந்திரன், பிரமன், அக்கினி, எட்டு வசுக்கள் இவர்களோடு வேதமந்திரங்களை ஓதித் தேவர்கள் வணங்கி வாழ்த்த, எது செயற்பாலது என்பதனை அறியாத தக்கனுடைய வேள்வியை அழித்தபோது, சந்திரனுக்கு அருள் வழங்கினவர் சாய்க்காட்டுப் பெருமான். |

**634.** ஆமலி பாலு நெய்யு
மாட்டியர்ச் சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப்
பொறாததன் றாதை தாளைக்
கூர்மழு வொன்றா லோச்சக்
குளிர்சடைக் கொன்றை மாலைத்
தாமநற் சண்டிக் கீந்தார்
சாய்க்காடு மேவி னாரே. **6**

பசுவிலிருந்து வெளிப்படும் வெண்ணெய்ப் பிடிப்புடைய பாலை அபிடேகம் செய்து அர்ச்சனைகள் சொல்லிப் பூக்களில் மேம்பட்ட கொன்றை மலர்களைத் தான் வழிபட்ட இலிங்கத்திற்கு விசாரசருமனார் சூட்ட, அவற்றைப் பொறாது பூசனையை அழிக்க முற்பட்ட தன் தந்தையின் காலை அவன் கூரிய மழுவினால் வெட்டவே, அவரை சண்டீசன் ஆக்கித் தாம் சூடிய கொன்றை மாலையை அணியும் உரிமையை அவருக்கு வழங்கினார் சாய்க்காடு மேவிய பெருமான்.

---

**635.** மையறு மனத்த னாய
பகீரதன் வரங்கள் வேண்ட
**ஐயமி லமர** ரேத்த
வாயிர முகம தாகி
**வையக நெளியப்** பாய்வான்
வந்திழி கங்கை யென்னுந்
தையலைச் சடையி லேற்றார்
சாய்க்காடு மேவி னாரே. **7**

வையகம் நெளியக் கங்கை வந்தது. கங்கை நெளியச் சடை ஏற்றது.

குற்றமற்ற மனத்தை உடைய பகீரதன் வரங்களால் வேண்டிய அளவில், **சிவபெருமானுடைய பேராற்றலில் ஐயம் ஏதும் இல்லாத தேவர்கள் போற்ற**, ஆயிரம் கிளைகளை உடையதாகி இவ்வுலகமே நெளியுமாறு பாய்வதற்காக வானத்திலிருந்து இறங்கிய கங்கை என்ற பெண்ணை தம் சடையில் ஏற்றுள்ளவர் சாய்க்காடு மேவிய பெருமான்.

---

**636.** குவப்பெருந் தடக்கை வேடன்
கொடுஞ்சிலை யிறைச்சிப் பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பா னீக்கித்
**தூயவாய்க் கலச மாட்ட**
உவப்பெருங் குருதி சோர
வொருகணை யிடந்தங் கப்பத்
தவப்பெருந் **தேவு** செய்தார்
சாய்க்காடு மேவி னாரே. **8**

அன்புமிழ்வார் போல் விமலனார் முடிமேல் விட்டார்.
தேவு – சிவமாந்தன்மைப் பெருவாழ்வு.
தவச்சிறு வேடரைத் தவப் பெருந்தேவராகச் செய்தருளினார்.

திரண்ட பெரிய தோளினை உடைய திண்ணனார், ஒரு கையில் வளைந்த வில்லும், மறு கையில் இறைச்சிப் பாரமுந் தாங்கியிருந்தமையால் காளத்திப் பெருமானுக்கு முன்பு சூட்டப்பட்டிருந்த பூக்களைச் செந்நிறம் பொருந்திய தம் காற் செருப்பினால் நீக்கித் தன் தூய வாயாகிய கலசத்தில் மொண்டு வந்த நீரினால் அப்பெருமானுக்கு அபிடேகம் செய்து பூசிக்க, அதனை உவந்த பெருமான் தம் கண்ணில் உதிரம் ஒழுகச் செய்ய, ஓரம்பினால் தம் கண்ணைப் பெயர்த்துக் குருதி சோரும் கண்ணில் அப்பவே, திண்ணனாரை மிகப் பெரிய தெய்வமாகச் செய்துவிட்டார் சாய்க்காடு மேவிய பெருமான்.

637. நக்குலா மலர்பன் னூறு
கொண்டுநன் ஞானத் தோடு
மிக்கபூ சனைகள் செய்வான்
மென்மல ரொன்று காணா
தொக்குமென் மலர்க்க ணென்றங்
கொருகணை யிடந்து மப்பச்
சக்கரங் கொடுப்பர் போலுஞ்
சாய்க்காடு மேவி னாரே. 9

விரிந்து மணம் வீசும் ஆயிரம் தாமரைப் பூக்களைக் கொண்டு சிவபெருமானைப் பரம் பொருள் என்ற அறிவினோடு மேம்பட்ட பூசனை புரியும்போது மென்மையான பூ ஒன்று குறையத் தம்கண் தாமரைப் பூவினை ஒக்கும் என்று திருமால் தம் கண் ஒன்றை அம்பினால் பெயர்த்து மலராகக் கொண்டு அர்ச்சிக்க அதனால் மகிழ்ந்த அவர் வேண்டிய சக்கிராயுதத்தை அத்திருமாலுக்கு வழங்கினார் சாய்க்காட்டில் உறையும் சிவபெருமான்.

638. புயங்கமைஞ் ஞான்கும் பத்து
மாயகொண் டரக்க னோடிச்
சிவன்றிரு மலையைப் பேர்க்கத்
திருமலர்க் குழலி யஞ்ச
வியன்பெற வெய்தி வீழ
விரல்சிறி தூன்றி மீண்டே
சயம்பெற நாம மீந்தார்
சாய்க்காடு மேவி னாரே. 10

இருபது புயங்களும் பத்துத் தலைகளும் கொண்ட இராவணன் ஓடிச் சென்று சிவபெருமானுடைய கயிலைமலையைப் பெயர்க்க, அதனால் அழகிய மலர்களை அணிந்த கூந்தலை உடைய பார்வதி அஞ்ச, அப்போது அவன் வலிமை நிலை வேறுபாடெய்தி அவன் விழுமாறு சிவன் தன் விரலைச் சிறிது ஊன்றி, அவன் உளம் திருந்தி வழிபட்ட அளவில் அவன் வெற்றி பெறுமாறு அவனுக்கு இராவணன் என்ற பெயரை வழங்கினார் சாய்க்காட்டுப் பெருமான் ஆகிய சிவனார் புயங்கம் ஐந்நான்கும் – பாடம்.

## 66. திருநாகேச்சரம்

திருநேரிசை

பதிக எண் : 66

639. கச்சைசே ரரவர் போலுங்
கறையணி மிடறர் போலும்
**பிச்சைகொண் டுண்பர் போலும்**
பேரரு ளாளர் போலும்
இச்சையான் மலர்கள் தூவி
யிரவொடு பகலுந் தம்மை
**நச்சுவார்க் கினியர்** போலும்
நாகவீச் சரவ னாரே. 1

திருநாகேச்சுரத்துப் பெருமான், பாம்புக் கச்சை உடையவராய், நீலகண்டராய், பிச்சை எடுத்து உண்பவராய், பேரருளாளராய், விருப்போடு பூக்களைத் தூவி இரவும் பகலும் தம்மை விரும்பி வழிபடுபவர்களுக்கு இனியராய் உள்ளார்.

இக்கோயிலில் 12 தீர்த்தங்கள் உள்ளன. தென் மேற்கு மூலையில் உள்ள நாகராசர் கோவிலில் பாம்புக்கஞ்சுபவர்கள் பூசை செய்கிறார்கள்.

நச்சினார்க்கினியர் – இறந்தகாலம்

நச்சுவார்க்கினியர் – முக்காலம்

பிச்சை கொண்டு உண்ணுதல் – விடையேறி மாதொடும் சென்று ஊர்தொறும் சீவ போதமாகிய பிச்சையை ஏற்று சிவபோதமாகிய சிவ புண்ணியம் அருளும் உண்மை. பிச்சை எடுப்பது அவர் பசிக்காக அன்று. உயிர்களைக் காப்பது என்னும் பேரருளாண்மைக்காகப் பிச்சை எடுக்கிறார்.

640. வேடுறு வேட ராகி
விசயனோ டெய்தார் போலும்
காடுறு பதியர் போலுங்
கடிபுனற் கங்கை நங்கை
சேடெறி சடையர் போலுந்
தீவினை தீர்க்க வல்ல
**நாடறி புகழர்** போலும்
நாகவீச் சரவ னாரே. 2

முதல்வன் – மன்னவன்; உயிர் – மன்னன் மகன். ஐம்பொறிகள் – வேடர்

திருநாகேச்சுரத்துப் பெருமான் வேடன் உருவில் வந்து அருச்சுனனோடு அம்பு எய்து பொருதவராய், சுடுகாட்டை இருப்பிடமாகக் கொண்டவராய், நறுமணம் கமழும் கங்கையாகிய நங்கையை, பெருமையை வெளிப்படுத்தும் சடையில் அடக்கியவராய், தீவினையைத் தீர்க்க வல்லவராய், அதனால் உலகறிந்த புகழை உடையவராய் சிவபெருமான் உள்ளார்.

641. கற்றுணை வில்ல தாகக்
கடியரண் செற்றார் போலும்
பொற்றுணைப் பாதர் போலும்
புலியத ளுடையர் போலும்
சொற்றுணை மாலை கொண்டு
தொழுதெழு வார்கட் கெல்லாம்
நற்றுணை யாவர் போலும்
நாகவீச் சரவ னாரே 3

தெய்வச் சேக்கிழார் இத்தலத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். தமது ஊரான குன்றத்தூரிலும் ஒரு சிவாலயம் எழுப்பி திருநாகேச்சுரம் என்று பெயரிட்டார்.

திருநாகேச்சுரத்துப் பெருமான் மலையையே தமக்குத் துணையான வில்லாகக் கொண்டு காவல் அமைந்த முப்புரங்களை அம்பு எய்து அழித்தவராய், பொன்னுக்கு ஒப்பான திருவடிகளை உடையவராய், புலித்தோல் ஆடையராய், வேதத்துக்குச் சமமான பாமாலைகளைக் கொண்டு தொழுது வழிபடுபவர்க்கெல்லாம் மேம்பட்ட துணைவராவார்.

642. கொம்பனாள் பாகர் போலுங்
கொடியுடை விடையர் போலும்
செம்பொனா ருருவர் போலுந்
திகழ்திரு நீற்றர் போலும்
எம்பிரா னெம்மை யாளு
மிறைவனே யென்று தம்மை
நம்புவார்க் கன்பர் போலும்
நாகவீச் சரவ னாரே. 4

பார்வதி பாகராய், காளை எழுதிய கொடியினராய், செம்பொன் போன்ற நிறத்தினராய், விளங்கும் திருநீற்றினராய், எம் பெருமானே! எம்மை அடிமை கொள்ளும் இறைவனே! என்று தம்மை விரும்பும் அடியார்களுக்கு அன்பராய் உள்ளார்.

மூவர் பாடல் பெற்ற தலம்.

643. கடகரி யுரியர் போலுங்
கனன்மழு வாளர் போலும்
படவர வரையர் போலும்
பாரிடம் பலவுங் கூடிக்
குடமுடை முழவ மார்ப்பக்
கூளிகள் பாட நாளும்
நடநவி லடிகள் போலும்
நாகவீச் சரவ னாரே. 5

யானைத் தோலைப் போர்த்தவராய், கனல் வீசும் மழுப்படையை ஏந்தியவராய், படம் எடுக்கும் பாம்பினை இடையில் கட்டியவராய், பூதங்கள் பலவும் கூடிக் குடமுழாவை ஒலிப்பப் பேய்கள் பாட நாடோறும் கூத்து நிகழ்த்து தலைவராய் உள்ளார் திருநாகேச்சுரப் பெருமான்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **644.** பிறையுறு சடையர் போலும்<br>பெண்ணொரு பாகர் போலும்<br>மறையுறு மொழியர் போலும்<br>நான்மறை யவன்ற னோடும்<br>முறைமுறை யமரர் கூடி<br>முடிகளால் வணங்க நின்ற<br>நறவமர் கழலர் போலும்<br>நாகவீச் சரவ னாரே. 6 | திருநாகேச்சுரப் பெருமான் பிறை தங்கும் சடையினராய்ப் பார்வதிபாகராய், வேதங்களை ஓதுபவராய், திருமாலோடும் பிரமனோடும் தேவர்கள் முறையாகக் கூடித் தம் தலைகளால் வணங்கும் தேனைப் போல விரும்பத்தக்க திருவடிகளை உடையவராய் உள்ளார். |
| **645.** வஞ்சகர்க் கரியர் போலும்<br>மருவினோர்க் கெளியர் போலும்<br>குஞ்சரத் துரியர் போலுங்<br>கூற்றினைக் குமைப்பர் போலும்<br>விஞ்சைய ரிரிய வன்று<br>வேலைவாய் வந்தெ ழுந்த<br>நஞ்சணி மிடற்றர் போலும்<br>நாகவீச் சரவ னாரே. 7 | திருநாகேச்சுரத்துப் பெருமான் வஞ்சகர்களுக்கு அரியராய், தம்மை விரும்பிய அடியவர்களுக்கு எளியராய், யானைத் தோலைப் போர்த்தவராய், கூற்றுவனை ஒறுத்தவராய், தேவர்கள் அஞ்சி ஓடுமாறு கடலில் தோன்றிப் பரவிய விடம் அணி கண்டராய் உள்ளார். |
| **646.** போகமார் மோடி கொங்கை<br>புணர்தரு புனிதர் போலும்<br>வேகமார் விடையர் போலும்<br>வெண்பொடி யாடு மேனிப்<br>பாகமா லுடையர் போலும்<br>பருப்பத வில்லர் போலும்<br>நாகநா ணுடையர் போலும்<br>நாகவீச் சரவ னாரே. 8<br><br>மோடி – துர்க்கை | திருநாகேச்சுரத்துப் பெருமான் இன்பம் நிறைந்த காளியின் கொங்கைகளைத் தழுவுவதற்குத் தகுந்தவரைக் கொடுக்கும் புனிதராய், விரைந்து செல்லும் காளையை உடையவராய், வெண்ணீறணிந்த திருமேனியின் ஒருபாகமாகத் திருமாலை உடையவராய், மேருமலையாகிய வில்லையும், பாம்பாகிய நாணையும் உடையவராய் உள்ளார். |
| **647.** கொக்கரை தாளம் வீணை<br>பாணிசெய் குழகர் போலும்<br>அக்கரை யணிவர் போலும்<br>ஐந்தலை யரவர் போலும்<br>வக்கரை யமர்வர் போலும்<br>மாதரை மையல் செய்யும்<br>நக்கரை யுருவர் போலும்<br>நாகவீச் சரவ னாரே. 9 | திருநாகேச்சுரத்துப் பெருமான் கொக்கரை, தாளம், வீணை எனும் இவற்றின் தாளத்திற்கு ஏற்பக் கூத்து நிகழ்த்தும் இளையராய், சங்கு மணியை இடையில் அணிபவராய், ஐந்து தலைகளை உடைய பாம்பினை ஆட்டுபவராய், திருவக்கரைத் திருத்தலத்தில் உகந்தருளி யிருப்பவராய், பெண்களை மயக்கும் திகம்பரவடிவினராய் உள்ளார். |
| **648.** வின்மையாற் புரங்கண் மூன்றும்<br>வெந்தழல் விரித்தார் போலும்<br>தன்மையா லமரர் தங்க<br>டலைவர்க்குந் தலைவர் போலும்<br>வன்மையான் மலையெ டுத்தான்<br>வலியினைத் தொலைவித் தாங்கே<br>நன்மையா லளிப்பர் போலும்<br>நாகவீச் சரவ னாரே. 10 | திருநாகேச்சுரப் பெருமான் தம் வில்லாற்றலால் மும்மதில்களையும் தீக்கு இரையாக்கியவராய், தம் பண்பினாலே தேவர்களுடைய தலைவர்களுக்கும் தலைவராய், தன் உடல் வலிமையாலே கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணனது வலிமையைப் போக்கி அவ்விடத்திலேயே அவனுக்கு நன்மை ஏற்படும் வகையில் அருள் செய்தவராவார். |

## 67. திருக்கொண்டீச்சரம்

**(புன்புலால் ஆக்கை – ஐவரும், தொண்ணூற்று அறுவரும் மயக்கஞ் செய்து பேணிய பதி)**

**திருநேரிசை** **பதிக எண் : 67**

**649.** வரைகிலேன் புலன்க ளைந்தும்
வரைகிலாப் பிறவி மாயப்
புரையிலே யடங்கி நின்று
புறப்படும் வழியுங் காணேன்
அரையிலே மிளிரு நாகத்
தண்ணலே யஞ்ச லென்னாய்
திரையுலாம் பழன வேலித்
திருக்கொண்டீச் சரத்து ளானே. 1

அலைகள் உலாவுகின்ற வயல்களால் சூழப்பட்ட திருக்கொண்டீச்சரத்துப் பெருமானே! இடையில் பாம்பினை விளங்குமாறு அணிந்த அண்ணலே! ஐம்புல வேட்கையை நீக்கும் ஆற்றல் இல்லேனாய், நீக்குதற்கு அரிய பிறவியாகிய வஞ்சனைப் படுகுழியிலே விழுந்து அதனினின்றும் கரையேறும் வழியைக் காணேனாய் உள்ள அடியேனுக்கு அஞ்சேல் என்று அருள் செய்வாயாக!

**650.** தொண்டனேன் பிறந்து வாளா
தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே சுமந்து நைந்து
பேர்வதோர் வழியுங் காணேன்
அண்டனே யண்ட வாணா
வறிவனே யஞ்ச லென்னாய்
தெண்டிரைப் பழனஞ் சூழ்ந்த
திருக்கொண்டீச் சரத்து ளானே. 2

தேவனே! உலகங்களில் பரந்து எங்கும் கலந்து வாழ்பவனே! முக்காலமும் அறிபவனே! தெளிந்த அலைகளை உடைய வயல்களால் சூழப்பட்ட கொண்டீச்சரத்துப் பெருமானே! உன் அடியேன் பிறவி எடுத்தபின் வீணாகப் பழைய வினைப் பயனாகிய குழியில் விழுந்து இந்த உடம்பைச் சுமந்து வருந்தி இத்துயரிலிருந்து தப்பிப் பிறவாமையை அடைவதற்குரிய வழியைக் காணேனாய் அஞ்சுகின்றேன். அடியேனுக்கு அஞ்சேல் என்று அருளுவாயாக.

**651.** கால்கொடுத் தெலும்பு மூட்டிக்
கதிர்நரம் பாக்கை யார்த்துத்
தோலுடுத் துதிர மட்டித்
தொகுமயிர் மேய்ந்த கூரை
ஒலெடுத் துழைஞர் கூடி
யொளிப்பதற் கஞ்சு கின்றேன்
சேலுடைப் பழனஞ் சூழ்ந்த
திருக்கொண்டீச் சரத்து ளானே. 3

சேல் மீன்களை உடைய வயல்கள் சூழ்ந்த கொண்டீச்சரப் பெருமானே! இரண்டு கால்களைக் கொடுத்து எலும்புகளைப் பொருத்தி, விளங்கும் நரம்புகளை உடம்பினுள் இணைத்துத் தோலை மேலே போர்த்திக் குருதியை உள்ளே நிரப்பித் தொக்க மயிர்களால் வேய்ந்து அமைக்கப்பட்ட கூரையாகிய இவ்வுடம்பு நிலையாமையை அடையும்போது பக்கத்திலுள்ள உற்றார் உறவினர் ஒன்று கூடி இதன் பிரிவிற்கு வாய் விட்டுக் கதறிச் சுடுகாட்டில் குழி தோண்டிப் புதைப்பதற்கு அஞ்சுகின்றேன்.

| | |
|---|---|
| 652. கூட்டமா யைவர் வந்து<br>கொடுந்தொழிற் குணத்த ராகி<br>ஆட்டுவார்க் காற்ற கில்லே<br>னாடர வசைத்த கோவே<br>காட்டிடை யரங்க மாக<br>வாடிய கடவு ளேயோ<br>சேட்டிரும் பழன வேலித்<br>திருக்கொண்டீச் சரத்து ளானே. 4 | ஆடுகின்ற பாம்பை இடையில் இறுகக் கட்டிய தலைவனே! சுடுகாட்டைக் கூத்தாடும் அரங்கமாகக் கொண்டு ஆடும் கடவுளே! பெருமை பொருந்திய பரப்புடைய வயல்களால் சூழப்பட்ட கொண்டீச்சரப் பெருமானே! ஐம்பொறிகளும் கூடிவந்து கொடிய தொழில்கள் செய்வதனையே தம் பண்பாகக் கொண்டு என்னைத் தம் விருப்பப்படி செயற்படுத்த அவற்றின் தொல்லையைப் பொறுக்க இயலாதேனாய் உள்ளேன். |
| 653. பொக்கமாய் நின்ற பொல்லாப்<br>புழுமிடை முடைகொ ளாக்கை<br>தொக்குநின் றைவர் தொண்ணூற்<br>றறுவருந் துயக்க மெய்த<br>மிக்குநின் றிவர்கள் செய்யும்<br>வேதனைக் கலந்து போனேன்<br>செக்கரே திகழு மேனித்<br>திருக்கொண்டீச் சரத்து ளானே. 5 | செம்மேனி அம்மானாகிய கொண்டீச்சரப் பெருமானே! நிலைபேறின்றிப் பொய்யாக அமைந்த அழகற்ற புழுக்கள் மிகக் கலந்த தீ நாற்றமுடைய இவ்வுடலிலே இணைந்து இருக்கின்ற ஐம்பொறிகளும், **96** தத்துவ தாத்துவிகங்களும் அடியேன் சோர்வு எய்துமாறு செய்யும் கொடுஞ்செயல்களைத் தாங்க இயலாமல் துன்புற்றிருக்கிறேன். |
| 654. ஊனுலா முடைகொ ளாக்கை<br>யுடைகல மாவ தென்றும்<br>மானுலா மழைக்க ணார்தம்<br>வாழ்க்கையை மெய்யென் றெண்ணி<br>நானெலா மினைய கால<br>நண்ணிலே னெண்ண மில்லேன்<br>தேனுலாம் பொழில்கள் சூழ்ந்த<br>திருக்கொண்டீச் சரத்து ளானே. 6 | வண்டுகள் உலாவும் பொழில்கள் சூழ்ந்த திருக்கொண்டீச்சரத்துப் பெருமானே! புலாலால் அமைக்கப்பட்ட நாற்றம் வீசும் உடம்புப் பாறையில் மோதி உடையும் மரக்கலம் போல்வது என்னும் எண்ணம் இல்லாதேனாய், மான் கண்கள் போன்று மருளும் குளிர்ந்த கண்களையுடைய மகளிரோடு வாழும் வாழ்க்கையை உண்மையான வாழ்வு என்று எண்ணினேனாய், அடியேன் இதுகாறும் உன்னை அணுகாது வாழ்க்கையைப் பாழாக்கிவிட்டேன். |
| 655. சாணிரு மடங்கு நீண்ட<br>சழக்குடைப் பதிக்கு நாதர்<br>வாணிக **ரைவர் தொண்ணூற்**<br>**றறுவரு மயக்கஞ் செய்து**<br>**பேணிய பதியி னின்று**<br>பெயரும்போ தறிய மாட்டேன்<br>சேணுயர் மாட நீடு<br>திருக்கொண்டீச் சரத்து ளானே. 7<br><br>சழக்கு – பொய்; ஐவரும், தொண்ணூற்று அறுவரும் மயக்கஞ் செய்து பேணிய பதி. | வானளாவிய மாடங்கள் பலவாக உள்ள திருக்கொண்டீச்சரத்துப் பெருமானே! ஒரு முழம் நீளம் உடைய பொய்யான உடம்பாகிய ஊருக்கு ஒன்றைக் கொடுத்து ஒன்றை வாங்கும் வணிக நோக்கமுடைய ஐம்பொறிகளாகிய வாணிகரும், தொண்ணூற்றாறு தத்துவ தாத்துவிகங்களும் கலக்கத்தை உண்டாக்க அடியேன் விரும்பித் தங்கிய அவ்வூரிலிருந்து பிரிந்து போகக் கூடிய நாள் இன்னது என்பதனை அறியும் ஆற்றல் இல்லேனாய் உள்ளேன். |

உலகமானது மண், நீர், தீ, வளி, வான் என்னும் ஐம்பூதங்களின் சேர்க்கையால் ஆனது என்றும், உயிர்களின் உடலங்களும் அவ்வாறு ஆயினவே என்றும் சான்றோர்கள் உணர்ந்தனர்.

"அண்டத்திலுள்ளது பிண்டத்தில்" என்பது முதுமொழி. நமது முன்னோர்கள் அண்டத்தையும் பிண்டத்தையும் பகுத்துணர்ந்து அவற்றின் நிலைக்களமான அடிப்படைப் பொருள்கள் (தத்துவங்கள்) 36 உள்ளன எனத் தீர்மானித்தார்கள். உடம்பு (ஆன்ம) தத்துவம் 24. உணர்வு (வித்தியா) தத்துவம் 7. உணர்த்தும் (சிவ) தத்துவம் 5. இவற்றின் விவரங்களை தத்துவக் கட்டளை முதலிய நூல்களில் பரக்கக் காணலாம். இத்தத்துவ ஆராய்ச்சியின் ஒரு சிறு கூறே இக்காலத்திய விஞ்ஞான ஆராய்ச்சி என்க. விஞ்ஞானம் பருமை (தூல தத்துவ)ப் பொருள்களாகிய பூத, பௌதிக ஆராய்ச்சியோடு நிற்கிறது. சித்தாந்த சாத்திரங்களோ நுண்மை (சூட்சும தத்துவ)ப் பொருள்களையும் ஆராய்ந்தவை.

நம் முன்னோர் இத்தத்துவ ஆராய்ச்சியோடு நின்றுவிடாமல் அத்தத்துவங்களினூடே விரவியும் அவற்றைக் கடந்தும் உள்ள முழுமுதற் பொருளொன்று உள்ளதையும் உணர்ந்தார்கள். தத்துவங்கள் வாயிலாகவே தத்துவங் கடந்த பரம்பொருளை அறிந்தார்கள். தத்துவங்கள் சடப்பொருள்கள் (அறிவில்லாதவை); ஆகவே அவற்றிற்கு வேறாய் அவற்றை இயக்குகின்ற ஒரு சித்துப் பொருள் (அறிவுப் பொருள்) இருக்கவேண்டுமன்றோ! அதன் அருள் இயக்கத்தினாலேயே தத்துவங்கள் தொழிற்படுவதை அறிந்தனர். பூதங்களின் சேர்க்கையும் (உலக உடம்புகளின் படைப்பு), அவற்றின் இயக்கமும், உயிர்களினுடைய பொறி, புலன், அந்தக்கரணங்கள் முதலிய கருவிகள் தொழிற்படுதலும், இவற்றிற்கு மேற்பட்ட (வித்யா, சிவ) தத்துவங்கள் தொழிற்படுதலும் ஆகிய இவற்றிற்கெல்லாம் முழுமுதற் பரம்பொருளின் அருள் ஆற்றலே காரணமாகும். மேற்கூறிய தத்துவங்களையும் சாத்திர நூல்கள் பொதுவாக "மாயை" எனக் கூறுகின்றன. அம்மாயா காரியமே உலகமும் உடம்புகளும். ஆகவே **அண்ட பிண்டங்களுக்கு மாயை முதற் காரணம்; இறைவனது அருட்சக்தி துணைக் காரணம்; இறைவன் நிமித்த காரணம் என்று முன்னைய ஆன்றோர் முடிவு கட்டினர்.**

நிமித்த காரணமாகிய ஆண்டவன் மேற்கூறிய தத்துவங்களோடு ஒன்றாய், உடனாய், வேறாய் இருக்கின்றான். இம்முறையிலேயே ஆண்டவனை நமது முன்னோர் உணர்ந்து போற்றினர்.

## தத்துவங்கள் தோன்றும் முறை விளக்கம்




இவ்வாறு கேவலத்தில் ஆணவ மலத்தில் மூழ்கிக் கிடந்த ஆன்மாவுக்கு மாயையில் இருந்து குடிலை + மோகினி + மான் ஆகிய **36** தத்துவங்களால் தனு, கரண, புவனங்களைக் கொடுத்து, அவரவர் வினை பிராப்தம், அதாவது நுகர வேண்டிய வினைகளுக்கு ஏற்ப போகங்களையும் கூட்டுவித்து, இந்த பெத்த நிலையை, பிறவியை இறைவன் கொடுத்துள்ளான். இனிப் பிறவிப் பெருங்கடல் நீந்தப் பார்ப்போம். முக்தி அக்கரையில் உள்ளது.

**656.** பொய்ம்மறித் தியற்றி வைத்துப்
புலால்கமழ் பண்டம் பெய்து
பைம்மறித் தியற்றி யன்ன
பாங்கிலாக் குரம்பை நின்று
கைம்மறித் தனைய வாவி
கழியும்போ தறிய மாட்டேன்
செந்நெறிச் செலவு காணேன்
திருக்கொண்டீச் சரத்து ளானே. 8

திருக்கொண்டீச்சரத்துப் பெருமானே! பொய்களை வெளியே செல்லாதபடி தடுத்துத் திருப்பி அவற்றிற்கு வடிவுதந்து புலால் நாற்றம் வீசும் பொருள்களை அவற்றிற் பொருத்திப் பையை அழுக்குப் புலப்படாதபடி திருப்பி வைத்தாற்போன்று, எனக்குத் துணையாக உதவாத இந்த உடம்பிலிருந்து இது தகாது என்று கைகளால் குறிப்பிட்டுச் செல்வது போன்ற உயிர் நீங்கும் காலம் இது என்பதனை அறியும் ஆற்றல் இல்லேன். உயிருக்கு உறுதி தேடி நேரிய வழியில் செல்லும் ஞான சாரத்தையும் உணரேன்.

**657.** பாலனாய்க் கழிந்த நாளும்
பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளு
மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்தநாளுங்
குறிக்கோளி லாதுகெட்டேன்
சேலுலாம் பழனவேலித்
திருக்கொண்டீச் சரத்து ளானே. 9

அடியார்கள் மனனப் பாடல்

சேல்கள் உலாவும் வயல்கள் சூழ்ந்த கொண்டீச்சரத்துப் பெருமானே! சிறுவனாய் இருந்து கழிந்த பாலப் பருவத்தும், குளிர்ந்த மலர் மாலைகளை அணிந்த மகளிருடைய தொடர்பு உடையவனாய்க் கழிந்த வாலிபப் பருவத்தும், மெலிவோடு கிழப் பருவம் வரக் கோலை ஊன்றிக் கழிந்த முதுமைப் பருவத்தும் குறிக்கோள் ஏதும் இன்றி வாழ்ந்து கெட்டுப் போயினேன்.

**658.** விரைதரு கருமென் கூந்தல்
விளங்கிழை வேலொண் கண்ணாள்
வெருவர விலங்கைக் கோமான்
விலங்கலை யெடுத்த ஞான்று
பருவரை யனைய தோளு
முடிகளும் பாறி வீழத்
திருவிர லூன்றி னானே
திருக்கொண்டீச் சரத்து ளானே. 10

திருக்கொண்டீச்சரத்துப் பெருமான் நறுமணம் கமழும் கரிய மெல்லிய கூந்தலையும் விளங்குகின்ற அணிகலன்களையும் வேல் போன்ற ஒளிபொருந்திய கண்களையும் உடைய பார்வதி அஞ்சுமாறு இராவணன் மலையை எடுத்த போது அவனுடைய பருத்த மலை போன்ற தோள்களும் முடிகளும் சிதறி விழுமாறு அழகிய கால் விரலை ஊன்றினார்.

## 68. திருவாலங்காடு

ஆலமரம் காடாயிருந்து அதில் இறைவர் வெளிப்பட்டருளி நடஞ் செய்தமையால் இப்பெயர் பெற்றது. ஐம்பெருஞ்சபைகளுள் இரத்தினசபை. காளியின் பொருட்டு ஊர்த்துவ தாண்டவம். கார்க்கோடகன், முஞ்சிகேசர் என்ற பெயரில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் இருவரும் திருநடனம் கண்ட தலம். அம்மையார் தலையாலே நடந்த தலம் என்பதால் திருஞானசம்பந்தரும், சுந்தரரும் இதனை மிதித்தற்கஞ்சி தூரத்தேயிருந்து பாடினர்.

**திருநேரிசை** — **பதிக எண் : 68**

659. வெள்ளநீர்ச் சடையர் போலும்
விரும்புவார்க் கெளியர் போலும்
**உள்ளுளே யுருகி நின்றங்**
**குகப்பவர்க் கன்பர் போலும்**
கள்ளமே வினைக ளெல்லாங்
கரிசறுத் திடுவர் போலும்
அள்ளலம் பழனை மேய
வாலங்காட் டடிக ளாரே. 1

வயல்களில் சேறு நிரம்பிய பழையனூரை அடுத்த திருவாலங்காட்டுப் பெருமான் கங்கை சூடிய சடையினராய், விரும்புபவர்களுக்கு எளியராய், உள்ளத்திலே இறை தியானத்தால் நெகிழ்ச்சியுற்று மகிழும் அடியவர்பால் அன்பராய், நுகர்வோர் காரணம் உணராத வகையில் நுகர்விக்கும் இரு வினைகளின் மாசுகளைப் போக்குபவர் ஆவார்.

அள்ளல் – சேறு; கரிசு – துன்பம், குற்றம்.
செய்யாமை செய்து செயலறுப்பார்க்கு எதிர்வினை இல்லை. நுகர் வினையும் தீரும்.
தீருங்காற் செய்யும் புதுவினை இல்லாமையால் வினைமுற்றந் தீர்ந்து விடும்.

---

660. செந்தழ லுருவர் போலுஞ்
சினவிடை யுடையர் போலும்
வெந்தவெண் ணீறு கொண்டு
மெய்க்கணிந் திடுவர் போலும்
மந்தமாம் பொழிற்ப ழனை
மல்கிய வள்ளல் போலும்
அந்தமி லடிகள் போலு
மாலங்காட் டடிக ளாரே. 2

ஆலங்காட்டு அடிகளார் செந்தழல் நிறத்தவராய், கோபம் உடைய காளையை உடையவராய், வெந்த வெண்ணீற்றைத் திருமேனியில் அணிபவராய், தென்றல் வீசும் சோலைகளை உடைய பழையனூரில் உறையும் வள்ளலாராய்த் தமக்கு ஒரு காலத்தும் இறுதியில்லாத பெருமானாய் உள்ளார்.

---

661. கண்ணினாற் காம வேளைக்
கனலெழ விழிப்பர் போலும்
எண்ணிலார் புரங்கண் மூன்று
மெரியுணச் சிரிப்பர் போலும்
பண்ணினார் முழவ மோவாப்
பைம்பொழிற் பழனை மேய
அண்ணலா ரெம்மை யாளு
மாலங்காட் டடிக ளாரே. 3

நம்மை அடிமை கொள்ளும் ஆலங்காட்டுப் பெருமான் நெற்றிக்கண்ணால் கருவேள் ஆகிய மன்மதனைத் தீயினால் சாம்பலாகுமாறு விழித்தவரும், பகைவருடைய மும்மதில்களும் தீக்கு இரையாகுமாறு சிரித்தவரும், பண்ணுக்கு ஏற்ப ஒலிக்கும் முழவின் ஒலி நீங்காததும், சோலைகளை உடையதுமான பழையனூரில் விரும்பித்தங்கிய தலைவரும் ஆவார்.

பழையனூர்த் திரு ஆலவனம் –ஆலவனம் காடு.
அடுத்துள்ள பழையனூர் ஊர்.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **662.** காறிடு விடத்தை யுண்ட<br>கண்டரெண் டோளர் போலும்<br>தூறிடு சுடலை தன்னிற்<br>சுண்ணவெண் ணீற்றர் போலும்<br>கூறிடு முருவர் போலுங்<br>குளிர்பொழில் பழனை மேய<br>ஆறிடு சடையர் போலு<br>மாலங்காட் டடிக ளாரே. **4** | குளிர்ந்த சோலைகளை உடைய பழையனூரைச் சேர்ந்த, கங்கை சூடிய ஆலங்காட்டுப் பெருமான் கொல்லுகின்ற விடத்தை உண்ட கழுத்தினராய், எட்டுத் தோளினராய்த் தூறுகள் மண்டிக் கிடக்கும் சுடுகாட்டு வெள்ளிய சாம்பலைப் பூசியவராய்ப் பார்வதிக்காக இடப்பாகத்தைப் பிரித்துக் கொடுத்துப் பார்வதி பாகராம் உருவினராய் உள்ளார். |
| **663.** பார்த்தனோ டமர் பொருது<br>பத்திமை காண்பர் போலும்<br>கூர்த்தவா யம்பு கோத்துக்<br>குணங்களை யறிவர் போலும்<br>பேர்த்துமோ ராவ நாழி<br>யம்பொடுங் கொடுப்பர் போலும்<br>தீர்த்தமாம் பழனை மேய<br>திருவாலங் காட னாரே. **5** | பழையனூரையடுத்த, பாவத்தைப் போக்கும் தூய்மையை உடைய ஆலங்காட்டுப் பெருமான் பார்த்தனோடு போரிட்டு அவனுடைய பக்தியைக் கண்டவராய், கூர்மையான நுனியை உடைய அம்புகளைக் கோத்து அவன் குணங்களை அறிந்தவராய்ப் பின்னும் ஒரு அம்புப் புட்டிலை அத்திரத்தோடு அவனுக்கு வழங்கியவராய் உள்ளார். |
| **664.** வீட்டினார் சுடுவெண் ணீறு<br>மெய்க்கணிந் திடுவர் போலும்<br>காட்டினின் றாடல் பேணுங்<br>கருத்தினை யுடையர் போலுங்<br>பாட்டினார் முழவ மோவாப்<br>பைம்பொழிற் பழனை மேயார்<br>**ஆட்டினா ரரவந்** தன்னை<br>யாலங்காட் டடிக ளாரே. **6**<br><br>பாம்பாட்டிச் சித்தர் | ஆலங்காட்டுப் பெருமான் இறந்தவர்களைக் கொளுத்திய சாம்பலை உடலில் பூசியவராய்ச் சுடுகாட்டிலிருந்து கூத்தாடுதலை விரும்பும் கருத்தினை உடையவராய்ப் பாம்பினை ஆட்டுபவராய்ப் பாடுதலை உடையவராய், முழவின் ஒலி நீங்காததும், பசுமையான சோலைகளை உடையதுமான பழையனூரை விரும்பி உறைகின்றார். |
| **665.** தாளுடைச் செங் கமலத்<br>தடங்கொள்சே வடியர் போலும்<br>நாளுடைக் காலன் வீழ<br>வுதைசெய்த நம்பர் போலும்<br>கோளுடைப் பிறவி தீர்ப்பார்<br>குளிர்பொழிற் பழனை மேய<br>ஆளுடை யண்ணல் போலு<br>மாலங்காட் டடிக ளாரே. **7** | குளிர்ந்த சோலைகளை உடைய பழையனூரை அடுத்த ஆலங்காட்டுப் பெருமான் தண்டினை உடைய செங்கமலப்பூப் போன்ற பெருமை பொருந்திய திருவடிகளை உடையவராய், தனக்கு உயிர்வாழ வேண்டிய நாள்கள் இன்னும் பலவாக உடைய இயமன் அழியுமாறு உதைத்த, நம்மால் விரும்பப்படும் தலைவராய், யாம் வினைவயத்தாற் கொள்ளுதற்குரிய பிறவிகளைப் போக்குபவராய் நம்மை அடிமையாகக் கொள்ளும் தலைவராக உள்ளார். |

666. கூடினா **ருமை** தனோடே
குறிப்புடை வேடங் கொண்டு
கூடினார் **கங்கை** யாளைச்
சுவறிடு சடையர் போலும்
**பாடினார் சாம வேதம்**
பைம்பொழிற் பழனை மேயார்
**ஆடினார் காளி காண**
வாலங்காட் டடிக ளாரே. 8

பசுமையாகிய சோலைகளை உடைய பழையனூரை விரும்புபவராகிய ஆலங்காட்டுப் பெருமான் காதற் குறிப்புடைய வேடத்தைக் கொண்டு பார்வதி பாகராகிக் கங்கையைச் சூடி அதன் பெருக்கைக் குறைத்த சடையினராய்ச் சாமவேதம் பாடினவராய்க் காளிதேவி காண ஆடிய பெருமானாராவார்.

உமை, காளி, நங்கை என்று சத்திக்குண்டான மூன்று குறிப்புகள்.
ஆடினார் – இத்தலச் சிறப்பான ஊர்த்துவ தாண்டவம்.

667. வெற்றரைச் சமண ரோடு
விலையுடைக் கூறை போர்க்கும்
**ஒற்றரைச் சொற்கள்** கொள்ளார்
குணங்களை யுகப்பர் போலும்
பெற்றமே யுகந்தங் கேறும்
பெருமையை யுடையர் போலும்
அற்றங்க ளறிவர் போலு
மாலங்காட் டடிக ளாரே. 9

ஒற்றரைச் சொற்கள் – பயனிலாத சொற்கள்

ஆலங்காட்டு அடிகளார் ஆடையற்ற சமணர்களோடு விலைமதிப்புடைய ஆடைகளைப் போர்க்கும் புத்தர்கள் பேசும் ஒன்றும் பாதியுமாகிய சொற்களை ஏற்றுக் கொள்ளாத சிவனடியார்களுடைய குணங்களை விரும்பியவராய், விரும்பிக் காளையை வாகனமாகக் கொள்ளும் பெருமையை உடையவராய்ப் பிறர் அறியாதவாறு மறைத்துச் செய்யும் பாவங்களை அறியும் ஞானமுடையவராய் உள்ளார்.

668. மத்தனாய் மலையெ டுத்த
வரக்கனைக் கரத்தோ டொல்க
ஒத்தினார் திருவி ரலா
லூன்றியிட் டருள்வர் போலும்
பத்தர்தம் பாவந் தீர்க்கும்
பைம்பொழிற் பழனை மேய
அத்தனார் நம்மை யாள்வா
ராலங்காட் டடிக ளாரே. 10

ஆலங்காட்டுப் பெருமான் செருக்குற்றவனாய்க் கயிலையைப் பெயர்த்த இராவணனைக் கைகளோடு தளருமாறு விரலை ஊன்றிப் பின் அவனுக்கு அருள் செய்தவராய், பக்தர்களுடைய தீவினைகளைத் தீர்ப்பவராய், பசுமையான சோலைகளை உடைய பழையனூரை விரும்பி உறையும் தலைவராய் நம்மை அடிமை கொள்பவராய் உள்ளார்.

## 69. திருக்கோவலூர்வீரட்டம்

**திருநேரிசை** **பதிக எண் : 69**

669. செத்தையேன் சிதம்பன் நாயேன்
செடியனே னழுக்குப் பாயும்
பொத்தையே போற்றி நாளும்
புகலிட மறிய மாட்டேன்
எத்தைநான் பற்றி நிற்கே
னிருளற நோக்க மாட்டாக்
கொத்தையேன் செய்வ தென்னே
கோவல்வீ ரட்ட னீரே. 1

செத்தை – பயனற்ற குப்பை; சிதம்பன் – குணமிலி; செடியன் – பாவமுடையவன்; கொத்தை – குருடு.

திருக்கோவலூர் வீரட்டப்பெருமானே! காய்ந்த செத்தையைப் போன்ற பயனற்றவனாய், பண்பிலேனாய், நாய் போன்றேனாய், குற்றமுடையேனாய், முடைநாற்றம் உடையேனாய், அழுக்குப் பரவியிருக்கும் பொத்தலாகிய இவ்வுடம்பினையே விரும்பிப் பாதுகாத்து நாளும் சென்று சேரத்தக்க இடத்தை அறிய இயலாதேனாய், இருள்தீர மனத்தால் உணரமாட்டாத மனக் குருடன் ஆகிய அடியேன் எதனைப் பற்றுதலால் நிலைபேறுடையேனாவேன்? யாது செயற்பாலேன்?

| | |
|---|---|
| 670. தலைசுமந் திருகை நாற்றித்<br>**தரணிக்கே பொறைய தாகி**<br>நிலையிலா நெஞ்சந் தன்னு<br>ணித்தலு **மைவர் வேண்டும்**<br>**விலைகொடுத்** தறுக்க மாட்டேன்<br>வேண்டிற்றே வேண்டி யெய்த்தேன்<br>குலைகள்மாங் கனிகள் சிந்துங்<br>கோவல்வீ ரட்ட னீரே. 2<br>ஐவர் வேண்டும் விலை கொடுத்து புலன் வழிச் சென்று வேண்டிற்றே வேண்டி – அவை வேண்டியவற்றையே நானும் விரும்பி | குலைகளாக மாங்கனிகள் பழுத்து விழும் திருக்கோவலூர்ப் பெருமானே! தலையைச் சுமந்து கொண்டு, இருகைகளைத் தொங்கவிட்டுக் கொண்டு **பூமிக்குப் பாரமாய்** ஒரு நிலையில் நில்லாத உள்ளத்திலே நாள்தோறும் ஐம்பொறிகள் வேண்டுவனவற்றை வழங்கி அவற்றின் ஆதிக்கத்தை ஒழிக்க இயலாதேனாய் அவை வேண்டியவற்றையே யானும் விரும்பி இளைத்துப் பாழானேன். |
| 671. வழித்தலைப் படவு மாட்டேன்<br>வைகலுந் தூய்மை செய்து<br>பழித்திலேன் பாச மற்றுப்<br>பரமநான் பரவ மாட்டேன்<br>இழித்திலேன் பிறவி தன்னை<br>யென்னினைந் திருக்க மாட்டேன்<br>கொழித்துவந் தலைக்குந் தெண்ணீர்க்<br>கோவல்வீ ரட்ட னீரே. 3 | இருபுறமும் பல பொருள்களையும் அலைகளால் கரையில் சேர்க்கும் தெளிந்த நீரை உடைய திருக்கோவலூர்ப் பெருமானே! சான்றோர் குறிப்பிடும் நல்வழியில் செல்லாதேனாய், நாள்தோறும் உள்ளத்தைத் தூய்மையாக்கி உலகப்பற்றுக்களைப் பழித்து நீத்து மேம்பட்ட உன்னை முன்நின்று புகழமாட்டேனாய், இப்பிறப்பை இழிவாகக் கருதேனாய், யான் பொருத்தமில்லாத பலவற்றை நினைத்துக் காலத்தை வீணாகப் போக்குகிறேன். |
| 672. சாற்றுவ ரைவர் வந்து<br>சந்தித்த குடிமை வேண்டிக்<br>காற்றுவர் கனலப் பேசிக்<br>கண்செவி மூக்கு வாயுள்<br>ஆற்றுவ ரலந்து போனே<br>னாதியை யறிவொன் றின்றிக்<br>கூற்றுவர் வாயிற் பட்டேன்<br>கோவல்வீ ரட்ட னீரே. 4 | கோவலூர்ப் பெருமானே! இவ்வுயிர் இவ்வுடலாகிய வீட்டில் ஒண்டிக் குடித்தனம் செய்வதனால் இவ்வுடம்பில் ஆதிக்கம் செலுத்தும் உடைமையாளரைப் போல உள்ள ஐம்புலன்கள் தம் விருப்பத்திற்கு வேண்டியவற்றைக் குறிப்பிட்டுக் கண், செவி, மூக்கு, வாய், மெய் என்ற தமக்கு அவற்றை வழங்கவேண்டும் என்று கடுமையாகப்பேசி என்னை நடத்துவதால் வருந்தினேனாய் மூலமாயுள்ள உன்னை அறியும் அறிவு இன்றிக் கூற்றுவனுடைய வாயில் அகப்பட்டுள்ளேன். |
| 673. தடுத்திலே னைவர் தம்மைத்<br>தத்துவத் துயர்வு நீர்மைப்<br>படுத்திலேன் பரப்பு நோக்கிப்<br>பன்மலர்ப் பாத முற்ற<br>அடுத்திலேன் சிந்தை யார<br>வார்வலித் தன்பு திண்ணம்<br>கொடுத்திலேன் கொடிய வாநான்<br>கோவல்வீ ரட்ட னீரே. 5 | கோவலூர்ப் பெருமானே! ஐம்பொறிகளை அடக்கி மெய்ப்பொருளின் உண்மைத் தன்மையில் ஆன்மா ஈடுபடும்படி செய்யேனாய், எம் பெருமான் எங்கும் பரவியவனாய் இருப்பதனை மனங்கொண்டு, அவன் திருவடிகளில் சேர்ப்பிக்கப் பலமலர்களையும், பறித்துத் தொகுக்காதேனாய், மனம் நிறைய அன்புகொண்டு அவ்வன்பை எம்பெருமான் பால் செலுத்தேனாய் அடியேன் கொடியேனாகக் காலம் கழித்துவிட்டேனே! |

| பாடல் | | விளக்கம் |
| --- | --- | --- |
| 674. மாச்செய்த குரம்பை தன்னை<br>மண்ணிடை மயக்க மெய்து<br>நாச்செய்த நாலு மைந்து<br>நல்லன வாய்தல் வைத்துக்<br>காச்செய்த காயந் தன்னு<br>ணித்தலு மைவர் வந்து<br>கோச்செய்து குமைக்க வாற்றேன்<br>கோவல்வீ ரட்ட னீரே. | 6 | கோவலூர்ப் பெருமானே! ஐம்பெரும் பூதங்களால் அமைந்த உடம்பாகிய குடிசைக்கு உலகிலே நாவின் சுவையோடு ஒன்பது வாசல்களை அமைத்து உயிரைச் சுமக்கும் இவ்வுடலினுள்ளே நாள்தோறும் ஆட்சி செய்வனவாக, ஐம்பொறிகள் அழிவு செய்தலால் அவற்றின் தீங்குகளைப் பொறுக்க இயலாதேனாய் உள்ளேன். |
| 675. படைகள்போல் வினைகள் வந்து<br>பற்றியென் பக்க னின்றும்<br>விடகிலா வாத லாலே<br>விகிர்தனை விரும்பி யேத்தும்<br>இடையிலே னென்செய் கேனா<br>னிரப்பவர் தங்கட் கென்றும்<br>கொடையிலேன் கொள்வதே நான்<br>கோவல்வீ ரட்ட னீரே. | 7 | கோவலூர்ப் பெருமானே! வினைகள் என்னைத் தாக்கும் படைகளைப் போல வந்து பற்றி விடாமல் வருத்துவதால், என்னிடம் வந்து இரப்பவர்களுக்கு ஒருநாளும் ஒன்றையும் கொடுத்து அறியாதேனாய்ப் பிறரிடம் எதனையாவது பெறுவதனையே தொழிலாகக் கொண்டுள்ள அடியேன், பெருமானாராகிய உங்களை விரும்பித் துதிக்கும் வாய்ப்பினைப் பெறேனாய்ப் பயனற்ற வாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கிறேன். |
| 676. பிச்சிலேன் பிறவி தன்னைப்<br>பேதையேன் பிணக்க மென்னும்<br>துச்சுளே யழுந்தி வீழ்ந்து<br>துயரமே யிடும்பை தன்னுள்<br>அச்சனா யாதி மூர்த்திக்<br>கன்பனாய் வாழ மாட்டாக்<br>கொச்சையேன் செய்வ தென்னே<br>கோவல்வீ ரட்ட னீரே. | 8 | கோவலூர்ப் பெருமானே! அறிவற்றவனாகிய அடியேன் பிறவிப் பிணியை அடியோடு சிதறச் செய்து போக்கும் ஆற்றல் இல்லேன். உயிர் தங்கியிருக்கும் இவ்வுடலின் பற்றிலே அழுந்திக் கிடந்து துயரமே நுகர்தற்குரிய இவ்வுடம்பில் உள்ள உயிரை ஆதிமூர்த்தியாகிய உமக்கு அன்புடையதாகச் செய்து வாழமுடியாத அகக்கண் குருடனாகிய அடியேன் செயற்பாலது யாது உளது? |
| 677. நிணத்திடை யாக்கை பேணி<br>நியமஞ்செய் திருக்க மாட்டேன்<br>மணத்திடை யாட்டம் பேசி<br>மக்களே சுற்ற மென்னும்<br>கணத்திடை யாட்டப் பட்டுக்<br>காதலா லுன்னைப் பேணும்<br>குணத்திடை வாழ மாட்டேன்<br>கோவல்வீ ரட்ட னீரே. | 9 | கோவலூர்ப் பெருமானே! கொழுப்பை இணைத்து அமைக்கப்பட்ட இவ்வுடம்பினை விரும்பி நாடோறும் செய்யவேண்டிய வழிபாட்டுக் கடமைகளைச் செய்ய மாட்டேனாய், திருமணத்திலே விருப்பம் கொண்டு பேசி மக்கள் சுற்றம் என்னும் கூட்டத்திலே தடுமாறுமாறு செயற்படுத்தப்பட்டு அன்போடு உம்மை விரும்பும் நற்பண்போடு வாழமாட்டாதேன் ஆயினேன். |

678. விரிகட லிலங்கைக் கோனை
விரிகயி லாயத்தின் கீழ்
இருபது தோளும் பத்துச்
சிரங்களு நெரிய வூன்றிப்
பரவிய பாடல் கேட்டுப்
படைகொடுத் தருளிச் செய்தீர்
குரவொடு கோங்கு சூழ்ந்த
கோவல்வீ ரட்ட னீரே. 10

குரவ மரமும் கோங்க மரமும் சூழ்ந்த திருக்கோவலூர்ப் பெருமான், விரிந்த கடலால் சூழப்பட்ட இலங்கை நகர மன்னனான இராவணனைப் பரந்த கயிலை மலையின் கீழே அவனுடைய இருபது தோள்களும் பத்துத் தலைகளும் நெரியுமாறு கால்விரலை அழுத்திப் பின் அவன் முன் நின்று போற்றிய பாடல்களைக் கேட்டு அவனுக்கு வாட்படையைக் கொடுத்து அருளியவராவர்.

## 70. திருநனிபள்ளி

திருஞானசம்பந்தரின் தாயாரின் திருஅவதாரத்தலம். மூவர் பாடல் பெற்ற தலம். பிள்ளையார் பாடி பாலை நெய்தல் ஆனது. அதனையே பின்னர் கானகமும், வயலுமாக்கினார். கருவறையும், விமானமும் மிகப் பெரியன.

**திருநேரிசை** **பதிக எண் : 70**

679. முற்றுணை யாயி னானை
மூவர்க்கும் முதல்வன் றன்னைச்
சொற்றுணை யாயி னானைச்
சோதியை யாத ரித்து
உற்றுணர்ந் துருகி யூறி
யுள்கசி வுடைய வர்க்கு
நற்றுணை யாவர் போலு
நனிபள்ளி யடிக ளாரே. 1

நனிபள்ளிப் பெருமான் முதல் துணைவராய், மூவர்க்கும் தலைவராய், வேதத்துக்கு இணையானவராய்ச் சோதி வடிவமான தம்மை விரும்பி நன்கு உணர்ந்து உள்ளம் நெகிழ்ந்து உள்ளத்தில் பக்தி ஊறுதலால் நீராய் உருகிக் கண்ணீர் பெருக்கும் அடியவர்களுக்குப் பெரிய துணையாபவராய் உள்ளார்.

உற்று – உணர்ந்து – உருகி. ஊறி, உள் கசிவுடைய – தனித்தனி அன்புறுதலும், வளர்தலும் பெறும் மனநிலைகளைக் குறித்தன.

680. புலர்ந்தகால் பூவு நீருங்
கொண்டடி போற்ற மாட்டா
வலஞ்செய்து வாயி னூலால்
வட்டணைப் பந்தர் செய்த
சிலந்தியை யரைய னாக்கிச்
சீர்மைக ளருள வல்லார்
நலந்திகழ் சோலை சூழ்ந்த
நனிபள்ளி யடிக ளாரே. 2

அழகு விளங்கும் சோலைகளால் சூழப்பட்ட நனிபள்ளிப் பெருமான், பொழுது விடிந்த அளவில் பூவும் அபிடேக தீர்த்தமும் கொண்டு திருவடியை வணங்க இயலாத பிறப்பினதாகையாலே, பெருமானைச் சுற்றி வலமாக வந்து தன் வாயிலிருந்து சுரக்கும் நூலினாலே வட்டமாகப் பந்தலை அமைத்து வழிபட்ட சிலந்தியை அரசனாக்கி, எல்லா நலன்களையும் அருளிய ஆற்றலுடையவராவர்.

தன்னாலியன்ற வழிபாடு செய்ய வேண்டும் என்பதற்கு ஆதாரம் சிலந்தியின் சரிதை.

681. எண்பதும் பத்து மாறு
மென்னுளே யிருந்து மன்னிக்
கண்பழக் கொன்று மின்றிக்
கலக்கநா னலக்க ழிந்தேன்
செண்பகந் திகழும் புன்னை
செழுந்திரட் குரவம் வேங்கை
நண்புசெய் சோலை சூழ்ந்த
நனிபள்ளி யடிக ளாரே. 3

செண்பகம், விளங்கும் புன்னை, செழித்து ஓங்கி வளர்ந்த குரவம் வேங்கை இவை கலந்து காணப்படும் சோலைகள் சூழ்ந்த நனிபள்ளிப் பெருமானே! 96 தத்துவ தாத்துவிகங்களும் என் உடம்பினுள்ளே நிலையாக இருந்து சிறிதும் கண்ணோட்டமின்றி என்னைக் கலக்கவே அடியேன் துன்பத்தாற் சீர்குலைந்தேன்.

682. பண்ணினார் பாட லாகிப்
பழத்தினி லிரத மாகிக்
கண்ணினார் பார்வை யாகிக்
கருத்தொடு கற்ப மாகி
எண்ணினா ரெண்ண மாகி
யேழுல கனைத்து மாகி
நண்ணினார் வினைக டீர்ப்பார்
நனிபள்ளி யடிக ளாரே. 4

நனிபள்ளிப்பெருமான் பண் அமைந்த பாடலாகவும், பழத்தின் சுவையாகவும், கண்ணிற் பொருந்திய பார்வையாகவும் கருத்தில் அமைந்த காதல் நினைவாகவும், எண்ணுகின்றவருடைய எண்ணமாகவும் ஏழுலங்களாகவும் தம்மைச் சரணாக அடைந்த அடியவர்களுடைய வினைகளைப் போக்குபவ ராகவும் உள்ளார்.

---

பண்ணும் பாடலும் – பழமும் இரதமும் – கண்ணும் பார்வையும் – கருத்தும் கற்பமும் – எண்ணும் எண்ணமும் என்பன இறைவர் உயிர்களுடன் அத்துவிதமாகக் கலந்து நிற்கும் கலப்பினைக் குறிக்கும் உவமைகள். கருத்தும் கற்பமும் – கற்பிக்கப்படு பொருளும், கற்பிக்கும் பொருளும். கற்பம் – கற்பிப்பது.

683. துஞ்சிருள் காலை மாலை
**தொடர்ச்சி**யை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதி னாளு
மரனடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பாற்சோ றாக்கி
வழக்கிலா வமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார்
நனிபள்ளி யடிக ளாரே. 5

இருள் நீங்கும் காலையிலும் மாலையிலும் பெருமானுக்கும் தமக்கும் உள்ள உறவை மறக்காமல் திருவைந்தெழுத்தை ஓதினால், நாடோறும் சிவனடிக்கண் அன்பு பெருகி வளரும். அத்தகைய அன்பு வளருவதன் பேறாக செய்யும் வஞ்சனையால் பாற்சோற்றை நஞ்சுடன் கலந்து சமைத்து நல்ல வழக்கம் இல்லாத சமணர்கள் கொடுத்த அந்த நஞ்சை அமுதமாக்கி அருளினார் திருநனிபள்ளி யடிகள்.

---

"தொடர்ந்து" அஞ்செழுத்து இருள் துஞ்சும் காலையும், மாலையும் ஓத வேண்டும்.
"தொடர்ச்சி" என்ற தலைப்பிலே கட்டுரைகளே வெளிவந்திருப்பது அதன் முக்கியத்துவத்தைக் குறிக்கும்.
நஞ்சமுதாக்குதல் – அருள் வாழ்வுக்கு அகச்சான்று.

| | |
|---|---|
| **684.** செம்மலர்க் கமலத் தோனுந்<br>திருமுடி காண மாட்டான்<br>அம்மலர்ப் பாதங் காண்பா<br>னாழியா னகழ்ந்துங் காணான்<br>நின்மல னென்றங் கேத்து<br>நினைப்பினை யருளி நாளும்<br>நம்மல மறுப்பர் போலு<br>நனிபள்ளி யடிக ளாரே. 6 | செந்தாமரைப் பூவிலுள்ள பிரமன் திருமுடியைக் காணவும், சக்கரத்தை ஏந்திய திருமால் அகழ்ந்தும், தாமரை போன்ற பாதங்களைக் காணவும், இயலாதாராய்த் தம்மைக் களங்கமற்றவர் என்று போற்றும் எண்ணத்தை அவர்களுக்கு வழங்கி நம்முடைய களங்கங்களையும் போக்குபவர் நனிபள்ளி அடிகளார். |
| **685.** அரவத்தால் வரையைச் சுற்றி<br>யமரரோ டசுரர் கூடி<br>அரவித்துக் கடையத் தோன்று<br>மாலநஞ் சமுதா வுண்டார்<br>விரவித்தம் மடிய ராகி<br>வீடிலாத் தொண்டர் தம்மை<br>நரகத்தில் வீழ வொட்டார்<br>நனிபள்ளி யடிக ளாரே. 7 | மந்தரம் என்ற மத்திலே வாசுகி என்ற பாம்பைக் கடை கயிறாகச் சுற்றித் தேவரும் அசுரரும் பேரொலி செய்து கடைந்த போது தோன்றிய நஞ்சத்தை அமுதாக உண்டவராய், தம் அடியவருடன் கலந்து என்றும் தம் அடிமையில் நீங்குதல் இல்லாத அவர்களை நரகத்தில் வீழாமல் காப்பவராய் உள்ளார் நனிபள்ளி அடிகளார். |
| **686.** மண்ணுளே திரியும் போது<br>வருவன பலவுங் குற்றம்<br>புண்ணுளே புரைபு ரையன்<br>புழுப்பொதி பொள்ள லாக்கை.<br>........................................................ 8<br><br>x x x x x x x x x x x x 9 | இவ்வுலகினில் சுற்றித் திரியும் போது பல குற்றங்கள் ஏற்படுகின்றன. புண்ணினுள்ளே பல துவாரங்களை உடையதாய்ப் புழுக்கள் உள்ளே மறைந்திருக்கும் பலதுளைகளை உடைய உடம்பு.... |
| **687.** பத்துமோ ரிரட்டி தோளான்<br>பாரித்து மலையெ டுக்கப்<br>பத்துமோ ரிரட்டி தோள்கள்<br>படருடம் படர வூன்றிப்<br>பத்துவாய் கீதம் பாடப்<br>பரிந்தவற் கருள் கொடுத்தார்<br>பத்தர்தாம் பரவி யேத்து<br>நனிபள்ளிப் பரம னாரே. 10 | பக்தர்கள் முன் நின்று துதித்துப் புகழும் நனிபள்ளிப் பெருமான் இருபது தோள்களை உடைய இராவணன் தன் பெருமையைப் பரக்கச் சொல்லிக் கயிலை மலையைப் பெயர்க்க முற்பட, இருபது தோள்களை உடைய அவன் உடல் வருந்துமாறு திருவடி விரல் ஒன்றனை ஊன்றிப் பின் அவன் தன் பத்து வாய்களாலும் இசைப் பாடல்களைப் பாட அவனுக்கு அருள் செய்தவர் ஆவர். |

## 71. திருநாகைக்காரோணம்

ஆதிசேடன் பூசித்தலால் நாகை. புண்டரீக முனிவரின் காயத்தை (உடம்பை)த் தமது திருமேனியில் இறைவன் ஆரோகணம் (ஏற்றுக் கொள்ளுதல்) செய்து கொண்டதால் காயாரோகணம். அது மருவிக் காரோணமாயிற்று. மூவர் பாடல் உண்டு. அதிபத்த நாயனார் அவதாரத்தலம். சுந்தரர் பொன் பெற்ற தலம். முசுகுந்த விடங்கத்தலம். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை தல புராணம் உண்டு.

திருநேரிசை

பதிக எண் : 71

688. மனைவிதாய் தந்தை மக்கள்
மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி
வேதனைக் கிடமா காதே
கனையுமா கடல்சூழ் நாகை
மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகி
லுய்யலா நெஞ்சி னீரே. 1

மனமே! பெற்றோர், மனைவி, மக்கள் ஏனைய சுற்றத்தார் என்று சொல்லப்படும்தேக பந்துக்களின் பாசமாகிய வினையிலே அகப்பட்டு அழுந்தித் துயருக்கு இடமாகாமல் ஒலிக்கின்ற பெரிய கடல் ஒருபுறம் சூழ்ந்த நாகையில் உறையும் காரோணத்தானை விருப்புற்று நினைக்கும் ஆற்றல் உடையையாயின் துயர்களிலிருந்து தப்பி உய்யலாம்.

689. வையனை வைய முண்ட
மாலங்கந் தோண்மேற் கொண்ட
செய்யனைச் செய்ய போதிற்
றிசைமுகன் சிரமொன் றேந்தும்
கையனைக் கடல்சூழ் நாகைக்
காரோணங் கோயில் கொண்ட
ஐயனை நினைந்த நெஞ்சே
யம்மநா முய்ந்த வாறே. 2

எருதை ஊர்பவனாய், ஊழிக்காலத்தே உலகத்தை வயிற்றில் கொண்ட திருமாலுடைய எலும்புருவான கங்காளத்தை தன் தோள் மேல் கொண்ட செந்நிறத்தனாய், செந்தாமரையில் தங்கிய பிரமனுடைய மண்டையோடு ஒன்றனை ஏந்திய கையனாய் ஒருபுறம் கடலால் சூழப்பட்ட நாகைக் காரோணத்தை இருப்பிடமாகக் கொண்ட தலைவனை விருப்புற்று நினைத்த மனமே! நாம் துயரங்களிலிருந்து தப்பிப் பிழைத்தவாறு வியக்கத்தகும்.

690. நிருத்தனை நிமலன் றன்னை
நீணிலம் விண்ணின் மிக்க
விருத்தனை வேத வித்தை
விளைபொருண் மூல மான
கருத்தனைக் கடல்சூழ் நாகைக்
காரோணங் கோயில் கொண்ட
ஒருத்தனை யுணர்த லானா
முய்ந்தவா நெஞ்சி னீரே. 3

மனமே! கூத்தனாய், தூயனாய், நீண்ட இவ்வுலகம் தேவருலகம் ஆகியவற்றிற்கு மேம்பட்டவனாய், வேதங்களால் காரணன் என்று கூறப்படுபவனாய், தோன்றும் பொருளை யெல்லாம் படைப்பவனாய் உள்ள நாகைக்காரோணத்து ஒப்பற்ற பெருமானைப் பரம்பொருள் என்று உணர்வதால் நாம் உய்ந்தமை இருந்தவாறென்னே.

| | |
|---|---|
| **691.** மண்டனை யிரந்து கொண்ட<br>மாயனோ டசுரர் வானோர்<br>தெண்டிரை கடைய வந்த<br>தீவிடந் தன்னை யுண்ட<br>கண்டனைக் கடல்சூழ் நாகைக்<br>காரோணங் கோயில் கொண்ட<br>அண்டனை நினைந்து நெஞ்சே<br>யம்மநா முய்ந்த வாறே. 4<br>———<br>மண்தனை இரந்து – மாவலியிடம் திருமால் மண் கேட்டல். | உலகங்களை மாவலியிடத்துத் தானமாகப் பெற்ற திருமாலோடு அசுரர்களும் தேவர்களும் தெளிந்த அலைகளை உடைய பாற்கடலைக் கடைய அப்பொழுது எழுந்த கொடிய நஞ்சினை உண்ட கழுத்தை உடையவனாய் உள்ள காரோணப் பெருமானை நினைந்த நெஞ்சமே! நாம் உய்ந்தவாறு வியக்கத்தகும். |
| **692.** நிறைபுன லணிந்த சென்னி<br>நீணிலா வரவஞ் சூடி<br>மறையொலி பாடி யாடன்<br>மயானத்து மகிழ்ந்த மைந்தன்<br>கறைமலி கடல்சூழ் நாகைக்<br>காரோணங் கோயில் கொண்ட<br>இறைவனை நாளு மேத்த<br>விடும்பையோ யின்ப மாமே. 5 | கங்கையை அணிந்த தலையிலே பிறையையும் பாம்பையும் சூடி, வேதங்களைப் பாடிக் கொண்டு, சுடுகாட்டில் கூத்தாடுதலை விரும்பிய ஆற்றல் உடையவனாய், கரு நிறம் மிக்க கடல் சூழ்ந்த திருநாகைக்காரோணம் கோயிலாகக் கொண்ட இறைவனை நாள்தோறும் துதித்தலால் துன்பங்கள் நீங்க இன்பங்கள் மிகும். |
| **693.** வெம்பனைக் கருங்கை யானை<br>வெருவவன் றுரிவை போர்த்த<br>கம்பனைக் காலற் காய்ந்த<br>காலனை ஞால மேத்தும்<br>உம்பனை யும்பர் கோனை<br>நாகைக்கா ரோண மேய<br>செம்பொனை நினைந்த நெஞ்சே<br>திண்ணநா முய்ந்த வாறே. 6 | கொடிய பனைமரம் போன்ற துதிக்கையை உடைய யானை அஞ்சுமாறு அதன் தோலை உரித்துப் போர்த்த ஏகம்பனாய், கூற்றுவனை உதைத்த காலை உடையவனாய், உலகங்கள் துதிக்கும் தேவனாய், தேவர்கள் தலைவனாய், நாகைக் காரோணத்தில் விரும்பி உறையும் செம்பொன் மேனியனை நினைந்த நெஞ்சே! நாம் துயரங்களிலிருந்து விடுபட்டமை நிச்சயமாயிற்று. |
| **694.** வெங்கடுங் கானத் தேழை<br>தன்னொடும் வேட னாய்ச்சென்<br>றங்கமர் மலைந்து பார்த்தற்<br>கடுசர மருளி னானை<br>மங்கைமா ராட லோவா<br>மன்னுகா ரோணத் தானைக்<br>கங்குலும் பகலுங் காணப்<br>பெற்றுநாங் களித்த வாறே. 7 | வெப்பம் மிக்க கொடிய காட்டிலே, பார்வதியோடு வேடன் வடிவில் சென்று, அங்கு அருச்சுனனோடு போரிட்டு அவனுக்குப் பாசுபதாத்திரத்தை வழங்கியவனாய், பெண்களுடைய கூத்து நீங்காமல் நிலைபெற்ற காரோணத்தில் உள்ள பெருமானை இரவும் பகலும் தரிசிக்கப் பெற்று நாம் களிப்புற்றவாறென்னே! |

695. தெற்றினர் புரங்கண் மூன்றுந்
தீயினில் விழவோ ரம்பால்
செற்றவெஞ் சிலையர் வஞ்சர்
சிந்தையுட் சேர்வி லாதார்
கற்றவர் பயிலு நாகைக்
காரோணங் கருதி யேத்தப்
**பெற்றவர் பிறந்தார் மற்றுப்**
**பிறந்தவர் பிறந்தி லாரே.** 8

மாறுபட்ட அசுரர்களின் மும்மதில்களும் தீயினில் எரிந்து சாம்பலாகுமாறு ஓர் அம்பால் அழித்த கொடிய வில்லை ஏந்தியவராய், வஞ்சனை உடையவர் உள்ளத்தில் பொருந்தாதவராய் உள்ள பெருமானாருடைய திருவடிகளை வணங்கக் கற்றவர் பலராக உள்ள நாகைக்காரோணத்தை விரும்பிப் புகழும் பேறு பெற்றவர் பிறவிப் பயனடைந்தவராவர். மற்றவர்கள் பிறந்தும் பிறவாதாரே ஆவார்.

x x x x x x x x x x x x 9

696. கருமலி கடல்சூழ் நாகைக்
காரோணர்க மல பாதத்
தொருவிர னுதிக்கு நில்லா
தொண்டிற லரளக்க னுக்கான்
இருதிற மங்கை மாரோ
டெம்பிரான் செம்பொனாகம்
திருவடி தரித்து நிற்கத்
திண்ணநா முய்ந்த வாறே. 10

மனமே! கருமைமிக்க கடல் ஒருபுறம் சேர்ந்த நாகைக்காரோணருடைய தாமரை போன்ற பாதத்து ஒருவிரல் நுனியைத் தாங்கமுடியாமல் சிறந்த திறமையை உடைய அழியாவரம் பெற்ற இராவணன் சிதறிவிட்டான். கங்கை, பார்வதி என்ற இரண்டு பெண்களோடு சிவபெருமானுடைய சிவந்த பொன் போன்ற உடம்பைத் தாங்கி நிற்கும் திருவடிகளையே நாம் நம்மிடத்தில் தாங்கிக் கொண்டிருப்பதால் நாம் துயரங்களிலிருந்து விடுபட்டுய்ந்தோம். இஃது என்ன அற்புதம்! இறைவரது பரத்துவத்தை நகைச்சுவையாக எடுத்துக் கூறியது.

## 72. திருஇன்னம்பர்

திருநேரிசை

பதிக எண் : 72

697. விண்ணவர் மகுட கோடி
மிடைந்தசே வடியர் போலும்
பெண்ணொரு பாகர் போலும்
பேடலி யாணர் போலும்
வண்ணமா லயனுங் காணா
மால்வரை யெரியர் போலும்
எண்ணுரு வநேகர் போலும்
இன்னம்ப ரீச னாரே. 1

இன்னம்பரில் உறைந்து எல்லோரையும் ஆளும் தலைவர், தேவர்களுடைய பல மகுடங்களும் நெருங்கிக் கலந்த திருவடிகளை உடையவர். பார்வதி பாகர். ஆண் பெண் அலி ஆனவர். நல்ல அழகுடைய திருமாலும், பிரமனும் அடிமுடி காணாத வகையில் பெரிய தீ மலையாகக் காட்சி வழங்கியவர். அட்டமூர்த்தியாயும் அவற்றினும் பல வடிவத்தராயும் உள்ளவர்.

---

திருவடியை முடியிற்பட வணங்கும் அமரர் தொகைக்கு அளவில்லை.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **698.** பன்னிய மறையர் போலும்<br>பாம்பரை யுடையர் போலும்<br>துன்னிய சடையர் போலுந்<br>தூமதி மத்தர் போலும்<br>மன்னிய மழுவர் போலும்<br>மாதிட மகிழ்வர் போலும்<br>என்னையு முடையர் போலும்<br>இன்னம்ப ரீச னாரே. 2 | இன்னம்பர் ஈசர் வேதத்தை ஒலித்து, இடையில் ஆடைமேல் பாம்பை இறுகக் கட்டி, செறிந்த சடையில் பிறையும் ஊமத்தம் பூவும் அணிந்து, மழுப்படை தாங்கிய கையராய், பார்வதி பாகராய், அடியேனையும் அடியவனாக உடையவர். |
| **699.** மறியொரு கையர் போலும்<br>மாதுமை யுடையர் போலும்<br>பறிதலைப் பிறவி நீக்கிப்<br>பணிகொள வல்லர் போலும்<br>செறிவுடை யங்க மாலை<br>சேர்திரு வுருவர் போலும்<br>எறிபுனற் சடையர் போலும்<br>இன்னம்ப ரீச னாரே. 3 | ஒரு கையில் மான்கன்றை ஏந்திப் பார்வதி பாகராய், தலைமயிரை வலிந்து பிடுங்கிக் கொள்ளும் சமணத் தோற்றத்தை நீக்கி, அடியேனைத் தம் திருத்தொண்டில் ஈடுபடுத்த வல்லவராய், செறிந்த தலைமாலையை அணிந்த வடிவினராய், அலைவீசும் கங்கையைச் சடையில் தரித்தவராய் உள்ளார் இன்னம்பர் ஈசன். |
| **700.** விடமலி கண்டர் போலும்<br>வேள்வியை யழிப்பர் போலும்<br>கடவுநல் விடையர் போலுங்<br>காலனைக் காய்வர் போலும்<br>படமலி யரவர் போலும்<br>பாய்புலித் தோலர் போலும்<br>இடர்களைந் தருள்வர் போலும்<br>இன்னம்ப ரீச னாரே. 4 | இன்னம்பர் ஈசன், நஞ்சு பொருந்திய கழுத்தினராய், தக்கன் வேள்வியை அழித்தவராய், பெரிய காளையைச் செலுத்துபவராய், கூற்றுவனைக் கோபித்தவராய், படம் எடுக்கும் பாம்பினை உடையவராய், பரவிய புலித்தோலை உடுத்தவராய், அடியார்களுடைய துன்பங்களைப் போக்கி அருள் செய்பவர் ஆவர். |
| **701.** அளிமலர்க் கொன்றை துன்று<br>மவிர்சடை யுடையர் போலும்<br>களிமயிற் சாய லோடுங்<br>காமனை விழிப்பர் போலும்<br>வெளிவள ருருவர் போலும்<br>வெண்பொடி யணிவர் போலும்<br>எளியவ ரடியர்க் கென்றும்<br>இன்னம்ப ரீச னாரே. 5 | இன்னம்பர் ஈசன் வண்டுகள் மொய்க்கும் கொன்றைப்பூமாலை பொருந்திய, ஒளிவீசும் சடையை உடையவராய், மகிழ்ச்சியுறும் மயில் போன்ற மென்மையை உடைய பார்வதி பாகராய், மன்மதனைச் சாம்பலாகுமாறு விழித்தவராய், எல்லா அண்டங்களும் நிறைந்த விசுவரூபம் எடுத்தவராய், திருநீற்றை அணிபவராய், அடியவர்கள் எப்பொழுதும் வணங்கி வேண்டுவதற்கு எளியவராய் உள்ளார். |

| | |
|---|---|
| **702.** கணையமர் சிலையர் போலுங்<br>கரியுரி யுடையர் போலும்<br>துணையமர் பெண்ணர் போலுந்<br>தூமணிக் குன்றர் போலும்<br>அணையுடை யடியர் கூடி<br>யன்பொடு மலர்கள் தூவும்<br>இணையடி யுடையர் போலும்<br>இன்னம்ப ரீச னாரே. **6** | இன்னம்பர் ஈசன் அம்பு பொருந்திய வில்லினராய், யானைத்தோற் போர்வை யினராய், பார்வதி பாகராய், தூய மாணிக்கக் குன்றம் போல்பவராய், உள்ளத்தில் தியானம் செய்யும் அடியார்கள் கூடி அன்பொடு மலர்களைத் தூவும் திருவடி இணையை உடையவருமாவார். |
| **703.** பொருப்பமர் புயத்தர் போலும்<br>புனலணி சடையர் போலும்<br>மருப்பிள வாமை தாங்கு<br>மார்பில்வெண் ணூலர் போலும்<br>**உருத்திர மூர்த்தி** போலும்<br>உணர்விலார் புரங்கண் மூன்றும்<br>எரித்திடு சிலையர் போலும்<br>இன்னம்ப ரீச னாரே. **7** | இன்னம்பர் ஈசன் மலையை ஒத்த தோள்களை உடையவராய், கங்கையை அணிந்த சடையினராய், பன்றியின் கொம்பு, இளைய ஆமைஓடு எனும் இவற்றை அணிந்த மார்பில் வெண்ணூலைப் பூண்டவராய், உருத்திர மூர்த்தியாய், நல் உணர்வு இல்லாத அசுரர்களுடைய மும்மதில்களையும் தீக்கு இரையாக்கிய மேருமலையாகிய வில்லை உடையவருமாவார். |

மகா சங்கார காரணனாகிய பரமசிவன். இவர் மகாருத்திரன். மூவரில் ஒருவரான குணிருத்திரன் அல்லர்.

| | |
|---|---|
| **704.** காடிட முடையர் போலுங்<br>கடிகுரல் விளியர் போலும்<br>வேடுரு வுடையர் போலும்<br>வெண்மதிக் கொழுந்தர் போலும்<br>கோடலர் வன்னி தும்பை<br>கொக்கிற கலர்ந்த கொன்றை<br>ஏடமர் சடையர் போலும்<br>இன்னம்ப ரீச னாரே. **8** | இன்னம்பர் ஈசன், சுடுகாட்டைத் தங்கும் இடமாகக் கொண்டவராய், கடுமையான குரலால் ஒலி உண்டாக்குபவராய், அருச்சுனனுக்காக வேடர் வடிவு எடுத்தவராய், பிறை சூடியவராய், கிளைகளில் மலர்கின்ற கொன்றைப் பூவின் இதழ்கள், தும்பை, வன்னி, கொக்கின் இறகு இவை அணியப்பட்ட சடையை உடையவராய் உள்ளார். |
| **705.** காறிடு விடத்தை யுண்ட<br>கண்டரெண் டோளர் போலும்<br>நீறுடை யுருவர் போலும்<br>நினைப்பினை யரியர் போலும்<br>பாறுடைத் தலைகை யேந்திப்<br>பலிதிரிந் துண்பர் போலும்<br>ஏறுடைக் கொடியர் போலும்<br>இன்னம்ப ரீச னாரே. **9** | இன்னம்பர் ஈசன், கைப்புச்சுவையை உடைய நஞ்சினை உண்ட கழுத்தினராய், எட்டுத் தோள்களை உடையவராய், திருநீறு அணிந்த வடிவினராய், நினைப்பதற்கும் எட்டாதவராய், பருந்துகள் நெருங்கும் மண்டை ஓட்டைக் கையில் ஏந்திப் பல இடங்களிலும் திரிந்து பிச்சை ஏற்று உண்பவராய், காளை வடிவம் எழுதிய கொடியினராய் உள்ளார். |

706. ஆர்த்தெழு மிலங்கைக் கோனை
யருவரை யடர்ப்பர் போலும்
பார்த்தனோ டமர் பொருது
படைகொடுத் தருள்வர் போலும்
தீர்த்தமாங் கங்கை தன்னைத்
திருச்சடை வைப்பர் போலும்
ஏத்தவே ழுலகும் வைத்தார்
இன்னம்ப ரீச னாரே. 10

இன்னம்பர் ஈசன், ஆரவாரித்துக் கொண்டு கயிலை மலையைப் பெயர்க்க வந்த இராவணனை, மலையின் கீழ் நசுக்கியவர். அருச்சுனனோடு போரிட்டு, அவனுக்குத் தெய்வப்படைகளைக் கொடுத்து அருளியவர். தூய்மையை நல்கும் கங்கையைச் சடையில் வைத்தவர். தம்மைப் போற்றிப் புகழ் ஏழு உலகங்களிலும் சீவான்மாக்களை வாழ வைத்தவராவார்.

## 73. திருச்சேறை

திருநேரிசை

பதிக எண் : 73

707. பெருந்திரு விமவான் பெற்ற
பெண்கொடி பிரிந்த பின்னை
வருந்துவான் றவங்கள் செய்ய
மாமணம் புணர்ந்து மன்னும்
அருந்திரு மேனி தன்பா
லங்கொரு பாக மாகத்
திருந்திட வைத்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 1

திருச்சேறையிலுள்ள செந்நெறி என்னும் கோயிலில் உறைகின்ற செல்வராம் சிவபெருமான் தம்மைத் தாட்சாயணி பிரிந்த பிறகு, மிக்க செல்வத்தை உடைய, இமவான் பெற்ற பெண்மகளாய்த் தோன்றி மிக்க வருத்தத்தைத் தரும் தவங்களைச் செய்ய, பெருமான் அவளைத் திருமணம் செய்து கொண்டு, தன் உடம்பில் ஒரு பாகமாகக் கொண்டார்.

708. ஓர்த்துள வாறு நோக்கி
யுண்மையை யுணராக் குண்டர்
வார்த்தையை மெய்யென் றெண்ணி
மயக்கில்வீழ்ந் தழுந்து வேனைப்
போர்த்தெனை யாளாக் கொண்டு
பிறவிவான் பிணிக ளெல்லாம்
தீர்த்தருள் செய்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 2

குண்டர் – இழிந்தவர்
"சேறைச் செந்நெறிச் செல்வனாரே" என்பது பதிக மகுடம்.

சேறைச் செந்நெறிச் செல்வனார் ஆராய்ந்து உள்ளவாறு உண்மையை உணராத, உடல் பருத்த சமணரின் சொற்களை உண்மையென்று எண்ணி, மயக்கம் தரும் அவர்கள், சமயத்தில் விழுந்து அழுந்திய நிலையில் இருந்த என்னை, வயிற்று வலியால், அழுந்திய நிலையிலிருந்து எடுத்து, என்னை அடியவனாகக் கொண்டு, பிறவியைத் தருகின்ற பெரிய பிணிப்புக்களை எல்லாம் போக்கி, அடியேனுக்கு அருள் செய்தவராவர்.

### அருச்சுனனுக்கு அருள் புரிந்தது

**709. ஒன்றிய தவத்து மன்னி**
**யுடையனா யுலப்பில் காலம்**
நின்றுதங் கழல்க ளேத்து
நீள்சிலை விசய னுக்கு
வென்றிகொள் வேட னாகி
விரும்பிவெங் கான கத்துச்
சென்றருள் செய்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 3

சேறைச் செந்நெறிச் செல்வனார், மனம் அலையாமல் ஒருமையுற்ற தவத்தில் நிலைபெற்று, தபோதனனாய்ப் பல காலம் நின்று தம் கழல்களைத் தியானித்த நீண்ட வில்லை உடைய அருச்சுனனிருந்த காட்டிற்கு வெற்றியைப் பெறும் வேடனாக விரும்பிச் சென்று, அவனுக்கு அருள்கள் பல செய்தார்.

## பகீரதனுக்கு அருள் புரிந்தது

**710.** அஞ்சையு மடக்கி யாற்ற
லுடையனா யநேக காலம்
வஞ்சமி றவத்து ணின்று
மன்னிய பகீர தற்கு
வெஞ்சின முகங்க ளாகி
விசையொடு பாயுங் கங்கை
செஞ்சடை யேற்றார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 4

சேறைச் செந்நெறிச் செல்வனார், ஐம்பொறிகளையும் அடக்கித் தவம் செய்யும் ஆற்றல் உடையவனாய், பல்லாண்டுகள் வஞ்சனையற்ற தவத்தில் நிலைபெற்ற பகீரதனுக்காக, மிகுந்த கோபத்தை உடைய பல முகங்களாகப் பிரிந்து வேகத்தோடு பூமியை நோக்கிப் பாய்ந்த கங்கையைத் தமது சிறந்த சடையில் ஏற்றருளினார்.

## சண்டீசருக்குப் பதம் அளித்தது

**711.** நிறைந்தமா மணலைக் கூப்பி
நேசமோ டாவின் பாலைக்
கறந்துகொண் டாட்டக் கண்டு
கறுத்ததன் றாதை தாளை
எறிந்த மா ணிக்கப் போதே
யெழில்கொள்சண் டீச னென்னச்
சிறந்தபே றளித்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 5

சேறைச் செந்நெறிச் செல்வனார், மண்ணியாற்றின் நிறைந்த, சிறந்த மணலைச் சிவலிங்க வடிவாகக் குவித்து அந்த இலிங்கத்திற்குப் பசுவின் பாலைக் கறந்து அபிடேகம் செய்ய, அதனைக் கோபித்த தன் தந்தையின் கால்களை மழுவினால் வீழ்த்திய பிரமசாரியான விசாரசருமனுக்கு அப்பொழுதே சண்டீசன் என்று சொல்லப்படும் சிறந்த பதவியை வழங்கினார்.

## பயிரவத் தோற்றம்

**712.** விரித்தபல் கதிர்கொள் சூலம்
வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால
பயிரவ னாகி வேழம்
உரித்துமை யஞ்சக் கண்டு
வொண்டிரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 6

அடியார்கள் மனனம் செய்து பயிரவ வழிபாட்டின் போது பாடி மகிழ்கிறார்கள்.

சேறைச் செந்நெறிச் செல்வனார் பலவாறு விரிந்த ஒளியை உடைய சூலத்தையும், உடுக்கையையும் கையில் ஏந்திய அழகினை உடைய கால பைரவ மூர்த்தியாகி, யானைத் தோலை உரித்த தம் செயலைக் கண்டு பார்வதி அஞ்ச, ஒளி பொருந்திய அழகிய பவளம் போன்ற வாயைத் திறந்து சிரித்து அருள் செய்தார்.

## முப்புரமெரித்தது

**713.** சுற்றுமுன் னிமையோர் நின்று
தொழுதுதூ மலர்கள் தூவி
மற்றெமை யுயக்கொ ளென்ன
மன்னுவான் புரங்கண் மூன்றும்
உற்றொரு நொடியின் முன்ன
மொள்ளழல் வாயின் வீழச்
செற்றருள் செய்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 7

சேறைச் செந்நெறிச் செல்வனார், தம்மைச் சுற்றி ஒரு காலத்தில் தேவர்கள் எல்லோரும் நின்று கொண்டு வணங்கி, தூய மலர்களைத் தூவி, 'எம்மைக் கப்பாற்றுவாயாக' என்று வேண்ட, வானத்திலே உலவிக் கொண்டிருந்த மும்மதில்களையும் ஒரே நொடியில் தீக்கு இரையாகுமாறு அழித்து, தேவர்களுக்கு அருள் செய்தார்.

### அடிமுடி தேடிய சரிதம்

714. முந்தியிவ் வுலக மெல்லாம்
படைத்தவன் மாலி னோடும்
எந்தனி நாத னேயென்
றிறைஞ்சின் றேத்தல் செய்ய
அந்தமில் சோதி தன்னை
யடிமுடி யறியா வண்ணம்
செந்தழ லானார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 8

சேறைச் செந்நெறிச் செல்வனார், முற்பட்டு இவ்வுலகங்களை எல்லாம் படைத்த பிரமன், திருமாலோடு, 'எங்கள் ஒப்பற்ற தலைவனே!' என்று வணங்கித் துதிக்க, முன்னர் எல்லை யில்லாத தம்முடைய ஒளியை அடிமுடி அறியாத வண்ணம் தீப்பிழம்பாக அவர்களுக்குக் காட்சி வழங்கினார்.

x x x x x x x x x x x x 9

715. ஒருவரு நிகரி லாத
வொண்டிற லரக்க னோடிப்
பெருவரை யெடுத்த திண்டோள்
பிறங்கிய முடிக ளிற்று
மருவியெம் பெருமா னென்ன
மலரடி மெல்ல வாங்கித்
திருவருள் செய்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னாரே. 10

சேறைச் செந்நெறிச் செல்வனார், தனக்கு நிகரில்லாத மேம்பட்ட ஆற்றலை உடைய இராவணன், விரைந்து சென்று கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்ட தன்னுடைய தோள்களும், தலைகளும் சிதறப் பின் அன்பொடு பொருந்தி எம் பெருமானே! என்று வழிபட, தம்முடைய திருவடியை அழுத்துதலைத் தவிர்த்து, அவனுக்குச் சிறந்த அருள் செய்தார்.

## 74. பொது

### "நினைந்த" திருநேரிசைப் பதிகம்

திருநேரிசை — பதிக எண் : 74

716. முத்தினை மணியைப் பொன்னை
முழுமுதற் பவள மேய்க்கும்
கொத்தினை வயிர மாலைக்
கொழுந்தினை யமரர் சூடும்
வித்தினை வேத வேள்விக்
கேள்வியை விளங்க நின்ற
அத்தனை நினைந்த நெஞ்ச
மழகிதா **நினைந்த வாறே.** 1

முத்து, மணி, பொன், சிறந்த பவளக் கொத்து, வைரத்தின் இயல்பை உடைய ஒளி எனும் இவற்றை ஒத்தவனாய், தேவர்கள் வழிபடும் வித்து, வேதவேள்வி, வேதம் எனும் இவையாக இருக்கும் தலைவனை, நினைத்த மனம் மிக அழகியதாக நினைத்தது உள்ளவாறு என்னே! தீட்டப்படுதல் வேண்டாது முழுமையாய் விளைவது பவளத்தின் சிறப்பு.

| | |
|---|---|
| **717.** முன்பனை யுலகுக் கெல்லா<br>மூர்த்தியை முனிக ளேத்தும்<br>இன்பனை யிலங்கு சோதி<br>யிறைவனை யரிவை யஞ்ச<br>வன்பனைத் தடக்கை வேள்விக்<br>களிற்றினை யுரித்த வெங்கள்<br>அன்பனை நினைந்த நெஞ்ச<br>மழகிதா **நினைந்த வாறே.** 2 | வலியனாய், உலகுக்கெல்லாம் தலைவனாய், முனிவர்கள் துதிக்கும் இன்பனாய், ஞான ஒளி வீசும் தலைவனாய் உள்ள பார்வதி அஞ்சுமாறு தாருகவன முனிவர் யாகத்தில் புறப்பட்ட வலிய பனை போன்ற துதிக்கையை உடைய யானைத் தோலை உரித்த எங்கள் அன்பனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே. |
| **718.** கரும்பினு மினியான் றன்னைக்<br>காய்கதிர்ச் சோதி யானை<br>இருங்கட லமுதந் தன்னை<br>யிறப்பொடு பிறப்பி லானைப்<br>பெரும்பொருட் கிளவி யானைப்<br>பெருந்தவ முனிவ ரேத்தும்<br>அரும்பொனை நினைந்த நெஞ்ச<br>மழகிதா நினைந்த வாறே. 3<br><br>நெஞ்சத்துக்கு அழகு இறைவனை நினைப்பதே. | கரும்பைவிட, மிக்க சுவை உடையவனாய், சூரியன் போன்ற ஒளி உடையவனாய், கடலில் தோன்றிய அமுதம் போல்பவனாய், பிறப்பு, இறப்பு இல்லாதவனாய், மகா வாக்கியப் பொருளாய் இருப்பவனாய் உள்ள, பெரிய தவத்தை உடைய முனிவர்கள் துதிக்கும் அரிய பொன் போன்ற பெருமானை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே. பெரும் பெயர் – மகா வாக்கியம். |
| **719.** செருத்தனை யருத்தி செய்து<br>செஞ்சரஞ் செலுத்தி யூர்மேல்<br>கருத்தனைக் கனக மேனிக்<br>கடவுளைக் கருதும் வானோர்க்<br>கொருத்தனை யொருத்தி பாகம்<br>பொருத்தியு மருத்தி தீரா<br>நிருத்தனை நினைந்த நெஞ்ச<br>நேர்பட நினைந்த வாறே. 4<br><br>நினைந்தது என்று நினைப்பினைப் பற்றியே எல்லாப் பாடல்களிலும் கூறப்படுகிறது. | போரிடுவதில் விருப்பம் கொண்டு, நேராக அம்பைச் செலுத்தி முப்புரத்தைக் குறிக்கோளாகக் கொண்டு அழித்தவனாய், பொன்மேனி அம்மானாய், தன்னைத் தியானிக்கும் தேவர்களுக்கு ஒப்பற்ற தலைவனாய், பார்வதிபாகமாகியும் அவளிடத்து ஆசை நீங்காத கூத்தனாய் உள்ள பெருமானை நினைந்த நெஞ்சம் நேரிதாகவே நினைந்தவாறு என்னே! |
| **720.** கூற்றினை யுதைத்த பாதக்<br>குழகனை மழலை வெள்ளே<br>றேற்றனை யிமையோ ரேத்த<br>விருஞ்சடைக் கற்றை தன்மேல்<br>ஆற்றனை யடிய ரேத்து<br>மமுதனை யமுத யோக<br>நீற்றனை நினைந்த நெஞ்சே<br>நேர்பட நினைந்த வாறே. 5<br><br>ஆற்றன் (தமிழ்ச்சொல்) – கங்காதரன் (வடசொல்) | கூற்றுவனை உதைத்த பாதங்களை உடைய இளையவனாய், இளைய வெண்ணிறக் காளையை ஊர்பவனாய், தேவர்கள் போற்றப் பெரிய சடைக் கற்றையில் கங்கையைச் சூடியவனாய், அடியார்கள் போற்றும் அமுதமாய், சிவாமுதம் நல்கும் **திருநீற்று மேனியனாய்** உள்ள பெருமானை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்தவாறே. |

| | |
|---|---|
| 721. கருப்பனைத் தடக்கை **வேழக்**<br>**களிற்றினை** யுரித்த கண்டன்<br>விருப்பனை விளங்கு சோதி<br>வியன்கயி லாய மென்னும்<br>பொருப்பனைப் பொருப்பன் மங்கை<br>பங்கனை யங்கை யேற்ற<br>நெருப்பனை நினைந்த நெஞ்ச<br>நேர்பட நினைந்த வாறே. 6<br><br>வேழக்களிறு – இருபெயரொட்டு | கரிய, பனை போன்ற துதிக்கையை உடைய யானைத் தோலை உரித்தவனாய், நீலகண்டனாய், எல்லா ஆன்மாக்களையும் விரும்புபவனாய், சோதி வடிவினனாய், கயிலை மலையினனாய், பார்வதி பாகனாய், உள்ளங்கையில் நெருப்பை ஏற்பவனாய் உள்ள பெருமானை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்தவாறே. |
| 722. நீதியா னினைப்பு ளானை<br>நினைப்பவர் மனத்து ளானைச்<br>சாதியைச் சங்கவெண் ணீற்<br>றண்ணலை விண்ணில் வானோர்<br>சோதியைத் துளக்க மில்லா<br>விளக்கினை யளக்க லாகா<br>ஆதியை நினைந்த நெஞ்ச<br>மழகிதா நினைந்த வாறே. 7 | விதிப்படி தியானிக்கப்படுபவனாய், சாதி மாணிக்கமாய், சங்கைப் போன்ற வெண்ணீற்றை அணிந்த தலைவனாய், வானத்திலுள்ள தேவர்களுக்குச் சோதியாய், தூண்டா விளக்காய் உள்ள, ஒருவராலும் அளக்கமுடியாத ஆதியை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே. |
| 723. பழகனை யுலகுக் கெல்லாம்<br>பருப்பனைப் பொருப்போ டொக்கும்<br>மழகளி யானையின் றோன்<br>மலைமக ணடுங்கப் போர்த்த<br>குழகனைக் குழவித் திங்கள்<br>குளிர்சடை மருவ வைத்த<br>அழகனை நினைந்த நெஞ்ச<br>மழகிதா நினைந்த வாறே. 8 | உலகத்தாருக்கெல்லாம் பழகுதற்கு இனியவனாய், பெருவடிவுடையவனாய், மலையை ஒத்த மதயானையின் தோலைப் பார்வதி நடுங்குமாறு போர்த்த இளையனாய், பிறையைக் குளிர்ந்த சடையிலே சூடிய அழகனாய் உள்ள பெருமானை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே. |
| 724. விண்ணிடை மின்னொப் பானை<br>**மெய்ப்பெரும் பொருளொப் பானைக்**<br>கண்ணிடை மணியொப் பானைக்<br>கடுவிருட் சுடரொப் பானை<br>எண்ணிடை யெண்ண லாகா<br>விருவரை வெருவ நீண்ட<br>அண்ணலை நினைந்த நெஞ்ச<br>மழகிதா நினைந்த வாறே. 9 | வானில் தோன்றும் மின்னலை ஒப்பவனாய், தனக்குத் தானே ஒப்பாகும் பெரிய மெய்ப்பொருளாய், கண்ணில் மணி போலவும், செறிந்த இருளில் சுடர் போலவும் ஒளி தருபவனாய், திருமாலும், பிரமனும் தம் மனத்தில் எண்ணமுடியாத வகையில் அவர்கள் அஞ்சுமாறு நீண்ட தீத்தம்பமாகிய தலைமையுடைய பெருமானை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே. |

பொருளொப்பான். பெரும் பொருளொப்பான். மெய்ப்பெரும் பொருளொப்பான். மெய் – சத்தியம் (குணம்) பெரும்பொருள் – சத்தியார்த்தம் (குணி)

725. உரவனைத் திரண்ட திண்டோ
ளரக்கனை யூன்றி மூன்றூர்
நிரவனை நிமிர்ந்த சோதி
நீண்முடி யமரர் தங்கள்
குரவனைக் குளிர்வெண் டிங்கட்
சடையிடைப் பொதியுமை வாய்
அரவனை நினைந்த நெஞ்ச
மழகிதா நினைந்த வாறே. 10

ஞான வடிவினனாய், திரண்ட வலிய தோள்களை உடைய இராவணனை நசுக்கியவனாய், மும்மதில்களையும் அழித்தவனாய், மிக்க ஒளியும், நீண்ட கிரீடமும் உடைய தேவர்களுக்குக் குருவாய், குளிர்ந்த பிறையைச் சடையில் கொண்டவனாய் உள்ள, ஐந்தலைப் பாம்பை ஆட்டும் பெருமானை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே.

---

மூன்றூர் நிரவன் – திரிபுரத்தை தரைமட்டமாக்கியவன்.

## 75. பொது

### (தனித் திருநேரிசைப் பதிகம்)

திருநேரிசை                                        பதிக எண் : 75

726. தொண்டனேன் பட்ட தென்னே
தூயகா விரியி னன்னீர்
கொண்டிருக் கோதி யாட்டிக்
குங்குமக் குழம்பு சாத்தி
இண்டைகொண் டேற நோக்கி
யீசனை யெம்பி ரானைக்
கண்டனைக் கண்டி ராதே
காலத்தைக் கழித்த வாறே. 1

தூய காவிரியின் தீர்த்தத்தைக் கொண்டு மந்திரங்களை ஓதி, அபிடேகம் செய்து, குங்குமக் குழம்பைச் சார்த்தி, தலையில் மாலையை அணிவித்து, நீலகண்டனாய் எம் தலைவனாய் இருக்கின்ற ஈசனைக் கண்குளிர நோக்கி மகிழாமல், காலத்தை வீணாக்கின செயலிலே அடியேன் ஈடுபட்டது வருந்தத்தக்கது.

727. பின்னிலேன் முன்னிலே னான்
பிறப்பறுத் தருள்செய் வானே
என்னிலே னாயி னேனா
னிளங்கதிர்ப் பயலைத் திங்கள்
சின்னிலா வெறிக்குஞ் சென்னிச்
சிவபுரத் தமர ரேறே
நின்னலாற் களைக ணாரே
நீறுசே ரகலத் தானே. 2

முதலும் முடிவும் இல்லாத அடியேனுடைய பிறவித் துயரைப் போக்கி அருள் செய்பவனே! இளைய கதிர்களை உடைய பிறை தலையிலே சிறிதளவு ஒளிவீசும், தேவர்கள் தலைவனாய்ச் சிவபுரத்து இருப்பவனே! திருநீறணிந்த மார்பினனே! அடியேனுக்கு என்று ஒரு பொருளும் இல்லாதேன் நான். எனக்கு உன்னைத் தவிர பற்றுக்கோடு ஆவார் எவர்?

---

பின்னிலேன். முன்னிலேன் – பிற்றைக்கு வேண்டப்படும் நற்செயலும் இதன் முன் காரணமாய் நிற்கும் நற்செயலும் இல்லாதவன். நான் முன்னின்றும் போற்றிலேன். பின்நின்றும் வழிபட்டிலேன் என்றும் கொள்ளலாம். உடலெடுத்தல் முன்னாகும் அதை விடுதல் பின்னாகும். ஆதலின் நான் (உயிர்) பிறப்பு இறப்பு அற்றவன். வருதலும், போதலும் உடம்புக்கே.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| 728. கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்<br>காலத்தைக் கழித்துப் போக்கித்<br>தெள்ளியே னாகி நின்று<br>தேடினே னாடிக் கண்டேன்<br>உள்குவா ருள்கிற் றெல்லா<br>முடனிருந் தறிதி யென்று<br>வெள்கினேன் வெள்கி நானும்<br>விலாவிறச் சிரித்திட் டேனே. 3 | வஞ்சனை உடைய யான், போலித் தொண்டனாய், காலத்தைப் பல ஆண்டுகள் வீணாக்கி, பின் மனத்தெளிவு பெற்று உன்னைத் தேடி ஆராய்ந்து கண்டு கொண்டேன். நினைப்பவர் நினைப்பனவற்றை எல்லாம் அவருடனேயே உள்ளத்தில் இருந்து கொண்டு, நீ அறிகின்றாய் என்பதை அறிந்து நான் வெட்கப்பட்டு உன்னைத் தேடிய என் அறியாமைக்கு என் விலா எலும்பு ஒடியுமாறு சிரித்தேன். |
| 729. உடம்பெனு மனைய கத்து<br>வுள்ளமே தகளி யாக<br>மடம்படு முணர்நெய் யட்டி<br>யுயிரெனுந் திரிம யக்கி<br>இடம்படு ஞானத் தீயா<br>லெரிகொள விருந்து நோக்கில்<br>கடம்பமர் காளை தாதை<br>கழலடி காண லாமே. 4<br><br>இச்செய்யுள் தியானத்தின் தன்மையினைக்கூறுவது. | உடம்பு என்ற வீட்டிலே மனமே அகலாக, பசு ஞானமான உணர்வே நெய்யாக, உயிரே திரியாக, சிவஞானத் தீயினால் விளக்கை ஏற்றி, அந்த ஞான ஒளியிலே இலயித்திருந்து பார்க்கில் கடம்ப மலர் மாலையை விரும்பி அணியும், முருகனுடைய தந்தையாகிய சிவபெருமானுடைய திருவடிகளைக் காணலாம். |
| 730. வஞ்சப்பெண் ணரங்கு கோயில்<br>வாளெயிற் றரவந் துஞ்சா<br>வஞ்சப்பெண் ணிருந்த சூழல்<br>வான்றவிழ் மதியந் தோயும்<br>வஞ்சப்பெண் வாழ்க்கை யாளன்<br>வாழ்வினை வாழ லுற்று<br>வஞ்சப்பெண் ணுறக்க மானேன்<br>வஞ்சனே னென்செய் கேனே. 5<br><br>அப்பர் வேணியப்பரை அடைய விரும்பி வஞ்சப்பெண் போல உறங்காது உறங்குகின்றார். இந்நிலை துவாத சாந்தப் பெருவெளியில் விழித்துறங்கும் நிலை | வஞ்சனை உடைய பெண்ணாகிய கங்கை தங்குமிடம் சடைமுடி. அந்தச் சடைமுடியிலே ஒளி பொருந்திய பற்களை உடைய பாம்புகள் உறங்காவாய் உள்ளன. அந்தச் செஞ்சடைச் சூழலிலே பிறை கங்கையில் தோய்ந்தவாறு உள்ளது. அந்தக் கங்கையினுடைய வாழ்க்கையை ஆள்பவன் சிவபெருமான். அவனைப் போன்ற வாழ்வை வாழத் தொடங்கி, வஞ்சனை உடைய அடியேன். வஞ்சனை உடைய பெண்ணின் உறக்கத்தைப் போலப் பொய் வாழ்க்கை வாழ்ந்து யாது செய்ய வல்லேன்? |
| 731. உள்குவா ருள்ளத் தானை<br>யுணர்வெனும் பெருமை யானை<br>உள்கினே னானுங் காண்பா<br>னுருகினே னூறி யூறி<br>எள்கினே னெந்தை பெம்மா<br>**னிருதலை** மின்னு கின்ற<br>கொள்ளிமே லெறும்பெ னுள்ள<br>மெங்ஙனங் கூடு மாறே. 6 | நினைப்பவர் மனதைக் கோயிலாக் கொண்டவனாய்ச் சிவஞானமாகிய பெருமையை உடையவனாய் உள்ள பெருமானை நானும் காண்பதற்கு நினைத்து, உருகி அன்பு ஊறி, உள்ளம் உருகினேன். எந்தையாகிய பெருமானே! உன்னை இரண்டு பக்கமும் பற்றி எரிகின்ற கொள்ளியின் உள்ளே உள்ள எறும்பு போன்ற என் உள்ளம் எங்ஙனம் அடைய இயலும்? |

இருதலை – இவ்வுலகப் பற்றிலும் முற்றிலும் தோய்ந்துபடாது, இறைவனையும் முற்றும் பற்றாது நிற்கும் நிலை.

732. மோத்தையைக் கண்ட காக்கை
போலவல் வினைகள் மொய்த்துன்
வார்த்தையைப் பேச வொட்டா
மயக்கநான் மயங்கு கின்றேன்
சீத்தையைச் சிதம்பு தன்னைச்
செடிகொணோய் வடிவொன் றில்லா
ஊத்தையைக் கழிக்கும் வண்ண
முணர்வுதா வுலக மூர்த்தீ. 7

பிணத்தைக் கண்ட காக்கைகளைப் போல, அடியேனுடைய தீய வினைகள் அடியேனைச் சூழ்ந்து உன் பெருமையைப் பேச ஒட்டாமல் கலக்க, அடியேன் மயங்குகின்றேன். உலகத்துக்குத் தலைவனே! வெறுக்கத் தக்கதாய், பண்பு அற்றதாய் நாற்றம் கொண்டதாய், நோய்க்கு இருப்பிடமாய் அழகிய வடிவில்லாத இந்த உடலை அடியோடு போக்கும் வண்ணம் அடியேனுக்குச் சிவஞானத்தை அருளுவாயாக.

காக்கைகள் மொய்த்தல் பிணத்தை
வினைகள் மொய்த்தல் உயிரை

733. அங்கத்தை மண்ணுக் காக்கி
யார்வத்தை யுனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப்
பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா
சாதனா ணாயே னுன்னை
எங்குற்றா யென்ற போதா
விங்குற்றே னென்கண் டாயே. 8

மேம்பட்டவனே! சங்கை ஒத்த வெண்மையான மேனியை உடைய செல்வனே! இந்த உடம்பு மண்ணிற்பொருந்துமாறு நெடிது வீழ்ந்து விருப்பத்தை உன்னிடத்திலேயே வைத்துப் பிறவி என்ற சேற்றினை அடியோடு போக்கி, உன்னையே ஞான பாவனையால் மனத்திற் கொண்டுள்ளேன். என் உயிர் போகின்ற அன்று நாயைப் போன்று இழிந்த அடியேன் உன்னை, எங்கிருக்கின்றாய் என்று வினவினால், இங்கிருக்கின்றேன் என்று அருள் செய்வாயாக.

இப்பாடலைச் சைவர்களாகிய நாம் சிவ பூசாந்தத்தில் விழுந்து இறைஞ்சும்போது பாடி மகிழ்வதை மரபாகக் கொண்டுள்ளோம். விழுந்து தொழும் போது உடம்பு மண்ணிற் கழிக்கப்பட்டதாகவும், உயிர் அவ்வுடம்பின் நீங்கிச் சிவத்திற் கலந்ததாயும் எண்ணுதல் சைவ மரபு. சிவாலயத்தில் அத்தொழுதலைப் பலிபீடத்துக்கு அருகில் செய்தல் வேண்டுமெனச் சிவாகமங்கள் விதித்துள்ளன. பலிபீடம் பாசத்தைக் குறிக்கும். பாசமற்ற உயிரைக் குறிப்பதே அப்பலிபீடத்தை அடுத்துள்ள நந்தி. அது பதியாகிய சிவலிங்கத்தை நோக்கியிருக்கிறது. விழுந்தது பாசம். எழுந்தது பசுவாயிருந்த உயிராகிய ஆன்மா. கலந்தது சிவத்தில். நினைத்தது பேரின்ப நுகர்ச்சியில்.

ஆயபதி தான் அருட்சிவலிங்கமாம்
ஆயபசுவும் அடல்ஏறு என நிற்கும்
ஆயபலிபீடம் ஆகும் நற்பாசமாம்
ஆய அரன்நிலை ஆய்ந்து கொள்வார்கட்கே. திருமந்திரம் – 2412.

**பங்கம் – பாசச் சார்பான இழிந்த எண்ணம்**

பலிபீடத்துக்கு அருகில் வடக்குநோக்கி ஆண்களாயின் அட்டாங்க வணக்கமும், பெண்களாயின் பஞ்சாங்க வணக்கமும் செய்ய வேண்டும். சிவாலயத்தின் மற்ற இடங்களில் விழுந்து மற்ற திசைகளை நோக்கி வணங்கக்கூடாது. பஞ்சாங்கம் – 2 கால், 2 கை நெற்றி தரையில் தொடும் வண்ணம் மண்டியிட்டு வணங்குதல். அட்டாங்கம் – 2 கால், 2 கை, மார்பு, 2 செவி, நெற்றியுட்பட முழுஉடலும் தரையைத் தொடும் வண்ணம் வணங்குதல்.

நின்னைப் பாவித்தேன் – என்னை மறந்து நின்னை நினைத்தேன்.

734. வெள்ளநீர்ச் சடைய னார்தாம்
வினவுவார் போல வந்தென்
னுள்ளமே புகுந்து நின்றார்க்
குறங்குநான் புடைகள் போந்து
**கள்ளரோ புகுந்தீ ரென்னக்**
கலந்துதான் நோக்கிநக்கு
**வெள்ளரோ மென்று நின்றார்**
விளங்கிளம் பிறைய னாரே. 9

விளங்குகின்ற இளம்பிறையைச் சூடிக் கங்கையைச் சடையில் ஏற்ற பெருமான், ஏதோ என்னை வினவுபவர் போல வந்து என் உள்ளத்துக்குள்ளே புகுந்து நின்றாராக, உறங்கின நான் விழித்தெழுந்து இங்கு புகுந்த நீர் கள்ளரோ என்று வினவ, என் உள்ளத்தில் கலந்திருந்து, தாம் என்னைப் பார்த்துச் சிரித்து கங்கை ஆகிய வெள்ளத்தை உடையேம் என்று நின்றார்.

735. பெருவிர லிறைதா னூன்றப்
பிறையெயி றிலங்க வங்காந்
தருவரை யனைய தோளா
னரக்கனன் றலறி வீழ்ந்தான்
இருவரு மொருவ னாய
வுருவமங் குடைய வள்ளல்
திருவடி சுமந்து கொண்டு
காண்கநான் றிரியு மாறே. 10

பார்வதி பாகனாய் உள்ள உருவத்தையுடைய வள்ளலாகிய சிவபெருமான், தம் காற் பெருவிரலைச் சிறிது ஊன்றிய அளவில் மலையைப் போன்ற தோள்களை உடைய இராவணன் பிறையைப் போன்ற பற்கள் வெளித்தோன்ற வாயைப் பிளந்து கொண்டு அலறிக் கீழே சாய்ந்தான். சிறிதும் வலிமையில்லாத அடியேன் அம்மையப்பனாகிய அப்பெருமானுடைய திருவடிகளைத் தலையில் சுமந்து கொண்டு எங்கும் திரிகின்றவாற்றைக் காண்க.

அடிமைத் திறத்தின் வீறு தோன்ற நகைச்சுவையும், பெருமிதமும்படக் கூறிய கருத்து. ஒரு சிறு விரலூன்றத் தாங்க மாட்டாது. வலிய அரக்கன் அலறிடவும், எளிய அடிமை அவருடைய திருவடி இரண்டும் சுமந்து திரிகின்ற வலிமைதான் என்னே.

## 76. பொது

### (தனித் திருநேரிசைப் பதிகம்)

திருநேரிசை பதிக எண் : 76

736. மருளவா மனத்த னாகி
மயங்கினேன் மதியி லாதேன்
இருளவா வறுக்கு மெந்தை
யிணையடி நீழலெ ன்னும்
அருளவாப் பெறுத லின்றி
யஞ்சிநா னலமந் தேற்குப்
பொருளவாத் தந்த வாறே
**போதுபோய்ப் புலர்ந்த தன்றே.** 1

அடியேன் மருளுகின்ற மயக்கமும் ஆசையும் உடைய மனத்தை உடையேனாய் அறிவில்லாதேனாய் மயங்கினேன். அஞ்ஞானத்தைப் போக்கும் எம்பெருமானுடைய திருவடி நிழல் என்னும் விரும்பிப் பெறவேண்டிய அருளைப் பெறாமல் பயந்து அஞ்சினேனாக, அத்தகைய அடியேனுக்கு எம் பெருமான் மெய்ப் பொருளிடத்து ஆசையை நல்கிய அளவில் அஞ்ஞான இருட்பொழுது நீங்கி ஞான ஒளி பரவும் பகற்பொழுது தோன்றிவிட்டது. கெட்ட காலத்துக்கு விடிவு வந்தது.

மருள் அவா – பொய்யை மெய் என்ற மருளினால் வரும் அவா. பொருள் அல்லவற்றை பொருளென்று உணரும் மருள். பொருள் அவா மெய்ப்பொருளின் கண் விருப்பம்.

மயக்கத்திற்கு ஏது மருள். அவாவிற்கு ஏது மயக்கம். மருளின் பயன் மயக்கம். மயக்கத்தின் பயன் அவா. மூன்றும் மதியிலார் பால் நீங்காதிருக்கும்.

737. மெய்ம்மையா முழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப்
பொறையெனு நீரைப் பாய்ச்சித்
தம்மையு நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையு ணிற்ப ராகிற்
சிவகதி விளையு மன்றே. 2

இப்பாட்டு உழவு பற்றிய உருவகம். சிவகதியாகிய விளைவுக்கு உபாயங் கூறியது.

சரியை முதலிய உண்மை வழிகளாகிய உழுதலைச் செய்து, விருப்பம் என்னும் விதையை விதைத்து, பொய்ம்மை ஆகிய களைகளை நீக்கிப் பொறுமை என்னும் நீரைப் பாய்ச்சிச் சிவரூபத்தால் ஆன்ம தரிசனமும் சிவ தரிசனத்தால் ஆன்ம சித்தியும் பெற்று, திருநீறு சிவவேடங்கள் முதலிய தகுதிகளாகிய வேலியை அமைத்துச் சிவத் தியானமாகிய செந்நெறியில் நிற்பார்களானால் சிவகதி என்ற பயிர் விளையும்.

1. **மெய்ம்மையாம் உழவு** – சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கும் முறையே அரும்பு, மலர், காய், கனி எனப்பட்டு வீடுபேறடைய உதவும் நெறிகள் எனப்படுகின்றன. இவ்வழி செலல்தான் வீடுபேற்றிற்குரிய நெறியாகும்.
2. **விருப்பெனும் வித்து** – இச்சை முதிர்தல் என்னும் சிவபத்தி. அன்பு, காதல், பத்தி என்பன பெருமானை நோக்கி அமைய வேண்டும்.
3. **மெய்ம்மையாங் களையை வாங்கல்** – பொய்மை, அசத்தியம். அதனை வாங்குதல் என்பது சத்தியத்தைக் கடைப்பிடித்தலாகும். வாய்மை, உண்மை, மெய்ம்மை என்று மூன்றுமே சத்தியம். இவை மனம், மொழி, மெய்களால் செயல்படுத்தப்படுவன.
   a. வாயால் சத்தியந்தவறாமல் வாழ்வது – வாய்மை
   b. உள்ளத்தால் (மனதால்) சத்தியந்தவறாமல் வாழ்வது – உண்மை
   c. மெய்யால் (உடம்பால்) சத்தியந்தவறாமல் வாழ்வது – மெய்ம்மை
4. **பொறையெனும் நீரைப் பாய்ச்சுதல்** – பொறை – பொறுமை. அகிம்சை. பொறுமையான நீரைப் பாய்ச்சி, பொய்யான களையைப் பிடுங்கி, விருப்பமான வித்தை வாழச் செய்வதே மெய்ஞ்ஞான வாழ்வு.
5. **தம்மையும் நோக்கிக் காண்டல்** – தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் – சிவஞானபோதம் ஆன்ம தரிசனம் – சிவ தரிசனம்.

**ஞானப்பூசைக்குரிய எண்மலர்களைப் பிரயோகித்து வாழ்தல்**

1. கொல்லாமை (தகவு எனும் வேலியிடல்)
2. ஐம்பொறி அடங்கல் (பொய்மையாங் களையை வாங்கல்)
3. பொறுமை (பொறை என்னும் நீரைப் பாய்ச்சுதல்)
4. இரக்கம் (செம்மையுள் நிற்றல்)
5. அறிவு (சிவகதி விளைதல்)
6. மெய் (மெய்ம்மையாம் உழவைச் செய்தல்)
7. தவம் (தம்மையும் நோக்கிக் காண்டல்)
8. அன்பு (விருப்பென்னும் வித்தை வித்தல்)

6. **தகவெனும் வேலியிடல்.** திருநீறு, கண்டிகை, திருவைந்தெழுத்து, சடை ஆகிய சிவ வேடங்கள் எல்லாம் சிவகதிக்குரிய தகவு என்னும் வேலியாகும்.

7. **செம்மையுள் நிற்றல் –** திருநின்ற செம்மையே செம்மையாகக் கொள்ளுதல். சீலம் ஆர்ந்தவர். செம்மையுள் நிற்பர். செம்மையாய சிவகதி சேரலாம். சிவமுத்தியே செம்மையாகும்.

8. **சிவகதி –** உழவின் விளைவு சிவகதி. சிவாநுபவம். சுவாநுபூதிகமாதல்

**738.** எம்பிரா னென்ற தேகொண்
டென்னுளே புகுந்து நின்றிங்
கெம்பிரா னாட்டா வாடி
யென்னுளே யுழிதர் வேனை
எம்பிரா னென்னைப் பின்னைத்
தன்னுளே கரக்கு மென்றால்
எம்பிரா னென்னி னல்லா
லென்செய்கே னேழை யேனே. 3

இப்பாடலின் முதலிரண்டு அடிகளில் சீவபோதமும், பின்னிரண்டு அடிகளில் சிவபோதமும் எடுத்துரைக்கப்பட்டன. முன்னே தேடியநிலை. பின்னே தேடிக் கண்டுபிடிக்கப்பட்ட நிலை.

எம்பெருமான்! என்று அடியேன் அழைத்த ஒன்றனையே அடியேனுடைய தகுதியாகக் கொண்டு என் உள்ளத்தில் புகுந்து நின்று எம் பெருமான் செயற்படுத்தச் செயற்பட்டு, என்னைச் செயற்படுத்தும் தலைவனை எனக்குள்ளேயே தேடித் திரிகின்ற, அடியேன் தன்னை இன்னான் என்று கண்டு கொண்ட பிறகு எம் பெருமான் என்னைத் தன்னுள்ளே மறையச் செய்வான் என்றால் எல்லாம் அவன் செயல் என்று இறைபணி வழுவாது நிற்றலேயன்றி அறிவற்ற அடியேன் வேறு யாது செயற்பாலேன்?

**739.** காயமே கோயி லாகக்
கடிமன மடிமை யாக
வாய்மையே தூய்மை யாக
மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா
நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை யீச னார்க்குப்
போற்றவிக் காட்டி னோமே. 4

இப்பாட்டு அகப்பூசை, அருச்சனை, வழிபாட்டு முறை கூறிற்று. கடிமனம் – தூய அந்தக்கரணம்.

இந்த உடம்பையே கோயிலாகவும், உலகியலை நீக்கிய மனம் அடிமையாகவும், தூய்மை உடைய மனமே பரம்பொருள் தங்கும் கருவறையாகவும் எம்பெருமான் அருட்சத்தியான மனோன்மணியே அவன் இலிங்க உருவமாகவும் அமைய, அடியேனுடைய அன்பே நெய்யும் பாலுமாக அவ்விலிங்கமூர்த்தியே மனம் நிறைவு பெற அபிடேகித்துப் பூசிக்கும் அப்பெருமானுக்கு எங்கள் வணக்கங்களையே நிவேதனப் பொருள்களாகப் படைத்தோம்.

**740.** வஞ்சகப் புலைய னேனை
வழியறத் தொண்டிற் பூட்டி
அஞ்சலென் றாண்டு கொண்டா
யதுவுநின் பெருமை யன்றே
நெஞ்சகங் கனிய மாட்டே
னின்னையுள் வைக்க மாட்டேன்
நஞ்சிடங் கொண்ட கண்டா
வென்னென நன்மை தானே. 5

நீலகண்டனே! வஞ்சனையான செயல்களில் ஈடுபட்ட கீழ்மகனாகிய அடியேனைத் தீநெறி கெட நன்னெறியில் ஈடுபடுத்தி அஞ்சேல் என்று அடிமை கொண்டாய். அதுவும் உன் பெருமையை வெளிப்படுத்தும் செயலாகும். அடியேனோ உள்ளம் உருகி உன்னை என் உள்ளத்தில் நிலையாக வைக்கமாட்டாதேனாய் உள்ளேன். எனது நன்மை அதாவது நான் பெற்ற நன்மைதான் யாதோ?

741. நாயினுங் கடைப்பட் டேனை
நன்னெறி காட்டி யாண்டாய்
**ஆயிர மரவ மார்த்த**
**வமுதனே** யமுத மொத்து
நீயுமென் நெஞ்சி னுள்ளே
நிலாவினாய் நிலாவி நிற்க
நோயவை சாரு மாகி
னோக்கிநீ யருள்செய் வாயே. 6

அணிந்திருப்பது ஒரு பாம்பு மட்டுமல்ல. ஆயிரக்கணக்கானவை.

பல பாம்புகளை அணிகலன்களாக அணிந்த, அடியேனுக்கு அமுதம் போன்றவனே! நாயினும் கீழ்ப்பட்ட அடியேனை நல்ல நெறியைக் காண்பித்து அடிமையாகக் கொண்டுள்ளாய். நீயும் அடியேன் உள்ளத்தில் அமுதத்தைப் போல வந்து தங்கி விட்டாய். நீ அப்படித் தங்கியிருக்கவும் அடியேனுக்குத் துயரங்கள் ஏற்படுமாயின் அடியேனுடைய துயர நிலையை நோக்கி, அது நீங்குமாறு அருள் செய்வாயாக.

742. விள்ளத்தா னொன்று மாட்டேன்
விருப்பெனும் வேட்கை யாலே
வள்ளத்தேன் போல நுன்னை
வாய்மடுத் துண்டி டாமே
உள்ளத்தே நிற்றி யேனு
முயிர்ப்புளே வருதி யேனும்
கள்ளத்தே நிற்றி யம்மா
வெங்ஙனங் காணு மாறே. 7

விருப்பம் என்னும் பற்றுள்ளத்தாலே பாத்திரத்தில் இருக்கும் தேனைப் பருகுவது போல உன்னை வாயிற்புகுத்தி உண்ண இயலாதபடி நீ என் உள்ளத்தினுள்ளே இருக்கின்றாய் என்றாலும் உன் மூச்சுக் காற்றினுள்ளே கலந்திருக்கின்றாய் என்றாலும் கண்களுக்குப் புலனாகாதபடி மறைந்திருக்கின்றாய். ஆதலின் உன்னைக் காணும் வழி இன்னது என்று வாய்விட்டுச் சொல்லச் சிறிதும் வல்லேன் அல்லேன்.

743. ஆசைவன் பாச மெய்தி
யங்குற்றே னிங்குற் றேனாய்
ஊசலாட் டுண்டு வாளா
வுழந்துநா னுழி தராமே
தேசனே தேச மூர்த்தீ
திருமறைக் காடு மேய
ஈசனே யுன்றன் பாத
மேத்துமா றருளெம் மானே. 8

ஆசை என்ற கயிற்றால் கட்டப்பட்டு இயக்கப் படுதலின் மேல் உலக ஆசையால் ஒரு பக்கமும், இவ்வுலக இன்ப நுகர்ச்சி விருப்பினால் வேறொரு புறமுமாகச் சலனப்பட்டு ஒன்றும் உறுதியாகச் செய்ய இயலாதேனாய் வருந்தி நான் சுழலாதபடி, பேரொளி உடையவனும், எல்லா உலகிற்கும் தலைவனும் திருமறைக் காட்டில் விரும்பி உறைந்து உயிர்களை ஆள்பவனும் ஆகிய உன் திருவடிகளைப் போற்றும் செயலிலேயே அடியேன் ஈடுபடுமாறு அருள் செய்வாயாக.

| | |
|---|---|
| **744.** நிறைவிலே னேச மில்லே<br>  னினைவிலேன் வினையின் பாச<br>மறைவிலே புறப்பட் டேறும்<br>  வகையெனக் கருளெ னெம்மான்<br>சிறையிலேன் செய்வ தென்னே<br>  திருவடி பரவி யேத்தக்<br>குறைவிலேன் குற்றந் தீராய்<br>  கொன்றைசேர் சடையி னானே. 9 | கொன்றைப் பூவினைத் தரித்த சடையை உடையவனே! எதிலும் மனநிறைவு இல்லாதேனாய், யாரிடத்தும் உண்மையான அன்பு இல்லேனாய், உன்னை விருப்புற்று நினைத்தல் இல்லேனாய், இருவினையால் கட்டப்பட்ட சூழலிலே அகப்பட்டுத் தடுமாறும் அடியேன் அதனை விடுத்துப் புறப்பட்டு வெளியேறும் நிலையை என் தலைவனாகிய நீ எனக்கு அருளுவாயாக. இவ்வுடலாகிய இருப்பிடத்தில் இருக்கும் அடியேன் யாது செயற்பாலேன்? உன் திருவடிகளை முன் நின்று போற்றி வழிபடும் திறத்தில் குறைபாடு ஏதும் இல்லேனாம் வகையில் என் குற்றங்களை எல்லாம் போக்கி அருளுவாயாக. |
| **745.** நடுவிலாக் காலன் வந்து<br>  நணுகும்போ தறிய வொண்ணா<br>அடுவன வஞ்சு பூத<br>  மவைதமக் காற்ற லாகேன்<br>படுவன பலவுங் குற்றம்<br>  பாங்கிலா மனிதர் வாழ்க்கை<br>கெடுவதிப் பிறவி சீசீ<br>  கிளரொளிச் சடையி னீரே. 10 | செந்நிற ஒளி வீசும் சடையை உடைய பெருமானே! நீதி உணர்வு இல்லாத கூற்றுவன் வந்து நெருங்கும்போது உம்மை அறிவதற்கு உடன்படாது என்னை வருத்தும் ஐம்பொறிகளும் என்னை வருத்துவதனைப் பொறுக்க இயலாதேனாய் உயிருக்குத் துணையாக உதவாத இந்த மனித வாழ்விலே பல குற்றங்களும் நிகழ்கின்றமையின் இதனை இகழ்ந்து இப்பிறவிப் பிணியை அடியோடு அழித்தொழிக்க வேண்டி உம் அருளை வேண்டுகின்றேன். |

## 77. பொது

**(தனித் திருநேரிசைப் பதிகம்)**

கடும்பகல் நட்டம், நள்ளிருளில் நட்டம் என்ற இரண்டும் புரிந்தருள்பிரான் நம் முதல்வன் என்றும், எங்கும், எவ்வுயிருள்ளும், எப்பொருளிலும், எப்பொழுதும் அத்திருக்கூத்து நிகழ்தலின், கடும்பகலும், நள்ளிரவு மட்டும் சிறப்பாக எடுத்துக்கூற என்ன காரணம்?

இறைவன் ஆட்டுவிப்பவன். உயிர்கள் ஆடுவன. ஆடுதல் உயிர்களுக்கு நல்வாழ்வு. ஆட்டுதல் பேரிரக்கத்தின் விளைவு. அவனது பேரிரக்கம் கடும் பகலிலும், நள்ளிருளிலும் உள்ளது. எத்தொழில் புரிவோரும் கடும்பகலிலும், நள்ளிரவிலும் ஓய்வுருவர். கடவுளோ கடும்பகலிலும் ஆடுகிறார். துஞ்சிருளிலும் ஆடுகிறார். ஆட்டத்தின் பயன் அவருக்கில்லை. உயிருக்குத்தான். ஆதலின் **நாம் ஓய்வுறும் போதிலும் அவர் ஓயாமல் கூத்தாடும் சிறப்பால்** அவை விதந்து ஓதப்பட்டன.

746. கடும்பக னட்ட மாடிக்
கையிலோர் கபால மேந்தி
இடும்பலிக் கில்லந் தோறு
முழிதரு மிறைவ னீரே
நெடும்பொறை மலையர் பாவை
நேரிழை நெறிமென் கூந்தற்
கொடுங்குழை புகுந்த வன்றுங்
கோவண மரைய தேயோ. 1

இறைவரையும், சத்தியையும் நகைச்சுவையாகப் போற்றுகிறார்.

நடுப்பகலிலே கூத்தாடிக் கொண்டு கையில் ஒரு மண்டையோட்டினை ஏந்தி வழங்கப்படும் பிச்சைக்காக வீடுகள் தோறும் உலாவித் திரிகின்ற பெருமானே! இமவான் மகளாகிய சிறந்த அணிகலன்களையும் சுருண்ட மெல்லிய கூந்தலையும், வளைந்த காதணியையும் உடைய பார்வதி உமக்கு மனைவியாக வந்த போதும், இடுப்பில் கோவணத்துடன் தான் இருந்தீரோ?

747. கோவண முடுத்த வாறுங்
கோளர வசைத்த வாறும்
தீவணச் சாம்பர் பூசித்
திருவுரு விருந்த வாறும்
பூவணக் கிழவ னாரைப்
புலியுரி யரைய னாரை
ஏவணச் சிலையி னாரை
யாவரே யெழுது வாரே. 2

கோவணத்தை உடுத்து, கொடிய பாம்பினை இடுப்பில் இறுகக்கட்டி, தீப்போன்ற செந்நிற உடம்பில் சாம்பலைப் பூசி, அழகிய வடிவினராய், செந்தாமரைக் காடு அனைய நிறத்தை உடையவராய், புலித்தோலை இடையில் அணிந்தவராய், அம்புக்கு ஏற்ற அழகிய வில்லை உடையவருமான பெருமானின் வடிவழகினை ஓவியத்தில் எழுதவல்ல ஆற்றல் உடையவர் யாவர்?

748. விளக்கினாற் பெற்ற வின்ப
மெழுக்கினாற் பதிற்றி யாகும்
துளக்கினன் மலர்தொ டுத்தாற்
றூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின்
மெய்ஞ்ஞெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னார்க்
கடிகடா மருளு மாறே. 3

இப்பாட்டில் திருவலகு, மெழுக்கு, மாலை, விளக்கு, பாட்டு என்பனவாதி சரியை நெறிகளின் பலன் எடுத்துக்காட்டி வற்புறுத்தப்படுகிறது. விளக்கிட்டார் பேறு என்று நமிநந்தி அடிகள் வரலாறு போற்றப்படுகிறது.

கீதம் – சிவன் புகழ் பாடும் பாட்டுகள்.

திருக்கோயிலைப் பெருக்குவதனால் பெறும் இன்பத்தைப் போல அதனை மெழுகுவதனால் பத்து மடங்கு இன்பம் ஏற்படும். ஒளியை உடைய நல்ல மலர்களைப் பறித்து அவற்றை மாலையாகத் தொடுத்து இறைவனுக்கு ஒப்படைத்தால், தூய வீட்டுலகத்துக்கு இவ்வான்மா மேல் நோக்கிச் செல்லும். கோயிலில் விளக்கு ஏற்றுபவர்கள் உண்மை வழியில் செலுத்தும் ஞானமாகிய பேறு பெறுவர். **எல்லையில்லாத பாடல்களைப் பாடுபவர்களுக்கு** இறைவன் அருளும் வகைகள் எல்லை இல்லாதன.

| | |
|---|---|
| **749.** சந்திரற் சடையில் வைத்த<br>**சங்கரன்** சாம வேதி<br>அந்தரத் தமரர் பெம்மா<br>னானல்வெள் ளூர்தி யான்றன்<br>மந்திர நமச்சி வாய<br>வாகநீ ரணியப் பெற்றால்<br>வெந்தறும் வினையு நோயும்<br>வெவ்வழல் விறகிட் டன்றே. 4<br><br>சங்கரன் – இன்பஞ் செய்பவன். | பிறையைச் சடையில் சூடி, எல்லோருக்கும் நன்மை செய்யும் பெருமானாய், சாம வேதம் ஓதுபவனாய் வானத்திலுள்ள தேவர்களுக்கும் தலைவனாய், பெரிய வெண்ணிறக் காளை வாகனனாய் உள்ள பெருமானுடைய **திருவைந்தெழுத்தை ஓதி, திருநீற்றை அணிந்தால்** கொடிய நெருப்பில் இடப்பட்ட விறகு போல நம்முடைய நோய்களும், வினைகளும் வெந்து சாம்பலாகும். |
| **750.** புள்ளுவ ரைவர் கள்வர்<br>புனத்திடைப் புகுந்து நின்று<br>துள்ளுவர் சூறை கொள்வர்<br>தூநெறி விளைய வொட்டார்<br>முள்ளுடை யவர்க டம்மை<br>முக்கணான் பாத நீழல்<br>உள்ளிடை மறைந்து நின்றங்<br>குணர்வினா லெய்ய லாமே. 5 | வேடர்களும், திருடர்களும் போன்ற ஐம்பொறி களும் என் உள்ளத்தில் புகுந்து நின்று மகிழ்வோடு துள்ளிக் கொண்டு, அடியேன் தூய வழியிலே செயற்பட ஒட்டாமல் என்னைக் கொள்ளையடிக்கின்றன. தீமை புரிவதில் நுண்மை உடைய அவற்றைச் சிவபெருமானுடைய திருவடி நிழலிலே, அவை காணாதபடி மறைந்து நின்று சிவஞானம் என்னும் அம்பினால் எய்து அவற்றை நல்வழிப்படுத்தி0 விடலாம். |
| **751.** தொண்ட னேன்பிறந்து வாளாத்<br>தொல்வினைக் குழியில் வீழ்ந்து<br>பிண்டமே சுமந்து நாளும்<br>பெரியதோ ரவாவிற் பட்டேன்<br>அண்டனே யமரர் கோவே<br>யறிவனே யஞ்ச லென்னாய்<br>தெண்டிரைக் கங்கை சூடுந்<br>திகழ்தரு சடையி னானே. 6 | தேவனே! தேவர் தலைவனே! முக்காலமும் அறிபவனே! தெளிந்த அலைகளை உடைய கங்கையைச் சூடிய செவ்வொளி விளங்கும் சடையனே! உன் அடியவனாகிய யான், மனிதனாகப் பிறந்து வீணாகப் பழைய வினைகளாகிய குழியிலே விழுந்து இந்த உடம்பைச் சுமந்து கொண்டு நாள்தோறும் பெரிய ஆசையில் அகப்பட்டுத் தடுமாறுகின்றேன். அடியேனை அஞ்சேல்! என்று அருளுவாயாக. |
| **752.** பாறினாய் பாவி நெஞ்சே<br>பன்றிபோ லளற்றிற் பட்டுத்<br>தேறிநீ நினைதி யாயிற்<br>சிவகதி திண்ண மாகும்<br>ஊறலே யுவர்ப்பு நாறி<br>யுதிரமே யொழுகும் வாசல்<br>கூறையான் மூடக் கண்டு<br>கோலமாக் கருதி னாயே. 7<br><br>x x x x x x x x x x x x 8, 9 | தீவினையை உடைய நெஞ்சமே! பன்றியைப் போல இந்த உலக வாழ்வாகிய சேற்றில் அகப்பட்டு, பல திசைகளிலும் ஓடுகின்றாய். உப்பு நீர் ஊறி நாற்றமெடுத்துக் குருதி ஒழுகும் துவாரங்கள் மேற்கூரையாகிய தோலாலே மூடப்பட்டு உள்ள உடம்பின் நிலையை நீ அழகாகக் கருதுகிறாய். இதன் புன்மையைத் தெளிந்து நீ இறைவனை விருப்புற்று நினைப்பாயானால் உனக்கு நிச்சயமாகச் சிவகதி கிட்டும். |

753. உய்த்தகா லுதயத் தும்ப
ருமையவ ணடுக்கந் தீர
வைத்தகா லரக்க னோதன்
வான்முடி தனக்கு நேர்ந்தான்
மொய்த்தகான் முகிழ்வெண் டிங்கண்
மூர்த்தியெ னுச்சி தன்மேல்
வைத்தகால் வருந்து மென்று
வாடிநா னொடுங்கி னேனே. 10

திருவடிபட்டதால் அரக்கனும் வருந்தினான். நானும் வருந்தினேன். திருவடி நோகுமே என்று நான் வருந்த – அவன் வலி தாழாமல் அழுது வருந்தினான்.

இராவணன், கயிலை மலையை எடுக்கத் தொடங்கிய காலத்தில், பார்வதிக்கு ஏற்பட்ட அச்சம் தீர, பெருமான் தன்னுடைய கால் விரலை வைத்து அழுத்த அதற்கு இலக்காக இராவணன், தன் பெரிய தலைகளைக் கொடுத்தான். பிறை சூடிய மூர்த்தியாகிய பெருமானுடைய, வண்டுகள் மொய்க்கும் நறுமணம் உடைய மலர் போன்ற திருவடிகளை அப்பெருமான் கரடுமுரடான என் தலைமீது வைத்தால் அத்திருவடிகள் வருந்துமென்று அவை என் தலையைச் சாராதவாறு நான் தாழ்ந்து ஒடுங்கினேன்.

## 78. பொது
### (குறைந்த நேரிசைப் பதிகம்)

திருநேரிசை — பதிக எண் : 78

754. வென்றிலேன் புலன்க ளைந்தும்
வென்றவர் வளாகந் தன்னுள்
சென்றிலே னாத லாலே
செந்நெறி யதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றே
னீசனே னீச னேயோ
இன்றுளே னாளை யில்லே
னென்செய்வான் றோன்றி னேனே. 1

இந்தப் பதிகமும் அடுத்த பதிகமும் என் செய்வான் தோன்றினேனே என்ற குறிப்புடனே நிறைவுறுகின்றன.

எல்லோரையும் ஆளும் பெருமானே! அடியேன் ஐம்புலன்களையும் வென்றேன் அல்லேன். வென்ற சான்றோர்கள் உடைய சூழலிலுஞ் சென்றேன் அல்லேன். ஆதலால் நேர்மையான வழிக்கு அப்பாற்பட்டவனாய், உள்ளூர வருந்துகின்றேன். இன்று உயிருடன் இருக்கும் நான் நாளை உயிருடன் இருப்பேன் என்ற உறுதி இல்லை. அங்ஙனம் ஒரு பயனும் எய்தாமையின் எதற்காகத் தோன்றினேன் நான்?

755. கற்றிலேன் கலைகள் ஞானங்
கற்றவர் தங்க ளோடும்
உற்றிலே னாத லாலே
யுணர்வுக்குஞ் சேய னானேன்
பெற்றிலேன் பெருந்த டங்கட்
பேதைமார் தமக்கும் பொல்லேன்
எற்றுளே னிறைவ னேநா
னென்செய்வான் றோன்றி னேனே. 2

குறைந்த – குறைந்தடைந்த – தன் குறைப்பாட்டினை நினைந்து உருகிப் பணிந்து நிற்றல்.

ஞானக் கலைகளைக் கல்லாத நான் அவற்றைக் கற்ற ஞானிகளோடு தொடர்பு கொள்ளாததனால் நல்லுணர்வுக்கு அப்பாற்பட்டு விட்டேன். அத்தகைய நல்லறிவு இல்லாத நான் பெரிய நீண்ட கண்களை உடைய மகளிருக்கும் பொலிவு இல்லாதவனாய் உள்ளேன். இறைவனே! நான் எதற்காக இருக்கிறேன்? இம்மை மறுமை வீடுகளுள் எதனையும் தேட இயலாதவனாயினேன். எதற்காகப் பிறப்பெடுத்தேன் நான்?

756. மாட்டினேன் மனத்தை முன்னே
மறுமையை யுணர மாட்டேன்
மூட்டிநான் முன்னை நாளே
முதல்வனே வணங்க மாட்டேன்
பாட்டினாய் போல நின்று
பற்றதாம் பாவந் தன்னை
ஈட்டினேன் களைய மாட்டே
னென்செய்வான் றோன்றி னேனே. 3

என் மனத்தை இம்மையில் செலுத்தி, மறுமையை உணராது, வாழ்வின் தொடக்கத்திலேயே இறைவனை வணங்காது, பெருமை இல்லாத நாய் போல நின்று, உலகப் பற்றாகிய பாவத்தைத் தேடி, அதனை நீக்காதவனாய் எதற்காகப் பிறப்பெடுத்தேன் நான்?

757. கரைக்கடந் தோத மேறுங்
கடல்விட முண்ட கண்டன்
உரைக்கடந் தோது நீர்மை
யுணர்ந்திலே னாத லாலே
அரைக்கிடந் தசையு நாக
மசைப்பனே யின்ப வாழ்க்கைக்
கிரைக்கடைந் துருகு கின்றே
னென்செய்வான் றோன்றி னேனே. 4

இத்திருப்பதிகம் சிவவழிபாடில்லாத பிறவியின் பயனின்மையை உணர்த்திற்று.

கரையைக் கடந்து வெள்ளம் பெருகும் கடலில் தோன்றிய விடத்தை உண்ட கழுத்தை உடைய சிவபெருமான் சொல்லையும் கடந்த பெருமையை உடையவன். ஆதலின் அவனைப் பற்றிப்பேசும் தன்மை உணராதேன். ஆதலின் இடையில் பாம்பினை இறுகக் கட்டிய அப் பெருமானை நோக்கி, சிற்றின்பம் விளைக்கும் உலக வாழ்விற்கும், பசியைப் போக்கும் உணவிற்கும் அடையத் தகாதாரை அடைந்து நெஞ்சு உருகிப் பொழுது போக்கும் நான் எதற்காகப் பிறப்பெடுத்தேன் என்று கூறி அவன் அருளை வேண்டுகின்றேன்.

758. செம்மைவெண் ணீறு பூசுஞ்
சிவனவன் றேவ தேவன்
வெம்மைநோய் வினைக டீர்க்கும்
விகிர்தனுக் கார்வ மெய்தி
அம்மைநின் றடிமை செய்யா
வடிவிலா முடிவில் வாழ்க்கைக்
கிம்மைநின் றுருகு கின்றே
னென்செய்வான் றோன்றி னேனே. 5

செம்மையான மேனியில், திருநீற்றைப் பூசும் சிவபெருமானாகிய, கொடிய வினைகளைப் போக்கும் தேவ தேவன் ஆகிய அந்த விகிர்தன்பால் விருப்புற்று முற்பிறப்பில் அடிமை செய்யாத பயனற்ற வாழ்க்கைச் செயலை நினைத்து, இப்பிறப்பில் உருகுகின்றேன். எதற்காகப் பிறப்பெடுத்தேன் நான்?

759. பேச்சொடு பேச்சுக் கெல்லாம்
பிறர்தமைப் புறமே பேசக்
கூச்சிலே னாத லாலே
கொடுமையை விடுமா றோரேன்
நாச்சொலி நாளு மூர்த்தி
நன்மையை யுணர மாட்டேன்
ஏச்சுளே நின்று மெய்யே
யென்செய்வான் றோன்றி னேனே. 6

பேசும்போதெல்லாம் பிறரைப் புறம் கூறும் செயலை நீங்காதேனாய், கொடுமையை அறியேனாய், சிவபெருமானுடைய பெருமையை நாவினாலே சொல்லி அவன் செய்யும் நன்மையை உணரமாட்டேனாய், இகழ்ச்சிக்கு இடமாகிய இந்த உடம்பில் இன்னும் இருந்து கொண்டுள்ளேன். யாது செய்வதற்காகப் பிறந்தேன் நான்?

| | |
|---|---|
| 760. தேசனைத் தேச மாகுந்<br>திருமாலோர் பங்கன் றன்னைப்<br>பூசனைப் புனிதன் றன்னைப்<br>புணரும்புண் டரிகத் தானை<br>நேசனை நெருப்பன் றன்னை<br>நிவஞ்சகத் தகன்ற செம்மை<br>ஈசனை யறிய மாட்டே<br>னென்செய்வான் றோன்றி னேனே. 7 | ஒளி உடையவனாய், உலகங்கள் புகழும் திருமாலை ஒரு பாகமாக உடையவனாய், எல்லாராலும் வணங்கப்படுபவனாய், தூயவனாய், அடியாருடைய உள்ளத் தாமரையில் இருப்பவனாய், அன்பனாய், தீயை ஏந்துபவனாய், செம்பொருளாய் உள்ள பெருமானை அறிய முடியாதவனாகின்றேன். எதற்காகப் பிறந்தேன் நான்? |
| 761. விளைக்கின்ற வினையை நோக்கி<br>வெண்மயிர் விரவி மேலும்<br>முளைக்கின்ற வினையைப் போக<br>முயல்கிலே னியல வெள்ளம்<br>திளைக்கின்ற முடியி னான்<br>தன்றிருவடி பரவ மாட்டா<br>திளைக்கின்றே னிருமி யூன்றி<br>யென்செய்வான் றோன்றி னேனே. 8 | இன்ப துன்பப் பயன்களை நல்கும் வினையை நினைத்து மயிர் வெளுத்த பிறகும் முளைத்து வளருகின்ற வினையைப் போக்குதற்கு முயலாது, கங்கை தங்கிய சடையை உடைய சிவபெருமானுடைய திருவடிகளை முன்நின்று வழிபட மாட்டாமல், வீணாக இருமிக்கொண்டு, தடியை ஊன்றி இளைக்கும் நிலையினன் ஆகின்றேன். எதற்காகப் பிறப்பெடுத்தேன் நான்? |
| 762. விளைவறி விலாமை யாலே<br>வேதனைக் குழியி லாழ்ந்து<br>களைகணு மில்லே னெந்தாய்<br>காமரங் கற்று மில்லேன்<br>தளையவிழ் கோதை நல்லார்<br>தங்களோ டின்ப மெய்த<br>இளையனு மல்லே னெந்தா<br>யென்செய்வான் றோன்றி னேனே. 9 | எந்தாய்! பின் விளையும் பயனை அறியாமையால் வேதனையாகிய குழியிலே விழுந்து, ஆழ்ந்து பற்றுக்கோடு இல்லாது இருக்கின்றேன். உன்னை வசீகரிக்கும் இசையைக் கற்றேனும் அல்லேன். மாலையை அணிந்த பெண்களோடு இன்பமாக வாழ இளையேனும் அல்லேன். அடியேன் எதற்காகப் பிறப்பெடுத்தேன் நான்? |
| 763. வெட்டன வுடைய னாகி<br>வீரத்தான் மலையெ டுத்த<br>துட்டனைத் துட்டுத் தீர்த்துச்<br>சுவைபடக் கீதங் கேட்ட<br>அட்டமா மூர்த்தி யாய<br>வாதியை யோதி நாளும்<br>எட்டனை யெட்ட மாட்டே<br>னென்செய்வான் றோன்றி னேனே. 10 | கடும் போக்கு உடையனாகி, தன் வீரத்தைக் காட்டக் கயிலை மலையைப் பெயர்க்கத் தொடங்கிய தீயவனாகிய இராவணனின் செருக்கை அடக்கி அவன் வாயினின்றும் சுவையாகச் சாம வேதகீதம் கேட்ட அட்டமூர்த்தியாகிய சிவபெருமானுடைய பெருமையைச் சொல்லி அவனை எள்ளளவும் அணுகமாட்டேன் எதற்காகப் பிறப்பெடுத்தேன் நான்? |

## 79. பொது

**(குறைந்த நேரிசைப் பதிகம்)**

**திருநேரிசை** **பதிக எண் : 79**

**764.** தம்மானங் காப்ப தாகித்
தையலார் வலையு ளாழ்ந்து
அம்மானை யமுதன் றன்னை
யாதியை யந்த மாய
செம்மான வொளிகொண் மேனிச்
சிந்தையு ளொன்றி நின்ற
எம்மானை நினைய மாட்டே
னென்செய்வான் றோன்றி னேனே. 1

மகளிருக்கு அவமானம் உண்டாகாதவாறு காக்கும் முயற்சியில் ஈடுபட்டு, அவர்களுடைய கண்வலையிற்பட்டு, அதனால் தலைவனாய் அமுதம் போன்று இனியனாய், எல்லாவற்றுக்கும் ஆதியும் அந்தமும் தானாக உள்ளவனாய், செம்மேனி அம்மானாய், அடியேனுடைய உள்ளத்தில் நிலைபெற்றிருக்கும் எம்முடைய தலைவனை விருப்புற்று நினைய மாட்டேன். யாது செய்வதற்காக இவ்வுலகிற் பிறப்பெடுத்துள்ளேன் நான்?

**765.** மக்களே மணந்த தார
மவ்வயிற் றவரை யோம்பும்
சிக்குளே யழுந்தி யீசன்
றிறம்படேன் றவம தோரேன்
கொப்புளே போலத் தோன்றி
யதனுளே மறையக் கண்டும்
இக்களே பரத்தை யோம்ப
வென்செய்வான் றோன்றி னேனே. 2

மனைவி, மக்கள், அவர்களுடைய மக்கள் ஆகியவர்களைப் பாதுகாக்கும் பாசப் பிணைப்பான வாழ்க்கைச் சிக்கலுக்குள் அழுந்தி எம்பெருமான் பற்றிய செய்திகளில் ஈடுபடாது, தவம் என்பதனை உணராது, நீர்க்குமிழி போலத் தோன்றி மறையும் பயனற்ற இவ்வுடம்பைப் பாதுகாப்பதற்கே முயல்கின்றேன். யாது செய்வதற்காகப் பிறப்பெடுத்தேன் நான்?

**766.** கூழையே னாக மாட்டேன்
கொடுவினைக் குழியில் வீழ்ந்து
ஏழினின் னிசையி னாலு
மிறைவனை யேத்த மாட்டேன்
மாழையொண் கண்ணி னல்ல
மடந்தைமார் தமக்கும் பொல்லேன்
ஏழையே னாகி நாளு
மென்செய்வான் றோன்றி னேனே. 3

கொடிய வினையின் பயனாகிய குழியில் விழுந்து எம்பெருமான் திருவடிக்கண் அன்பினால் குழையும் இயல்பு இல்லாதேனாய், ஏழிசையால் இறைவன் பெருமையைப் பாடமாட்டாதேனாய், இளைய ஒளி பொருந்திய கண்களை உடைய நல்ல பெண்களுக்கும் பொலிவு இல்லாதேனாய், அறிவற்றேனாய்க் காலத்தைக் கழித்தவனாயினேன். என்ன செயல் செய்வதற்காக இவ்வுலகில் பிறப்பெடுத்தேன் நான்?

---

குழைமை – கூழைமை; கூழை – பின்பு; பின் நிற்கும் வழிபாடு. மாழை – இளமை.

| | |
|---|---|
| 767. முன்னையென் வினையி னாலே<br>மூர்த்தியை நினைய மாட்டேன்<br>பின்னைநான் பித்த னாகிப்<br>பிதற்றுவன் பேதை யேனான்<br>என்னுளே மன்னி நின்ற<br>சீர்மைய தாயி னானை<br>என்னுளே நினைய மாட்டே<br>னென்செய்வான் றோன்றி னேனே. 4 | முற்பிறப்பில் செய்த என் வினைப்பயனாலே பெருமானை நினைக்க இயலாத அடியேன் உலகியலிலே ஈடுபட்டு இவ்வுலக இன்பங்களையே மேம்பட்டவனாகப் பிதற்றிக் கொண்டிருப்பேனானேன். அறிவில்லாத அடியேன் என் உள்ளத்தினுள்ளே நிலை பெற்றிருத்தலை தமது சிறப்பியல்பாக உள்ள பெருமானை என்னுள் வைத்துத் தியானிக்க மாட்டாதேனாகின்றேன். வேறு யாது செயல் செய்வதற்காக இவ்வுலகில் தோன்றினேன் நான்? |
| 768. கறையணி கண்டன் றன்னைக்<br>காமரங் கற்று மில்லேன்<br>பிறைநுதற் பேதை மாதர்<br>பெய்வளை யார்க்கு மல்லேன்<br>மறைநவி னாவி னானை<br>மன்னிநின் றிறைஞ்சி நாளும்<br>இறையேயு மேத்த மாட்டே<br>னென்செய்வான் றோன்றி னேனே. 5 | நீலகண்டனை வசப்படுத்த இசைத்துறைகளைக் கற்றேனும் அல்லேன். பிறைபோன்ற நெற்றியை உடைய வளையலை அணிந்த பேதைமைக் குணத்தை உடைய மகளிரை வசப்படுத்தும் திறத்தேனும் அல்லேன். வேதங்களை ஓதும் நாவினை உடைய எம் பெருமானை நிலையாக நின்று ஒருநாளும் சிறிதளவும் போற்ற மாட்டாதேனாகிறேன். வேறு யாது செயல் செய்வதற்காக இவ்வுலகில் பிறப்பெடுத்தேன் நான்? |
| 769. வளைத்துநின் றைவர் கள்வர்<br>வந்தெனை நடுக்கஞ் செய்யத்<br>தளைத்துவைத் துலையை யேற்றித்<br>தழலெரி மடுத்த நீரில்<br>திளைத்துநின் றாடு கின்ற<br>வாமைபோற் றெளிவி லாதேன்<br>இளைத்துநின் றாடு கின்றே<br>னென்செய்வான் றோன்றி னேனே. 6<br><br>இப்பதிகமும் சிவ வழிபாடு இல்லாத பிறவியின் பயனின்மையை உணர்த்திற்று. | ஐந்து கள்வர் போன்ற ஐம்பொறிகள் இவ்வுடம்பில் என் உள்ளத்தைச் சுற்றி நின்று கொண்டு என்னை நடுங்கச் செய்தலால், எங்கும் செல்லாதபடி பிணித்து வைத்துப் பாத்திரத்தில் நீரை நிரப்பி அப்பாத்திரத்தைத் தீயினால் சூடாக்க, அந்நீரிலே பிணியை அவிழ்த்து நீந்தவிட்ட அளவிலே மகிழ்வோடி நீந்தி விளையாடிக் கொண்டு சூட்டில் வெந்து உயிர் நீங்க இருக்கும் அவலத்தைப் பற்றிச் சிந்திக்க மாட்டாத ஆமையைப் போல உள்ளத்தெளிவு இல்லாதேனாய் வாழ்க்கையில் இளைத்து நின்று தடுமாறுகின்றேன். வேறு யாது செய்வதற்காகப் பிறப்பெடுத்தேன் நான்? |

## 80. கோயில்

பண் : கொல்லி பதிக எண் : 80

### ஆடற்காட்சி

770. பாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாடம்
நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயற்
றில்லைதன்னுள்
ஆள வுடைக்கழற் சிற்றம் பலத்தரன்
**ஆடல்கண்டாற்**
பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப் பேய்த்தொண்டர்
காண்பதென்னே. 1

பாளையை உடைய பாக்கு மரங்கள் உயர்ந்து வளர்ந்த மாடவீடுகள் நெருக்கமாக அமைய, வாளை மீன் குதிக்கும் தண்ணீர் அலை எறியும் வயல்களையுடைய தில்லை நகரிலே, நம்மை ஆட்கொள்ளுதலுக்காக அமைந்த திருவடிகளை உடைய சிற்றம்பலத்துப் பெருமானுடைய ஆடலைக் காணும் வாய்ப்பினைப் பெற்றால், அதன்பின் பீளை ஒழுகும் கண்களால், பிடித்ததனை விடாத பேய் போன்ற இயல்பை உடைய அடியார்கள், தம் கண்களால் காணத்தக்க மேம்பட்ட பொருள் யாதுள்ளதோ!

---

இப்பதிகத்தின் பாடல்களை சுவாமிகள் பாதாதிகேசமாகப் பாடுகிறார். முதற்பாடல் ஆடற்காட்சி. இரண்டு முதல் ஒன்பது வரை பாதாதி கேச வர்ணனை. நிறைவுப் பாடல் திருவடிப் பெருவிரற் காட்சி.

### திருவடிக் காட்சி

771. பொருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி
புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை மணாள
னுலகுக்கெல்லாம்
திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
**றிருவடி யைக்கண்ட** கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே. 2

போரிடும் காளை ஒன்றினையுடைய புண்ணிய வடிவினனாய், புலித்தோல் ஆடையனாய், அழகிய பார்வதி மணாளனாய், அந்தணர்கள் வாழ்கின்ற பதியாய் உலகத்தவருக்கெல்லாம் பேரின்பச் செல்வத்தை நல்கும் தில்லையிலுள்ள சிற்றம்பலத்துக் கூத்து நிகழ்த்தும் பெருமானுடைய திருவடிகளைக் கண்ட கண்களால், காண்பதற்குப் பிறிதொரு பொருள் யாதுள்ளதோ ?

### துகிற் காட்சி

772. தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங்கொண்
டெப்பொழுதும்
அடுத்து வணங்கு மயனொடு மாலுக்குங்
காண்பரியான்
பொடிக்கொண் டணிந்துபொன் னாகிய தில்லைச்சிற்
றம்பலவன்
**உடுத்த துகில்கண்ட** கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே. 3

மாலையாகத் தொடுக்கப்பட்ட மலரொடு புகைக்கு உரியனவும் சந்தனமும் கைகளிற் கொண்டு, எப்பொழுதும் அணுகி வந்து வணங்கும் பிரமனுக்கும் திருமாலுக்கும் தம் முயற்சியினாற் காண்பதற்கு அரியவனாய்த் திகழ்பவனாகித் திருநீறணிந்து பொன்மயமான தில்லைச் சிற்றம்பலத்து ஆடும் பெருமான் அணிந்த புலித்தோலாடையைக் கண்ட கண் கொண்டு காண்பதற்குப் பிறிது பொருள் யாதுள்ளதோ!

### கச்சுக் காட்சி

**773.** **வைச்ச பொருணமக் காகுமென் றெண்ணி**
நமச்சிவாய
அச்ச மொழிந்தே னணிதில்லை யம்பலத்
தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி யுந்தியின்
மேலசைத்த
**கச்சி னழகு**கண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே. 4

நமக்குச் சேமவைப்பாக இருக்கின்ற பொருள் திருவைந்தெழுத்தே என்று விருப்புற்று நினைத்துப் பேரின்ப வாழ்வு குறைவற நடக்கும் என்று துணிந்து அச்சம் ஒழிந்தேன். அழகான தில்லை நகரிலே உள்ள சிற்றம்பலத்தில் கூத்து நிகழ்த்துகின்றவனாய், அடியவர் திறத்துப் பித்தனாய், பிறப்பு அற்றவனாய் நந்தி என்ற பெயரினனாய் உள்ள பெருமானுடைய கொப்பூழின் மேல் இடுப்பைச் சுற்றிக் கட்டப்பட்ட உதரபந்தமாகிய கச்சின் அழகைக் காணப்பெற்றால் பின்னைக் காண வேண்டிய உயர்ந்த பொருள் யாதுள்ளதோ!

### கை நின்ற காட்சி

**774.** செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு
மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல
மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற வாடல்கண் டாற்பின்னைக்
கண்கொண்டு
காண்பதென்னே. 5

வயலிலே காண்கின்ற பூங்கொடியில் நீலோற்பல மலர்கள் மலரும் வளமுள்ள தில்லைப்பதியில் உறையுஞ் சிற்றம்பலவனாய் நெய்யில் நின்றெரியும் தீபச்சுடர் போன்று ஒளிவிடும் நீலமணி மிடற்றனுமாய பெருமான், கருமை நிலைபெற்ற ஒளிமிக்க கண்களை உடைய சிவகாமியம்மையார் கண்டு மகிழ்ந்து நிற்க வைத்துச் செய்வதும் என்று வந்தாய் எனும் திருக்குறிப்புப் புலப்பட நின்று இயற்றுவதுமான ஆடலைக் கண்டபின் காணத்தகும் பொருள் வேறு யாதுளதோ!

### கண்டத்து எயிற்றுக் காட்சி

**775.** ஊனத்தை நீக்கி யுலகறி யவென்னை
யாட்கொண்டவன்
றேனொத் தெனக்கினி யான்றில்லைச் சிற்றம்
பலவனெங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை யுண்டகண்
டத்திலங்கும்
ஏனத் தெயிறுகண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே. 6

அவைதிக சமயத்தைச் சார்ந்தவனாயினேன் என்ற என் குறையைப் போக்கி, அடியேனைச் சூலைநோய் அருளி ஆட்கொண்டு, அடியேனுக்குத் தேனை ஒத்து இனியனாய்த் தில்லைச் சிற்றம்பலவனாய் உள்ள எம் தலைவன், தேவர்கள் உயிர் பிழைக்குமாறு கொடிய விடத்தை உண்டு இருத்திய கழுத்தில் அணிந்திருக்கும் மகாவராகத்தின் கொம்பின் வனப்பைக் கண்டால் பின், காண்பதற்கு மேம்பட்ட பொருள் பிறிது யாதுள்ளதோ!

## திருமுகக் காட்சி

776. தெரிந்த கணையாற் றிரிபுர மூன்றுஞ்செந்
தீயின்மூழ்க
எரித்த விறைவ னிமையவர் கோமா
னிணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
**சிரித்த முகங்கண்ட** கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே. 7

ஆராய்ந்து எடுத்த அம்பாலே வானத்தில் உலவிய மதில்கள் மூன்றும் நெருப்பில் மூழ்குமாறு தீக்கு இரையாக்கிய தலைவனாய், தேவர்கள் மன்னனாய் உள்ள சிவபெருமானுடைய திருவடிகளைத் தம்முள் கொண்டு தாங்கும் மனத்தை உடைய அடியவர்கள் வாழ்கின்ற தில்லை நகரிலே சிற்றம்பலத்தில் கூத்து நிகழ்த்தும் அப்பெருமானுடைய சிரித்த முகத்தைக் கண்ட கண்களால் இனிக் காண்பதற்கு மேம்பட்ட பொருள் பிறிது யாதுள்ளதோ!

## நெற்றிக் கண்காட்சி

777. சுற்று மமரர் சுரபதி நின்றிருப்
பாதமல்லாற்
பற்றொன் றிலோமென் றழைப்பப் பரவையுள்
நஞ்சையுண்டான்
செற்றங் கநங்கனைத் தீவிழித் தான்றில்லை
யம்பலவன்
நெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே. 8

சுற்றிச் சூழும் தேவர்களும், இந்திரனும் 'உன் திருவடிகளைத் தவிர எங்களுக்கு வேறு பற்றுக்கோடு இல்லை' என்று கூறி ஆலகால விடத்தை அடக்குமாறு சிவபெருமானை வேண்டிய போது அவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கிக் கடலில் தோன்றிய விடத்தை உண்டவனாகி தில்லை நகரில் சிற்றம்பலத்தில் கூத்து நிகழ்த்தும் பெருமான், மன்மதனை வெகுண்டு சாம்பலாகுமாறு விழித்த நெற்றிக் கண்ணைக் கண்ட கண்ணால் இனிக் காண்பதற்கு மேம்பட்ட பொருள் பிறிது யாது உளதோ!

## சென்னியின் தூமத்த மலர்க்காட்சி

778. சித்தத் தெழுந்த செழுங்கம லத்தன்ன
சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
முத்தும் வயிரமு மாணிக்கம் தன்னுள்
விளங்கியதூ
மத்த மலர்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே. 9

உள்ளத்திலே முளைத்துச் செழித்து மலர்ந்த செழுந்தாமரை மலர்களை ஒத்த திருவடிகளை நிலையாக மனத்தில் இறுத்திய சான்றோர்கள் வாழும் தில்லையம்பதியில் உள்ள சிற்றம்பலத்தானுடைய முத்தும் வயிரமும் மாணிக்கமும் தூய மலர்களும் அணிந்த திருச்சென்னியின் மலரழகைக் கண்ட கண்களால் இனி மேம்பட்டதாகக் காண்பதற்குரிய பொருள் பிறிது யாதுள்ளதோ!

779. தருக்கு மிகுத்துத்தன் றோள்வலி யுன்னித்
தடவரையை
வரைக்கைக ளாலெடுத் தார்ப்ப மலைமகள்
கோன்சிரித்து
அரக்கன் மணிமுடி பத்து மணிதில்லை
யம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு
காண்பதென்னே. 10

இராவணன் செருக்கு மிகுத்துத் தன் தோள் வலிமையை மிகுதியாகக் கருதிப் பெரிய கயிலைமலையைத் தன் மலை போன்ற கைகளால் எடுத்து ஆரவாரம் செய்ய அதனைக் கண்டு பார்வதி கொழுநனாகிய தில்லைச் சிற்றம்பலவன் சிரித்து இராவணனுடைய கிரீடங்கள் அணிந்த தலைகள் பத்தினையும் நெருக்கி மிதித்த திருக்கால் விரலைக் கண்ட கண்களால் காண்பதற்கு மேம்பட்ட பொருள் பிறிது யாதுள்ளதோ!

## 81. கோயில்

பண் : கொல்லி

பதிக எண் : 81

780. கருநட்ட கண்டனை யண்டத் தலைவனைக்
கற்பகத்தைச்
செருநட்ட மும்மதி லெய்யவல் லானைச்செந்
தீமுழங்கத்
திருநட்ட மாடியைத் தில்லைக் கிறையைச்சிற்
றம்பலத்துப்
பெருநட்ட மாடியை வானவர் கோனென்று
வாழ்த்துவனே. 1

தேவாசுரர் வாழ்விற்குரிய கருவை நட்டகண்டன் என்றும் கொள்ளலாம். திருநட்டம் – திருக்கூத்து.

கருமை நிலைபெற்ற நீலகண்டனாய், உலகங்களுக்குத் தலைவனாய், கற்பகம் போல அடியவர் வேண்டியன வழங்குபவனாய், போரில் ஈடுபட்ட மும்மதில்களையும் அழிக்க வல்லவனாய், அங்கையில் வைத்த செந்தீ ஒலிக்க அழகிய கூத்தாடுபவனாய், தில்லை நகர்த்தலைவனாய்ச் சிற்றம்பலத்து மகாதாண்டவம் ஆடிய பெருமானைத் 'தேவர்கள் தலைவன்' என்று வாழ்த்துவேன்.

781. ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக்
கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற் கடிந்தா
னடியவற்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம்
பலத்துநட்டம்
**என்றுவந் தாயென்னு** மெம்பெரு மான்றன்
றிருக்குறிப்பே. 2

வெகுண்டு வந்த கூற்றுவனை அடியவன் பொருட்டுக் காலால் ஒறுத்தவனாய்த் தில்லை நகரில் திருச்சிற்றம்பலத்தில் என்று வந்தாய் என்னும் திருக்குறிப்புத் தோன்றும்படி கவித்த திருக்கையுடன் எம்பெருமான் நிகழ்த்தும் கூற்றினைச் சென்று தொழுமின்கள். அக்கூத்தினையே மனம் பொருந்தி நினைமின்கள். உங்களுக்குப் பிறப்பு இறப்பு அகலாமையாகிய குறைபாடு இனி இராது.

நமது உடைமைப் பொருள்களுக்கு ஆவணமெழுத சார் பதிவாளர் அலுவலகம் நாடி, பதிவாளர் முன் அவற்றை எழுதித் தருகிறோம் அல்லது பெறுகிறோம். ஆனால் உயிர் ஆவணம் செய்ய பதிவாளர் அலுவலகம் சிவாலயம் ஆகும். அங்கு கூத்தப்பெருமான் முன்னின்று உயிர் ஆவணம் மானசீகமாகச் செய்து கொடுத்தால் "என்று வந்தாய் ?" என்ற திருக்குறிப்புக் கிடைக்கும்.

| | |
|---|---|
| 782. கன்மன வீர்கழி யுங்கருத் தேசொல்லிக்<br>காண்பதென்னே<br>நன்மன வர்நவி றில்லையுட் சிற்றம்<br>பலத்துநட்டம்<br>பொன்மலை யில்வெள்ளிக் குன்றது போலப்<br>பொலிந்திலங்கி<br>என்மன மேயொன்றிப் புக்கனன் போந்த<br>சுவடில்லையே. 3 | கல்போன்ற திண்ணிய மனமுடைய உலகமக்களே! உங்கள் மனத்திடை அவ்வப் போது தோன்றும் விருப்பங்களை வெளியிட்டு அவற்றை நிறைவேற்றித் தரல் வேண்டும் என்று வேண்டி நல்ல உள்ளம் படைத்த சான்றோர்கள் வாழும் தில்லை நகர்ச் சிற்றம்பலத்தில் எம்பெருமான் நிகழ்த்தும் கூத்தினைத் தரிசிப்பதனால், ஆன்ம லாபத்தை விடுத்து இம்மையிற் கிட்டும் அற்பசாரங்களால் யாது பயன்? தில்லைச் சிற்றம்பலத்திலே பொன்மலை மீது வெள்ளிமலை இருப்பது போல கூத்தப்பிரான் காட்சி வழங்கித் தான்புகுந்த சுவடு புலப்படாமல் அடியேனுடைய மனத்திலே உறுதியாக நிலைபெற்றவனாக வந்து சேர்ந்து விட்டான். |
| 783. குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற்<br>குமிண்சிரிப்பும்<br>பனித்த சடையும் பவளம்போன் மேனியிற்<br>பால்வெண்ணீறும்<br>இனித்த முடைய வெடுத்தபொற் பாதமுங்<br>காணப்பெற்றால்<br>மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த<br>மாநிலத்தே. 4<br><br>மானுடப் பிறவி எப்போது மட்டும் வேண்டும்? மன்றாடுந் திருக்காட்சி கிடைக்கப் பெறின் வேண்டா என வெறுத்திழிக்கும் பிறவியும் வேண்டும். கூத்தப் பெருமானின் திருமுன்பு அடியார்கள் பாடி மகிழும் பாடலாகும். | வளைந்த புருவங்களையும், கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயிலே முகிழ்க்கும் புன்னகையையும், கங்கையால் ஈரமான சடைமுடியையும், பவளம் போன்ற சிவந்த திருமேனியில் அணிந்த பால் போன்று வெண்மையான வெண்ணீற்றுப் பூச்சினையும், பேரின்பம் நல்கும் தூக்கிய திருவடிகளையும் காணும் வாய்ப்பினைப் பெறுவதாம் பட்சத்தில் இவ்வுலகில் மனிதராய்ப் பிறப்பெடுத்தலும் விரும்பத்தக்க செயலாகும். |
| 784. **வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி<br>மதித்திடுமின்**<br>பார்த்தற்குப் பாசு பதமருள் செய்தவன்<br>பத்தருள்ளீர்<br>கோத்தன்று முப்புரந் தீவளைத் தான்றில்லை<br>யம்பலத்துக்<br>கூத்தனுக் காட்பட் டிருப்பதன் றோநந்தங்<br>**கூழைமையே.** 5<br><br>பிரதைக்குப் புதல்வன் – பார்த்தன் / அருச்சுனன்.<br>கூழைமை – ஆண்டான் அடிமைத் திறத்துக்குரியது. | சிவபெருமானுடைய அடியார்களே! நமக்கு நல்வினை காரணமாக இந்த ஒப்பற்ற மனிதப் பிறவி நமக்குக் கிட்டியுள்ளது. இந்த மனிதப் பிறவியை மதித்துச் செயற்படுவீராக. அருச்சுனனுக்குப் பாசுபதாத்திரம் அருளிச் செய்தவனாய், முப்புரங்களை அம்பு எய்து தீக்கு இரையாக்கியவனாய், தில்லை அம்பலத்துள் கூத்து நிகழ்த்தும் அப்பெருமானுக்கு அடியவராக இருப்பதன்றோ நம் **அடிமைப் பண்பாகும்?** |

785. பூத்தன பொற்சடை பொன்போன் மிளிரப் புரிகணங்கள்
ஆர்த்தன கொட்டி யரித்தன பல்குறட் பூதகணந்
தேத்தென வென்றிசை வண்டுகள் பாடுசிற் றம்பலத்துக்
கூத்தனிற் கூத்துவல் லாருள ரோவென்றன் கோல்வளைக்கே. 6

பூத்துக் குலுங்குவது போன்ற பொலிவை உடைய செஞ்சடை கொன்றை மலரை அணிந்து பொன்போல ஒளிவீச, அடியார் கூட்டங்கள் மகிழ்ச்சியால் ஆரவாரிக்க, பூதக் கூட்டங்கள் வாத்தியங்களை ஒலிக்க, 'தெத்தே' என்று வண்டுகள் ஒலிக்கும் தில்லை நகரிலுள்ள சிற்றம்பலத்திற் கூத்தினை நிகழ்த்தும் சிவபெருமானைப் போல, திரண்ட வளையல்களை அணிந்த என் மகளுடைய மனத்தைத் தம் நாட்டியத்தால் கவரவல்லவர் பிறர் உளரோ ? (என்று முக்கணான் முயக்கம் வேட்ட பெற்றிகண்டு தாய் இரங்கிக் கூறியவாறு).

786. முடிகொண்ட மத்தமு முக்கண்ணி னோக்கு முறுவலிப்புந்
துடிகொண்ட கையுந் துதைந்த வெண்ணீறுஞ் சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலுமென் **பாவிநெஞ்சிற்**
**குடிகொண்ட வா**தில்லை யம்பலக் கூத்தன் குரைகழலே. 7

தில்லை நகரில் சிற்றம்பலத்திற் கூத்து நிகழ்த்தும் எம் பெருமானுடைய ஒலிக்கின்ற கழல்களை அணிந்த திருவடிகளோடு தலையில் அணிந்த ஊமத்தைப் பூவும், மூன்று கண்களின் பார்வையும், புன்சிரிப்பும், உடுக்கையை ஒலிக்கும் திருக்கையும், உடல் முழுதும் பூசிய திருநீறும், பார்வதியை இடப் பாகமாகக் கொண்ட தனக்குரிய வலப்பாகமும், இடுப்பு முழுதும் பரவி உடுக்கப்பட்ட புலித்தோலும் உலகப் பொருள்களிலே ஈடுபட்டுத் தீவினையை ஈட்டிய அடியேனுடைய பாவியான உள்ளத்தில் இப்பொழுது நிலையாக இடம்பெற்றுவிட்டன.

787. **படைக்கல மாகவுன் னாமத் தெழுத்தஞ்சென்** நாவிற்கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக் காட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் றொழுது வணங்கித் தூநீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம் பலத்தரனே. 8

அற்புதமான பாடல்களில் ஒன்றாகும். அடியார்களின் மனனப் பாடல்களில் ஒன்றாகும். ஏழு பிறப்பன்று. எழுவகைப் பிறப்பு. அவை தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பதாகும். நால் வகைத் தோற்றம்,

1. முட்டையிலிருந்து தோன்றுவன
2. கருப்பையிலிருந்து தோன்றுவன
3. விதையிலிருந்து தோன்றுவன
4. வியர்வையிலிருந்து தோன்றுவன.

அழகிய தில்லை நகரிலுள்ள சிற்றம்பலத்தில் உள்ள பெருமானே! **என்னை ஏழையர் செய்யக்கூடிய தீங்குகளிலிருந்து பாதுகாக்கும் படைக்கருவியாக உன் திருநாமமாகிய திருவைந்தெழுத்தினையும்** அடியேன் நாவினில் நீங்காது கொண்டுள்ளேன். இடையில் ஒரு போதும் உனக்கு அடிமைத் தொண்டு செய்தலைத் தவிர்ந்தேன் அல்லேன். எழுவகைப்பட்ட பிறப்புகளில் **எந்தப் பிறவி எடுத்தாலும் எடுத்த பிறவிக்கு ஏற்ப உனக்கு அடிமைத் தொண்டு செய்கிறேன். அடியேனை நீ விலக்கினாலும் அடியேன் உன்னை விட்டுப் பெயரேன்.** எப்பொழுதும் உன்னை மனத்தால் தொழுது உடலால் வணங்கித் திருநீறு அணிந்து உன்னால் காக்கப்பட வேண்டிய பொருளாக அடியேன் உள்ளேன்.

**788.** பொன்னொத்த மேனிமேல் வெண்ணீ றணிந்து
புரிசடைகண்
மின்னொத் திலங்கப் பலிதேர்ந் துழலும்
விடங்கர்வேடச்
சின்னத்தி னான்மலி தில்லையுட் **சிற்றம்
பலத்துநட்டம்**
என்னத்த னாடல்கண் டின்புற்ற தாலிவ்
விருநிலமே. 9

சிவச்சின்னங்களால் மலிந்த தில்லை. அத்தில்லையுள் சிற்றம்பலம். சிற்றம்பலத்துள் நட்டம். அது என் அத்தனது ஆடல்.

பொன்னை ஒத்த செந்நிறமான உடம்பில் வெண்மையான திருநீற்றை அணிந்து, முறுக்குண்ட செஞ்சடைகள் மின்னலைப் போல ஒளிவீச, பிச்சை எடுத்துத் திரியும், உளியால் செதுக்கப்படாது இயல்பான சிவ வேட அடையாளத்தை உடையவனாய், வளம்மிக்க தில்லை நகரின் சிற்றம்பலத்தான் ஆகிய என் தலைவனாம் பெருமானுடைய திருக் கூத்தினைக் கண்டு இவ்வுலகம் இன்புறுகின்றது.



## திருச்சிற்றம்பலம் யாது?

**வித்துவான் நா.ரா. தேவராசன்**
தமிழாசிரியர், நகராட்சிக் கழக உயர்நிலைப்பள்ளி, சைதாப்பேட்டை, சென்னை.

"திருச்சிற்றம்பலம்" என்பது சைவப் பெருமக்கள் அனைவராலும் "மூல மந்திரம்" போல வழங்கப்படுகின்றது. சைவத் திருமுறைகளையோ, பிற சாத்திர தோத்திர நூல்களையோ படிக்கத் தொடங்கும்போதும், படித்து முடிக்கும்போதும் அவர்கள் மொழிவது இத்தொடரேயாம். ஏதேனும் எழுதுங்காலையும் திருச்சிற்றம்பலம் என்று தொடங்கி அவ்வாறே முடிப்பது சைவ மரபு.

எந்தச் சொல்லையும் அதன் பொருளறிந்து வழங்கல் வேண்டும். பொருளறியாமல் ஒரு சொல்லை வழங்குவதனால் பெரும்பயன் கோடல் இயலாது. "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர்" என்ற மணிவாக்கு நோக்கத்தக்கது. இக்கட்டுரையில் "திருச்சிற்றம்பலம்" என்பதன் பொருள் என்ன என்பதைக் காண்போம்.

### இயற்கையும் இறையும்

குடத்தைக் கொண்டு அதை ஆக்கியவன் குயவன் என்ற உண்மையை அறிதலைப் போல, இவ்வுலகைக் கொண்டு இதைப் படைத்த முழு முதல் ஒன்று (கடவுள்) உண்டு என்ற உண்மையை முன்னோர் அறிந்தனர். குடத்திற்கு மண் முதற் காரணமாகவும், தண்ட சக்கரம் துணைக்காரணமாகவும், குயவன் நிமித்தக்காரணமாகவும் இருத்தல்போல, இவ்வுலகிற்கு இம்மூன்று காரணங்கள் யாவை என அவர்கள் ஆராயபலாயினர்.

உலகமானது மண், நீர், தீ, வளி, வான் என்னும் ஐம்பூதங்களின் சேர்க்கையால் ஆயது என்றும், உயிர்களின் உடலங்களும் அவ்வாறு ஆயினவே என்றும் அன்னோர் உணர்ந்தனர்.

"அண்டத்திலுள்ளது பிண்டத்தில்" என்பது முதுமொழி. நமது முன்னோர்கள் அண்டத்தையும், பிண்டத்தையும் பகுத்துணர்ந்து அவற்றின் நிலைக்களமான அடிப்படைப் பொருள்கள் (தத்துவங்கள்) 36 உள்ளன எனத் தீர்மானித்தார்கள். உடம்பு (ஆன்ம) தத்துவம் 24. உணர்வு (வித்தியா) தத்துவம் 7. உணர்த்தும் (சிவ) தத்துவம் 5 இவற்றின் விவரங்களை தத்துவக் கட்டளை முதலிய நூல்களில் பரக்கக் காணலாம். **இத்தத்துவ ஆராய்ச்சியின் ஒரு சிறு கூறே இக்காலத்திய விஞ்ஞான ஆராய்ச்சி என்க. விஞ்ஞானம் பருமை (தூல தத்துவ)ப் பொருள்களாகிய பூத, பௌதிக ஆராய்ச்சியோடு நிற்கிறது. சித்தாந்த சாத்திரங்களோ நுண்மை (சூட்சும தத்துவ)ப் பொருள்களையும் ஆராய்ந்தவை.**

நம் முன்னோர் இத் தத்துவ ஆராய்ச்சியோடு நின்றுவிடாமல் அத்தத்துவங்களினூடே விரவியும் அவற்றைக் கடந்தும் உள்ள முழுமுதற் பொருளொன்று உள்ளதையும் உணர்ந்தார்கள். தத்துவங்கள் வாயிலாகவே தத்துவங் கடந்த பரம்பொருளை அறிந்தார்கள். தத்துவங்கள் சடப்பொருள்கள் (அறிவில்லாதவை); ஆகவே அவற்றிற்கு வேறாய் அவற்றை இயக்குகின்ற ஒரு சித்துப் பொருள் (அறிவுப் பொருள்) இருக்கவேண்டுமன்றோ! அதன் அருள் இயக்கத்தினாலேயே தத்துவங்கள் தொழிற்படுவதை அறிந்தனர். பூதங்களின் சேர்க்கையும் (உலக உடம்புகளின் படைப்பு), அவற்றின் இயக்கமும், உயிர்களினுடைய பொறி, புலன், அந்தக்கரணங்கள் முதலிய கருவிகள் தொழிற்படுதலும், இவற்றிற்கு மேற்பட்ட (வித்யா, சிவ) தத்துவங்கள் தொழிற்படுதலும் – ஆகிய இவற்றிற்கெல்லாம் முழுமுதற் பரம்பொருளின் அருள் ஆற்றலே காரணமாகும். மேற்கூறிய தத்துவங்களையும் சாத்திர நூல்கள், பொதுவாக "மாயை" என்றே கூறுகின்றன. அம்மாயா காரியமே உலகமும் உடம்புகளும். ஆகவே அண்ட பிண்டங்களுக்கு மாயை முதற் காரணம்; இறைவனது அருட்சக்தி துணைக் காரணம்; இறைவன் நிமித்தக் காரணம் என்று முன்னைய ஆன்றோர் முடிவு கட்டினர்.

நிமித்த காரணமாகிய ஆண்டவன் மேற்கூறிய தத்துவங்களோடு ஒன்றாய், உடனாய், வேறாய் இருக்கின்றான். இம்முறையிலேயே ஆண்டவனை நமது முன்னோர் உணர்ந்து போற்றினர்.

**1. சான்றுகள் : இறைவன் தத்துவங்களோடு ஒன்றாதல்**

"பாரொடு விண்ணாய்ப் பரந்தஎம் பரனே" – மாணிக்கவாசகர்

"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி" – அப்பர்

"வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி
ஊனாகி, உயிராகி................." – மாணிக்கவாசகர்

"கூறும் நாவே முதலாக கூறும் கரணம் எல்லாம் நீ" – மாணிக்கவாசகர்

"அண்ட பகி ரண்டமும் அடங்க ஒரு நிறைவாகி" – தாயுமானவர்

இத்தொடர்களின் பொருள் வாயிலாக இறைவன் தத்துவங்களோடு ஒன்றாய் விரவி நிற்கும் நிலையை அறிகின்றோம். (விரிவஞ்சி விளக்கம் விடப்பட்டது).

**2. உடனாதல்**

"அருக்கனில் சோதி அமைத்தோன்; திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன்; திண்திறல்
தீயின் வெம்மை செய்தோன்; பொய்தீர்
வானில் கலப்பு வைத்தோன்; மேதகு
காலின் ஊக்கம் கண்டோன்; நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன்; வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன்" – திருவாசகம்

"துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய் என்னெஞ்சம் துறப்பிப்பாய் நீ" – அப்பர்

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" – அப்பர்

இச்சான்றுகளால் இறைவன் தத்துவங்களின் உடனாகி இருப்பதை உணர்கிறோம்.

**3. வேறாதல்**

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்" – சேக்கிழார்

"சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க" – திருவாசகம்

"கற்பனை கடந்த சோதி" – சேக்கிழார்

தத்துவங்களையும் அவற்றின் வாயிலாக உயிர்களையும் ஆட்டுவிப்பவன் ஆண்டவனே. அவன் தனது அருளாற்றலால் தானே ஆடி அவைகளையும் ஆட்டுவிக்கின்றான்.

**ஆண்டவன் ஏன் ஆடவேண்டும்? நிழற் கண்ணாடியில் தோன்றுகின்ற நம் நிழல் (பிரதிபிம்பம்) ஆடவேண்டுமானால், நாம் ஆடித்தானே ஆகவேண்டும்!** அதுபோல, "பேரா இயற்கை" வடிவாயுள்ள இறைவன் ஆடுவதனால்தான் தத்துவங்கள் இயங்குதல் கூடும்.

"................................. சந்ததமும்
நீக்கமின்றி ஆடிநிழல் அசைப்பான்போல் புவனம்
ஆக்கி அசைத்தருளும் ஆணையும்....."

என்று குமரகுருபரர் கந்தர் கலிவெண்பாவில் இவ்வுண்மையை விளக்கியிருத்தல் காண்க.

அண்ட பிண்டம் முதலிய தத்துவங்களின் ஓயா, ஒழியா இயக்கமே ஆண்டவனின் திருக்கூத்து (நடனம்) எனப் பண்டைய சான்றோர்களால் கூறப்பட்டது. அண்ட பிண்டங்களின் தோற்றம், நிலைபேறு, ஒடுக்கம் ஆகிய மூன்றோடு உயிரறிவின் மறைப்பும், விளக்கமும் ஆகிய இரண்டும் சேர்ந்த ஐந்தொழில்கள் அத்திருக்கூத்தின் பயனாம். இவ்வுண்மையை விளக்குவதே கூத்தப்பெருமானின் திருவுருவ அமைப்பு.

"தோற்றம் துடியதனில்; தோயும்திதி அமைப்பில்;
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் – ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு" – உண்மை விளக்கம்

(துடி – உடுக்கை, திதி – காத்தல், அமைப்பு – அமைதி காட்டும் கரதலம், அங்கி – அக்கினி, நெருப்பு, திரோதம் – (மல) மறைப்பு, நான்ற மலர்ப்பாதம் – தூக்கிய திருவடி).

**பஞ்சகிருத்திய நடனமாகிய திருக்கூத்தை ஆண்டவன் எங்கிருந்து ஆடுகின்றான்? அம்பலத்திலிருந்து ஆடுகின்றான். (அம்பலம் – சபை).**

**அந்த அம்பலம் எங்கிருக்கின்றது? இயக்கம் – ஆட்டம் – அசைவு உள்ள இடமெல்லாம் அம்பலமே.** அண்டபிண்டங்களாகிய பூதங்களினியக்கம், பொறிகளின் இயக்கம், புலன்களின் இயக்கம், கன்மேந்திரியங்களின் இயக்கம், அந்தக்கரணங்களின் இயக்கம், வித்தியா தத்துவங்களின் இயக்கம், சிவ தத்துவங்களின் இயக்கம் – இவையெல்லாம் அம்பலத் திருக்கூத்தே – ஆண்டவன் நடனமே.

"அம்பல மாவது அகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புதீ மண்டலம்
அம்பல மாவது அஞ்செழுத் தாமே"

என்றும்,

"பூதங்கள் ஐந்தில் பொறியில் புலனைந்தில்
வேதங்கள் ஐந்தில் மிகும் ஆகமந் தன்னில்
ஓதும்கலை காலம் ஊழியுடன் அண்டப்
போதங்கள் ஐந்தில் புணர்ந்துஆடும் சித்தனே"

என்றும் திருமந்திரம் கூறுதல் காண்க. இச்சான்றுகளால் "அம்பலம்" என்பது ஒருவாறு விளக்கப்பட்டது. **இனித் திருச்சிற்றம்பலம் என்பது யாதெனக் காண்போம்.**

திரு + சிறு + அம்பலம் – திருச்சிற்றம்பலம். 'திரு' என்பது அடைமொழி; இங்கு தெய்வத் தன்மையை விளக்குவது. சிறிய அம்பலம் – சிற்றம்பலம்; பெரிய அம்பலம் – பேரம்பலம். ஈண்டுச் சிறுமை, பெருமை என்பன முறையே நுண்மை (சூட்சுமம்), பருமை (ஸ்தூலம்) நிலைகளை உணர்த்தும். எனவே பருப்பொருள்கள் (ஸ்தூல தத்துவங்கள்) ஆகிய பூதங்களும் அவற்றைச் சார்ந்தவையும் பேரம்பலமாகும். மிக நுண்பொருள்கள் (சூக்கும தத்துவங்கள்) ஆகிய அந்தக்கரணம் முதலியன சிற்றம்பலமாகும். மிக நுண்ணிய (சூட்சும) தத்துவம் "சித்து" – உயிரின் அறிவு. அதுவே சிற்சபை – சிற்றம்பலம். சித்தசபையே சிதம்பரம் எனவும் வழங்கப்பெறும். சித் + அம்பலம் = சிதம்பரம். சித் –அறிவு; அம்பரம் – ஆகாயம் அல்லது பரவெளி அல்லது அம்பலம். எனவே உயிர் அறிவு – நம் அறிவு – ஆண்டவனின் நடன சபை என்பது பெற்றாம்.

"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறைநிற்கும் நிறைந்து" – திருவருட்பயன்

எனவும்,

"அகரமென அறிவாகி உலகமெங்கும் அமர்ந்து
அகரஉகர மகரங்கள் தம்மால்" – விநாயகபுராணம்

எனவும்,

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே" – திருமூலர்

எனவும் ஆன்றோர்கள் அருளிச் செய்தல் காண்க.

திருவள்ளுவரும் இறைவனை "வாலறிவன்" என்றார். நம் அறிவிற்கு அறிவாய் விளங்குபவன் ஆண்டவன். அறிவு வடிவமே அவன்றன் இயல்பான வடிவம். "சத்தாகி என் சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே" என்றார் தாயுமானவரும்.

அறிவுக்கு அறிவாயுள்ள பேரறிவு நீக்கமற யாண்டும் நிறைந்தது. "இகபரம் இரண்டினும் உயிருக்குயிராகி எங்கும் நிறைகின்ற பொருள்" அதுவே. எனவே சிதம்பரம் இல்லாத இடமில்லை. இப்பூவுலகின்கண் தில்லை க்ஷேத்திரத்தில் உள்ள "சிற்றம்பலம்" இந்தப் பேருண்மையை நுட்பமாக உணர்த்துவதால்தான் அந்த க்ஷேத்திரம் இப்பூவுலகிற்கு "இதயத்தானம்" எனப் பேசப்படுகின்றது. எங்கும் உள்ளது சிதம்பரம் என்பதை உணர்த்தவே ஆன்றோர் ஒவ்வொரு சிவாலயத்திலும் அம்பலக் கூத்தன் சந்நிதியை அமைத்தனர். திருமந்திரம் அருளிய திருமூலர் நாம் உய்யும்பொருட்டு இவ்வுண்மையைக் கீழ்வருமாறு அருளியிருத்தல் காண்க :–

"எங்கும் திருமேனி; எங்கும் சிவசக்தி;
எங்கும் சிதம்பரம்; எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாய் இருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவனருள் தன்விளை யாட்டதே"

ஆண்டவன் நம்மைக் கடைத்தேற்ற நம் அறிவில் இரண்டறக் கலந்திருந்து – நம் அறிவிற்கு அறிவாய் இருந்து ஆங்கு ஐந்தொழிற்றிருநடம் புரிகின்றான். உயிர்களுக்குப் பற்று (ஆதாரம்) – அறிவு; அவ்வுயிரறிவுக்குப் பற்று பரமன் – இஃதே நம் மூத்தோர் கண்ட முடிபு.

"பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடம்
சிற்றம்பலம் என்று சேர்ந்துகொண் டேனே"

என்பது திருமந்திரம்.

இதுகாறும் கூறியவற்றால் ஒவ்வோர் உயிரினிடத்தும் – நம் ஒவ்வொருவரிடத்திலும் சிதம்பரம் – சிற்றம்பலம் இருப்பதை ஒருவாறு அறிகின்றோம்.

"சிற்றம் பலமும் சிவமும் அருகிருக்க
வெற்றம் பலம் தேடி விட்டோமே"

என்று பட்டினத்தடிகள் கவன்றார்.

நாம் "உள்ளும் புறம்பும் ஒரு தன்மைக் காட்சியராய்" திருச்சிற்றம்பலத்தை இடையறாது தரிசித்துக் கொண்டிருந்து பேரானந்தப் பெருவாழ்வையடைய நம்மெல்லோர்க்கும் திருவருள் துணை புரிவதாக.

– நன்றி : சமாஜம் பொன்விழா மலர்.

## நம்மை ஆட்கொண்ட பாதம்

789. சாட வெடுத்தது தக்கன்றன் வேள்வியிற்
சந்திரனை
வீட வெடுத்தது காலனை நாரணன்
நான்முகனுந்
தேட வெடுத்தது தில்லையுட் சிற்றம்
பலத்துநட்டம்
ஆட வெடுத்திட்ட பாதமன் றோநம்மை
யாட்கொண்டதே. 10

சாடல் – கொல்லல்
வீடல் – சாதல்

தக்கன் நிகழ்த்திய வேள்வியில் தனக்கு உரிய அவியைப் பெறுவதற்காக வந்து கலந்து கொண்ட சந்திரனைத் தேய்ப்பதற்காகத் தூக்கப்பட்டதும், கூற்றுவனை அழிப்பதற்கு உயர்த்தப்பட்டதும், திருமாலும் பிரமனும் காண முடியாது தேடுமாறு பாதலத்துக்குக் கீழும் வளர்ந்ததும் தில்லைச் சிற்றம்பலத்தில் கூத்தாடுவதற்காக உயர்த்தப்பட்டதும் ஆகிய சிவபெருமானுடைய இடது திருவடியன்றோ நம்மை அடிமையாகக் கொண்டதாகும்.

## 82. திருக்கழுமலம்

**திருவிருத்தம்** **(சீகாழியின் பன்னிரு பெயர்களில் ஒன்று)** **பதிக எண் : 82**

790. பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட ஞான்றுநின்
பாதமெல்லாம்
நாலஞ்சு புள்ளின மேந்தின வென்பர்
நளிர்மதியங்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித் தாடுங்
கழுமலவர்க்
காளன்றி மற்று முண்டோ வந்தணாழி
யகலிடமே. 1

தேவர் புள்ளினமாகித் தாங்கியிருப்பதாகப் புராணம் புகலும்.

இவ்வுலகினை ஊழிவெள்ளம் மூடி முழுகச் செய்த காலத்தில் உன் பாதங்களை எல்லாம் இருபது பறவைகள் சுமந்தன என்று கூறுவர். குளிர்ந்த பிறை தங்குதலைக் கொண்டதாய், கங்கைக்குத் தங்குமிடம் வழங்கிய வள்ளன்மையை உடைய சடையை விரித்துக் கொண்டு ஆடும் திருக்கழுமலத்துப் பெருமானே! அழகிய குளிர்ந்த கடலாற் சூழப்பட்ட உலகத்துயிர்கள் உனக்கு அடிமையாதல் அன்றி வேறாதலும் உண்டோ?

| | |
|---|---|
| **791.** கடையார் கொடிநெடு மாடங்க ளெங்குங் கலந்திலங்க<br>உடையா னுடைதலை மாலையுஞ் சூடி யுகந்தருளி<br>விடைதா னுடையவவ் வேதியன் வாழுங் கழுமலத்துள்<br>அடைவார் வினைக ளவையெள்க நாடொறு மாடுவரே. 2 | முகப்பிலே கொடிகள் கட்டப்பட்ட பெரிய மாடவீடுகள் வீதிகள் முழுதும் நெருக்கமாக அமைந்து விளங்க, எல்லா ஆன்மாக்களையும் தனக்கு அடிமையாக உடைய வேதியன் ஆகிய சிவபெருமான் தலைமாலையைச் சூடிக் கொண்டு மகிழ்ந்து காளை வாகனனாய்க் காட்சி வழங்கும் திருக்கழுமலத்தை அடையும் அடியவர்கள் தங்கள் நல்வினை தீவினைகள் யாவும் அஞ்சி அகலப் பிறவிப்பிணி தீர்ந்தோம் என்று நாடோறும் மகிழ்ந்து கூத்தாடுவர். |
| **792.** திரைவாய்ப் பெருங்கடன் முத்தங் குவிப்ப முகந்துகொண்டு<br>நுரைவாய் நுளைச்சிய ரோடிக் கழுமலத் துள்ளழுந்து<br>விரைவாய் நறுமலர் சூடிய விண்ணவன் றன்னடிக்கே<br>வரையாப் பரிசிவை **நாடொறு நந்தமை யாள்வனவே.** 3 | பெரிய கடல் தன் அலை வாயிலாக முத்துக்களைக் கரையில் சேர்க்க நுரையோடு கரை சேர்ந்த அம்முத்துக்களை நெய்தல் நில மகளிர் முகந்து கொண்டு ஓட, அத்தகைய வளம் நிறைந்த கழுமலத்துள் நிலையாக இருக்கும், நறுமணம் கமழும் பூக்களைச் சூடிய சிவபெருமானுடைய திருவடிகளைச் சூடி, விண்ணவனாகிய அவர் திருவடிக்கே இவை நீக்கலாகாத பரிசுகளென அர்ப்பணிப்பர். அத்திருவடிகள் நாடொறும் நம்மை ஆள்வனவாம். (நுளைச்சியர் முகந்து கொண்டோடிச் சூடி அர்ப்பணிக்கும் பரிசினவான திருவடிகள் நம்மை ஆள்வன என முடிக்க) |
| **793.** விரிக்கு மரும்பதம் வேதங்க ளோதும் விழுமியநூல்<br>உரைக்கி லரும்பொரு ளுள்ளுவர் கேட்கி லுலகமுற்றும்<br>இரிக்கும் பறையொடு பூதங்கள் பாடக் கழுமலவன்<br>நிருத்தம் பழம்படி **யாடுங் கழனம்மை யாள்வனவே.** 4 | வேதங்களின் சொற்களால் விரித்துரைக்கப் படுபவனாய், மேம்பட்ட நூல்களாற் சிறப்பித்து ஓதப்படுபவனாய், சொற்களால் மக்கள் விளக்கிச் சொல்லமுடியாத அரும்பொருளாய், தன் பெருமையைக் கேட்பவர் தியானிக்கத் தக்கவனாய், உள்ள கழுமலப் பெருமான் தன் ஓசையால் பலரையும் அச்சுறுத்தும் பறையின் ஒலியோடு பூதங்கள் பாடத் தான் பண்டு ஆடும் அந்த வகையிலேயே ஆடுவதற்குப் பயன்படுத்தும் திருவடிகள் நம்மை அடிமையாக ஏற்பனவாகும். |

**794.** சிந்தித் தெழுமன மேநினை யாமுன்
கழுமலத்தைப்
பந்தித்த வல்வினை தீர்க்கவல் லானைப்
பசுபதியைச்
சந்தித்த கால மறுத்துமென் றெண்ணி
யிருந்தவர்க்கு
முந்தித் தொழுகழ னாடொறு நந்தமை
யாள்வனவே. 5

மனமே! கழுமலத்தைத் தியானித்த அளவிலேயே நம்மைக் கட்டியிருக்கும் கொடிய வினைகளைப் போக்கவல்லவனாய், ஆன்மாக்களுக்குத் தலைவனாய் உள்ள பெருமானைத் தரிசித்த அந்த நேரத்திலேயே வினையை நீக்கிவிடுவோம் என்று உறுதியாக எண்ணிக் கொண்டிருக்கும் அடியவர்கள் முற்பட்டுத் தொழும் திருவடிகளே நம்மை நாடோறும் அடிமையாக ஏற்பனவாகும்.

**795.** நிலையும் பெருமையு நீதியுஞ் சால
வழகுடைத்தாய்
அலையும் பெருவெள்ளத் தன்று மிதந்தவித்
**தோணிபுரஞ்**
சிலையிற் றிரிபுர மூன்றெரித் தார்தங்
கழுமலவர்
அலருங் கழலடி நாடொறு நந்தமை
யாள்வனவே. 6

---

இப்பதிகம் திருத்தோணியப்பர் திருமுன்பு நின்று பாடியருளப்பட்டது. ஊழிப் பெரு வெள்ளத்தில் இறைவன் இறைவியோடு சுத்த மாயையின் விருத்தியாகிய பிரணவம் என்னும் தோணியில் வீற்றிருத்தலால் இத்தலம் அழியாது. தோணிபுரம் – சீகாழியின் பன்னிரு பெயர்களில் ஒன்று.

என்றும் நிலைத்திருக்கும் உறுதியும், அந்த உறுதியைப் பெறுவதற்குரிய பெருமையும், உறுதிக்கும் பெருமைக்கும் அடிப்படையான அங்கு வாழும் நன்மக்களுடைய நேர்மையும், மிகவும் அழகுடையனவாக, எங்கும் திரியும் அலைகளை உடைய ஊழிப் பெருவெள்ளத்தில் மிதந்த இத்தோணிபுரத்தில் உகந்தருளி யிருப்பவரும், வில்லால் முப்புரங்களையும் தீயூட்டி எரித்த பெருமானுமாம் அவருடைய மலர்ந்த, கழல்களை அணிந்த திருவடிகள் நாள்தோறும் நம்மை அடிமையாக ஏற்பனவாகும்.

**796.** முற்றிக் கிடந்து முந்நீரின் மிதந்துடன்
மொய்த்தமரர்
சுற்றிக் கிடந்து தொழப்படு கின்றது
சூழரவந்
தெற்றிக் கிடந்துவெங் கொன்றளந் துன்றிவெண்
டிங்கள் சூடும்
கற்றைச் சடைமுடி யார்க்கிட மாய
கழுமலமே. 7

எம் பெருமானுடைய திருமேனியைச் சுற்றிப் பாம்புகள் பின்னிக் கிடக்க, விரும்பத்தக்க கொன்றைமலர் பொருந்த, வெள்ளிய பிறையைச் சூடும் கற்றையான சடையை உடைய எம்பெருமானுக்கு உறைவிடமாகிய கழுமலத்திருத்தலம் எல்லா நலன்களும் நிரம்பப் பெற்றதாய் ஊழிப் பெருவெள்ளத்துள் கடலில் மிதந்து தேவர்கள் கூட்டமாக வந்து வணங்கித் தொழப்படும் சிறப்புடையது.

797. உடலு முயிரு மொருவழிச் செல்லு
முலகத்துள்ளே
அடையு முனைவந் தடைந்தா ரமர
ரடியிணைக்கீழ்
நடையும் விழவொடு நாடொறு மல்குங்
கழுமலத்துள்
விடையன் றனிப்பத நாடொறு நந்தமை
யாள்வனவே. 8

உடலும் அவ்வுடலைச் செலுத்தும் உயிரும் உலகியல் பொருள்களிலேயே புறப்பற்றும் அகப்பற்றும் கொண்டு வாழ்க்கையை நடத்தும் இவ்வுலகிலே, கூத்தும் திருவிழாக்களும் நாள்தோறும் மிகுதியாக நிகழும் கழுமலத்துள், தேவர்கள் சென்று அடையத்தக்க சரணியன் ஆன உன்னை அணுகி உன் திருவடிக்கீழ்ச் சரணாக மக்கள் அடைந்துள்ளனர். அத்தகைய காளை வாகனனாகிய உன் ஒப்பற்ற திருவடிகளே நாள்தோறும் நம்மை ஆள்வன.

798. பரவைக் கடனஞ்ச முண்டது மில்லையிப்
பார்முழுதும்
நிரவிக் கிடந்து தொழப்படு கின்றது
நீண்டிருவர்
சிரமப் படவந்து சார்ந்தார் கழலடி
காண்பதற்கே
அரவக் கழலடி நாடொறு நந்தமை
யாள்வனவே. 9

பரந்த கடலில் தோன்றிய நஞ்சினை உண்ணாமல் கழுத்திலேயே இறுத்திவிட்டாய். அந்நீலகண்டம் இவ்வுலகத்தார் எல்லோராலும் வரிசையாக வணங்கித் தொழப்படுகின்றது. தீத்தம்பமாக நீண்ட வடிவெடுத்தாயாக, அத்தகைய உன் திருவடிகளைக் காணத் தம் முயற்சியால் திருமாலும் பிரமனும் முயன்று, பின் வழிபாட்டால் காண்பதற்கு வந்து சேர்ந்துள்ளனர். அத்தகைய கழல்கள் ஒலிக்கும் திருவடிகளே நாளும் நம்மை ஆள்வன.

799. கரையார் கடல்சூ ழிலங்கையர் கோன்றன்
முடிசிதறத்
தொலையா மலரடி யூன்றலு முள்ளம்
விதிர்விதிர்த்துத்
தலையாய்க் கிடந்துயர்ந் தான்றன் கழுமலங்
காண்பதற்கே
அலையாப் பரிசிவை நாடொறு நந்தமை
யாள்வனவே. 10

கரையை உடைய கடலால் சூழப்பட்ட இலங்கை மன்னனான இராவணனுடைய முடிகள் நெரியுமாறு, ஒருகாலத்தும் அழிவில்லாத மலர் போன்ற திருவடி விரலை ஊன்றிய அளவில் அவன் உள்ளம் நடுநடுங்கித் தலை பத்தும் வீழ்ந்து வணங்கிக் கிடக்குமாறு கயிலை மலைக்கண் உயர்ந்து விளங்கிய பெருமானுடைய திருக்கழுமலத்தலத்தைத் தரிசிப்பதனால், பிறவிப் பிணியில் வருந்தாத தன்மையை வழங்கும் அப்பெருமானுடைய திருவடிகளாகிய இவை நம்மை நாள்தோறும் அடிமையாக ஏற்பனவாகும்.

---

திருஞானசம்பந்தரைக் காழிப்பதியில் சந்தித்து மகிழ்ந்த காலத்தில் தோணியப்பரை முன்நின்று வணங்கிப் பாடியது.

## 83. திருக்கழுமலம்

திருவிருத்தம் | பதிக எண் : 83

800. படையார் மழுவொன்று பற்றிய கையன் பதிவினவில்
கடையார் கொடிநெடு மாடங்க ளோங்குங் கழுமலமாம்
மடைவாய்க் குருகினம் பாளை விரிதொறும் வண்டினங்கள்
பெடைவாய் மதுவுண்டு பேரா திருக்கும் பெரும்பதியே. 1

படையாக ஒருமழு ஆயுதத்தைக் கையில் ஏந்திய சிவபெருமானுடைய திருத்தலம் யாது என்று வினவினால், நகர்ப்புற வாயிலில் கொடிகள் உயர்ந்து விளங்கும் நெடும் மாடங்களைக் கொண்டு விளங்கும் திருக்கழுமலமே அதுவாம். அப்பதியானது நீர் மடைகளிற் பூம்பாளை விரியுந் தோறும் அவற்றிற் சொரியுந் தேனைப் பெண் வண்டுகள் முன்னதாக உண்ணவிட்டு அவற்றின் கடைவாயிற் சொட்டுந் தேனை ஆண் வண்டுகள் அருந்திக் கொண்டு பிரியாதிருக்கும் பெரும்பதியுமாம்.

## 84. பொது

### (ஆருயிர்த் திருவிருத்தம்)

திருவிருத்தம் | பதிக எண் : 84

801. எட்டாந் திசைக்கு மிருதிசைக் கும்மிறை வாமுறையென்
றிட்டா ரமரர்வெம் பூச லெனக்கேட் டெரிவிழியா
ஒட்டாக் கயவர் திரிபுர மூன்றையு மோரம்பினால்
அட்டா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 1

இத்திருப்பதிகம் முழுவதும் "திருவடி நீழற் கீழது என்றன் ஆருயிர்'' என முடிதலின் இதனை ஆருயிர்த் திருவிருத்தம் என்றனர்.

கிழக்கு தென்கிழக்கு முதலிய எட்டுத் திசைகளொடு மேல் கீழ் ஆக இருதிசைகள் ஆகப் பத்துத் திசைகளுக்கும் தலைவனே! 'எங்களைத் திரிபுரத்து அசுரர்களிடமிருந்து காத்தல் நினக்கே உரிய செயலாகும்' என்று தேவர்கள் வேண்டிய கூக்குரலைக் கேட்டுத் தீப்போல விழித்துத் தங்களோடு நட்புறவினால் பொருந்தாத கீழ்மக்களுடைய வானத்தில் உலவும் மும்மதில்களையும் ஓரம்பினால் அழித்த சிவபெருமானுடைய திருவடி நிழலின் கீழ் அல்லவோ என் அரிய உயிர் தங்கியுள்ளது.

802. பேழ்வா யரவி னரைக்கமர்ந் தேறிப் பிறங்கிலங்கு
தேய்வா யிளம்பிறை செஞ்சடை மேல்வைத்த தேவர்பிரான்
மூவா னிளகான் முழுவுல கோடுமண் விண்ணுமற்றும்
ஆவா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 2

பிளந்த வாயை உடைய பாம்பினை இடுப்பில் இறுகக்கட்டி, ஒளிவீசும் உருத்தேய்ந்த இளம் பிறையைச் சிவந்த சடையின் மேல் வைத்த தேவர் பிரானாய், மூப்பும் இளமையும் இலாது என்றும் ஒரே நிலையனாய், இந்நிலவுலகும் தேவருலகும் மற்ற உலகங்களுமாகி உள்ள சிவபெருமானுடைய திருவடி நிழலின் கீழ் அல்லவோ அடியேனது அரிய உயிர் நிலைத்துள்ளது.

| | |
|---|---|
| **803.** தரியா வெகுளிய னாய்த்தக்கன் வேள்வி<br>தகர்த்துகந்த<br>எரியா ரிலங்கிய சூலத்தி னானிமை<br>யாதமுக்கட்<br>பெரியான் பெரியார் பிறப்பறுப் பானென்றுந்<br>தன்பிறப்பை<br>அரியா னடிநிழற் கீழதன் றோவென்ற<br>னாருயிரே. **3** | தாங்குதற்கரிய சினம் கொண்டு தக்கன் செய்த வேள்வியினை அழித்து மகிழ்ந்தவனாய், நெருப்பின் தன்மை பொருந்தி விளங்கிய சூலப்படையை உடையவனாய், இமைத்தல் இல்லாத மூன்று கண்களை உடைய பெரியவனாய், மேம்பட்ட அடியார்களின் பிறவித் தொடர்பை அறுப்பவனாய், தான் பிறவா யாக்கைப் பெரியோனாய் இருக்கும் சிவபெருமானுடைய அடி நிழல் கீழது எம் ஆருயிரே. (பிறப்பை + அறியான் பிறத்தலை இல்லாதவன். அருமை – இன்மை.) |
| **804.** வடிவுடை வாணெடுங் கண்ணுமை யாளையொர்<br>பான்மகிழ்ந்து<br>வெடிகொ ளரவொடு வேங்கை யதள்கொண்டு<br>மேன்மருவிப்<br>பொடிகொ ளகலத்துப் பொன்பிதிர்ந் தன்னபைங்<br>கொன்றையந்தார்<br>அடிக ளடிநிழற் கீழதன் றோவென்ற<br>னாருயிரே. **4** | பேரழகுடைய, மாவடு போன்ற மையுண்ட கண்களை உடைய பார்வதியை ஒரு பாகமாக விரும்பி ஏற்று, பொந்துகளை இருப்பிடமாகக் கொண்ட பாம்பினை வேங்கையின் தோலாகிய ஆடைமேல் இறுகச் சுற்றி, மேலே பூசப்பட்ட நீற்றின்மீது பொன்னைச் சிதறவிட்டாற் போன்ற பசிய கொன்றைமாலையை அணிந்த சிவபெருமானுடைய அடிநிழல் கீழதல்லவோ எனதாருயிர். |
| **805.** பொறுத்தா னமரர்க் கமுதருளி நஞ்ச<br>முண்டுகண்டம்<br>கறுத்தான் **கறுப்பழ காவுடை யான்**கங்கை<br>செஞ்சடைமேல்<br>செறுத்தான் றனஞ்சயன் சேணா ரகலங்<br>கணையொன்றினால்<br>அறுத்தா னடிநிழற் கீழதன் றோவென்ற<br>னாருயிரே. **5**<br>———<br>விடத்தினால் மேவிய கறுப்புப் பிறரை விகாரப்படுத்தி விடும்; ஆனால் அது சிவனை அழகிய மணிகண்டனாக அழகுபடுத்திற்று. | தேவர்களுக்கு அமுதம் வழங்க விடத்தை உண்டு அதனைக் கழுத்தில் இருத்தி நீலகண்டனாய் அந்தக் கறுப்பினைத் தனக்கு அழகாகக் கொண்டவனாய், கங்கையைச் சிவந்த சடைமீது அடக்கினவனாய், அருச்சுனனுடைய பரந்த மார்பினை அம்பு ஒன்றினால் புண்படுத்திய சிவபெருமானுடைய அடிநிழல் கீழதல்லவோ எனதாருயிர். |
| **806.** காய்ந்தான் செறற்கரி யானென்று காலனைக்<br>காலொன்றினால்<br>பாய்ந்தான் பணைமதில் மூன்றுங் கணையென்னு<br>மொள்ளழலால்<br>மேய்ந்தான் **வியனுல கேழும் விளங்க**<br>**விழுமியநூல்**<br>**ஆய்ந்தா னடி**நிழற் கீழதன் றோவென்ற<br>னாருயிரே. **6** | மார்க்கண்டேயன் எமனாற் பகைத்துயிர் கவரப்படுதற்குரியனல்லன் என்று அவனைக் கோபித்தவனாகிய கூற்றுவனைத் திருவடி ஒன்றினால் பாய்ந்துதைத்தான். பெரிய மதில்கள் மூன்றனையும் அம்பு என்ற ஒள்ளிய தீயினில் மூழ்கிச் சாம்பலாகச் செய்து, இடமகன்ற ஏழுலங்களும் விளங்கும்படியாக மேம்பட்ட நூல்களை ஆய்ந்துள்ள சிவபெருமான் அடிநீழற் கீழதல்லவோ எனதாருயிர். |

| | |
|---|---|
| 807. உளைந்தான் செறுதற் கரியான் றலையை<br>யுகிரொன்றினால்<br>களைந்தா னதனை நிறைய நெடுமால்<br>கணார்குருதி<br>வளைந்தா னொருவிர லின்னொடு வீழ்வித்துச்<br>சாம்பர்வெண்ணீ<br>றளைந்தா னடிநிழற் கீழதன் றோவென்ற<br>னாருயிரே. 7 | பிரமனுடைய தவறான செயலைக் கண்டு வருந்தினனாய், அச்செயலுக்கு உரிய ஒறுப்புக்காக வெல்லுதற்கு அரிய அவன் தலையை நகம் ஒன்றினால் நீக்கியவனாய், அம்மண்டையோடு நிறையுமாறு திருமாலுடைய உடம்பிலுள்ள குருதியை நிரப்பினனாய், இராவணனை ஒரு விரலை அழுத்திக் கயிலை மலையின் கீழ் விழச் செய்தவனாய், சாம்பலாகிய நீற்றினை உடல் முழுதும் பூசியவனுமான சிவபெருமானுடைய அடிநிழல் கீழதல்லவோ எனதாருயிர். |
| 808. முந்திவட் டத்திடைப் பட்டதெல் லாமுடி<br>வேந்தர் தங்கள்<br>பந்திவட் டத்திடைப் பட்டலைப் புண்பதற்<br>கஞ்சிக்கொல்லோ<br>நந்திவட் டந்நறு மாமலர்க் கொன்றையும்<br>நக்கசென்னி<br>அந்திவட் டத்தொளி யானடிச் சேர்ந்ததென்<br>னாருயிரே. 8 | என் இந்த வாழ்க்கையின் முற்பகுதியில் யான் செய்தனவற்றை எல்லாம் உட்கொண்டு அரசர்களுடைய பரிசனங்களாகிய தொகுதியினிடம் அகப்பட்டு அவர்களால் பலவகையாகத் துன்புறுத்தப்படுவதற்கு அஞ்சிப் போலும் நந்தியா வட்டப்பூவும் கொன்றைப் பூவும் ஒளிவீசும் சென்னியும் மாலை வானம் போன்ற செம்மேனியுமுள்ள அம்மானுடைய அடிநிழலைச் சேர்ந்தது என் ஆருயிர். |
| 809. மிகத்தான் பெரியதொர் வேங்கை யதள்கொண்டு<br>மெய்ம்மருவி<br>அகத்தான் வெருவநல் லாளை நடுக்குறுப்<br>பான்வரும்பொன்<br>முகத்தாற் குளிர்ந்திருந் துள்ளத்தி னாலுகப்<br>பானிசைந்த<br>அகத்தா னடிநிழற் கீழதன் றோவென்ற<br>னாருயிரே. 9 | மிகப்பெரிய வேங்கையைக் கொன்று அதன் தோலை ஆடையாக உடுத்திப் பார்வதியை உள்ளம் அஞ்சி நடுங்கச் செய்பவனாய்த் தன்னை நோக்கி வந்த பொன் போன்ற பொலிவை உடைய கங்கையைத் தன் சடையில் முகந்து கொண்டதால் சடை குளிர அதனால் மனத்தில் மகிழ்வெய்தியவனாய், என்னை அடிமையாக ஏற்றுக் கொள்ள இசைந்த சிவபெருமானுடைய அடிநிழல் கீழது அல்லவோ எனதாருயிர். |

810. பைம்மா ணரவல்குற் பங்கயச் சீறடி
யாள்வெருவக்
கைம்மா வரிசிலைக் காமனை யட்ட
கடவுண்முக்கண்
எம்மா னிவனென் றிருவரு மேத்த
வெரிநிமிர்ந்த
அம்மா னடிநிழற் கீழதன் றோவென்ற
னாருயிரே. 10

படம் எடுக்கும் மேம்பட்ட பாம்பினை ஒத்த அல்குலை உடையவளாய்ச் சிறிய பாதங்களை உடையளான பார்வதி அஞ்சக் கையிலே மேம்பட்ட கட்டமைந்த வில்லை ஏந்திய மன்மதனை அழித்த தெய்வமாகிய முக்கண்ணனாம் எம்பெருமான் என்று பிரமனும் திருமாலும் புகழும்படி தீத்தம்பமாக ஓங்கி வளர்ந்த தலைவனாகிய சிவபெருமானுடைய அடி நிழல் கீழதல்லவோ எனதாருயிர்.

811. பழகவொ ரூர்தியரன் பைங்கட் பாரிடம்
பாணிசெய்யக்
குழலு முழவொடு மாநட மாடி
யுயரிலங்கைக்
கிழவ னிருபது தோளு மொருவிர
லாலிறுத்த
அழக னடிநிழற் கீழதன் றோவென்ற
னாருயிரே. 11

ஊர்ந்து செலுத்தக் காளையை வாகனமாக உடையவனாய், தீயவர்களை அழிப்பவனாய், பூதங்கள் தாளம் போடக் குழலும் முழவும் ஒலிக்க மேம்பட்ட கூத்து நிகழ்த்துபவனாய், மேம்பட்ட இலங்கை அரசனாகிய இராவணனுடைய இருபது தோள்களையும் தன் திருவடியின் ஒருவிரலால் நெரித்த அழகனாகிய சிவபெருமானுடைய அடிநிழலின் கீழல்லவோ அடியேனுடைய அரிய உயிர் பாதுகாவலாக உள்ளது.

## 85. திருச்சோற்றுத்துறை

எப்படிப்பட்ட இறைவனுக்கு எவையெல்லாம் அழகியன? காலையெழுந்து நறுமணம் கமழும் தூய மலர்கள் தாங்கொணர்ந்து மேலை அமரர் விரும்புமிடமாம் சோலை மணங்கமழ் சோற்றுத்துறை உறையும், வினை தீர்த்திடும் விண்ணவர் கோன் – வெண்ணீற்றினன் – நஞ்சதனை ஒடுக்க வல்லான் – மழுவினன் – என்னை யாளுடையானாகிய இறைவனுக்கு மாலை மதியம், வெண்டலை மாலை, ஏந்து கைச்சூலம், பாயுந் திரைக்கங்கை, படமணிநாகம், வில்லாடிநின்ற நிலை என்ற இவையெல்லாம் அழகியன.

திருவிருத்தம் பதிக எண் : 85

**812. காலை யெழுந்து கடிமலர் தூயன**
**தாங்கொணர்ந்து**
**மேலை யமரர் விரும்பு மிடம்விரை**
யான்மலிந்த
சோலை **மணங்கமழ் சோற்றுத் துறை**யுறை
வார்சடைமேல்
மாலை மதியமன் றோவெம் பிரானுக்
கழகியதே. 1

எம்பிரானுக்கழகியதே – பதிக மகுடம்.
மணம் கமழும் சோற்றுத்துறை – சோறு மணக்கும் மடங்களெலாம் – சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

காலையிலே எழுந்து நறுமணம் கமழும் தூய மலர்களைக் கொண்டு வந்து வானத்திலுள்ள தேவர்கள் விரும்பும் திருத்தலம், நறுமண மலர்களால் வாசனை எங்கும் வீசும் சோலைகளை உடைய திருச்சோற்றுத் துறையாம். அங்கு உகந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய நீண்ட சடையில் வீற்றிருக்கும் பிறைச்சந்திரன் அல்லவோ எம்பெருமானுக்கு அழகிய அணிகலனாய் வாய்த்திருக்கின்றது.

813. வண்டணை கொன்றையும் வன்னியு மத்தமும் வாளரவும்
கொண்டணைந் தேறு முடியுடை யான்குரை சேர்கழற்கே
தொண்டணைந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
வெண்டலை மாலையன் றோவெம் பிரானுக் கழகியதே. 2

தொண்டர்கள், வண்டுகள் தங்கும் கொன்றை, வன்னி, ஊமத்தை, ஒளிபொருந்திய பாம்பு இவைகள் வந்து பொருந்தித் தங்கும் சடையையுடைய பெருமான் திருவடிக்கண் வந்து பொருந்தி, பேரின்பக் கடலாடித் திளைக்கும் திருச்சோற்றுத்துறை எம்பெருமானுடைய சடையின்மேல் காட்சி வழங்கும் வெள்ளிய தலைமாலை அல்லவோ அவருக்கு அழகான அணிகலனாக வாய்த்திருக்கிறது.

814. அளக்கு நெறியின னன்பர்க டம்மனத் தாய்ந்துகொள்வான்
விளக்கு மடியவர் மேல்வினை தீர்த்திடும் விண்ணவர்கோன்
துளக்குங் குழையணி சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
திளைக்கு மதியமன் றோவெம் பிரானுக் கழகியதே. 3

எல்லோருடைய உள்ளப் பண்பையும் அளந்தறியும் முறைமை உடையவராய், அடியவர்களுடைய மனத்தை உள்ளவாறு ஆராய்ந்து அறிந்து அவர்களை அடிமை கொள்பவராய், தம்முடைய திருவடிப் பெருமையை உலகம் அறியச் செயற்படும் அடியவர்களுடைய பழைய வினைகளையும் புதிய வினைகளையும் தீர்த்தருளும், தேவர் தலைவராய், ஒளிவீசும் காதணியை அணிந்திருக்கும் திருச்சோற்றுத்துறை எம் பெருமானுடைய சடை மேல் இருந்து மகிழ்ச்சியில் திளைக்கின்ற பிறைச்சந்திரன் அல்லவோ அப்பெருமானுக்கு அழகிய அணிகலனாக வாய்த்துள்ளது.

---

இத்திருப்பதிகத்தில் ஐந்து பாடல்களில் மதியைக் குறிப்பிடுகிறார்.

815. ஆய்ந்தகை வாளர வத்தொடு மால்விடை யேறியெங்கும்
பேர்ந்தகை மானிட மாடுவர் பின்னு சடையிடையே
சேர்ந்தகைம் மாமலர் துன்னிய சோற்றுத் துறையுறைவார்
ஏந்துகைச் சூல மழுவெம் பிரானுக் கழகியதே. 4

கையிலே ஒளிபொருந்திய பாம்பினை ஆராய்ந்து எடுத்துக்கொண்டு, திருமாலாகிய காளையின் மீது இவர்ந்து, எல்லாவிடத்தும் மானை ஏந்திய கையினை வீசிக்கொண்டு கூத்து நிகழ்த்துபவராய், ஒன்றோடொன்று பிணைந்த சடைகளிடையே அடியார்கள் தம் கைகளால் அர்ப்பணித்த பூக்கள் தங்கும் சடைமுடியை உடைய சிவபெருமான் கையில் ஏந்திய சூலம் மழு என்ற படைக்கருவிகள் அவருக்கு அழகிய அணிகலன்கள் ஆக அமைந்துள்ளன.

| | |
|---|---|
| 816. கூற்றைக் கடந்ததுங் கோளர வார்த்ததுங் கோளுழுவை<br>நீற்றிற் றுதைந்து திரியும் பரிசதும் நாமறியோம்<br>ஆற்றிற் கிடந்தங் கலைப்ப வலைப்புண் டசைந்ததொக்கும்<br>சோற்றுத் துறையுறை வார்சடை மேலதொர் தூமதியே. 5 | திருச்சோற்றுத்துறையில் உகந்தருளும் பெருமானார் கூற்றுவனை அழித்து, கொடிய புலித்தோல் ஆடையின் மேல் பாம்பினை இறுகக்கட்டித் திருநீற்றை முழுமையாக அணிந்து, நீண்ட சடைமேல் விளங்கும் ஒப்பற்ற சந்திரன் அங்குள்ள கங்கையாற்றின் கரையிலே கிடந்து அவ்வாற்றின் அலை அலைக்கும் தோறும் தானலைந்தவாறிருக்கும் அழகையே நாம் அறிவோம். |
| 817. வல்லாடி நின்று வலிபேசு வார்கோளர் வல்லசுரர்<br>கொல்லாடி நின்று குமைக்கிலும் வானவர் வந்திறைஞ்சச்<br>சொல்லாடி நின்று பயில்கின்ற சோற்றுத் துறையுறைவார்<br>வில்லாடி நின்ற நிலையெம் பிரானுக் கழகியதே. 6 | தங்கள் வலிமையை மிகுத்துக் காட்டிக் கொண்டு நின்று கொல்லப் போவதாகப் பயமுறுத்தும் கொலைஞர்களாய் அசுரர்கள் அங்ஙனம் துன்புறுத்தி வருத்தினாலும் அதனைப் பொருட்படுத்தாது தேவர் வந்து வணங்க, அவர்களோடு உரையாடிப் பயில்கின்ற சோற்றுத்துறைப் பெருமான் தமது கைவில்லைத் தொழிற்படுத்தி நிற்கும் நிலை அவர்க்கு அழகியதாகும். |
| 818. ஆய முடையது நாமறி யோம்அர ணத்தவரைக்<br>காயக் கணைசிலை வாங்கியு மெய்துந் துயக்கறுத்தான்<br>தூயவெண் ணீற்றினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்<br>பாயும்வெண் ணீர்த்திரைக் கங்கையெம் மானுக் கழகியதே. 7 | எம் பெருமான் முப்புரங்களை அழிக்க முற்பட்ட காலத்தில் அவருக்குச் சேனைத்திரள் இல்லையோ உண்டோ என்பதனை நாம் அறியோம். முப்புர அசுரர்களைக் கோபித்து வலிய வில்லை வளைத்தும் அம்பு எய்தும் அவர்களை அழித்துத் தேவர்களுடைய சோர்வைப் போக்கிய திருநீறு அணிந்த மேனியராகிய திருச்சோற்றுத்துறைப் பெருமானுடைய நீண்ட சடைமுடியின்மேற் பரவும் வெண்ணிற அலைகளை உடைய கங்கை எம்பெருமானுக்கு அழகியதாகும். |

819. அண்ட ரமரர் கடைந்தெழுந் தோடிய
நஞ்சதனை
**உண்டு மதனை யொடுக்கவல் லான்**மிக்க
வும்பர்கள்கோன்
தொண்டு பயில்கின்ற சோற்றுத் துறையுறை
வார்சடைமேல்
**இண்டை** மதியமன் றோவெம் பிரானுக்
கழகியதே. 8

இண்டை – பூக்களையும், இலைகளையும் தொடுத்துக் கட்டப்பட்டு தலையிலிடும் மாலை இண்டை மாலை. உண்டு அதனை ஒடுக்க வல்லான் – உண்டாரையெல்லாம் ஒடுக்கும் அந்த நஞ்சினைத் தான் உண்டும் தான் ஒடுங்காது அதனை ஒடுக்க வல்லவன்.

பகைவரான அசுரரும் தேவரும் பாற்கடலைக் கடைந்தபோது எழுந்து பரவிய விடத்தை உண்டு அதனைக் கழுத்திலே இருத்தவல்ல தேவர் தலைவராய், மேலான இந்திரனும் திருத்தொண்டில் ஈடுபட்டுப் பயில்கின்ற திருச்சோற்றுத்துறைப் பெருமானுடைய முடிமாலை போல விளங்கும் பிறைச்சந்திரன் அல்லவோ அவருக்கு அழகியதாகும்.

820. **கடன்மணி வண்ணன்** கருதிய நான்முகன்
றானறியா
விடமணி கண்ட முடையவன் றானெனை
யாளுடையான்
**சுடரணிந் தாடிய சோற்றுத் துறையுறை**
வார்சடைமேல்
படமணி நாகமன் றோவெம் பிரானுக்
கழகியதே. 9

கடன்மணிவண்ணன் – கடல்வண்ணன்; மணிவண்ணன். கடல்போலும் நிறமுடையவன். நீலமணி போலும் நிறமுடையவன்.

பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் நீலமணி நிறத்தினனாகிய திருமாலும் பிரமனும் அறியாத நீலகண்டராய், எம்மை அடிமைகளாகக் கொள்பவராய்ச் சூரியன் ஒளி தம் திருமேனியில் பரவுமாறு கூத்து நிகழ்த்தும் திருச்சோற்றுத்துறை பெருமானுடைய சடைமீது இரத்தினமுள்ள படமுடையதாய்த் தங்கியிருக்கும், பாம்பு அல்லவோ அவருக்கு அழகியதாகும்.

821. இலங்கைக் கிறைவ னிருபது தோளு
முடிநெரியக்
கலங்க விரலினா லூன்றி யவனைக்
கருத்தழித்த
துலங்கன் மழுவினன் சோற்றுத் துறையுறை
வார்சடைமேல்
இலங்கு மதியமன் றோவெம் பிரானுக்
கழகியதே. 10

இராவணனுடைய இருபது தோள்களும், தலைகளும் நெரியுமாறும் அவன்மனம் கலங்குமாறும் கால்விரலை ஊன்றி அவன் மனமதர்ப்பை அழித்த, ஒளி வீசும் மழுவை ஏந்திய திருச்சோற்றுத்துறைப் பெருமானுடைய நீண்ட சடைமேல் விளங்கும் பிறைச்சந்திரன் அல்லவோ அவருக்கு அழகியதாகும்.

## 86. திருவொற்றியூர்

பிரிவாற்றாது இரங்கிய தலைவி நாயகனுடைய குணநலன், வடிவம் முதலியவற்றைச் சிந்தித்துச் சிந்தித்துப் பல்லாற்றானும் அவற்றில் ஈடுபட்டுத் தனக்குள் அசதியாடி நயந்த குறிப்பு.

**திருவிருத்தம்** **பதிக எண் : 86**

822. செற்றுக் களிற்றுரி கொள்கின்ற ஞான்றுசெருவெண் கொம்பொன்
றிற்றுக் கிடந்தது போலு மிளம்பிறை பாம்பதனைச்
சுற்றிக் கிடந்தது கிம்புரி போலச் சுடரிமைக்கும்
நெற்றிக்கண் மற்றதன் முத்தொக்கு மாலொற்றி யூரனுக்கே. 1

கிம்புரி – யானைக் கொம்பிற்கிடும் பூண்.

செற்று – அடர்ந்து – கொன்று. இறைவர் அணிந்த இளம்பிறை அவர் உரித்த களிற்றின் ஒரு கொம்பு போலவும், பிறையினை வளைந்து கிடந்த பாம்பு அந்த யானைக் கொம்பின் பூணாக வளைந்த கிம்புரி போலவும், இவற்றின் கீழே காணும் இறைவரது நெற்றிக்கண் யானைக் கொம்பினின்றும் உதிர்ந்த முத்துப் போலவும் உள்ளன என்றது தற்குறிப் பேற்றந் தழுவிய தொடர்நிலை உவமம்.

---

823. சொல்லக் கருதிய தொன்றுண்டு கேட்கிற்றொண் டாயடைந்தார்
அல்லற் படக்கண்டு பின்னென் கொடுத்தி யலைகொண்முந்நீர்
மல்லற் றிரைச்சங்க நித்திலங் கொண்டுவம் பக்கரைக்கே
ஒல்லைத் திரைகொணர்ந் தெற்றொற்றி யூருறை யுத்தமனே. 2

கடலின் வளமான அலைகள் சங்குகளிலுள்ள முத்துக்களைக் கொண்டு மணம் வீசும் கரைகளிலே ஒதுக்கிச் சேர்க்கும் ஒற்றியூரில் உகந்தருளியிருக்கும் உத்தமனே! நீ கேட்பதற்குத் திருச்செவி சார்த்துவாயாகில் அடியேன் கூற நினைக்கும் செய்தி ஒன்று உளது. அஃதாவது உனக்கு அடிமைகளாய் வந்து சேர்ந்த அடியவர்கள் துன்பப்படுவதைப் பார்த்துக் கொண்டே வாளா இருக்கும் நீ இப்பொழுது அவர் துன்பத்தைத் தீர்க்காமல் எதிர்காலத்தில் அவர்களுக்கு யாது வழங்கத் திருவுள்ளம் பற்றியுள்ளாய்?

---

824. பரவை வருதிரை நீர்க்கங்கை பாய்ந்துக்க பல்சடைமேல்
அரவ மணிதரு கொன்றை யிளந்திங்கள் சூடியதோர்
குரவ நறுமலர் கோங்க மணிந்து குலாயசென்னி
உரவு திரைகொணர்ந் தெற்றொற்றி யூருறை யுத்தமனே. 3

பரந்து வருகின்ற அலைகளை உடைய கங்கை நீர் பாய்ந்து சிதறும்படிக்கான வன்மையதாயப் பலவாக உள்ள சடைத் தொகுதி மீது பாம்போடு பிறையையும் கொன்றை குரவம் கோங்கம் ஆகியவற்றின் நறுமலர்களையும் அணிந்து விளங்கும் திருமுடியினனாய்க் கடல் அலைகள் கடல்படு பொருள்களை மோதிக் கொண்டு வந்து கரையில் சேர்க்கின்ற திருஒற்றியூரில் வீற்றிருக்கும் உத்தமனே!

**825.** தானகங் காடரங் காக வுடையது
தன்னடைந்தார்
ஊனக நாறு முடைதலை யிற்பலி
கொள்வதுந்தான்
தேனக நாறுந் திருவொற்றி யூருறை
வாரவர்தாம்
தானக மேவந்து போனகம் வேண்டி
யுழிதர்வரே. 4

உள்ளிடமெல்லாந் தேன்மணங் கமழுந் திருவொற்றியூரில் உறையும் பெருமான் தான் ஆடரங்காகக் கொள்வதும் காடு. தன்னை அடைந்தார் இடும் பலியை ஏற்பதும் உள்ளூரத் தசையின் முடை நாற்றம் வீசும் தலையோட்டில். அவர் தானாகவே வீடு வீடாக வந்து உணவு வேண்டித் திரிபவரும் ஆவார்.

**826.** வேலைக் கடனஞ்ச முண்டுவெள் ளேற்றொடும்
வீற்றிருந்த
மாலைச் சடையார்க் குறைவிட மாவது
**வாரிகுன்றா**
ஆலைக் கரும்பொடு செந்நெற் கழனி
யருகணைந்த
சோலைத் திருவொற்றி யூரையெப் போதுந்
தொழுமின்களே. 5

வேலைக்கடல் – கரையுடைய கடல். மாலை போலுஞ் செஞ்சடையர் – மாலை நேரத்தில் தோன்றும் நிறத்தைப் போன்ற சடை.

கடலிற் தோன்றிய நஞ்சை உண்டு இருண்ட கண்டத்துடன் வெள்ளை இடபத்தை ஊர்ந்தருளும், அந்தி செவ்வானம் போன்ற சடையினரான சிவபெருமானுக்கு உறைவிடமாவது **வருவாய் குறையாத** (ஆலைக்) கரும்புகளோடு செந்நெல்லும் மிகும் வயல்களைச் சூழ்ந்து சோலைகள் விளங்கப் பெறுவதுமான திருவொற்றியூர். அதனை எப்பொழுதுமே தொழுமின்கள்.

**827.** புற்றினில் வாழு மரவுக்குந் திங்கட்குங்
கங்கையென்னும்
சிற்றிடை யாட்குஞ் செறிதரு கண்ணிக்குஞ்
சேர்விடமாம்
பெற்றுடை யான்பெரும் பேச்சுடை யான்பிரி
**யாதெனையாள்**
**விற்றுடை யானொற்றி யூருடை யான்றன்**
விரிசடையே. 6

எனைப் பிரியாதுடை யான்
எனை ஆளுடையான்
எனை விற்றுடையான்

இடப வாகனத்தை உடையவனாய், தன்னைப் பற்றிச் சான்றோர்கள் பேசும் பொருள்சேர் புகழுரை தாங்குபவனாய், என்னைத் தன் விருப்பப்படி விற்பதற்கும் உரிமை உடைய அடியவனாகக் கொண்டவனாய் ஒற்றியூரை உறைவிடமாக உடைய சிவபெருமானுடைய விரிந்த சடை, புற்றில் வாழும் பாம்புக்கும், பிறைச் சந்திரனுக்கும், கங்கை என்ற பெயரை உடைய, சிறிய இடுப்பை உடைய நங்கைக்கும், ஒற்றைப் பூந்தொடையாகிய முடிமாலைக்கும் இருப்பிடமாகும்.

ஆளாக்கிக் கொண்டு விற்றற்கும் உரிமை உடையான். இத்தகு பெரியன் ஒற்றியூருடையான். கங்கையைச் சிற்றிடையாள் என்பது வடமொழி வழக்கு. நதிபதி என்று கடலையும், சமுத்திரபத்தினி என்று ஆற்றையும் வடநூலார் வழங்குவர். கண்ணி – ஒற்றைப்பூத் தொடை.

**828.** இன்றரைக் கண்ணுடை யாரெங்கு மில்லை யிமயமென்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட் பாவைக்குக் கூறிட்டநா
ளன்றரைக் கண்ணுங் கொடுத்துமை யாளையும் பாகம்வைத்த
**ஒன்றரைக் கண்ணன்கண் டீரொற்றி யூருறை யுத்தமனே.** 7

---

நிந்தைத்துதி – கண்ணைப் பற்றிக் கூறியது தலைவர் கண்ணோட்டமின்றிப் பிரிந்து உள்ளமை குறிப்பு.

இவ்வுலகில் முழுக்கண் உடையவர்களே காணப் படுகின்றனரே யன்றி அரைக்கண் உடையவர் ஒருவரும் இரார். ஆனால், இமவான் என்று போற்றப்படும் மலைத் தலைவனுக்கு வளர்ப்பு மகளாகக் கிட்டிய நல்ல மேன்மையை உடைய பார்வதிக்கு உடம்பைச் செம்பாதியாகப் பங்கிட்டுக் கொடுத்த காலத்திலே தன் முக் கண்களில் செம்பாதியான ஒன்றரைக் கண்கள் அவளுக்காயினதால் மீதியுள்ள ஒன்றரைக் கண்ணனாகவே யுள்ளார், திருவொற்றியூரில் உறையும் உத்தமனாம் எம்பெருமான்.

**829.** சுற்றிவண் டியாழ்செயுஞ் சோலையுங் காவுந் துதைந்திலங்கு
பெற்றிகண் டான்மற்றி யாவருங் கொள்வர் பிறரிடைநீ
ஒற்றிகொண் டாயொற்றி யூரையுங் கைவிட் டுறுமென்றெண்ணி
விற்றிகண் டாய்மற் றிதுவொப்ப தில்லிடம் வேதியனே. 8

---

ஒற்றி – அடைவு வைத்துக் கொண்டு கடன் வாங்குதல் என்ற சொற்சிலேடை பற்றி எழுந்த கருத்து.

கா – வயல் சூழ்ந்த இளமரங்களையுடையது
காடு – ஊரோடு சேர்ந்த மரக்கூட்டம்
சோலை – மலையோடு சேர்ந்த மரக்கூட்டம்
கானல் – கழிக்கரையில் உள்ளது
தோப்பு – தொகுப்பான மரங்கள்.

வேதத்தால் பரம் பொருள் என்று போற்றப்படும் ஒற்றியூர்ப் பெருமானே! வண்டுகள் எப்பொழுதும் சுற்றிக்கொண்டு யாழ் போல ஒலிக்கும் பூஞ்சோலைகளும் பெருமரச் சோலைகளும் செறிந்து விளங்கும் உன் ஒற்றியூரின் சிறப்பினை நோக்கினால் அதனை யாவரும் விலைகொடுத்து வாங்கிக் கொள்வர். அதுகருதி நீ ஒற்றியாகப் பெற்று அனுபவிக்கும் இவ்வொற்றியூரையும் பிறரிடம் விற்று அதனைக் கைவிட எண்ணுதியேல் அது ஏற்புடையதன்று. இதனை ஒத்த சிறப்பான இருப்பிடம் பிறிது யாதுமில்லை என்பதனைத் தெரிந்து கொள்வாயாக.

**830.** சுற்றிக் கிடந்தொற்றி யூரனென் சிந்தை பிரிவறியான்
ஒற்றித் திரிதந்து நீயென்ன செய்தி யுலகமெல்லாம்
பற்றித் திரிதந்து பல்லொடு நாமென்று கண்குழித்துத்
தெற்றித் திருப்பதல் லா**லென்ன செய்யுமித் தீவினையே** 9

---

ஒற்றியூரன் ஒற்றிக் காப்பதால் வினை ஒற்றி இடர்ப்படுத்த வழியில்லை.

என் தீவினையே! திருவொற்றியூர்ப் பெருமான் என்றும் பிரியாது என் உள்ளத்தைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டுள்ளான். அவ்வாறாக, நீ என்னை, அடியொற்றித் திரிந்து கொண்டிருப்பதால் நீ சாதிக்கப் போவதென்ன? நான் செல்லிடமெல்லாம் அடியொற்றித் திரிந்து தனக்கு வேட்டை வாய்க்காமையால் ஆத்திரமுற்று பல்லையும் நாவையும் மென்று கொண்டு சோக மிகுதியாற் கண் குழிந்து கால் தெற்றித் தானே சோர்ந்திருப்பதைவிட இத் தீவினையால் எனக்கெதிர் எதுவும் நேர்தற்கிடமின்றாம்.

831. அங்கட் கடுக்கைக்கு முல்லைப் புறவ
முறுவல்செய்யும்
பைங்கட் டலைக்குச் சுடலைக் களரி
பருமணிசேர்
கங்கைக்கு வேலை யரவுக்குப் புற்றுக்
கலைநிரம்பாத்
திங்கட்கு வானந் திருவொற்றி யூரர்
திருமுடியே. 10

திருவொற்றியூர்ப் பெருமான் திருமுடியானது கொன்றை மலருக்கு, முல்லை நிலக்காடு ஆகவும், சிரிக்கும் தலைமாலையாயிருந்து சிரிக்குங் கபாலங்களுக்குச் சுடுகாடாகவும், பருத்த இரத்தினக் கற்களை அலைத்து வரும் கங்கைக்கு அது சென்று சேரும் கடலாகவும், பாம்புக்கு அதன் உறைவிடமான புற்றாகவும், பிறைக்கு அஃது உலவும் வானமாகவும் உள்ளதாகும்.

கடுக்கை – கொன்றை; திருமுடி கொன்றைக்கும், நகுதலைக்கும், கங்கைக்கும், அரவுக்கும், திங்கட்கும் இருப்பிடமாக அமைதலின் அவ்வவற்றின் இயல்புக்குத் தக்க வெவ்வேறு தன்மை பெற்ற இடமாக அமைந்துள்ளது.

832. தருக்கின வாளரக் கன்முடி பத்திறப்
பாதந்தன்னால்
ஒருக்கின வாறடி யேனைப் பிறப்பறுத்
தாளவல்லான்
நெருக்கின வானவர் தானவர் கூடிக்
கடைந்தநஞ்சைப்
பருக்கினவா றென்செய்கே னொற்றி யூருறை
பண்டங்கனே. 11

ஒற்றியூரிலே உறைகின்ற பண்டரங்கக் கூத்தனான பெருமான் செருக்குக் கொண்ட இராவணனுடைய பத்துத் தலைகளும் நெரியுமாறு கால்விரலால் நெரித்தொடுக்கினது போலவே அடியேனுடைய பிறப்பையும் போக்கி அடியேனை அடிமையாகக் கொள்ளவல்லவன். நெருங்கி நின்ற தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற்கடலைக் கடைந்தபோது எழுந்த நஞ்சினை அவனையே பருகுமாறு செய்த வினை இருந்தவாறென்? ஆ! என் செய்கேன் நான்!

## 87. திருப்பழனம்

திருவிருத்தம் பதிக எண் : 87

833. மேவித்து நின்று விளைந்தன வெந்துயர்
துக்கமெல்லாம்
ஆவித்து நின்று கழிந்தன வல்ல
லவையறுப்பான்
பாவித்த பாவனை நீயறி வாய்பழ
னத்தரசே
கூவித்துக் கொள்ளுந் தனையடி யேனைக்
குறிக்கொள்வதே. 1

சுவாமியின் பெயர் ஆபத் சகாயர் என்பதால் இப்பதிகம் இவ்வாறமைந்தது. துன்பமே வடமொழியில் துக்கம் எனப்படுகிறது. அழைத்தல் – அடிமையின் தொழில். கூவல் தலைவன் செயல்.

திருப்பழனத்தில் உகந்தருளியிருக்கும் அரசே! அடியேன் வாழ்க்கையில் தீவினையின் விளைவுகளாகிய துக்கங்கள் எல்லாம் கொடிய துயரத்தை அடையச் செய்து என்னை மேவி நிற்கின்றன. அவை தம் செயலில் சோர்ந்து கொட்டாவி விட்டு அடியேனை விடுத்து நீங்கின அல்ல. அடியேன் அவற்றைப் போக்கச் சிவோகம் பாவனையில் இருக்கும் செய்தியை நீ அறிவாய். அடியேனை உன் அடிமைத் தொழிலில் கூவுவித்துக் கொள்ளுவதை உன் குறிக்கோளாகக் கொள்வாயாக.

**834.** சுற்றிநின் றார்புறங் காவ லமரர்
கடைத்தலையில்
மற்றுநின் றார்திரு மாலொடு நான்முகன்
வந்தடிக்கீழ்ப்
பற்றிநின் றார்பழ னத்தர சேயுன்
பணியறிவான்
உற்றுநின் றாரடி யேனைக் குறிக்கொண்
டருளுவதே. 2

பழனத்து அரசே! எண் திசைகளையும் காக்கும் தேவர்கள் உன்னைச் சுற்றி நிற்கின்றனர். நின் திருக்கோயில் வாயிலில் மற்றுமுள்ள தேவர்கள் நிற்கின்றனர். திருமாலும் பிரமனும் வந்து உன் திருவடிக் கீழ்ப்பொருந்தி நின்று நீ இடும் கட்டளை யாது என்பதனை அறிய ஈடுபாட்டோடு நிற்கின்றனர். இங்ஙனம் தேவர்கள் வழிபடக் காத்துக் கிடக்க வைக்கும் இயல்பினனாகிய நீ, அடியேனை உன் உள்ளத்தில் குறித்துக்கொண்டு அருள் செய்வாயாக.

---

குறிக் கொண்டருளுமாறு ஒன்பது பாடல்களிலும் குறிக் கொள்ளுமாறு இரண்டு பாடல்களிலும் வேண்டுகிறார்.

**835.** ஆடிநின் றாயண்ட மேழுங் கடந்துபோய்
மேலவையும்
கூடிநின் றாய்குவி மென்முலை யாளையுங்
கொண்டுடனே
பாடிநின் றாய்பழ னத்தர சேயங்கொர்
பான்மதியம்
சூடிநின் றாயடி யேனையஞ் சாமைக்
குறிக்கொள்வதே. 3

பழனத்து அரசே! நீ மேல் உலகங்கள் ஏழனையும் கடந்து அதற்கு மேலும் உயர்ந்து கூத்து நிகழ்த்தி நின்றாய். எல்லா உயிரோடும் பொருந்தியிருக்கின்றாய். குவிந்த மெல்லிய முலைகளை உடைய பார்வதியையும் உடன் கொண்டு பால் போன்ற வெண்பிறை சூடிப் பாடிக் கொண்டு நிற்கும் நீ அடியேனையும் பிறவித் துயர் கருதி அஞ்சாதபடி ஆட்கொள்ள வேண்டுவதனை உன் திருவுள்ளத்துக் கொள்வாயாக.

**836.** எரித்துவிட் டாயம்பி னாற்புர மூன்றுமுன்
னேபடவும்
உரித்துவிட் டாயுமை யாண்டுக் கெய்தவொர்
குஞ்சரத்தைப்
பரித்துவிட் டாய்பழனத் தர சேகங்கை
வார்சடைமேல்
தரித்துவிட் டாயடி யேனைக் குறிக்கொண்
டருளுவதே. 4

பழனத்து அரசே! அம்பினால் மும்மதில்கள் முன்னொரு காலத்தில் அழியுமாறு எரியச் செய்து விட்டாய். பார்வதி நடுங்குமாறு ஓர் யானையைக் கொன்று அதன் தோலை உரித்துப் போர்வையாக அணிந்து விட்டாய். நீண்ட சடையின் மீது கங்கையைப் பொறுத்துத் தாங்கியுள்ளாய். அடியேனை உள்ளத்துக் கொண்டு அருள் செய்வாயாக.

---

முப்புர தகனம் மும்மலமகற்றல் என்பது பரிபக்குவம் உடையவர்க்கே.
பரித்தல் – நீக்கல். கங்கையின் விரைவு, வன்மை ஆகியவற்றை நீக்கிய பின் தரித்தல்

| | |
|---|---|
| **837.** முன்னியு முன்னி முளைத்தன மூவெயி<br>லும்முடனே<br>மன்னியு மங்கு மிருந்தனை மாய<br>மனத்தவர்கள்<br>பன்னிய நூலின் பரிசறி வாய்பழ<br>னத்தரசே<br>முன்னியு முன்னடி யேனைக் குறிக்கொண்<br>டருளுவதே. 5 | பழனத்து அரசே! மும்மதிலிலுள்ள அரக்கர்களும் எதிர்ப்பட்டு உள்ளத்துக் கருதி உன்னொடு போராட நீ அங்கும் நிலைபெற்று இருந்து அவர்களை அழித்தாய். வஞ்ச மனத்தவராகிய புறச்சமயப் புறப்புறச் சமயத்தவர்கள் இயற்றி வைத்துள்ள நூல்களின் பொருளியல்பையும் நீ அறிவாய். நீ பல செய்திகளை நினைத்துக் கொண்டிருக்கும் நேரத்திலும் அடியேனை உன் உள்ளத்தில் குறித்துக் கொண்டு அருளுவாயாக. |
| **838.** ஏய்ந்தறுத் தாயின்ப னாயிருந் தேபடைத்<br>தான்றலையைக்<br>காய்ந்தறுத் தாய்கண்ணி னாலன்று காமனைக்<br>காலனையும்<br>பாய்ந்தறுத் தாய்பழ னத்தர சேயென்<br>பழவினை நோய்<br>ஆய்ந்தறுத்தாயடி யேனைக் குறிக்கொண்<br>டருளுவதே. 6 | பழனத்து அரசே! நீ எல்லோருக்கும் இன்பத்தை நல்குபவனாய் இருந்தும் பிரமன் தலையை மனம் பொருந்தி நீக்கினாய், மன்மதனைப் பார்வதியின் திருமணத்தின் முன்பு வெகுண்டு அழித்தாய். கூற்றுவனையும் காலால் உதைத்து அழித்தாய். அடியேனுடைய பழைய வினைகளின் பயனாகிய துன்பத்தை நுணுகுமாறு அழித்து அடியேனைக் குறிக்கொண்டு அருளுவாயாக. |
| **839.** மற்றுவைத் தாயங்கொர் மாலொரு பாக<br>மகிழ்ந்துடனே<br>உற்றுவைத் தாயுமை யாளொடுங் கூடும்<br>பரிசெனவே<br>பற்றிவைத் தாய்பழ னத்தர சேயங்கொர்<br>பாம்பொருகை<br>சுற்றிவைத் தாயடி யேனைக் குறிக்கொண்<br>டருளுவதே. 7 | பழனத்து அரசே! ஒப்பற்ற திருமாலை மகிழ்வோடு உன் திருமேனியின் ஒரு பாகமாக வைத்து, பார்வதிக்குத் திருமேனியின் ஒரு பாகத்தைக் கொடுத்து அவளோடு கூடியிருப்பது போலவே திருமாலொடும் பொருந்தியுள்ளாய். ஒரு பாம்பைப் பிடித்து அஃது ஒருகையைச் சுற்றிக் கொண்டிருக்குமாறு செய்துள்ளாய். அடியேனையும் குறிக்கொண்டு அருளுவாயாக. |
| **840.** ஊரினின் றாயொன்றி நின்றுவிண் டாரையு<br>மொள்ளழலால்<br>போரினின் றாய்பொறை யாயுயி ராவி<br>சுமந்துகொண்டு<br>பாரினின் றாய்பழ னத்தர சேபணி<br>செய்பவர்கட்<br>காரநின் றாயடி யேனைக் குறிக்கொண்<br>டருளுவதே. 8 | கயிலைமலையில் உள்ளம் பொருந்தி உறைகின்றாய். அத்தகைய பழனத்து அரசே! கொடிய தீயினாலே பகைவர்களை அழிப்பதற்குப் போரில் ஈடுபட்டாய். உயிர்களைப் பாரமாகச் சுமந்து கொண்டு உயிர்களுக்கு உயிராக இருக்கின்றாய். உனக்குத் தொண்டு செய்யும் அடியவர்கள் மனநிறைவு அடையுமாறு திருக்கோயில்களில் நிலையாக இருக்கும் நீ அடியேனையும் குறிக்கொண்டு அருளுவாயாக. |

841. போகம்வைத் தாய்புரி புன்சடை மேலொர்
புனலதனை
யாகம்வைத் தாய்மலை யான்மட மங்கை
மகிழ்ந்துடனே
பாகம்வைத் தாய்பழ னத்தர சேயுன்
பணியருளால்
ஆகம்வைத் தாயடி யேனைக் குறிக்கொண்
டருளுவதே. 9

ஆகம் – உடம்பு

பழனத்து அரசே! முறுக்கேறிய சிவந்த சடையின் மீது கங்கையை உனக்குப் போகசக்தியாக வைத்துள்ளாய். மலையான் மகளான பார்வதியை மகிழ்ந்து உன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு விட்டாய். அருளினாலே, உனக்குத் தொண்டு செய்வதற்கே அடியேனுடைய உடம்பை அமைத்துள்ள நீ அடியேனைக் குறிக்கொண்டு (இனிப் பிறவித் துயர் அடியேற்கு நேராதவாறு) அருளுவாயாக.

842. அடுத்திருந் தாயரக் கன்முடி வாயொடு
தோணெரியக்
கெடுத்திருந் தாய்கிளர்ந் தார்வலி யைக்கிளை
யோடுடனே
படுத்திருந் தாய்பழ னத்தர சேபுலி
யின்னுரிதோல்
உடுத்திருந் தாயடி யேனைக் குறிக்கொண்
டருளுவதே. 10

பழனத்து அரசே! இராவணன் கயிலையைப் பெயர்க்கத் தொடங்கும் வரையில் அருகிலேயே இருந்து அவன் செயற்பட்ட அளவில் அவனுடைய முடிகள் வாய் கண் தோள்கள் என்பன நெரிந்து சிதறுமாறு கால்விரலால் அழுத்தி அவன் செருக்கைக் கெடுத்தாய். செருக்குற்று எழுந்தவருடைய வலிமையை அவர்களைச் சேர்ந்தவர்களுடைய வலிமையோடும் கெடுத்தாய். புலித்தோலை ஆடையாக உடுத்துள்ளாய். அத்தகைய நீ அடியேனையும் குறித்து மனத்துக் கொண்டு அருளுவாயாக.

## 88. திருப்பூந்துருத்தி

சோழ மன்னன் துருத்தியை வைத்துப் பூசிக்கச் செய்ததனால் திருப்பூந்துருத்தி. ஆற்றிடைக் குறையில் உள்ள பகுதியையும் துருத்தி என வழங்குவது உண்டு. அவ்வாறு வழங்கும் தலம்தான் குத்தாலம். அது வேறு.

**திருவிருத்தம்** **பதிக எண் : 88**

843. மாலினை மாலுற நின்றான் மலைமக
டன்னுடைய
பாலனைப் பான்மதி சூடியைப் பண்புண
ரார்மதின்மேல்
போலனைப் போர்விடை யேறியைப் பூந்துருத்
திம்மகிழும்
ஆலனை யாதிபு ராணனை நாமடி
போற்றுவதே. 1

புகலன் என்பது போலன் என்றாயிற்று.
துகள் – தூள்; பொழுது – போழ்து என்பது போல.

திருமாலுக்கு அடியைக் காணமுடியாத மயக்கம் ஏற்படும்படி தீத்தம்பமாக நின்றவனாய், பார்வதி பாகனாய், வெள்ளிய பிறை சூடியாய், பிறருக்குத் தீங்கு செய்தல் கூடாது என்ற பண்பினை உணராத திரிபுர அசுரர்களின் மதில்களை வெற்றி கொண்டு அழித்தவனாய், போரிடும் காளையை ஊர்பவனாய்ப் பூந்துருத்தியுள் உறைபவனாய், கல்லால மரத்தின் கீழ் அமர்ந்திருக்கும் தொன்மையானவனுடைய திருவடிகளை நாம் வணங்குகிறோம்.

| | |
|---|---|
| **844.** மறியுடை யான்மழு வாளினன் மாமலை<br>மங்கையொர்பால்<br>குறியுடை யான்குண மொன்றறிந் தாரில்லை<br>கூறிலவன்<br>பொறியுடை வாளர வத்தவன் பூந்துருத்<br>திய்யுறையும்<br>அறிவுடை யாதிபு ராணனை நாமடி<br>போற்றுவதே. 2 | மான் கன்று, மழுப்படை எனும் இவற்றை ஏந்திப் பார்வதி பாகனாய், தன் பண்புகளைப் பிறர் உள்ளவாறு அறிய இயலாதவனாய்ப் புள்ளிகளை உடைய ஒளிபொருந்திய பாம்பினை அணிபவன் என்று எல்லோராலும் கூறப்படுபவனாய்ப் பூந்துருத்தியுள் உகந்தருளியிருக்கும் ஞானவடிவினனாகிய தொன்மையானவனை நாம் திருவடிக்கண் பணிந்து வணங்குகிறோம். |
| **845.** மறுத்தவர் மும்மதின் மாயவொர் வெஞ்சிலை<br>கோத்தொரம்பால்<br>அறுத்தனை யாலதன் கீழனை யால்விட<br>முண்டதனைப்<br>பொறுத்தனைப் பூதப் படையனைப் பூந்துருத்<br>திய்யுறையும்<br>நிறத்தனை நீல மிடற்றனை யானடி<br>போற்றுவதே. 3<br><br>"அடிபோற்றுவதே" – பதிக மகுடம் | தெய்வ நம்பிக்கை கொள்ள மறுத்த அசுரர்களின் மும்மதில்களும் அழியுமாறு ஒரு கொடிய வில்லில் அம்பினைக் கோத்து அழித்தவனாய், கல்லால மரத்தடியில் அமர்ந்தவனாய், ஆல காலவிடத்தை உண்டு, அதனைக் கழுத்தில் தங்க வைத்தவனாய், பூதப்படை உடையவனாய், பூந்துருத்தியில் உகந்தருளியிருக்கும் செந்நிறத்து நீலகண்டனாகிய பெருமானை அடியேன் திருவடிக்கண் பணிந்து வணங்குகின்றேன். |
| **846.** உருவினை யூழி முதல்வனை யோதி<br>நிறைந்து நின்ற<br>திருவினைத் தேசம் படைத்தனைச் சென்றடைந்<br>தேனுடைய<br>பொருவினை யெல்லாந் துரந்தனைப் பூந்துருத்<br>திய்யுறையும்<br>கருவினைக் கண்மூன் றுடையனை யானடி<br>போற்றுவதே. 4 | ஞானவடிவினனாய், எல்லா ஊழிகளையும் படைத்த முதல்வனாய், வேதங்களை ஓதி எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் செல்வனாய், உலகங்களை எல்லாம் படைத்தவனாய், தன்னைப் பற்றுக்கோடாய் வந்து அடைந்த அடியேனை மோதுகின்ற வினைகளை எல்லாம் விரட்டியவனாய், பூந்துருத்தி நகரில் உறையும் உலகக் காரணனாய், முக்கண்ணனாய் உள்ள பெருமானை அடியேன் அடிக்கண் பணிந்து வழிபடுகிறேன். |
| **847.** தக்கன்றன் வேள்வி தகர்த்தவன் சார<br>மதுவன்றுகோள்<br>மிக்கன மும்மதில் வீயவொர் வெஞ்சிலை<br>கோத்தொரம்பால்<br>புக்கனன் பொன்றிகழ்ந் தன்னதோர் பூந்துருத்<br>திய்யுறையும்<br>நக்கனை நங்கள்பி ரான்றனை நானடி<br>போற்றுவதே. 5 | தக்கனுடைய வேள்வியை எம் பெருமான் அழித்தான் என்பது அவன் பேராற்றலைக் காட்டுவதற்கு உரிய செயல் ஆகாது. பிறரைத் துன்புறுத்துதலில் மேம்பட்ட அசுரர்களின் மும்மதில்களும் அழியுமாறு கொடிய வில்லில் அம்பினைக் கோத்துச் செயற்பட்ட, பூந்துருத்தியுள் உறையும் பொன்னார் மேனியனும் விளக்கமுடையவனுமான எங்கள் பெருமானை அடியேன் அடிபோற்றுகிறேன். |

**848.** அருகடை மாலையுந் தானுடை **யானழ காலமைந்த**
**உருவுடை மங்கை**யுந் தன்னொரு பாலுல காயுநின்றான்
பொருபடை வேலினன் வில்லினன் பூந்துருத் தியுறையும்
திருவுடைத் தேச மதியனை யானடி போற்றுவதே. 6

அழகால் அமைந்த உருவுடை மங்கை – தலத்து இறைவியின் பெயர் 'அழகார்ந்த நாயகி' – ஒருபால் மங்கையாயும் (சொரூபம்) மற்றொருபால் உலகாயும் (துடத்தும்) நின்றான்.

அருகில் இடையிடையே பச்சிலைகளை வைத்துத் தொடுத்த மாலையை உடையவனாய், அழகார்ந்த நாயகியாம் பார்வதி ஒரு பாகம் பொருந்தப் பெற்றவனாய், கலப்பினால் உலகெலாமாகி நிற்பவனாய், போரிடும் படைக்கலன்களாகிய வில்லினையும் வேலினையும் உடையவனாய், பூந்துருத்தியுள் உறையும் செல்வத்தை உடைய ஒளி வீசும் பிறைசூடியை அடியேன் அவனடிக்கண் பணிந்து வணங்குகிறேன்.

**849.** மன்றியுந் நின்ற மதிலரை மாய வகைகெடுக்கக்
கன்றியுந் நின்று கடுஞ்சிலை வாங்கிக் கனலம்பினால்
பொன்றியும் போகப் புரட்டினன் பூந்துருத் தியுறையும்
அன்றியு செய்தபி ரான்றனை யானடி போற்றுவதே. 7

தன்னால் ஒறுக்கப்பட்டும் மீண்டும் எதிர்த்து நின்ற முப்புர அசுரர்கள் அழியுமாறும் அவர்கள் இனமே ஒழியுமாறும் வெகுண்டு கொடிய வில்லை வளைத்துத் தீயைக் கக்கும் அக்கினி யாகிய அம்பினால் அவர்கள் மதிலோடு அழிந்து போகுமாறு செயற்பட்டுப் பூந்துருத்தியுள் உறைகின்ற, அழித்தற் றொழிலுக்கு மறுதலையாகிய ஆக்கச் செயல்களையும் செய்யும் பெருமானை அடியேன் அடிக்கண் பணிந்து வழிபடுகிறேன்.

**850.** மின்னிறம் மிக்க விடையுமை நங்கையொர் பான்மகிழ்ந்தான்
என்னிற மென்றம ரர்பெரியா ரின்னந் தாமறியார்
பொன்னிற மிக்க சடையவன் பூந்துருத் தியுறையும்
என்னிற வெந்தைபி ரான்றனை யானடி போற்றுவதே. 8

மின்னல் போல ஒளி வீசும் இடையினை உடைய உமாதேவியைத் தன் திருமேனியின் ஒரு பாகமாக விரும்பிக் கொண்டவனாய், தேவருள் மிக்கவரும் அவனுடைய உண்மையான நிறம் யாது என்று இன்றுவரை அறிய இயலாதவனாய்ப் பொன் போன்ற சடையை உடையவனாய்ப் பூந்துருத்தியில் உறைகின்ற சூரியன் போல ஒளிவீசும் எந்தை பெருமானை அடியேன் அடிபோற்றுகின்றேன்.

851. அந்தியை நல்ல மதியினை யார்க்கு
மறிவரிய
செந்தியை வாட்டுஞ்செம் பொன்னினைச்
சென்றடைந்
தேனுடைய
புந்தியைப் புக்க வறிவினைப் பூந்துருத்
தியுறையும்
நந்தியை நங்கள்பி ரான்றனை நானடி
போற்றுவதே. 9

அந்தி நேரத்தில் வழிபடுதற்கு உரியவனாய், எல்லோருக்கும் நல்ல புத்தியை வழங்குபவனாய், ஒருவராலும் அறிய முடியாதபடி தீயில் சுட்டுத் தூயதாக்கப்பட்ட செம்பொன் நிறத்தினனாய், தன்னைத் தலைவனாகப் பற்றிய அடியேனுடைய உள்ளமாயும் உள்ளொளிரும் ஞானமாயும் இருப்பவனாய், பூந்துருத்தியில் உறைகின்ற நந்தி என்ற பெயருக்குரிய நம் தலைவனை அடியேன் அடிக்கண் பணிந்து போற்றுகின்றேன்.

852. பைக்கையும் பாந்தி விழிக்கையும் பாம்பு
சடையிடையே
வைக்கையும் வானிழி கங்கையு மங்கை
நடுக்குறவே
மொய்க்கை யரக்கனை யூன்றினன் பூந்துருத்
தியுறையும்
மிக்கநல் வேத விகிர்தனை நானடி
போற்றுவதே. 10

படம் எடுத்தலும் பதுங்கிப் பார்த்தலும் உடைய பாம்பினை, வானத்திலிருந்து இறங்கி வந்த கங்கையோடு சடையிலே வைத்து, கயிலைமலை அசைந்ததால் பார்வதி நடுங்க, அங்ஙனம் அசைத்த வலிய புயங்களை உடைய அரக்கனைத் திருவடி விரல் ஒன்றினால் அழுத்தி நெரித்துப் பூந்துருத்தியில் உகந்தருளி இருக்கும் மேம்பட்ட சிறந்த வேதங்களால் போற்றப்படுவோனும், உலகியலில் இருந்து வேறுபட்ட இயல்பினனுமான பெருமானை, அடியேன் அடிக்கண் பணிந்து வணங்குகின்றேன்.

## 89. திருநெய்த்தானம்

திருவிருத்தம் பதிக எண் : 89

853. பாரிடஞ் சாடிய பல்லுயிர் வானம
ரர்க்கருளிக்
காரடைந் தகடல் வாயுமிழ் நஞ்சமு
தாகவுண்டான்
ஊரடைந் திவ்வுல கிற்பலி கொள்வது
நாமறியோம்
நீரடைந் தகரை நின்றநெய்த் தானத்
திருந்தவனே. 1

காவிரியாற்றங்கரையில் அமைந்த நெய்த்தானத்தை உகந்தருளியிருக்கும் பெருமானே! பூமியில் ஆலகால விடத்தால் தாக்கப்பட்ட பல உயிர்களுக்கும் தேவருலகிலுள்ள தேவர்களுக்கும் அருள் செய்து, கரிய கடலில் தோன்றிய நஞ்சினை அமுதமாக உண்டருளிய நீ, பல ஊர்களையும் அடைந்து இவ்வுலகில் பிச்சை உணவை ஏற்பதை நாங்கள் அறியோம்.

| | |
|---|---|
| **854.** தேய்ந்திலங் குஞ்சிறு வெண்மதி யாய்நின்<br>றிருச்சடைமேல்<br>பாய்ந்த கங்கைப் புனல்பன் முகமாகிப்<br>பரந்தொலிப்ப<br>ஆய்ந்திலங் கும்மழு வேலுடை யாயடி<br>யேற்குரைநீ<br>ஏந்திள மங்கையு நீயும்நெய்த் தானத்<br>திருந்ததுவே. 2 | தேய்ந்து விளங்கும் பிறைச்சந்திரனை உடையவனே! அழகிய உன் சடையின் மீது இறங்கிப் பாய்ந்த கங்கைநீர் பலமுகங்கொண்டுப் பரவி ஒலிக்கவும், ஆராய்ந்து விளங்கும் மழுப்படையை உடையவனே! அழகு விளங்கும் இளமங்கையான பார்வதியும் நீயும் நெய்த்தானப் பதியில் விரும்பி உறையும் காரணத்தை அடியேனுக்கு உரைப்பாயாக. |
| **855.** கொன்றடைந் தாடிக் குமைந்திடுங் கூற்றமொன்<br>னார்மதின்மேல்<br>சென்றடைந் தாடிப் பொருததுந் தேசமெல்<br>லாமறியும்<br>குன்றடைந் தாடுங் குளிர்பொழிற் காவிரி<br>யின்கரைமேல்<br>சென்றடைந் தார்வினை தீர்க்கும்நெய்த் தானத்<br>திருந்தவனே. 3 | குடகுமலையிலே தோன்றி எல்லோரும் அடைந்து நீராடுமாறு பெருகியோடும், குளிர்ந்த சோலைகளை இரு மருங்கிலும் கொண்ட, காவிரியின் கரைமேல் உன்னை வந்து அடைந்தவர்களுடைய தீ வினைகளைப் போக்கும் நெய்த்தானப் பெருமானே! நீ சென்று சேர்ந்து போரிட்டுக் கொன்று அழிக்கும் கூற்றுவனாய்ப் பகைவர் மதில்களை அடைந்து செயற்பட்டுப் போரிட்டு அவற்றை அழித்த செயலை உலகமெல்லாம் நன்றாக அறிந்துள்ளது. |
| **856.** கொட்டு முழவர வத்தொடு கோலம்<br>பலவணிந்து<br>நட்டம் பலபயின் றாடுவர் நாக<br>மரைக்கசைத்துச்<br>சிட்டர் திரிபுரந் தீயெழச் செற்ற<br>சிலையுடையான்<br>இட்ட முமையொடு நின்றநெய்த் தானத்<br>திருந்தவனே. 4 | ஒலிக்கின்ற முழவின் ஓசையோடு பல வேடங்களைப் புனைந்து பல கூத்துக்களை அடிக்கடி ஆடுபவரும், பாம்பினை இடையில் இறுகக் கட்டியவரும், சிட்டர்க்காக மும்மதில்களும் தீக்கு இரையாகுமாறு அழித்த வில்லை உடையவரும் ஆகிய சிவபெருமான் நெய்த்தானத்தில் தமக்கு விருப்பமான பார்வதியோடு விரும்பி இருப்பவராவார். |
| **857.** கொய்ம்மலர்க் கொன்றை துழாய்வன்னி மத்தமுங்<br>கூவிளமும்<br>**மெய்ம்மலர் வேய்ந்த** விரிசடைக் கற்றைவிண்<br>ணோர்பெருமான்<br>மைம்மலர் நீல நிறங்கருங் கண்ணியோர்<br>பான்மகிழ்ந்தான்<br>நின்மல னாட னிலயநெய்த் தானத்<br>திருந்தவனே. 5 | கொய்யப்பட்ட கொன்றை மலர், திருத்துழாய், வன்னி, ஊமத்தம்பூ, வில்வம் ஏனைய சிறந்த மலர்கள் இவற்றை அணிந்த விரிந்த சடைத் தொகுதிகளையுடைய தேவர் தலைவனாய், கருமை பரவிய நீல நிறத்தை உடையவளாய்க் கருங்கண்களை உடைய பார்வதி பாகனாய் உள்ள களங்கம் அற்ற தூயோனாகிய சிவபெருமான், தன் ஆடல்களுக்கு அரங்கமாக அமைந்த நெய்த்தானத்தில் இருப்பவனாவான். |

மலர் வேய்தல் – தூவுதல், சொரிதல் இவற்றுக்கெல்லாம் மேலாக வேய்தல். ஓடுகள் எப்படி ஒழுங்காக வேயப்படுகின்றனவோ அப்படி நூல் பிடித்தாற் போல பெருமானின் மேல் மலர்கள் வேயப்பட்டு அழகுபார்த்து ஆனந்தப்பட வேண்டும்.

| | |
|---|---|
| 858. பூந்தார் நறுங்கொன்றை மாலையை வாங்கிச்<br>சடைக்கணிந்து<br>கூர்ந்தார் விடையினை யேறிப்பல் பூதப்<br>படைநடுவே<br>போந்தார் புறவிசை பாடவு மாடவுங்<br>கேட்டருளிச்<br>சேர்ந்தா ருமையவ ளோடுநெய்த் தானத்<br>திருந்தவனே. 6 | நெய்த்தானத்தில் இருக்கும் சிவபெருமான் பூக்களை வரிசையாகத் தொடுத்த கொன்றை மாலையை வளைத்துச் சடைக்கண் அணிந்து, விரைவு மிக்குப் பொருந்திய காளையினை ஏறி ஊர்ந்து பூதப்படைகள் பலவற்றின் நடுவே செல்பவராய்ப் புறத்தே அடியார்கள் பாடும் பாடல்களைக் கேட்டு ஆடல்களைக் கண்டு பார்வதியோடும் இணைந்து உறைகின்றார். |
| 859. பற்றின பாம்பன் படுத்த புலியுரித்<br>தோலுடையன்<br>முற்றின மூன்று மதில்களை மூட்டி<br>யெரித்தறுத்தான்<br>சுற்றிய பூதப் படையினன் சூல<br>மழுவொருமான்<br>செற்றுநந் தீவினை தீர்க்குநெய்த் தானத்<br>திருந்தவனே. 7 | பாம்பினைப் பற்றியவனாய், புலித்தோலை உடையாக உடுத்தவனாய், எல்லா வலிமைகளும் நிறைந்த மூன்று மதில்களையும் தீ மூட்டி அழித்தவனாய்ப் பூதப்படையால் சூழப்பட்டவனாய்ச் சூலம் , மழு, மான் எனும் இவற்றை ஏந்தியவனாய் நம் தீவினைகளை அழித்து ஒழிப்பவனாய்ச் சிவபெருமான் நெய்த்தான நகரில் உறைகின்றான். |
| 860. விரித்த சடையினன் விண்ணவர் கோன்விட<br>முண்டகண்டன்<br>உரித்த கரியுரி மூடியொன் னார்மதின்<br>மூன்றுடனே<br>எரித்த சிலையின னீடழி யாதென்னை<br>யாண்டுகொண்ட<br>தரித்த வுமையவ ளோடுநெய்த் தானத்<br>திருந்தவனே. 8 | விரித்த சடையினனாய், தேவர்கள் தலைவனாய், விடத்தை உண்டு அடக்கிய கழுத்தினனாய், தான் உரித்த யானைத் தோலைப் போர்த்தவனாய், பகைவரின் மதில்கள் மூன்றனையும் எரித்த வில்லினனாய், தன் பெருமைக்குக் குறைவு வாராத வகையில் அடியேனை அடிமையாகக் கொண்டவனாய் உள்ளவன். தன் உடம்பில் பாதியாகக் கொண்ட பார்வதியோடு நெய்த்தானத்தில் உறைகின்ற பெருமானாவான். |
| 861. தூங்கான் றுளங்கான் துழாய்கொன்றை துன்னிய<br>செஞ்சடைமேல்<br>வாங்கா மதியமும் வாளர வுங்கங்கை<br>தான்புனைந்தான்<br>தேங்கார் திரிபுரந் தீயெழ வெய்து<br>தியக்கறுத்து<br>நீங்கா னுமையவ ளோடுநெய்த் தானத்<br>திருந்தவனே. 9 | தாமதம் செய்யாமல் விரைவு உடையவனாய், துளசியும் கொன்றையும் பொருந்திய சிவந்த சடையின்மீது கைக்கொண்ட பாம்பு பிறை எனும் இவற்றைக் கங்கையோடு அணிந்தவனாய், பகைவருடைய முப்புரங்களையும் தீக்கு இரையாகுமாறு அம்பு செலுத்தி அசுரர்களால் மற்றவருக்கு ஏற்பட்ட சோர்வினைப் போக்கி என்றும் நீங்காதிருக்கும் பெருமான் பார்வதியோடு நெய்த்தானத் திருந்தவனே யாவன். |

**862.** ஊட்டிநின் றான்பொரு வானில மும்மதி
        றீயம்பினால்
    மாட்டிநின் றானன்றி னார்வெந்து வீழவும்
        வானவர்க்குக்
    காட்டிநின் றான்கத மாக்கங்கை பாயவொர்
        வார்சடையை
    நீட்டிநின் றான்றிரு நின்றநெய்த் தானத்
        திருந்தவனே. 10

செல்வம் நிலைபெற்ற நெய்த்தானப் பெருமான் வானில் நிலவிப் போரிட்ட மும்மதில்களையும் தீயாகிய அம்பினால் எரித்துப் பகைவர்கள் வெந்து போகும்படி தீயினால் அழித்து அக்காட்சியைத் தேவர்கள் காணச் செய்து விரைந்து வானினின்றும் இறங்கிய சினத்தை உடைய பெரிய கங்கை பாய்வதற்கு நீண்ட சடைக்கற்றைகளுள் ஒன்றனைக் காட்டி நின்ற வனுமாவான்.

## 90. திருவேதிகுடி

திருவிருத்தம் பதிக எண் : 90

**863.** கையது காலெரி நாகங் கனல்விடு
        சூலமது
    வெய்யது வேலைநஞ் சுண்ட விரிசடை
        விண்ணவர்கோன்
    செய்யினி னீல மணங்கம ழுந்திரு
        வேதிகுடி
    ஐயனை யாரா வமுதினை நாமடைந்
        தாடுதுமே. 1

ஆராவமுது – தலத்து இறைவன் பெயர்
செய்யினில் – வயலில்

கைகளில் விடத்தைக் கக்கும் பாம்பினையும் தீயைப் போல வெம்மையைச் செய்யும் சூலப்படையையும் ஏந்தியவனும், கடலில் தோன்றிய கொடிய விடத்தை உண்டவனும், விரிந்த சடையினை உடைய தலைவனுமாய், வயல்களிலே நீலப்பூக்கள் மணம் கமழும் திருவேதிகுடியில் உகந்தருளியிருக்கும் ஐயனுமான, ஆரா அமுதை அடைந்து அதில் முழுகுவோம் நாம்.

**864.** கைத்தலை மான்மறி யேந்திய கையன்
        கனன்மழுவன்
    பொய்த்தலை யேந்திநற் பூதி யணிந்து
        பலிதிரிவான்
    செய்த்தலை வாளைகள் பாய்ந்துக ளுந்திரு
        வேதிகுடி
    அத்தனை யாரா வமுதினை நாமடைந்
        தாடுதுமே. 2

கைத்தலை மான்மறி – சிறிய தலையையுடைய மான்கன்று.

கைகளில் மான்குட்டியையும் கொடிய மழுப்படையையும் ஏந்தி, மண்டையோட்டைத் தாங்கித் திருநீற்றை அணிந்து பொய்த் தலை கொண்டு பிச்சைக்காகத் திரிபவனும், வயல்களிலே வாளை மீன்கள் தாவித் துள்ளும் திருவேதிகுடிப் பெருமானும் ஆகிய ஆரா அமுதை அடைந்து அதில் திளைத்தாடுவோம் நாம்.

**865.** முன்பின் முதல்வன் முனிவனெம் மேலை
வினைகழித்தான்
அன்பி னிலையி லவுணர் புரம்பொடி
யானசெய்யும்
செம்பொனை நன்மலர் மேலவன் சேர்திரு
வேதிகுடி
அன்பனை நம்மை யுடையனை நாமடைந்
தாடுதுமே. 3

முன்னும் பின்னும் தானே உலக காரணனாய், மனனசீலனாய், நம் பழைய வினைகளைப் போக்குபவனாய், அன்பு நிலையில் இல்லாத அசுரர்களின் மும்மதில்களையும் அழித்த செம்பொன் போல்பவனாய், தாமரை மலர்மேல் உள்ள பிரமன் வழிபடுவதற்காக வந்து அடையும் திருவேதிகுடியில் விரும்பி உறைபவனாய், நம்மை அடிமைகொள்ளும் பெருமானை நாம் அடைந்து அவன் அருளாரமுதக் கடலில் ஆடுவோம்.

முன்னும் முதல்வன்; பின்னும் முதல்வன். முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருள். முன்முதல்வன்; பின்னைப் புதுமைக்கும் போர்த்துமப் பெற்றியன் – பின்னும் முதல்வன். முன்னவனே பின்னும் ஆனவனே – திருவாசகம்

**866.** பத்தர்க ணாளு மறவார் பிறவியை
யொன்றறுப்பான்
முத்தர்கண் முன்னம் பணிசெய்து பாரிட
முன்னுயர்த்தான்
கொத்தன கொன்றை மணங்கம ழுந்திரு
வேதிகுடி
அத்தனை யாரா வமுதினை நாமடைந்
தாடுதுமே. 4

பக்தர்களாய்த் தன்னை நாளும் மறவாத அடியார்களுக்குப் பொருந்திய பிறவிப் பிணியை அறுப்பவனாய், பாசநீக்க உற்றவர்கள் இம்மண்ணுலகில் சிவப்பணி செய்து உயரச் செய்தவனாய், கொத்தாகப் பூத்த கொன்றையின் மணம் பரவும் திருவேதிகுடித் தலைவனாய் உள்ள ஆரா அமுதக் கடலை நாம் அடைந்து ஆடுவோம்.

அமுதினை நாமடைந்தாடுதுமே – பதிக மகுடம்

**867.** ஆனணைந் தேறுங் குறிகுண மாரறி
வாரவர்கை
மானணைந் தாடு மதியும் புனலுஞ்
சடைமுடியன்
தேனணைந் தாடிய வண்டு பயிறிரு
வேதிகுடி
ஆனணைந் தாடு மழுவனை நாமடைந்
தாடுதுமே. 5

தேனிலே பொருந்தி உண்டு பறக்கும் வண்டுகள் மிகுதியாகக் காணப்படும் திருவேதிகுடியில் பஞ்சகவ்வியத்தில் அபிடேகம் கொள்ளும், மழு ஏந்திய பெருமான், பிறையும் கங்கையும் சடைமுடியில் சூடி, கையில் மானை வைத்துக் கொண்டு கூத்து நிகழ்த்துபவன் விரும்பி காளையை ஏறி ஊரும் அப்பெருமானுடைய பெயர்களையோ, அடையாளங்களையோ, பண்புகளையோ ஒருவரும் முழுமையாக அறிதல் இயலாது. அவனை அடைந்து அருளாரமுதக் கடலில் ஆடுவோம் நாம்.

ஆன் – விடை. குறியும், குணமும் ஆரறிவார்?

**868.** எண்ணு மெழுத்துங் குறியு மறிபவர்
தாமொழியப்
பண்ணி னிசைமொழி பாடிய வானவர்
தாம்பணிவார்
திண்ணென் வினைகளைத் தீர்க்கும் பிரான்றிரு
வேதிகுடி
நண்ண வரிய வமுதினை நாமடைந்
தாடுதுமே. **6**

எண்ணையும், எழுத்தையும், குறியையும் அறிபவர் தாம் மொழிய வானவர் தாம் பணிவார்.

எண்ணையும் எழுத்தையும் பெயர்களையும் அறிபவராகிய தாம் மொழிய அவற்றைக் கேட்டுப் பண்ணோடு இயைந்த பாடல்களைப் பாடும் தேவர்கள் பணிந்து தெளிந்து கொள்ளுமாறு, அழுத்தமான வினைகளைப் போக்கும் பெருமானாய்த் திருவேதிகுடியில் உறையும் கிட்டுதற்கு அரிய அமுதமாக உள்ள சிவபெருமானை நாம் அடைந்து அருட் கடலில் ஆடுவோம்.

---

**869.** ஊர்ந்தவிடை யுகந் தேறிய செல்வனை
நாமறியோம்
ஆர்ந்த **மடமொழி மங்கை**யொர் பாக
மகிழ்ந்துடையான்
சேர்ந்த புனற்சடைச் செல்வப்பிரான்றிரு
வேதிகுடிச்
சார்ந்த வயலணி தண்ணமு தையடைந்
தாடுதுமே. **7**

தலத்து இறைவி திருப்பெயர் – மடமொழி மங்கை.

ஊர்ந்த விடை யுகந்து ஏறிய செல்வன்
உகந்து விடை ஏறியூர்ந்த செல்வன்
விடை உகந்துஏறி ஊர்ந்த செல்வன்
ஊர்ந்த விடை ஏறிய செல்வன்.

உகந்து காளையை ஏறி ஊருஞ் செல்வனாகிய பெருமானை நாம் முழுமையாக அறியோம். செவிக்கு இனியவான மடப்பம் பொருந்திய மொழிகளை உடைய பார்வதியை மகிழ்ந்து பாகமாக உடையவனாய், சடையிற் கங்கையைச் சூடிய செல்வப் பிரானாய் வயல்கள் சூழ்ந்த திருவேதிகுடியைச் சார்ந்திருக்கும் பெருமானாகிய குளிர்ந்த அமுதை அடைந்து அதில் திளைத்து ஆடுவோம் நாம்.

---

**870.** எரியு மழுவின னெண்ணியு மற்றொரு
வன்றலையுள்
திரியும் பலியினன் றேயமும் நாடுமெல்
லாமுடையான்
விரியும் பொழிலணி சேறுதிகழ்திரு
வேதிகுடி
அரிய வமுதினை யன்பர்க ளோடடைந்
தாடுதுமே. **8**

தேயம் – பெரிய இடப்பிரிவு

நாடு – சிறிய இடப்பிரிவு

அன்பர்கள் – அன்பரொடு மரீஇ. இணங்கத் தன் சீரடியார் கூட்டமும் வைத்து.

கொடிய மழுவை ஏந்தியவனாய், பிரமனுடைய மண்டையோட்டில் பிச்சை பெற விரும்பித் திரிபவனாய், தேயங்களும் நாடுகளும் எல்லாம் உடையவனாய், விரிந்த சோலைகளும் சேறு விளங்கும் வயல்களும் அழகு செய்யும் திருவேதிகுடியில் உறையும் பெருமானாகிய அரிய அமுதை அன்பர்களோடு அடைந்து அதில் திளைத்து ஆடுவோம்.

**871.** மையணி கண்டன் மறைவிரி நாவன்
**மதித்து**கந்த
மெய்யணி நீற்றன் விழுமிய வெண்மழு
வாட்படையான்
செய்ய கமல மணங்கம ழுந்திரு
வேதிகுடி
ஐயனை யாராவமுதினை நாமடைந்
தாடுதுமே. 9

நீலகண்டனாய், வேதம் ஓதும் நாவினனாய், பெருமையாகக் கருதி விரும்பிய திருநீற்றை மெய் முழுதும் அணிந்தவனாய், மேம்பட்ட வெள்ளிய மழுப்படையினனாய், சிறந்த தாமரைகள் மணம் வீசும் திருவேதிகுடித் தலைவனாய் உள்ள சிவபெருமானாகிய ஆரா அமுதை அடைந்து அதில் திளைத்தாடுவோம்.

மதித்து – முத்தி தரத்தக்கது இதுவே என மதித்து.

வெண் மழுவாட்படை – வெண்மை. குற்றமின்மையைக் குறித்த அடை. அநீதியாக அப்படையை ஆளாதவன். அவர்தம் மகனாரும் அம்மழுவைப் பிழையாத தாதை தாளை வீசினாரல்லர்.

"பிழைத்த தன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவாள் வீச"

**872.** வருத்தனை வாளரக் கன்முடி தோளொடு
பத்திறுத்த
பொருத்தனைப் பொய்யா வருளனைப் பூதப்
படையுடைய
திருத்தனைத் தேவர்பி ரான்றிரு வேதி
குடியுடைய
அருத்தனை யாரா வமுதினை நாமடைந்
தாடுதுமே. 10

வாளை ஏந்திய அரக்கனுடைய தோள்களோடு தலைகள் பத்தினையும் நெரித்துத் துன்புறுத்தியவனாய், பிறகு அவற்றைப் பொருத்தியவனாய், தவறாத அருளுடைய வனாய், பூதப் படையை உடைய புனிதனாய், தேவர்கள் தலைவனாய், திருவேதி குடியில் உறையும் மெய்ப்பொருளான ஆரா அமுதினை அடைந்து அதில் திளைத்து ஆடுவோம் நாம்.

அருத்தன், வருத்தன், திருத்தன், பொருத்தன், பொய்யா அருளன், தேவர்பிரான், ஆராஅமுதன் ஆகிய சிவபெருமான்.

## 91. திருவையாறு

**(தொண்டனேனைத் தன் பொன்னடிக் கீழெனையே)**

**திருவிருத்தம்** **பதிக எண் : 91**

**873.** குறுவித்த வாகுற்ற நோய்வினை காட்டிக்
குறுவித்தநோய்
உறுவித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பா
னுகந்தருளி
அறிவித்த வா**றடி யேனை**யை யாற
னடிமைக்களே
செறிவித்தவாதொண்ட னேனைத்தன் பொன்**னடிக்**
**கீழெனை**யே. 1

இப்பதிகம் முழுமையும் சூலை தந்து சமண் தீர்த்து ஆட்கொண்டருளிய சரிதக் குறிப்புடையது.

அடியேனை என்றும், அடிமைக்களே என்றும், அடிக்கீழ் என்றும் திருவடி சம்பந்தமாகவே போற்றியதை அறியவேண்டும்.

என் முன்னைய குற்றமாகிய வினைகள் இப்பிறப்பில் எனக்கு அவற்றின் பயனாகிய நோயினைக் காட்டி என்னைக் குறுகச் செய்தன. அங்ஙனம் வினைப்பயனாக வந்த நோய்கள் என்னால் பொறுக்கும் அளவினவாய் அல்லாதபடி மிகுவிக்கப்பட்டன. அந்நிலையில் யான் உற்ற நோயாகிய வினைப்பயனைப் போக்க ஐயாறன் திருவுள்ளம் பற்றி அடியேனைத் தன் அடிமை தொண்டுகள் செய்யுமாறு அறிவித்துத் தன் பொன் போன்ற திருவடிக்கீழ், பொருந்துமாறு தொண்டனாக செய்தச் செயலுக்குக் காரணம் அவன் கருணையேயன்றி வேறு யாதாக இருத்தல் கூடும்?

| | |
|---|---|
| **874.** கூர்வித்த வாகுற்ற நோய்வினை காட்டியுங்<br>கூர்வித்தநோய்<br>ஊர்வித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பா<br>னுகந்தருளி<br>ஆர்வித்த வாறடி யேனையை யாற<br>னடிமைக்களே<br>சேர்வித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக்<br>கீழெனையே. 2<br><br>கூர்வித்தல் – மிகுதிப்படுத்துதல்<br>ஊர்வித்தல் – அனுபவிக்கச் செய்தல்<br>ஆர்வித்தல் – அன்பு நிறைவித்தல்<br>சேர்வித்தல் – திருவடிகளுக்கு ஆளாக்குதல் | என் முன்னைய குற்றமாகிய வினைகள் இம்மையில் எனக்கு அவற்றின் பயனாகிய நோயினைக் காட்டித் துயரை மிகுவித்தன. அங்ஙனம் வந்த நோய்கள் என்னைத் தவறான வழியில் செல்லச் செய்தன. அந்த நிலையில் அடியேன் உற்ற நோயைத் தீர்க்கத் திருவுள்ளம் பற்றி அடியேனைத் தன் அடிமைத் தொண்டுகளில் பொருத்துவித்துத் தன் பொன்னடிக் கீழ்த் தொண்டனாகச் சேருமாறு ஐயாறன் செய்த செயலுக்குக் காரணம் அவன் கருணையேயன்றிப் பிறிதில்லை. |
| **875.** தாக்கின வாசல மேவினை காட்டியுந்<br>தண்டித்தநோய்<br>நீக்கின வாநெடு நீரினின் றேற<br>நினைந்தருளி<br>ஆக்கின வாறடி யேனையை யாற<br>னடிமைக்களே<br>நோக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக்<br>கீழெனையே. 3<br><br>சலம் – மாறுபாடு;<br>சைவத் திறத்தினின்றும் திறம்பிய தன்மை; துன்பம். | என் முன்னைய வினை என்னைத் தண்டித்தற்கு உரிய நோயால் தாக்கியது. பின் சமணர்களின் வஞ்சனைச் செயல்களைக் காட்டி என் உயிரைப் போக்க முற்பட்டது. அந்நிலையில் ஐயாறன் என் நோயை நீக்கி என்னைக் கடலிலின்றும் கரையேறச் செய்யவேண்டும் என்று திருவுள்ளம் பற்றித் தன் அடிமைத் தொண்டு செய்ய அடியேனை வழுக்களைந்து கொண்டு திருவடிக் கீழ்த் தொண்டனாகச் செய்த செயல் கருணையின் விளைவாகும். |
| **876.** தருக்கின நான்றக வின்றியு மோடச்<br>சலமதனால்<br>நெருக்கின வாநெடு நீரினின் றேற<br>நினைந்தருளி<br>உருக்கின வாறடி யேனையை யாற<br>னடிமைக்களே<br>பெருக்கின வாதொண்டனேனைத்தன் பொன்னடிக்<br>கீழெனையே. 4<br><br>முதலிரண்டு பாடல்களைச் சூல நோய்க்காகவும்,<br>அடுத்த இரண்டு பாடல்களைக் கடலில்<br>மிதந்ததற்காகவும் கொள்ளலாம். | நான் வினைப் பயனைத் தாங்கும் ஆற்றலில்லேனாய்த் தடுமாறி ஓடுமாறு செருக்குற்ற என் முன்னைவினை வஞ்சனையாக என்னை நெருக்க அடியேனைத் துன்பக் கடலிலிருந்து கரையேறச் செய்யத் திருவுள்ளம் பற்றி ஐயாறன் தன் அடிமைத் தொண்டில் உருகச் செய்து அடியேனைத் தன் பொன்னடிக்கீழ் தொண்டனாக மேம்படுத்திய செயல் அவனுடைய காரணம் பற்றாக் கருணையின் விளைவேயாகும். |

| | |
|---|---|
| **877.** இழிவித்த வாறிட்ட நோய்வினை காட்டி<br>யிடர்ப்படுத்துக்<br>கழிவித்த வாகட்ட நோய்வினை தீர்ப்பான்<br>கலந்தருளி<br>அழிவித்த வாறடி யேனையை யாற<br>ணடிமைக்களே<br>தொழுவித்த வாதொண்ட னேனைத்தன்<br>பொன்னடிக்<br>கீழெனையே. 5 | என் முன்னை வினை எனக்கு நோயைக் காட்டி என்னை நிலையிலிருந்து இறங்கச் செய்து துன்புறுத்தி உயிரைப் போக்க முற்பட்ட அளவில், ஐயாறன் அடியேனுடைய துயரம் போக்கித் தன் திருவடிக்கண் தொண்டனாகத் தன்னைத் தொழுமாறு செய்த செயல் அவனுடைய காரணம் பற்றாக் கருணையின் விளைவேயாகும். |
| **878.** இடைவித்த வாறிட்ட நோய்வினை காட்டி<br>யிடர்ப்படுத்து<br>உடைவித்த வாறுற்ற நோய்வினை தீர்ப்பா<br>னுகந்தருளி<br>அடைவித்த வாறடி யேனையை யாற<br>ணடிமைக்களே<br>தொடர்வித்த வாதொண்ட னேனைத்தன்<br>பொன்னடிக்<br>கீழெனையே. 6 | என் முன்னைவினை எனக்கு நோயைத் தந்து வருத்தித் துன்பத்தில் ஆழ்த்தி உயிரைப் போக்கும் நிலையினதாக, ஐயாறன் அடியேனுக்குத் துயரம் தந்த வினையைப் போக்கத் திருவுள்ளம் பற்றி, அடியேனைத் தன் அடிமைத் தொண்டில் சேர்த்துத் தன் திருவடிக்கண் தொண்டனாகத் தொடர்ந்து பணி செய்யுமாறு செய்த செயல் அவனுடைய காரணம் பற்றாக் கருணையின் விளைவே யாகும். |
| **879.** படக்கின வாபட நின்றுபன் னாளும்<br>படக்கினநோய்<br>அடக்கின வாறது வன்றியுந் தீவினை<br>பாவமெல்லா<br>மடக்கின வாறடி யேனையை யாற<br>ணடிமைக்களே<br>தொடக்கினவா தொண்டனேனைத்தன் பொன்னடிக்<br>கீழெனையே. 7 | என் முன்னை வினை பலநாளும் துயருறுமாறு என்னைத் தாழ்த்தி நோயினால் என்னைச் செயலற்றவன் ஆக்கிய நிலையில் ஐயாறன் அடியேனுடைய வினைப்பயனாகிய பாவங்களை எல்லாம் செயலற்றன ஆக்கித் தன் அடிமைத் தொண்டில் அடியேனைத் திருப்பித் தன் பொன்னடித் தொண்டனாகத் தொடக்கி, திருத்தொண்டு செய்யுமாறு செய்த செயல் அவன் கருணையின் விளைவேயாம். |
| **880.** மறப்பித்த வாவல்லை நோய்வினை காட்டி<br>மறப்பித்தநோய்<br>துறப்பித்த வாதுக்க நோய்வினை தீர்ப்பா<br>னுகந்தருளி<br>இறப்பித்த வாறடி யேனையை யாற<br>ணடிமைக்களே<br>சிறப்பித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக்<br>கீழெனையே. 8 | என் முன்னை வினை எனக்கு நோயைக் காட்டி என் அறிவு நிறைவு ஓர்ப்பு கடைப்பிடி என்பனவற்றை மறக்கச்செய்ய, அங்ஙனம் மறக்கச் செய்த நோய் என் உயிர் உடலைத் துறக்கச் செய்ய முற்பட்ட நேரத்தில் ஐயாறன் அடியேனுடைய வினையைப் போக்கத் திருவுள்ளம் பற்றி அடியேனைத் தன் அடிமைத் தொண்டில் ஈடுபடுத்தி பண்டைத் துயரங்களைக் கடக்கச் செய்து, தன் திருவடிக்கண் தொண்டனாகுமாறு சிறப்பித்த செயல் அவன் கருணையின் விளைவேயாகும். |

881. துயக்கின வாதுக்க நோய்வினை காட்டித்
துயக்கினநோய்
இயக்கின வாறிட்ட நோய்வினை தீர்ப்பா
னிசைந்தருளி
அயக்கியன வாறடி யேனையை யாற
னடிமைக்களே
மயக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக்
கீழெனையே. 9

இப்பதிகத்தின் கருத்துப் பிழிவான பாடல்

என் முன்னை வினை எனக்கு நோயைத் தந்து சோர்வடையச் செய்ய, அந்நோய் தான் விரும்பியபடி அடியேன் உடலைச் செயற்படுத்த அந்நிலையில் ஐயாறன் அடியேனுடைய நோயையும் அதற்குக் காரணமான வினையையும் தீர்க்கத் திருவுள்ளம் பற்றித் தன் **அடிமைத் தொண்டில்**, அடியேனை நோயிலனாக ஈடுபடுத்தித் தன் பொன்னடித் தொண்டனாகத் தன் திருத்தொண்டில் கலக்குமாறு செய்த செயல் அவன் கருணையின் விளைவேயாகும்.

882. கறுத்துமிட் டார்கண்டங் கங்கை சடைமேற்
கரந்தருளி
இறுத்துமிட் டாரிலங் கைக்கிறை தன்னை
யிருபதுதோள்
அறுத்துமிட் டாரடி யேனையை யாற
னடிமைக்களே
பொறுத்துமிட் டார்தொண்ட னேனைத்தன்
பொன்னடிக்
கீழெனையே. 10

ஐயாற்றெம் பெருமானார் நீலகண்டராய், கங்காதரராய், இராவணன் இருபது தோள்களையும் நெரித்தவராய், அடியேனைத் தம் அடிமைத் தொண்டில் வேற்றுப் பணிகளை அறுத்து அதன் கண்ணேயே ஈடுபடுமாறு செய்தவராய்த் தம் பொன்னடிக்கீழ் அடியேன் தொண்டனாகுமாறு அடியேனுக்கு ஆதாரமாக அமைந்து விட்டார். இதற்குக் காரணம் என்னை ? அப்பெருமானுடைய காரணம் பற்றாக் கருணையின் விளைவே அடியேனை அப்பெருமானுடைய திருத்தொண்டில் ஈடுபடுத்தியது.

## 92. திருவையாறு

**(இது 20 பாடல்களைக் கொண்ட பதிகம்)**

**திருவிருத்தம்** **பதிக எண் : 92**

883. சிந்திப் பரியன சிந்திப் பவர்க்குச்
சிறந்துசெந்தேன்
முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன
மொய்த்திருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன
பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந் தாடுமை யாற
னடித்தலமே. 1

ஐயாறன் அடித்தலம் அரியன; பொழிவன; கொடுப்பன; தீர்ப்பன. சிந்திப்பவர்க்குச் சிந்திப்ப அரியன ஆயினும் பெருமையைக் கருதிச் சிந்திப்பவர்க்கு முந்தி வந்து செந்தேன் சிறந்து பொழிவன.

பாம்பினைத் திருமேனியில் சுற்றி அணிந்து மாலையில் தோன்றும் வளர்பிறைப் பக்கத்துப் பிறைச் சந்திரனை அணிந்து கூத்து நிகழ்த்தும் ஐயாறனுடைய திருவடிகள் நம் உள்ளத்தால் உள்ளவாறு சிந்திப்பதற்கு அரியனவாய், அவன் அருளாலே தியானிக்கும் மெய்ஞ்ஞானியருக்கு மேம்பட்டுச் சிறந்த தேன்போன்ற இனிமையை முன்னர்க்கொடுத்து, அவர்கள் உயிரைப் பிணித்து நின்ற பழவினைகளைப் போக்கி அவர்களுக்கு முத்திப் பேற்றினை வழங்குவனவாகும்.

| | |
|---|---|
| **884.** இழித்தன வேழேழ் பிறப்பு மறுத்தன<br>வென்மனத்தே<br>பொழித்தன போரெழிற் கூற்றை யுதைத்தன<br>போற்றவர்க்காய்க்<br>கிழித்தன தக்கன் கிளரொளி வேள்வியைக்<br>கீழமுன்சென்<br>றழித்தன வாறங்க மானவை யாற<br>னடித்தலமே. 2 | வேதங்களின் ஆறு அங்கங்களின் வடிவான ஐயாறன் அடித்தலங்கள் – ஒரு உயிரின் வினைப்பயன் தொடர்தற்குரிய **ஏழு பிறப்புக்கள் மக்கள், தேவர், நரகர், விலங்கு, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம்** என்ற ஏழு வகைப் பிறப்பினுள் எப்பிறப்பாயினும் அருவருக்கத்தக்க அப்பிறவிப் பிணியைப் போக்குவனவாய், அடியேன் உள்ளத்தே இன்பத்தைப் பொழிவனவாய், போரிடுவதில் வல்ல கூற்றுவனை உதைத்தனவாய், தக்கனுடைய மேம்பட்ட வேள்வியை அழித்தனவாய், தம்மை வழிபடும் அடியவர்களுக்குக் கீழான பிறவிகளை முற்பட்டு முயன்று அழித்தனவாய் உள்ளன. |
| **885.** மணிநிற மொப்பன பொன்னிற மன்னின<br>மின்னியல்வாய்<br>கணிநிற மன்ன கயிலைப் பொருப்பன<br>காதல்செய்யத்<br>துணிவன சீலத்த ராகித் தொடர்ந்து<br>விடாததொண்டர்க்<br>கணியன சேயன தேவர்க்கை **யாற<br>னடித்தலமே.** 3<br><br>ஐயாறனடித்தலமே என்பது பதிக மகுடம். | ஐயாறன் அடித்தலங்கள் மாணிக்கத்தைப் போலவும் பொன்னைப் போலவும் மின்னலைப் போலவும் அடியவர்கள் விரும்புகின்ற நிறத்தோடும் ஒளியோடும் விளங்குவனவாய், கயிலைமலையில் உள்ளனவாய், அன்பு செய்யத் தக்கனவாய், நல்லொழுக்கத்துடன் இறை பணியைத் தொடர்ந்து செய்யும் அடியவர்களுக்கு அணியனவாய்த் தேவர்களுக்குத் தொலைவில் உள்ளனவாய் இருக்கின்றன. |
| **886.** இருடரு துன்பப் படல மறைப்பமெய்ஞ்<br>ஞானமென்னும்<br>பொருடரு கண்ணிழந் துண்பொரு ணாடிப்<br>புகலிழந்த<br>குருடருந் தம்மைப் பரவக் கொடுநர<br>கக்குழிநின்<br>றருடரு கைகொடுத் தேற்றுமை யாற<br>னடித்தலமே. 4 | ஐயாறன் அடித்தலங்கள் இருளைத் தரும் துன்பத்திரை மறைக்க மெய்ஞ்ஞானம் என்னும் பார்வையை இழந்த, நுகர்தற்குரிய பொருள்களைத் தேடிப் பற்றுக்கோட்டினை இழந்த குருடர்களும் தம்மைப் போற்றுமாறு கொடிய நரகமாகிய குழியில் இருந்து அவர்களை அருளாகிய கைகளைக் கொடுத்து வெளியேற்றி முத்தி நிலத்தின் கரைக்கண் சேர்ப்பன. |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **887.** எழுவா யிறுவா யிலாதன வெங்கட்<br>பிணிதவிர்த்து<br>வழுவா மருத்துவ மாவன மாநர<br>கக்குழிவாய்<br>விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன மீட்பன<br>மிக்கவன்போ<br>டழுவார்க் கமுதங்கள் காண்கவை யாற<br>னடித்தலமே. 5 | ஐயாறன் அடித்தலங்கள் – தமக்குத் தோற்றமும் முடிவும் இல்லனவாய் நம்முடைய நோய்களைப் போக்கத்தவறாத மருந்தின் தன்மையவாய் நரகக்குழியில் தம் வினைப்பயனால் விழும் உயிர்களை வினை நுகர்ச்சிக்காக விழச் செய்து பின் கருணையினால் கரையேற்றுவனவாய், மேம்பட்ட அன்பினால் உள்ளம் உருகி அழுபவர்களுக்கு அமுதங்களாக உள்ளன. |
| **888.** துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட<br>தொண்டர் தம்மை<br>இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன<br>மாற்றயலே<br>பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப்<br>பொய் பொருந்தா<br>அன்பர்க் கணியன காண்கவை யாற<br>னடித்தலமே. 6 | ஐயாறன் அடித்தலங்கள் அடியார்களைத் துன்பக் கடலைக் கடத்த உதவும் தோணியின் செயலைச் செய்வனவாய் இன்பமாகிய கரையிலே கொண்டு சேர்ப்பனவாய் மாற்று அறிய முடியாத வலியற்ற பொன்போல ஒளி வீசுவனவாய்ப் பொய்ப் பொருள்களிடத்துப் பற்றற்ற மெய்யடியார்களுக்கு அணியனவாய் உள்ளன. |
| **889.** களித்துக் கலந்ததொர் காதற் கசிவொடு<br>காவிரிவாய்<br>குளித்துத் தொழுதுமுன் னின்றவிப் பத்தரைக்<br>கோதில்செந்தேன்<br>தெளித்துச் சுவையமு தூட்டி யமரர்கள்<br>சூழிருப்ப<br>அளித்துப் பெருஞ்செல்வ மாக்குமை யாற<br>னடித்தலமே. 7<br><br>சிவபூசகர்கள் அமுதூட்டும்போது பாடும் பாடல் | ஐயாறன் அடித்தலங்கள் அடியார்குழாத்தோடு மகிழ்ந்து அன்பால் ஏற்பட்ட உள்ள நெகிழ்ச்சியோடு காவிரியில் நீராடித் தொழுது தம் முன் நின்ற அடியார்களை மேம்பட்ட செந்தேனைத் தெளியச் செய்து அத்தேனை அமுதோடு உண்பித்துத் தேவர்கள் சூழ்ந்து வழிபடும் பெரிய செல்வத்தை அவர்களுக்கு வழங்கி எப்பொழுதும் செல்வன்கழல் ஏத்தும் செல்வத்தை இடையறாது நுகரும் வாய்ப்பினை நல்குவன. |
| **890.** திருத்திக் கருத்தனைச் செவ்வே நிறுத்திச்<br>செறுத்துடலை<br>வருத்திக் கடிமலர் வாளொடுத் தோச்சி<br>மருங்குசென்று<br>விருத்திக் குழக்கவல் லோர்கட்கு விண்பட்<br>டிகையிடுமால்<br>அருத்தித் தருந்தவ ரேத்துமை யாற<br>னடித்தலமே. 8 | விரும்பிச் சிறந்த தவத்தினை உடையவர்கள் துதிக்கும் ஐயாறனுடைய திருவடிகள் உள்ளத்தைப் பிற பொருட்கண் செல்லாமல் திருத்தம் பெறச் செய்து அதனைச் சிவபெருமான் திருவடிகளிலேயே பதித்து, தொடர்ந்து, அதனை அடக்கி உடலை யோகத்தால் வருத்தி, நறுமணம் கமழும் ஒளி பொருந்திய மலர்களை எடுத்து உயர்த்தித் திருவடிகளில் தூவி எம்பெருமான் பக்கல் அடைந்து உடல் விருத்தி உயிர் விருத்தி ஆகிய இரண்டற்கும் முயலும் ஆற்றல் உடையவர்களுக்கு வீட்டுலகில் இடம் பெறுவதற்குரிய பட்டிகையில் பெயர்ப்பதிவு செய்துவிடும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| 891. பாடும் பறண்டையு மாந்தையு மார்ப்பப் பரந்துபல்பேய்<br>கூடி முழவக் குவிகவிழ் கொட்டக் குறுநரிகள்<br>நீடுங் குழல்செய்ய வைய நெளிய நிணப்பிணக்காட்<br>டாடுந் திருவடி காண்கவை யாற னடித்தலமே. 9 | ஐயாறன் அடித்தலங்கள், ஒலிக்கும் பறண்டை மொந்தை என்ற இசைக்கருவிகள் ஆரவாரம் செய்யப் பல பேய்களும் நாற்புறமும் பரவி முழவு முதலியவற்றின் குவிந்து கவிழ்ந்த மார்ச்சனை இடத்தில் ஒலியை எழுப்ப, குறுநரிகள் வேய்ங்குழல் போல ஒலிக்கப் பூமி அதிர்ச்சி தாங்காமல் நெளிய, கொழுப்பு உருகும் பிணங்களை உடைய சுடுகாட்டில் கூத்து நிகழ்த்துவனவாம். |
| 892. நின்போ லமரர்க ணீண்முடி சாய்த்து நிமிர்த்துகுத்த<br>பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன பாங்கறியா<br>என்போ லிகள்பறித் திட்ட விலையு முகையுமெல்லாம்<br>அம்போ தெனக்கொள்ளு மையனை யாற னடித்தலமே. 10 | ஆகமப்படி செய்யும் முறைகளை அறியாத அடியேனைப் போன்றவர்கள் பறித்துச் சமர்ப்பித்த இலைகளையும் மொட்டுக்களையும், உயர் மலர்களாக ஏற்றருள்பவன் ஐயாறன். அப்பெருமானின் திருவடித் தாமரைகள், முடிசாய்த்துத் தம்மை வணங்குகின்ற தேவர்களின் திருமுடிகளிலிருந்து விழுகின்ற புதுமலர்கள் நிறைந்து விளங்குவன. அம் மலர்களினும் மெல்லிய திருவடிகளோ, மலர்களைச் சொரிதலால் மேலும் சிவப்பெய்துவன. அதனால், அத்திருவடிகள், பவள வண்ணத்தின் பொலிவானது மேன்மேலும் செறிந்து விளங்குகின்ற சிறப்புடையன. |
| 893. மலையார் மடந்தை மனத்தன வானோர் மகுடமன்னி<br>நிலையா யிருப்பன நின்றோர் மதிப்பன நீணிலத்துப்<br>புலையாடு புன்மை தவிர்ப்பன பொன்னுல கம்மளிக்கும்<br>அலையார் புனற்பொன்னி சூழ்ந்தவை யாற னடித்தலமே. 11 | தேவருலகத்தை வழங்கும், அலையோடு கூடிய நீரை உடைய காவிரி தென்புறத்தில் சூழ்ந்துள்ள ஐயாறன் அடித்தலங்கள் பார்வதியின் மனத்தனவாய், தேவர்களின் முடிகள் விளங்குவதனால் நிலையாகத் தம்மிடம் பொருந்தியிருப்பனவாய், வழிபட்டு நிற்பவரால் மதிக்கப்படுவனவாய், இவ்வுலகின் கீழ்மையில் ஈடுபடும் புல்லிய பிறவியைப் போக்குவன ஆகும். |
| 894. பொலம்புண்டரீகப் புதுமலர் போல்வன போற்றியென்பார்<br>புலம்பும் பொழுதும் புணர்துணை யாவன பொன்னனையாள்<br>சிலம்புஞ் செறிபா டகமுஞ் செழுங்கிண் கிணித்திரளும்<br>அலம்புந் திருவடி காண்கவை யாற னடித்தலமே. 12 | ஐயாறன் அடித்தலங்கள் அப்பொழுது அலர்ந்த பொற்றாமரை மலர்கள் போல்வனவாய், தம்மை வழிபடுபவர் தனித்து வருந்தும்போதும் வருத்தத்தைப் போக்கும் துணையாவனவாய், பொன் போன்ற ஒளியையுடைய பார்வதியின் சிலம்பும் பாடகமும் கிண்கிணியும் தம்மிடையே ஒலிப்பனவாகும். |

| | |
|---|---|
| **895.** உற்றா ரிலாதார்க் குறுதுணை யாவன<br>வோதிநன்னூல்<br>கற்றார் பரவப் பெருமை யுடையன<br>காதல்செய்ய<br>கிற்பார் தமக்குக் கிளரொளி வானகந்<br>தான்கொடுக்கும்<br>அற்றார்க் கரும்பொருள் காண்கவை யாற<br>னடித்தலமே. 13 | ஐயாறன் அடித்தலங்கள் தமக்கு உதவுவார் இல்லாது தனித்து வருந்துபவர்களுக்கு மேம்பட்ட துணையாவனவாய், சிவாகமங்களை ஓதி அனுபவப் பொருளை ஞானதேசிகர்பால் கேட்டு அறிந்த சான்றோர்கள் முன்நின்று துதிக்கும் பெருமை உடையனவாய், தம்மை விரும்பும் ஆற்றல் உடையவர்களுக்கு மேம்பட்ட ஞானஒளி வடிவமான வீட்டுலகை அளிப்பனவாய் ஏனைய பொருள்பற்று அற்றாருக்குக் கிட்டுதற்குச் சிறந்த பொருளாய் உள்ளனவாம். |
| **896.** வானைக் கடந்தண்டத் தப்பான் மதிப்பன<br>மந்திரிப்பார்<br>ஊனைக் கழித்துய்யக் கொண்டருள் செய்வன<br>வுத்தமர்க்கு<br>ஞானச் சுடராய் நடுவே யுதிப்பன<br>நங்கையஞ்ச<br>ஆனை யுரித்தன காண்கவை யாற<br>னடித்தலமே. 14 | ஐயாறன் அடித்தலங்கள் தேவருலகையும் தாண்டி அதற்கு அப்பாலும் மதிக்கப்படுவனவாய், மந்திரங்களால் வழிபடு கின்றவர்களுடைய பிறவித்துயரைப் போக்கி உய்தி பெற அவர்களை அடிமையாகக் கொண்டு பேரின்பம் நல்குவனவாய், மேம்பட்ட சான்றோர்களுக்கு ஞானஒளியாய் அவர்கள் உள்ளத்தே தோன்றுவனவாய், பார்வதி அஞ்சுமாறு பெருமான் யானையைத் தோல் உரித்த காலை அந்த யானையின் உடலை அமுத்திப் பிடித்துக் கொள்ள உதவியனவாய் உள்ளன. |
| **897.** மாதிர மானில மாவன வானவர்<br>மாமுகட்டின்<br>மீதன மென்கழல் வெங்கச்சு வீக்கின<br>வெந்நமனார்<br>தூதரை யோடத் துரப்பன துன்பறத்<br>தொண்டுபட்டார்க்<br>காதர மாவன காண்கவை யாற<br>னடித்தலமே. 15 | ஐயாறன் அடித்தலங்கள் வானுலகும் மண் உலகும் ஆவனவாய்த் தேவர்களின் உச்சியின் மீது பொருந்துவனவாய், மென்மையான கழலும் விரும்பத்தக்க கச்சும் கட்டப்பட்டனவாய், கொடிய தருமராசரின் தூதர்களை ஓடச் செய்வனவாய், உலகத் துன்பங்கள் தீரத் தொண்டராய் அடிமைப் பணி செய்பவருக்குத் தாங்கும் பொருளாய் உள்ளன. |
| **898.** பேணித் தொழுமவர் பொன்னுல காளப்<br>பிறங்கருளால்<br>ஏணிப் படிநெறி யிட்டுக் கொடுத்திமை<br>யோர்முடிமேல்<br>மாணிக்க மொத்து மரகதம் போன்று<br>வயிரமன்னி<br>ஆணிக் கனகமு மொக்குமை யாற<br>னடித்தலமே. 16 | ஐயாறன் அடித்தலங்கள், விரும்பித் தொழும் அடியவர்கள் மேம்பட்ட வீட்டுலகத்தை ஆளுமாறு மிக்க அருளினாலே ஏணிப்படி போன்று ஏறிச் செல்லக்கூடிய வழியை அமைத்துக் கொடுத்து, தேவர்கள் முடிக்கு அணியத்தக்க மாணிக்கம், மரகதம், வைரம், தூய பொன் இவற்றை ஒத்து இருப்பனவாம். |

| | |
|---|---|
| **899.** ஓதிய ஞானமும் ஞானப் பொருளு<br>மொலிசிறந்த<br>வேதியர் வேதமும் வேள்வியு மாவன<br>விண்ணுமண்ணும்<br>சோதியுஞ் செஞ்சுடர் ஞாயிறு மொப்பன<br>தூமதியோ<br>டாதியு மந்தமு மானவை யாற<br>னடித்தலமே. 17 | ஆதியும், அந்தமும் ஆகிய ஐயாறன் அடித்தலங்கள் வேதஆகமங்களை ஓதியதனால் பெற்ற அபர ஞானமும், ஞானப் பொருளாகிய பரஞானமும், ஒலியால் மேம்பட்ட அந்தணர்கள் ஓதும் வேதமும், வேதத்தை ஒட்டிச் செய்யப்படும் வேள்வியும், தேவருலகமும் இந்நிலவுலகமும் அக்கினியும் சிவந்த ஒளியை உடைய சூரியனும் தூயமதியும் ஒப்பனவாய ஒளிப் பொருளுமாக உள்ளன. |
| **900.** சுணங்கு முகத்துத் துணைமுலைப் பாவை<br>சுரும்பொடுவண்<br>டணங்குங் குழலி யணியார் வளைக்கரங்<br>கூப்பிநின்று<br>வணங்கும் பொழுதும் வருடும் பொழுதும்வண்<br>காந்தளொண்போ<br>தணங்கு மரவிந்த மொக்குமை யாற<br>னடித்தலமே. 18 | ஐயாறன் அடித்தலங்கள் தேமல் படர்ந்த முன்பகுதியை உடைய இணையான தனங்களை உடைய பாவை போன்ற பார்வதி சுரும்பும் வண்டும் அழகுசெய்யும் கூந்தலை உடையவளாய் வளையல்களை அணிந்த கைகளைக் குவித்து நின்று வணங்கும் போதும் தடவிக்கொடுக்கும் போதும் காந்தட்பூவால் அழகுசெய்யப்பட்ட தாமரைப் பூக்களை ஒத்திருக்கின்றன. காந்தட்பூ – பார்வதி கைகள், தாமரை – பெருமான் திருவடிகள். |
| **901.** சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித்<br>தொண்டர்துன்னும்<br>நிழலா வனவென்றும் நீங்காப் பிறவி<br>நிலைகெடுத்துக்<br>கழலா வினைகள் கழற்றுவ கால<br>வனங்கடந்த<br>அழலா ரொளியன காண்கவை யாற<br>னடித்தலமே. 19<br><br>இன்றும் பல அடியார்கள் கொடுமையான வெயில் நாட்களில் இப்பாடலைப் பாடிப் பயன் பெறுகின்றனர். பதிப்பாசிரியருக்கும் அந்த அனுபவம் உண்டு. | ஐயாறன் அடித்தலங்கள் கலக்குகின்ற துயராகிய வெப்பம், தாக்கும் போது கைத்தொண்டு செய்யும் அடியவர்களுக்குப் பொருந்தும் நிழலானவையாய், ஒரு பொழுதும் நீங்காத பிறவி எடுக்கும் செயலைப் போக்கி, விடுத்து நீங்காத வினைகளை அப்புறப்படுத்துவனவாய்க் காலம் என்னும் காட்டினை எரித்து வென்ற தீயின் நிறைந்த ஒளியை உடையன. |
| **902.** வலியான் றலைபத்தும் வாய்விட்டலற<br>வரையடர்த்து<br>மெலியா வலியுடைக் கூற்றை யுதைத்துவிண்<br>ணோர்கண்முன்னே<br>பலிசேர் படுகடைப் பார்த்துப்பன் னாளும்<br>பலரிகழ<br>அலியா நிலைநிற்கு மையனை யாற<br>னடித்தலமே. 20 | நம் தலைவனாகிய ஐயாறனுடைய திருவடிகள் வலிமையை உடைய இராவணனின் தலைகள் பத்தும் வாய்விட்டு அலறுமாறு மலையால் அவனை அழுத்தி, குறையாத வலிமையை உடைய கூற்றுவனை உதைத்து, தேவர்கள் காண அவர்கள் முன்னே பிச்சை வழங்கும் வீட்டுவாயில்களை நோக்கிப் பல நாளும் பலரும் இகழுமாறு ஆண்மை நிலைக்கு ஏலாத அலியாம் நிலைக்கு உரிய செயல்களைச் செய்யும் இயல்பின. |

## 93. திருக்கண்டியூர் வீரட்டம்

திருவிருத்தம் பதிக எண் : 93

**903.** வானவர் தானவர் வைகன் மலர்கொணர்ந்
திட்டிறைஞ்சித்
தானவர் மால்பிர மன்னறி யாத
தகைமையினான்
ஆனவ னாதிபு ராணனன் றோடிய
பன்றியெய்த
கானவ னைக்கண்டி யூரண்ட வாணர்
தொழுகின்றதே. 1

தேவர்களும் தேவகணத்தவரான வித்தியாதரர்களும் நாள்தோறும் மலர்களைக் கொணர்ந்து சமர்ப்பித்து வணங்க வைகுந்தத்திலும் சத்தியலோகத்திலும் உள்ள திருமாலும் பிரமனும் உள்ளபடி அறிய முடியாத தன்மையுடைய வியாபகப் பொருளாகியவனாய், காளை வாகனனாய், மூலப் பழம்பொருளாய், அருச்சுனனுக்குப் பாசுபதாத்திரம் வழங்கக் கருதிய அன்று காட்டில் ஓடிய பன்றியை அம்பு எய்த வேடனாய் உள்ள பெருமானுடைய கண்டியூர்த் திருத்தலத்தை உலகில் உள்ள மக்கள் தொழுகின்றார்கள். கண்டியூரைத் தேவர்களும் அசுரர்களும் மண்ணவர்களும் தொழுகின்றனர் என்றவாறு.

---

**904.** வான மதியமும் வாளர வும்புன
லோடுசடைத்
தான மதுவென வைத்துழல் வான்றழல்
போலுருவன்
கான மறியொன்று கையுடை யான்கண்டி
யூரிருந்த
ஊனமில் வேத முடையனை நாமடி
யுள்குவதே. 2

வானத்தில் இயங்கவேண்டிய பிறை, ஒளி பொருந்திய பாம்பு, கங்கை இவற்றிற்குத் தன் தலையைத் தங்குமிடமாக வழங்கித் திரிபவனாய், தீ நிறத்தினனாய், காட்டில் வாழும் மான்குட்டியைக் கையில் ஏந்தியவனாய்க் கண்டியூரில் இருக்கும், குறைவு ஒன்றும் இல்லாத வேதத்தை உடைய பெருமானை அவன் திருவடிக்கண் நாம் தியானிப்போமாக.

---

**905.** பண்டங் கறுத்ததோர் கையுடை யான்படைத்
தான்றலையை
உண்டங் **கறுத்தது மூரொடு நாடவை
தானறியும்**
கண்டங் கறுத்த மிடறுடை யான்கண்டி
யூரிருந்த
தொண்டர் பிரானைக்கண் டீரண்ட வாணர்
தொழுகின்றதே. 3

பிரமன் தலையைப் பண்டு நீக்கிய கையை உடையவனாய், விடத்தை உண்டு அதனைக் கழுத்தில் இறுத்திய அதனால் நீலகண்டனாய் உயிரினங்களின் அச்சத்தைப் போக்கிய செய்தியை ஊர்களும் நாடுகளும் அறியும். அத்தகைய பெருமான் தொண்டர்கள் தலைவனாய்க் கண்டியூரில் உகந்தருளியிருக்க அவனை அங்கே அண்டத்தில் வாழும் சான்றோர்கள் தொழுகின்றார்கள்.

| | |
|---|---|
| **906.** முடியின்முற் றாததொன் றில்லையெல் லாமுடன் றானுடையான்<br>கொடியுமுற் றவ்விடை யேறியோர் கூற்றொரு பாலுடையான்<br>கடியமுற் றவ்வினை நோய்களை வான்கண்டி யூரிருந்தான்<br>**அடியுமுற் றார்தொண்ட ரில்லைகண் டீரண்ட வானவரே.** 4 | அவன் செய்து முடிக்க நினைத்தால் வெற்றிகரமாக முடியாத செயல் ஒன்றுமில்லை. எல்லாப் பொருள்களையும் அப்பெருமான் தன்பால் உடையான். கொடியில் தன் உருவம் எழுதப்பட்ட வாகனமாக உடைய காளை மீது இவர்ந்து பார்வதி பாகனாய், அடியார்களுடைய கொடியவினைகளை அடியோடு நீக்குபவனாய்க் கண்டியூரில் உகந்தருளி யிருக்கும் அப்பெருமானுடைய திருவடிகளைத் தொண்டர்களே அடைந்தனர். மேலுலகத் தேவர்கள் அடையவில்லை. |
| **907.** பற்றியொ ரானை யுரித்தபி ரான்பவ ளத்திரள்போல்<br>முற்று மணிந்ததொர் நீறுடை யான்முன்ன மேகொடுத்த<br>கற்றங் குடையவன் றானறி யான்கண்டி யூரிருந்த<br>குற்றமில் வேத முடையானை யாமண்டர் கூறுவதே. 5 | ஓர் யானையைக் கீழ்ப்படுத்தி அதன் தோலினை உரித்த தலைவனாய், பவளத்திரள் போன்ற மேனி முழுதும் திருநீறு அணிந்தவனாய், கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்த கண்ணனாக அவதரித்த திருமாலால் அறியப்படாதவனாய்க் கண்டியூரில் உறைபவனாய், முன்னமே உலகுக்கு வழங்கிய குற்றமற்ற வேதங்களை உடையவனான அப்பெருமானைத் தேவர்கள் போற்றுகின்றார்கள். |
| **908.** போர்ப்பனை யானை யுரித்த பிரான்பொறி வாயரவம்<br>சேர்ப்பது வானத் திரைகடல் சூழுல கம்மிதனைக்<br>காப்பது காரண மாகக் கொண் டான்கண்டி யூரிருந்த<br>கூர்ப்புடை யொள்வாண் மழுவனை யாமண்டர் கூறுவதே. 6 | யானையை உரித்த தோலைப் போர்க்கின்ற பிரானாய், உடம்பில் புள்ளிகளைக் கொண்ட பாம்பினை உடலில் சேர்த்து அணிந்தவனாய், வானளாவிய அலைகளை உடைய கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தைக் காப்பதற்காகக் கூர்மையை உடைய மழுப்படையைக் கொண்ட கண்டியூர்ப் பெருமானைத் தேவர்கள் போற்றுகின்றார்கள். |
| **909.** அட்டது காலனை யாய்ந்தது வேதமா றங்கமன்று<br>சுட்டது காமனைக் கண்ணத னாலே தொடர்ந்தெரியக்<br>கட்டவை மூன்று மெரித்த பிரான்கண்டி யூரிருந்த<br>குட்டமுன் வேதப் படையனை யாமண்டர் கூறுவதே. 7 | கூற்றுவனை அழித்து, வேதங்கள், ஆறு அங்கங்கள் என்ற இவற்றை ஆராய்ந்து, மன்மதனைக் கண்ணிலிருந்து தோன்றிய தீயினால் சுட்டு, தொடர்ந்து எரிந்து சாம்பலாகுமாறு மும்மதில்களையும் தீக்கு இரையாக்கிய தலைவனாய்க் கண்டியூரில் உறையும் கடல்போன்ற வேதங்களைத் தனக்குப் படையாக உடைய பெருமானையே தேவர்கள் போற்றுகின்றார்கள். |

**910.** அட்டு மொலிநீ ரணிமதி யும்மல
ரானவெல்லாம்
இட்டுப் பொதியுஞ் சடைமுடி யானிண்டை
மாலையங்கைக்
கட்டு மரவது தானுடை யான்கண்டி
யூரிருந்த
கொட்டும் பறையுடைக் கூத்தனை யாமண்டர்
கூறுவதே. 8

உலகத்தை அழிக்கப் பேரொலியோடு வந்த கங்கையையும் பிறையையும் மலர்களையும் வைத்து உள்ளடக்கிய சடைமுடியை உடையவனாய், இண்டைமாலையையும், கையில் அணிகலனாக அணியும் பாம்பையும் உடையவனாய்க் கண்டியூரில் உகந்தருளியிருக்கும், பறையை ஒத்த உடுக்கையை உடைய கூத்தப் பெருமானைத் தேவர்கள் போற்றுகின்றார்கள்.

**911.** மாய்ந்தன தீவினை மங்கின நோய்கண்
மறுகிவிழத்
தேய்ந்தன பாவஞ் செறுக்ககில் லாநம்மைச்
செற்றநங்கைக்
காய்ந்த பிரான்கண்டி யூரெம் பிரானங்க
மாறினையும்
ஆய்ந்த பிரானல்ல னோவடி யேனையாட்
கொண்டவனே. 9

மன்மதனை வெகுண்டு அழித்த பிரான், கண்டியூரை உகந்தருளியிருக்கும் பிரான், ஆறு அங்கங்களையும் ஆராய்ந்த பிரான் ஆகிய சிவபெருமான் அல்லனோ அடியேனை ஆட்கொண்டுள்ளான். அதனால் தீவினைகள் மறைந்தன. நோய்கள் செயலற்று ஒளி குறைந்தன; கலங்கி விழுமாறு பாவங்கள் தேய்ந்து விட்டன. தீவினை நோய்கள் பாவம் என்ற இவைகள் இனி நம்மை அழிக்க வலிமை அற்றனவாகிவிட்டன.

**912.** மண்டி மலையை யெடுத்துமத் தாக்கியவ்
வாசுகியைத்
தண்டி யமரர் கடைந்த கடல்விடங்
கண்டருளி
உண்ட பிரானஞ் சொளித்த பிரானஞ்சி
யோடிநண்ணக்
கண்ட பிரானல்ல னோகண்டி யூரண்ட
வானவனே. 10

நஞ்சு ஒளித்த பிரான் – உண்டது வயிற்றுள்ளும் போகாமல் வெளியேயும் வராமல் கழுத்தில் ஒளியப் பண்ணிய பெருந்திறல்

தம் ஆற்றலால் மிக்குச்சென்று மந்தரமலையைப் பெயர்த்துச் சென்று அதனை மத்தாகக் கொண்டு வாசுகி என்ற பாம்பைக் கடை கயிறாகச் சுற்றித் தேவர்கள் கடைந்த கடலிலிருந்து புறப்பட்ட விடத்தைக் கண்டு தேவர்கள் அஞ்சி ஓடிவந்து தன்னை அணுகுமாறு செய்தபிரானாய், அவர்களிடம் அருள்செய்து விடத்தை உண்ட பிரானாய்ப்பின் அது உள்ளே செல்லாதபடி கழுத்தில் அதனை ஒளிவீசுமாறு செய்த பெருமான் கண்டியூரிலுள்ள தேவர் தலைவன் அல்லனோ?

## 94. திருப்பாதிரிப்புலியூர்

திருவிருத்தம் — பதிக எண் : 94

913. ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன்
தோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத்
துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா
திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி
யோங்களுக்கே. 1

ஈன்றாள் – மாதினியார்; எந்தை – புகழனார்; உடன்தோன்றினர் – திலகவதியார்

திருப்பாதிரிப்புலியூரில் தன் அடியவர்களாகிய எங்களுக்கு ஊனக்கண்களுக்குத் தோன்றாத் துணைவனாய் இருந்த பெருமான், அடியேனுக்குத் தாயாய் தந்தையாய் உடன்பிறந்த, சகோதர சகோதரியாராய் அமைந்து, மூன்று உலகங்களையும் படைத்து மகிழ்ந்தவனாய், அடியேன் மனத்துள் இருக்க இசைந்தவனாய்த் தேவர்களுக்கும் அன்பனாகிய சிவபெருமான் ஆவான்.

914. பற்றாய் நினைந்திடப் போதுநெஞ் சேயிந்தப்
பாரைமுற்றும்
சுற்றா யலைகடன் மூடினுங் கண்டேன்
புகனமக்கு
உற்றா னுமையவட் கன்பன் றிருப்பா
திரிப்புலியூர்
முற்றா முளைமதிக் கண்ணியி னான்றன
மொய்கழலே. 2

நெஞ்சே! இவ்வுலகை முழுதும் சுற்றிக்கொண்டு அலையை உடைய கடல் மூடிக் கொண்டாலும் நமக்கு உறுதுணையாய் உமாதேவிக்கு அன்பனாய்த் திருப்பாதிரிப்புலியூரில் பிறையைக் கண்ணியாகச் சூடிய சிவபெருமானுடைய எல்லா நலன்களும் செறிந்த திருவடிகளே நமக்கு அடைக்கலம் நல்குவன என்பதனை அறிந்துவிட்டேன். ஆதலின், அவற்றையே நமக்குப் பற்றுக்கோடாக எப்பொழுதும் நினைப்பாயாக, நினைந்திடு எப்போதும் – பாடம்.

915. விடையான் விரும்பியென் னுள்ளத் திருந்தா
னினிநமக்கிங்
கடையா வவல மருவினை சாரா
நமனையஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா
திரிப்புலியூர்
உடையா னடிய ரடியடி யோங்கட்
கரியதுண்டே. 3

காளை வாகனனாகிய பெருமான் விரும்பி அடியேன் உள்ளத்தில் இருக்கின்றான். இனி நம்பக்கம் துயரங்கள் அடையா. தீவினைகள் நெருங்கா. கூற்றுவனுக்கு யாங்கள் அஞ்ச மாட்டோம். பிரமனைப் போன்ற அந்தணர்கள் வாழ்வதும் நாற்பக்கங்களும் தாமரைகள் மலர்ந்திருப்பதுமாகிய திருப்பாதிரிப்புலியூர்ப் பெருமானுடைய அடியவர்களுக்கு அடித் தொண்டர்களாகிய எங்களுக்குச் செய்ய இயலாத அரிய செயல் என்பது ஒன்று உண்டோ?

| | |
|---|---|
| **916.** மாயமெல் லாமுற்ற விட்டிரு ணீங்க<br>மலைமகட்கே<br>நேயநிலாவ விருந்தா னவன்றன்<br>றிருவடிக்கே<br>தேயமெல் லாநின் றிறைஞ்சுந்<br>திருப்பாதிரிப்புலியூர்<br>மேயநல் லான்மலர்ப் பாதமென் சிந்தையு<br>ணின்றனவே. 4 | மலைமகளாகிய பார்வதியிடத்தில் அன்பு நிலை பெற்றிருக்க உள்ளவனாகிய பெருமானுடைய திருவடிக்கண் உலகமெல்லாம் வந்து வழிபடுமாறு திருப்பாதிரிப்புலியூரில் விரும்பித் தங்கியிருக்கும் அப்பெரியவனுடைய தாமரை போன்ற திருவடிகள் மாயை எல்லாம் முழுதும் அகன்ற ஆணவம் அகலுமாறு அடியேன் உடைய சிந்தையில் நிலையாக உள்ளன. |
| **917.** வைத்த பொருணமக் காமென்று சொல்லி<br>மனத்தடைத்துச்<br>சித்த மொருக்கிச் சிவாய நமவென்<br>றிருக்கினல்லால்<br>மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா<br>திரிப்புலியூர்<br>அத்த னருள்பெற லாமோ வறிவிலாப்<br>பேதைநெஞ்சே. 5 | மெய்யுணர்தல் இல்லாத அறியாமையை உடைய மனமே! நமக்கு என்று சேமவைப்பாக உள்ள பொருள் சிவபெருமானே என்று சொல்லி அவனை மனத்தில் தியானித்து மனத்தை ஒருவழிப்படுத்திச் சிவாய நம என்று திருவைந்தெழுத்தை எப்பொழுதும் ஓதிக் கொண்டிருந்தால் அல்லது, செறிந்த கிரணங்களையுடைய சந்திரனைப் போன்று பல கலைகளில்வல்ல சான்றோர்கள் வாழும் திருப்பாதிரிப்புலியூரிலுள்ள தலைவனுடைய அருளைப் பெறுதல் இயலுமோ? |
| **918.** கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங்<br>கருத்துடையேன்<br>உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே<br>னுனதருளால்<br>திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று<br>நீறணிந்தேன்<br>தருவாய் சிவகதி நீபா திரிப்புலி<br>யூரரனே. 6 | திருப்பாதிரிப்புலியூர்ப் பெருமானே! தாயின் கருவிலே கிடந்த போது உன் திருவடிகளையே தியானிக்கும் கருத்து உடையேனாய் இருந்தேன். கருவின் நீங்கி வெளிப்பட்ட உருவம் கிட்டிய பிறகு உன் அருளினால் இப்பொழுது ஆராய்ந்து உன் திருநாமங்களைப் பலகாலும் சொல்லப் பழகியுள்ளேன். வாய்க்குச் செல்வம் விளங்குமாறு திருவைந்தெழுத்தை ஓதித் திருநீறு இப்பொழுது அணியப் பெற்றேன் ஆதலின் அடியேனுக்கு மங்கலமான மார்க்கத்தைத் தருவாயாக. |
| **919.** எண்ணா தமர ரிரக்கப் பரவையு<br>ணஞ்சையுண்டாய்<br>திண்ணா ரசுரர் திரிபுரந் தீயெழச்<br>செற்றவனே<br>பண்ணார்ந் தமைந்த பொருள்கள் பயில்பா<br>திரிப்புலியூர்க்<br>கண்ணார் நுதலாய் கழனங் கருத்தி<br>லுடையனவே. 7 | முதலில் உன்னைத் தியானிக்காமல், கடலில் விடம் தோன்றிய பின் அமரர்கள் உன்னை வேண்டக் கடலில் தோன்றிய நஞ்சினை உண்டாய். வலிமை நிறைந்த அசுரர்களுடைய மும்மதில்களையும் அழித்தவனே! பண்ணின் பயனாம் நல்லிசைப் பாடல்கள் ஒலிக்கின்ற பாதிரிப் புலியூரில் உறையும் நெற்றிக்கண்ணனே! உன் திருவடிகள் எங்கள் உள்ளத்தில் உள்ளன. |

**920. புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா** வுன்னடி
யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ்
வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா
திரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கை செஞ்சடைமேல்வைத்த
தீவண்ணனே. **8**

எப்பிறப்பிலும் ஆண்டவனை அடிமை மறத்தலாகாது.

இவ்வுலகிலே அடியவர்களுக்கு இரக்கப்பட்டு அருள் செய்கின்ற, திருப்பாதிரிப் புலியூரில் உறையும், செழுமையான கங்கைநீரைச் செஞ்சடையில் தேக்கி வைத்திருக்கும் தீப்போன்ற செந்நிறத்துப் பெருமானே! அடியேன் மறுபிறவியில் புழுவாகப் பிறந்தாலும் புண்ணியமே வடிவெடுத்த உன் திருவடிகள் அடியேன் மனத்தை விட்டு நீங்காதிருக்குமாறு அடியேனுக்கு அருள் செய்ய வேண்டும்.

## புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா!

இலட்சக்கணக்கான அடியார்கள் மனனம் செய்து, சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் பாடக்கூடிய அருமையான பாடல், இப்பாடலாகும். பதிப்பாசிரியர் உட்பட பல அடியார்களுக்கு ஆரம்பக்கல்வியின்போது மனனப் பாடலாக வைக்கப்பட்ட சிறப்பு வாய்ந்தது.

ஆறறிவுடைய இம்மானுட உடலில் வாழும் உயிர், மூவறிவுடைய புழுவாகச் சென்றாலும் அதற்கு மனமுண்டு என்ற சித்தாந்தக் கருத்தை அப்பர் சுவாமிகள் சொல்லிச் செல்கிறார். நம்முடைய உடம்பு, உயிர்க்குத் தூல உடம்பு. உயிர்க்கு இறைவன் முதலில் நுண்ணுடம்பைக் (சூக்குமம்) கொடுப்பார். நுண்ணுடம்பு, 'புரியட்ட காயம்' எனப்படும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற தன்மாத்திரைகள் ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம் என்ற அந்தக்கரணங்கள் மூன்றும் சேர்ந்த எட்டும் அமைந்த தொகுதியே புரியட்ட காயம். உயிர் எப்பிறப்பெடுத்தாலும் இந்த புரியட்ட காயத்துடன் சுற்றித்திரியும். புழு எவ்வளவு சிறியதென்று நாமறிவோம். அதிலும் மிகச் சிறியவற்றை பாக்டீரியா என்று சொல்லுகிறார்கள். அதை நுண்ணோக்கிகள் என்று சொல்லப்படும் மைக்ராஸ்கோப்புகள் மூலம்தான் காணமுடியும். அதனுள்ளே உயிரை வைத்து, அதற்கும் இயக்கம் கொடுத்து, வினையை நுகரச் செய்யும் பேரருளாளனாம் சிவபெருமானுக்கு எப்படி நன்றி சொல்லுவது ?

உயிர் எவ்வளவு பெரியது ? எப்படியிருக்கும் ? அது தற்காலம் எங்கேயுள்ளது ? உயிர் விதிக்கப்பட்ட காலம் வரை அவரவர் உடலில் உள்ளது. உயிரைப்பற்றித் தெளிவாக ஆய்ந்த சமயங்கள் உலகில் மிகக் குறைவு. அதில் சைவம் முதன்மையானது. உடலில் உயிர் எங்குள்ளது ? உயிர், உடலில் ஓரிடத்தில் இருக்காது. அதன் நடமாட்டத்துக்கு அவத்தை என்று பெயர். அது அழிவதில்லை. நிரந்தரமானது. அநாதி.

| வ.எண் | பெயர் | அவத்தைப்படும் இடம் | அந்த நிலையில் உடலில் தொழிற்படும் கருவிகள் |
|---|---|---|---|
| 1. | நனவு | புருவநடு | அறிவுப்பொறிகள்-5, செயற்பொறிகள்-5, தன்மாத்திரைகள்-5, விடயங்கள்-5, அந்தக்கரணங்கள்-4, புருடன்-1, தசவாயுக்கள்-10 ஆக மொத்தம் - 35 |
| 2. | கனவு | கழுத்து | தன்மாத்திரைகள்-5, விடயங்கள்-5, அந்தக்கரணங்கள்-4, புருடன்-1, தசவாயுக்கள்-10, ஆக மொத்தம் - 25 |

| வ.எண் | பெயர் | அவத்தைப்படும் இடம் | தொழிற்படும் கருவிகள் |
|---|---|---|---|
| 3. | உறக்கம் | இதயம் | அந்தக்கரணம் (சித்தம்)–1, வாயு (மூச்சுக்காற்று)–1, புருடன் –1. |
| 4. | பேருறக்கம் | கொப்பூழ் | வாயு–1, புருடன்–1 |
| 5. | உயிர்ப் படங்கல் | மூலாதாரம் | புருடன்–1 |

இவ்வாறு புருவ நடுவினின்றும் இறங்கி, மூலாதாரத்தில் ஒடுங்கிக் கிடக்கும் உயிர், மீண்டும் மேலேறிச் சென்று, அந்தந்த இடங்களில் அந்தந்த அவத்தைப்பட்டுப் புருவநடுவை அடையும்.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் மிகநுண்கருவிகள் உயிரைப் பொருந்தி எப்பொழுதும் நீங்காமல் சட்டைபோல ஒட்டியிருப்பவை. காலம்வரும்போது ஆணவ மலத்தைச் சிறிது நீக்கி, உயிரின் அறிவையும், செயலையும் விளக்கி, உலகப் பொருள்களை நுகர்வதற்குரிய தகுதியை உண்டாக்கி நிற்பவை. அக்கருவிகள் ஐந்தும் கூடி நிற்கும் அமைப்பே, 'புருடதத்துவம்' ஆகவே புருடன் என்று கூறப்படுமிடங்களில் எல்லாம், மேற்கூறிய ஐந்து கருவிகளும் ஒடுங்காமல் செயல்படுகின்றன என்று கொள்ளவேண்டும்.

உயிர் மிக நுண்கருவியான புருடன் மூலம் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்களை (உள் உறுப்புகள் – 4)ச் செயல்படுத்த, அவை வெளி உறுப்புகளான கை, கால் என்னும் செயல், அறிவுக்கருவிகளை ஐம்புலன், ஐம்பொறி என்று செயல்படுத்த உடல் இயங்குகிறது. வினைகளை நுகருகிறோம். உயிர்ப்பயணம் உடலில் எப்படி நடைபெறுகிறது ? அது எப்படி நகர்கிறது ? யார் தள்ளி விடுகிறார்கள் ? சிவபெருமானிடம் மிகப்பெரிய கணினி உள்ளது. அதில் ஒவ்வொரு உயிருக்கும் ஒரு குறுந்தகடு உள்ளது. அதில் உயிர்எடுத்த எண்ணற்ற பிறவிகள், அதன் வினைப்பயன் தொகுதி (சஞ்சிதம்) ஆகிய முழுத்தகவலும் சேகரிக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு உயிருக்கும் அடையாளமும், கடவுச்சொல்லும் இருக்கும். அது உயிரில் பதியப்பட்டு இருக்கும். ஊனக் கண்ணுக்கு உயிரே தெரியாதபோது, பதிக்கப்பட்டுள்ள அடையாளமும், கடவுச் சொல்லும் தெரியாது.

வினைகளுக்கேற்ப பயன் கொடுக்கும் தானியங்கி அமைப்பை இறைவன் ஏற்படுத்தியுள்ளார். அது கடவுச்சொற்கள், வானொலி, தொலைக்காட்சி அலைகள் போன்ற அமைப்பை வைத்து, தொடாமலே இயங்கும் ரிமோட் போன்றவற்றின் (Password) மூலம் உயிரை இடம்பெறச் செய்து, உயிரை இயக்குகிறது. எறும்பு ஊர்வதைப் போல, உயிர் உடலினுள்ளே புருவநடு முதல் மூலாதாரம் வரை ஊறும். ஏறும், இறங்கும்.

நாமெல்லாம் வாகன வசதிகளுடன் வாழும் வாய்ப்பைச் சிவபெருமான் தந்துள்ளார். இருசக்கர, நான்கு சக்கர வாகனங்களை வாங்கும்போது வட்டாரப் போக்குவரத்து அதிகாரியின் அனுமதி பெற்று, அதற்கு ஒரு எண்ணைப் பெற்றபின்தான், வாகனத்தைப் பொதுச்சாலைகளில் இயக்கமுடியும். அவர் குறிப்பிடும் எண் வாகனத்தின் வெளியில் ஒட்டப்பட்டிருக்கும். ஆனால், அந்த வாகன உரிமைப் பதிவேட்டில் அவர் என்ஜின் நெம்பர் என்று உள்ளே இயங்கும் இயந்திரத்தின் எண்ணையும் கேட்டு அதனையும் உள் அட்டையில் பதிவு செய்வார். அந்த இயந்திர எண், உற்பத்தியாளரால் (படைத்தவனால்) இயந்திரத்தின் முக்கியமான இடத்தில் அழிக்க முடியாதபடி பதியப்பட்டு இருக்கும். அதைப்போலதான் வசந்தகுமார் என்ற உடலின் பெயரைக் கொண்ட எனக்கும், உயிர்ப்பெயர் அல்லது எண் / எழுத்து அடையாளம் ஒன்றை, சிவபெருமான் உயிரில் பதித்துதான் அனுப்பியுள்ளார். பாக்டீரியாவைக் காண நுண்ணோக்கி என்கின்ற மைக்ராஸ்கோப்பை

விஞ்ஞானிகள் பயன்படுத்துகிறார்கள். ஊனக்கண்களுக்கு அவை தெரியாது. அந்த பாக்டீரியாவுக்குள்ளும் உயிர் இருக்கிறது. நாமும், "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா" என்று நம் நாவரசர் பாடுவதைப்போலப் பிறந்தால், நம் உயிர் அந்தப் புழுவாகிய பாக்டீரியாவுக்குள் இருக்கும். பாக்டீரியாவை நுண்ணோக்கியால்தான் பார்க்க இயலும். அதனுள் இருக்கும் உயிரை நோக்கும் அதிசூக்கும நுண்ணோக்கியை நாம் இன்னும் கண்டுபிடிக்கவில்லை. அதே முடியாதபோது, அந்த அடையாளத்தை எப்படிப் பார்க்க முடியும்? கண்டுபிடிக்க முடியும்? அந்த அடையாளத் தகவல்கள் கூற்றுவனுடைய கணினியிலும் சேமித்து வைக்கப்பட்டுள்ளன. அந்தத் தகவல் பேழையைக் கொண்டுதான் அவன் ஊன், உயிர் வேறு செய்யும் பணியைத் தொடர்கிறான். பிரமனின் கணினியிலும் அந்தத்தகவல் உள்ளது. அதைக் கொண்டுதான் படைக்கிறான்.

நமக்கு வைக்கப்பட்டுள்ள பெயர்களெல்லாம் உடலுக்கு வைக்கப்பட்டுள்ள பெயர்கள். உயிருக்குப் பெயரை, நமக்கு தீட்சை செய்விக்கும் தீட்சாகுருதான் கொடுப்பார் என்று சாத்திர நூல்கள் சொல்கின்றன. அதை உயிரின் பொதுப்பெயர், 'தடத்த நாமம்' என்று கொள்ள வேண்டும். அது ஞானப்பேராகாது. உயிருக்கு சிறப்புப் பெயர் / சூக்சும நாமமும் உண்டு. இது இறைவனால் இடப்பட்டுள்ள அடையாளமாகும். (சொரூப) அந்த நாமத்தைக் கண்டுபிடித்தால்தான் மேலுலக சஞ்சாரத்தின்போது மறைத்தல் நடவாத நொடிகளில் நமது உயிர் நண்பர்களைக் காணமுடியும். அதுவும் ஞானப்பேராகாது. அந்தச் சொரூப நாமம் ஞானிகளுக்குத்தான் தெரியும். இந்த சொரூப நாமமே என்னவென்று தெரியாமல், சொரூப நாமத்துடனேயே, பல்லூழிக்காலம் பயின்று, அரன்நாமத்தை அர்ச்சிக்க, அர்ச்சிக்க, இந்த உயிர் ஞானமென்னும் பாதையை நோக்கி நகர ஆரம்பிக்கிறது. பிறப்பு, இறப்பு என்னும் தீராத சுழற்சி முறைமையை, 'பஞ்சாக்கினி வித்தை' என்ற சொற்பிரயோகத்தால் நமது முன்னோர்கள் வர்ணித்துள்ளார்கள்.

## பஞ்சாக்கினி வித்தை (பிறப்பு, இறப்பு நடைபெறும் விதம்)

பூவுலகத்தை விட்டு நீங்கிய உயிர், ஐந்து இடங்களில் உள்ள அக்கினிகளில் புகுந்து புறப்பட்டு, மீளப் பிறக்கும் என்பது இதன் சுருங்கிய கருத்து (உபநிடதப் பிரமாணம்). உயிர், காலம் முடிந்தபின் சொர்க்கம் / நரகத்தை (1) அடைந்து, அங்குள்ள இன்ப, துன்பங்களை நுகர்ந்து, பின் அவ்வுடம்பு நீங்கி நுண்ணுடலோடு மேகமண்டலத்தை (2) அடைந்து, மேகம் பொழியுங்காலை, மழைநீரோடு கூடி, மீண்டும் பூவுலகை அடைந்து, உணவாகப் பயன்படும் தாவரங்களிலே (3) சென்று, உணவு வழியாகத் தந்தை (4) யின் உடம்பிற் சென்று தங்கிப்பின் தாய் உடம்பிற் (5), தந்தை உறவின் மூலம் புகுந்து கருவாகி, உருவாகிப் பிறக்கும் வினைப்பயன் நுகர்வு இங்குதான் விளைவாகும். நமது உயிர் உட்கார்ந்த தாவரம் மன்னவன் அரண்மனைக்குச் சென்றால் நாம் இராசா. பன்றி அந்தத் தாவரத்தை உண்டால் நாம் ஏனம் என்னும் பிறவி எடுப்போம்.

உயிர் தூல உடம்பைவிட்டபின், சுவர்க்கம் அல்லது நரகம், மேக மண்டலம், நிலம், தாய், தந்தை என்னும் ஐந்து இடங்களில் தங்கிப் பின்பு பிறத்தலால் இந்த ஐந்து இடங்களையும், வேள்விச் சாலைகளாக எண்ணி, உயிர் அங்குள்ள அக்கினிகளில் ஆகுதியாய்ப் புகுந்து தூய்மைபெற்று வருவதாகத் தியானித்தால் உயிர் நன்மை அடையும் என்று சொல்லப்படுகிறது. இதுபற்றிய இத்தியானமுறை, 'பஞ்சாக்கினி வித்தை' என்று சொல்லப்படுகிறது.

இந்தச் சுழற்சியில் சிவத்திருப்பணிகள் தொடரத் தொடர, நாம் சூக்கும நிலையிலிருந்து அதிசூக்கும நிலைக்குச் செல்வோம். அந்த அதிசூக்கும நிலையில் சுவாமி நம்மை உயிர் உள்சட்டையில் இருக்கும் ஒரு திருப்பெயரிட்டு, அவருலகிற்கு அழைப்பார். அதுதான் ஞானப்பேர். இத்திருமுறை நூலின் 300–ஆவது பாடலில் வரும் ஞானப்பேர் இதுவே.

| | |
|---|---|
| 921. மண்பாத லம்புக்கு மால்கடன் மூடிமற்<br>றேழுலகும்<br>விண்பா றிசைகெட் டிருசுடர் வீழினு<br>மஞ்சனெஞ்சே<br>திண்பா ணமக்கொன்று கண்டோந் திருப்பா<br>திரிப்புலியூர்க்<br>கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான்<br>கழலிணையே. 9 | நெஞ்சே! இவ்வுலகம் பாதல உலகுக்குப் போய் அழியுமாறு நிலநடுக்கம் உற்று உலகைக் கடல் வெள்ளம் மூட மற்ற ஏழுலகங்களும் வானத்திலே இருப்புக் குலைந்து சிதறச் சூரிய சந்திரர் தம் நிலையான இருப்பிடத்தை விட்டுக் கீழே விழுந்தாலும் எதனைப் பற்றியும் அச்சம் கொள்ளாதே. திருப்பாதிரிப்புலியூரில் உறையும் நெற்றிக்கண்ணனாய் ஞான ஒளியை உடைய பெருமானுடைய திருவடிகளாகிய திண்ணிய பகுதி நமக்குப் பாதுகாவலுக்கு உளது என்பதை நாம் அறிவோம். |
| 922. திருந்தா வமணர் தந் தீநெறிப் பட்டுத்<br>திகைத்துமுத்தி<br>தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன்<br>வரையெடுத்த<br>பொருந்தா வரக்க னுடனெரித் தாய்பா<br>திரிப்புலியூர்<br>இருந்தா யடியே னினிப்பிற வாமல்வந்<br>தேன்றுகொள்ளே. 10 | மலையைப் பெயர்க்க முற்பட்ட, நல்லறிவு பொருந்தாத இராவணனுடைய உடலை நெரித்தவனே! திருப்பாதிரிப் புலியூரில் உறைபவனே! மனம் திருந்துதல் இல்லாத சமணருடைய தீயவழியிலே ஈடுபட்டு மனம் மயங்கி, திருந்தி இப்பொழுது முத்தியைத் தரும் திருவடிகளில் சரணமாகப் புகுந்து விட்டேன். இனி, அடியேன் பிறவி எடுக்காத வகையில் அடியேனை ஏற்றுக் கொள்வாயாக. |

## 95. திருவீழிமிழலை

திருவிருத்தம் பதிக எண் : 95

| | |
|---|---|
| 923. வான்சொட்டச் சொட்டநின் றட்டும் வளர்மதி<br>யோடயலே<br>தேன்சொட்டச் சொட்டநின் றட்டுந் திருக்கொன்றை<br>சென்னிவைத்தீர்<br>மான்பெட்டை நோக்கி மணாளீர் மணிநீர்<br>மிழலையுளீர்<br>நான்சட்ட வும்மை மறக்கினு மென்னைக்<br>குறிக்கொண்மினே. 1 | வானத்திலே நிலவொளி ஒழுக ஒழுக நின்று ஒளிவிடும் பிறையோடு அதன் அருகில் தேன் ஒழுக ஒழுக நின்று, அழகு செய்யும் கொன்றை மலரைச் சென்னியில் அணிந்தவரே! பெண் மானின் பார்வை போன்ற மருண்ட நோக்கினை உடைய பார்வதியின் கணவரீர்! பளிங்குமணி போன்ற தெளிந்த நீரை உடைய வீழிமிழலையில் உள்ள செம்மையீர்! அடியேன் உம்மை மறந்தாலும் அடியேனைத் தொண்டனாக மனத்துக் கொள்ளுங்கள். |

| | |
|---|---|
| **924.** அந்தமு மாதியு மாகிநின் றீர்அண்ட<br>மெண்டிசையும்<br>பந்தமும் வீடும் பரப்புகின் றீர்பசு<br>வேற்றுகந்தீர்<br>வெந்தழ லோம்பு மிழலையுள் ளீர்என்னைத்<br>தென்றிசைக்கே<br>உந்திடும் போது மறக்கினு மென்னைக்<br>குறிக்கொண்மினே. 2 | ஆதியும் அந்தமுமாக உள்ளவரே! உலகங்களின் எட்டுத்திசைகளிலும் பற்றினையும் பற்று நீக்கத்தையும் உயிரினங்கள் இடையே பரப்புகின்றவரே! காளையை இவர்தலை விரும்புகின்றவரே! விரும்பத்தக்க முத்தீயை அந்தணர் பாதுகாக்கும் மிழலை நகரில் உள்ளவரே! அடியேனைக் கூற்றுவன் தென் திசையில் செலுத்தும் போது அடியேன் தங்களை மறந்தாலும், தாங்கள் அடியேனை மனத்தில் குறித்து வைத்துக் கொண்டு காப்பாற்ற வேண்டும். |
| **925.** அலைக்கின்ற நீர்நிலங் காற்றன லம்பர<br>மாகிநின்றீர்<br>கலைக்கன்று சேருங் கரத்தீர் கலைப்பொரு<br>ளாகிநின்றீர்<br>விலக்கின்றி நல்கு மிழலையு ளீர்மெய்யிற்<br>கையொடுகால்<br>குலைக்கின்று நும்மை மறக்கினு மென்னைக்<br>குறிக்கொண்மினே. 3 | அலைவீசும் நீர் நிலம் காற்று தீ ஆகாயம் என்ற ஐம்பூதங்களாகவும் உள்ளவரே! மான்கன்று பொருந்திய கையை உடையவரே! கலைகளினுடைய உண்மைப் பொருளாக உள்ளவரே! யாரையும் புறக்கணிக்காமல் அருள் வழங்கும் மிழலைப் பெருமானே! வாழ்க்கை இறுதிக் காலத்தில் உடம்பில் கைகளும் கால்களும் செயலிழக்க அடியேன் நும்மை மறந்தாலும் அடியேனை மனத்தில் குறித்துக் கொண்டு காக்கவேண்டும். |
| **926.** தீத்தொழி லான்றலை தீயிலிட் டுச்செய்த<br>வேள்விசெற்றீர்<br>பேய்த்தொழி லாட்டியைப் பெற்றுடை யீர்பிடித்<br>துத்திரியும்<br>வேய்த்தொழி லாளர் மிழலையுள் ளீர்விக்கி<br>யஞ்செழுத்தும்<br>ஒத்தொழிந் தும்மை மறக்கினு மென்னைக்<br>குறிக்கொண்மினே. 4 | தீயை ஓம்பும் தக்கனுடைய தலையைத் தீயிலிட்டு அவன் செய்த வேள்வியை அழித்தவரே! பேய்களைத் தன் விருப்பப்படி ஏவல் கொள்ளும் காளியைத் தேவியாகப் பெற்றுள்ளவரே! தம் கையில் முக்கோலாகிய மூங்கிலைச் சுமந்து திரியும் அந்தணர்கள் மிகுந்த மிழலையில் உள்ளவரே! இறுதிக் காலத்தில் விக்கல் எடுப்பதனால் திருவைந்தெழுத்தை ஓதுதலை மறந்து அடியேன் உம்மை மறந்தாலும் என்னைக் குறிக்கொள்மின். |

| | |
|---|---|
| **927.** தோட்பட்ட நாகமுஞ் சூலமுஞ் சுற்றியும்<br>பத்திமையால்<br>மேற்பட்ட வந்தணர் வீழியு மென்னையும்<br>வேறுடையீர்<br>நாட்பட்டு வந்து பிறந்தே னிறக்க<br>நமன்றமர்தம்<br>கோட்பட்டு நும்மை மறக்கினு மென்னைக்<br>குறிக்கொண்மினே. 5 | தோள்களில் பொருந்திய பாம்புகளையும் கையில் சூலத்தையும் மகிழ்ந்து அணிந்தும், தொண்டாம் தன்மையால் மேம்பட்ட அந்தணர்கள் வாழும் வீழி நகரையும் அடியேனையும் சிறப்பாக உடையீர்! நெடுங்காலம் உயிர்வாழ்ந்து பின் இறக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டு இவ்வுலகில் பிறப்பெடுத்த அடியேன் இறக்குந் தருவாயில் இயமனுடைய ஏவலரால் கைப்பற்றப்பட்டு உம்மை மறந்தாலும் என்னைக் குறிக்கொண்மின். |
| **928.** கண்டியிற் பட்ட கழுத்துடை யீர்கரி<br>காட்டிலிட்ட<br>பண்டியிற் பட்ட பரிகலத் தீர்பதி<br>வீழிகொண்டீர்<br>உண்டியிற் பட்டினி நோயி லுறக்கத்தி<br>லும்மையைவர்<br>கொண்டியிற் பட்டு மறக்கினு மென்னைக்<br>குறிக்கொண்மினே. 6 | உருத்திராக்கமாலை அணிந்த கழுத்தை உடையவரே! சுடுகாட்டில் எரிந்து புலால் நீங்கிய மண்டையோட்டினை உண்கலமாக உடையவரே! வீழிமிழலையை இருப்பிடமாகக் கொண்டவரே! உணவு உண்ட போதும், உணவின்றிப் பட்டினியாய் இருக்கும் போதும் நோயுற்ற போதும், உறங்கும் போதும், ஐம்பொறிகளால் செயற்படுத்தப்படும் அடியேன் உம்மை மறந்தாலும் அடியேனைக் குறிக்கொண்மின். |
| **929.** தோற்றங்கண் டான்சிர மொன்றுகொண் டீர்தூய<br>வெள்ளெருதொன்<br>றேற்றங்கொண் டீரெழில் வீழி மிழலை<br>யிருக்கைகொண்டீர்<br>சீற்றங்கொண் டென்மேற் சிவந்ததொர் பாசத்தால்<br>வீசியவெம்<br>கூற்றங்கண் டும்மை மறக்கினு மென்னைக்<br>குறிக்கொண்மினே. 7 | இவ்வுலகைப் படைத்த பிரமனுடைய தலை ஒன்றனைக் கொய்தவரே! தூய வெள்ளிய காளையை வாகனமாகக் கொண்டவரே! அழகிய வீழிமிழலையை இருப்பிடமாகக் கொண்டவரே! கோபம் கொண்டு என்மேல் சிவந்ததொரு பாசக் கயிற்றை வீசும் கூற்றுவனைக் கண்டு அடியேன் உம்மை மறந்தாலும் என்னைக் குறிக்கொண்மின். |
| **930.** சுழிப்பட்ட கங்கையுந் திங்களுஞ் சூடிச்சொக்<br>கம்பயின்றீர்<br>பழிப்பட்ட பாம்பரைப் பற்றுடை யீர்படர்<br>தீப்பருக<br>விழிப்பட்ட காமனை விட்டீர் மிழலையுள்<br>ளீர்பிறவிச்<br>சுழிப்பட்டு நும்மை மறக்கினு மென்னைக்<br>குறிக்கொண்மினே. 8 | நீர்ச் சுழிகளை உடைய கங்கையையும் சந்திரனையும் சூடிச் சுத்த நிருத்தம் என்ற ஆடலை நிகழ்த்துபவரே! பிறரால் பழிக்கப்படும் பாம்பினை இடுப்பில் இறுகச் சுற்றியவரே! நெற்றி விழியிலிருந்து தோன்றிய நெருப்பு காமனது உடலைச் சாம்பலாக்குமாறு செய்தவரே! வீழிமிழலையில் உள்ளவரே! அடியேன் பிறவிக்கடலின் சுழியில் அகப்பட்டு உம்மை மறந்தாலும் அடியேனைக் குறிக்கொண்மின். |

931. பிள்ளையிற் பட்ட பிறைமுடி யீர்மறை
யோத வல்லீர்
வெள்ளையிற் பட்டதொர் நீற்றீர் விரிநீர்
மிழலையுள்ளீர்
நள்ளையிற் பட்டைவர் நக்கரைப் பிக்க
நமன்றமர்தம்
கொள்ளையிற் பட்டு மறக்கினு மென்னைக்
குறிக்கொண்மினே. 9

இளைய பிறைச்சந்திரனை முடியில் அணிந்தவரே! வேதம் ஓதவல்லவரே! வெள்ளிய நீற்றை அணிந்தவரே! நீர் விரிந்து பரவிய மிழலையில் இருப்பவரே! ஐம்புலப் பொறிகளின் நடுவில் அகப்பட்டு அவை என்னைக் கண்டு சிரித்துப் பலகாலும் தேய்க்கும்படி இயமதூதுவருடைய கொள்ளையிடும் செயலில் அகப்பட்டு அடியேன் உம்மை மறப்பினும் அடியேனைக் குறிக் கொண்மின்.

932. கறுக்கொண் டரக்கன் கயிலையைப் பற்றிய
கையுமெய்யும்
நெறுக்கென் றிறச்செற்ற சேவடி யாற்கூற்றை
நீறுசெய்தீர்
வெறிக்கொன்றை மாலை முடியீர் விரிநீர்
மிழலையுள்ளீர்
இறக்கின்று நும்மை மறக்கினு மென்னைக்
குறிக்கொண்மினே. 10

மனத்தில் ஆத்திரம் கொண்டு இராவணன் கயிலையைப் பெயர்க்கப் பயன்படுத்திய கைகளும் உடம்பும் நெரிக்கப்பட்டு நெறுநெறு என்ற ஒலியோடு அழியும்படி அவனை அழுத்திய திருவடிகளால் கூற்றுவனை அழித்தவரே! நறுமணம் கமழும் கொன்றை மாலையை முடியில் அணிந்தவரே! மிக்க நீர்வளமுடைய மிழலையில் உள்ளவரே! உயிர் போகும் நேரத்தில் அடியேன் உம்மை மறந்தாலும் அடியேனைக் குறிக்கொண்மின்.

## 96. திருச்சத்திமுற்றம்

**(இறைவரைச் சத்தி பூசித்துத் தழுவி முத்தமிட்ட காரணத்தால் சத்திமுத்தம் எனப் பெயர் பெற்றது. முத்தம் – முற்றமாகி விட்டது போலும்)**

**திருவிருத்தம்** **பதிக எண் : 96**

933. கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங்
குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை
போகவிடில்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங்
குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ்
சிவக்கொழுந்தே. 1

கோ – தலைவன்; கோவாய் முடுகி – பெருந்தலைவராகிய சிவன் தந்த அதிகாரத்தால் தலைவன் என்ற அதிகாரத்துடன் கூற்றுவன் விரைந்து. அடுதிறல் – சிவனடியார்களன்றி வேறு யாரும் தப்ப முடியாத ஆணை.

ஒலிக்கும் தீயினைக் கையில் ஏந்திய தேவனே! திருச்சத்திமுற்றத்தில் உகந்தருளியிருக்கும் சிவக்கொழுந்தே! தலைமை உடையவனாய் விரைந்து வந்து உயிரைப் போக்கும் திறமையை உடைய கூற்றுவன் என்னைத் துன்புறுத்துவதன் முன்னம், தாமரைப் பூப் போன்ற திருவடிகளின் அடையாளத்தை என்மேல் பொறித்து உன் திருவடிக்கீழ் வைப்பாயாக. அங்ஙனம் பொறிக்காது வாளா விட்டு விட்டால் அழியாத பழி முழுதும் உன்னைச் சூழ்ந்து கொள்ளும் என்பதனை நீ உணர்வாயாக.

| | |
|---|---|
| **934.** காய்ந்தா யனங்க னுடலம் பொடிபடக் காலனைமுன்<br>பாய்ந்தா யுயிர்செகப் பாதம் பணிவார்தம் பல்பிறவி<br>ஆய்ந்தாய்ந் தறுப்பா யடியேற் கருளாயுன் னன்பர்சிந்தை<br>சேர்ந்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 2<br><br>திருச்சத்தி முற்றத்துறையும் சிவக்கொழுந்தே என்பது பதிக மகுடம். தல இறைவரின் பெயர் சிவக் கொழுந்தீசர். | திருச்சத்திமுற்றத்து உறையும் சிவக் கொழுந்தே! மன்மதன் உடம்பு சாம்பலாகுமாறு அவனை வெகுண்டாய். கூற்றுவனை அவன் உயிர்போகும்படி உதைத்தாய். உன் திருவடிகளைப் பணிபவர்களின் பல பிறவிகளையும் அறுத்தருளுவாய். உன்னை வழிபடும் அடியவர்களுடைய உள்ளத்தை இருப்பிடமாகக் கொண்ட நீ அடியேனுக்கு அருள் செய்வாயாக. |
| **935.** பொத்தார் குரம்பை புகுந்தைவர் நாளும் புகலழிப்ப<br>மத்தார் தயிர்போன் மறுகுமென் சிந்தை மறுக்கொழிவி<br>அத்தா வடியே னடைக்கலங் கண்டா யமரர்க்கடம்<br>சித்தா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 3 | தேவர்கள் உள்ளத்தில் இருப்பவனாய் உள்ள திருச்சத்திமுற்றச் சிவக்கொழுந்துப் பெருமானே! பல துளைகள் உள்ள கூடாகிய இவ்வுடம்பில் புகுந்து ஐம்பொறிகளும் நாள்தோறும் அடியேனுக்குப் பற்றுக்கோடான உன் திருவடிப் பற்றினை அழிக்க, மத்தால் குழப்பப்படும் தயிர்போலச் சுழலும் என் சிந்தையின் கலக்கத்தை ஒழியச் செய்வாயாக. தலைவனே! அடியேன் உன் அடைக்கலம் என்பதனை நோக்குக. |
| **936.** நில்லாக் குரம்பை நிலையாக் கருதியிந் நீணிலத்தொன்<br>றல்லாக் குழிவீழ்ந் தயர்வுறு வேனைவந் தாண்டுகொண்டாய்<br>வில்லேர் புருவத் துமையாள் கணவா விடிற்கெடுவேன்<br>செல்வா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 4 | வில் போன்ற புருவத்தை உடைய பார்வதி கணவனே! செல்வனே! சிவக்கொழுந்தே! நிலைபேறு இல்லாத உடம்பை நிலைபேறு உடையதாகக் கருதி இந்த நீண்ட உலகத்திலே பல துன்பங்களாகிய குழிகளில் விழுந்து சோர்வுறும் அடியேனை நீயாகவே வந்து அடிமை கொண்டுள்ளாய். அடியேனைக் கை விட்டால் அழிந்துவிடுவேன். |
| **937.** கருவுற் றிருந்துன் கழலே நினைந்தேன் கருப்புவியில்<br>தெருவிற் புகுந்தேன் றிகைத்தடி யேனைத் திகைப்பொழிவி<br>உருவிற் றிகழு முமையாள் கணவா விடிற்கெடுவேன்<br>திருவிற் பொலிசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 5 | வடிவால் விளங்கும் பார்வதி கணவனே! செல்வத்தால் பொலிவுபெறும் சத்தி முற்றப் பெருமானே! கருப்பையை அடைந்த காலத்தும் உன் திருவடிகளையே தியானித்தேன். கருவில் இருந்து வெளிப்பட்டு வளர்ந்து தெருவில் புகுந்தபோது வியப்புற்ற அடியேனை உலகப் பொருள்கள் வியப்போடு பற்றும் நிலையைப் போக்குவிப்பாய். அடியேனை உலகப் பற்றில் விடுவாயானால் வீணாகக் கெட்டுவிடுவேன். |

| | |
|---|---|
| **938.** வெம்மை நமன்றமர் மிக்கு விரவி விழுப்பதன்முன்<br>இம்மையுன் றாளென்றன் னெஞ்சத் தெழுதிவை யீங்கிகழில்<br>அம்மை யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார்<br>செம்மை தருசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 6 | பேரின்பவீட்டை நல்கும் சத்திமுற்றச் சிவக்கொழுந்தே! கொடிய இயமனுடைய ஏவலர் மிகுதியாகக் கூடி என்னைக் கீழே தள்ளுவதன் முன் இம்மை வாழ்விலேயே உன் திருவடிகளை என் நெஞ்சில் சுவடுபடும்படியாக வைப்பாயாக. இவ்வுலகில் என்னை நீ இகழ்ந்து புறக்கணித்து இருப்பாயானால் மறுமையிலே நீ அடியேனுக்கு அருளப் போகும் செய்தியை யாவர் அறிவார்கள்? |
| **939.** விட்டார் புரங்க ளொருநொடி வேவவொர் வெங்கணையால்<br>சுட்டாயென் பாசத் தொடர்பறுத் தாண்டுகொள் தும்பிபம்பும்<br>**மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்**<br>சிட்டா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 7<br>———<br>அம்மை பூசித்ததற்கு அகச்சான்று | வண்டுகள் நெருங்கும் தேன் பொருந்திய மலர்களை அணிந்த கூந்தலை உடைய பார்வதியின் வழிபாட்டினை விரும்பும் மேம்பட்டவனே! சிவக்கொழுந்தே! பகைவருடைய மதில்கள் ஒருநொடியில் போகுமாறு கொடிய அம்பினால் சுட்டு நீறாக்கினாய். அடியேனுடைய உலகப் பற்றாகிய தொடர்பை நீக்கி அடிமை கொள்வாயாக. |
| **940.** இகழ்ந்துவன் வேள்வி யழித்திட் டிமையோர் பொறையிரப்ப<br>நிகழ்ந்திட வன்றே விசயமுங் கொண்டது நீலகண்டா<br>புகழ்ந்த வடியேன்றன் புன்மைகள் தீரப் புரிந்துநல்காய்<br>திகழ்ந்த திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 8 | விளங்குகின்ற சத்திமுற்றச் சிவக்கொழுந்தே! நீலகண்டா! உன்னை அலட்சியம் செய்த தக்கனுடைய வேள்வியை அழித்து வேள்விக்கு வந்த தேவர்கள் தம்பிழையைப் பொறுத்துக் கொள்ளுமாறு வேண்ட உலகப் பிரசித்தமாக அந்நாளிலேயே வெற்றி கொண்ட உன் செயலைப் புகழ்ந்த அடியேனுடைய குறைபாடுகள் நீங்க விரும்பி அருளுவாயாக. |
| **941.** தக்கார்வ மெய்திச் சமண்தவிர்ந் துன்றன் சரண்புகுந்தேன்<br>எக்காத லெப்பய னன்றிற மல்லா லெனக்குளதே<br>மிக்கார் திலையுள் விருப்பா மிகவட மேருவென்னும்<br>திக்கா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 9 | சான்றோர் வாழும் தில்லைநகரில் விருப்புடையவனே! வடமேரு என்று சிறப்பித்துச் சொல்லப்படும் வடதிசைக்கு உரியவனே! சிவக்கொழுந்தே! பொருத்தமான விருப்பத்தைப் பொருந்திச் சமண சமயத்தை விடுத்து உன் அடைக்கலமாக வந்து சேர்ந்தேன். உன்னைப் பற்றிய செய்திகளைத் தவிர வேற்றுச் செய்திகளில் எந்த விருப்பமும் இல்லை. அவற்றால் எனக்கு எந்தப் பயனும் இல்லை. |

942. பொறித்தே ரரக்கன் பொருப்பெடுப்புற்றவன் பொன்முடிதோள்
இறத்தா ளொருவிர லூன்றிட் டலற விரங்கியொள்வாள்
குறித்தே கொடுத்தாய் கொடியேன்செய் குற்றக் கொடுவினைநோய்
செறுத்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 10

சிவக்கொழுந்தே! இயந்திரத் தேரை உடைய இராவணன் கயிலையைப் பெயர்க்க முற்பட்டானாக அவனுடைய பொன்னாலாகிய முடிகளை அணிந்த தலைகளும் தோள்களும் நொறுங்குமாறு ஒரு விரலை அழுத்த அவன் அலற அவனிடம் இரக்கம் காட்டிப் பிரகாசமான வாளினை அவன் நலன் குறித்துக் கொடுத்தாய். தீவினையை உடைய அடியேன் செய்த குற்றமாகிய கொடிய வினையின் பயனாகிய நோயினை அழித்தாய்.

## 97. திருநல்லூர்

திருவடி தீக்கை செய்யப் பெற்றபின் நல்லூரில் பல நாள் தங்கித் திருத்தொண்டு செய்த போது "கனவிழந்துரைத்தல்" என்னும் அகத்துறைக் குறிப்புடைய இப்பதிகம் பாடியருளினார்.

**திருவிருத்தம்** **பதிக எண் : 97**

943. அட்டுமி னில்பலி யென்றென் றகங்கடை தோறும்வந்து
மட்டவி ழுங்குழ லார்வளை கொள்ளும் வகையென்கொலோ
கொட்டிய பாணி யெடுத்திட்ட பாதமுங் கோளரவும்
நட்டநின் றாடிய நாதர்நல் லூரிடங் கொண்டவரே. 1

ஒலிக்கப்பட்ட தாளங்களுக்கு ஏற்பக் கூத்து நிகழ்த்திய திருவடிகளும் கொலைத் தொழிலைச் செய்யும் பாம்பும் உடையவராய், நிலையாக நடனமாடும் தலைவராய், நல்லூரில் உகந்தருளியிருக்கும் பெருமான் 'உணவுக் குரிய பிச்சையிடுமின்' என்று வீடுகளின் வாசல்தோறும் வந்து தேன் ஒழுகும் கூந்தலை உடைய மகளிருடைய வளைகளைக் கைப்பற்றும் செயல் யாது காரணம் பற்றியதோ?

944. பெண்ணிட்டம் பண்டைய தன்றிவை பெய்பலிக் கென்றுழல்வார்
நண்ணிட்டு வந்து மனைபுகுந் தாருநல் லூரகத்தே
**பண்ணிட்ட பாடல ராடல ராய்ப்பற்றி** நோக்கிநின்று
கண்ணிட்டுப் போயிற்றுக் காரண முண்டு கறைக்கண்டரே. 2

நீலகண்டப் பெருமானார், பெண்கள் ஆசைப்படும்படி கொண்ட இவ்வடிவம் பண்டு கொண்ட வடிவமன்று; பிறர் வழங்கும் பிச்சைக்காகத் திரிபவராய் வீடுகளை அணுகிப் புகுந்தவராய் நல்லூரில் பண்ணோடு கூடிய பாடல்களைப் பாடுபவரும் ஆடுபவருமாக வந்து எங்களை நோக்கிநின்று கண்ணால் சாடை காட்டிப் போயினதற்கு ஒரு காரணம் உண்டு.

| | |
|---|---|
| **945.** படவே ரரவல்குற் பாவைநல் லீர்பக<br>லேயொருவர்<br>இடுவா ரிடைப்பலி கொள்பவா போலவந்<br>தில்புகுந்து<br>நடவா ரடிக ணடம்பயின் றாடிய<br>கூத்தர்கொலோ<br>**வடபாற் கயிலையுந் தென்பானல் லூருந்தம்**<br>**வாழ்பதியே.** 3<br><br>நல்லூரின் தலச்சிறப்பு | படம் எடுக்கின்ற அழகிய பாம்பு போன்ற அல்குலை உடைய பெண்களாகிய நல்லவர்களே! பகல் நேரத்தில் ஒப்பற்ற பெருமானார் பிச்சை வழங்குபவர்களிடம் பிச்சை பெறுபவரைப் போல வந்து எங்கள் வீடுகளில் புகுந்து வீட்டை விட்டு நீங்காதவராக உள்ளார். அவர் **வடக்கே கயிலைமலையையும் தெற்கே நல்லூரையும் தம்** உறைவிடமாகக் கொண்டு கூத்தினை விரும்பி ஆடிய கூத்தர் போலும். |
| **946.** செஞ்சுடர்ச் சோதிப் பவளத் திரள்திகழ்<br>முத்தனைய<br>நஞ்சணி கண்டனல் லூருறை நம்பனை<br>நானொருகால்<br>**துஞ்சிடைக் கண்டு கனவின் றலைத்தொழு**<br>தேற்கவன்றான்<br>நெஞ்சிடை நின்றக லான்பல காலமும்<br>நின்றனனே. 4<br><br>கனவிழந்துரைத்தல் – தலைவனைப் பலநாள் பிரிந்து கனவிடைக்கண்டு பின் கனவுமிழந்து வருந்தும் தலைவி தோழிக்குரைக்கும் கூற்றாகும். | சிவந்த சூரியன் போன்ற ஒளியுடையவனாய்ப் பவளத்திரளிலே விளங்கும் முத்துப்போல நீறணிந்து விடத்தை அழகாகச் சூடிய நீலகண்டனாய் நல்லூரில் உறையும், நம்மால் விரும்பப்படும் பெருமானை அடியேன் ஒரு முறை உறக்கத்தினிடையே கனவில் கண்டு தொழுதேனாக அவன் தான் என் நெஞ்சினைவிட்டு அகலானாய்ப் பல காலமாக நெஞ்சில் நிலை பெற்றுள்ளான். |
| **947.** வெண்மதி சூடி விளங்கநின் றானைவிண்<br>ணோர்கள்தொழ<br>நண்ணில யத்தொடு பாடல றாதநல்<br>லூரகத்தே<br>திண்ணில யங்கொண்டு நின்றான் றிரிபுர<br>மூன்றெரித்தான்<br>**கண்ணுளும் நெஞ்சத் தகத்து முள**கழற்<br>சேவடியே. 5 | வெண்பிறை சூடி உலகு விளங்க நிற்பவனாய்த் தேவர்கள் தொழுமாறு கூத்தாடும் காட்சி நீங்காத நல்லூரை உறுதியான இருப்பிடமாகக் கொண்டு நிற்கும் திரிபுர சங்காரியினுடைய வீரக்கழல்கள் அணிந்த சேவடிகள் அடியேனுடைய கண்கள்முன்னும் நெஞ்சினகத்தும் உள்ளன. |
| **948.** தேற்றப் படத்திரு நல்லூ ரகத்தே<br>சிவனிருந்தால்<br>தோற்றப் படச்சென்று கண்டுகொள் ளார்தொண்டர்<br>துன்மதியால்<br>ஆற்றிற் கெடுத்துக் குளத்தினிற் றேடிய<br>வாதரைப்போல்<br>காற்றிற் கடுத்துல கெல்லாந் திரிதர்வர்<br>காண்பதற்கே. 6 | எல்லார் உள்ளத்தும் தெளிவு ஏற்படச் சிவபெருமான் திருநல்லூரிலே நிலையாக உறைந்திருந்தால் தங்களுக்கு அவன் காட்சி வழங்குமாறு அடியவர்கள் அக்கோயிலுக்குச் சென்று அவனைக் கண்டு கொண்டு நெஞ்சு நிறைவுபெறாதவராய், தம் பொருத்தமல்லாத புத்தியினால், ஆற்றில் இழந்த பொருளைக் குளத்தில் சென்று தேடும் அறிவிலிகளைப் போல, எம்பெருமானைத் தரிசிப்பதற்குக் காற்றை விட வேகமாக உலகமெங்கும் சுற்றித் திரிவர். |

## அமர்நீதி நாயனார் வரலாறு

| | |
|---|---|
| **949.** நாட்கொண்ட தாமரைப் பூத்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே<br>கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்<br>வாட்கொண்ட நோக்கி மனைவி யொடுமங்கொர் வாணிகனை<br>ஆட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றோவிவ் வகலிடமே. 7 | காலையிலே மலர்கின்ற தாமரைப் பூக்களை உடைய குளங்கள் ஊரைச் சுற்றி அமைந்திருக்கும் நல்லூரிலே கீளோடு கூடிய இக்கோவணத்தைப் பத்திரமாக வைத்திருந்து பின்னர் யான் வேண்டும் போது கொடுப்பாயாக என்று சொல்லி வஞ்சனையாக அதனை மறைத்து, ஒளி பொருந்திய கண்களை உடைய அவன் மனைவியோடு அமர் நீதி என்ற வாணிகனை அடியவனாகக் கொண்ட புகழ்ச் செய்தியை இப்பரந்த உலகத்திலுள்ளவர்கள் சிறப்பாகப் பேசுகிறார்கள். |
| **950.** அறைமல்கு பைங்கழ லார்ப்பநின் றானணி யார்சடைமேல்<br>நறைமல்கு கொன்றையந் தாருடை யானுநல் லூரகத்தே<br>பறைமல்கு பாடல னாடல னாகிப் பரிசழித்தான்<br>பிறைமல்கு செஞ்சடை தாழநின் றாடிய பிஞ்ஞகனே. 8 | பிறை ஒளி வீசும் சிவந்த சடைகள் தொங்குமாறு காலை ஊன்றி நின்று ஆடிய, தலைக்கோலத்தை உடைய பெருமான், ஓசைமிக்க பசிய பொன்னாலாகிய கழல்கள் ஆரவாரிக்க நின்று, அழகிய சடை மீது தேன் நிரம்பிய கொன்றைப் பூமாலையை உடையவனாய் நல்லூரிலே பறை ஓசைக்கு ஏற்பப் பாடுதலையும் ஆடுதலையும் செய்தவனாகி அடியேனுடைய தன்மையை அழித்தவனாவான். |
| **951.** மன்னிய மாமறை யோர்மகிழ்ந் தேத்த மருவியெங்கும்<br>துன்னிய தொண்டர்க ளின்னிசை பாடித் தொழுதுநல்லூர்க்<br>கன்னியர் தாமுங் **கனவிடை யுன்னிய காதலரை**<br>அன்னிய ரற்றவ ரங்கண னேயரு ணல்கென்பரே. 9 | நிலைபெற்ற மேம்பட்ட வேதங்களை ஓதும் வேதியர்கள் மகிழ்ந்து துதிக்க, எங்கும் கலந்து பொருந்திய தொண்டர்கள் இனிய இசையைப் பாடித்தொழ, நல்லூரில் உள்ள திருமணம் ஆகாத மகளிர் கனவிலே தாம் விரும்பிய காதலராகிய நல்லூர்ப் பெருமானைக் கண்டு, பிறருக்குத் தொடர்பற்றவர் அல்லராக உள்ள அழகிய கருணையை உடைய அப் பெருமானைத் தமக்கு அருள் நல்குமாறு வேண்டுவர். |
| **952.** திருவமர் தாமரை சீர்வளர் செங்கழு நீர்கொணெய்தல்<br>குருவமர் கோங்கங் குராமகிழ் சண்பகங் கொன்றைவன்னி<br>மருவமர் நீள்கொடி மாட மலிமறை யோர்கணல்லூர்<br>உருவமர் பாகத் துமையவள் பாகனை யுள்குதுமே. 10 | திருமகள் தங்கும் தாமரை, சிறப்பு வளரும் செங்கழுநீர், பறித்துச் சூடும் நெய்தல், நிறம் பொருந்திய கோங்கம், குரா, மகிழ், சண்பகம், கொன்றை, வன்னி, நறுமணம் கமழும் நீண்ட கொடிகள் இவற்றால் சூழப்பட்ட மறையோர்களுடைய மாடவீடுகள் நிறைந்த நல்லூரில் அழகு நிறைந்தவளாய் உள்ள பார்வதி பாகனை நாம் தியானிப்போமாக. |

953. செல்லேர் கொடியன் சிவன்பெருங் கோயில் சிவபுரமும்
வல்லேன் புகவு மதில்சூ ழிலங்கையர் காவலனைக்
கல்லார் முடியொடு தோளிறச் செற்ற கழலடியான்
நல்லூ ரிருந்த பிரானல்ல னோநம்மை யாள்பவனே. 11

இடியை ஒத்து ஒலிக்கும் காளை வடிவு எழுதப்பட்ட கொடியை உடைய சிவபெருமானுடைய சிவபுரக் கோயிலகத்தும் புக வல்லேன் அடியேன். மதில்களால் சூழப்பட்ட இலங்கை நகர மக்களின் தலைவனான இராவணனுடைய மலையை ஒத்த உறுதியுடைய முடிகளோடு தோள்கள் நெரியுமாறு செய்த திருவடிகளை உடையவனாய் நல்லூரில் உறையும் பெருமானே நம்மை அடிமையாக ஆள்பவன் ஆவான்.

## 98. திருவையாறு

திருவிருத்தம் பதிக எண் : 98

954. அந்திவட் டத்திங்கட் கண்ணிய னையா றமர்ந்துவந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. 1

1064 என்ற எண்ணிடப்பட்டுள்ள திருப்பாடல் இப்பாடலோடு ஒத்துள்ளது.

வட்டமாகச் சடைக்கற்றையிலே தன் ஒளியைச் சிதறி வண்டுகள் ஒலிக்குமாறு சிறிது மலர்ந்த நந்தியாவட்டப் பூக்களோடு கொன்றைப் பூக்களும் கலக்குமாறு அணிந்த, நம்மால் விரும்பப்பெறும் பெருமானாய், மாலையிலே வட்ட வடிவோடு ஒளிவீசும் சந்திரனைப் பிறையாகக் கொண்டு முடிமாலையாக அணிந்து திருவையாற்றை விரும்பி உறைந்து அடியேனுடைய அறிவாகிய வட்டத்திடையே புகுந்து நிலையாக இருக்கும் பெருமானுடைய இருப்பினை அடியேன் பொய்ச்செயல் என்று கூறுவேனோ ?

955. பாடகக் கால்கழற் கால்பரி திக்கதி ருக்கவந்தி
நாடகக் கானங்கை முன்செங்க ணேனத்தின் பின்னடந்த
காடகக் கால்கணங் கைதொழுங் காலெங் கணாய்நின்றகால்
ஆடகக் காலரி மாறேர வல்லனை யாற்றனவே. 2

---

ஆடகம் – பொன். இப்பாடல் இறைவரது திருப்பாதத்தையே பல திறப்படப் போற்றியது.

3 முதலாக உள்ள பிற பாடல்கள் கிடைக்கப் பெறவில்லை.

பாடகம் என்ற மகளிர் கால் அணியை அணிந்த திருவடி, கழல் என்ற ஆடவர் காலணியை அணிந்த திருவடி, சூரியனுடைய கதிர்கள் மறைதற்குரிய மாலையிலே கூத்தாடும் திருவடிகள், பார்வதிக்கு முன்னர் சிவந்த கண்களை உடைய பன்றியின் பின்னே காட்டுப் பகுதியில் நடந்த திருவடிகள், அடியவர் கூட்டங்கள் வழிபடும் திருவடிகள், எமக்குப் பற்றுக்கோடாய் நிற்கும் திருவடிகள், பொன் போன்ற திருவடிகள், அரியாகிய திருமால் திருவடியின் இருப்பைப் பன்றி வடிவெடுத்துப் பூமியை அகழ்ந்து சென்று ஆராயுமாறு பேராற்றலுடையன என்னுமாறு ஐயாற்று எம்பெருமானுடைய திருவடிகள் உள்ளன.

## 99. திருக்கச்சியேகம்பம்

திருவிருத்தம் — பதிக எண் : 99

956. ஓதுவித் தாய்முன் னறவுரை காட்டி
யமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய்
கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி
யம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி வாய்கச்சி
யேகம்பனே. 1

சமணர் சார்புப் பகுதிக்கு அகச் சான்று.

காஞ்சிபுரத்தில் ஒற்றை மாமர நிழலில் இருக்கும் பெருமானே! அடியேனுடைய வாழ்க்கையின் முற்பகுதியில் சமணருடைய அறவுரைகளைப் பின்பற்றத்தக்கனவாக உள்ளத்தில் தெரிவித்துச் சமண சமய நூல்களை ஓதுமாறு செய்தாய். பிறகு அவர்களே என்னை அழிப்பதற்கு முயலுமாறு செய்தாய். கொடிய நோயினால் அடியேன் பிணிக்கப்பட்டிருந்த நிலையை நீக்கினாய். அடியேனுடைய உள்ளத்தில் கலந்து சமண சமயத்தில் இருந்து மீண்டு, சைவ சமயத்துக்குப் புகச் செய்தாய். உன்னுடைய திருத்தொண்டில் தவறு செய்வேனாயின், அடியேனைப் புளியமரக் குச்சியால் அடித்துத் தண்டிப்பாயாக. நீ சர்வ சுதந்திரன்! ஆதலி, நீ விரும்பியதை உகப்பதும்; விரும்பாததை வெறுப்பதும் செய்வாய். உன் திருவுள்ளம் எவ்வாறு உள்ளதோ, அவ்வாறு அடியேனை நடத்துவாயாக.

957. எத்தைக்கொண் டெத்தகை யேழை யமனொ
டிசைவித்தெனைக்
**கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டு**
வித்தென்னக்
கோகுசெய்தாய்
முத்திற் றிரளும் பளிங்கினிற் சோதியு
மொப்பவளத்
தொத்தினை யேய்க்கும் படியாய் பொழிற்கச்சி
யேகம்பனே. 2

கொத்தை – குருடன்; மூங்கர் – ஊமை. கோகு – கபடம்.

முத்தின் குவியலும் பளிங்கின் ஒளியும் செறிந்த பவளக் கொத்தினை ஒத்துச் செம்மேனியில் வெண்ணீறு அணிந்திருக்கும் கச்சி ஏகம்பனே! யாது காரணம் பற்றி அடியேனை எப்பேர்ப்பட்ட அறிவில்லாத சமணரோடு உறவு கொள்ளச் செய்து **குருடனுக்கு ஊமை வழிகாட்டுவித்தாற் போன்ற** இழிவினைச் செய்துவிட்டாய்?

958. மெய்யம்பு கோத்த விசயனொ டன்றொரு
வேடுவனாய்ப்
பொய்யம்பெய் தாவ மருளிச்செய் தாய்புர
மூன்றெரியக்
கையம்பெய் தாய்நுன் கழலடி போற்றாக்
கயவர்நெஞ்சில்
குய்யம்பெய் தாய்கொடி மாமதில் சூழ்கச்சி
யேகம்பனே. 3

கச்சி ஏகம்பனே! உண்மையாக அம்புகளை வில்லில் சேர்த்துப் போரிட்ட அருச்சுனனோடு அக்காலத்தில் ஒரு வேடன் வடிவினனாய்ப் பொய்யாக அம்பை வில்லில் சேர்த்து அவனோடு போரிட்டு அவனுக்கு அம்பறாத் துணியை அருளிச் செய்தவனே! முப்புரமும் தீக்கு இரையாகுமாறு கைகளால் அம்பு எய்தவனே! உன்னுடைய வீரக் கழல்கள் அணிந்த திருவடிகளைப் போற்றாத கயவர்களுடைய உள்ளத்தில் மாயையால் உண்மையை மறைத்தல் செய்தவனே! குய்யம் – வஞ்சனை. (சிந்தாமணி – 253)

959. குறிக்கொண் டிருந்துசெந் தாமரை யாயிரம்
வைகல்வைகல்
நெறிப்பட விண்டை புனைகின்ற மாலை
நிறையழிப்பான்
கறைக்கண்ட நீயொரு பூக்குறை வித்துக்கண்
சூல்விப்பதே
பிறைத்துண்ட வார்சடை யாய்பெருங் காஞ்சியெம்
பிஞ்ஞகனே. 4

வைகல் வைகல் – நாள்தோறும்

மதியின் கூறாகிய பிறையை அணிந்த நீண்ட சடையனே! பெரிய காஞ்சி மாநகரில் உள்ளாயாய்த் தலைக்கோலம் என்ற அணியை அணிந்தவனே! நாளும் ஆயிரம் பூக்களால் இண்டை மாலை தொடுத்துச் சிவபெருமானுக்கு அணிவிக்க வேண்டும் என்ற குறிக்கோளோடு இருந்து நாள்தோறும் ஆயிரம் செந்தாமரை மலர்களால் வரிசை அமைய இண்டை மாலையைத் தொடுக்கின்ற திருமாலுடைய மனநிறைவை அழிப்பவன் போல நீலகண்டனாகிய நீ ஒரு பூவைக் குறையச் செய்து அப்பூவின் தானத்தில் செந்தாமரை போன்ற தன் கண்ணை இடந்து அவன் பூவாகத் தொடுப்பதற்காக அவன் கண் ஒன்றனைத் தோண்டி எடுக்குமாறு செய்தாயே.

960. உரைக்குங் கழிந்திங் குணர்வரி யானுள்கு
வார்வினையைக்
கரைக்கு மெனக்கை தொழுவதல் லாற்கதி
ரோர்களெல்லாம்
விரைக்கொண் மலரவன் மாலெண் வசுக்களே
காதசர்கள்
இரைக்கு மமிர்தர்க் கறியவொண் ணானெங்க
ளேகம்பனே. 5

பன்னிருவர் – கதிரோர்
பதினொருவர் – உருத்திரர்
எண்மர் – வசுக்கள்
இருவர் – மருத்துவர்
மொத்தம் முப்பத்து மூவர் – தேவர்

சொற்களால் தன் பெருமையைச் சொல்ல இயலாதவனாய், மனத்தாலும் உணர்வதற்கு அரியவனாய்த் தன்னை வணங்கு பவர்களுடைய வினைகளைச் செயலற்றன ஆக்குவான் என்ற கருத்தொடு கையால் தொழுவதே அல்லாமல், எங்கள் ஏகம்பப் பெருமான், பிரமன், திருமால், ஆதித்தர் பன்னிருவர், வசுக்கள் எண்மர், உருத்திரர் பதினொருவர் முதலாகத் தன்னை உரத்த குரலில் துதிக்கும் தேவர்களுக்கும் உள்ளவாறு அறிய இயலாதவன் ஆவான்.

961. கருவுற்ற நாள்முத லாகவுன் பாதமே
காண்பதற்கு
உருகிற்றெ னுள்ளமும் நானுங் கிடந்தலந்
தெய்த்தொழிந்தேன்
திருவொற்றி யூரா திருவால வாயா
திருவாரூரா
ஒருபற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி
யேகம்பனே. 6

நாவரசர் தம் பொருட்டுச் செய்த விண்ணப்பம்

திருவொற்றியூரா! திருவாலவாயா! திருவாரூரா! கச்சி ஏகம்பனே! அடியேன் தாயாரினுடைய கருவிலே பொருந்திய நாள் முதலாக உன் திருவடியைக் காண்பதற்கு அடியேனுடைய உள்ளம் உருகுகிறது. அடியேனும் கிடந்து வருந்தி இளைத்துச் செயலற்று விட்டேன். அடியேனுக்கு உன்னைத் தவிர வேறு அடைக்கலம் இல்லை என்பதனையும் கண்டு அடியேன்மாட்டு இரக்கம் கொள்வாயாக.

**962.** அரியய னிந்திரன் சந்திரா தித்த
ரமரரெல்லாம்
உரியநின் கொற்றக் கடைத்தலை யாருணங்
காக்கிடந்தார்
புரிதரு புன்சடைப் போக முனிவர்
புலம்புகின்றார்
எரிதரு செஞ்சடை யேகம்ப வென்னோ
திருக்குறிப்பே. 7

தீப்போன்ற ஒளியை உடைய சிவந்த சடைமுடியனாகிய ஏகம்பனே! திருமால், பிரமன், இந்திரன், சந்திரன், சூரியன் முதலிய தேவர்கள் எல்லோரும் உரிய உன்னுடைய வெற்றி பொருந்திய கோயிலின் முதல் வாசலில் உன் காட்சியை விரும்பி வாடிக் கிடக்கின்றார்கள். முறுக்கேறிய சிவந்த சடைகளை உடைய, சிவானந்த போகத்தைத் துய்க்க விரும்பும் முனிவர்களும் உன் காட்சி கிட்டாமையால் தனிமைத் துன்பம் உறுகின்றார்கள். அவர்களுக்குக் காட்சி வழங்குவது பற்றி உன் திருவுள்ளம் யாதோ ? அருளுவாயாக.

---

**963.** பாம்பரைச் சேர்த்திப் படருஞ் சடைமுடிப்
பால்வண்ணனே
கூம்பலைச் செய்த கரதலத் தன்பர்கள்
கூடிப்பன்னாள்
சாம்பரைப் பூசித் தரையிற் புரண்டுநின்
றாள்சரணென்
றேம்பலிப் பார்கட் கிரங்குகண் டாய்கச்சி
யேகம்பனே. 8

அடியார் பொருட்டு வரங் கேட்ட பாட்டு

பாம்பினை இடுப்பில் இறுகக் கட்டிப் பரவிய சடைமுடியை உடைய பால் நிறத்தனே! கச்சி ஏகம்பனே அடியார்கள் இரு கைகளையும் குவித்துக் கொண்டு திருநீற்றைப் பூசிக்கொண்டு குழாத்துடன் கூடிப் பலநாள்களாகத் தரையில் புரண்டு உன் திருவடிகளே தங்களுக்கு அடைக்கலம் என்று கூறிவந்து அடைந்துள்ளனர். அவர்களுக்கு நீ இரங்கி அருளுவாயாக.

---

**964.** ஏன்றுகொண் டாயென்னை யெம்பெரு மானினி
யல்லமென்னில்
சான்றுகண் டாயிவ் வுலகமெல் லாந்தனி
யேனென்றெனை
ஊன்றிநின் றாரைவர்க் கொற்றிவைத் தாய்பின்னை
யொற்றியெல்லாம்
சோன்றுகொண் டாய்கச்சி யேகம்ப மேய
சுடர்வண்ணனே. 9

சோன்று கொண்டாய் – ஒற்றி வைத்த பொருளை ஒற்றி நீக்கித் தன் வசமாக்கிக் கொண்டாய். ஒற்றி வைத்தல், சோன்று கொள்ளுதல் – உடைமைகளை ஆளும் முறை.

கச்சி ஏகம்பத்தில் விரும்பி உறைகின்ற ஒளி வடிவினனே! எம் பெருமானே! அடியேனை உன் அடியவன் என்று ஏற்றுக்கொண்ட நீ இப்பொழுது அடியேனை ஏற்றுக் கொள்ள மாட்டேன் என்று கூறினால், நீ அடியேனை ஏற்றுக் கொண்டதற்கு இவ்வுலகம் முழுதும் சாட்சி என்பதனை நினைத்துப்பார். தன் உணர்வு இல்லாதவன் என்று அடியேனைப் பற்றி நின்ற ஐம்பொறிகளுக்கும் போக்கியப் பொருளாக வழங்கிப் பின் அந்தப் போக்கியப் பொருளாயிருந்த தன்மையிலிருந்து அடியேனை மீட்டுக் கொண்டாய் என்பதனை உளம் கொள்வாயாக.

965. உந்திநின் றார்உன்றன் ஓலக்கச் சூளைகள்
வாய்தல் பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவ ரீட்டம்
பணியறிவான்
வந்துநின் றாரய னுந்திரு மாலு
மதிற்கச்சியாய்
இந்தநின் றோமினி யெங்ஙன மோவந்
திறைஞ்சுவதே. 10

மதில்களை உடைய காஞ்சி நகரில் உறைபவனே! உன்னுடைய திருவோலக்க மண்டபத்தின் வாயிலைப் பொருந்தித் தேவலோக அரம்பையர்கள் ஒருவரை ஒருவர் நெருக்கிக் கொண்டு நிற்கிறார்கள். பழைய வானவர் கூட்டத்தினர் தமக்கு இடப்படும் திருத் தொண்டு யாது என்று அறிவதற்கு ஓலக்கத்தில் நெருக்கமாக நின்று கொண்டிருக்கிறார்கள். பிரமனும் திருமாலும் அம்மண்டபத்தில் வந்து நிற்கிறார்கள். இவ்விடத்தில் நிற்கின்ற அடியோங்கள் அவ்வளவு கூட்டம் நிரம்பிய உன் திருவோலக்க மண்டபத்தில் எங்ஙனம் வந்து உன்னைக் கண்டு வழிபடல் இயலும்?

## 100. திருவின்னம்பர்

திருவிருத்தம் பதிக எண் : 100

966. மன்னு மலைமகள் கையால் வருடின
மாமறைகள்
சொன்ன துறைதொறுந் தூப்பொரு ளாயின
தூக்கமலத்
தன்ன வடிவின வண்புடைத் தொண்டர்க்
கமுதரும்பி
இன்னல் களைவன வின்னரம்ப ரான்ற
னிணையடியே. 1

இன்னம்பர் எம்பெருமானுடைய திருவடி இணைகள் இமவான் மகளாகிய பார்வதியின் கைகளால் அழுத்தித் தடவப்பட்டன. வேதங்கள் குறிப்பிடும் துறைகளை எல்லாம் பின்பற்றுவதற்குப் பற்றுக்கோடாம் பொருளாய் உள்ளன. தூய தாமரை போன்ற வடிவின; தம்மாட்டு அன்புடைய அடியவர்களுக்கு அமுது வழங்கி அவர்களுடைய துயர்களைப் போக்குவன.

967. பைதற் பிணக்குழைக் காளிவெங் கோபம்பங்
கப்படுப்பான்
செய்தற் கரிய திருநடஞ் செய்தன
சீர்மறையோன்
உய்தற் பொருட்டுவெங்கூற்றை யுதைத்தன
வும்பர்க்கெல்லாம்
எய்தற் கரியன வின்னம்ப ரான்ற
னிணையடியே. 2

இன்னம்பரான் தன் இணை அடிகள் இளம் பிள்ளைகளின் பிணங்களைக் காதணிகளாக அணியும் காளியின் கொடிய கோபத்தைப் போக்குவதற்கு மற்றவர்களால் செய்தற்கு அரிய திருக்கூத்தினை நிகழ்த்துவன. சிறப்புடைய அந்தணனாகிய மார்க்கண்டேயன் உயிர் தப்புவதற்காகக் கொடிய கூற்றுவனை உதைத்தன. தேவர்களுக்கெல்லாம் கிட்டுதற்கு அரியன.

| | |
|---|---|
| **968.** கணங்குநின் றார்கொங்கை யாளுமை சூடின<br>தூமலரால்<br>வணங்கிநின் றும்பர்கள் வாழ்த்தின மன்னு<br>மறைகடம்மில்<br>பிணங்கிநின் றின்னன வென்றறி யாதன<br>பேய்க்கணத்தோ<br>டிணங்கிநின் றாடின வின்னம்ப ரான்ற<br>னிணையடியே. 3 | இன்னம்பரான் தன் இணையடிகள் தேமல் படர்ந்த கொங்கைகளை உடைய உமாதேவியால் சூடப்பட்டன; தேவர்கள் வணங்கி நின்று தூய மலர்களைத் தூவி வாழ்த்துதலைப் பொருந்தியன; என்றும் நிலைபெற்ற நான்கு வேதங்களும் தம்முள் கருத்து மாறுபட்டு உண்மையில் இத்தன்மையன என்று அறியப்படாதன. பேய்க் கூட்டத்தொடு கலந்து நின்று கூத்து நிகழ்த்தின. |
| **969.** ஆறொன் றியசம யங்களி னவ்வவர்க்<br>கப்பொருள்கள்<br>வேறொன்றி லாதன விண்ணோர் மதிப்பன<br>மிக்குவமன்<br>மாறொன்றி லாதன மண்ணொடு விண்ணகம்<br>மாய்ந்திடினும்<br>ஈறொன்றி லாதன வின்னம்ப ரான்ற<br>னிணையடியே. 4 | இன்னம்பரான் தன் இணையடிகள் ஆறு ஆறாக நான்கு வகைகளில் அடங்கிய சமயங்களைச் சார்ந்தவர்களுக்கு வேறாகாது அவ்வப் பொருள்களாக நின்று அருள்புரிவன; தேவர்களால் மதிக்கப்படுவன; தம்மை ஒப்பனவும் தம்மின் மிக்கனவும் இல்லாதன; நில உலகமும் மேல் உலகமும் அழிந்த காலத்தும் தமக்கு அழிவு இல்லாதன. |
| **970.** அரக்கர்தம் முப்புர மம்பொன்றி னாலட<br>லங்கியின்வாய்க்<br>கரக்கமுன் வைதிகத் தேர்மிசை நின்றன<br>கட்டுருவம்<br>பரக்கவெங் கானிடை வேடுரு வாயின<br>பல்பதிதோ<br>றிரக்க நடந்தன வின்னம்ப ரான்ற<br>னிணையடியே. 5 | இன்னம்பரான் தன் இணை அடிகள், அரக்கர் களுடைய முப்புரங்களும் அம்பு ஒன்றினால் அழிக்கும் நெருப்பிற்கு இரையாகி மறையுமாறு அக்காலத்தில் வேதங்களாகிய குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் நின்றன; எடுத்துக்கொண்ட வேடர் வடிவம் சிறக்குமாறு கொடிய காட்டிலே வேடர்களுடைய அடிகளின் வடிவின ஆயின; பல ஊர்கள்தோறும் பிச்சை எடுக்க நடந்தன. |
| **971.** கீண்டுங் கிளர்ந்தும்பொற் கேழன்முன் றேடின<br>கேடுபடா<br>ஆண்டும் பலபல வூழியு மாயின<br>வாரணத்தின்<br>வேண்டும் பொருள்கள் விளங்கநின் றாடின<br>மேவுசிலம்<br>பீண்டுங் கழலின வின்னம்ப ரான்ற<br>னிணையடியே. 6 | இன்னம்பரான் தன் இணையடிகள், நிலத்தைக் கிழித்தும் கிளரியும் பொலிவை உடைய பன்றி வடிவெடுத்த திருமாலால் தேடப்பட்டன; எத்தனை ஆண்டுகள் ஆனாலும் ஊழிகள் கடந்தாலும் கெடுதியை அடையாதன; வேதங்களின் விரும்பிய பொருள் புலப்படுமாறு திருக்கூத்து நிகழ்த்தின; விரும்பிய சிலம்பும் கழலும் அணிந்தன. |

| | |
|---|---|
| **972.** போற்றுந் தகையன பொல்லா முயலகன் கோபப்புன்மை<br>ஆற்றுந் தகையன வாறு சமயத் தவரவரைத்<br>தேற்றுந் தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே<br>ஏற்றுந் தகையன வின்னம்ப ரான்ற னிணையடியே. 7 | இன்னம்பரான் தன் இணையடிகள், வழிபடத் தக்கன; கொடிய முயலகனுடைய வெகுளியால் ஏற்பட்ட இழிவைப் போக்கும் தன்மையன; அறு வகைச் சமயங்களைச் சார்ந்த அடியவர்களைத் தெளிவிக்கும் தன்மையன; தெளிவடைந்த அடியவர்களை மேம்பட்ட நெறிக்கண் உயர்த்தும் தன்மையன. |
| **973.** பயம்புன்மை சேர்தரு பாவந் தவிர்ப்பன பார்ப்பதிதன்<br>குயம்பொன்மை மாமல ராகக் குலாவின கூடவொண்ணாச்<br>சயம்புவென் றேதகு தாணுவென் றேசதுர் தேவங்கணின்<br>றியம்புங் கழலின வின்னம்ப ரான்ற னிணையடியே. 8 | இன்னம்பரான் தன் இணை அடிகள், அச்சமும் கீழ்மையும் ஒரு சேர வழங்கும் பாவங்களைப் போக்குவன; பார்வதியினுடைய தனங்களாகிய பொலிவுடைய தாமரை மொட்டுக்களைத் தாமரைப் பூக்களாகிய தம் இனத்தனவாகக் கொண்டு நட்புச் செய்தன; அவன் அருளாலன்றித் தம் முயற்சியால் மாத்திரம் அடைய முடியாத தான்தோன்றி என்று சொல்லத் தகுந்த சிவபெருமானே அத்திருவடிகள் என்று நான்கு வேதங்களும் இயம்பும் சிறப்பினவாய்க் கழல்களை அணிந்தன. சிவபெருமான் செய்யும் அருள்களை அவன் திருவடிகளே வழங்கும் என்பதாம். |
| **974.** அயனொடு மாலிந் திரன்சந்த்ரா தித்த ரமரரெலாம்<br>சயசய வென்றுமுப் போதும் பணிவன தண்கடல்சூழ்<br>வியனில முற்றுக்கும் விண்ணுக்கும் நாகர் வியனகர்க்கும்<br>இயபர மாவன வின்னம்ப ரான்ற னிணையடியே. 9 | இன்னம்பரான் தன் இணையடிகள், பிரமன், திருமால், இந்திரன், சந்திரன், சூரியன் மற்றுள்ள தேவர்கள் எல்லோரும் சய சய எனறு பல்லாண்டு பாடிக் காலை நண்பகல் அந்தி என்ற முப்பொழுதுகளிலும் பணியும் திறத்தன. குளிர்ந்த கடலால் சூழப்பட்ட பரந்த இந்த நில உலகத்தில் உள்ளவர்களுக்கும் தேவர் உலகத்தவருக்கும் நாகர் உலகத்தவருக்கும் இம்மை இன்பமும் மறுமை இன்பமும் நல்குவன. |
| **975.** தருக்கிய தக்கன்றன் வேள்வி தகர்த்தன தாமரைப்போ<br>துருக்கிய செம்பொ னுவமனி லாதன வொண்கயிலை<br>நெருக்கிய வாளரக் கன்றலை பத்து நெரித்தவன்றன்<br>இருக்கியல் பாயின வின்னம்ப ரான்ற னிணையடியே. 10 | இன்னம்பரானுடைய இணையடிகள், செருக்குற்ற தக்கனுடைய வேள்வியை அழித்தன; தாமரைப் பூ, உருக்கிய செம்பொன் என்பனவும் தமக்கு உவமம் ஆகாத வகையில் அவற்றிலும் மேம்பட்டன; கயிலையைப் பெயர்க்க முற்பட்ட கொடிய இராவணனுடைய தலைகள் பத்தினையும் நெரித்து அவனால் பாடப்பட்ட வேதங்களின் இயல்பைத் தம் இயல்பாகக் கொண்டன. |

## 101. திருவாரூர்

**(ஆரூர்த் திருவீதியுள் அணைந்த போது பாடிய பதிகம்)**

திருவிருத்தம் பதிக எண் : 101

976. குலம்பலம் பாவரு குண்டர்முன்
னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புன
லாரூ ரவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி
யான்றிரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 1

தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே என்பது பதிக மகுடம்

கழுவுதலும் ஒலித்தலும் உடையதாக வரும் தண்ணிய நீர்வளம் மிக்க திருவாரூரில், விளங்குகின்ற சடைமுடியையும் சிலம்புகள் ஒலிக்கும் திருவடிகளையும் உடைய சிவபெருமானுடைய திருமூலத்தானத்தே. அப்பெருமானுடைய பேரிரக்கத்தையும் அதன் பயன்களையும் எண்ணி உருகுதலால் கண்ணீர் வடித்து வரும் அடியவர்களுக்கு அடியவராகும் நல்வினைப் பேறு, கூட்டமும் வலிமையும் பரவிய மூர்க்கர்களாகிய சமணர் காணுமாறு, அவர்கள் முன்னிலையில் நமக்குக் கிட்டுமோ?

977. மற்றிட மின்றி மனை துறந்
தல்லுணா வல்லமணர்
சொற்றிட மென்று துரிசுபட்
டேனுக்கு முண்டுகொலோ
விற்றிடம் வாங்கி விசயனொ
டன்றொரு வேடுவனாய்ப்
புற்றிடங் கொண்டான்றன் றொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 2

புற்றிடங் கொண்டான் – திருவாரூர்ப் பிரானது தமிழ்த்தொல் பெயர்

அருச்சுனனுடைய வில்லின் வலிமையைக் கவர்ந்து அக்காலத்தில் வேடுவனாய்க் காட்சி வழங்கிய திருவாரூர்ப் புற்றிடங் கொண்ட பெருமானுடைய அடியவர்களுக்கு அடியவராகும் நல்வினைப் பேறு, வீட்டினையும் துறந்து, வேறு இடமும் இல்லாமல் இரவில் உண்ணுதல் இல்லாத உடல் வலிய சமணர்கள் கூறும் செய்திகளே உறுதியானவை என்று கருதிக் குற்றம் செய்த அடியேனுக்கும் கிட்டுமோ?

978. ஒருவடி வின்றிநின் றுண்குண்டர்
முன்னமக் குண்டுகொலோ
செருவடி வெஞ்சிலை யாற்புர
மட்டவன் **சென்றடையாத்**
**திருவுடை யான்றிரு வாரூர்த்**
**திருமூலட் டானன்**செங்கண்
பொருவிடை யானடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 3

போருக்காக வளைத்துக் கொண்ட மேருமலையாகிய வில்லினாலே மும்மதில்களையும் அழித்தவனாய், தான் போய்த் தேடாமல் இயல்பாகவே மேம்பட்ட செல்வத்தை உடையனாய்த் திருவாரூர்த் திருமூலத்தானத்தில் உறைபவனான, சிவந்த கண்களை உடைய போரிடும் காளையை உடைய பெருமானுடைய அடியார்களுக்கு அடியவனாகும் நல்வினைப்பேறு, ஆடைகளால் பொலிவு செய்யப்படும் வடிவழகின்றி நின்றபடியே உணவினை வாங்கி உண்ணும் மூர்க்கர்களாகிய சமணர், தம் கண்களால் காணுமாறு, அவர்கள் முன்னிலையில் நமக்குக் கிட்ட வாய்ப்பு உளதோ?

**979.** மாசினை யேறிய மேனியர்
வன்கண்ணர் மொண்ணரைவிட்
டீசனை யேநினைந் தேசறு
வேனுக்கு முண்டுகொலோ
தேசனை யாரூர்த் திருமூலட்
டானனைச் சிந்தைசெய்து
பூசனைப்பூசுரர் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 4

ஞான ஒளி வடிவினனாகிய திருவாரூர் மூலத்தானப் பெருமானைப் பூசனை செய்யும் நில உலகத்தேவர்களின் அடியவர்களுக்கு அடியவனாகும் நல்வினைப் பேறு, அழுக்கு ஏறிய உடம்பினராய், அகத்து வன்மையைப் புறத்துக் காட்டும் கண்ணினராய் வழுக்கைத் தலையரான சமணர்களுடைய தொடர்பை விடுத்து, எல்லோரையும் அடக்கி ஆளும் பெருமானையே நினைத்து வருந்தும் அடியேனுக்குக் கிட்ட வாய்ப்பு உளதோ?

**980.** அருந்தும் பொழுதுரை யாடா
வமணர் திறமகன்று
வருந்தி நினைந்தர னேயென்று
வாழ்த்துவேற் குண்டுகொலோ
திருந்திய மாமதி லாரூர்த்
திருமூலட் டானனுக்குப்
**பொருந்துந் தவமுடைத் தொண்டர்க்குத்**
தொண்டராம் புண்ணியமே. 5

முன்னைத் தவத்தால் முத்திப் பெறத் தகுதியானார்களே திருவாரூரில் பிறந்து தொண்டு செய்பவர்கள்.

திருத்தமாக அமைந்த பெரிய மதில்களையுடைய திருவாரூர்த் திருமூலத்தானனுக்கு உகப்பான தவத்தில் ஈடுபட்ட அடியவர்களுக்கு அடியவனாகும் நல்வினைப்பேறு, உண்ணும்போது யாரிடமும் பேசாதிருத்தலை விரதமாகக் கொண்ட அமணர் கூட்டத்தை விடுத்து, பழைய செயலுக்கு வருந்தி நின்று 'தீவினையை அழிப்பவனே' என்று, அவனை வாழ்த்தும் அடியேனுக்குக் கிட்ட வாய்ப்பு உளதோ?

## தொண்டர்தம் பெருமை

**இனியது** கேட்கின் தனிநெடுவேலோய்
இனிது இனிது ஏகாந்தம் இனிது
அதனினும் இனிது அறிவினர்ச் சேர்தல்
அதனினும் இனிது அறிவுள்ளோரைக்
கனவிலும் நனவிலுங் காண்பது தானே.

**கொடியது** கேட்கின் நெடுவடிவேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினுங் கொடிது இளமையில் வறுமை
அதனினுங் கொடிது ஆற்றொணாக் கொடுநோய்
அதனினுங் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனினுங் கொடிது அவர்கையில் உண்பதுதானே.

**அரியது** கேட்கின் வரிவடி வேலோய்
அரிது அரிது மானுடராதல் அரிது
மானுடராயினுங் கூன் குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தல் அரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியும் நயத்தலரிது
ஞானமுங் கல்வியும் நயந்த காலையும்
தானமுந் தவமும் தான் செயலரிது
தானமுந் தவமும் தான் செய்வராயின்
வானவர் நாடு வழி திறந்திடுமே.

**பெரியது** கேட்கின் எரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகனோ கரியமால் உந்தியில் வந்தோன்
கரியமாலோ அலைகடல் துயின்றோன்
அலைகடலோ குறுமுனி அங்கையுள் அடக்கம்
குறுமுனியோ கலசத்தில் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ அரவினுக்கு ஒரு தலைப்பாரம்
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்
உமையோ இறைவர் பாகத்து ஒடுக்கம்
இறைவரோ தொண்டருள்ளத்து ஒடுக்கம்
தொண்டர் தம்பெருமை சொல்லவும் பெரிதே.

– ஔவையார்.

**981.** வீங்கிய தோள்களுந் தாள்களு
மாய்நின்று வெற்றரையே
மூங்கைகள் போலுண்ணு மூடர்முன்
னேநமக் குண்டுகொலோ
தேங்கமழ் சோலைத்தென் னாரூர்த்
திருமூலட் டானன்செய்ய
பூங்கழ லானடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 6

மணம் கமழும் சோலைகளை உடைய அழகிய ஆரூரில் திருமூலத்தானத்து உறையும் சிவந்த மலர் போன்ற திருவடிகளை உடைய பெருமான் திருவடிகளில் தொண்டு செய்யும் அடியவர்களுக்கு அடியவராகும் நல்வினைப் பேறு, பருத்த தோள்களையும் கால்களையும் கொண்டு ஆடை உடுக்காதவராய் ஊமைகள் போல யாரிடமும் பேசாமல் உண்ணும் மூடர் களாகிய சமணர்கள் காணுமாறு நமக்குக் கிட்டும் வாய்ப்பு உளதோ ?

**982.** பண்ணிய சாத்திரப் பேய்கள்
பறிதலைக் குண்டரைவிட்
டெண்ணில் புகழீசன் றன்னருள்
பெற்றேற்கு முண்டுகொலோ
திண்ணிய மாமதி லாரூர்த்
திருமூலட் டானனெங்கள்
புண்ணியன் றன்னடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 7

கடவுளை வழிபடாதாரும், கடவுள் இல்லை என்பாரும் பேயர் எனப்படுவர்.

உறுதியான பெரிய மதில்களையுடைய திருவாரூர்த் திருமூலத்தானத்தில் உறையும் எங்கள் நல்வினை வடிவினனாகிய பெருமானுடைய அடித்தொண்டருக்குத் தொண்டராகும் புண்ணியம், இறைவனால் செய்விக்கப்படாமல் தாமாகவே புனைந்துரைத்த சாத்திரங்களை உபதேசிப்பவராய், பேய் போல் பற்றிக் கொள்வாராய் வலிய தலைமயிரை நீக்கிக் கொள்பவராய் உள்ள சமண மூர்க்கர்களை விடுத்து கணக்கிட முடியாத புகழை உடைய ஈசன் அருளைப் பெறும் வாய்ப்பு அடியேனுக்கும் உண்டோ?

**983.** கரப்பர்கண் மெய்யைத் தலைபறிக்
கச்சுக மென்னுங்குண்டர்
உரைப்பன கேளாதிங் குய்யப்போந்
தேனுக்கு முண்டுகொலோ
**திருப்பொலி யாரூர்த்** திருமூலட்
டானன் றிருக்கயிலைப்
பொருப்பன் விருப்பமர் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 8

செல்வத்தால் பொலிவு பெற்ற திருவாரூர்த் திருமூலத்தானத்தில் உறையும் கயிலாயபதியிடம் விருப்பம் பொருந்திய தொண்டருக்குத் தொண்டராம் புண்ணியம், ஒரோவழித் தம் உடம்பைப் பாயால் மறைப்பவராய்த் தலைமயிரை வலிய நீக்குவதே சுகம் என்று கூறும் சமண சமய மூர்க்கர்கள் உரைத்தனவற்றைக் கேளாமல் சிவபெருமான் பக்கல் கடைத்தேறுவதற்காக வந்தடைந்த அடியேனுக்கும் உண்டோ?

திருப்பொலி ஆரூர் – தியாகராசப் பெருமான் வீற்றிருப்பதால் எல்லாத் திருவும் பொலியும் ஆரூர். செல்வத்திரு, கல்வித்திரு, ஞானத்திரு, பேரின்பத்திரு (சென்றடையாத திரு) சிவமே பெறுந்திரு.

**984.** கையிலிடு சோறு நின்றுண்ணுங்
காத லமணரைவிட்
டுய்யு நெறிகண்டிங் குய்யப்போந்
தேனுக்கு முண்டுகொலோ
ஐய னணிவய லாரூர்த்
திருமூலட் டானனுக்குப்
பொய்யன் பிலாவடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 9

நம் தலைவனாய் அழகிய வயல்களை உடைய திருவாரூரின் திருமூலத்தானப் பெருமான் பக்கல் உண்மையான அன்புடைய தொண்டருக்குத் தொண்டராம் புண்ணியம், கையில் வழங்கப்படும் சோற்றை நின்றபடியே உண்ணும் செயலில் விருப்பம் கொள்ளும் சமணரைவிடுத்து, பிழைத்தற்குரிய வழியைக் கண்டு சிவபெருமான் பக்கல் பிறவிப் பிணியிலிருந்து தப்புவதற்காக வந்து சேர்ந்த அடியேனுக்கும் கிட்டும் வாய்ப்பு உளதோ?

985. குற்ற முடைய வமணர்
திறமது கையகன்றிட்
டுற்ற கருமஞ்செய் துய்யப்போந்
தேனுக்கு முண்டுகொலோ
மற்பொலி தோளா னிராவணன்
றன்வலி வாட்டுவித்த
பொற்கழ லானடித் **தொண்டர்க்குத்**
**தொண்டராம் புண்ணியமே.** 10

அன்பர் பணி அரனருள் வழி பெற்ற பின்னே அடையத்தக்கது.

வலிமை பொருந்திய தோள்களை உடைய இராவணனுடைய வலிமையை அழியச் செய்த பொன்னாலாகிய கழலை அணிந்த சிவபெருமானுடைய தொண்டருக்குத் தொண்டராம் புண்ணியம், குற்றமுடைய சமணர்கள் சமயத்தின் கூறுபாடுகளை விடுத்து நீங்கி, சைவ சமயத்தில் அடியேனுக்குச் செய்வதற்காக வகுக்கப்பட்ட செயல்களைச் செய்து பிறவிப் பிணியினின்றும் பிழைத்துப் போவதற்காக வந்தடைந்த அடியேனுக்கும் கிட்டும் வாய்ப்பு உளதோ?

## 102. திருவாரூர்

**(தொண்டர்களை நோக்கி நல்வழியை உபதேசித்தது)**

**திருவிருத்தம்** **பதிக எண் : 102**

986. வேம்பினைப் பேசி விடக்கினை யோம்பி
வினைபெருக்கித்
தூம்பினைத் தூர்த்தங்கோர் சுற்றந் துணையென்
றிருத்திர் தொண்டீர்
ஆம்பலம் பூம்பொய்கை யாரூ ரமர்ந்தா
னடிநிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிச் **சலமின்றித்** தொண்டுபட்
டுய்ம்மின்களே. 1

சாம்பல் நீறுபட்டதன் மேலும் நீறுபடாததும் அழியாததும் ஆகும் திருவெண்பொடி.

தொண்டர்களே! வேம்பு போன்ற கசப்பான சொற்களையே பேசி, இவ்வூன் உடம்பைப் பாதுகாத்து, வினைகளை மிகுதியாகத் தேடிக் கொண்டு வயிற்றை உணவால் நிரப்பிச் சுற்றத்தவர்களே நமக்கு நிலையான துணைவர்கள் என்றிருக்கின்றீர்களே! ஆம்பற் பூக்கள் நிறைந்த பொய்கைகளை உடைய ஆரூரை உகந்தருளியிருக்கும் பெருமானுடைய **திருவடிகளின்** கீழே சாம்பலைப் பூசி **வஞ்சனையின்றித்** திருத்தொண்டுகளைச் செய்து கடைத்தேறுங்கள்.

987. ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ
**ரகத்தடக்கிப்**
**பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம்**
**பாற்படுத்தான்**
நாரூர் நறுமலர் நாத னடித்தொண்டன்
நம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணா
டறியுமன்றே. 2

அடியார்களின் அன்புமிக்க நறிய உள்ளத் தாமரையில் வீற்றிருக்கும் சிவபெருமானுடைய திருவடித் தொண்டனும் தொண்டர்களுக்குள் உரையாணிப் பொன்போல் மிகச் சிறந்தவனுமாகிய நம்பிநந்தி, தமிழகத்து வேற்றூர்களில் உள்ளவர் எல்லாம் திருவாரூருக்கு வந்து சேரப் பங்குனி உத்திர விழாவினை ஆராய்ந்து முறைப்படி நடத்தினனாய், நீரை வார்த்துத் திருவிளக்குக்களை எரிய விட்ட செய்தியை நீண்ட தமிழ் உலகம் முழுதும் அறியும்.

அகத்தடக்கி – தியாகேசரைத் தம் அகத்துள் அகலாது வைத்து.
பாரூர் பரிப்ப – உலகமெல்லாம் கொண்டாட.
பாற்படுத்தல் – அரசரையும் அவ்வழி உலகவரையும் வழிப்படுத்துதல்
நாரூர் நறுமலர் நாதர் – செங்கழுநீர் மலரை நாளும் அணியும் வீதிவிடங்கர்.

| | |
|---|---|
| **988.** பூம்படி மக்கலம் பொற்படி மக்கல<br>மென்றிவற்றால்<br>ஆம்படி மக்கல மாகிலு மாரூ<br>ரினிதமர்ந்தார்<br>தாம்படி மக்கலம் வேண்டுவ ரேற்றமிழ்<br>மாலைகளால்<br>நாம்படி மக்கலஞ் செய்து தொழுதும்<br>மடநெஞ்சமே. 3<br><br>படிமம் – பிரதிமை<br>படிமக்கலம் – கண்ணாடி | மடநெஞ்சமே! எம்பெருமானுடைய திருமேனிக்கு உரிய ஆபரணங்களைப் பொன்னால் செய்து அணிவிப்பர். அஃது இயலாவிடின் பொன் வைக்கும் இடத்தில் பூ வைத்தல் என்ற உலகியற்படி அத்திருமேனியைப் பொன் அணிகளால் அழகுறுத்துவது போலப் பூவாலும் அழகு செய்வர். திருவாரூரில் இனிது அமர்ந்த பெருமானார் தம் திருமேனிக்கு அணிகலன்கள் வேண்டுவராயின் நாம் தமிழ்ப் பாமாலைகளால் அவருக்கு அணிகலன்கள் செய்து அணிவித்து அவரை வணங்குவோம். |
| **989.** துடிக்கின்ற பாம்பரை யார்த்துத் துளங்கா<br>மதியணிந்து<br>முடித்தொண்ட ராகிமுனிவர் பணிசெய்வ<br>தேயுமன்றிப்<br>பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர் பாதம்<br>பொறுத்த பொற்பால்<br>அடித்தொண்ட னந்தியென் பானுள னாரூ<br>ரமுதினுக்கே. 4 | துள்ளுகின்ற பாம்பினை இடுப்பில் இறுகச் சுற்றி நிலை கலங்காத பிறையைச் சூடி, மேம்பட்ட தொண்டர்களாகி முனிவர்கள் திருத்தொண்டுகளைச் செய்வதோடன்றி, திருநீற்றைப்பூசி வந்து சேரும் அடியவர்களுடைய திருவடிகளைத் தன் தலைமேல் கொள்ளும் அழகினோடு கீழான தொண்டன் என்று சொல்லிக் கொள்ளும் நம்பி நந்தியும் ஆரூரில் அமுதம் போன்றுள்ள பெருமானுக்குச் சிறப்பான தொண்டுகளைச் செய்யும் அடியவனாக உள்ளான். |
| **990.** கரும்பு பிடித்தவர் காயப்பட் டாரங்கொர்<br>கோடலியால்<br>இரும்பு பிடித்தவ ரின்புறப் பட்டா<br>ரிவர்கணிற்க<br>அரும்பவிழ் தண்பொழில் சூழணி யாரூ<br>ரமர்ந்தபெம்மான்<br>விரும்பு மனத்தினை யாதென்று நானுன்னை<br>வேண்டுவதே. 5 | அரும்புகள் மலரும் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருவாரூரில் விரும்பி உறையும் பெருமானே! கரும்பினை வில்லாக ஏந்திய மன்மதன் உன்னால் கோபிக்கப்பட்டுச் சாம்பலானான். கோடலியாகிய இரும்பைப் பிடித்துத் தன் தந்தையின் கால்களைச் சிதைத்த விசாரசருமன் உன்னால் சண்டீசன் என்ற பதவியளிக்கப்பட்டு மகிழ்விக்கப்பட்டான். நீ மனத்தின்கண் கரும்பை விரும்புகின்றாயா இரும்பை விரும்புகின்றாயா? நீ விரும்பும் பொருள் எப்பொருள் என்று அடியேன் உன்பால் வேண்டுவேன்? |

**991.** கொடிகொள் விதானங் கவரி பறைசங்கங் கைவிளக்கோ
டிடிவில் பெருஞ்செல்வ மெய்துவ ரெய்தியு மூனமில்லா
அடிகளு மாரூ ரகத்தின ராயினு மந்தவளப்
பொடிகொண் டணிவார்க் கிருளொக்கும் நந்தி புறப்படிலே. 6

கொடிகளும், மேற்கட்டிகளும், பறை, கவரி, சங்கு, கைவிளக்கு என்பனவும் கொண்டு குறைவற்ற செல்வர் பலர் திருவாரூரை வழிபடுதலுக்கு வந்து சேருவர். ஒரு குறைவும் இல்லாத திருமூலத்தானப் பெருமானாரும் திருவாரூரில் அமர்ந்திருப்பர். எனினும் அழகிய வெண்ணீற்றை அணியும் அடியவர்களுக்கு, நம்பி நந்தியடிகள் ஆரூரகத்தில் இல்லாமல், ஊருக்கு வெளியே செல்வாராயின் திருவாரூரில் ஒளியே இல்லை போலத் தோன்றும்.

****************************** 7, 8, 9

**992.** சங்கொலிப் பித்திடு மின்சிறு காலைத் தடவழலில்
குங்குலி யப்புகைக் கூட்டென்றுங் காட்டி யிருபதுதோள்
அங்குலம் வைத்தவன் செங்குரு திப்புன லோடவஞ்ஞான்
றங்குலி வைத்தா னடித்தா மரையென்னை யாண்டனவே. 10

தொண்டர்களே! விடியற்காலையில் தூபமூட்டியில் உள்ள கனல் எரியில் குங்கிலியத்தை இட்டுக் குங்கிலியப் புகைக் கூட்டினை எம் பெருமானுக்குக் காட்டிச் சங்குகளை ஊதுங்கள். தன் இருபது தோள்களையும் கயிலையில் அதனைப் பெயர்ப்பதற்குச் செயற்படுத்தின இராவணனுடைய இரத்தம் ஓடுமாறு தன் கால்விரல் ஒன்றனை அழுத்தி நெரித்தவனுடைய திருவடித் தாமரைகளே அடியேனை அடிமை கொண்டன. அவை நுமக்கும் அருள் செய்யும்.

## 103. திருநாகைக்காரோணம்

திருவிருத்தம் பதிக எண் : 103

**993.** வடிவுடை மாமலை மங்கைபங் காகங்கை வார்சடையாய்
கடிகமழ்சோலை சுலவு கடனாகைக் காரோணனே
பிடிமதவாரணம் பேணுந் துரகநிற் கப்பெரிய
இடிகுரல் வெள்ளெரு தேறுமி தென்னைகொ லெம்மிறையே. 1

அழகிய பார்வதி பாகனே! நீண்ட சடையில் கங்கையைத் தரித்தவனே! நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த, கடலையடுத்த நாகைக் காரோணனே! எம் தலைவனே! பெண் யானை, மதமுடைய ஆண் யானை, விரும்பும் குதிரை இவைகள் இருப்பவும் பெரிய, இடி போன்ற குரலையுடைய வெள்ளிய காளையை நீ இவர் வதன் காரணம் என்ன?

---

"கடகரியும் பரிமாவும்" – திருச்சாழல்

| | |
|---|---|
| **994.** கற்றார் பயில்கட னாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே<br>விற்றாங் கியகரம் வேனெடுங் கண்ணி வியன்கரமே<br>நற்றா ணெடுஞ்சிலை நாண்வலித் தகர நின்கரமே<br>செற்றார் புரஞ் செற்ற சேவக மென்னைகொல் செப்புமினே. 2 | கற்றவர்கள் பெருகிய, கடலை அடுத்த நாகைக் காரோணத்தில் உறையும், நெற்றியில் கண்ணையுடைய எம்பெருமானே! வில்லைத் தாங்கிய கை, வேல் போன்ற நீண்ட கண்களை உடைய பார்வதி பாகத்தில் உள்ள கையே. நல்ல கால்களால் வில்லை மிதித்து அதற்கு நாணை ஏற்றிய கை உம் பாகத்தில் உள்ளகையே. இவ்வாறாகப் பகைவருடைய மும்மதில்களை அழித்த வீரம் உம்முடையது என்று கூறுவதன் காரணத்தை அடியேற்குத் தெரிவியுங்கள். |
| **995.** தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த<br>காமன் பொடிபடக் காய்ந்த கடனாகைக் காரோணநின்<br>நாமம் பரவி **நமச்சிவாய வென்னும் மஞ்செழுத்தும்**<br>**சாமன் றுரைக்கத் தருதிகண் டாயெங்கள்** சங்கரனே. 3<br><br>நாயனார் கேட்கும் வரங்களுள் ஒன்று | தூய மெல்லிய பூக்களாகிய அம்புகளைக் கோத்துக் காமாக்கினியை வளர்க்க முற்பட்ட மன்மதன் சாம்பலாகுமாறு கோபித்த கடல்நாகைக் காரோணனே! எங்கள் சங்கரனே! உன் திருப்பெயரை முன்நின்று துதித்து **நமசிவாய என்ற திருவைந் தெழுத்தையும் அடியேன் உயிர்போகும் பொழுது சொல்லும் பேற்றினை நல்குவாயாக.** |
| **996.** பழிவழி யோடிய பாவிப் பறிதலைக் குண்டர் தங்கள்<br>மொழிவழி யோடி முடிவேன் முடியாமைக் காத்துக்கொண்டாய்<br>கழிவழி யோத முலவு கடனாகைக் காரோணவென்<br>வழிவழி யாளாகும் வண்ண மருளெங்கள் வானவனே. 4<br><br>நாயனார் கேட்கும் மற்றொரு வரம் | உப்பங்கழிவழியே கடலின் வெள்ளநீர் பாயும் கடல் நாகைக் காரோணனே! எங்கள் தேவனே! பழியான வழிகளிலே வாழ்க்கையை நடத்திய தீவினையாளர்களான, தலைமயிரை வலியப் போக்கும் மூர்க்கர்களான, சமணர்கள் சொற்களைக் கேட்டு அவற்றின் வழியிலே வாழ்ந்து அழிந்து போகக்கூடிய அடியேனை அழியாதபடி பாதுகாத்து உனக்கு அடியவனாகக் கொண்டாய். **வழிவழியாக அடியேன் உனக்கு அடிமையாகும் முறைமை யாது?** அதனை அடியேற்கு அருளுவாயாக. |

| | |
|---|---|
| **997.** செந்துவர் வாய்க்கருங் கண்ணிணை<br>வெண்ணகைத் தேன்மொழியார்<br>வந்து வலஞ்செய்து மாநட மாட<br>மலிந்த செல்வக்<br>கந்த மலிபொழில் சூழ்கட னாகைக்கா<br>ரோணமென்றும்<br>சிந்தை செய்வாரைப் பிரியா திருக்குந்<br>**திருமங்கையே.** 5 | சிவந்த பவளம் போன்ற வாயையும் கரிய இருகண்களையும், வெள்ளிய பற்களையும், தேன் போன்ற இனிய சொற்களையும் உடைய இளைய மகளிர் வந்து வலம்செய்து சிறந்த கூத்து நிகழ்த்துமாறு, செல்வம் மிகுந்ததும், நறுமணம் வீசும் பொழில்களால் சூழப்பட்டதுமான கடலை அடுத்து அமைந்த நாகைக் காரோணத்தை என்றும் தியானிப்பவர்களைத் திருமகள் என்றும் நீங்காது இருப்பாள். |

திருமங்கை – லட்சுமி அன்று. பரமானந்தா வேசமாகிய மகாமோட்சலட்சுமி (சிவாத்துவவித சைவபாடியம் பக்கம் 555). சிவாலயங்களிலும், சிவபூசைகளிலும் மகாலெட்சுமி என வழிபடப்பெறுவதும் இச்சிவமே பெறும் திருவேயாகும்.

| | |
|---|---|
| **998.** பனைபுரை கைம்மத யானை யுரித்த<br>பரஞ்சுடரே<br>கனைகடல் சூழ்தரு நாகைக்கா ரோணத்தெங்<br>கண்ணுதலே<br>மனைதுறந் தல்லுணா வல்லமண் குண்டர்<br>மயக்க நீக்கி<br>எனைநினைந் தாட்கொண்டாய்க் கென்னினி<br>யான்செயுமிச்சைகளே. 6 | பனை மரத்தை ஒத்த துதிக்கையை உடைய மத யானையின் தோலை உரித்த மேம்பட்ட சோதி வடிவினனே! ஒலிக்கும் கடலால் ஒருபக்கம் சூழப்பட்ட நாகைக் காரோணத்தில் உறையும் எம் நெற்றிக் கண்ணனே! இல்லற வாழ்க்கையை விடுத்து இரவில் உண்ணாத வலிய சமணர்களாகிய மூர்க்கர்திறத்து அடியேன் கொண்டிருந்த மயக்கத்தைப் போக்கி, அடியேனை விரும்பி ஆட்கொண்ட உனக்கு அடியேன் விரும்பிக் கைமாறாகச் செய்வது யாது உள்ளது ? |
| **999.** சீர்மலி செல்வம் பெரிது டையசெம்பொன்<br>மாமலையே<br>கார்மலி சோலை சுலவு கடனாகைக்<br>காரோணனே<br>வார்மலி மென்முலை யார்பலி வந்திடச்<br>சென்றிரந்து<br>ஊர்மலி பிச்சைகொ டுண்பது மாதிமை<br>யோவுரையே. 7 | சிறப்புமிக்க செல்வத்தை மிகுதியாக உடைய செம்பொன்மலை போன்றவனே! மழையால் செழித்த சோலைகளால் சூழப்பட்ட கடல் நாகைக் காரோணனே! கச்சணிந்த மென்மையான முலையை உடைய மகளிர் வந்து பிச்சையிடுமாறு வீடுதோறும் சென்று பிச்சை வாங்கி ஊர்களில் கிட்டும் பிச்சை உணவை உண்பது பொருத்தமான செயல் ஆகுமா ? சொல்வாயாக. |
| **1000.**வங்க மலிகட னாகைக்கா ரோணத்தெம்<br>வானவனே<br>எங்கள் பெருமானொர் விண்ணப்ப முண்டது<br>கேட்டருளீர்<br>கங்கை சடையுட் கரந்தாயக் கள்ளத்தை<br>மெள்ளவுமை<br>நங்கை யறியிற்பொல் லாதுகண் டாயெங்க<br>ணாயகனே. 8 | கப்பல்கள் நிறைந்த கடலை அடுத்த நாகைக் காரோணத்தில் உள்ள எம் தேவரே! எங்கள் பெருமானே! அடியேன் வேண்டிச் சொல்லும் செய்தி ஒன்று உள்ளது. அதனைத் திருச்செவி சார்த்தி அருளுவீராக. எங்கள் தலைவரே! கங்கையைச் சடையுள் மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அந்தக் கள்ளச் செயலை மெதுவாகப் பார்வதிப் பிராட்டி அறிவாளானால் பொல்லாங்கு விளையும் என்பதைத் திருவுள்ளம் பற்றவேண்டும். |

1001. **கருந்தடங் கண்ணியுந்** தானுங் கடனாகைக் காரோணத்தான்
இருந்த திருமலை யென்றிறைஞ் சாதன் றெடுக்கலுற்றான்
பெருந்தலை பத்து மிருபது தோளும் பிதிர்ந்தலற
இருந்தரு ளிச்செய்த தேமற்றுச் செய்தில னெம்மிறையே. 9

தலத்து இறைவியின் பெயர் – கருந்தடங்கண்ணி

கரிய நீண்ட கண்களை உடைய பார்வதியும் தானுமாகக் கடல் நாகைக் காரோணத்தான் உகந்தருளியிருக்கும் திருமலை என்று அதனை வழிபடக் கருதாது, அன்று, அதனைப் பெயர்க்க முற்பட்ட இராவணனுடைய தலைகள் பத்தும் தோள்கள் இருபதும் சிதற, அதனால் அவன் உரக்கக் கதறக் கயிலை மலையில் இருந்தவாறே அவனுக்கு வாள் முதலியவற்றை நாகைக் காரோணத்தார் அருளிச் செய்தாரே அல்லாமல் அவன் உயிருக்கு இறுதியைச் செய்யவில்லை.

## 104. திருவதிகைவீரட்டானம்

திருவிருத்தம் பதிக எண் : 104

1002.மாசிலொள் வாள்போன் மறியு மணிநீர்த் திரைத்தொகுதி
ஊசலை யாடியங் கொண்சிறை யன்ன முறங்கலுற்றால்
பாசறை நீலம் பருகிய வண்டுபண் பாடல்கண்டு
வீசுங்கெடில வடகரைத் தேயெந்தை வீரட்டமே. 1

முதல் மூன்று பாடல்கள் எந்தையார் இருக்கும் திருவீரட்டம் கெடில வடகரையில் செழும் புனல் சிறப்புடன் உள்ளது என்று கூறுகிறார்

குற்றமற்ற ஒளிபொருந்திய வாள்போல ஏறி மடங்கும், பளிங்கு போன்ற நீர் அலைகளின் தொகுதியாகிய ஊசலை ஆடி அங்கு ஒளி பொருந்திய சிறகுகளை உடைய அன்னம் உறங்கத் தொடங்கினால் பசிய இலைகளை உடைய கொடிகளில் உள்ள நீலமலர்களில் தேனைப் பருகி வண்டுகள் பண்ணினைப் பாடுதலைக் கேட்டுக் கெடிலநதி பரிசுப் பொருளாக மணி முதலியவற்றை அவற்றை நோக்கி வீசும் வடகரைக்கண் எம்பிரானுடைய அதிகை வீரட்டம் உள்ளது.

1003.பைங்காற் றவளை பறைகொட்டப் பாசிலை நீர்ப்படுகர்
அங்காற் குவளைமே லாவி யுயிர்ப்ப வருகுலவும்
செங்காற் குருகிவை சேருஞ் செறிகெடி லக்கரைத்தே
வெங்காற் குருசிலை வீர னருள்வைத்த வீரட்டமே. 2

விரும்பத்தக்க அடிப்பகுதியை உடைய பொன் நிறமான மேருமலையாகிய வில்லினை உடைய வீரனாகிய சிவபெருமான் திரிபுரத்தை அழித்துத் தன் அருளை நிலைநாட்டிய அதிகை வீரட்டம், பசிய கால்களை உடைய தவளைகள் பறை போல ஒலி செய்யப் பசிய இலைகளை உடைய நீர்தங்கும் பள்ளத்தில் அழகிய தண்டினை உடைய குவளை மலர்கள் மணம் வீச, அருகில் உலவும் சிவந்த கால்களை உடைய குருகுகள் குவளைமலர்களை அடையும் நீர் செறிந்த கெடிலநதியின் வடகரையில் உள்ளது.

| | |
|---|---|
| 1004.அம்மலர்க் கண்ணிய ரஞ்சனஞ் செந்துவர்<br>வாயிளையார்<br>வெம்முலைச் சாந்தம் விலைபெறு மாலை<br>யெடுத்தவர்கள்<br>தம்மருங் குற்கிரங் கார்தடந் தோண்மெலி<br>யக்குடைவார்<br>விம்மு புனற்கெடி லக்கரைத் தேயெந்தை<br>வீரட்டமே. 3<br><br>கடிபுலம், கேடில் புலம் என்பவற்றுள் ஒன்று மருவி கெடிலம் என்றாயிருக்கலாம். | அழகிய மலர் போன்ற மை எழுதிய கண்ணினராய்ச் சிவந்த பவளம் போன்ற வாயினை உடைய மகளிர் விரும்பத்தக்க முலைகளுக்குச் சந்தனமும் விலை மதிப்புடைய மாலைகளும் அணிந்தவராய், தம் இடைக்கு இவை பாரமாகுமே என்ற இரக்கம் இல்லாதவராய்த் தம் பெரிய தோள்கள் நீந்துதலால் மெலிவு அடையும்படி நீராடுதலால் ஒலிக்கும் நீரை உடைய கெடிலநதியின் வடகரையில் உள்ளது எம்பிரானுடைய அதிகை வீரட்டம். |
| 1005.மீனுடைத் தண்புனல் வீரட்ட ரேயும்மை<br>வேண்டுகின்றதி<br>யானுடைச் சில்குறை யொன்றுள தானறுந்<br>தண்ணெருக்கின்<br>தேனுடைக் கொன்றைச் சடையுடைக் கங்கைத்<br>திரைதவழும்<br>கூனுடைத் திங்கட் குழவியெப் போதுங்<br>குறிக்கொண்மினே. 4 | மீன்களை உடைய குளிர்ந்த புனல் பாயும் அதிகையிலுள்ள வீரட்டரே! உம்மை அடியேன் வேண்டுகின்ற சிறிய தேவை ஒன்று உள்ளது. குளிர்ந்த எருக்கம் பூவொடு தேனை உடைய கொன்றைப் பூவை அணிந்த சடைக்கண் தேக்கி வைத்துள்ள கங்கையின் அலைகளில் தவழும் பிறைச் சந்திரனை எப்பொழுதும் கருத்தில் கொள்ளவேண்டும். அப்பிறை கங்கை வெள்ளத்தில் முழுகிப் போகாதபடி கவனிக்க வேண்டும். |
| 1006.ஆரட்ட தேனு மிரந்துண் டகமக<br>வன்றிரிந்து<br>வேரட்ட நிற்பித் திடுகின்ற தால்விரி<br>நீர்பரவைச்<br>சூரட்ட வேலவன் றாதையைச் சூழ்வய<br>லாரதிகை<br>வீரட்டத் தானை விரும்பா வரும்பாவ<br>வேதனையே. 5 | விரிந்த நீரை உடைய கடலில் சூரபதுமனை அழித்த வேலை ஏந்திய முருகனுடைய தந்தையாய் வயலால் சூழப்பட்ட அதிகை வீரட்டப் பெருமானைப் பண்டைப் பிறப்பில் வழிபட்டு உய்ய விரும்பாத கொடிய தீவினைப் பயனாகிய வேதனை இப்பிறப்பில், வியர்வை சொட்டச் சொட்ட, வீடு வீடாகத் திரிந்து யாவர் சமைத்த பொருளாயிருப்பினும் அதனைப் பிச்சையேற்று உண்ணுமாறு செய்துள்ளது. |
| 1007.படர்பொற் சடையும் பகுவா யரவும்<br>பனிமதியும்<br>சுடலைப் பொடியுமெல் லாமுள வேயவர்<br>தூயதெண்ணீர்க்<br>கெடிலக் கரைத்திரு வீரட்ட ராவர்கெட்<br>டேனடைந்தார்<br>நடலைக்கு நற்றுணை யாகுங்கண் டீரவர்<br>நாமங்களே. 6 | அவர் தூய தெளிந்த நீரை உடைய கெடில நதியின் வடகரையில் அமைந்த அதிகைப் பதியின் வீரட்டராவர். பரவின பொன் போன்ற ஒலியுடைய சடையும், பிளந்த வாயை உடைய பாம்பும், குளிர்ந்த பிறையும் சுடுகாட்டுச் சாம்பலும் எல்லாம் அவருக்கு அடையாளங்களாக உள்ளன. அவருடைய திருநாமங்கள் அவரை அடைக்கலமாக அடைந்தவர்களுடைய துன்பத்தைத் தீர்க்கும் பெரிய துணையாகும். அவ்வாறாகவும் அறிவுகெட்ட அடியேன் அவரைத் தொடர்ந்து பற்றிக்கொள்ள முடியாமல் விட்டு ஒழிந்தேனே! |

1008.காளங் கடந்ததொர் கண்டத்த ராகிக்கண்
ணார்கெடில
நாளங் கடிக்கொர் நகரமு மாதிற்கு
நன்கிசைந்த
தாளங்கள் கொண்டுங் குழல்கொண்டும்
யாழ்கொண்டுந் தாமங்ஙனே
வேளங்கள் கொண்டும் விசும்புசெல் வாரவர்
வீரட்டரே. 7

பார்வதியின் பொருட்டு விடத்தை இருத்திய நீலகண்டராகி, வானத்திலே உலவிச் செல்லும் திரிபுர அசுரரைத் திரிபுரத்தோடு அழித்த வீரத்தானத்தை உடைய பெருமானார், நன்கு பொருந்திய தாளங்கள், குழல், யாழ் இவற்றைக் கொண்டு பாம்புகளைச் சூடி, காலையிலே விளக்கமாக உறைவதற்கு அதிகையாகிய ஒரு நகரமும் உடையராய் அவ்வாறே பாய்கால்களை உடைய கெடிலநதிக்கும் உரியவராவர்.

********************************** 8, 9, 10

## 105. திருப்புகலூர்

புகலூர் இறைவர் தன்னை இவ்வுலகில் தங்க வைக்காது தனது திருவடியின் கீழ் நிலையாக இருக்கச் செய்யும் என்று முன்னுணர்வினால் மொழிந்தது.

திருவிருத்தம் பதிக எண் : 105

1009.தன்னைச் சரணென்று தாளடைந் தேன்றன்
னடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன
கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தென்வினை கட்டறுத்
தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான்சிவ **லோகத்**
**திருத்திடுமே.** 1

புன்னை மரங்கள் நிறைந்த சோலைகளை உடைய திருப்புகலூர்ப் பெருமானை அடைக்கலமாகப் பற்றி அவன் திருவடிகளை அடைந்தேன். தன் திருவடிகளை அடைக்கலமாக அடைந்த அளவில் அவன் செய்வனவற்றைக் கேளுங்கள். என் பிறவிப் பிணியைப் போக்கி என் வினையாகிய கட்டினை அறுத்து நீக்கி எழு வகைப்பட்ட நரகத்தில் என்னைக் கிடக்குமாறு விடாமல் சிவலோகத்தில் கொண்டு சேர்த்து விடுவான்.

1010. பொன்னை வகுத்தன்ன மேனிய னேபுணர்
மென்முலையாள்
தன்னை வகுத்தன்ன பாகத்த னேதமி
யேற்கிரங்காய்
புன்னை மலர்த்தலை வண்டுறங் கும்புக
லூரரசே
**என்னை வகுத்திலை யேலிடும் பைக்கிடம்**
**யாதுசொல்லே.** 2

பொன்னார் மேனியனே! பார்வதி பாகனே! தனித்து வருந்தும் அடியேனுக்குக் கருணை செய்வாயாக. புன்னை மலர்களிலே வண்டுகள் உறங்கும் புகலூர்த் தலைவனே! **யான் இல்லேனாயின் துன்பம் தங்குவதற்கு வேறு இடம் யாது உள்ளது?**

இடும்பை – துன்பம். அவற்றுள் பெரியது பிறவித் துன்பம்.

********************************** 3

1011. பொன்னள வார்சடைக் கொன்றையி னாய்புக
லூரரசே
மன்னுள தேவர்கள் தேடு மருந்தே
வலஞ்சுழியாய்
என்னள வேயுனக் காட்பட் டிடைக்கலத்
தேகிடப்பார்
உன்னள வேயெனக் கொன்று மிரங்காத
வுத்தமனே. 4

பொன்னை ஒத்த நீண்ட சடைக்கண் கொன்றைப் பூவை அணிந்தவனே! புகலூருக்கு அரசனே! பெருமையை உடைய தேவர்கள் தேடும் அமுதமே! திருவலஞ்சுழிப் பெருமானே! எனக்குச் சிறிதும் இரக்கம் காட்டாத மேம்பட்ட பண்பினனே! உனக்கு அடிமையாக அமைந்தும் கட்டுக்கும் வீட்டுக்கும் இடையே கிடப்பவர் என்னைத் தவிர உன் அடியவருள் வேறு யாவர் உளர்?

********************************** 5,6,7,8,9

1012. ஓணப் பிரானு மொளிர்மா மலர்மிசை
யுத்தமனும்
காணப் பராவியுங் காண்கின் றிலர்கர
நாலைந்துடைத்
தோணப் பிரானை வலிதொலைத் தோன்றொல்லை
நீர்ப்புகலூர்க்
கோணப் பிரானைக் குறுகக் குறுகா
கொடுவினையே. 10

திருவோண நாளுக்குத் தலைவனான திருமாலும் பிரகாசிக்கும் பெரிய தாமரை மலரில் உறையும் பிரமனும் உன்னைக் காண்பதற்காக வேண்டியும் காண இயலாதவர் ஆயினர். இருபது தோள்களை உடைய மேம்பட்ட தலைவனாகச் செருக்குக் கொண்ட இராவணனுடைய வலிமையை அழித்தவனாகிய, பண்டு தொட்டு நீர்வளம் மிக்க புகலூரில் உறையும் சாய்ந்த திருமேனியை உடைய பிரானை, அணுகிய அளவில், கொடிய தீவினைகள் நம்மைத் துன்புறுத்த நெருங்கிவாரா.

கோணப்பிரான் – அடியாரின் பொருட்டுச் சாய்ந்த திருக்கோலமுடைய பெருமான்.

## 106. திருக்கழிப்பாலை

திருவிருத்தம் பதிக எண் : 106

1013. நெய்தற் குருகுதன் பிள்ளையென் றெண்ணி
நெருங்கிச்சென்று
கைதை மடற்புல்கு தென்கழிப் பாலை
யதனுறைவாய்
பைதற் பிறையொடு பாம்புடன் வைத்த
பரிசறியோம்
எய்தப் பெறினிரங் காதுகண் டாய்நம்
மிறையவனே. 1

நெய்தல் நிலத்திலுள்ள நாரை தன் பார்ப்பு என்று கருதி அணுகி வெண்தாழை மடலைத் தழுவும் அழகிய கழிப்பாலையில் உறைபவனே! இளைய பிறைச் சந்திரனோடு தலையில் பாம்பையும் அருகில் வைத்த திறம் பற்றி யாம் அறியோம். தன் அருகே பிறைவரினும் பிறை அருகே தான் அணுகப் பெறினும் பாம்பு இரக்கமின்றி பிறையை விழுங்கிவிடும் என்பதனை நம் தலைவனாகிய நீ அறிவாய் அல்லையோ?

1014. பருமா மணியும் பவளமுத் தும்பரந்
துந்திவரை
பொருமால் கரைமேற் றிரைகொணர்ந் தெற்றப்
பொலிந்திலங்குங்
கருமா மிடறுடைக் கண்டனெம் மான்கழிப்
பாலையெந்தை
பெருமா னவனென்னை யாளுடை யானிப்
பெருநிலத்தே. 2

மலையை ஒத்த உயர்ந்த கடற்கரை மீது பெரிய மணி பவளம் முத்து என்பனவற்றைப் பரவிச் செலுத்தி அலைகள் கொண்டு வந்து சேர்ப்பதனால் விளங்கித் தோன்றும் கழிப்பாலை என்ற திருத்தலத்தில் உறையும் எம் தலைவன், எந்தை பெருமான் ஆகிய நீலகண்டன். இப்பேருலகில் அடியேனை அடிமையாகக் கொண்டவன் ஆவான்.

1015. நாட்பட் டிருந்தின்ப மெய்தலுற் றிங்கு
நமன்றமராற்
கோட்பட் டொழிவதன் முந்துற வேகுளி
ரார் தடத்துத்
தாட்பட்ட தாமரைப் பொய்கையந் தண்கழிப்
பாலையண்ணற்
காட்பட் டொழிந்தமன் றேவல்ல மாயிவ்
வகலிடத்தே. 3

******************************* 4,5,6,7,8,9,10

இப்பரந்த உலகில் பல காலம் உயிர்வாழ்ந்து சிற்றின்ப நுகர்ச்சிகளைப் பொருந்தி இயமனுடைய ஏவலரால் கொள்ளப்பட்டு அழிவதன் முன்னம், குளிர்ந்த நீர் நிலைகளையும், தண்டு நீண்ட தாமரைப் பொய்கைகளையும் உடைய அழகிய குளிர்ந்த கழிப்பாலைப் பெருமானுக்கு அடிமையாகி வல்லமை உடையோமாய் யமபயத்திலிருந்து விடுபட்டோம்.

## 107. திருக்கடவூர் வீரட்டம்

திருவிருத்தம் பதிக எண் : 107

1016. மருட்டுயர் தீரவன் றர்ச்சித்த மாணிமார்க்
கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவா ளெயிற்றெரி
போலுங்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம் பதைப்ப
வுதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான்கட வூருறை
யுத்தமனே. 1

கடவூருறை உத்தமனே – பதிக மகுடம்.

தன்னை மயக்கிய யமபயமாகிய துன்பம் தீருமாறு அக்காலத்தில் அர்ச்சித்த பிரமசாரியான மார்க்கண்டேயனுக்காகக் கரிய உடம்பு, வளைந்த ஒளி பொருந்திய பற்கள் தீயைப் போன்ற சிவந்த மயிர்முடி, மடித்த நா இவற்றை உடைய கொடிய கூற்றுவன் உடல் நடுங்குமாறு அவனை உதைத்து அவ்விடத்திலே அவனை உருளச்செய்த சிவந்த திருவடிகளை உடையவன் திருக்கடவூரில் உகந்தருளி உறைகின்ற உத்தமனாகிய சிவபெருமான் ஆவான்.

| | |
|---|---|
| 1017. பதத்தெழு மந்திர மஞ்செழுத் தோதிப் பரிவினொடும்<br>இதத்தெழு மாணித னின்னுயி ருண்ண வெகுண்டடர்த்த<br>கதத்தெழு காலனைக் கண்குரு திப்புன லாறொழுக<br>உதைத்தெழு சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 2 | ஐந்து சொற்களாக அமைந்த திருவைந்தெழுத்தை ஓதி விருப்பினோடும் தன் நன்மை கருதிச் சிவபெருமானை அணுகி யிருந்த பிரமசாரியான மார்க்கண்டேயனுடைய இனிய உயிரை உண்பதற்கு அவனை வெகுண்டு கோபத்தோடு எழுந்து தாக்கிய கூற்றுவனை அவன் கண்கள் குருதியைச் சொரியுமாறு உதைத்துச் செயற்பட்ட சேவடியான் கடவூர் உறை உத்தமனே. |
| 1018. கரப்புறு சிந்தையர் காண்டற் கரியவன் காமனையும்<br>நெருப்புமிழ் கண்ணின ளீள்புனற் கங்கையும் பொங்கரவும்<br>பரப்பிய செஞ்சடைப் பால்வண்ணன் காலனைப் பண்டொருகால்<br>உரப்பிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 3 | வஞ்சனை பொருந்திய மனத்தினர் காண்பதற்கு அரியவனாய், மன்மதன் மீது நெருப்பைச் சொரிந்து அவனை அழித்த கண்ணினனாய், கங்கையும் பாம்பும் சூடிய சிவந்த சடையினை உடையவனாய், வெண்ணீறணிந்து பால் போன்ற நிறத்தினனாய்க் கூற்றுவனை முன்னொரு காலத்தில் பேரொலி செய்து அதட்டியவன் சிவந்த திருவடிகளை உடைய கடவூர் உறை உத்தமன். |
| 1019. மறித்திகழ் கையினன் வானவர் கோனை மனமகிழ்ந்து<br>குறித்தெழு மாணித னாருயிர் கொள்வான் கொதித்தசிந்தைக்<br>கறுத்தெழு மூவிலை வேலுடைக் காலனைத் தானலற<br>உறுக்கிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 4 | மான்குட்டி விளங்கும் கையினனாய், தேவர் தலைவனான தன்னை மனம் மகிழ்ந்து வழிபட்ட பிரமசாரியின் அரிய உயிரைக் கைப்பற்றுதற்காகக் கொதிக்கும் உள்ளத்தோடு வெகுண்டு புறப்பட்ட, மூவிலை வேலை ஏந்திய கூற்றுவன் வாய் விட்டுக் கதறுமாறு அவனைச் சிதைத்த சேவடியை உடையவன், கடவூர் உறை உத்தமன். |
| 1020.குழைத்திகழ் காதினன் வானவர் கோனைக் குளிர்ந்தெழுந்து<br>பழக்கமொ டர்ச்சித்த மாணித னாருயிர் கொள்ளவந்த<br>தழற்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் தானலற<br>உழக்கிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 5 | குழையணிந்த காதுகளை உடைய, தேவர் தலைவனாகிய தன்னை நீராடி வழக்கமாக அருச்சித்த மாணியின் அரிய உயிரைக் கைப்பற்ற வந்த தீப்பொறி கக்கும் முத்தலைச் சூலம் ஏந்திய கூற்றுவன் கதறுமாறு அவனைச் சிதறச்செய்த சேவடியான் கடவூர் உறை உத்தமன். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| 1021. பாலனுக் காயன்று பாற்கட லீந்து<br>பணைத்தெழுந்த<br>ஆலினிற் கீழிருந் தாரண மோதி<br>யருமுனிக்காய்ச்<br>சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந்தடர்ந்<br>தோடிவந்த<br>காலனைக் காய்ந்தபி ரான்கட வூருறை<br>யுத்தமனே. 6 | சிறுவனாகிய உபமன்யுவுக்குப் பால் உணவுக்காகப் பாற்கடலையே வழங்கி, பல கிளைகளோடு ஓங்கி வளர்ந்த கல்லால மர நிழலின் கீழ் இருந்து வேதங்களின் செய்திகளைச் சனகர் முதலிய முனிவர் நால்வருக்கு உபதேசித்துச் சிறந்த முனிவனான மார்க்கண்டேயனுக்காகச் சூலமும் பாசக் கயிறும் கொண்டு தொடர்ந்து அவனை நெருங்க ஓடிவந்த காலனை வெகுண்ட பெருமான், கடவூர் உறை உத்தமனாவான். |
| 1022.படர்சடைக் கொன்றையும் பன்னக மாலை<br>பணிகயிறா<br>உடைதலை கோத்துழன் மேனிய னுண்பலிக்<br>கென்றுழல்வோன்<br>சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத்<br>துண்டமதா<br>உடறிய சேவடி யான்கட வூருறை<br>யுத்தமனே. 7 | பரவிய சடையிலே கொன்றைமாலை, பாம்பு மாலை, பாம்பினைத் தொடுக்கும் கயிறாகக் கொண்டு தொடுத்துக் கோத்துத் தலையில் அசைகின்ற தலைமாலை என்பனவற்றை அணிந்த திருமேனியனாய், உண்ணும் பொருள்களைப் பிச்சை எடுப்பதற்காகத் திரிவோனாய், ஒளி வீசும் முத்தலைச் சூலம் ஏந்திய காலன் துண்டங்களாகுமாறு வெகுண்ட சேவடிகளை உடையவன் கடவூர் உறை உத்தமன். |
| 1023.வெண்டலை மாலையுங் கங்கை கரோடி<br>விரிசடைமேல்<br>பெண்டணி நாயகன் பேயுகந் தாடு<br>பெருந்தகையான்<br>கண்டனி நெற்றியன் காலனைக் காய்ந்து<br>கடலின்விடம்<br>உண்டருள் செய்தபி ரான்கட வூருறை<br>யுத்தமனே. 8<br><br>கரோடி – முடிமாலை | வெள்ளிய தலைகளால் ஆகிய மாலையாகிய கரோடி பொருந்திய விரிந்த சடையின்மீது கங்கையாகிய பெண்ணை அணிந்த தலைவனாய்ப் பேய்களோடு விரும்பி ஆடும் பெருந்தகையாய், நெற்றியில் தனியான ஒரு கண் உடையவனாய்க் காலனை வெகுண்டவனாய், கடல் விடத்தை உண்ட பெருமான் கடவூர் உறை உத்தமன். |
| 1024.கேழல தாகிக் கிளறிய கேசவன்<br>காண்பரிதாய்<br>வாழிநன் மாமலர்க் கண்ணிடந் திட்டவம்<br>மாலவற்கன்<br>றாழியு மீந்து வடுதிறற் காலனை<br>யன்றடர்த்து<br>ஊழியு மாய பிரான்கட வூருறை<br>யுத்தமனே. 9 | பன்றி உருவெடுத்துப் பூமியைக் குடைந்துசென்ற கேசவனாகிய திருமால் தன் முயற்சியால் காண்டற்கு அரியவனாய், தான் வாழ்வதற்காகத் தன் தாமரை போன்ற கண் ஒன்றனைப் பெயர்த்து அர்ப்பணித்த அத்திருமாலுக்குச் சக்கரப்படையை வழங்கியவனாய், ஒரு காலத்தில் கூற்றுவனை அழித்தவனாய், எல்லா ஊழிகளிலும் உள்ள பெருமான் கடவூர் உறை உத்தமன். |

1025.தேன்றிகழ் கொன்றையுங் கூவிள மாலை
திருமுடிமேல்
ஆன்றிக ழைந்துகந் தாடும் பிரான்மலை
யார்த்தெடுத்த
கூன்றிகழ் வாளரக் கன்முடி பத்துங்
குலைந்துவிழ
ஊன்றிய சேவடி யான்கட வூருறை
யுத்தமனே. 10

தேன் விளங்கும் கொன்றை மாலையும் வில்வ மாலையும் அணிந்த அழகிய முடியின் மீது பஞ்சகௌவிய அபிடேகத்தை விரும்பும் பிரானாய், ஆரவாரம் செய்து கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்ட வளைந்த வாளை உடைய இராவணன் பத்துத் தலைகளும் சிதறி விழுமாறு அழுத்திய சிவந்த பாதங்களை உடையவன் கடவூர் உறை உத்தமன் ஆவான்.

## 108. திருமாற்பேறு

திருவிருத்தம் பதிக எண் : 108

1026.மாணிக் குயிர்பெறக் கூற்றை யுதைத்தன
மாவலிபால்
காணிக் கிரந்தவன் காண்டற் கரியன
கண்டதொண்டர்
பேணிக் கிடந்து பரவப் படுவன
பேர்த்துமஃதே
மாணிக்க மாவன மாற்பே றுடையான்
மலரடியே. 1

மாற்பேறுடையானுடைய தாமரை போன்ற திருவடிகள் பிரமசாரியான மார்க்கண்டேயன் ஆயுள் குறையாது நிலைபெற்றிருக்கக் கூற்றுவனை உதைத்தன. மாவலியினிடத்தில் நிலத்திற்காக யாசகம் செய்த திருமால் காண்பதற்கு அரியன. ஞானத்தால் உணர்ந்த அடியவர்களால் விரும்பித் துதிக்கப்படுவன. மாணிக்கம் போன்று ஒளி வீசுவன. மேலும் வீடுபேற்றை நல்குவன.

1027.கருடத் தனிப்பாகன் காண்டற் கரியன
காதல்செய்யில்
குருடர்க்கு முன்னே குடிகொண் டிருப்பன
கோலமல்கு
செருடக் கடிமலர்ச் செல்விதன் செங்கம
லக்கரத்தால்
வருடச் சிவப்பன மாற்பே றுடையான்
மலரடியே. 2

கருடனை வாகனமாக உடைய திருமால் காண்பதற்கு அரியனவாகிய மாற்பேறுடையான் திருவடிகள் அன்பு செய்தால் அகக்கண் புறக்கண் என்ற இரு கண்களும் இல்லாதவர்களுக்கும் அவர் எதிரே நிலையாக இருந்து நிலைபெயராது ஒளி வீசுவன. அழகுமிக்க வாகைமாலையைச் சூடிய பார்வதி தன் கைகளால் தடவுவதால் சிவப்பு நிறம் மிகுவன.

## 109. திருத்தூங்கானைமாடம்

### ( நாயனார் தோள்களில் மூவிலைச் சூலக் குறியும், விடைக்குறியும் பொறிக்கப்பெற்ற தலம் )

புன்னெறியாகிய சமண சமயத்தின் தொடக்கிற்பட்டுப் போன தம் உடலுடனே உயிர் வாழத் தரிக்கமாட்டாத நாவரசர், தாம் தரிப்பதற்கு முத்திரை இட்டருள வேண்டும் என்ற வேண்டுகோளுடன் "பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்" பதிகம் பாடப் பெருமானின் திருவருளால் ஒரு சிவபூதமானது பக்கத்தில் ஒருவரும் அறியாதபடி வந்து அவருடைய தோள்களில் மூவிலைச் சூலக் குறியினையும், விடைக் குறியினையும் சாத்தியிட, அம்முத்திரைகளைக் கண்டு மனமகிழ்ந்து, பெருமானரது திருவருளை நினைந்து, இடைவிடாது வரும் அருவிபோலக் கண்கள் நீரைப் பொழியத் தொழுது, நிலத்தில் விழுந்து, மிக்க ஆசையால் நிரம்பி, மேல் எழுந்த சிந்தையராகி "நான் உய்ந்தேன்" என்று கூறி எழுந்தார்.

சமண் சார்பு என்ற அசுத்தச் செயலும், தொடர்பும் கொண்டதால் உடலும் அதனை உட்கொண்ட இரத்தம் முதலாகிய எழுவகைத் தாதுக்களும் தூய்மையின்றி அசுத்தமாகிவிடும். நோய்க்கு மருந்து கொடுப்பது போலவும், அசுத்தத்தை அனலிட்டுத் தூய்மை செய்வது போன்ற ஒன்றைச் செய்து தூய்மையாக்குவதும் விதித்தவாறு செய்யப்பட்டு வருகின்றன.

திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்ததென அஞ்செழுத்தோதி அணிந்த உடல் வளர்ந்த வளர்ச்சியும், அதுபற்றிய இழிவும் பலகாலம் நாயனார் கருதிக் கருதி, வருந்தியே நின்றனர் என்பது ஏழைத் திருத்தாண்டகத்தாலும் மற்றும் பல வாக்குகளாலும் அறியப்படும். சிவபூசகர்கள் நாடொறும் செய்யும் தூலதேகசுத்தி, சூக்கும தேகசுத்தி, சரீரதகனம், அமிர்தாப்பிலாவனம் என்ற இவைகளையெல்லாம் நாயனாரும் செய்து வந்துள்ளதை அவர் பாடல்களால் அறியலாம். ஆனால் சிவனை இகழ்ந்து, புறச்சமயம் சென்று செய்த செயல்களுக்கு சிறப்பான கழுவாய் வேண்டுமென நினைக்கிறார்.

அஃது சூலம், இடபம் ஆகிய இறைவன் இலச்சினைப் பொறிக்கப் பெறுதலானே ஆவதாம் என்றுணர்கிறார். "சைவமுத்ராதீட்சை" என்பது சிவாகமங்களில் விதித்த தீட்சை வகைகளில் ஒன்று. பொறித்தலாவது, அவ்வடிக் குறிகள் எப்போதும் தோள்களிற் காணும்படி சுவடு உண்டாகுமாறு அழுந்தி முத்திரீகப்படுதல். புறச்சமயம் புக்கு உழன்றவர்கள் மீளத் தம் சமயம் புகுந்தால், இவ்வாறுள்ள உடல் வருத்தும் கழுவாயொன்றும் வேண்டும் என்பது இதனால் துணியப்படும்.

**திருவிருத்தம்** **பதிக எண் : 109**

1028.பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்
போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங்
கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி
மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச்
சுடர்க்கொழுந்தே. 1

இத்தலம் பெண்ணாகடம் எனப்படும். பெண் – தேவகன்னியர்; ஆ–காமதேனு; கடம்–யானை. தூங்கானை மாடம் – கோயிலின் பெயர். கோயிலின் வடிவம் யானை படுத்திருப்பது போல உள்ளது. கஜப்பிரதிட்டை. "கடந்தைத் தடங்கோயில்" என்று சம்பந்தர் கூறுகிறார். கலிக்கம்ப நாயனார் தொண்டு செய்து பேறுபெற்ற தலம்.

விரும்பி மேகங்கள் தங்குதல் பொருந்திய பெண்ணாகடத்திலுள்ள திருக்கோயிலாகிய தூங்கானை மாடத்தில் ஒளிப் பிழம்பாய் இருக்கும் பெருமானே! உன்னுடைய பொன் போன்ற திருவடிகளில் அடியேன் செய்யும் விண்ணப்பமாகிய வேண்டுகோள் ஒன்று உளது. அஃதாவது அடியேனுடைய உயிரைப் பாதுகாக்கும் விருப்பம் உனக்கு உண்டானால், யான் சமண சமயத்தில் வாழ்க்கையின் பெரும் பகுதியை வீணாக்கினவன் என்று மக்கள் கூறும் பழிச்சொற்கள் நீங்குமாறு, உன்னுடைய அடிமையாக அடியேனை எழுதிக் கொண்டாய் என்பது புலப்பட ஒளிவீசும் முத்தலைச் சூலப் பொறியை அடியேன் உடம்பில் பொறித்து வைப்பாயாக.

1029.ஆவா சிறுதொண்ட னென்னினைந் தானென்
றரும்பிணிநோய்
காவா தொழியிற் கலக்குமுன் மேற்பழி
காதல்செய்வார்
தேவா திருவடி நீறென்னைப் பூசுசெந்
தாமரையின்
பூவார் கடந்தையுட் டூங்கானை மாடத்தெம்
புண்ணியனே. 2

செந்தாமரைப் பூக்கள் நிறைந்த கடந்தையுள் தூங்கானைமாடத்து உறையும் எம் புண்ணியனே! 'ஐயோ' இச்சிறு தொண்டன் என்னை விருப்புற்று நினைத்தான் என்று திருவுளம் பற்றிப் பெரிய பிணிகளும் நோய்களும் தாக்காதவாறு அடியேனைப் பாதுகாவாமல் விடுத்தால் புண்ணியனாகி உனக்குப் பழி வந்து சேரும். ஆதலின் விரும்பும் அடியவர் தலைவனாகிய நீ உன் திருவடிகள் தோய்ந்த நீற்றினை அடியேன் மீது பூசுவாயாக.

*************************** 3,4,5,6,7,8,9

1030.கடவுந் திகிரி கடவா தொழியக்
கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி
மால்வரைபோல்
இடவம் பொறித்தென்னை யேன்றுகொள் ளாயிருஞ்
சோலைதிங்கள்
கடவுங் கடந்தையுட் டூங்கானை மாடத்தெந்
தத்துவனே. 10

பெரிய சோலைகளிலே சந்திரன் பொருந்தி உலவும் கடந்தைத் தலத்தில் உள்ள தூங்கானை மாடத்தில் உறையும் எம் மெய்ப்பொருளே! செலுத்திய தேர்ச்சக்கரம் மேல் உருளாது தடைப்படக் கயிலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணன் உடல் நெரியுமாறு அழகிய கால்விரல் ஒன்றால் அழுத்தியவனே! பெரிய இமய மலை போன்ற வெண்ணிறமுடைய காளை வடிவப் பொறியை அடியேன் உடலில் பொறித்து அடியேனை உன் தொண்டனாக ஏற்றுக் கொள்வாயாக.

மெய்கண்டாரின் தகப்பனார் அச்சுதக் களப்பாளர் வாழ்ந்த திருத்தலம். மறைஞானசம்பந்தர் அவதாரத் தலம்.

## 110. பொது

(பசுபதித் திருவிருத்தம்)

திருவிருத்தம் பதிக எண் : 110

1031. சாம்பலைப் பூசித் தரையில் புரண்டுநின்
றாள்பரவி
ஏம்பலிப் பார்கட் கிரங்குகண் டாயிருங்
கங்கையென்னும்
காம்பலைக் கும்பணைத் தோளி கதிர்ப்பூண்
வனமுலைமேல்
பாம்பலைக் குஞ்சடை யாயெம்மை யாளும்
பசுபதியே. 1

பெரிய கங்கை என்னும் மூங்கில் போன்ற பருத்த தோள்களை உடைய பெண்ணின் ஒளி வீசுகின்ற அணிகலன்களை அணிந்த அழகிய முலைமீது பாம்புகள் தவழும் சடையை உடையவனே! எம்மை அடிமை கொள்ளும் ஆன்ம நாயகனே! சாம்பலைப் பூசிக் கொண்டு உறங்கும்போது வெறும் தரையிலேயே கிடந்து உறங்கி உன் திருவடிகளை முன் நின்று துதித்து அங்கலாய்க்கும் அடியவர்கள் திறத்து அருள் செய்வாயாக.

இப்பதிகம் அடியார்களின் பொருட்டு அறை கூவிச் செய்து கொண்ட விண்ணப்பம்.

| | |
|---|---|
| 1032.உடம்பைத் தொலைவித்துன் பாதந் தலைவைத்த<br>வுத்தமர்கள்<br>இடும்பைப் படாம லிரங்குகண் டாயிரு ளோடச்<br>செந்தீ<br>அடும்பொத் தனைய வழன்மழு வாவழ<br>லேயுமிழும்<br>படம்பொத் தரவரை யாயெம்மை யாளும்<br>பசுபதியே. 2<br><br>"எம்மையாளும் பசுபதியே" என்பது பதிக மகுடம். | இருள் ஓடுமாறு, அடுப்பம்பூவை ஒத்த நிறத்தினதாய்ச் செந்தீயை வெளிப்படுத்திக் கோபிக்கும் மழுப்படையை ஏந்தியவனே! நெருப்பைக் கக்கும் படமெடுத்தாடும் பாம்பை இடுப்பில் இறுகக் கட்டியவனே! எம்மை அடிமை கொள்ளும் பசுபதியே! பிறவிப் பிணியைப் போக்கி உன் திருவடிகளையே தம் தலைக் கண்வைத்த மேம்பட்டவர்களாகிய அடியவர்கள் துன்புறாத வகையில் அவர்களுக்கு இரங்கி அருளுவாயாக. |
| 1033.தாரித் திரந்தவி ராவடி யார்தடு<br>மாற்றமென்னும்<br>மூரித் திரைப்பௌவ நீக்குகண் டாய்முன்னை<br>நாளொருகால்<br>வேரித்தண் பூஞ்சுட ரைங்கணை வேள்வெந்து<br>வீழச்செந்தீப்<br>பாரித்த கண்ணுடை யாயெம்மை யாளும்<br>பசுபதியே. 3 | முன்னொரு காலத்தில் தேனை உடைய குளிர்ந்த பூக்களாகிய ஒளிவீசும் ஐந்து அம்புகளை உடைய மன்மதனை வெந்து விழுமாறு நெருப்பினை வெளிப்படுத்திய கண்ணுடையவனாய் எம்மை ஆளும் பசுபதியே! வறுமைத் துன்பம் நீங்காத அடியவர்களுக்கு ஏற்படும் தடுமாற்றமாகிய பெரிய அலைகளை உடைய கடலிலிருந்து அவர்களைக் கரையேற்றுவாயாக. |
| 1034.ஒருவரைத் தஞ்சமென் றெண்ணாதுன் பாத<br>மிறைஞ்சுகின்றார்<br>அருவினைச் சுற்ற மகல்விகண் டாயண்ட<br>மேயணவும்<br>பெருவரைக் குன்றம் பிளிறப் பிளந்துவேய்த்<br>தோளியஞ்சப்<br>பருவரைத் தோலுரித் தாயெம்மை யாளும்<br>பசுபதியே. 4 | வானளாவிய பெரிய மலை போன்ற யானை பிளிறுமாறு அதன் உடலைப் பிளந்து மூங்கில் போன்ற தோள்களை உடைய பார்வதி அஞ்சுமாறு அதன் தோலை உரித்துப் போர்த்த பசுபதியே! வேறு எவரையும் பற்றுக்கோடாகக் கருதாமல் உன் திருவடிகளையே வழிபடும் அடியவர்களுடைய நீங்குதல் அரிய வினைத் தொகுதிகளைப் போக்கி அருளுவாயாக. |
| 1035.இடுக்கொன்று மின்றியெஞ் சாமையுன் பாத<br>மிறைஞ்சுகின்றார்க்<br>கடர்க்கின்ற நோயை விலக்குகண் டாயண்ட<br>மெண்டிசையும்<br>சுடர்த்திங்கள் சூடிச் சுழல்கங்கை யோடுஞ்<br>சுரும்புதுன்றிப்<br>படர்க்கொண்ட செஞ்சடை யாயெம்மை யாளும்<br>பசுபதியே. 5 | அண்டங்களிலும் எட்டுத் திசைகளிலும் ஒளி வீசுகின்ற சந்திரனைச் சூடிச் சுழலுகின்ற கங்கையோடு வண்டுகள் நெருங்கிப் பூக்களில் பரவுதலைக் கொண்ட செஞ்சடைப் பசுபதியே! இடையூறு ஏதும் இல்லாமல் தொடர்ச்சியாக உன் திருவடிகளை வழிபடுகின்ற அடியவர்களை வருத்தும் பிறவிப் பிணியைப் போக்குவாயாக. |

| | |
|---|---|
| 1036.அடலைக் கடல்கழி வானின் னாடியிணை<br>யேயடைந்தார்<br>நடலைப் படாமை விலங்குகண் டாய்நறுங்<br>கொன்றைதிங்கள்<br>சுடலைப் பொடிச்சுண்ண மாசுணஞ் சூளா<br>மணிகிடந்து<br>படரச் சுடர்மகு டாவெம்மை யாளும்<br>பசுபதியே. 6 | நறிய கொன்றை, பிறை, சாம்பல், பாம்பு, தலையில் சூடும் மணி இவை பரவி ஒளி வீசும் சடைமுடியை உடைய பசுபதியே! துயர்க்கடல் நீங்குவதற்காக நின் திருவடிகளையே பற்றுக்கோடாக அடைந்த அடியவர்கள் வருத்தமுறாத வகையில் அவர்கள் துயரங்களைப் போக்குவாயாக. |
| 1037.துறவித் தொழிலே புரிந்துன் சுரும்படி<br>யேதொழுவார்<br>**மறவித் தொழிலது மாற்றுகண் டாய்**மதின்<br>மூன்றுடைய<br>அறவைத் தொழில்புரிந் தந்தரத் தேசெல்லு<br>மந்திரத்தேர்ப்<br>பறவைப் புரமெரித் தாயெம்மை யாளும்<br>பசுபதியே. 7<br><br>************************************ 8, 9 | மும்மதில்கள் உடையனவாய்த் தாம் தங்கும் இடங்களை அழித்தல் தொழிலைப் புரிந்து வானத்திலே உலவும், மந்திரத்தால் செல்லும் தேர்போலப் பறக்கும் ஆற்றலுடைய மூன்று கோட்டைகளையும் எரித்து அழித்த பசுபதியே! உலகில் பற்றறுத்து நிற்றலாகிய தொழிலையே விரும்பிச் செய்து உன்னுடைய வண்டுகள் சூழ்ந்த திருவடிகளையே தொழும் அடியவர்களுடைய மறத்தலாகிய செயலைப் போக்கி அருளுவாயாக. |
| 1038.சித்தத் துருகிச் சிவனெம்பி ரானென்று<br>சிந்தையுள்ளே<br>பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்பிணி<br>தீர்த்தருளாய்<br>மத்தத் தரக்க னிருபது தோளு<br>முடியுமெல்லாம்<br>பத்துற் றுறநெரித் தாயெம்மை யாளும்<br>பசுபதியே. 10 | செருக்குற்ற இராவணனுடைய இருபது தோள்களையும் பத்துத் தலைகளையும், அவனுக்கு உன் திறத்துப் பக்தி ஏற்படுமாறு நசுக்கியவனே! எம்மை அடிமை கொள்ளும் பசுபதியே! மனம் உருகிச் சிவனே எம் தலைவன் என்று மனத்திலே உறுதியான எண்ணம் மிகவே அதனையே எப்பொழுதும் அடைவுகேடாகச் சொல்லிக் கொண்டிருக்கும் அடியவர்களுடைய பிறவிப் பிணியைப் போக்கி அருளுவாயாக. |

## 111. பொது

### (சரக்கறைத் திருவிருத்தம்)

திருவிருத்தம் பதிக எண் : 111

| | |
|---|---|
| 1039.விடையும் விடைப்பெரும் பாகாவென் விண்ணப்பம்<br>வெம்மழுவாட்<br>படையும் படையாய் நிரைத்தபல் பூதமும்<br>பாய்புலித்தோல்<br>உடையு முடைதலை மாலையு மாலைப்<br>பிறையொதுங்கும்<br>சடையு மிருக்குஞ் சரக்கறை யோவென்<br>றனிநெஞ்சமே. 1<br><br>சரக்கு – பொருள்.<br>சரக்கறை – கருவூலம், பொருள் வைக்குமிடம் | பகைவரோடு போரிடும் காளையை இவரும் பெரிய பாகனே! அடியேன் வேண்டி உரைப்பது இது. கொடிய மழு வாள் ஆகிய படையும், படைகளாய் வரிசைப் படுத்தப்பட்ட பெரிய பூதங்களும், பாய்கின்ற புலியின் தோலாகிய ஆடையும், உடைந்த தலைகளால் ஆகிய மாலையும், மாலையில் தோன்றும் வளர்பிறை தங்கும் சடைமுடியும் தங்கியிருக்கும் கருவூலமோ அடியேனுடைய தனிமையை விரும்பும் நெஞ்சம்? |

| | |
|---|---|
| 1040.விஞ்சத் தடவரை வெற்பாவென் விண்ணப்ப<br>மேலிலங்கு<br>சங்கக் கலனுஞ் சரிகோ வணமுந்<br>தமருகமும்<br>அந்திப் பிறையு மனல்வா யரவும்<br>விரவியெல்லாம்<br>சந்தித் திருக்குஞ் சரக்கறை யோவென்<br>றனிநெஞ்சமே. 2<br><br>"சரக்கறை யோவென்றனி நெஞ்சமே" –<br>பதிக மகுடம் | உயரத்தில் மேம்பட்ட பெரிய பக்க மலைகளை உடைய கயிலை மலையானே! காதுகளில் விளங்கும் சங்கினாலாகிய காதணியும், வளைவாக உடுக்கப்பட்ட கோவணமும், உடுக்கையும், அந்தியில் தோன்றும் வளர்பிறையும், விடத்தை உடைய வாயதாகிய பாம்பும் ஆகிய எல்லாம் கலந்து கூடியிருக்கும் கருவூலமோ அடியேனுடைய தனி நெஞ்சம் என்று விண்ணப்பிக்கிறேன். |
| 1041. வீந்தார் தலைகல னேந்தீயென் விண்ணப்ப<br>மேலிலங்கு<br>சாந்தாய வெந்த தவளவெண் ணீறுந்<br>தகுணிச்சமும்<br>பூந்தா மரைமேனிப் புள்ளி யுழைமா<br>னதள்புலித்தோல்<br>தாந்தா மிருக்குஞ் சரக்கறை யோவென்<br>றனிநெஞ்சமே. 3<br><br>தம் பொருட்டு அறை கூவி விண்ணப்பித்த பதிகம் | இறந்தவர் தலையைப் பிச்சை எடுக்கும் பாத்திரமாக ஏந்தி இருப்பவனே! திருமேனியில் விளங்கும் சந்தனம் போன்ற வெள்ளிய திருநீறும், தகுணிச்சம் என்ற இசைக்கருவியும், பூத்த தாமரை போன்ற திருமேனியில் அணிந்துள்ள புள்ளிகளை உடைய மான்தோலும் புலித்தோலும் இருக்கும் கருவூலமோ அடியேனுடைய தனி நெஞ்சம் என்று விண்ணப்பிக்கிறேன். |
| 1042.வெஞ்சமர் வேழத் துரியாயென் விண்ணப்ப<br>மேலிலங்கு<br>வஞ்சமா வந்த வருபுனற் கங்கையும்<br>வான்மதியும்<br>நஞ்சமா நாக நகுசிர மாலை<br>நகுவெண்டலை<br>தஞ்சமா வாழுஞ் சரக்கறை யோவென்<br>றனிநெஞ்சமே. 4 | கொடிய போரிட வந்த யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்தவனே! தலையிலே விளங்குகின்ற வஞ்சனையாக வந்த நீரை உடைய கங்கையும், வானில் உலவும் பிறையும், விடத்தை உடைய பெரிய பாம்பும், சிரிக்கின்ற தலைகளால் ஆகிய மாலையும், பிச்சை எடுக்க உதவும் மண்டையோடும் வாழும் கருவூலமோ அடியேனுடைய தனி நெஞ்சம் என்று விண்ணப்பிக்கிறேன். |
| 1043.வேலைக் கடனஞ்ச முண்டாயென் விண்ணப்ப<br>மேலிலங்கு<br>காலற்க டந்தா னிடங்கயி லாயமுங்<br>காமர்கொன்றை<br>மாலைப் பிறையு மணிவா யரவும்<br>விரவியெல்லாம்<br>சாலக் கிடக்குஞ் சரக்கறை யோவென்<br>றனிநெஞ்சமே. 5 | கரையை உடைய பாற்கடலினின்றும் தோன்றிய விடத்தை அருந்தியவனே! கூற்றுவனை அழித்த உன்னுடைய கயிலாய மலையும், தலைமேலே விளங்கும் விருப்பம் மருவிய கொன்றை மாலையும், அதனோடு தோன்றும் பிறையும், அழகிய வாயை உடைய பாம்பும் எல்லாம் பெரிதும் கலந்து கிடக்கும் கருவூலமோ அடியேனுடைய தனி நெஞ்சம் என்று விண்ணப்பிக்கிறேன். |

| | |
|---|---|
| 1044.வீழிட்ட கொன்றையந் தாராயென் விண்ணப்ப மேலிலங்கு<br>சூழிட் டிருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்<br>ஏழிட் டிருக்குநல் லக்கு மரவுமென் பாமையோடும்<br>தாழிட் டிருக்கும் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 6 | விரும்பப்பட்ட கொன்றை மாலையை அணிந்தவனே! தலையில் விளங்கும் ஒளி சூழ்ந்த சூளாமணி என்னும் தலைக்கு அணியும் மணி ஆபரணமும், சுடுகாட்டுச் சாம்பலும், எழு கோவையாக அமைக்கப்பட்ட சிறந்த அக்கு மணிமாலையும், பாம்பும், எலும்பும், ஆமையோடும் சேர்த்துப் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கும் கருவூலமோ அடியேனுடைய தனி நெஞ்சம் என்று விண்ணப்பிக்கிறேன். |
| 1045.விண்டார் புரமூன்று மெய்தாயென் விண்ணப்ப மேலிலங்கு<br>தொண்டா டியதொண் டடிப்பொடி நீறுந் தொழுதுபாதம்<br>கண்டார்கள் கண்டிருக் குங்கயி லாயமுங் காமர்கொன்றைத்<br>தண்டா ரிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 7 | பகைவருடைய மும்மதில்களையும், அம்பு எய்து அழித்தவனே! உன் மேல் விளங்கும் விருப்பம் மருவிய கொன்றையாகிய குளிர்ந்த மாலையும், தொண்டு செய்யும் அடியவர்களுடைய பாத தூளியும், தொழுது உன் திருவடியைத் தியானிப்பவர்கள் தரிசித்துக் கொண்டிருக்கும் கயிலாய மலையும் பொருந்தியிருக்கும் கருவூலமோ அடியேனுடைய தனி நெஞ்சம் என்று விண்ணப்பிக்கிறேன். |
| 1046.விடுபட்டி யேறுகந் தேறியென் விண்ணப்ப மேலிலங்கு<br>கொடுகொட்டி கொக்கரை தக்கை குழறாளம் வீணைமொந்தை<br>வடுவிட்ட கொன்றையும் வன்னியு மத்தமும் வாளரவும்<br>தடுகுட்ட மாடுஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 8 | அடக்கமின்றி வேண்டியவாறு திரியுமாறு விடப்பட்ட பட்டிக்காளையை விரும்பி வாகனமாகக் கொள்பவனே! கொடுகொட்டி, கொக்கரை, தக்கை, குழல், தாளம், வீணை, மொந்தை என்ற இசைக்கருவிகளும், உன் திருமேனியில் விளங்கும் கொன்றை, வன்னி, ஊமத்தம்பூ, பாம்பு என்பனவும், குணலைக் கூத்தாடும் கருவூலமோ அடியேன் தனி நெஞ்சம் என்று விண்ணப்பிக்கிறேன். |
| 1047.வெண்டிரைக் கங்கை விகிர்தாவென் விண்ணப்ப மேலிலங்கு<br>கண்டிகை பூண்டு கடிசூத் திரமேற் கபாலவடம்<br>குண்டிகை கொக்கரை கோணற் பிறைகுறட் பூதப்படை<br>தண்டிவைத் திட்ட சரக்கறை யோவென் றனிநெஞ்சமே. 9 | வெள்ளிய அலைகளை உடைய கங்கையைச் சடையில் ஏந்திய வேறுபட்டவனே! மார்பின் மேல் விளங்கும் கண்டிகையைக் கழுத்தில் பூண்டு, அரை நாண் கயிற்றின் மீது தலைகளை இணைத்த தலைமாலையை அணிந்து, நீர்ப்பாத்திரம், கொக்கரை என்ற இசைக்கருவி, வளைந்த பிறை, குட்டையான வடிவத்தை உடைய பூதப்படை இவற்றைப் பெருமானாகிய நீ சேகரித்து வைத்துள்ள சரக்கறையோ அடியேனுடைய தனி நெஞ்சம் என்று விண்ணப்பம் செய்கிறேன். |

1048.வேதித்த வெம்மழு வாளீயென் விண்ணப்ப
மேலிலங்கு
சோதித் திருக்குநற் சூளா மணியுஞ்
சுடலைநீறும்
பாதிப் பிறையும் படுதலைத் துண்டமும்
பாய்புலித்தோல்
சாதித் திருக்குஞ் சரக்கறை யோவென்
றனிநெஞ்சமே. 10

பகைவர் உடலைப் பிளக்கும் வெள்ளிய மழுப் படையை ஆள்பவனே! தலைமேல் விளங்கும் ஒளியுடைய சூளாமணியும், சுடுகாட்டுச் சாம்பலும், சிறுபிறையும், துண்டமான மண்டையோடும், பாயும் புலித்தோலும் சேகரித்து வைக்கப்பட்டிருக்கும் சரக்கறை அன்றோ அடியேனுடைய தனி நெஞ்சம் என்று விண்ணப்பம் செய்கிறேன்.

1049.விவந்தா டியகழ லெந்தாயென் விண்ணப்ப
மேலிலங்கு
தவந்தா னெடுக்கத் தலைபத் திறுத்தனை
தாழ்புலித்தோல்
சிவந்தா டியபொடி நீறுஞ் சிரமாலை
சூடிநின்று
தவந்தா னிருக்குஞ் சரக்கறை யோவென்
றனிநெஞ்சமே. 11

மற்றவர்களோடு மாறுபட்டு வந்து ஆடிய திருவடிகளை உடைய எம் தலைவனே! முற்பிறவிகளில் செய்து விளங்கிய தவத்தானாகிய இராவணன் கயிலையைப் பெயர்க்க முற்பட அவனுடைய பத்துத் தலைகளையும் சிதைத்தாய். முழந்தாளவு தாழ்ந்த புலியின்தோலும் செம்மேனியில் பூசப்பட்ட வெண் திருநீறும், தலைமாலையும் சூடிக் கொண்டு நீ தவ நிலையில் இருக்கும் கருவூலமோ அடியேனுடைய தனிநெஞ்சம் என்பதனை விண்ணப்பம் செய்கிறேன்.

## 112. பொது

### (தனித் திருவிருத்தம்)

திருவிருத்தம் பதிக எண் : 112

1050.வெள்ளிக் குழைத்துணி போலுங் கபாலத்தன்
வீழ்ந்திலங்கு
வெள்ளிப் புரியன்ன வெண்புரி நூலன்
விரிசடைமேல்
வெள்ளித் தகடன்ன வெண்பிறை சூடிவெள்
ளென்பணிந்து
வெள்ளிப் பொடிப்பவ ளப்புறம் பூசிய
வேதியனே. 1

இப்பாட்டு முழுவதும் இறைவரை வெண்மை பற்றிப் போற்றியது.

வெண்ணிறத்தினை உடைய சங்கின் துண்டு போன்ற வெண்ணிறமான மண்டையோட்டை ஏந்தியவனாய், வெள்ளியை முறுக்கினாற் போன்ற வெள்ளிய பூணூலை அணிந்தவனாய், விரிந்த சடையின்மேல் வெள்ளித்தகடு போன்ற வெண்பிறையைச் சூடியவனாய், வெள்ளிய எலும்புகளை அணிந்து பவளம் போன்ற உடலில் வெண்ணிறநீற்றைப் பூசிய வேதியன் சிவபெருமான் ஆவான்.

| | |
|---|---|
| 1051. உடலைத் துறந்துல கேழுங் கடந்துல வாததுன்பக்<br>கடலைக் கடந்துய்யப் போயிட லாகுங் கனகவண்ணப்<br>படலைச் சடைப்பர வைத்திரைக் கங்கைப் பனிப்பிறைவெண்<br>சுடலைப் பொடிக்கட வுட்கடி மைக்கட் டுணிநெஞ்சமே. 2 | நெஞ்சமே! பொன் போல ஒளிவீசும் செந்நிற முடைய பரவிய சடையில் கடல் போன்ற அலைகளை உடைய கங்கையையும் குளிர்ந்த பிறையையும் வைத்த, சுடுகாட்டுச் சாம்பலைப் பூசிய தெய்வத்தின் அடிமை செய்தற்கண் துணிவுடையை ஆவாய். அவ்வாறு செய்தால் பிண்டமாகிய உடலைத் துறந்து, ஏழுலகமான அண்டத்தைக் கடந்து அழியாத பிறவித்துன்பக் கடலைக் கடந்து நாம் பிழைத்துப் பாசநீக்கம் பெற்று அப்பெருமானுடைய வீட்டுலகை அடையலாம். |
| 1052.முன்னே யுரைத்தான் முகமனே யொக்குமிம் மூவுலகுக்<br>கன்னையு மத்தனு மாவா யழல்வணா நீயலையோ<br>**உன்னை நினைந்தே கழியுமென் னாவி** கழிந்ததற்பின்<br>என்னை மறக்கப் பெறாயெம் பிரானுன்னை வேண்டியதே. 3<br>எப்போதும் மறவாமல் நினைந்து பயின்று வந்தால் உயிர் போகும்போது சிவன் நினைவு வரும். | தீவண்ணனே! உன் முன்னிலையில் யான் ஏதாவது கூறினால் அது உபசாரவார்த்தை போலக் காணப்படும். இம் மூவுலகுக்கும் தாயும் தந்தையும் ஆயவன் நீ அல்லையோ? உன்னைத் தியானித்துக் கொண்டே என் உயிர் நீங்கும். என் உயிர் இவ்வுடலை நீங்கியபின் என்னை நீ மறக்கக்கூடாது என்பதனையே யான் உன்னை வேண்டுகிறேன். |
| 1053.நின்னையெப் போது நினையவொட் டாய்நீ நினையப்புகில்<br>பின்னையப் போதே மறப்பித்துப் போர்த்தொன்று நாடுவித்தி<br>உன்னையெப் போது மறந்திட் டுனக்கினி தாவிருக்கும்<br>என்னையொப் பாருள ரோசொல்லு வாழி யிறையவனே. 4 | இறையவனே! உன்னை எப்போதும் நினைத்திருக்குமாறு செய்ய நீ இசைகின்றாய் அல்லை. உன்னை உறுதியாகத் தியானிக்கப் புகுந்தால் அப்போதே அதனை மறக்கச் செய்து வேறொரு பொருளில் அடியேனுடைய மனம் ஈடுபடுமாறு செய்கின்றாய். உன்னை எப்போதும் மறந்தவனாயினும் உனக்கு இனியனாகச் சொல்லிக் கொண்டிருக்கும் அடியேனை ஒத்தவர் வேறு எவரேனும் இவ்வுலகில் உள்ளனரோ என்பதனைச் சொல்லுவாயாக. |
| 1054.முழுத்தழன் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்<br>தெழிற் பெருஞ் சோதியை யெங்கள் பிரானை யிகழ்திர்கண்டீர்<br>தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னைத்<br>தொழப்படுந்தேவர்தம்மால் தொழுவிக்குந்தன் றொண்டரையே. 5 | முழுமையான அனல்போன்ற சிவந்த திருமேனியில் வெள்ளிய திருநீற்றை அணிந்தவனாய், மேருமலை போன்ற அழகிய பெரிய ஒளிவடிவினனாகிய எங்கள் பெருமானை இகழ்கின்ற நீங்கள் இதனைத் தெரிந்து கொள்ளுங்கள். பொது மக்களால் தொழப்படும் சிறுதேவரால் தொழப்படும் எம்பெருமானைத் தொழுத பின்னர் அப்பெருமான் பிறரால் தொழப்படும் அச்சிறுதேவரைக் கொண்டும் அவர்களால் தன் அடியவர்களைத் தொழச் செய்வான். |

| | |
|---|---|
| **1055.** விண்ணகத் தான்மிக்க வேதத்து ளான்விரி<br>நீருடுத்த<br>மண்ணகத் தான்றிரு மாலகத் தான்மரு<br>வற்கினிய<br>பண்ணகத் தான்பத்தர் சித்தத்து ளான்பழ<br>நாயடியேன்<br>கண்ணகத் தான்மனத் தான்சென்னி<br>யானெங்கறைக் கண்டனே. 6 | எம் நீலகண்டப் பெருமான் தேவருலகிலும், மேம்பட்ட வேதத்திலும், கடலால் சூழப்பட்ட இம்மண்ணுலகத்திலும், திருமாலுடைய உள்ளத்திலும், பழகுதற்கு இனிய பண்களிலும், அடியவர் உள்ளத்தும், பழைய நாயைப் போன்ற இழிந்த அடியேனுடைய மனக் கண்களிலும் மனத்தும், தலைமீதும் எங்கும் கரந்து பரந்துள்ளான். எப்போதும் என்னுள்ளே தங்கக் கண்டுகொண்டும், நினைத்துக் கொண்டும், வணங்கிக் கொண்டும் இருப்பேன். |
| **1056.** பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு<br>பிரமனும்போய்<br>இருங்கடன் மூடி யிறக்கு மிறந்தான்<br>களேபரமும்<br>கருங்கடல் வண்ணன் களேபர முங்கொண்டு<br>கங்காளராய்<br>வருங்கடன் மீளநின் **றெம்மிறை நல்வீணை**<br>வாசிக்குமே. 7<br><br>சிவனது முழுமுதற்றன்மையும், அநாதியாந் தன்மையும் குறித்தது. | பெரிய கடல் இவ்வுலகை மூட ஊழிவெள்ளம் ஏற்படப் பிரமனுடைய சத்திய உலகத்தும் பெரிய கடல்நீர் பொங்கி அதனை மூழ்க்கப் பிரமனும் இறப்பான். அந்நிலையில் பிரமனுடைய இறந்த உடலையும் கரிய கடல் போன்ற நிறத்தினனாகிய திருமாலுடைய உடலையும் சுமந்து கொண்டு அவர்களுடைய தசைகழிந்த உடம்பின் எலும்புக் கூடுகளை அணிந்தவனாய், ஒடுங்கிய உலகம் மீளத்தோன்றும் முறைமையின் சங்கற்பம் செய்து கொண்டு இருந்து எம்பெருமான் சிறந்த வீணையை வாசித்துக் கொண்டிருப்பான். |
| **1057.** வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென்<br>மால்வரையும்<br>தானந் துளங்கித் தலைதடு மாறிலென்<br>தண்கடலும்<br>மீனம் படிலென் விரிசுடர் வீழிலென்<br>வேலைநஞ்சுண்<br>டுனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட<br>வுத்தமர்க்கே. 8<br><br>சிவனடியாரது தன்மையும், பெருமையும் விளக்கியது. | கடலில் எழுந்தவிடத்தை உண்டும் எந்தக் குறைபாடும் இல்லாத ஒப்பற்ற சிவபெருமானுக்கு அடிமைகளாய்த் தொண்டு செய்யும் மேம்பட்டவர்களுக்கு, வானமும் மண்ணும் அசைந்து ஒடுங்கினாலும், பெரிய மலைகள் இடம் பெயர்ந்து மேல் கீழாகத் தடுமாறினாலும், கடல்களிலுள்ள நீர்வாழ் உயிரினங்கள் அழிந்தாலும், சூரிய சந்திரர்கள் இடம் பெயர்ந்து விழுந்தாலும் அவற்றைப் பற்றிய கவலை ஏதும் ஏற்படாது. |
| **1058. சிவனெனு நாமந் தனக்கே யுடையசெம்<br>மேனியெம்மான்**<br>அவனெனை யாட்கொண் டளித்திடு மாகி<br>லவன்றனையான்<br>பவனெனு நாமம் பிடித்துத் **திரிந்துபன்<br>னாளழைத்தால்**<br>இவனெனைப் பன்னா ளழைப்பொழி யானென்<br>றெதிர்ப்படுமே. 9 | சிவன் என்ற பெயரைத் தனக்கே உரிய பெயராகக் கொண்ட செம்மேனிப் பெருமான் அடியேனை அடிமையாகக் கொண்டு கருணை செய்திடுவானாகில் அவனை அடியேன் 'பவன்' என்னும் திருப்பெயர் முதலியவற்றை உள்ளத்திலும் சொல்லிலும் பற்றி அவன் அடியேனை இயக்கும் இடம் தொறும் திரிந்து **பலநாளும் அழைத்தால், இவன் என்னைப் பலநாளாக அழைத்தலைத் தவறாது செய்கிறான் என்று திருவுள்ளம் பற்றி அடியேற்குக் காட்சி வழங்குவான்.** |

1059.என்னையொப் பாருன்னை யெங்ஙனங் காண்ப
ரிகலியுன்னை
நின்னையொப் பார்நின்னைக் காணும் படித்தன்று
நின்பெருமை
பொன்னையொப் பாரித் தழலை வளாவிச்செம்
மானஞ்செற்று
மின்னையொப் பார மிளிருஞ் சடைக்கற்றை
வேதியனே. 10

பொன்னை ஒத்து ஒளியுடையதாய், தீயை ஒத்துச் செந்நிறத்ததாய்ச் சிவந்த வானத்தைப் பிளந்து நெடுகப் பரவியதாய மின்னலை ஒத்து விட்டு விட்டு ஒளிவீசும் சடைக்கற்றையை உடைய வேதப்பரம்பொருளே! அடியேனை ஒத்த சிற்றறிவினர் உன்னை யாங்ஙனம் காண இயலும்? உன்னோடு மாறுபட்டு உன்னை ஒப்பவராகத் தம்மைக் கருதிக்கொள்ளும் தேவர்கள் உன்னுடைய அடியையோ முடியையோ காண இயலாதவாறு உன் பெருமை ஏனைய எல்லாத் தேவர்களையும்விட மேம்பட்டுள்ளது.

## 113. பொது

**தனித் திருவிருத்தம்** **பதிக எண் : 113**

1060.பவளத் தடவரை போலுந்திண் டோள்களத்
தோண்மிசையே
பவளக் குழைதழைத் தாலொக்கும் பல்சடை
யச்சடைமேல்
பவளக் கொழுந்தன்ன பைம்முக நாகமந்
நாகத்தொடும்
பவளக்கண் வால மதியெந்தை சூடும்
பனிமலரே. 1

பவள நிறம் பற்றி இறைவரை எண்ணியது.

எம்பெருமானுக்குத் திண்ணிய தோள்கள் பெரிய பவளமலைகள் போலவும், தோள்களில் படியும் சடைக்கற்றைகள் பவளத்தின் தளிர்கள் போலவும், சடைமேல் உள்ள படமெடுக்கும் தலையை உடைய நாகம் பவளக் கொழுந்து போலவும், நாகத்தொடு சூடப்பட்ட இளம்பிறை பவளத்தின் குளிர்ந்த மலர் போலவும் காட்சி வழங்குகின்றன.

1061. முருகார் நறுமல ரிண்டை தழுவிவண்
டேமுரலும்
பெருகா றடைசடைக் கற்றையி னாய்பிணி
மேய்ந்திருந்த
இருகாற் குரம்பை யிதுநா னுடைய
திதுபிரிந்தால்
தருவா யெனக்குன் றிருவடிக் கீழொர்
தலைமறைவே. 2

நறுமணம் கமழும் பூக்களாலாகிய இண்டை மாலையைச் சூடி வண்டுகள் ஒலிக்க, பெருகுகின்ற கங்கை ஆறு வந்து பொருந்தியுள்ள சடைக் கற்றையை உடையவனே! பிணிகளால் உண்ணப்பட்டுக் கிடக்கும் இரு தூண்களாகிய இரு கால்களை உடைய அடியேன் உடம்பாகிய குடிசை நீங்கினால் அடியேனுக்கு உன் திருவடிக் கீழ்த் தலைமறைவாய் இருக்க இருப்பிடம் அருளுவாயாக.

1062.மூவா வுருவத்து முக்கண் முதல்வமீக் கூரிடும்பை
காவா யெனக்கடை தூங்கு மணியைக்கை யாலமரர்
நாவா யசைத்த வொலியொலி மாறிய தில்லையப்பால்
தீவா யெரிந்து பொடியாய்க் கழிந்த திரிபுரமே. 3

என்றும் மூத்தல் இல்லாத வடிவத்தை உடைய முக்கண்ணனாகிய காரணனே! மிகுந்த துயரிலிருந்து எங்களைக் காப்பாற்றுவாயாக என்று உன் இருப்பிடத்தின் வாசலில் தொங்கும் மணியைத் தேவர்கள் கையால் அதன் நாவில் அசைத்து எழுப்பிய ஒலி குறைந்து அழியுமுன் திரிபுரங்கள் நெருப்பில் எரிந்து சாம்பற் பொடியாய்ப் போய்விட்டன.

---

1063.பந்தித்த பாவங்க ளம்மையிற் செய்தன விம்மைவந்து
சந்தித்த பின்னைச் சமழ்ப்பதென் னேவந் தமரர்முன்னாள்
முந்திச் செழுமல ரிட்டு முடிதாழ்த் தடிவணங்கும்
நந்திக்கு முந்துற வாட்செய்கி லாவிட்ட நன்னெஞ்சமே. 4

வந்து தேவர்கள் சந்நிதிக்கு முன் எய்திச் சிறந்த பூக்களைச் சமர்ப்பித்துத் தலையைத் தாழ்த்தித் திருவடிகளில் விழுந்து வணங்கும் சிவபெருமான் பக்கல் அடிமை செய்யாது நாளைப் பாழாக்கின நல்ல நெஞ்சமே! சென்ற பிறப்பில் செய்தனவாய் நம்மை விடாது பிணித்த பாவங்கள் இம்மையில் வந்து நமக்குப் பாவப் பயன்களை நல்கும் இந்நேரத்தில் அவை குறித்து வருந்துவதனால் பயன் யாது?

---

1064.அந்திவட் டத்திளங் கண்ணிய ளாறமர் செஞ்சடையான்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றைவ ளாவிய நம்பனையே. 5

அந்திவட் டத்திங்கட் கண்ணிய னையா றமர்ந்துவந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றைவ ளாவிய நம்பனையே.

(திரு.4 பதி.98 பா. 1)

இதை ஒத்தத் திருப்பாடலானது, பதிக எண் 98–இன்கண் (திருவையாற்றுத் திருப்பதிகத்தில் முன்னரே இடம்பெற்றுள்ளது. அத் திருப்பதிகத்தில்) அமைந்துள்ள 'அந்திவட் டத்திங்கட் கண்ணி' என்பதே, இப்பாடலில் அந்தி வட்டத்திளங்கண்ணி எனப் பிழைபட அமைந்ததாகக் கருத இடமுண்டு. அதுபோலவே, முந்தைய பதிகப் பாடலில் அமைந்த 'ஐயாறமர்ந்து வந்தென்' என்னும் சொல்லாட்சியே, 'ஆறமர் செஞ்சடையான்' என்று இப்பாடலில் அமைந்துள்ளது. மேலும், முந்தைய பதிகத்தில் 'சிந்தி' என்றமைந்ததே, இப்பாடலில் 'சந்தி' எனப் பிழையாக அமைந்ததாகக் கருதலாம். இந்நிலைகளால், இவற்றை, ஒரே பாடலாகக் கருத வாய்ப்பு உள்ளது.

1065.உன்மத் தகமலர் சூடி யுலகந்
தொழச்சுடலைப்
பன்மத் தகங்கொண்டு பல்கடை தோறும்
பலிதிரிவான்
என்மத் தகத்தே யிரவும் பகலும்
பிரிவரியான்
தன்மத் தகத்தொ ரிளம்பிறை சூடிய
சங்கரனே. 6

தன் தலையிலே ஓர் இளம் பிறையைச் சூடிய சங்கரன், ஊமத்தம் பூவைச் சூடி, உலகத்தார் தொழச் சுடுகாட்டில் சுடப்பட்ட பல மண்டை ஓடுகளையும் மாலையாக அணிந்து, பல வீட்டு வாயில்கள் தோறும் பிச்சைக்குத் திரிபவனாய், அடியேனுடைய தலையை விடுத்து இரவும் பகலும் பிரியாதவனாக உள்ளான்.

உன்மத்தக மலர் – ஊமத்தை மலர்
பல்மத்தம் – பல்லை உடைய மண்டையோடு
என்மத்தகம் – என் தலையின். தன் மத்தகம் – தன் சடைத்தலை

1066.அரைப்பா லுடுப்பன கோவணச் சின்னங்க
ளையமுணல்
வரைப்பா வையைக்கொண்ட தெக்குடி
வாழ்க்கைக்கு
வானிரைக்கும்
இரைப்பா படுதலை யேந்துகை யாமறை
தேடுமெந்தாய்
உரைப்பா ருரைப்பன வேசெய்தி யாலெங்க
ளுத்தமனே. 7

விண்ணுலகமெல்லாம் ஒலிக்கும் ஒலி வடிவினனே! நீக்கப்பட்ட பிரமன் தலை ஓட்டினை ஏந்திய கையினனே! வேதங்கள் தேடுகின்ற எந்தையே! எங்கள் மேம்பட்டவனே! இடையிலே கோவண உடை உடுத்து, பிச்சை ஏற்று வாழும் நீ பார்வதியை மணந்து கொண்ட செயல் என்ன குடும்ப வாழ்க்கை நடத்துவதற்கு? உன்னைக் குறை கூறுகின்றவர்கள் குறை கூறுதற்கு ஏற்ற செயல்களையே நீ செய்கின்றாய்.

1067.துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந்
தூதுவரோ
டிறப்ப னிறந்தா லிருவிசும் பேறுவ
னேறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப்
பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொ லோவென்றென் னுள்ளங் கிடந்து
மறுகிடுமே. 8

பற்றற விட்டொழிப்பதற்கு எளியதல்லாத இவ்வுடம்பை விடுத்துக் கொடிய காலதூதருடைய செயல்களால் இறப்பேன். இறந்தால் மேலுலகம் அடைவேன். மேலுலகம் ஏறிவந்து நிலவுலகிற்கு இறங்கி மீண்டும் பிறப்பேன். பிறந்தால் பிறைச்சந்திரனை அணிந்த நீண்ட சடையை உடைய தலைக்கோலத்தை அணிந்த பெருமானுடைய பெயரை மறந்து விடுவேனோ என்று என் உள்ளம் கிடந்து வருந்துகின்றது.

| | |
|---|---|
| 1068.வேரி வளாய விரைமலர்க் கொன்றை<br>புனைந்தனகன்<br>சேரி வளாயவென் சிந்தை புகுந்தான்<br>றிருமுடிமேல்<br>வாரி வளாய வருபுனற் கங்கை<br>சடைமறிவாய்<br>ஏரி வளாவிக் கிடந்தது போலு<br>மிளம்பிறையே. 9 | தேன் பெருக்கெடுத்தோடும் நறுமணம் கமழும் கொன்றை மலரைச் சூடிப் பாவமில்லாத வனாகிய இறைவன் உலகியல் செய்திகள் யாவும் கலந்து கிடக்கும் அடியேனுடைய உள்ளத்துப் புகுந்தான். அவன் திருமுடி அதன் மேல் வெள்ளமாய் வரும் நீரை உடைய கங்கை இவற்றால் தன் இயக்கம் தடைப்பட இளைய பிறை சடைப் புறமிருந்து திரும்பி ஏரி போன்ற நீர் நிறைந்த கங்கையில் தோய்ந்து கிடக்கிறது. |
| 1069.கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கட<br>னீர்சுருங்கிப்<br>பன்னெடுங் கால மழைதான் மறுக்கினும்<br>பஞ்சமுண்டென்<br>றென்னொடுஞ் சூளறு மஞ்சனெஞ் சேயிமை<br>யாதமுக்கண்<br>பொன்னெடுங் குன்றமொன் றுண்டுகண் டீரிப்<br>புகலிடத்தே. 10 | நெடுங்காலம் மலைகள் மழையின்றிச் சூடேறக் கரிய கடலின் நீர் சுருங்குமாறு பல ஆண்டுகள் மழை பெய்யாது போயினும் பஞ்சம் ஏற்படுமே என்று அஞ்சாதே. என்னிடம் வஞ்சினம் கூறும் மனமே! எல்லா உயிர்க்கும் புகலிடமாகிய இச்சிவ பூமியிலே இமையாத முக்கண்களை உடைய பொன் மயமான நெடிய குன்றம் ஒன்று உள்ளது ஆதலின் அடியவர்கள் வருந்த வேண்டிய தேவை இல்லை. |
| 1070.மேலு மறிந்தில னான்முகன் மேற்சென்று<br>கீழிடந்து<br>மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி<br>பாடுசெய்யும்<br>பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி<br>மறிந்தசிந்தைக்<br>கால னறிந்தா னறிதற் கரியான்<br>கழலடியே. 11 | பிரமன் மேலே அன்ன வடிவிற் சென்று பெருமானுடைய முடியை அறிந்தான் அல்லன். கீழே தோண்டிச் சென்று திருமால் மனக்கலக்கம் உற்றானே அன்றிப் பெருமானுடைய திருவடிகளைக் கண்டான் அல்லன். சிவபெருமானை வழிபட்டுக் கொண்டிருந்த இளையவனான மார்க்கண்டேயன் பால் சென்று அவன் மீது பாசக் கயிற்றை வீசி எறிந்து செயற்படாமல் மடங்கிய மனத்தை உடைய கூற்றுவன் பிரமனாலும் திருமாலாலும் அறிய முடியாத சிவ பெருமானுடைய கழல்களை அணிந்த திருவடிகளை அறியும் வாய்ப்பினைப் பெற்றான். அத்திருவடிகள் வாழ்க. |

## நான்காம் திருமுறை

# பாட்டு முதற்குறிப்பகராதி

## நான்காம் திருமுறை

# தல அட்டவணை

| வ.எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 1. | அண்ணாமலை | 63 | ஓதிமாமலர் |
| 2. | அதிகை வீரட்டானம் | 1 | கூற்றாயின |
| 3. | ,, | 2 | சுண்ணவெண் |
| 4. | ,, | 10 | முளைக்கதிர் |
| 5. | ,, | 24 | இரும்புகொப் |
| 6. | ,, | 25 | வெண்ணிலா |
| 7. | ,, | 26 | நம்பனே |
| 8. | ,, | 27 | மடக்கினார் |
| 9. | ,, | 28 | முன்பெலா |
| 10. | ,, | 104 | மாசிலொள்வாள் |
| 11. | அவளிவணல்லூர் | 59 | தோற்றினான் |
| 12. | ஆப்பாடி | 48 | கடலகமேழி |
| 13. | ஆரூர் | 4 | பாடிளம் |
| 14. | ,, | 5 | மெய்யெலாம் |
| 15. | ,, | 19 | சூலப்படை |
| 16. | ,, | 20 | காண்டலே |
| 17. | ,, | 21 | முத்துவிதானம் |
| 18. | ,, | 52 | படுகுழி |
| 19. | ,, | 53 | குழல்வளங்கொ |
| 20. | ,, | 101 | குலம்பலம் |
| 21. | ,, | 102 | வேம்பினைப் |
| 22. | ஆரூர் அரநெறி | 17 | எத்தீபுகினும் |
| 23. | ஆலங்காடு | 68 | வெள்ளநீர் |
| 24. | ஆலவாய் | 62 | வேதியாவேத |
| 25. | ஆவடுதுறை | 56 | மாயிருஞாலம் |
| 26. | ,, | 57 | மஞ்சனே |
| 27. | இடைமருதூர் | 35 | காடுடைச்சுடலை |
| 28. | இராமேச்சுரம் | 61 | பாசமுங்கழி |
| 29. | இன்னம்பர் | 72 | விண்ணவர் |
| 30. | ,, | 100 | மன்னுமலை |
| 31. | ஐயாறு | 3 | மாதர்ப்பிறை |
| 32. | ,, | 13 | விடகிலேன் |

| வ.எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 33. | ,, | 38 | கங்கையை |
| 34. | ,, | 39 | குண்டனாய் |
| 35. | ,, | 40 | தானலாதுலகம் |
| 36. | ,, | 91 | குறுவித்தவா |
| 37. | ,, | 92 | சிந்திப்பரியன |
| 38. | ,, | 98 | அந்திவட்ட |
| 39. | ஒற்றியூர் | 45 | வெள்ளத்தை |
| 40. | ,, | 46 | ஓம்பினேன் |
| 41. | ,, | 86 | செற்றுக்களி |
| 42. | கச்சி ஏகம்பம் | 7 | கரவாடும் |
| 43. | ,, | 44 | நம்பனை |
| 44. | ,, | 99 | ஓதுவித்தாய் |
| 45. | கச்சி மேற்றளி | 43 | மறையது |
| 46. | கடவூர் | 31 | பொள்ளத்த |
| 47. | ,, | 107 | மருட்டுயர் |
| 48. | கண்டியூர் | 93 | வானவர் |
| 49. | கயிலாயம் | 47 | கனகமா |
| 50. | கழிப்பாலை | 6 | வனபவள |
| 51. | ,, | 30 | நங்கையை |
| 52. | ,, | 106 | நெய்தற்குருகு |
| 53. | கழுமலம் (சீகாழி) | 82 | பார்கொண்டு |
| 54. | ,, | 83 | படையார் |
| 55. | குறுக்கை வீரட்டம் | 49 | ஆதியிற்பிரமனார் |
| 56. | ,, | 50 | நெடியமால் |
| 57. | கொண்டீச்சரம் | 67 | வரைகிலேன் |
| 58. | கோடிகா | 51 | நெற்றிமேற்கண் |
| 59. | கோயில் | 22 | செஞ்சடை |
| 60. | ,, | 23 | பத்தனாய் |
| 61. | ,, | 80 | பாளையுடைக் |
| 62. | ,, | 81 | கருநட்டகண்ட |
| 63. | கோவலூர் வீரட்டம் | 69 | செத்தையேன் |
| 64. | சத்திமுற்றம் | 96 | கோவாய்முடுகி |
| 65. | சாய்க்காடு | 65 | தோடுலா |
| 66. | செம்பொன்பள்ளி | 29 | ஊனினுள் |
| 67. | சேறை | 73 | பெருந்திரு |
| 68. | சோற்றுத்துறை | 41 | பொய்விரா |

| வ.எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 69. | சோற்றுத்துறை | 85 | காலையெழுந்து |
| 70. | துருத்தி | 42 | பொருத்திய |
| 71. | தூங்கானைமாடம் | 109 | பொன்னார் |
| 72. | நல்லூர் | 97 | அட்டுமினில் |
| 73. | நனிபள்ளி | 70 | முற்றுணை |
| 74. | நாகேச்சுரம் | 66 | கச்சைசேர் |
| 75. | நாகைக்காரோணம் | 71 | மனைவிதாய் |
| 76. | ,, | 103 | வடிவுடைமலை |
| 77. | நெய்த்தானம் | 37 | காலனைவீழச் |
| 78. | ,, | 89 | பாரிடஞ்சாடிய |
| 79. | பயற்றூர் | 32 | உரித்திட்டார் |
| 80. | பருப்பதம் | 58 | கன்றினார் |
| 81. | பழனம் | 12 | சொன்மாலை |
| 82. | ,, | 36 | ஆடினாரொருவர் |
| 83. | ,, | 87 | மேவித்து |
| 84. | பாதிரிப்புலியூர் | 94 | ஈன்றாளுமாய் |
| 85. | புகலூர் | 16 | செய்யர்வெண் |
| 86. | ,, | 54 | பகைத்திட்டார் |
| 87. | ,, | 105 | தன்னைச் |
| 88. | பூந்துருத்தி | 88 | மாலினைமால் |
| 89. | பெருவேளூர் | 60 | மறையணிநா |
| 90. | மறைக்காடு | 33 | இந்திரனோடு |
| 91. | மறைக்காடு | 34 | தேரையுமேல் |
| 92. | மாற்பேறு | 108 | மாணிக்குயிர் |
| 93. | வலம்புரம் | 55 | தெண்டிரை |
| 94. | வீழிமிழலை | 64 | பூதத்தின் |
| 95. | ,, | 95 | வான்சொட்ட |
| 96. | வேதிகுடி | 90 | கையதுகாலெரி |
| 97. | பொது | 8 | சிவனெனும் |
| 98. | ,, | 9 | தலையேநீ |
| 99. | ,, | 11 | சொற்றுணை |
| 100. | ,, | 14 | பருவரை |
| 101. | ,, | 15 | பற்றற்றார் |
| 102. | பொது | 18 | ஒன்றுகொலாம் |

| வ.எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 103. | ,, | 74 | முத்தினை |
| 104. | ,, | 75 | தொண்டனேன் |
| 105. | ,, | 76 | மருளவாம் |
| 106. | ,, | 77 | கடும்பக |
| 107. | ,, | 78 | வென்றிலேன் |
| 108. | ,, | 79 | தம்மானங் |
| 109. | ,, | 84 | எட்டாந்தி |
| 110. | ,, | 110 | சாம்பலைப்பூசி |
| 111. | ,, | 111 | விடையும் |
| 112. | ,, | 112 | வெள்ளிக்குழை |
| 113. | ,, | 113 | பவளத்தடவரை |



திருச்சிற்றம்பலம்.



மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசுதென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.




பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்றலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே.

**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்,**

கற்பகம் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர்